வெளியீடு எண் : 401.

# திருமூலர் திருமந்திரம்

## எட்டாம் தந்திரம்

ஸ்ரீ பஞ்சாக்ஷரதீபம் என்னும் உரையுடன்

# TIRUMANTRAM



திருக்கயிலாய பரம்பரைத்

திருவாவடுதுறை ஆதீனம்

1992

வெளியீடு எண் : 401

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருமூலர் திருமந்திரம்

## ( எட்டாம் தந்திரம் )

( பாடல்கள் 2122 - 2647 )

பஞ்சாக்ஷரதீபம் என்னும் உரையுடன்



இது

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்துமூன்றாவது குரு மகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்கள்

கட்டளையிட்டருளியபடி

வெளியிடப்பெற்றது.



திருவாவடுதுறை ஆதீனம்

1992



உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனக்

குரு முதல்வர்

அருட்டிரு நமசிவாய மூர்த்திகளின்

# மகரத் தலைநாள் குருபூசை விழாமலர்

பிரசோத்பத்தி — தை — அசுவதி

10 — 2 — 1992



# குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

— ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள்.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனக்
குருமுதல்வர்
அருட்டிரு நமசிவாய மூர்த்திகள்

# உள்ளுறை





உ

சிவமயம்

# பதிப்புரை

போற்றிசெய் அந்தண் கயிலைப் பொருப்பனை
நாற்றிசைக் கும்நடு வாய்நின்ற நம்பனைக்
காற்றிசைக் கும்கமழ் ஆக்கையைக் கைக்கொண்டு
கூற்றுதைத் தான்தன்னைக் கூறிநின் றுய்மினே.

பன்னிரு திருமுறைகளுள் பத்தாந் திருமுறை யாகத் திகழ்வது தமிழ் மூவாயிரம் என்னும் திருமந்திரம். செந்தமிழ்ச் சிவாகமம் எனப் போற்றப் பெறும் இத்திருமுறை, வாழ்க்கைக்கு இன்றியமை யாத ஒழுக்கநெறிகளையும் யோகம், மந்திரம், யந்திரம் போன்றவைகளோடு இறைவன் திருவடிப் பேற்றை அடைந்து அருளானந்த வெள்ளத்துள் மூழ்கிக் கிடக்கும் நெறியையும் ஒருங்கே சொல்லக் கூடிய நூலாக அமைந்துள்ளது. நமக்குக் கிடைத்துள்ள செந்தமிழ் ஞான நூல்களுக்கெல்லாம் முதல்நூலாக அமைந்து விளங்குவதும் திருமந்திரத் திருமுறையே.

சிவகதிக்கு வித்தாகும் திருமந்திரம் கிடைத்தற் கரிய பெருநிதியமாகும். இந்த ஞான நிதியத்தினைப் பெற்று உலக மக்கள் பேரின்பப் பெருவாழ்வினை அடையவேண்டும் என்ற பெருங்கருணையோடு இவ்வாதீனத்துக் குரு மகாசந்நிதானங்கள் மாநாடுகள்

பல நடத்தியும் உரைவிளக்க நூல்கள் வெளியிட்டும் உதவிவருதலைத் தமிழுலகு நன்கு அறியும். ஆதீனத்து இருபத்து மூன்றாவது குரு மகாசந்நிதானமாக எழுந்தருளி, செந்தமிழும் சிவநெறியும் செழிக்கச் செம்மைமிகு பணிகள் ஆற்றித் திருவருள் ஞானச் செங்கோல் ஓச்சிவரும் ***சீர் வளர் சீர் சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்கள்*** கட்டளையிட்டருளிய வண்ணம் பஞ்சாக்கர தீபம் என்னும் உரையுடன் அமைந்த முதல் ஏழு தந்திரங்களும் இரண்டாம் பதிப்பாக வெளியிடப்பெற்றுள்ளன.

எட்டாந்தந்திரத்தில் 2122 முதல் 2368 வரையுள்ள திருமந்திரங்களுக்கு ஆதீன மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர் அவர்களாலும் 2369 முதல் 2535 வரையுள்ள திருமந்திரங்களுக்கு ஆதீன வித்துவான் த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களாலும் 2536 முதல் 2647 வரையுள்ள இறுதித் திருமந்திரங்களுக்கு ஆதீன வித்துவான் க. வச்சிரவேல் முதலியார் அவர்களாலும் உரை இயற்றப்பட்டு 1968 ஆம் ஆண்டு முதல் 1973 ஆம் ஆண்டுவரை ஏழுபகுதிகளாக வெளிவந்தன. சீர்வளர்சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள் திருவருள் ஆணையின்படி இவ்வாண்டு நடைபெறும் ஆதீனக் குருமுதல்வர் அருட்டிரு நமசிவாய மூர்த்திகள் மகரத் தலைநாள் குருபூசைப் பெருவிழா மலராக திருமந்திரம் எட்டாம் தந்திரம் அவ்வுரைகளுடன் இரண்டாம்

பதிப்பு பெற்று மலர்கின்றது. அன்பர்கள் பெற்று ஓதியுணர்ந்து பயனெய்தி இன்புறுக.

எளியேனையும் ஆதீன அருட்பணிகளில் ஆட்கொண்டு நன்னெறிப்படுத்திப் பரிபாலித்தருளும் சீர்வளர்சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள் பெருங் கருணைச் சிறப்பிற்கு எழுமையும் கடப்பாடுடையேனாய் அவர்கள் பொற்பாத கமலங்களை உளம் கொண்டு சிந்தித்து வணங்கிப் போற்றுகின்றேன்.

அடியேனது அறியாமையால் இப்பதிப்பில் நேரிட்ட குறைகளைப் பொறுத்தருள அறிஞருலகைப் பணிவுடன் வேண்டுகின்றேன்.

" மெய்கண்டதேவர் திருமரபு நீடு தழைக "

சரசுவதி மகால்
நூல்நிலையம்
திருவாவடுதுறை
30—1—92

இங்ஙனம்
புலவர், பா. மகாலிங்கம்
ஆதீனம் நூலகர்

உ

சிவமயம்

# திருமந்திரக் கருத்து

## எட்டாம் தந்திரம்

ரசம், ரத்தம், இறைச்சி, தோல், மேதை, எலும்பு, வழும்பு, மச்சை, சுக்கிலம் இவை ஒன்று கூடிய உருவமே உடல். இந்த உடம்பு அன்னகோசம். இதனுள், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆநந்தமயம் ஆகிய பஞ்சபேதங்கள். ஞானநிலையில் விஞ்ஞானர், எஞ்ஞானர், அஞ்ஞானர், மெய்ஞ்ஞானர் என நான்கு பேதங்கள் உண்டாகையால், அவர்களுக்கு நான்கு உடல்கள் உண்டு. அவை விஞ்ஞானருக்கு ஆணவமே உடல்; எஞ்ஞானருக்கு மாயை; அஞ்ஞானருக்குக் கன்ம உடல்; மெய்ஞ்ஞானிக்குச் சிவமே உடல்;

இந்த உடலோடு கூடிய ஆன்மா ஜாக்கிரம், கனவு, சுழுப்தி, துரியம், துரியாதீதம் என்றநிலை வேறுபாடுகளை எய்துகிறது. இந்த நிலைகளில் கீழாலவஸ்தை, மேலாலவஸ்தை, மத்தியாலவஸ்தை என மூன்று நிலைகள் உண்டு. அவற்றுள், மேலாலவஸ்தை சுத்த நனவாதிடார்வம் என்று அழைக்கப்படும். அதைக் கடந்த பராவஸ்தையும், அதற்கு அப்பாற்பட்ட

நிர்மலாவஸ்தையும் உண்டு. நிர்மலாவஸ்தையில் இருப்பவர்களுக்கே ஞானோதயம் ஆகும். அவர்களே ஆறு அந்தங்களையும் கண்டவர். அவர்களுக்குப் பதி, பசு, பாசங்களின் வேறின்மை தோன்றும். அங்ஙனம் தோன்றியவர்களே முக்குற்றங்களும் நீங்கியவர். ' அது – நீ – ஆகிறாய் ' என்ற மூன்று பத அனுபவங்கள் அவர்களுக்கு விளையும். சிவபரம், சீவபரம், சகபரம் என்ற மூன்றின் மேன்மையை உணர்ந்து உய்வர். முத்துரியங்களான சிவ, சீவ, பர துரியங்களில்நிற்பர். முத்திநிலை மூன்று; சிவமுத்தி, பரமுத்தி, சொருபமுத்தி. இம்மூன்று நிலைகளை எய்துவர் இங்ஙனம் அனுபவம் முதிர்ந்தவர்கள். 'நீ–அது–ஆகிறாய்' என்ற மூன்று நிலையற்று, 'அது' என்ற ஒன்றில் அமைந்து நிற்கிறது. 'அது' என்ற உணர்ச்சியும் அடங்கிய நிலை ஒன்றுண்டு. அது உள்ளமே உரு என்றும், உருவமே உள்ளமென்றும் அறிதல். இவர்களுக்குப் பள்ளம், மேடு இல்லை; உள்ளமும் இல்லை; உருவமும் இல்லை. இவர்கள் அனுபவம் அலையடங்கிய ஆழ்கடல்போல் சொல்ல முடியாத இன்ப நிலையாம்.

தத்துவ ஞானியர் தன்னை அறிந்தவர்கள்; முன்வினையின் முடிச்சை அவிழ்த்தவர்கள்; பின்னை வினையைப் பிசைந்து ஒழித்தவர்கள். அவர்கள் செய்வதெல்லாம் அவனருளால்.



Sivamayam

# TIRUMANTRAM

## Contents of Eighth Thanthram

The human, physical or gross body is composed of certain compounds, of which the chief are water, gelatine, fat, phosphate of lime, albumen and febrine. (These substances are composed of simpler non-metallic and metallic elements, of which the chief are oxygen, hydrogen, carbon, nitrogen, calcium and phosphorus.) And, this gross body that thrives on food has four subtle aspects, - Pranamayam, Manomayam, Vignanamayam and Anandamayam. Those who seek Gnana have to go through the four stages of Vignanar, Yegnanar, Agnanar and Meignanar, when they take on the corresponding forms needed for experiencing Anava, Maya, Karma and Siva.

The soul has five states: Jagrat, Svapna, Sushupti, Turiya and Turiyatita, - waking, dreaming, dreamless sleep, 'the fourth' and

beyond the fourth'. In the state of Jagrat, the soul's consciousness is in the gross body; in other words, it is conscious of external objects and is the gross enjoyer of these objects through the senses. In Svapna, it is conscious of inner objects and the enjoyer of what is subtle, that is, impressions left on the mind by objects sensed in the waking state. The third state, Sushupti, is neither waking nor dreaming. In this state the varied experiences of the two former states are merged into a simple experience; consciousness is neither objective nor subjective. but a simple undifferenced consciousness without an object. In the fourth state, Turiya, the soul acquires pure experience through Samadhi. Finally, in Turiyatita the soul attains the highest equality, that is, it is merged with the Supreme Siva.

While experiencing the above states, the soul undergoes Kizhalavastha, Melalavastha and Madhyalavastha. (Melalavastha is also called Suddha - Jagrat.) The next stage is Paravastha, and after that, Nirmalavastha. The soul in Nirmalavastha acquires Gnana and crosses the six Antas.—Vedanta, Siddhanta,

**Bodhanta, Yoganta and Kalanta. It perceives the oneness of Pathi and Pasa. having freed itself from the three weaknesses – Kamam, Vehuli and Mayakkam. It experiences the position denoted by "you-become-that", and grasps the greatness of Sivaparam, in terms of Seevaparam and Sakaparam.**

## MUKTHI:

**The three stages of Mukthi are: Siva-Mukthi,** Para-Mukthi and Sorupa-Mukthi. The experienced soul does not separately feel the positions signified by "Thom-Thath-Asi" (you-that-become) and identifies itself solely with "that". There is still another stage when even the position "that" disappears. In this last stage, the soul can see the mind as matter and the matter as mind. Such a soul needs no substance or quality. Like the ocean whose waves roll not. the soul is in the state of blissful quiescence.

---

**[ Scientific experiments have re-established the ancient hypothesis of a single Primordial Substance to which the various forms of matter may be reduced, with the resultant of the possible transmutation of one element into another**

since each is but one of the plural manifestations of the same underlying unity. Research has also shown that this original substance cannot be scientific "matter"—that is, that which has mass, weight and inertia. Matter has been dematerialised and reduced to something which differs profoundly from "matter" as known by the senses. This ultimate substance is stated to be Ether in a state of motion. The scientific hypothesis would appear to be as follows The ultimate and simplest physical factor from which the universe has arisen is motion of and in a substance called "Ether" which is not scientific matter. The motions of this substance give rise from the realistic point of view to the notion of "matter". Matter is thus at base one, notwithstanding the diversity of its forms Its ultimate element is on the final analysis of one kind, and the differences in the various kinds of matter depend on the various movements of the ultimate particle and its succeeding combinations. Given such unity of base, it is possible that one form of matter may pass into another. ]



உ

# அதிகார அட்டவணை

( எண் : பக்க எண் )



திருமூலதேவ நாயனார்

சிவமயம்

# திருமூலர் திருமந்திரம்

## ஸ்ரீ பஞ்சாக்ஷரதீபம் என்னும் உரையுடன்

## எட்டாந் தந்திரம்

### 1. உடலிற் பஞ்சபேதம்

திருமூலதேவநாயனார் ஏழாம் தந்திரத்துத் தவ யோகம் சித்திப்பதற்கு உபாயமான ஆறாதாரங் களையும், அண்ட பிண்டங்களில் சிவம் கலந்து ஒன்றாயும் உடனாயும் விளங்குவதால், அவை சிவ பரம்பொருளுடைய இயல்பையும் - இருப்பையும் உணர்ந்து அனுபவித்தற்கு உரிய சாதனங்களாம் என்பதனையும், அங்ஙனம் அறிதற்கு உரிய ஒழுக லாறுகளையும், அதனால் திருவருட்பேறு உண்டா தலையும், அதனால் அருட்சோதி வெளிப்படுதலையும், அத்தகைய அநுபவநிலையிலும் சிவபூசை, மகேசுர பூசை, குருபூசை முதலிய வழிபாட்டுமுறைகள் மனம் புறவழிச் செல்லாது பாதுகாத்தற்கு மிக மிக இன்றியமையாதன என்பதையும், இங்ஙனம் என்ஞான்றும் சிவநெறி நிற்பாரே சிவனடியார்கள்;

அவர்களுடைய உண்ணல், உறங்கல், பிச்சை ஏற்றல் முதலிய அனைத்துத் தொழிலிலும் சிவயோக நெறி விளங்கும் என்பதனையும், அதனால் அவர்களுக்கு உறுதியான சமாதிநிலை கைகூடும் என்பதனையும், சமாதிக்குரிய செயல் முறைகளையும், அதனால் விந்தானது வெளிப்படுதலையும், போகசர ஓட்டம், அதனால் விளைகிற சூரியன் நிலை இவைகளையும், இதோபதேசத்துடனே உபதேசித்தார்.

இந்த எட்டாந்தந்திரத்துச் சிவயோகநெறிக்குச் சாதனமான உடல் ஐவகைப்படு மென்பதையும், இவ்வுடல் தானாக விழாமல், யோகி தன்னுடைய இச்சைப்படி விடத்தக்கது ஆதலால், அதற்குரிய உபாயங்கள் இவை என்பதையும், கீழாலவத்தை மேலாலவத்தை முதலிய நிலை வேறுபாடுகளையும், அவற்றின் இலக்கணங்களையும், கேவல சகல சுத்தாவத்தைகளின் இயல்பையும், எல்லாவற்றிற்கும் மேலான பராவத்தை நின்மலாவத்தைகளுடைய தன்மைகளையும், ஆனந்தத்துடன், தத்துவ தாத்துவிக இயல்புகளை உள்ளவாறுணரும் முறைமைகளையும் உணர்த்திச் சோதனையுடன் உபதேசிக்கத் தொடங்கி முதற்கண் ஐவகை உடல் நிலைகளை அறிவிக்கின்றார்.

உடலில் பஞ்சபேத மென்பது மாயாகாரியமான இவ்வுடல் தூலம், சூக்குமம், காரணம், சுத்தம், மகாகாரணம் என ஐவகைப்படும். அவ்வுடல்கள் எவ்வெப்போது எங்ஙனம் காரியப்பட்டு உயிர்க்கு உபகாரப்படுகின்றன என்பதை அறிவிப்பது.

**காயப்பை யொன்று சரக்குப் பலவுள**
**மாயப்பை ஒன்றுண்டு மற்றுமோர் பையுண்டு**
**காயப்பைக் குண்ணின்ற கள்வன் புறப்பட்டால்**
**மாயப்பை மண்ணா மயங்கிய வாறே. 2122**

இம்மந்திரம் என்னுதலிற்றோ எனின், உடலும், உடலுள் உற்ற பொருளும், அப்பொருள்கெட உடல் அழியுமாறும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன்பொருள்: உடலாகிற பையொன்று உண்டு; அப்பைக்குள் திணிக்கப்பெற்ற சரக்குகள் பலவுள்ளன. காயப்பைக்குள்ளே மாயமான பை ஒன்று உண்டு. வேறும் ஓர் பை மாயப்பைக்குள் உண்டு; உடலாகிற பையுள் நின்ற கள்வனாகிய உயிர் வெளிப்பட்டால் காயப்பை மட்டுமின்றி மாயப்பையும் மண்ணாகி, மண்ணொடு கலந்தொழியும் என்றவாறு.

பைக்குள் பையாகக் காயப்பை, மாயப்பை, வேறொரு பை என மூன்றுள்ளன. காயப்பைக்குள் பல சரக்குகள் உள்ளன. இத்தனை பைகளையும் பாதுகாக்கும் உயிர்க்கள்வன் வெளிப்படின் பைகள் மண்ணோடு மண்ணும் என்பது கருத்து.

காயப்பை – காயமாகிற பை. காயம் - உடல். வந்து தோன்றுவதென்பது இச்சொல்லின் பொருள். அதாவது தோன்றி நின்று அழிவது என்பதாம். தூலமாகிய உடல் ஒன்று என்றவாறும். தோற்பை என்பார் பிறர்.

சரக்கு - உடற்பையுள் திணிந்திருக்கும் என்பு, நரம்பு, மச்சை, சுவேதநீர், ஊன் முதலிய பண்டங்கள்

என்பாரும் உளர். ஆயினும் 'வினையெனும் சரக்கு' எனவும். 'அறிவில் ஒழுக்கமும் – பிறிதுபடு பொய்யும். கடும் பிணித்தொகையும் இடும்பை யீட்டமும் இனையன பலசரக்கு ஏற்றி' எனவும் ஆசிரியவசனம் இருத்தலின், சரக்கு என்பதற்கு வினைகளின் பயனாகிவரும் அறிவில் ஒழுக்கம் முதலியனவே கொள்க.

மாயப்பை – அறிவான் அன்றிப் புலனால் அறியப் படாததாய். கனவாதிகளில் மட்டும் காரியப்படுவதாய் கனவில்வினையும் சுகதுக்க ரூபமான உணர்ச்சி வேறு பாட்டால் உணரப்படுவதாய மாயம் செய்யும் உட லாகிய சூக்கும உடம்பு. இதனை மாயையின் காரிய மான உடல் என்று உரைப்பாரும் உளர். உடலனைத்தும் மாயையின் காரியமேயாதலின் இதனை மட்டும் மாயப்பை என்பதால் வரும் பயனின்மை ஓர்க.

ஆகவே காயப்பை தூலஉடலையும், மாயப்பை சூக்கும உடலையும், மற்றுமோர்பை காரண உடலையும் முறையே உணர்த்தின.

கள்வன் – இருந்தும், செய்கையானன்றி உணர மாட்டாமையின் உயிரைக் கள்வன் என்றார். கள்வன்- உயிருக்குயிராகிய சிவம் என்பாரும் உளர். அவர்கள் "உள்ளங்கவர்கள்வன்" என்றதை உட்கொண்டு அங்ஙனம் உரைத்தனர். காயப்பைக்குள் நின்ற கள்வன் என உணரக் கூறினமையானும், ஈண்டு உயிர் பிரிய உடல் மண்ணானதையே வலியுறுத்த லானும் இறைவன் எனல் ஏலாமை யறிக.

ஆகவே மூவகையுடலும் ஒருங்கிருப்பினும் உயிர் பிரியின் உடல் மண்ணுவதை விளக்கிய வாறு. (1)

அத்த னமைத்த வுடலிரு கூறினிற்
சுத்தம தாகிய சூக்குமஞ் சொல்லுங்காற்
சத்த பரிச ரூப ரசகந்தம்
புத்திமா ஙுங்காரம் புரியட்ட காயமே. 2123

இம் – எனின், சூக்கும உடம்பின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சிவபெருமான் அருளிய தூலம் சூக்குமம் என இருகூறுய உடலில் சுத்தமாகிய சூக்கும உடலைப்பற்றிக் கூறுமிடத்து, சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம், புத்தி, மான், அகங்காரமென்ற எட்டாகுகிய புரியட்ட சரீரமாம் எ – று.

தூலம் சூக்குமமாகிய இருவகை உடலில் சூக்கும உடம்பு எட்டன்கூட்டமாய புரியட்ட சரீரமாம் என்பது கருத்து.

அத்தன் • தந்தை: உடலையமைப்பது தந்தையின் செயல். அனைவருக்கும் இருந்தபடியிருந்தே உடலை அமைக்குந்தன்மை சிவபெருமானுடைய இயல்பாதல் உணர்த்தப்பெற்றது. இருகூறு – தூலம் சூக்குமம் என்ற இருவகை.

சூக்கும உடம்பு அறிதன் மாத்திரைக்குரியதாய தன்மாத்திரை அந்தக்கரணங்களாலாயது. அது கருவின்றியே கருத்தான் பிறப்பித்த உடல். ஆதலின் அதனைச் சுத்தமாய சூக்குமம் என்றார்.

சத்தம் : வல்லோசை மெல்லோசை முதலான சிறப்புவகையான ஓசைகளை உள்ளடக்கிப் பொதுமையான் ஓசை மாத்திரையாய்ச் சூக்குமமாய் நிற்பது.

பரிசம்; அவ்வோசையோடுகூடத் தட்பம் வெப்ப முதலிய சிறப்புவகைப்பரிசங்களை உள்ளடக்கிப் பொதுமையிற் பரிசமாத்திரையாய்ச் சூக்குமமாய் நிற்பது.

ரூபம் : முற்கூறிய ஒலி, உணர்ச்சி இவைகளுடன் வெண்மை செம்மை முதலிய சிறப்புவகை உருவங்களை உள்ளடக்கிப் பொதுமையால் உருவ மாத்திரமாய்ச் சூக்குமமாய் நிற்பது.

ரசம் : முற்கூறிய சத்த ஸ்பரிச ரூபங்களுடன் தித்திப்பு புளிப்பு முதலிய சிறப்புவகைச் சுவைகளை எல்லாம் உள்ளடக்கிப் பொதுமையில் சுவை மாத்திரையாய் நிற்பது.

கந்தம் : சத்தாதிநான்குடன் நறுநாற்றம் தீ நாற்றம் முதலிய சிறப்புவகை நாற்றங்களை உள்ளடக்கிப் பொதுமையாற் கந்தமாத்திரையாய்ச் சூக்குமமாய் நிற்பது.

புத்தி என்பது, நுகர்வோனை புருடனுக்குக் குண தத்துவத்தினின்று சாத்துவிகத்தான் மிக்கும் ஏனையிரண்டு குணங்களால் குறைந்தும் பரிணமித்துத் தோன்றி, வித்தையில் பொதுமையான் விளங்கிய ஞான சத்தியை அவ்வவ் விடயங்தோறும் சிறப்பு வகையான் விளக்கி, அவற்றைப் பெயர் சாதி முதலியவற்றான் நிச்சயிக்கச் செய்யும் கருவியாயும், நிச்சயித்த பின்னர் அவ்வவ்விஷய வடிவிற்றாய்ப்

பரிணமித்துத் தோன்றும் ஞானமாய் நின்று ஆன்மா விற்குப் புலனாய் அடுத்துத் தோன்றும் போக்கியமா யும், புருடன் செய்யும் புண்ணிய பாவங்களாகிற இரு வினைகட்குப் பற்றுக் கோடாயும், தன்ம முதலிய எட்டுக்கும் பிரத்யய முதலான ஐம்பதுக்கும் அவற்றின் விரிவுகட்கும் இடமாயும் நிற்பது.

மான் – மனம்: மனமாவது வாதனைபற்றி நிகழும் சங்கற்ப விகற்பமாகிய தொழிற்பாடுகளை யுடைய கருவி. அஃதாவது குடங்கண்டான் ஒருவன் இது குடம் என்று ஒன்றைக்காட்ட, உணர்ந்த ஒருவன் மற்றோரிடத்து மற்றொன்றைக் கண்டவிடத்தும் இது குடம் என்னும் சொற்குப் பொருளாவது என்று உணருவதற்கும், முன்கண்ட வன் ஒருவனைப் பின்னருங் கண்டுழி இவனவன் என்றுணர்தற்கும் ஏதுவாகிய கருவியாம் என்க.

ஆங்காரம் – அகங்காரம். அஃதாவது பொருளைக் கண்ட வழி இஃதின்னது; இன்னபயனது என நிச்ச யிப்பேன் என ஒருப்பட்டெழுதற்குக் கருவியாய்ப் புத்தி தத்துவத்தினின்று சாத்துவிக தாமசங்கள் குறைந்து, ராசதமிக்குப் புருடன் கண்ணதாய் விடயந் தோறும் "நான் நிச்சயிப்பேன்" என ஒன்றாய், யான் என்னும் வடிவிற்றாய் நிற்பது, இந்த எட்டுங் கூடிய உடலே உணர்வு வடிவினதாய புரியட்டக சரீரமாம் என்க. இதனையே திருமூலதேவநாயனார் 'சுத்தமதாய சூக்கும உடல்' என்றார்.

இனி, சிவனே தந்த சூக்கும உடல் இரு வகையுள் சுத்த தத்துவங்களாலாய பரதேகமாகிய சூக்கும தேகத்தைப் பற்றிச் சொல்லுங்கால் முற்

கூறிய எட்டுமாம் என உரைத்தலுமாம். சுத்தமதாகிய சூக்குமம் என விசேடித்தலான் சூக்கும சரீரத்திலும் இருவகையுண்மையும், ஒன்று தன் மாத்திரைகளும் அந்தக் கரணங்களுமாய எட்டான் இயன்றது எனவும், மற்றொன்று பூதம் ஒன்றும், தன் மாத்திரை ஒன்றும், ஞானேந்திரியம் ஒன்றும், கன்மேந்திரியம் ஒன்றும், அந்தக்கரணம் ஒன்றும். குணதத்துவம் ஒன்றும், மூலப்பகுதி ஒன்றும், கலாதி ஒன்றும் என்னும் எண்வகைப்பட்ட முப்பத்தொரு தத்துவங்களான் ஆயது எனவும் உணர்க. சுத்த சூக்குமம் – பரவுடல்; அதாவது அதிசூக்கும தேகம். இது மிருகேந்திரத்துட் கண்டது என்பார்கள் மாதவச் சிவஞானசுவாமிகள். (2)

எட்டினி லைந்தாகு மிந்திரி யங்களுங்
கட்டிய மூன்று கரணமு மாயிடும்
ஒட்டிய பாச முணர்வது வாகவே
கட்டி யவிழ்த்திடுங் கண்ணுதல் காணுமே. 2124

இ-ம் – எனின், எட்டையும் இறைவன் ஆன்மாக்களுக்குக் கூட்டுவதன் காரணத்தை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: முற்கூறிய எட்டில், சத்த முதலிய ஐந்தும் இந்திரியங்களாம்; அவற்றோடு தொடர்புறுதப்பெற்ற ஏனைய மனமாதி மூன்றும் அந்தக்கரணங்களாம்; இந்த எட்டோடும் உயிர்ஒட்டியதால் விளைந்த பாசம் பாசஞானமாம்; அங்ஙனம் பாசத்தைப்பூட்டி மூலமல வாதனையைக்கழிப்பன் கண்ணுதற் பெருமான்; இதனை நன்கு அறியுங்கள் என்றவாறு.

இறைவன் ஆன்மாக்களுக்குப் புரியட்டக வடிவை நல்கி மலத்தைக் கெடுக்கின்றான் என்பது கருத்து.

எட்டினில் – முன்செய்யுளில் கூறிய எட்டில், சத்தாதி ஐந்தும் தன் மாத்திரைகளாக இருக்க அவற்றை இந்திரியங்களாகக் கூறியது கருவிகட்கும் காரியங்கட்கும் உள்ள ஒற்றுமை நயம்பற்றி என உணர்க. பொறிகளைப் புலன்களாகவும், புலன்களைப் பொறிகளாகவும் கூறும் மரபு திருமுறைகளில் பெரிதும் காணப்பெறும் என்க.

இந்திரியங்கள் காரியப்படுவது மனம் முதலிய அந்தக்கரணங்களோடு கூடிய வழியன்றி நிகழாதாக லின் கட்டிய மூன்று என அந்தக்கரணங்களை விசே டித்தார்.

இவ்வெட்டும் தொடர அதனால் விளைவது பாச மாகிய பற்று. ஆதலின் ஒட்டிய பாசம் எனப்பட்டது. உணர்வு என்றது ஈண்டுப் பாசஞானத்தை.

கட்டி அவிழ்த்தல் – வைச்சு வாங்குதல்போல, ஆன்மாவிற்குப் பாசஞானத்தைக்கூட்டி வினைகளை நுகர்த்தி மலவாதனையையும் வாட்டிப் பந்தத்தினின்று விடுபடச் செய்தல்.

கண்ணுதல் என்றது மும்மலங்களையும் போக்கும் முக்கண்ணன் என்பது தொனிக்க. காணும் – முன் னிலை அசையுமாம். (3)

**இரத முதிர மிறைச்சிதோன் மேதை**
**மருவிய வத்தி வழும்பொடு மச்சை**
**பரவிய சுக்கிலம் பாழா முபாதி**
**உருவ மலாலுட லொன்றென லாமே. 2125**

இம் — எனின், பரு உடலியல்பை விளக்குதல் நுதலிற்று.

இ - ள் : இரதமுதலிய ஒன்பதன் கூட்டன்றிப் பாழான உடலை ஒருபொருளெனக் கூறலாகாது என்றவாறு.

இரதம் முதலான ஒன்பது தாதுக்களின் கூட்டமே இப்பருவுடல் என்பது கருத்து.

இரதம் ; உண்ட உணவின் சாரமான இரசம்.

உதிரம் - இரத்தம் : உடம்பிலே காயம் ஏற்பட்டபோது வடியும் சிவந்த பசைபோன்ற திரவம். இது பிளாஸ்மா என்னும் திரவமும் அதில் மிதக்கும் உயிர் அணுக்களும் சேர்ந்தது. உயிர் அணுக்களில் சிவப்பு வெண்மை என இருவகையுண்டு. இவற்றில் சிவப்பணுக்கள் பிராணவாயுவை உடலெங்கும் கொண்டு உதவி, ஆங்காங்கே உள்ள கரியமில வாயுவைச் சுவாசப்பைக்குக் கொண்டுவந்து வெளித் தள்ள உதவுகின்றன.

இறைச்சி ; உதிரம் பரவுவதற்கிடமான திசு. தசை நாருமாம்.

தோல் - ஊனைப் பொதிந்து மூடியிருப்பது,

மேதை - அறிவு விளக்கத்திற்காக மூளைப் பகுதியைப் பற்றியுள்ள வெள்ளிணம், நீர்மையானது கொழுப்பு என்பாரும் உளர்.

அத்தி - அஸ்தி என்பதன் திரிபு. எலும்பு. திசுக்களுக்கும் நரம்புகளுக்கும் காப்பாகவிருக்கும்

சட்டகம். உடலின் இயக்கம், பாதுகாப்பு, புதிய இரத்த அணுவின் தோற்றம் இவைகட்குக் காரணமாவது.

வழும்பு ; நிணத்திலிருந்து ஊறும் வெண்மையான நீர்.

மச்சை – எலும்புக்குள்ளே ஓடும் வழுவழுப்பான திரவம்.

சுக்கிலம் – வெண்ணீர், இவைகள் கூடிய பாழான காரியம் உடல் என்றவாறும். உபாதி – காரியம். (4)

ஆரே யறிவா ரடியின் பெருமையை
யாரே யறிவா ரங்கவர் நின்றது
யாரே யறிவா ரறுபத்தெட் டாக்கையை
யாரே யறிவா ரடிக்காவ லானதே. 2126

இ-னின், இறைவன் உடலுக்குக் காவலாக விளங்குவதை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : சிவபெருமானுடைய திருவடிப்பெருமையை அறிவார் யார்? உடலை இடமாகக்கொண்டு அவர் எழுந்தருளியிருப்பதை அறிவார் யார்? அறுபது தத்துவங்களோடும், எட்டுத் தத்துவங்களோடும் விளங்கும் இருவகை உடலையும் அறிவார் யார்? அவ்வுடல்களுக்கு இறைவன் அநாதியே காவலாக இருந்து ரட்சிப்பதை அறிவார் யார் என்றவாறு.

உடலுக்கு இறைவன் உறுதுணையாயிருந்து காப்பதை அறிவார் யார் என்பது கருத்து.

அடி - திருவருள். அங்கு என்ற சுட்டு நெஞ்சறியும் சுட்டாய் உடலுள் என்னும் பொருள் பயந்தது. இறைவன் ஊனுடம்பை ஆலயமாகக்கொண்டு எழுந்தருளியிருப்பதை அறிவார் யார் என்றவாறும்.

அறுபது யாக்கை - மாயேயங்களான பூதங்களின் கூறுகளாகிய இருபத்தைந்தும். கன்மேந்திரியங்கள் ஐந்தும், வாயுக்கள் பத்தும், நாடிகள் பத்தும், வாக்குகள் நான்கும், ஈஷணைகள் மூன்றும், குணமூன்றும் ஆகிய அறுபதும்; இவற்றாலாய தூல உடல் என்க.

எட்டு + யாக்கை - முற்கூறிய புரியட்டக சரீரமாம்.

அடிக்காவல் - ஆதியான காவல்: அநாதியே காக்கும்முறைமை. சிவாலயம் எனப் பொருள் கொண்டு திருக்கோடிக்காவல் திருவானைக்காவல் முதலியவற்றை உதாரணம் காட்டுவாரும் உளர். திருக்கோடிக்காவே அன்றிக் காவலன்மையுணர்க. ஆனைக்காவிலண்ணலை என வருதலின் அதுவும் காவேயன்றிக் காவலன்று. ஆதலால் அப்பொருள் பொருந்தாமையுணர்க. (5)

எண்சா ணளவா லெடுத்த வுடம்புக்குட்
கண்கா லுடலிற் கரக்கின்ற கைகளிற்
புண்கா லறுபத்தெட் டாக்கை புணர்க்கின்ற
நண்பா லுடம்புதன் னாலுடம் பாகுமே. 2127

இ-ம் - எனின், உடல் நால்வகைப்படுமாற்றையும் அவ்வவற்றிற்குரிய தத்துவங்களையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : அவரவர் கைக்கு எட்டுச்சாண் உயர முள்ளதாக எடுத்த உடம்புள், கண்ணும் காலும் உடம்பில் மறைக்கப்படுகின்ற கையும் ஆகிய இவற்றோடு, அறுபதும் எட்டுமாகிய தத்துவங்களோடு கூடிய புண்ணைக்காலும் உடலைக் கூட்டுவிக்கின்ற திருவருளால் அது நான்குவகையான உடம்பாம் எ – று.

உடல் அறுபதும், எட்டுமாய தத்துவங்களுடன் கூடித் தூலம் சூட்சுமம் காரணம் மகாகாரணம் என நால்வகைப்படும் என்பது கருத்து.

'எறும்பும் தன்கையால் எண்சாண்' என்பவாகலின் அவரவர் வினைக்கீடாக எடுத்த உடம்பு அவரவர்கள் கையால் எண்சாணிருக்கும் என்க. கண் • ஞானேந்திரியம். கால் கை கன்மேந்திரியம். உடலிற் கரக்கின்ற கை – உடலில் உள்ள உறுப்புக்களில் உடலைப் பொத்தி மறைப்பன கைகளேயாதல் தெளிவித்தவாறு. 'கையது கொண்டு மெய்யது பொத்தி' என்னும் புறப்பகுதியும் தெளிக

புண்கால் யாக்கை, அறுபது யாக்கை, எட்டு ஆக்கை எனத் தனித்தனியே கூட்டுக. அறுபது யாக்கையும் எட்டியாக்கையும் முன்னர் உணர்த்தப் பெற்றன.

நாலுடம்பு – தூலம், சூக்குமம், காரணம், மகா காரணம் என்பன. அவற்றுள் தூலசரீரமாவது ஐம் பூதங்களும், கன்மேந்திரியம் ஐந்தும், ஞானேந்திரியம் ஐந்தும் ஆகப் பதினைந்தும் கூடியதாம்.

சூட்சும சரீரமாவது முற்கூறிய புரியட்டக வடிவாம். காரணசரீரமாவது காலம், நியதி, கலை, வித்யை, அராகம், குணம் ஆகிய ஆறுடன் கூடியதாம். மகாகாரண சரீரமாவது சுத்தமாயை ஒன்றேயாம். (ப)

எண்சாணளவான, என்றும் பாடம்.

உடம்புக்கு நாலுக்கு முயிராய சீவன்
ஒடுங்கும் பரனொ டொழியாப் பிரமங்
கடந்தொறு நின்ற கணக்கது காட்டி
அடங்கியெ யற்றது யாரறி வாரே. 2128

இம் - எனின், சீவன் ஒடுங்குமிடமும், சீவனுள் சிவனிற்கும் தன்மையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : முற்கூறிய உடம்புகள் நாலுக்கும் உயிராக விளங்கும் சீவன். அச்சீவன் சிவபரம்பொருளோடு ஒடுங்கும். எங்கும் நீக்கமற நிறைந்துள்ள பிரமமாகிய சிவம் குடங்கள்தோறும் நிறைந்துள்ள நீரில் தோன்றுகின்ற கணக்கினையறிவித்து உயிருக்கு உயிராக அடங்கி நின்றது. அவ்வுண்மையை யுள்ளவாறுணர்வார் யார். ஒருவருமிலர் எ - று.

சீவர்கள்தோறும் சிவம் கலந்திருக்கும் நிலை, குடந்தோறும் சூரியன் விளங்குவதுபோலாம் என்பது கருத்து.

உயிரும் சீவனும் ஒன்றேயாயினும், உயிராகிய சீவன் என்றது இருபெயரொட்டாம். உயிராய வென்றது உடலொடு கலந்திருக்கும் பொதுத்

தன்மையினையும், சீவனென்றது புருடனாகி விளங்கும் சிறப்பியல்பையும் தெரிவிப்பதாம்.

பரன் — சிவன், ஒடுங்கும் — சிவபரம் பொருளின் சர்வ வியாபகத்துள் ஏகதேசமாய் அடங்கும் என்பதாம்.

ஒழியாப்பிரமம் — பார்க்குமிடம் எங்குமொரு நீக்கமற நிறைந்து நிற்கும் பரிபூரண ஆனந்த ஸ்வரூபமான பிரமம்.

கடந்தொறும் நின்ற கணக்கது — குடந்தோறும் நிறைந்த நீரில் விளங்கி நின்ற கணக்கு. அதாவது கடம் - உடல், நீர் — உயிர், சூரிய நிழல் — பிரம விளக்கம் என்க. இவ்வுவமையினை ஏகான்ம வாதிகளும் பரம பிரமம் ஒன்றே எங்கும் வியாபித்திருக்கின்றது என்ற தம் கொள்கைக்கு உவமை காட்டுவர். கைவல்ய நவநீதத்திலும்.

கடநீரின் மேக நீரிற் கண்டவா னிரண்டும் பொய்யே
குடவானும் பெரிய வானும் கூடியொன் றுமெப் போதும்
இடமான பிரமஞ் சாட்சி இரண்டுமெப் போது மேகம்
திடமாகச் சுவா நுபூதி சிவோக மென் றிருந்திடாயே.

என்னும் பாடல் குடத்துத் தண்ணீரிலும் மேக நீரிலும் நிழல் செய்கின்ற வான் இரண்டும் பொய்யே கடவானும் மகாவானும் எப்போதும் ஒன்றே. அது போல பரபிரமமும் சீவப்பிரமமும் ஒன்றே என்று கூறும். கடம் ஒன்று, நீர் ஒன்று, நிழல் ஒன்று என மூன்று பொருள் இருந்தாலல்லது நிழலின் வெளிப்பாடு இல்லை. ஆகவே கடம் உடலும், நீர் உயிரும், நிழல்

உயிர்க்குயிராக விளங்கும் பிரமமும் ஆக அவர்கள் சாயையாகிற பிரமம் விளங்கும் ஆதாரத்தை விட்டு குடநீரை ஒன்ருக்கி இடர்ப்படுவர், இந்த உவமை அவர்கள் கருத்தை விளக்காமை தெளிவு.

அடங்கி-கடத்தின் நீரளவாக நின்று, பின்னர்க் கடமுடைந்தவழி நிழல் அற்றதுபோலச் சீவனிடம் சாதகநிலையில் விளங்கிய சிவம் மறைந்தது என்பதாம். அநுபூதிமான்களுக்கு எப்போதும் விளங்கித் தோன்றும் என்க. (7)

ஆறந்த மாகி நடுவுடன் கூடிஞற்
றேறிய மூவாறுஞ் சிக்கென் றிருந்திடுங்
கூறுங் கலைகள் பதினெட்டுங் கூடியே
ஊறு முடம்பை யுயிருடம் பெண்ணுமே. 2129

இ-ம் - எனின், உயிர் நின்ற உடம்பு இது தானென வரை செய்தல் நுதலிற்று.

இ-ள் : ஆறு ஆதாரங்களிலும் முடிவுறச்செல்ல நடுநாடியாகிய சுழிமுனையுடன் கூடிஞல் தெளிந்த பதினெட்டும் தஞ்சேட்டையற்றுக் கட்டுண்டிருக்கும்; அங்ஙனம் கூறப்படும் பதினெட்டுக்கலைகளுடன் சேர்ந்து, ஊறுணர்ச்சியுடன் கூடிய உடம்பை உயிர் நின்ற உடம்பு என எண்ணச் செய்யும் என்றவாறு.

ஆதாரங்கள் : அனைத்தினும் நடுநாடி வழியாகச் செல்லின் கலைகள் பதினெட்டும் கட்டுப்படும் ஊறு உணர்ச்சியுள்ள உடம்பு உயிர் நின்ற உடம்பாம் என்பது கருத்து.

ஆறந்தமாகி – மூலாதாரம் சுவாதிட்டானம், மணிபூரகம் விசுத்தி அநாகதம் ஆஞ்ஞை என்ற ஆறின் அந்தமான துவாதசாந்தத்தலமாகி என்க. உயர ஏறுவானுக்கு ஏணி உபகாரமாதல் போல ஆறையும் அந்தத்தையும் அடையும் சாதகனுக்கு நடுவாகிய சுழிமுனை உபகாரப்படும் என்பதாம். ஆறந்தம் – அத்துவாக்கள் ஆறு எனவும், நடு – அத்துவாக்களின் நடுவிலுள்ள சிவம் எனவும் கூறுவர், சிவம் அத்துவாதீதன் ஆதலால் அவ்வுரை ஆராய்தற் குரியது.

தேறிய மூவாறு – உடம்புள் இருப்பனவாகத் தெளிந்த பதினெட்டு. அவை வளிபத்தும், சூக்கும சரீரத்திற்குரிய எட்டும் ஆகப்பதினெட்டுமாம்; அவை தம்மிட்டப்படி இயங்கா; சாதகன் விருப்பப் படி இயங்கும் என்பதைச் சிக்கென்றிருந்திடும் என்பதாற் குறிப்பித்தார்.

கூறும் கலைகள் பதினெட்டு – சிவானுபவத்திற் குரியவான சைவநூல்களிற் சொல்லப்படுகின்ற கலைகள் பதினாறும் இரண்டும். அவை அகாரகலை முதல் சொல்லப்பட்ட பதினாறு கலைகளும், கலாந்தமும், அதன் முடிவில் விளங்கும் சிவகலையுமாம்.

ஊறும் உடம்பு–ஸ்பரிசஞானம் ஒன்றைமட்டும் உடையதாகிய உயிர் நின்ற உடம்பு. உண்மையில் உணருந்தன்மை வாய்ந்த உயிர் நின்ற உடம்பு என எண்ணப்படும் என்பதாம்.

அதாவது வளிகளையும், மனமாதி அந்தக்கரணங் களையும் கட்டுப் படுத்தி அகாராதி கலைகளைத்

தியானித்து கலாந்தத்தில் சிவதரிசனம் பெற்றால் உடம்பு உயிர் நின்ற உடம்பாம் என்றவாறு. ஆகவே உயிர் நின்ற உடம்பு எய்தத்தகும் நிலை கலாந்தத்துக் கடவுளைக் கூடுதலே என்பதாம். பதினெட்டுக்கலை என்ற வழக்கு வளிகட்கும் புரியட்டகத்திற்கும் இல்லாமைகண்டு சிலர் கூறும் உரையினை ஓர்ந்து ஒழிக்க.

எண்ணும் என்பது செயப்பாட்டு வினையைச். செய்வினை போலக் கூறிய வழக்கு. அன்றி எண்ணு மின் என ஏவலாகக் கூறலும் உண்டு. (8)

மெய்யினிற் றூல மிகுத்த முகத்தையும்
பொய்யினிற் சூக்கம் பொருந்து முடலையுங்
கையினிற் றுல்லியங் காட்டு முடலையும்
ஐய னடிக்கு ளடக்கு முடம்பே. 2130

இ-ள்: எனின், உடலின் காரணமும், அக்காரணம் ஒடுங்கும் இடமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: கண்கூடாகத் தூலதரமாகும் இவ்வுடலை யும், இல்லாதது போலத்தோன்றி அறிவானறியப் படும் புரியட்டக சரீரத்தையும், உள்ளங்கை நெல்லிக் கனி போல விளங்கும் காரணசரீரத்தையும் அடக்கி யுள்ள மாமாயை என்னும் உடம்பு பரசிவத்தின் திருவடிக்குள் அடங்கும் எ - று.

தூலம் சூக்குமம் காரணமாகிய மூன்றுடம்பும் மாயையின் ஒடுங்கும், அதுவும் இறைவன் திருவடி யில் ஒடுங்கும் என்பது கருத்து.

இதனால் தூலமாகிய உடல்கள் அனைத்தும் மாயையின் காரியம். அம்மாயை திருவடிக்கண் ஒடுங்கும் என்பது விளக்கப்பெறுகின்றது.

மெய்யினில் — உண்மையாக : என்பது தூல உடல் இது என்று இந்திரியங்களால் உணரப்படுவ தாய பருவுடல். முகம் — இவன் சாத்தன் இவன் கொற்றன் என விகற்ப ஞானத்தை விளைவிப்பது முகமாதலின். தூல உடலை முகம் என்ற சிறப்பால் தெரிவித்தார். தூலமிகுத்த முகம் — தூல உடல் என்க.

பொய் என்பது என்றும் இல்லாமையன்று; பொய் போலத் தோன்றி அறிவான் அறியப்படுவதாய புரியட்டக உடம்பு.

தூலம் சூக்குமமாகிய இரண்டும் தோன்றி நின் றழியக்காண்டலான், இவை காரியம் என்றும் அநித்யம் என்றும் உணரப்பட்டு இவைகட்கு மூலகாரணமான நித்யமான ஒரு முதல் வேண்டப் படும் என உணர்ந்து அது மாயை எனத் தெளியப் படுதலின் ' கையினில் துல்லியங்காட்டும் உடல் ' எனப்பட்டது. அடக்கும் உடம்பு அய்யன் அடிக்குள் அடங்குமென ஒருவினைவருவித்து முடிக்க.

' அடங்கும் உடம்பே ' என்பது பாடமாயின் முகத்தையும், உடலையும் ( அடக்கிய உடம்பு ) அடிக்குள் அடங்கும் உடம்பு என எழுவாய் வருவித்து முடிக்க.

காயுங் கடும்பரி கால்வைத்து வாங்கல்போற்
சேய விடமண்மை செல்லவும் வல்லது
காயத் துகிற்போர்வை யொன்றுவிட் டாங்கொன்றிட்
டேயு மவரென்ன வேய்ந்திடுங் காயமே, 2131

இம் – எனின், உயிர் பல அண்டங்களில் உடல் எடுத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : பகைவரைச் சினக்கும் கடியவேகம் உள்ள குதிரை காற்றை வைத்து வாங்குதல்போலத் தூரமான இடம் அண்மையான இடம் எவற்றினும் செல்லவல்லது. அதுபோல உடலாகிய ஆடைப் போர்வை ஒன்றைவிட்டு ஒன்றைப்பற்றிப் போர்ப் பவர்போல உடம்பு உயிர்கட்குப் பொருந்தும் எ–று.

இடம்விட்டுச் செல்லும் குதிரைபோலவும், ஒரு போர்வையைவிட்டு வேறுபோர்வையைப் போர்த்துக் கொள்ளும் ஒருவன் போலவும் உயிர் ஒருடலைவிட்டு ஒருடலை இடம்விட்டும் சேய்மையிலும் பெறும் என்பது கருத்து.

கடும்பரி – விரைவினையுடைய குதிரை. அதன் வேகத்தை மிகுதிப்படுத்தி யுணர்த்தக் 'காயும் கடும்பரி' என்றார். காய்தல் – சினத்தல், கால்வைத்து– காற்றைப்போல விரைந்து ; கால்களை வைத்துத் தாவிச் செல்லுதலைப்போல எனலுமாம்.

உடல் ஒரு துணிப்போர்வை. போர்வை கிழியின் வேறு போர்வைபோர்ப்பதுபோல எடுத்த உடல் சீர் கெடின் உயிர் மாற்றுடலைத் தத்தம் வினைக்கேற்ப எங்கும் சென்று எடுக்கும் என்பதாம்.

" தோற்போர்வை மேலுந் தொளைபலவாய்ப் பொய்ம்
மீப்போர்வை மாட்சித் துடம்பு." [ மறைக்கும்

என்ற நாலடியாரினும் உடம்பு போர்வையாதல் உணர்த்தப்பெற்றமை காண்க. (10)

நாக முடலுரி போலுநல் லண்டச
மாக நனவிற் கனுமறந் தல்லது
போகலு மாகு மரனரு ளாலேசென்
றேகு மிடஞ்சென் றிருபய னுண்ணுமே 2132

இம் – எனின், மறுபிறப்புண்டாவதை உவம முகத்தானுரைத்தல் நுதலிற்று.

இ – ள் : சிவகருணையாலே உயிர்கள், பாம்பு சட்டையுரிப்பது போலவும், நல்ல முட்டையிற் பிறப்பனபோலவும், நனவிலே கனவிற் கண்டவற்றை மறந்து அல்லாதவற்றை நினைத்தல் போலவும் போதல் கூடும். போகக்கூடிய இடங்களுக்குப் போய் நல்வினையும் தீவினையுமாகிய இருவினைப் பயன்களை நுகரும் என்றவாறு.

உயிர் எடுத்தவுடலை விட்டு, நாகம் தோலுரித்தாற் போல் வேற்றுடல் தாங்கியும், பறவை முட்டையை விட்டு வேற்றுக் கூட்டுக்குள் வசிப்பதுபோல இடம் மாறியும், நினைவுலகிலே கனாநிகழ்ச்சியை மறத்தல் போல அறிவு திரிந்தும் இருவினைப்பயனை நுகரும் என்பது கருத்து.

சிவஞானபோத மேற்கோள் வெண்பாவினும்.

" *அரவுதன் தோலுரிவும் அக்கனவும் வேறு*
*பரகாயம் போய்வரும் அப்பண்பும்.* "

என்ற உவமையால் உடல் வேறு கோடற்கு அரவு தோலுரித்தலையும், அறிவுதிரிதற்கு கனவிற் காட்சியை நனவில் மறத்தலையும் உணரவைத்தவாறு காண்க.

அண்டசம் – முட்டையிற் றேன்றுவனவாய பறவைகளும் ஊர்வனவற்றுட் சிலவும் முதலியன.

நனவிற் கனுமறத்தலாவது கனுவில் சூட்சும தேகத்தோடு கண்டகாட்சிகள் பலவற்றை நனவிலே மறந்து விடுதல்.

ஆகவே உயிர் வேற்றுடலை இடம்விட்டும் காலம் விட்டும் எடுத்து அங்கங்கே வினைகளை நுகரும் என்பது விளக்கப்பெற்றமை காண்க. (11)

**உண்டு நரக சுவர்க்கத்தி லுள்ளன**
**கண்டு விடுஞ்சூக்கங் காரண மாச்செலப்**
**பண்டு தொடரப் பரகாய யோகிபோற்**
**பிண்ட மெடுக்கும் பிறப்பிறப் பெய்தியே** 2133

இம்–எனின், உயிர் பிறப்பிறப்பிற்பட்டுழலுதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : இப்பூமியில் எடுத்த தேகத்துடன் வினைகளை நுகர்ந்து, தூல உடலை விடும் சூக்குும சரீரத்தைத் துணையாக்கொண்டு மறுமையில் நரகத்திலும் சுவர்க்கத்திலும் உள்ளனவாகிய துக்க சுகங்களை நுகர்ந்து, பரகாயப் பிரவேசம் செய்யும் யோகியைப் போல முன்பே தொடர்ந்து செலப் பிறப்பு இறப்புக்களைப் பொருந்தி உடல் எடுக்கும் என்றவாறு.

பரகாயப் பிரவேசம் செய்யும் சிவயோகி போல இவ்வுடலைவிட்டு, புண்ணிய பாவங்களுக்கு ஏற்ப இன்பத் துன்பங்களை நுகர்ந்து மறுபிறவி எடுத்து உழலும் என்பது கருத்து.

உண்டு - நுகர்ந்து, இவ்வினையெச்சத்திற்கு ஏற்ப. இப்பிறவியில் எடுத்த உடலுக்கு ஏற்ற வினைப்போகங்களை எனச் செயப்படுபொருள் வருவித்துரைக்க.

நரகம்-பாவகன்மஞ் செய்தார் யாதனாசரீரத்துடன் சென்று, துன்பம் நுகரும் இடம். சொர்க்கம் — புண்ணியப் பயனாகிய இன்பம் நுகரும் இடம். உள்ளன—உள்ளனவாகிய துன்ப இன்பங்கள். கண்டு-அனுபவித்தறிந்து நுகர்தலைக் கண்டென்ற வாய்பாட்டாற் கூறினார். இவ்வுலகத்து நாம் நுகரும் இன்பத்துன்பங்களை எம்வினையால் வந்ததென்றும், இன்னவினையால் இத்தகைய துன்பம் வந்ததென்றும் பாகுபடுத்தி அறிய இயலாதது போலன்றித் துன்ப உலகில் துன்பம் நுகரும் போது இது இன்னபாவத்தை யான் செய்தமையான் நேர்ந்தது என்ற முற்பிறப் புணர்ச்சியோடு நுகர்தலின் கூறியதாம் என்க. இந் நயமும் மரபும் உணராதார் உண்டு கண்டு என ஒன்றாக்கி அநுபவித்தறிந்து என உரை கண்டனர். அது பொருந்தாமை உணர்க.

சூக்குமசரீரம் தூலசரீரத்தைப் பிரிந்த பின்பே செயற்படுதலின் 'விடும் சூக்கும காரணமாக' என்றார். பண்டுதொடரச்செல என இயைக்க.

பரகாய யோகி பரகாயப் பிரவேசம் செய்யின் தன் உணர்வு குன்றான் : சிவயோகிகட்கு ஏற்ற

முற்றறிவோடேயே புகுந்த சரீரத்துள் உலவுவன். இதனைத் திருமூலர் வாழ்விலேயே காண்க. ஆகவே இவ்வுவமை முற்றுவமையாகாமல் உடம்பெடுத்தலள விற்கே ஈண்டு இயைவதாயிற்று என்க. (12)

தானவ னாகிய தற்பரந் தாங்கினோன்
ஆனவை மாற்றிப் பரமத் தடைந்திடும்
ஏனை யுயிர்வினைக் கெய்து மிடஞ்சென்றும்
வானும் நிலனும் புகுந்தும் வருந்துமே. 2134

இம்—எனின், பரிபாகியும், அல்லாதாரும் எய்தும் பிறவி வேறுபாடுகளும் வினையநுபவ வேறுபாடு களும் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : அவனே தானேயாகிய அந்நெறியில் நின்ற பரிபாகி, பசு கன்மங்களுக்குரியன வாகிய ஆணவ கன்ம மாயைகளை நீக்கி, பரமுத்தி எய்துவன். அங்ஙனம் பரிபாகம் எய்தப்பெறாத ஆன்மாக்கள் வினைகட்கு ஏற்ற இடத்தைச் சென்றும், இன்பபூமி யாகிய வானிலும், கன்மபூமியாகிய மண்ணிலும் பிறந்தும் வருந்துவனவாம் எ – று.

சிவத்தோடு அத்துவித பாவனையில் நின்று பழகிய ஆன்மா சிவத்தோடு இரண்டறக்கலந்து பேரின்பம் எய்தும். அங்ஙனம் அல்லாத உயிர் பிறப்பிற்பட்டு விண்ணும் மண்ணும் நரகும் நகரமுமாய இடங்களில் சென்று வருந்தும் என்பது கருத்து.

தான் – ஆன்மா, அவன் – சிவம், தற்பரம் – அவனையன்றி அறிவானாகிய தன்னையும் அறிய இடந்

தரும் உலகையும், காலத்தையும் 'அறிகிறேன்' என்ற வினையையும் அறியாது அவனேயாகி ஏகனாகின்றான். பரம் என்பது பாரம் என்னும் பொருளும் தொனிக்க நின்றலின் அதற்கியையத் 'தாங்கினேன்' என்றார். இந்நிலை வாள் நுனியில் நிற்பதுபோலும் அருமை யுடைத்தாதலின் . தாங்கினேன் என அருமை தோன்றக் கூறினார்.

ஆன் + அவை – பசுவுக்குரியனவாகிய பசுக் குணங்கள் ; அதாவது பெத்தநிலை. பரமம் – மேலான வற்றிற்கெல்லாம் மேலானதாகிய பரமுத்தி. ஏனைய வெளிப்படை. (13)

ஞானிக்குக் காயஞ் சிவமே தனுவாகும்
ஞானிக்குக் காய முடம்பே யதுவாகு
மேனிற்கும் யோகிக்கு விந்துவு நாதமு
மோனிக்குக் காயமுப் பாற்கெட்ட முத்தியே. 2135

இம் – எனின், சிவஞானியின் சரீரம் இது வெனல் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஞானத்திற் சரியையுடையார்க்குச் சிவ உடல் தம்முடலாம். ஞானத்திற் கிரியையுடை யார்க்கு உளவாம் உடல் சிவனருளாம். இவர்கள் இருவருக்கும் மேலாக விசுத்தியில் நிற்கும் ஞான யோகிக்கு விந்துவும் நாதமுமே உடலாம். ஞானவரம் பாகிய மோனத்தில் நிற்பார்க்கு மும்பாழுங் கெட்ட முத்தியே உடலாம் எ – று.

ஆகவே, ஞானத்திற் சரியை முதலிய நான்குநிலை யினுள்ளார்க்கும் உடல் இதுவாம் என உணர்த்தப் பெற்றது.

காயம், தநு, உடம்பு என்பன ஒரு பொருளன வாயினும், பகுதிப்பொருளால் வேறுனவை. காயம் – அழிதலை யுடையது. தநு – விஸ்தரித்தலை யுடையது என்னும் வடசொல். உடம்பு – உயிருக்கு உடனாய் இருப்பது. இவற்றை இடமறிந்து பயன்படுத்தி யிருத்தல் அறிந்தின்புறுதற் குரியது.

விந்து – சிவசத்தி. நாதம் – சிவம். முப்பாழ் – ஆணவம் மாயை கன்மம் என்ற ஆன்மாவைப் பாழ் செய்யும் மூன்று மலங்கள். அவைகெடுதலாவது வலி குன்றுதலும், கெட்டொழிதலுமாம். (14)

விஞ்ஞானத் தோர்க்கா ணவமே மிகுதனு
எஞ்ஞானத் தோர்க்குத் தனுமாயை தானென்ப
அஞ்ஞானத் தோர்க்குக் கன்ம தனுவாகு
மெய்ஞ்ஞானத் தோர்க்குச் சிவதனு மேவுமே. 2136

இம் – எனின், ஞான வேறுபாடு நோக்கி உடல் வேறுபாடுகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : விஞ்ஞானகலர்க்கு ஆணவமலம் ஒன்றுமே உடலாம். ஞானநிலையை எய்த இருப்பாராகிய பிரளயாகலர்க்கு உடல் ஆணவமும் மாயையுமாம். அறியாமையை யுடைய சகலான்மாக்களுக்கு ஆணவம் மாயை கன்மம் மூன்றும் உடலாம். உண்மைச் சிவஞானியர்க்குச் சிவசரீரமே சரீரமாம் எ – று.

விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் மூவகையார் உயிர்வர்க்கமும் முறையே ஆணவமும், ஆணவமும் மாயையும், ஆணவம் மாயை கன்மம்

என்ற மூன்றும் பந்தமாய்ப் பெற்ற யாக்கைகளை யுடையனவாம் என்பதாம்.

விஞ்ஞான + அகலர் = விஞ்ஞாநகலர்-விசேட மான அறிவால் மலம் விலகப்பெறுகின்றவர்கள். இவர் களையே விஞ்ஞானத்தார் எனக்குறித்தவாறு.

எஞ்ஞானத்தோர் – எய்ஞ்ஞானம் – எஞ்ஞானம். மெய்ஞ்ஞானம் மெஞ்ஞானம் ஆதல்போல மாயை யாகியமறைப்பு விலக ஞானம் எய்துந்தகுதியுடையார். அவர்கள் பிரளயாகலர்; பிரளயகாலத்தில் மலம்மாயை நீங்கப் பெறுபவர்கள், இதனை எஞ்சுஞானத்தார் எனக்கொண்டு கன்மா ஒழிந்த ஆணவ மாயை உடையார் என்பர் சிலர். ஏற்குமேற்கொள்க. (15)

மலமென் றுடம்பை மதியாத வூமர்
தலமென்று வேறு தரித்தமை கண்டீர்
நலமென் றிதனையே நாடி யிருக்கிற்
பலமுள்ள காயத்திற் பற்றுமிவ் வண்டத்தே. 2137

இம் – எனின், இவ்வுடலை மாயாகாரியம் என்று உணர்ந்து ஒருவப் பிறப்பில்லை என்பது உணர்த் துதல் நுதலிற்று.

இ – ள் : தாம் அடுத்த இவ்வுடலை மாயாகாரியம் அதனால் மலம் என்று வெறுக்காத ஊமர்கள், இவ் வுடலே நமக்குச் சிறந்த இடம் என்று சிறப்பாக இதனையே தாங்கியிருப்பதைக் காணுங்கள்; இவ் உடலையே நன்மை பயப்பது என்று ஆய்ந்திருப்பின், வலுப்பெற்ற இவ்வுடலால் இவ்வண்டத்திற் பற்றி என்றும் உழல்வர் என்றவாறு.

உடலை வெறுத்தொதுக்காது இதனையே நம்பி யிருப்பின் பலபிறவி எடுக்க நேரும் என்பது கருத்து.

மலம் என்பது அதன் காரியமாகிய மாயேயத்தை. ஊமர் - செவிப்புலனும், வாய்பேசுதலும் ஒருங்கிழந்த அறிவினர்கள். அவர்கள் தம் அனுபவத்தைச் சொல்ல வும், பிறர் அனுபவத்தைக் கேட்டுய்யவும் வகையற்ற வர்களாதலின் ஊமர் என்றார். அங்ஙனமே உடம்பை மலம் என்றுணராதாரும் சிவானுபவ ஞானத்தை இழத்தலின் இங்ஙனம் கூறினார் என்க.

தலம் - இடம். வேறுதலம் - சிறந்த இடம். உடலையே சிறந்த தலமாகக்கொள்வர் என்றபடி. கண்டீர் முன்னிலையசை.

உடம்பையே பற்றும் - பலகாலும் பலவண் டத்தும் பலமுள்ள உடலோடுதோன்ற நேரும் என்பதாம்.

ஊமர் உழலும் என முடிக்க. பலர்பாற் சொல் செய்யும் என்னும் முற்றுடன் முடிந்தது. ஆரிடமாத லின், தலம் ஒன்று வேறு என ஒரு தொடராக்கி வெவ்வேறான அண்டங்களில் எனப் பொருளுரைத் தலும் உண்டு, (16)

நல்ல வசனத்து வாக்கு மனாதிகள்
மெல்ல விளையாடும் விமல கைத்திலே
அல்ல செவிசத்த மாதி மனத்தையு
மெல்லத் தரித்தார் முகத்தார் பசித்தே. 2138

இம் - எனின், முக்கரணமும் தூயரானார் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : தூய சொற்களையுடைய வாக்கையும் தூயனவற்றையே எண்ணும் மனத்தையும் தூயன வற்றையே செய்யும் உடலையுமுடையவர்கள் உள்ளத் திலே அநாதிமலரகிதனாகிய பரமசிவன், எழுந்தருளி மெல்ல மெல்ல விளையாடல்புரிவன். இங்ஙனமில்லாத சத்தம் நுகரும் செவி முதலிய கருவிகளையும் மன முதலிய கருவிகளையும் மெல்லத்தாங்கிய ஆன்மாக்கள் பசியால் திரங்கிய முகத்தினையுடையார் ஆவர் எ – று.

திரிகரண சுத்தியுடையார் உள்ளத்தில் சிவன் விளையாடுவன். இல்லார் உள்ளத்து வறுமையும் துன்பமும் வாட்டும் என்பது கருத்து.

நல்ல வசனத்து வாக்கு – சிவனைப்பற்றிய சொல் பேசும்வாக்கு. மனுதிகள் – மனம் முதலியவற்றை யுடையார். மனுதிகள் அகத்திலே விமலன் விளையாடும் எனக் கூட்டுக.

அல்லாதனவாகிய செவியையும், அல்லாதன வாகிய சத்தத்தையும், மனத்தையும் தரித்தார் பசித்த முகத்தார் ஆவர் என இயைத்துப் பொருள் காண்க.

இதனால் தூய கருவிகரணங்களையுடையார் நிறை செல்வர். அங்ஙனம் இல்லாதார் பசியால் வருந்துபவர் என்பது உணர்த்தப்பெற்றது. (17)

## உ. உடல் விடல்

அஃதாவது உடலின்கண் உள்ள பற்றினை விடுதலாம். மேலை அதிகாரத்து உடலிற் பஞ்ச பேதம் உண்டென்ற ஆசிரியர் அதன் இயல்பு களையும் விரித்து இவ்வதிகாரத்துச் சாதனமாகிய

உடலால் சாதிக்க வேண்டியவற்றைச் சாதிக்க உடற்பற்று இடையூறாயின் அதனையும் ஒழிக என உணர்த்துதலின் இவ்வதிகாரம் உடலில் பஞ்ச பேதத்தின் பின்னதாயிற்று.

பண்ணாகுங் காமம் பயிலும் வசனமும்
விண்ணாம் பிராணன் விளங்கிய சத்தமும்
புண்ணா முடலிற் பொருந்து மனத்தையும்
அண்ணாந்து பார்க்க வழியு முடம்பே. 2139

இம் - எனின், உண்மையை உணரின் உடற்பற்றொழியும் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: இசைபோல இனிமைபயக்கும் இச்சையை வளர்க்கும் வசனத்தையும், ஆகாயத்தில் வீசும் வாயுவையும் அதன்கண் தாங்கப்பெற்று விளங்கிய ஒலியையும், ஊன்மயமான உடலிற்பொருந்தும் மனத்தையும் நிமிர்ந்து நோக்கினால் உடற்பற்றொழியும் என்றவாறு.

உடம்பு, வசனம் வாயு ஒலி மனம் இவற்றின் கூட்டத்தாலாயது. இவற்றைப் பிரித்துத் தனியே ஆராயுமிடத்து உடல் என்பதொன்றில்லையாம். ஆகவே அதன் பற்றொழிக என்பது கருத்து

அண்ணாந்து பார்க்க - நிமிர்ந்து பார்க்க. பண் ஆகும் காமம்பயிலும் வசனம் - இசையால் விளையும் காம இச்சையே மிகும் வசனம் என்றபடி.

விண்ணில் ஆம் பிராணன் எனப் பிரித்துப் பொருள்கொள்க. பிராணன் - வாயு. சத்தத்தைச்

சுமந்து வருவது வாயுவாதலின் பிராணன் விளங்கிய சத்தமும் என்றார் எனினுமாம்.

புண் - ஊன். 'மற்றதன் புண்ணென் றுணர் வார்ப் பெறின்' என்புழியும் இப்பொருட்டாதல் காண்க. உடலிற்பொருந்தும் மனம் - அகக்கருவியாக உடம்புள் இருக்கும் 'மனம் என்க. உடம்பு அழியும் என்றது உடற்பற்று அறும் என்பதாம். (18)

அழிகின்ற ஒருடம் பாகுஞ் செவிகண்
கழிகின்ற காலவ் விரதங்கள் தானம்
மொழிகின்ற வாக்கு முடிகின்ற நாடி
ஒழிகின்ற ஊனுக் குறுதுணை யில்லையே. 2140

இம் - எனின், அழிகின்ற உடலுக்கு யாருந் துணையில்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : அழிந்துபடுகின்ற ஒருடம்பிலே ஆகிய செவியும் கண்ணும் செயலற்றுக் கழிகின்ற காலத்துச் செய்யப்படும், அந்த விரதங்களும், தானங்களும், மொழிகின்ற தோத்திரங்களாகிய வாக்குகளும், நாடி களும் முடிவெய்துகின்றன. ஆகவே அழிகின்ற உடலுக்கு உற்ற துணையில்லை என்றவாறு.

அழிகின்ற உடம்புக்கு உயிர்செய்யும் தான தருமங்களும் விரதங்களும் பயன்படுவன அல்ல. கூடவே அங்கமாகிய கண் முதலியனவும் துணை யாகா. நாடிகளும் துணையாகா என்பது கருத்து.

உடம்பில் ஆகும் என ஏழாவது விரிக்க.

இங்ஙனமன்றி, ஓர் உடம்பாகும் செவி கண் அழிகின்ற; காலவிரதங்கள் தானம் அழிகின்ற;

மொழிகின்ற வாக்கு நாடி முடிகின்ற : (ஆதலால்) ஒழிகின்ற ஊனுக்கு உறுதுணை இல்லை எனக் கூட்டிப் பொருள் கொடலுமாம். கால விரதம் - சிறந்த காலங்களில் இயற்றப்படும் நோன்புகள். விரதம் முதலியவற்றின் பயன்நல்வினையாய் உயிரைச் சார்ந்து நிற்குமேயன்றி உடற்குப் பயன்படா என்பதை வலியுறுத்துமேயாதல் பின்னுரையுங் கொள்ளத்தக்கது. ஆகவே அங்கங்களானும் அவை இயற்றும் தொழிலானும் அங்கியாய உடலுக்குப் பயனில்லை என்பதாம். அங்கி — அங்க சமுதாய மாய உடல். (19)

இலையா மிடையி லெழுகின்ற காமம்
உலைவாய நெஞ்சத்து மூழ்கு முளத்துத்
தலையாய மின்னுடற் றங்கித் திரியுஞ்
சிலையாய சித்தஞ் சிவமுன் னிடைக்கே. 1241

இம் - எனின், உடற்பற்றுடையார் இயல்பையும், விட்டார் இயல்பையும் வேறுபடுத்தி உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : இல்லை என்று சொல்லும்படியான இடையினையுடைய மாதர்பால் எழுகின்ற காம இச்சையால் வருந்தும் உள்ளம் மூழ்கித் துன்புறும், சிவன் திருமுன்புப் பத்திமையால் கல்போல் அசையாத உள்ளம், உளம்போலச் சிறந்த ஒளிவிடும் உடலைத் தாங்கி அழியாது உலவும் என்றவாறு.

காமத்திற்றிளைக்கும் உள்ளம் துன்புறும். சிவனருளிற்றிளைக்கும் நெஞ்சம் ஒளிவிட்டு அழியாது உலவும் என்பது கருத்து.

இலையாம் இடை - இல்லை என லாம் இடையினை யுடையார் எனச் சினையின்பெயர் முதற்காய் வந்தது. காமாலயம் எனக் காமநூல்கள் இடையைக்கூறும். ஆகவே காமம் விளைநிலம் இடை என்பது விளக்கப் பெற்றது.

காமத்தால் உலைவாய நெஞ்சம் என்க. நெஞ்சத்து என அத்துச்சாரியை தவிர்வழி வந்தது.

உளத்துத் தலையாய மின்னுடல் – மனத்தாற் சிறந்த ஒளியுடம்பு என்ற தேவசரீரத்தை. சிலையாய சித்தம் – கல்போலக் காமப்புயல் தாக்கினும் அசையாத வலிய மனம். சிவமுன் இடைக்கு – சிவபெருமான் திருமுன்பு. முன் இடை என்பன இரண்டும் ஏழனுருபுப்பொருளைத் தருதலின் இடையை இடப்பெயராகக்கொள்க. (20)

## 5. அவத்தைபேதம் - கீழாலவத்தை

அஃதாவது ஆன்மா உடலொடு கூடி நுகர்ச்சி யெய்துங்காலை அடையும் நிலை வேறுபாடுகள். அவஸ்தை – நிலை. விழிப்பு நிலையில் உயிர் எல்லாக் கருவிகளோடும் இருத்தலும் உறக்கம் முதலிய நிலை களில் ஒவ்வொன்றுமடங்கச் சிலவற்றோடு செயற் படுதலும் உடைமையின் அந்நிலை விழிப்புமுதல் ஐந்தாயிற்று. 'அஞ்சவத்தைத்தே' என்பது சிவ ஞானபோதச் சூத்திரம், விழிப்பு நிலையிலிருந்து கீழிறங்கி மூலத்தலத்துப் பேருறக்கம் கொள்ளும் நிலையும் அதாவது, புருவ நடுவிலுள்ள உயிர் கீழ் நோக்கிச்செல்லும் நிலையும் பேருறக்கம் எய்திய உயிர் மீட்டும் முறையே மேனோக்கி புருவநடுவிற்கு

வந்து அரசுசெலுத்தும் நிலையும் எனக் கீழாலவஸ்தை இருவகைப்படும். அக்கீழாலவஸ்தை கூறுகின்றது. உடல்வகையும் பற்றொழிதலும் ஆகிய உடற்செய்தி கூறிவந்த ஆசிரியர் மூன்றும் அதிகாரமாக நிலைவேறு பாடு கூறத் தலைப்பட்டதேனெனின், உடலொடு கூடிய உயிர்க்கன்றி நிலைவேறுபாடின்மையின் கூறியதாம் என்க.

ஐயைந்து மத்திமை யானது சாக்கிரம்
கைகண்ட பன்னான்கிற் கண்டங் கனவென்பர்
பொய்கண்டி லாத புருடனித யஞ்சுழுனை
மெய்கண் டவனுந்தி யாகுந் துரியமே. 2142

இம் – எனின், சாக்கிரம், ஸ்வப்பனம், சுழுத்தி, துரியம் இவற்றின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: இருபத்தைந்து கருவிகளுடன் புருவ நடுவில் ஆன்மா விளங்குவது சாக்கிரமாம். பழகிய பதினான்கு கருவிகளுடன் கழுத்தில் ஆன்மா தங்குவது கனவென்பர். அழிவில்லாத புருடன்மட்டும் இதயத்தில் இருப்பது சுழுமுனையாம்: அழியாத ஞானகிய ஆன்மா உந்திக்கமலத்தில் உறைவது துரியமாம் என்றவாறு.

இருபத்தைந்தும் பதினான்கும் இரண்டும் ஒன்றும் கருவிகளுடன் கூடியும் தனித்தும் முறையே புருவநடு. கழுத்து, நெஞ்சு, உந்தி இவ் விடங்களிற் பொருந்தி சாக்கிரம் ஸ்வப்பனம் சுழுத்தி துரியம் என்னும் நான்கு அவத்தைகளாம் என்பது கருத்து.

மத்திமை – புருவநடு. இருநாடிகளின் இடையில் உள்ளது. ஆதலின் அது மத்திமை எனப்பட்டது. ஐயைந்து கருவிகளாவன :- மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஞானேந்திரியம் ஐந்தும், வாக்கு பாதம் பாணி பாயு பத்தம் என்னும் கன்மேந்திரிய மைந்தும், பிராணன் அபானன் உதானன். வியானன் சமானன் நாகன் கூர்மன் கிரிகரன் தேவதத்தன் தனஞ் சயன் என்னும் வாயு பத்தும், மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக்கரணங்கள் நான்கும், புருடன் ஒன்றும் ஆகிய இருபத்தைந்துமாம்.

கைகண்ட - பழகிய. வாயுக்கள் பத்தும், அந்தக் கரணம் நான்கும் ஆகப்பதினுன்கு கருவிகள் கழுத்தில் காரியப்படுவது கனவாம் என்க.

புருடன் : தத்துவ தாத்துவிகங்களோடு கூடி வினைப்போக நுகர்ச்சிக்குத் தக்க ஆன்மாவின் நிலை புருடன், ஆன்மா நித்தியனுதலின் பொய்கண்டிலாத புருடன் என்றும், மெய்கண்டவன் என்றும் கூறப் படுவன்.

புருடன் எண்ணத்துடன் இதயத்திருப்பது சுழுனையாம், பிராணவாயுவை மட்டும் துணைக் கொண்டு புருடன் மட்டும் உந்தியில் உறங்கும்போது துரியமாம் என்க.

**சாக்கிரம முப்பத்தைந்து நுதலினிற், கனவு தன்னில்**
**ஆக்கிய இருபத்தைந்து களத்தினில், சுழுனை மூன்று**
**நீக்கிய இதயந்தன்னில் துரியத்தில் இரண்டு நாபி**
**நோக்கிய துரியாதீதம் நுவலின் மூலத்தின் ஒன்றே**

**என்பது சிவஞானசித்தியார்.**

இதில் சாக்கிரத்துக் கருவிகள் முப்பத்தாறென்னவும் இவர் இருபத்தைந்தென்றலும் அடுத்துவரும் மந்திரத்து 'முப்பதோடாறின் முதல் நஞ' என்றலும் மலைவாகாவோ எனின், ஆகா. ஞானேந்திரியங் கூறவே அந் தன்மாத்திரைகளாகிய சத்தாதி ஐந்தும், கன்மேந்திரியங்கூறவே வசனுதி ஐந்தும் அடங்குதலின் திருமூலர் கூறராயினர். ஆயினும் உரையிற் கோடலால் விரித்துணர்க. இதுவே ஆசிரியர் கருத்து என்பது மேல் "ஐயைந்துபத்துடன் ஆனது சாக்கிரம்" என்பதாலும் துணிக மற்றும் அசிந்திய விசுவசாதாக்யத்தில் முப்பத்தைந்தோடு கலாதி பஞ்சகங்களையும் கூட்டி உயிரோடு நாற்பத்தொன்று சாக்கிரத்திற்கு எனக் கூறப்பட்டுளதே எனின், படைகொடுபவனி போதும் மன்னவன் போலக் கருவிகளை அங்கங்கே விட்டுப்போதலைக் குறித்தலின், அங்கங்கே விடப்பெறும் கருவிகளையுங் குறித்தது ஆகமம். யாண்டும் உடனிருந்து உயிருக்குப் புருடனென்ற சிறப்பினை நல்கும் கலாதிகளைப் பின்னூலார் குறித்திலராய் முப்பத்தாறென்றனர் ஆதலான் மலைவின்றென்க. புருடன் எனவே கலைகள் ஐந்தும் அடங்குமென்க. இங்ஙனமே ஏனையவற்றோடும் ஒட்டுக.

முப்பதோ டாறின் முதல்நஞ வைந்தாகச்
செப்பதி ஞன்காய்த் திகழ்ந்திரண் டொன்ருகி
அப்பதி யாகு நியதி முதலாகச்
செப்புஞ் சிவமீருய்த் தேர்ந்துகொள் வீரே. 2143

இ-ம் – எனின், ஐந்தவத்தையினும் சிவதத்துவம் ஐந்தும் நின்று செலுத்தும் மத்யாலவத்தைக்குரிய முறைமையினை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : முப்பத்தாறு தத்துவங்களோடு நின்று நடக்கும் முதலவஸ்தையாகிய சாக்கிரம் ஐந்தாகவும், சொல்லப்படுகின்ற அடுத்ததாகிய சொப்பனத்தில் நான்காயும், விளங்குகின்ற சுழுத்தியில் மூன்றாயும், துரியத்தில் இரண்டாயும் அதீதத்தில் ஒன்றாயும் அத்தகைய பதியாகும் சிவனருளாகிய நியதிமுதல் சொல்லப்பெறும் சிவம் ஈறாகத் தெளியுங்கள் என்றவாறு.

சாக்கிர முதலிய ஐந்தவத்தைகளினும் சுத்ததத்து வங்களாகிற சிவதத்துவம் ஐந்தும், நான்கும் மூன்றும் இரண்டும் ஒன்றுமாக இருந்து இயக்கும் என்பது கருத்து.

முப்பதோடாறின் முதல் – முப்பத்தாறு தத்துவங் களின் முதலான ஆன்மா. முப்பத்தாறவன ஆன்ம தத்துவம் இருபத்தைந்தும், வித்தியா தத்துவம் ஏழும். சிவதத்துவம் ஐந்தும் ஆகிய இவற்றுள் புருடன் நீங்க ஏனைய முப்பத்தாறு. இவற்றின் முதல் புருடனாய உயிர்.

உயிர் எய்து அவஸ்தையில் நனவு ஒன்று, நனவு – சாக்கிரமாகிய விழிப்புநிலை. அதில் கலாதிகளைச் செலுத்தும் சிவதத்துவம் சுத்தவித்தை, மகேச்சுரம், சாதாக்யம், சத்தி, சிவம் என்னும் ஐந்துமாம், இதனையே நனவு ஐந்தாக என்றது.

அதின் செப்பு – நனவிற்கு அடுத்துச் சொல்லப் படுவதாய கனா. அதினின்று செப்பப்படுவது செப்பு என முதனிலைத் தொழிலாகுபெயராகக் கொள்க. அதில் நான்காவன மகேச்சுரம், சாதாக்யம், சத்தி, சிவம் என்பன. இவைகள் நான்கும் கனவில் கலாதிகளைச் செலுத்தும் என்க. திகழ்ந்த இரண்டும் ஒன்றாய் :– விளங்குகின்ற சுழுத்தியில் மூன்றாய் என்க. மூன்றாவன சாதாக்யம், சத்தி, சிவம் என்பன. இரண்டாய் : துரியமாகிய உறக்கத்தில் சத்தியும் சிவமுமாய இரண்டாய்.

ஒன்றாய் ; துரியாதீதமாகிய பேருறக்கத்தில் சிவம் ஒன்றுமேயாய். அப்பதியாகும் நியதி-அந்த பதியாகிய சிவபரம்பொருளினின்று ஆகும் அருளாகிற ஆணை. நியதி – ஆணை. அது சுத்த வித்யையாகிய தூமாயை. அது முதலாகச் சிவதத்துவம் ஈறாகத் தெளிவீர்களாக என்பதாம்.

இங்ஙனமன்றி, நனா ஐந்தாக என்பதற்குச் சாக்கிரத்தில் சாக்கிரம், சாக்கிரத்தில் சொப்பனம், சாக்கிரத்தில் சுழுத்தி, சாக்கிரத்தில் துரியம், சாக்கிரத்தில் துரியாதீதம் என ஐந்தாக என்றும், ஏனைய சொப்பன முதலியவற்றில் முறையே கீழ்ப்போன ஒவ்வொன்றை விலக்கி, நான்கு மூன்று இரண்டு ஒன்று என்று உரை கூறுதலுமுண்டு. ஒன்று – சாக்கிரத்தில் துரியாதீதம். சிலர் நனவில் ஐந்து, நனவில் நான்கு மூன்று இரண்டு ஒன்று எனக் கொண்டு அனைத்தையும் நனவிலேயே உரைப்பர். இங்ஙனம் பகுத்துணர்தற்குப் பிரமாண மின்மையின் நல்லது தெளிக.

சொப்பனத்தில் சாக்கிரமும், சுழுத்தியில் சாக்கிர சொப்பனமும், துரியத்தில் சாக்கிர சொப்பன சுழுத்தியும், அதீதத்தில் சாக்கிர சொப்பன சுழுத்தி துரியமும் நிகழுமாயின் அவ்வந் நிலைகளின் அநுபவம் முற்றுப் பெறாததாய் முடிதலின் இங்ஙனம் கூறிற்றில ஆகமங்கள். சாக்கிர நிலையினின்று சொப்பனம் செல்லும் இடை நேரம் சொப்பன சாக்கிரமும், இதுபோல ஏனையவும் ஆகலாமே எனின் அவை சாக்கிரமும் சொப்பனமும் ஆமேயன்றிச் சொப்பன சாக்கிரமாகா தென்க. இங்ஙனமே ஏனையவும் என்க. (22)

**இந்திய மீரைந் தீரைந்து மாத்திரை**
**மந்திர மாய்நின்ற மாருத மீரைந்தும்**
**அந்தக் கரண மொருநான்கு மான்மாவும்**
**பந்தவச் சக்கரப் பாலது வாகுமே. 2144**

இம் – எனின், நனவில் உடற்சக்கரத்துள்ள தத்துவங்கள் இவை என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : கன்மேந்திரியம் ஞானேந்திரியம் பத்தும், அவற்றின் விஷயங்களான மாத்திரைகள் பத்தும், மறைபொருளாகவுள்ள வாயுக்கள் பத்தும், அந்தக் கரணம் நான்கும், ஆன்மாவும் ஆகிய முப்பத்தைந்தும் பெத்தான்மாக்கள் கொள்ளும் உடலாகிற சக்கரத்தின் பாலவாம் என்றவாறு.

உடல் மாறிப்பிறந்து வருதலின் அதனைச்சக்கரம் என உருவகித்தார். இம்மந்திரம் காரியாவஸ்தையாகிற சகலத்திற் சாக்கிரத்துக் காரியப்படும் தத்துவங்களை உணர்த்தியதாம். (23)

பாரது பொன்மை பசுமை யுடையது
நீரது வெண்மை செம்மை நெருப்பது
காரது மாருதங் கறுப்பை யுடையது
வானகந் தூம மறைந்துநின் றுரே. 2145

இம் — எனின், பஞ்சபூதங்களின் நிறம் உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : மண்ணின்நிறம் பசும்பொன்னிறமானது ; நீர் வெண்ணிறமானது ; நெருப்பு செந்நிறமானது ; மேகத்தை யுந்துவதாய காற்று கறுப்பு நிறமானது ; ஆகாயமாகிய இடம் புகைநிறமானது ; இங்ஙனம் நிறமுடையவர்களாகத் தெள்ளிதின் உணர முடியாமல் ஐம்பூதர்களும் மறைந்து நின்றார்கள் என்றவாறு.

இன்னணம் பூதங்கள் நிறமுடையனவாயினும். தெற்றெனப் புலப்படாமல் மறைந்து நிற்கும் என்பது கருத்து.

காரறுமாருதம் எனப்பாடங்கொண்டு குற்றமற்ற எனப்பொருள் உரைப்பாரும் உளர். (24)

பூதங்க ளைந்தும் பொறியவை யைந்துளும்
ஏதம் படஞ்செய் திருந்த புறநிலை
ஓது மலங்குண மாகுமா தாரமோ
டாதி யவத்தைக் கருவிதொண் ணூற்றுறே. 2146

இம் — எனின், சகலத்திற் சாக்கிராவத்தைக்குத் தொண்ணூற்றாறு கருவிகள் உள என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : பூதங்கள் ஐந்தும், பொறிகள் ஐந்தும், இவை உயிரைக் குற்றப்படச்செய்த புறநிலைக் கருவிகள். இவற்றுடன், சொல்லப்படுகிற மலங்காரணமாக விளையும் குணம் முதலாக முதல் அவத்தையாகிய சாக்கிரத்திற்கு உரியனவாகிய கருவிகள் தொண்ணூற்றாறும் என்றவாறு.

முற்கூறிய முப்பத்தாறும், அறுபதுமாகிய கருவிகளையுடையது சாக்கிரமென்பது கருத்து.ஏதம்–குற்றம் ; இம்மந்திரம் ஞானவரண விளக்கத்து: *

பூதநிறமே புறநிலை யைங்கோசம்
வாதமும் ஈரேழாம் உண்ணிலையை யைந்தே
யோது மலங்குண மாருதா ரத்தோடு
ஆதி யவத்தைக் கருவிதொண் ணூற்றாறே.

என்ற பாடத்துடன் காணப்படுகிறது. உண்ணிலைக் கருவி 14, புருடதத்துவங் கூடவரும் ஆன்மதத்துவம் 25, மலம் 3, குணம்3, ஆதாரம் 6, அவத்தை 5, ஆகத் தொண்ணூற்றாறு. இது ஞானசித்தி ஆகமத்துட் கூறியவாறும் என்க. (25)

இடவகை சொல்லிரு பத்தஞ் சானை
படுபர சேனையும் பாய்பரி யைந்தும்
உடையவன் மத்திமை யுள்ளுற நால்வர்
அடைய நெடுங்கடை யைந்தொடு நான்கே. 2147

இம் – எளின், துரியாதீதம் ஒழிந்த ஏனைய நான்கு அவத்தைகளுக்கும் உரிய கருவிகளை உருவகமாக உணர்த்துதல் நுதலிற்று.

* ஞானவரணம் பக்கம் 83.

இ—ள் : சொல்லுமிடத்து நான்கவத்தைகட்கும் உரிய இடங்களில் இருபத்தைந்து ஆனைகளும், சிறந்த மேலான காலாட்சேனைகளும், பாய்ந்து செல்லும் குதிரைகள் ஐந்தும் உடையவனும், அவனுடைய புருவ நடுவில் பொருந்தும் அகப் பரிவாரமாகிய அமைச்சர்கள் நால்வரும் இவை அடங்க நெடிய வாயில் ஐந்தும் நான்கும் ஆக ஒன்பதாம் என்ற வாறு.

• அமைச்சர சேப்பரின் றஞ்சவத் தைத்தே ' என்றமைக்கு ஏற்பத் தத்துவங்களை யானை குதிரை காலாட் படைகளாயும், அமைச்சராயும் உருவகித் தமை காண்க.

ஆனை இருபத்தைந்து – ஆன்ம தத்துவம் 25.

சேனைகாலாள் – வாக்கு பாத பாணி பாயு உபஸ்தம் 5.

குதிரை 5. மெய் வாய் கண் மூக்கு செவி 5.

உடையவன் - புருடன்,

உள்ளுறு நால்வர்—அகப்பரிவாரமாகிய அமைச்சர் நால்வர். அவர் மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பார்.

இப்பரிவாரங்களுள் மடங்கி நிற்கும் வாயில்கள் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியமாகிய வாயில்கள் நான்காம் என்றவாறு. (26)

உடம்பு முடம்பு முடம்பைத் தழுவி
உடம்பிடை நின்ற வுயிரை யறியார்
உடம்பொ டுயிரிடை நட்பறி யாதார்
மடம்புகு நாய்போன் மயங்குகின் றாரே. 2148

இ-ம் – எனின், உடம்பொடு கலந்துள்ள உயிரி யல்பை உணர்தலின் இன்றியமையாமை உணர்த்து தல் நுதலிற்று.

இ – ள்; நுண்ணுடலும் காரண உடலும் பரு வுடலைத் தழுவியிருக்க, அவ்வுடம்பைக் குடிலாகக் கொண்டு வாழும் உயிரியல்பை உணரார். உடம்புக் கும் உயிர்க்கும் உள்ள நட்பை அறியாத மக்கள் மடத் திலே புகுந்த நாயைப்போல மயங்குவார்கள் எ – று.

உடம்புகள் மூன்றாக அந்த உடம்புள் உயிர் கலந்திருக்கும் நிலையை யறியாத மக்கள் மடம்புகுந்த நாய் போல மயங்குவர் என்பதாம்.

உடம்பு மூன்றுள் முன்னது சூக்கும உடலாகிய புரியட்டகத்தையும், அடுத்தது காரண உடலையும், மூன்றாமது தூல உடலையும் உணர்த்தின. உடம்பும் உடம்பு எனப்பெயரெச்சமாகக் கொண்டு வருந்தும் உடல் எனப்பொருள் காண்பர். தழுவி என்ற செய் தெனெச்சத்தைச் செயவெனெச்சமாகப் பொருள் காண்க.

உயிரை யறிதலாவது உயிரின் இயல்புகளை ஆராய் தல். அஃதாவது உயிர் என்றும் சுதந்தரமற்றது என்றும், சிவனாணையின் வண்ணம் வினைகளுக் கீடாகப் புகுந்துள்ளது என்றும், வினைப்போகங்

தொலைய வேற்றுலகையும் வேற்றுடலையும் எடுக்கக் கூடும் என்றும், அது அநாதியே மலத்தால் மறைப்புண்டது என்றும், மலவன்மைகெடவும், வினைகள் தொலையவும் உடம்பொடு கூட்டப்பட்டதென்றும் உணர்தலாகிய ஆன்மதரிசனமாம்.

உடம்போடுயிரிடை நட்பு என்ற தொடர் 'குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே - உடம்போ டுயிரிடை நட்பு' என்னும் திருக்குறளை நினைவூட்டுவது. வினைப்போகம் கழிந்தவழி உயிர் வேறு வேறு பரு உடல்களையும் நுண்ணுடல்களையும் மேற்கொள்ளும் என்பதற்குக் கூட்டையும், முட்டையையும் பெறும் பறவை உவமமாகக் கூறப்படும் நுணுக்கம் ஊன்றி அறிதற்கு உரியது. கூடு - பருவுடல், முட்டை - நுண்ணுடல் எனக் கொள்க.

மடம் - சைவர்கள்வாழுந் தவச்சாலை. அதிற் புகுந்த நாய் வழிதெரியாமலும், உணவு கிடைக்காமலும் மூலைக்குமூலை ஓடியிளைத்து வெளிப் போதற்கும் வகையின்றித் தவிப்பதுபோல இவர்களும் வருந்துவர் என்றவாறும். (27)

இருக்கின்ற வாறொன் றறிகில ரேழைகண்
முருக்கு மசபையை மாற்றி முகந்து
கருக்கொண்டு காமாரி சார முகந்தேர்ந்
துருக்கொண்டு தொக்க வுடலொழி யாதே. 2149

இ-ம் - எனின், எடுத்த உடலும் அழியாதிருக்கும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: எடுத்த உடல் என்றும் அழியாது இருக்கும் முறைகள் ஒன்றையும் அறியமாட்டார்கள் அறிவிலிகள்; ஒவ்வொருநாளும் கணமும் முருக்கப் படுகின்ற மூச்சை அசபை மந்திரமாக மாற்றி உட்கொண்டு, கருத்துட் கருக் கட்டிக் காமனைக் காய்ந்த கண்ணுதற் பெருமானை யடையும் உபாயம் உணர்ந்து அதனால் உருக்கொண்டு கூடிய உடல் என்றும் அழியாது நிலைத்திருக்கும் என்றவாறு.

அசபையைச் செபித்துச் சிவனைச் சார்ந்த தேகம் சிவதேகமாதலால் அதற்கு அழிவேயில்லை என்பதாம். இருத்தல் – வச்சிரகாயம் பெற்று என்றும் அழியா திருத்தல். ஏழைகள் – அறிவிலிகள். முருக்குதல் – இடைவிடாது செபித்தல். அசபை – செபிக்கப் படாது தாமேயியங்குமந்திரம். அதனைமாற்றியமைத்த லாவது உள்ளுக்கிழுக்கும்போது சிவ என்றும், வெளித்தள்ளும் வாயுவை (நான்) ஹம் என்றும் தள்ளி ஒவ்வொரு மூச்சையும் ஆன்மபோதத்தை விட்டுச் சிவஞானம் கைவரப் பெறுவதாகப் பாவித்தல். இங்ஙனம் பாவிக்கின், மனத்திரையில் அருளுருவாகிய சிவம் பதியும். சிவமோ காமனை எரித்தது. இச்சைகளை வென்றது. இச்சையின் விளைவு ஆன்மபோத மிக்க காலத்துண்டாவது. சிவபோத மிக்கபோது காமனைகள் பற்ற என்பார், உடம்பொடு புணர்த்தலாகக் காமாரிசார என்றார் (28)

ஒளித்திட் டிருக்கு மொருபதி னாலை
அளித்தன னென்னுள்ளே யாரியன் வந்து
அலைக்குங் கலைக்ளி னாலறு பத்து
ஒளித்திட்டு வைத்தா னெருங்கிய சித்தே 2150

இ-ம் - எனின், கலைகளை இறைவன் அருளிய உபகாரத்தை வியத்தல் நுதலிற்று.

இ - ள் : எனக்குள்ளே எங்கும் நிறைந்த பரம் பொருளாகிய பரசிவம் எழுந்தருளி எனக்குள்ளே ஒளிந்திருக்கும் பதினைகு கலைகளையும் அளித்தனன். பின்னர் அறிவு விளக்கத்தை அளிக்கும் அறுபத்து நான்கு கலைகளையும் ஒன்றிய உள்ளத்திலே ஒளித்து வைத்தான் என்றவாறு.

இறைவன் உயிருக்குயிராகக் கலந்து நின்று பிராசாத யோகத்தையும், கலை அறிவையும் உரிய காலத்து விளங்கும் வண்ணம் உதவினான் என்பது கருத்து.

ஒரு பதினலு - அகாரகலை முதலான பதினாறு கலைகளிலமுந்தி அனுபவிக்கப்படுவதாய், அக்காலை அது அதுவாதலே அன்றி அறியப்படாததான சிவம், உன்மனை ஆகிய கலையிரண்டும் நீங்கிய ஏனைய பதினான்கு கலைகள். இவை . ஆன்மாக்களிடம் ஞான ஒளி வளர்ந்த விடத்து வெளிப்படுவதாய், மற்றைய காலங்களில் இயற்கையே மறைந்து கிடத்தலின், ஒளித்திட்டிருக்கும் கலை என்றார்

என்னுளே வந்து - என்னுள்ளே உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு. ஆரியன் - எங்கும் நிறைந்தவன் - சிவன்.

அளிக்குங்கலை - ஆன்மாக்களுக்குப் பலதுறைப் பட்ட அறிவு விளக்கத்தை அளிக்கும் கலைகள். நாலாறு பத்து - அறுபத்து நான்கு கலைகள்.

ஒடுங்கிய சித்தே - ஒன்றிய சித்தத்துள். ஒளித்திட்டு வைத்தான் என முடிக்க.

இம்மந்திரத்திற்கு இங்ஙனமன்றிப் பதினாலு - பதினாலு நூல்கள் என்றும், சரியையாதி நான்கும், அறமாதி நான்கும், சீலமாதிநான்கும் எனவும் உரைப்பர்.

மண்ணினி லொன்று மலர்நீரு மங்காகும்
பொன்னினி லங்கி புகழ்வளி யாகாய
மன்னு மனோபுத்தி யாங்கார மோரொன்றாய்
உன்னி முடிந்தது பூத சமயமே 2151

இம் – எனின், பூதசுத்தி செய்யும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : மண்ணும், அதில் பொருந்தி பரவியுள்ள நீரும், அந்நீர் தோன்றக் காரணமான பொன் போலும் தீயும், அதன் காரணமாகப் புகழப்படும் காற்றும், அது உலவுதற்கிடமாகிய ஆகாயமும், மனம் புத்தி அகங்காரங்களும் ஆகிய இவைகள் ஆராயின் ஒன்றின் ஒன்றாக ஒடுங்கிய பூத ஐயமாகிய பூதசுத்தியாம் என்றவாறு.

ஐம்பூதங்களையும் அவற்றை அறியும் உட்கரணங்களையும் ஒன்றிலொன்று ஒடுக்கி உணர்வது பூதசுத்தியாம் என்பது கருத்து.

' தத்வ சுத்திக்காகவும், பூத விகாரங்களைச் சமஞ் செய்வதற்காகவும், நாடோறும் அந்தர்யாகத்தில் பூதசுத்தி செய்க என்பது விதியாதலின் பூதசுத்தியின்

இன்றியமையாமை உணர்க. இது ஆதி பௌதிகம், ஆதி தெய்விகம், ஆதி யாத்மிகம் என மூவகைப் படும். அவற்றுள் ஆதி பௌதிக பூதசுத்தி முறையே ஈண்டு உணர்த்தப்பெறுகின்றது. இதன் விரிவைச் சிவாக்ர பத்ததி பூதசுத்திப் பிரகரணத்தில் காண்க. (30)

முன்னிக் கொருமகன் மூர்த்திக் கிருவர்
வன்னிக்கு மூவர் வதுவைக்கு நால்வர்
கன்னிக்குப் பிள்ளைக ளைவர்மு ளுளில்லை
கன்னியைக் கன்னியே காதலித் தாரே. 2152

இம் - எனின், இதுவும் பூதசுத்தி முறையை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: முதன்மையில் உள்ளதாகிய ஆகாயத் திற்கு ஓசையென்ற ஒருமகன்; அதனின்று உருக் கொண்ட காற்றுக்கு ஓசையும் ஊறுமாகிய இருவர் மக்கள்; காற்றிலிருந்து வந்த தீக்கு ஓசையும் ஊறும் ஒளியுமாகிய மூவரும் மக்களாம். தீயின் மகளாகிய நீருக்கு ஓசை, ஊறு, ஒளி. சுவை என்னும் நால்வரும் மக்கள்; கன்னியாய பூமிக்கு சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐவரும் மக்களாம். இங்ஙனம் தன் மாத்திரைகளிலிருந்து பூதங்கள் தோன்றின. ஆதிகாலத்திலே தலைவனுகிய சிவன் கன்னியாய மாயையைக் கன்னியாகியே காதலித்தான் என்றவாறு.

இறைவன் மாமாயையைக் கலக்கத் தன் மாத்திரைகளும் பூதங்களும் தோன்றின என்பதாம். முன்னி - முதல்வி, முதலில் எல்லாம் தம்மிடம்

விளங்க விரிந்து இடங்கொடுப்பவளாகிய ஆகாயப் பெண். ஒருமகன் – சத்த தன்மாத்திரை. இவ் வண்ணமே பூதங்களைப் பெண்ணாகவும், தன்மாத் திரைகளை மக்களாகவும் உருவகித்தனர். எல்லாம் இறைவன் மாயையைக் கலக்க வந்தன என்றார். வதுவை – பெண். முன்னாளில் + ஐ எனப் பிரித்து ஆதிகாலத்தில் தலைவனாகிய சிவன் எனப் பொருள் கொள்க. காதலித்தார் - சிருட்டி யுன்முகமானார். (31)

கண்ட கனவைந்துங் கலந்தன தானைந்துஞ்
சென்றுண்ட நான்கு மொருங்கே யுணர்ந்தபின்
பண்டைய தாகிப் பரந்த வியாக்கிரத்
தண்டமுந் தானா யமர்ந்துநின் றானே. 2153

இம் – எனின், சொப்பனத்திற் சாக்கிர நிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : கண்ட கனவில் நிலை ஐந்தும், கனவிற் கலந்துண்ட ஐம்பொறிகளும், பொறிவாயிலாகச் சென்று கனாக்காட்சியை நுகர்ந்த அந்தக்கரணங்கள் நான்கும் ஆகிய இவற்றை ஒருங்கே உணர்ந்தபின் சீவன் பழைய நிலையைப்பொருந்தி, எல்லாவற்றிலும் பரந்த மனநிலையில் இவ்வண்டமும் தானுமாக விரும்பி ஏன்றனன் என்றவாறு.

கனா நுகர்ச்சி முற்றியபின் சீவன் பழைய நிலையைப் பொருந்தி அண்டமும் தானுமாக அமர்ந்து இருந்தான் என்பதாம்,

விசாக்கிரம் என்பதன் திரிபான வியாக்கிரம் என் பது விழிப்பான நனவு நிலை, இப்பொருள்கொள்ளின்

க்குக்காட்சியை அநுபவித்தபின் நனவின் சீவன் அண்டமும் தானுமாக இருந்தனன் எனக்கருத்துக் கொள்க. வியாக்கிரம் - புலி எனக் கொண்டு புலி போலப் புலன்களில்தாவும்மனமென உரைத்தலுமாம்.

கண்டகனு ஐந்தாவன – சொப்பனத்தில் சாக்கிரம். சொப்பனத்தில் சொப்பனம். சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பன. அந்தக்கரணங்கள் பொறிகளை வாயிலாகக்கொண்டு அங்கங்கே கலந்து நுகர்ச்சிக்கண் தலைப்படல், கனவு முடிந்து நனவு நிலையடைந்ததும் காணப்படுகிற இந்தப் பிரமாண்டமாகிய காணப்படுபொருளும். காண்பானுமாகிய தானுமாக இருப்பன் சீவன் என்பதாம். (32)

நின்றவ னிற்பப் பதினலிற் பத்துநீத்
தொன்றிய வந்தக் கரணங்க ளுன்குடன்
மன்று கலந்த மனைவாழ்க்கை வாதனை
கன்றிய கண்டத்திற் கண்டான் கனவதே. 2154

இ-ம் – எனின், சுழுத்தியில் சொப்பனம் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : முன்னர்த் திருமந்திரத்தில் மொழிந்த வண்ணம் சொப்பனத்தில் சாக்கிரமுணர்வார் நிற்க, சொப்பனத்தில் கலந்துள்ள பதினலு கருவிகளில் கன்மேந்திரியமும் ஞானேந்திரியமும் ஆன பத்துக் கருவிகளையும்விட்டு, அந்தக்கரணங்கள் நான்குடன், இவ்வுலகத்திலே பயின்ற இல்லற வாழ்க்கையின் வாசனையால், வருந்தியசுழுத்தில் கனவுகண்டான் என்றவாறு.

அந்தக்கரணம் நான்குடன் ஆன்மா அடங்கிய இதயத்திற்குமேல் கண்டத்தில் கனவு காண்பான், அது சுழுத்தியில் சொப்பனமாம் என்பது கருத்து.

சுழுத்தியில் சொப்பனங்காணல் எங்ஙனம் எனின், கண்டத்தானத்தை விட்டு ஆன்மா கழிக்க வேண்டிய கருவிகளைக்கழித்துச் சுழுத்தித்தானமான இதயத்திற்குச் செல்ல முயல்கின்ற சிறு அவசரம். அங்ஙனமே மார்புத் தானத்தினின்று கிளம்பிக் கண்டத்தை யடைய இருக்கும் நிலையும் ஆம். இவ்விரண்டும் சுழுத்தியில் சொப்பனமாம் என்க.

கருவிகழன்று உட்கரணங்களோடு இதயத் தானத்திற்குப் போக முயலும் ஆன்மா மீட்டு கண்டத்திற் கனாக்காட்சியை நுகருமோ என்ற ஐயம், உண்மையாக இல்லை, வாசனையால் எனத் தீர்த்தற்பொருட்டு 'மன்று கலந்த மனைவாழ்க்கை வாதனை கண்டத்திற் கண்டான் கனவதே' என்பதாற் கூறப்பெற்றது. (33)

தான மிழந்து தனிபுக் கிதயத்து
மான மழிந்து மதிகெட்டு மாலாகி
ஆன விரிவறி யாவவ் வியத்ததின்
மேனி யழிந்து சுழுத்திய தாமே. 2155

இம் – எனின், சுழுத்தி அனுபவம் சொல்லுதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : கண்டத்தானத்தை விட்டு, ஆன்மா சித்தம் ஒன்றுடன் தனியே இதயத்துப் புகுந்து, அகங்காரமும் தன்வலி சிறிது குன்றி புத்தி தத்துவமும்

கெட்டு, ஒன்றனையும் அறியமாட்டாது மயங்கி பிரபஞ்சத்தை அறியாத அவ்வியத்த நிலையில், உடல், தன்வசமற்ற நிலையில் கெடுதல் சுழுத்தியாம் என்றவாறு.

ஆன்மா இதயத்தானத்து அகங்காரம், புத்தி, இவைகள் மடங்கி இன்னதென்று அறியமாட்டாத அவ்வியத்த நிலையில். அழுந்தல் சுழுத்தியாம் என்பது கருத்து.

தானம் - இடம். முன்சொன்ன கனவிற்குரிய இடமான கண்டம். தனி புக்கு - ஆன்மா மனம் ஒன்றுடன் தனியே இதயத்துப்புக்கு என்க. மானம்- அகங்காரம். மதி - புத்திதத்துவம். மாலாகி - மயங்கி. அவ்வியத்தம்-பிரித்து உணரமுடியாத நிலை.

இதனை, 'அந்தக்கரணங்களும் தமது சக்தி மடங்கிச் செயலற்றவழி, அவை விடயத்திற்கேது வாகிய வசனாதி சத்தாதி விடயங்களும், பிராணன் ஒழித்து ஒழிந்த வாயுக்களும், அவற்றோடு செயலற்று நின்றொழிய, மனத்தின் விருத்தியாகிய சித்தமும் அவத்தைக்குரிய ஆற்றலுக்கும், உடம்பிற்கும் காவலாதலளவுக்கு ஏதுவாய், அகங்காரத்தால் செலுத்தப்படும் பிராணவாயுவும் புருடனும் ஆகிய மூன்று தத்துவங்களும் கூடித் தொழிற்படும் அவத்தையில் புத்தி தத்துவம் தொழிற் படாமையான் நனவின்கண் அறியவராததாய் ஒன்றனை ஆய்ந்து சிந்தித்து நிற்கும் அவத்தை சுழுத்தி' என்னும் மாபாடிய விளக்கத்தால் நன்கு தெளிக. (31)

**சுழுனையைச் சேர்ந்துள மூன்றுடன் காட்சி**
**கெழுமிய சித்தம் பிராணன்றன் போதம்**
**ஒழுகக் கமலத்தி னுள்ளே யிருந்து**
**விழுமப் பொருளுடன் மேவிநின் றனே. 2156**

இம் – எனின், துரியாவத்தையின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: உறக்கமாகிய சுழுத்தியை யடுத்துள்ள பிராணனும், மனமும், ஆன்மாவுமாகிய மூன்றுடன் அறிதலைப்பொருந்திய மனம், பிராணவாயு இரண்டும் நழுவ, உந்திக்கமலத்து உள்ளேயிருந்து பெருமையையுடைய பொருளாகிய மூலப் பிரகிரதியுடன் பொருந்தினன் என்றவாறு.

உந்திக்கமலத்து ஆன்மா மனமும் பிராணவாயுவும் அடங்கத் தான்மட்டும் மூலப்பிரகிருதியுடன் அடங்கு நிலை துரியாதீதமாகிய பேருறக்கமாம், என்பது. 'ஆங்காரம் பிராணவாயுவை இயக்கும் ஆற்றலும் அடங்கப் பிராணவாயுவும் செயலற்று. பஞ்சகஞ்சுகனுகிய புருடன், தன்னினீங்காத மூலப் பகுதியோடு, அவித்தையை மட்டும் விடயித்து நிற்கும் அவத்தை துரியாதீதம். இடம் மூலாதாரம்' என்னும் மாபாடிய விளக்கமும் மிக இயைபுடைத்தாதல் காண்க.

சுழுனை – சுழுத்தி, சித்தக்காட்சி, பிராணக் காட்சி இரண்டும் ஒழுக, விழுமப் பொருளாகிய மூலப்பிரகிருதியோடு புருடன் உந்திக்கமலத்து அடங்கிய நிலை என்பதாம். (35)

தானத் தெழுந்து தருக்குந் துரியத்தின்
வானத் தெழுந்துபோய் வையம் பிறகிட்டுக்
கானத் தெழுந்த கருத்தின் றலையிலே
ஊனத் தவித்தைவிட் டுமனின் றானே. 2157

இ‌ம் - எனின், துரியாதீத நிலையில் ஆன்மா நிற்கும் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: துரிய நிலைக்குரிய தானமாகிய உந்தியி லிருந்து எழுந்து தருக்கிநிற்கும். பின்பு, உள்ள மாகிய வானத்து எழுந்துசென்று உலகங்களைக் கடந்து, ஓசையிலே உண்டான கருத்தாகிய மூலத் தானத்திலே, குறைகளை யுண்டாக்கும் அவித்தையை நுகர்ந்து, ஊமனாகிய ஆன்மா நின்றான் என்வாறு.

துரியநிலை கடந்து மூலாதாரத்தில் அவித்தையை விடயித்துச் செயலற்றுச் சீவன் பொருந்துவது துரியாதீதமாம் என்பது கருத்து.

துரியத்தின் தானத்து எழுந்து எனவே துரியங் கடந்த அதீதநிலை கூறப்பட்டதாதல் தெளிக. தானம் - அதற்குரிய இடமாகிய உந்தி.

வானம் என்றது உள்ளத்தை. வானம் எல்லா வற்றையும் தன்னுள் அடக்கி நிற்பது போல உள்ளமும் கண்ட அண்டங்களையும் அணுவையும் ஆயிரங்கோடி யாயினும் அடக்கி நிற்கும் ஆற்றலதா தலின் உள்ளம் வானமாக உருவகித்து உரைக்கப் பட்டது.

வையம் – உலகம். வையம் பிறகிட்டு - உலக வாசனை சிறிதுமின்றி என்க. வையம் – தேர் எனக் கொண்டு அதனுறுப்பாகிய சக்கரங்கள் அதாவது ஆதார சக்கரங்கள் என்பாரும் உளர்.

கானம் – இசை ஓசை. நாதத்தால் விளைந்த குண்டலினி "கானத்து எழுந்து" என்றதன் கருத்து. அதன் தலை – அதன் இடமாகிய மூலாதாரம்.

ஊனத்து அவித்தை - குறைவையளிக்கும் அஞ்ஞானம். இது ஒன்றே துரியாதீதநிலையில் புருடனுக்கு விடயமாவது. ஆதலால் ஊனத்தவித்தை விட்டு-என்பதற்குக் குறைபாட்டையுதவும் அவித்தையை மட்டும் விடயித்து எனப் பொருள்கொள்க. இதனை "அறிவேதும் இன்றாய் ஒழித்து மூலாதாரத்தே உற்றிடுதல் அதீதம்" என்ற சிவநெறிப் பிரகாசத்தாலும் உணர்க.

'ஆங்காரம் பிராணவாயுவை இயக்குதற்கண் உளதாகிய சத்தி மடங்கிச் செயலற்று ஒழிதலின், பிராண வாயுஞ் செயலற்றொழியும் அவத்தையிற் பஞ்ச கஞ்சுகனாகிய புருடனென்றும் தன்னினீங்காத மூலப் பகுதியோடுகூடி அவிச்சைமாத்திரையை விடயித்து நிற்கும் அவத்தை துரியாதீதம் : இதற்குத் தானம் மூலம்:' என்னும் மாபாடிய வசனமுங் காண்க.

ஆன்மா சாக்கிராதி அவத்தைகளில் இருக்கும் போது இயங்கும் ஆற்றலுடையனும் அதீத நிலையில் பிராணனும் செயலற்றுப் போனமையின் ஊமன் என்றார். (36)

**ஊமை யெழுத்தொடு பேசுங் எழுத்துறில்**
**ஆமை யகத்தினி லஞ்சு மடங்கிடும்**
**ஓமய முற்றது உள்ளொளி பெற்றது**
**நாமய மற்றது நாமறி யோமே.** 2158

இம்-எனின், துரியாதீத நிலையின் அநுபவ இயல் புணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : பேச இயலாத எழுத்தாகிய மகாரத்தோடு பேசும் எழுத்தாகிய அகார உகாரங்கள் இயையின், ஆமைக்குள்ளே அஞ்சும் அடங்குவதுபோல ஆன்மா வினுள் ஐந்திந்திரியங்களும் அடங்கும். அப்போது ஆன்மா ஓம் என்னும் எழுத்தின் தன்மையேயாய், உள்ளொளியாய ஞானம் பெற்றதாகி நாம் என்னுஞ் செருக்கற்று விளங்கும். அதனை யாம் அறியோம் எ - று.

ஓம் என்னும் பிரணவத்தியானம் பொருந்தின் பொறியடங்கி, பிரணவமேமயமாய் உள்ளொளி பெற்று அகங்காரம் அற்று விளங்கும் என்பதாம்.

ஊமை எழுத்து - பேச இயலாத 'ம்' என்னும் எழுத்து. பேசும் எழுத்து - அகார உகாரம். 'யாரும் அறிவர் அகரம் அவன் என்று' என்பனவாகிய பிரமா ணங்களால் அகரம் - சிவம், உகரம் - சத்தி எனக் கொள்க,

ஆமை - உயிர். அஞ்சு - இந்திரியங்கள் ஐந்தும். ஓம் மயம் - பிரணவமயம். நாம் மயம் - அகங்காரம்,

'ஊமை எழுத்துடன்' 'ஆமையகத்துள் அஞ்சும் ஒடுங்கிடும்' 'ஊமை மற்றது' 'நாமைய மற்றது' என்பன பாடபேதங்கள். (37)

**துரிய மிருப்பதுஞ் சாக்கிரத் துள்ளே**
**நரிகள் பதினலு நஞ்சுண்டு செத்தன**
**பரிய புரவியும் பாரிற் பறந்தன**
**துரிய மிறந்திடஞ் சொல்லவொண் ணதே. 2159**

இ-ம் – எனின், துரிய அவத்தையின் இயல்பை வேருெரு முறையான் விளக்குதல் நுதலிற்று.

இ – ள்: நான்காம் நிலையாகிய துரியம் இருப்பதும் சாக்கிராவத்தையுள் ஆம். நரிகளாகிய பதினன்கு தத்துவங்களும் விடமுண்டு இறந்தன, வேகத்தை யுடைய குதிரைகளும் பூமியில் பறந்தன. இங்ஙனமாக துரியாதீதத்தைப்பற்றிச் சொல்லொணுது எ–று.

துரியநிலை இருபத்துநான்கு தத்துவங்கள் செயலற்றன. ஆகவே துரியாதீத நிலையைப்பற்றிச் சொல்ல இயலாது என்பதாம்.

நரிகள் பதினன்கு என்றது சொப்பனவஸ்தையில் காரியப்பட்ட சத்தாதி வசனதியாகிய விடயங்கள் பத்தும், அந்தக்கரணங்கள் நான்குமாம். இவற்றை நரி என்றது தந்திரமாகச் சென்று பற்றுந்தன்மை யுடைமையின் என்க நஞ்சு உண்டு செத்தன என்றது அவை காரியப்படாது அடங்கியிருத்தலை, புரவி – குதிரை, குதிரையாக உருவகித்தது சத்தாதி வாக்காதி விஷயங்களை அறிதற்கும் செய்தற்கும் ஊக்கத்தை

விளைவிக்கும் வாயுக்கள் பத்தையும் என்க. பாரிற்பறந் தன என்றது துரியத்தில் அவைமடங்க புருடன் மட்டும் பிராணனுடன் செல்லுதலான் என்க.

இஃதறியாதார் நரிகள் பதினாலு கன்மேந்திரிய ஞானேந்திரியங்கள் பத்து அந்தக்கரணம் நான்கு எனவும், புரவிகள் சத்தாதி ஐந்து எனவும் கூறுவ. துரியநிலை கனவுநிலையினின்று சிலகருவிகள் கழல விளைவதாகலின் அவர்கள் கூறிய கருவிகள் நனவுக் கன்றிக் கனவுக்குரியன அன்மையான் பொருந்தா என்க.

துரியம் இருப்பதும் சாக்கிரத்துள்ளே என்பது சாக்கிராவத்தைக்குரிய முப்பத்தாறு கருவிகட்குள்ளே இரண்டு கருவிகளுடன் ஆன்மா செயற்படுகின்ற துரியம் உள்ளது என்பதாம். அஃதாவது முப்பத்தாற னுள் எல்லாம் ஆங்காங்குக் கழிந்துபோகப் பிராண வாயுவும் புருடனும் என்னும் இரண்டும் உடம்பிற்குக் காவலாகிய தன்னையே விடயிப்பதாகிய துரியம் என்க.

மாறு மலமைந்தான் மன்னு மவத்தையின்
வேறய மாயா தனுகர ணாதிக்கிங்
கீறுகா தேயெவ் வுயிரும் பிறந்திறந்
தாறுத வல்வினை யாலடி யுண்ணுமே. 2160

இம்-எனின் : எவ்வகைப்பட்டவுயிர்களும் பிறந் திறந்துழல்வதன் ஏது உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : புல்முதல் தேவரீறாய எவ்வகைப்பட்ட ஆன்மாக்களும், பரிபாக காலம்வரை தமது தன்மை மாறாத ஐவகைப்பட்ட மலத்தான், ஐந்தவத்தையிலும்

நிலைபெறும். உயிரைக் காட்டிலும் வேறான மாயை யால் விளைந்த உடல் கரண முதலியவற்றிற்கு இங்கு ஈறே இல்லை. ஆகையால் மாறிமாறிப் பிறந்திறந்து, வலிகுன்றாத வலிய வினைகளால் மொத்துண்டு வினைப்போகங்களை நுகரும் என்றவாறு.

உயிர்களனைத்தும் மலத்தொடர்பால், ஐந்தவத் தைப்பட்டுப் பிறப்பிறப்பிற் சிக்கி வினைகட்கு ஈடாக வருந்தும் என்பதாம்.

மலம் ஐந்து – ஆணவம் மாயை கன்மம் மாயேயம் திரோதாயி என்பன. இவைகளில் ஆணவம் ஒன்று மட்டும் நித்தியமாய் ஆன்மாவின் அறிவிச்சை செயல்களைத் தம்வயப்படுத்தி நடப்பதாய மூலமலமாதலின் முக்திக்காலத்து வன்மைவாடி வறுத்த வித்துப்போலச் செயலறும் அன்றி அழியா தென்க. ஏனைய மலங்கள் திருவருளாற்கால் அழிதலும் கூடும். ஆகவே மாறாமலம் என்பதற்குக் கருணைக் கண்ணுக்கு விழுகின்ற வரையில் தம் தன்மைகெடாத மலம் எனப் பொருள் கொள்க. ஐந்தான் என்பதில் மூன்றனுருபு ஏதுப் பொருண் மைக்கண் வந்தது. மலம் ஐந்தான் – மலம் ஐந்தை யுடையவன் என்பாரும் உளர்.

அவத்தையின் மன்னும் என்க. அவத்தை – நிலை. வேறாய என்பதனைத் தனித்தனியே மாயா தனு, மாயாகரணம் எனக்கூட்டுக. மாயா காரியமான உடலாதியன என்க. ‘கரணாதிக்கு ஈறு இங்கு ஆகாதே’ எனக்கூட்டுக.

ஆறுத வல்வினை – வலிய வினையாயிருந்தவை இறைவன் அருளால் மெல்வினையாதலும் உண்டு. அங்ஙனமாகாத வலிய வினை என்க. ஆராத என்பது எதுகைநோக்கி வலிதாயிற்று எனலும் ஒன்று. அடியுண்ணும் – மொத்துண்ணும். (39)

**உண்ணுந்தன் னூடாடா தூட்டிடு மாயையும்**
**அண்ண லருள்பெற்ற முத்திய தாவது**
**நண்ண லிலாவுயிர் ஞானத்தி னுற்பிறந்**
**தெண்ணுறு ஞானத்தி னேர்முத்தி யெய்துமே 2161**

இம் – எனின், உயிர் மாயையையகறி வீடுபே றெய்தும் வகை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: சிவத்தின் அருளைப்பெற்ற முத்தியாவது, கலந்திருந்து உண்கின்ற தன்னை வருத்தாது வினைகளை உயிர்களுக்கு அருத்துகின்ற மாயையையும் அடையாத உயிர், ஞானத்தால் பிறந்து இடைவிடாது எண்ணப்பெறுகின்ற ஞானம் ஒன்றனேயே நேரே முத்தியை எய்தும் அதுவே முத்தியாம் என்றவாறு.

உயிர் மாயையொடு பொருந்தாது ஞானத்தால் எய்துவதே சிவனருள்பெற்ற முத்தி என்பதாம். முத்தியாவது மாயையும் நண்ணலிலா உயிர்பிறந்து ஞானத்தின் நேர் முத்தி எய்தும் எனக்கூட்டிப் பொருள் காண்க.

உண்ணும் – நுகரும்; என்றது வினைப்போகங்களை அனுபவிக்கும் என்றவாறாம். தன்னூடாடாது. தன்னை வருத்தாது. ஊடாடல் – வருத்தல், பயிறல்

எனலுமாம். ஊட்டிடும் – வினைப் போகங்களை அழுந்தி அனுவிக்கச்செய்யும் மாயை என்க.

அண்ணல் – சிவம். அண்ணல் அருள்பெற்ற முத்தி - பரமுத்தி. அது – பகுதிப்பொருள் விகுதி. நண்ணலிலா – மாயையும் நண்ணலிலா உயிர் என்க.

ஞானத்தினாற் பிறந்து – பழம் பிறப்பு வாதனையால் கண்ணப்பர் தோன்றியதுபோலச் சிவஞானத்தோடே பிறந்து என்க. ஆன் என்னும் மூன்றனுருபு "தூங்கு கையான் ஓங்கு நடைய" – என்றாற்போல உடனிகழ்ச்சிக்கண் வந்தது.

நேர் முத்தி எய்தும் – நேரே முத்தியை யடையும். உபாயாந்தரங்களைக் கொண்டன்று நேராகவே எய்தும் என்பதாம். (40)

அதிமூட நித்திரை யாண வநந்த
அதனா லுணர்வோ னருங்கன்ம முன்னால்
இதமான கேவல மித்திறஞ் சென்று
பரமாகா வையவத் தைப்படு வானே 2162

இம் – எனின், கேவலத்து ஐந்தவத்தையினிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : கேவலாவத்தையாகிய காரணாவஸ்தையில் ஆன்மா ஆணவமிக்குத் தோன்ற அறிவு முதலியன தொழிற்பாடின்றிக் கிடக்குநிலை அதீதமூட நித்திரை யாகிய கேவல துரியாதீதம். அந்நிலையினின்று சிறிது அறிவோன் எழுச்சியுற்று நுகர்தற்கரிய கன்மங்களை முன்னுதல் துரியம். அதனின்று எழுச்சி

யுண்டாகித் துன்பந்தோன்றாது இதமான நிலை கேவலத்துச் சுழுத்தி. இவ்வண்ணமே சென்று ஆன்மா சுத்தாவஸ்தை யாகாத கேவலத்து ஐந்தவத்தைகளை எய்துவான் என்றவாறு.

கேவலதுரியாதீதம் ஆணவமலமட்டும் மறைக்க அறிவுமடங்கிக் கிடக்குநிலை. கேவலதுரியம் எழுச்சி மிக்கு வினைகளை நுகர எண்ணும் நிலை. கேவலசுழுத்தி துன்பம் தோன்றாதநிலை. இங்ஙனம் கண்டுக்கூறாத இருநிலைகளையும் சேர்த்து ஆன்மா கேவலத்து ஐந்தவத்தையுறுவன் என்பதாம்.

ஏனைய கேவல சொப்பனமாவது துன்பந்தோன்ற நிற்றல் கேவலசாக்ரமாவது துன்பத்துக்கு வருந்துதலாம் என்க. இங்ஙனம் ஐவகையையும் அறிக

நித்திரை – சுழுத்தி. மூடநித்திரை- அறிவிருந்தும் அறியாத நித்திரையாகிய துரியநிலை. அதிமூடநித்திரை – எழுச்சியேயில்லாத துரியாதீதநிலை என்க. இவையனைத்தும் காரண கேவல நிலையாம் என்றறிக

நந்த – பெருக. பெருகுதலால் அதிமூடமான நித்திரை ஏதுப்பொருளில் செயவென் எச்சமாகக் கொள்க அதனால்—அதினின்று; வேற்றுமை மயக்கம் இதமான – துன்பமில்லாதவை என வினையாலணையும் பெயர். இத்திறம் சென்று என்பதனுள் ஏனைய சொப்பன சாக்கிரங்களைக் குறிப்பித்தார்.

இக்கேவலாவத்தையின் இயல்பு யோகாவத்தை இன்னும் உண்டாதலின், அதனை விலக்கப் பரமாகா

ஐயவத்தை என்றார். இதற்கு வேறுபாடம் கொண்டு இடர்ப்படுவாரும் உளர். (41)

**ஆசான்முன் னேதுயில் மாண வகரைத்**
**தேசாய தண்டா லெழுப்புஞ் செயல்போல்**
**நேசாய வீசனு நீடாண வத்தரை**
**ஏசாத மாயாடன் றலே யெழுப்புமே.** 2163

இம் – எனின், கேவலாவத்தையினின்ற ஆன்மாக்களை இறைவன் எழுப்புமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; நல்லாசிரியன், தமக்கு முன்னே எழுந்திராமல் தூங்குகின்ற மாணுக்களை, ஒளிபொருந்திய தண்டத்தால் மெல்லப்புடைத்து எழுப்புதல்போல, கருணைகொண்டகடவுளும் அநாதியேபற்றிய ஆணவ மலத்திற் கிடக்கும் உயிர்களை, குறையில்லாத மாயையைக் கொண்டு எழுப்பியருளுவன் என்றவாறு.

கேவலத்திற் கிடக்கும் ஆன்மாவைச் சிவன் மாயையால் எழுப்புவன் என்பதாம்.

தேசு – ஒளி. தேசாயதண்டு – ஒளியுள்ள தண்டம் என்றது மாயையை. "வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமும் செய்யும் அன்றே" என்ப வாகலின் விளக்கஞ் செய்யும். மலத்தை மலத்தால் போக்கல் மரபாதலின், ஆணவத்தைப் போக்கப் புணர்க்கப் பெற்று, ஆன்மாவுக்கு ஒளி வழங்கும் இதனைத் தேசாய தண்டால் என உவமித்தார். ஏசாதமாயாள் என்றதும் இக்கருத்துப் பற்றியே என்க. ஏசாதமாயாள் – சுத்தமாயை.

நேசாய் ஈசன் – நேசமாய ஈசன். காரண மின்றியே உயிர்கள் மாட்டுச்செய்யும் எல்லையற்ற கருணையை உடையான் என்பதாம். (42)

மஞ்சொடு மந்தா கினிகுட மாமென
விஞ்சறி வில்லோன் விளம்பு மிகுமதி
எஞ்சலி லொன்றெனு மாறென இவ்வுடல்
அஞ்சுணு மன்னனன் றேபோ மளவே. 2164

இம் – எனின், உடலோடு உயிர்க்குள்ள இயை பினை உவமை முகத்தான் விளக்குதல் நுதலிற்று.

இ – ள்: மேகமும் கங்கையாறும் குடமும் ஆம் என விஞ்சிய அறிவில்லாதோன் கூறும் மிக்க மதியால் குறைவின்றி அவையனைத்தும் ஒன்றே யென்னும், அக்கருத்து மாறுனதென்றறிந்து கொள்ளக்கூடிய நிலையில் இவ்வுடலானது உயிராகிய மன்னவன்தன்னை விட்டுப்போமளவும் ஐந்தவத்தையினின்று வினைகளை நுகரும் என்றவாறு.

உடல் உயிர்கழியும்வரை தூல சூக்கும காரண சரீரங்களினின்று ஐந்தவத்தை எய்தும் என்பதாம்.

மஞ்சு – நீர் ஆவிவடிவாய் நிற்கும் காரணநிலை. ஆதலின் அது காரண சரீரத்திற்கு உவமிக்கப் பட்டது. மந்தாகினி • கங்கையாறு. பல இடங்கட்கும் ஓடிப்பாய்ந்து எல்லாப்புலங்களையும் நிறைவிப்பது. அது எல்லாத்தத்துவங்களோடும் கூடி நின்று வினைப் போகங்களை நுகர்வதும் விளைவிப்பதுமாகிய தூல சரீரத்திற்கு உவமையாக்கப்படுகிறது. குடம் – குடத்

தினளவாகிய நீரையுடையதாய்க் கொண்டு செலுத்தப் பெறுவது. அது புரியட்டக உடலாகிய சூக்கும சரீரத்திற்கு உவமிக்கப்பெற்றது.

இவ்வுடல் மூன்றும் ஒன்றாகவே தோன்றும் சைவநூல் ஆராய்ச்சி யில்லாதோனுக்கு ஆதலின் அவனை விஞ்சு அறிவில்லோன் என்றார். விஞ்சறிவு – கருவி நூலைக்கடந்த சிவஞான உணர்ச்சி. மிகுமதி – குறிப்பு மொழி, மதியற்றவன் என்பது பொருள். எஞ்சல் – குறை. மிகுமதி எனும் எனமுடிக்க. மாறு என இவ்வுடல் மன்னவன் போமளவு அஞ் சுனும் எனக்கூட்டுக. அஞ்சு – அவத்தைஐந்து .(43)

படியுடை மன்னவன் பாய்பரி யேறி
வடிவுடை மாநகர் தான்வரும் போது
அடியுடை யைவரு மங்குறை வோருந்
துடியில்லம் பற்றித் துயின்றனர் தாமே. 2165

இம் – எனின், சுழுத்தியவத்தையிற் கழியும் கருவிகள் இவை என உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : பூமியை யாளுகின்ற மன்னவன் பாய்ந்துசெல்லுங் குதிரை மீது ஏறி, அழகிய பெரிய நகர்க்கண் பவனி வரும்போது, தமக்கு அடிமைத் தன்மை பொருந்திய ஐவரும். அங்குத் தங்குதற்குரிய ஏனோரும், துடிக்கின்ற வீடாகிய இருதயத்தைப் பற்றித் துயின்றனர் என்றவாறு.

சுழுத்தித்தானத்துப் பிராணனும், சித்தமும், புருடனும் காரியப்பட நிற்கும் என்பதாம். சொப்பன வத்தையில் துணைவரும் இருபத்தைந்து தத்துவங்

களில் வாயுப்பத்து, சத்தாதி ஐந்து, வசனுதியைந்து, அந்தக்கரணம் நான்கு, புருடன் ஒன்று ஆக இருபத்தைந்தில் முற்கூறியன நீங்க ஏனைய கழிந்தன என்பார் உவமை வாயிலாக மன்னன் பவனிவரும் போது அங்கங்கே தங்கக்கூடிய படைகள் தங்க, ஏனையவற்றுடன் இதயத்தானத்தில் துயின்றனர் எனக்கூறினர்.

படி என்றது உடலையும், மன்னன் என்றது ஆன்மாவையும், பரி என்றது மனத்தையும், மாநகர் என்றது உடலையும். ஐவர்என்றது தன்மாத்திரை களையும், அங்குறைவோர் என்றது பொதுவகை யான பிராணன் ஒழிந்த வாயு ஒன்பதையும், சித்தம் ஒழிந்த கரணம் மூன்று, வசனுதியைந்தையும் உணர்த்தும் என்க.

உடல், மிகுதியும் பிருதிவி காரியமாதலின் படி என்றும் நகர் என்றும் கூறியதின் நயம்ஓர்க. விரைந்து செல்வதாலும், ஒன்றுவிட்டு ஒன்று பற்றுவதாலும், ஆன்மாவிற்கு ஊர இடந்தருதலாலும் மனத்தைப் பரி என்றார்.

இதயம் எப்போதும் துடித்துக்கொண்டேயிருத் தலின் துடியில்லம் எனப்பட்டது. துயின்றனர் – செயலற்று ஒழிந்தனர் என்பதாம்.

இச்செய்யுள் வழிவந்த கருத்தே.

> ***படைகொடு பவனி போதும்***
> ***பார்மன்னன் புகும்போ தில்லிற்***
> ***கடைதொறும் விட்டு விட்டுக்***
> ***காவலும் இட்டுப் பின்னர்***

அடைதருந் தனியே யந்தப்
புரத்தினில் அதுபோ லான்மா
உடலினில் அஞ்ச வத்தை
யுறுமுயிர் காவ லாக.

என்னும் சித்தித்திருவிருத்தம் என்க. (44)

நேரா மலத்தை நீடைந் தவத்தையின்
நேரான வாறுன்னி நீடு நனவினின்
நேராம் மலமைந்து நேரே தெரிசித்து
நேராம் பரத்துட னிற்பது நித்தமே. 2166

இம்–எனின், மலதரிசனம் பெற்றுப் பரத்துடன் நிற்பதே நித்தம் எனல் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: என்றும் தன்னையுங் காட்டாத ஆணவத்தை உயிர்கள் ஐந்தவத்தைப்படுமாற்றல் கண்டு ஆய்ந்து, நீண்ட சாக்கிர நிலையிலேயே, இதுவரை எதிர்ப்படாத ஐம்மலங்களையும் நேரே கண்டு. (ஒழிந்து) தனக்கு நேர்பட்ட பரசிவத்துடன் பிரியாது நிற்பதே நித்தமாம் என்றவாறு.

மலங்களைக்கண்டு அதனினீங்கிப் பரத்தோடு ஒன்றி யிருப்பதே நித்தவாழ்வு என்பதாம்.

மலம் தன்னையுங் காட்டாது ஆகலின் நேரா மலம் எனப்பட்டது. நேரா மலம் எதிர்மறைப் பெயரெச்சம்.

நீடு ஐந்தவத்தை – மலகன்மங்கள் நீங்கும்வரை விடாது பற்றியிருக்கும் நிலையென்பார் இங்ஙனம் கூறினர்.

மலம் அவத்தையில் நோராதலாவது, பிணியால் துன்புறுகின்றவன் துன்பத்தை மட்டும் அன்றி இத் துன்பம் எதனல் வந்தது என்றும் ஊகித்துணர்தல் போலத் துன்பச்சூழலில் துயருறும்போது மலமாகியது அறியாமையையும், அறிதல் என்றது அநுபவத்தால் மலமுண்மை யறிதலையும் உணர்த்தின. நேரே தரிசித்து என்றது தத்துவதரிசனம் செய்து என்பதாம். மலத்தை நோயென்று கண்டு அதனின் நீங்கியவழிப் பரத்தோடு ஒன்றுதல் தாமே இயையு மாதலின் நேராம்பரத்துடன் நிற்பது நித்தம் என்ருர். (45)

## 4. மத்திய சாக்கிராவத்தை

முன் அதிகாரத்துக் கீழாலவத்தையில் ஆன்மா சகல நிலையில் புருவ நடுவில் முப்பத்தாறு கருவிக ளோடும் நிற்றலாகிய சாக்கிரத்திலிருந்து முறையே கண்டத்தில் சொப்பனமும், இதயத்தில் சுழுத்தியும், உந்தியில் துரியமும், மூலாதாரத்தில் துரியா தீதமுமாகக் கீழ்ச்சென்றும், அங்ஙனமே மூலாதார மாகிய துரியத்தானத்தினின்று முறையே துரியமும், சுழுத்தியும், சொப்பனமும் சாக்கிரமுமாக மேனேக்கி வந்தும் இருவகை நிலைகளை எய்தும், இவ்விரண்டுமே கீழாலவஸ்தை எனக் கூறப்படும் என்பது விளக்கிய ஆசிரியர் இந்த அதிகாரத்து சகலத்து மத்தியால வத்தையை விளக்குகின்ருர். மத்தியாலவத்தை சாக்கிரத்தானம் ஒன்றற்கே உரியதாதலின் மத்திய சாக்கிராவத்தை எனப்பட்டது. அஃதாவது சாக்கிர மாகிய நடுநிலையிலேயே ஆன்மா சாக்கிரத்தில் சாக்கிரம், சாக்கிரத்தில் சொப்பனம், சாக்கிரத்தில்

சுழுத்தி, சாக்கிரத்தில் துரியம், சாக்கிரத்தில் துரியா தீதம் என ஐந்தவத்தை எய்தும். சாக்கிரத்தில் சாக்கிர மாவது விடயங்களை நேரே அனுபவித்தல். அதில் சொப்பனமாவது சுகதுக்கங்கள் வந்த வரலாற்றை நாடிமனத்தே வியாபாரம் செய்து நிற்றல். அதில் சுழுத்தி யாவது சுகதுக்கத்தில் மூழ்கிநிற்றல். அதில் துரிய மாவது சுகதுக்கம் தோன்றாது பெருமூச்செறிந்து நிற்றல். அதில் துரியாதீதம் சுகதுக்கங்களைக் கேட்ட மாத்திரையால் திடுக்கிட்டுப் பிராணவாயு சீவியாமல் மூர்ச்சித்து மயங்கி நிற்றல். இவ்வைந்தவத்தை களுமே புருவநடுவில் நிகழ்வதாலும், மேலேக்கிய நிலை பிரத்தியாகார முதல் சமாதியீறான அவஸ்தைகள் முறையே இதயம், கண்டம், நாக்கின்அடி, புருவநடு. பிரமரந்திரம் என்னும் ஐவகைத் தானங்களிலும் நிகழ்வதாலும் இடையில் நின்ற இது மத்யாவஸ்தை எனப்பட்டது. இதனியல்பை பதினேழு மந்திரங் களான் உணர்த்தத்தொடங்கிய ஆசிரியர் முதற்கண் சாக்கிர சாக்கிரம் என்னும் மந்திரத்தை யருளு கின்றார்.

சாக்கிர சாக்கிரந் தன்னிற் றிரோதாயி
சாக்கிர சொப்பனந் தன்னிடை மாமாயை
சாக்கிரந் தன்னிற் சுழுத்திதற் காமியந்
சாக்கிரந் தன்னிற் றுரியத்து மாயையே. 2167

இம் – எனின், சாக்கிர சாக்கிர முதலிய முதல் நான்கவத்தைகளிலும் மலங்காரியப்படுமாறு உணர்த் துதல் நுதலிற்று.

இ – ள் : விழிப்பில் விழிப்பாகிய நிலையில் திரோ தாயி மாயையும், சாக்கிர சொப்பனத்தில் சுத்தமாயை

யும், சாக்கிர சுழுத்தியில் ஆன்மாவுக்குரிய கன்ம மலமும், சாக்கிர துரியத்தில் அசுத்த மாயையும் தொழிற்படுத்தும் என்றவாறு.

சாக்கிர சாக்கிர நான்கிலும் முறையே திரோதாயி சுத்தமாயை, கன்மம், அசுத்தமாயை இந் நான்கும் ஆன்மாவைத் தொழிற்படுத்தும் என்பதாம்.

சாக்கிர சாக்கிர முதலியவற்றின் விளக்கம் இவ் வதிகார அவதாரிகைக்கண் கூறப்பட்டது. ஆயினும் மாயைகள் காரியப்படுத்தும் முறையினைச் சிறிது கூறுதும்.

சாக்கிரசாக்கிரத்தில் ஆன்மா திரோதாயியாகிய மறைப்பாற்றலான் மறைப்புண்டு விடயங்களை நேரே யனுபவிக்கும். அதிற் சொப்பனத்தில் ஆன்மா திரோ தானம் நீங்கி மாமாயையாகிற சுத்தமாயையால் சிறிது அறிவு விளக்கம்பெற்று வினைப்பயன் வந்தவொற்றை நாடி மனோவியாபாரம் செய்து நிற்கும். அதிற்சுழுத்தி யில் மாமாயை நீங்கி ஆன்மா கன்மமலத்துள் அழுந்தி நின்று சுகதுக்கங்களை அனுபவிக்கும், அதிற்றுரியத்து ஆன்மா கன்மமல மகல அசுத்தமாயையால் மயங்கி இது சுகம் இது துக்கம் என்று அறியகில்லாது பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கும் என்க. இங்ஙனம் பாசம் நான்கும் கழிந்தவாறு காண்க.

ஞானாவரண விளக்கத்து இத்திருமந்திரத்தை எடுத்துக்காட்டி, எனப்பாசம் நான்கும் கழிந்தவாறு காண்க. ஆணவம் வேறெனக் கூறுவது மாயை யையே ஆணவம் என்க்கோடலின் எனக்கூறி

இதற்கு ஞானசித்தி யாகமத்திலிருந்து, (ஞாஞவரண விளக்கம் பக்கம் 129, 141. பார்க்க)

**जाग्रजाग्रयादिकावस्था तिरोधादिमलक्षया।**
**तिरोधाय जाग्रजाग्रे मायेयं जाग्रस्वप्नकम् ॥**
**सुषुप्तिर्जगत्कर्म स्यान्मोहिनी जाग्रतुर्यकम्।**
**जाग्रातीताणवं बन्धं तत्याज्यं आत्मनोदितम् ॥**

என்ற மேற்கோளும் எடுத்துக் காட்டப்பெற்றுள் ளது.

இதனுல் இம்மந்திரம்,

*சாக்கிர சாக்கிரந் தன்னிங் நிரோதாயி*
*சாக்கிர சொப்பனந் தன்னிடை மாயேயம்*
*சாக்கிரந் தன்னிற் சுழுத்திநற் கான்மியம்*
*சாக்கிரந் தன்னிற் றுரியத்து மாயையே.*

என்றபாடம் உள்ளதாக இருத்தல் வேண்டும். அச்சுப் பிரதியிலுள்ள 'மாமாயை' என்ற பாடமே யிருப்பின் சுத்தமாயை என்ற பொருள் தந்து திரோ தாயி நீங்கிய பின் சுத்தமாயையும் அதன்பின் கன்ம மும் அதன்பின் அசுத்த மாயையும் நீங்கியதாதல் வேண்டும். இது முறையன்மையானும், திரோதாயி, மாயேயம் கன்மம் மாயை நீங்கலே முறைமையாக லானும் பாடம் திருத்திக்கொள்ளலாம் என்க. (46)

**மாயை யெழுப்புங் கலாதியை மற்றதி**
**னேயவி ராகாதி யேய்ந்த துரியத்துத்**
**தோயுஞ் சுழுனே கனாக வுந்துன்னி**
**ஆயின னந்தச் சகலத்து ளானே.** 2168

இம் – எனின், சகலாவஸ்தையில் மத்தியாலவஸ்தையாகிற ஐந்தவத்தைகளை எய்துமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : மாயையானது துரியாதீத நிலையில் கலாதி கருவிகளை எழுப்பும், அக்கலாதிகளின் நேயரூபமான ராகாதிகளைத் துரியாவஸ்தையின் ஏய்ந்த புருடன் தோய்ந்த நிலைசுழுனை ; அவை மேவவே கனவும் நனவும் பொருந்தி, அந்தச் சகலாவத்தையில் உள்ளவனாயினன் என்றவாறு.

மாயை கலாதிகளை எழுப்பத் துரியாதீதாவத்தையும். ராகத்தை எழுப்பத் துரியமும், புருஷதத்வத்தை எழுப்பச் சுழுத்தியும், ஏனையவற்றை எழுப்பக் கனவும் நனவும் பொருந்திச் சகலாவத்திதன் ஆயினன் ஆன்மா என்பதாம்.

அசிந்திய விசுவசாதாக்கியத்தில் கலாதிகளையும் உடன்கூட்டி எண்ணிச் சாக்கிரத்தில் நாற்பத்தொன்று முதலிய கருவிகள் காரியப்படுதலை விளக்கியிருத்தல் சிந்தித்தற்குரியதாம். ஆகவே இம்மந்திரம் எல்லா அவத்தைகளிலும் உடனிருப்பதாகிய மாயை முதல் சுத்தத்துவங்கள் வரை உள்ளனவற்றை உணர்த்தியதாம் என்க.

ஆகவே முன்னர்க் கூறிய முப்பத்தாறு இருபத்தைந்து பதினான்கு மூன்று இரண்டு ஒன்று கருவிகள் புருவ முதலிய தானங்களில் அங்கங்கே விட்டு விலகி நிற்கும் தத்துவங்களையே கூறியதாம். கலாதிகளும் சிவதத்துவங்களும் என்றும் உடனிருப்பனவாம் எனத் தெளிக. இதனை மாபாடியத்தும், ஈண்டுத்

தொழிற்படு கருவி முப்பத்தைந்தெனத் தொகை கூறினமைபற்றி ஏனை மூலப்பகுதி கலாதி சுத்த தத்துவங்களும் தொழிற்படா தொழியும் எனக் கொள்ளற்க. புருடனை யுடன் கூட்டி எண்ணியமை யானே கலாதிகள் என்றும் உடனிற்கும் எனப் போந்தமை தெளிவு எனக் கூறப்படுதல் காண்க. (சிவஞானபோதம் சூ 4. அதி. 3. உரை சாக்கிரம் காண்க). (47)

மேவிய வந்தகன் விழிகட் குருடனு
மாவையின் முன்னடிக் காணு மதுகண்டு
மேவுந் தடிகொண்டு சொல்லும் விழிபெற
மூவயி னுன்மா முயலுங் கருமமே. 2169

இம் – எனின், மூவகை யான்மாக்களும் ஞான விழியைப்பெற முயலும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : இயல்பாகவே பொருந்திய மலமறைப் பால் ஞான ஒளியிழந்த ஆன்மா, மலவலியால் விழித்த கண்ணும் குருடாகும். அந்நிலைக்கு முன்பே திருவடி யைக் காணும்பேற்றை ஆராய்ந்து, இறைவனருளாற் கிடைத்த கோலைக் கொண்டு, உபதேசச் சொல்லாகிற விழியையும் பெற மூவகை ஆன்மாக்களும் முயற்சியில் தலைப்படும் என்றவாறு.

மூவகை யான்மாக்களும் ஆணவத்தால் முழுக் குருடாவதற்கு முன் கலையால் அறிவு விளக்கம் பெற்றுத் திருவடியைக் காணும் அவாமேலிட்டு ஞானக்கோல் கொண்டு, ஞானஒளிபெற்ற விழியைப் பெற முயற்சி செய்யும் என்பதாம்.

மூவயின் ஆன்மா–மும்மலத்தோடு கூடிய சகலர் இருமலத்தோடு கூடிய பிரளயாகலர். ஒருமலத்தோடு கூடிய விஞ்ஞானகலர் என்னும் மூவகையான ஆன்மா. மேவிய அந்தகன் விழிகண் குருடாகும் ஆவியின் முன் – இயல்பாகவே ஞானக்கண் சூனிய மானவன். விழிக்கின்ற கண்ணும் குருடாகும் அந் நிலையின் முன்னர் என்க. அந்தாவது குறிபெறு கண்ணுளாரும் குருடராய் முடிவதற்கு முன் என்ற வாறு. ஆணவத்தால் ஆன்ம அறிவு குறைவாலே யன்றி, மனம் சென்று பற்றாமையால் விழித்த கண்ணும் குருடுபோலத் தன் செயல் அற்றிருக்கும் என்பதாம்.

அடிகாணுமது கண்டு – திருவருளாம் திருவடி-யைத் தரிசிக்கும் பேறு பெற்று என்க. மேவுந்தடி – பிடிக்குங் கோல். கோல்போல்வது திருவடிகாணும் அவா. விழிபோல்வது சொல்லாகிய உபதேச மொழி என்க.

இம்மந்திரத்தால் ஆணவமலத்தை வலியொடுக்கு முபாயம் உபதேசம் என்பதுரைக்கப் பெற்றது. இதனையே **जाग्रातीताणवं त्याज्यं** என ஞானசித்தி யறிவிக்கிறது. (48)

**மத்திம மொத்த சிலந்தி வலயத்துள்**
**ஒத்தங் கிருந்து வுயிருண்ணு மாறுபோல்**
**அத்தனு மைம்பொறி யாடகத் துண்ணின்று**
**சத்த முதலைந்துந் தானுண்ணு மாறே. 2170**

**இ-ள்–எனின். இறைவன் ஒருங்கிருந்து உணர்த்து மாற்றை விளக்குதல் நுதலிற்று.**

இ – ள் ; சிலந்திப்பூச்சியானது, நடுவிலே ஒத்து விளங்கும் கூட்டிலிருந்து, கூட்டில் ஒத்துத் தங்கி அதில்வந்து வீழ்கின்ற உயிர்களை உண்பது போலச் சிவமும், ஐம்பொறிகளாகிய அரவுகள் ஆடுகிற உடம்பினுள் இருந்து சத்தாதி புலன்களைத் தானுண்பன் என்றவாறு.

சிவம் உடம்பிலிருந்து புலன்களை நுகர்ந்து காட்டுவன் என்பதாம்.

சிலந்தி – சிவம். உயிர் உண்ணுதல் – புலன்களை நுகர்ந்து காட்டுதல். மத்திமம் – கூட்டின் நடுவிலே பூச்சி தங்கு இடம். சிலந்தி எல்லாப்பக்கத்து இழைகளும் ஒத்துள்ள நடுப்பாகத்திலிருந்து வலையில் வீழும் பூச்சிகளை உண்பதுபோலச் சிவனும் இவ்வுடம்பினுள் இருந்து புலன்களை நுகர்வன் என்பதாம். அங்ஙனம் அவர்கள் நுகர்தல், விருப்பாலோ – வேண்டுமென்றோ அன்று; உயிர்களும் புலன்களை நுகர்ந்து வினைகளைக் கழிக்கட்டும் என்ற கருணையால் என்க.

ஐம்பொறி ஆடு அகம் என்றமையால் ஐம்பொறிகளும் ஐயரவாகக் கருதப்பெற்றன.

இங்ஙனம் அன்றிச் சிலந்திபோல ஆன்மா உடம்பகத்திருந்து புலன்களை உண்ணும் என்பாரும் உளர்.

**வைச்சன வச்சு வகையிரு பத்தஞ்சு**
**முச்சு முடனனை வாமெருரு வன்னுளன்**
**பிச்சன் பெரியன் பிறப்பிலி யென்றென்று**
**நச்சி யவனரு ளுறுய்ந்த வாறே.** **2171**

இம் – எனின், என்னைச் சாக்கிரத்திருத்தி என்னுடன் கலந்தவன் சிவன். அவன் அருள் பெற்றமையை யுணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : என்னுள் வைத்தனவாகிய உடல்வகை இருபத்தைந்தாம். அதனை முழுதும் பொருந்தியுள்ளவன் ஒருவன் உளன்; அவனைப் பித்தன் என்றும், பெரியன் என்றும், பிறப்பிலி என்றும் என்றென்றும் போற்றி அடியேன் உய்ந்தேன் என்றவாறு.

எனக்கு இருபத்தைந்து தத்துவங்களைத் தனுவாக உதவி என்னுட் கலந்திருந்த பெருமான் ஒருவன் உளன், அவனைப் போற்றியுய்ந்தேன் என்பதாம்.

வைத்தன என்பதன் மரூஉ வச்சன என்பது. ‘வச்சபொருள் நமக்காகும் என்று’ என்புழிப்போல. அச்சு – உடல். முன்னர் ‘ஐயைந்து மத்திமையானது சாக்கிரம்’ என்றதுபோல ஈண்டும், ‘அச்சுவகை இருபத்தஞ்சு’ என்றார். இருபத்தைந்தும் முன்னர் 2142–ம் மந்திரத்து விளக்கப்பெற்றன.

உச்சும் உடன் அணைவான் ஒருவன் – அவற்றுடன் கூடியேயிருப்பவன், சிவன்.

அவன்புகழ் பிச்சன்முதலிய மூன்றும், நச்சி – விரும்பி.

சாக்கிரம் இருபத்தைந்து தத்துவங்களுடன் காரியப்படுதலின் அவற்றை அச்சு என்றார். இம்மந்திரத்திற்கு இவ்வாறன்றிச் சிவன் வைத்தனவாகிய திரு

மேனிகள் இருபத்தைந்துண்டு. அவை அனைத்தினும் வியாபியாக விருப்பவன் சிவனே. அவனைப் பிச்சன் முதலிய பெயர்களைச் சொல்லி விரும்பி வழிபட்டு நான் உய்ந்தேன் என்று உரை கூறுவாரும் உளர். இருபத்தைந்து மாகேசுர வடிவங்களுக்கும் சாக்கிரா வத்தைக்கும் இயைபு ஏதேனும் இருப்பின் கொள்க.

மாயேயங்களான இருபத்தைந்தையும் இயக்கி உடனிருப்பவன் இறைவன் என உணர்ந்தமையான் என் பிறவியற்று உய்ந்தேன் என்று கூறிய வாரும். (50)

நாலா றுடன்புருட னற்றத் துவமுடன்
வேறான வையைந்து மெய்ப்புரு டன்பரங்
கூறுவி யோமம் பரமெனக் கொண்டனன்
வேறான நாலேழு வேதாந்த தத்துவமே. 2172

இ-ம் - எனின், சுத்த சைவ வேதாந்த தத்துவம் இவை என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஆன்மதத்துவங்கள் இருபத்துநான் கோடு. புருடதத்துவமுங்கூட அவற்றால் வேறான இருபத்தைந்து தத்துவங்களும், ஆன்மாவாகிய பரம் ஒன்றும், கூற இயலாத ஆகாயமும் பரமாகிய சிவ தத்துவமும் எனக்கொண்டேன். இவற்றால் வேறான இருபத்தெட்டும் வேதாந்த தத்துவங்களாயின என்றவாறு.

ஆன்மதத்துவம் இருபத்துநான்கு, புருடதத் துவம் ஒன்று, மெய்ப்புருடனாகிய பரம் ஒன்று, வியோமம் ஒன்று, பரம் ஒன்று ஆக இருபத்தெட்டும் வேதாந்த தத்துவமாம் என்பது கருத்து.

புருடன் நற்றத்துவம் — புருஷதத்துவம். மெய்ப் புருடன் பரம் — ஆன்மாவாகிய புருஷ தத்துவத்தில் சிறந்த பொருள். வியோமம் — ஆகாயம். கூடு வியோமம் — சொல்லவியலாத வியோமம்; என்றது பரசிவத்தை. இது பிரமம் எனப்படுவது. இவை இருபத்தெட்டும் வேதாந்த தத்துவமா மென்பது. இவை மத்தியாலவத்தைக்குரிய சாக்கிராவத்தையின் தத்துவங்களாக ஆதலே உணர்த்துதலின் இவ்வதி காரத்திற்கு இயையுடைத்தாயிற்று.

இம்மந்திரத்திற்கு இவ்வாறன்றி, ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும், புருடனுடைய சிறப்பு நிலையுங்கூட இருபத்தைந்தாம். பரமாகிய மெய்ப் புருடன் வித்தியா தத்துவம் ஏழு; வியோமம் பரமாகிய சிவதத்துவமைந்து; இவைகூட முப்பத் தாறும். இவையே சைவர் கூறும் தத்துவம். வேதாந்திகள் கூறுவன வேறான இருபத்தெட்டு என உரை கூறுவர். அவர்கூறும் முப்பத்தாறுள் சிவதத்து வமும் வித்தியாதத்துவமும் என்றும் பிரியாது உடன் இருப்பனவாதலால் அவற்றையும் சேர்த்து முப்பத் தாறு என முடிவுகூறுதல் பொருந்தாது. சாக்கிர நிலையைவிட்டுச் சொப்பனத்திற் கேகும்போது சிவ தத்துவம் ஐந்தும், வித்யாதத்துவம் ஏழும் நீங்கா மையும், சொப்பனத்திற்குரிய தத்துவங்கள் வேறான பதினான்கு அல்லது இருபத்தைந்து என்று முன்னர்க் கூறப்பட்டமையும் ஆய்ந்து நல்லன கொள்க.

ஞானவரண விளக்கத்து இம் மந்திரத்தை எடுத்துக் காட்டிச் சுத்தசைவ வேதாந்தத்திற்குச் சிறந்த பிரதான தத்துவங்கள் இவை எனக் கூறப் பட்டிருத்தலும், இதற்கு மேற்கோளாக.

पञ्चविंशतिः पुरूषः परः परं चव्योमकम् ।
व्योमातिताष्टविंशतिः ईत्येवं तत्व निर्णयम् ॥

எனத் தத்துவ நிர்ணயப்பிரகரணத்தில் ஞானசித்தியில் கூறப்பெற்றுள்ளதை விளக்குதலாலும் உண்மையான உரை தெளிவுறுதல் காண்க. ( ஞானாவரண பக்கம் 75 ).

" வேறான ஐயைந்து மேலாகு மபரம் " எனவும் பாடம். (51)

ஏலங்கொண் டாங்கே யிடையொடு பிங்கலை
கோலங்கொண் டாங்கே குணத்தி னுடன்புக்கு
மூலங்கொண் டாங்கே முறுக்கிமுக் கோணிலுங்
காலங்கொண் டானடி காணலு மாமே. 2173

இம் – எனின், யோகாவத்தை நிலையில் துரியாதீதத்தின் நிலையை விளக்குதல் நுதலிற்று.

இ – ள் ; எழுச்சியைப் பொருந்தி இடைகலை பிங்கலை நாடிகளாகக் கோலங்கொண்டு, அநுபவத்துடன் புகுந்து, மூலாதாரத்தைப் பொருந்தி அங்கே முக்கோணத்திலும் முறுக்கிக் கொண்டு கிடந்து காலமே வடிவான பரசிவத்தின் அடியைக்காணலுமாம் என்றவாறு.

யோக நிலையில் துரியாதீதாவஸ்தையில் பிராணன் வாயுவாகி இருநாடிகளாலும் புகுந்து மூலாதாரத்தில் உள்ள முக்கோணத்தில் சுருண்டு கிடந்து சிவனருளைச் சாரும் என்பதாம்.

இவ்வதீத அவஸ்தை நிர்விகற்ப சமாதி எனப் படும். இதுவும் யோகிற்றருவதோர் சமாதியாய்த் தாழ்ந்து பின் சனனஞ்சாரும் என்க.

ஏல் அம் கொண்டு – எழுச்சிகொண்டு. அம் தவிர் வழிவந்த சாரியை. பிராணன் இடைநாடியிற் புகுந்து இயங்கின் இடைகலை எனவும், பிங்கலையிற் புகுந்தியங்கின் பிங்கலை யெனவும் பெயர்பெறுதலின் கோலங்கொண்டு என்றார்.

குணம் – அநுபவம், குணம் – நூல். நூல் போலும் நாடியாகிய சுழுமுனை என்பதே சிறந்த பொருள்.

முக்கோணிலு முருக்கி எனமாறுக. காலங் கொண்டான் – காலத்தைவென்று விளங்குபவனாகிய காலகாலன் சிவம் என்க. காணல் ஆகும். உம் சாரியை. முக்கோண் – முன்று மண்டலம் என்பாரும் உளர். (52)

**நாடிகள் பத்து நலந்திகழ் வாயுவும்**
**ஓடிய காலி லொடுங்கி யிருந்திடுங்**
**கூடிய காமங் குளிக்கு மிரதமு**
**நாடிய நல்ல மனமு முடலிலே** 2174

இம் – எனின், மேலாலவத்தையில் ஆன்மா துரியாதீத நிலையில் இன்பமயனாக இருத்தலை உணர்த் துதல் நுதலிற்று

இ – ள்: பத்து நாடிகளும் பத்துவாயுவும் முதல் திருமந்திரத்தில் கூறியாங்குச் சுழுமுனைநாடியிலே

ஓடும் காற்றிலே கலந்து ஒடுங்கும்: அப்போது கூடிய இன்பமும், முழுக்காட்டும் சுவையும் நுகர்ந்த நல்ல மனமும் இவ்வுடம்பிலே உளவாம் என்றவாறு.

வாயுக்களும் நாடிகளும் நடுநாடியில் ஒடுங்க இன்பமும் சுவையுந் தோன்ற ஆன்மா சுகித்திருக்கும் என்பதாம்.

நாடிகள் பத்தாவன : அத்தி, அலம்புடை, இடைகலை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, குகுதை, சங்கினி, சிகுவை, புருடன் என்பன.

வாயு பத்தாவன : பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்பன.

ஓடியகால் – சுழுமுனை, காமம் – ஒடுங்கிய காலத்து உண்டாம் இன்பம். குளிக்கும் இரதம் – உடம்பு முழுவதும் நனைந்தாற்போலப் பெருகும் சுவை. இது அமிருதாப்லாவனம் எனப்பெறும். நாடிய நல்லமனம் இவ்வநுபவத்தை இடைவிடாது நுகரும் மனம். இவ்வுடலிலே என்றது இவ்வதீதாநுபவத்திற் குரிய காரண சரீரத்திலே என்க. (53)

ஆவன வாவ வழிவ வழிவன
போவன போவ புகுவ புகுவன
காவலன் பேர்நந்தி காட்டித்துக் கண்டவ
ஏவன செய்யு மிளங்கிளை யோனே. 2175

இம் – எனின், நின்மல துரியாதீத நிலையில் உள்ள சிவஞானியரியல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : இம்மந்திரம் இரண்டாந்தந்திரத்து, பாத்திரம் என்னும் அதிகாரத்து நான்காம் மந்திரமாகவும் அமைந்திருத்தலின் இதனுடைய உரையை ஆங்குக் காண்க. (504) (54)

பத்தொடு பத்து மோர்மூன்றும் பகுதியு
முய்த்த துரியமு முள்ளுணர் காலமு
மெய்த்த வியோமமு மேலைத் துரியமுந்
தத்துவ நாலே ழெனவுன்னத் தக்கதே. 2176

இம் – எனின், தத்துவம் இருபத்தெட்டினையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஞானேந்திரிய கன்மேந்திரியங்களாகிற பத்தும், பொறிகளின் புலன்கள் பத்தும் அந்தக் கரணங்களுள் சித்தம் மனத்தின் வியாபார பேதமாதலின் அஃதொழிந்த மூன்றும் மூலப் பிரகிருதியும் புருடனும் மனத்தால் உணரப்படுவதாகிய காலதத்துவமும், நித்தியப் பொருளாகிய வியோமமும், மேலான துரியநிலையான திருவருட்சத்தியுடன் கூடிய சிவமுமாக இருபத்தெட்டே தத்துவங்கள் என்று உணரத்தக்கன என்றவாறு.

இதன் கருத்து ஆன்மதத்துவம் இருபத்து நான்கும், அந்தக்கரணம் மூன்றும், பிரகிருதியும் புருடனும் காலமும். ஈசனும் சதாசிவமும் ஆகிய இருபத்தெட்டும் தத்துவங்களாம் என்பது.

முன், ‘ நாலாறுடன் புருடன் ’ என்னும் திருமந்திரத்தும் இஃது விளக்கப்பெற்றிருத்தல் காண்க.

இனி, மூன்றும் பகுதியும் என்றதை உம்மைத் தொகையாகக்கொண்டு அந்தக்கரணம் நான்கு என்பாரும் உளர். பகுதி - மனத்தின் பகுதியாகிய சித்தம்.

உய்த்த துரியம் - செல்வதாகிய நான்காம் பொருள். அகக்கருவியும் புறக்கருவி இரண்டுமல்லாத நான்காம் பொருள், அது புருடன்.

காலம் என்பதொருபொருள், பொருளின் மாற்றங் கொண்டு மனத்தால் அனுமானித்து அறியப்படுவதன்றி, நேரேயறிய வாராததொன்றாதலின், உள்ளுணர் காலமும் என்றார்.

இதனை ஆன்மா எனலுமாம். மெய்த்த வியோமம். பூதாகாயம்: தோன்றி நின்று அழியுந் தன்மையது. அஃதன்றி என்றும் நிலைத்த ஆகாயம் என்றது ஈசுரத்தை என்க.

மேலைத்துரியம் - கீழைத்துரியமாக ஆன்மா சுட்டப் பட்டமையின் பரசிவத்தை மேலைத்துரியமென்றார். (55)

**விளங்கிடு முந்நூற்று முப்பதோ டொன்பான்**
**தளங்கோ ளிரட்டிய தாறு நடந்தால்**
**வணங்கிடு மைம்மலம் வாயு வெழுந்து**
**விளங்கிடு மவ்வழி தத்துவ நின்றே.** 2177

இம் - எனின், சுவாசபந்தத்தால் விளையும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : விளக்கமிக்க முந்நூறும், முப்பதைப் பத்தால் பெருக்க, அதனுல் வந்த முந்நூறும், கூட்டமான ஆறெடு இரட்டிய ஆறாகிய முப்பத்தாறையும் பெருக்கினல் வந்த இருபத்தோராயிரத்து அறுநூறு சுவாசம் நம் வயப்பட்டு நடந்தால் வாயு மிக்கு ஐந்து மலங்களும் தம் வலிகுன்றும் அவ்விடத்து உண்மைப் பொருளாகிய சிவம் விளங்கும் என்றவாறு.

பிராணுயாமப் பயிற்சி செய்யின் மலம் அடங்கும்; சிவம் பிரகாசிக்கும் என்பதாம்.

இம்மந்திரம் இவ்வதிகாரத்திற்கு என்ன இயைபுடைத்தோ எனின் துரியாதீதநிலைக்கு வாயு எழச் சிவம் பிரகாசிக்கும் என்றலின், இதுவும் மத்யாலவஸ்தையில் அதீதம் கூறியதாம் என்க. (56)

**நாலொரு கோடியே நாற்பத்தெண் ணுயிரம்**
**மேலுமோ ரைந்நூறு வேரு யடங்கிடும்**
**பாலவை தொண்ணு ரேடாறுட் படுமவை**
**கோலிய வையைந்து ளாகுங் குறிக்கிலே. 2178**

இம் – எனின், தத்துவங்களின் தொகை வகைகளைத் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : தத்துவங்கள் நான்குகோடியே நாற்பத்தெண்ணுயிரத்து ஐந்நூறு என்றுசிறப்பாக அடங்கும். அவற்றைப் பகுத்துத் தொகுக்கின் தொண்ணூற்றாறுட்படும். அவைகளை ஆராயின் இருபத்தைந்துள் ஆகும் என்றவாறு.

தத்துவங்கள் விரியான் 40048500 ஆம். அவற்றை அடக்கிக்கூறின் 96 ஆம். மீண்டும் சுருங்கக்கூறின் இருபத்தைந்தாம் என்க. (57)

**ஆகின்ற தொண்ணூறோ டாறும் பொதுவென்பர்**
**ஆகின்ற வாறு றருஞ்சைவர் தத்துவம்**
**ஆகின்ற நாலேழ் வேதாந்தி வயிணவர்க்**
**காகின்ற நாலாறை யைந்துமாயா வாதிக்கே. 2179**

இம் – எனின், சமயவாதிகளுக்கு உரிய தத்துவத் தொகை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: மாயையினின்று தோன்றுகின்ற தத்துவங்கள் பொதுவகையான் தொண்ணூற்றாறு. இவை பொது என்பர். உயரிய சைவர்களுக்கு உரிய தத்துவங்கள் ஆகின்ற முப்பத்தாறென்பர். வேதாந்திகட்கு உரியன இருபத்தெட்டு என்பர். வைணவர்க்கு இருபத்துநான்கு என்பர். மாயாவாதிகளுக்கு இருபத்தைந்து என்பர் என்றவாறு.

கருத்து வெளிப்படை.

சித்தாந்த சைவர் கூறும் 36 தத்துவங்கள், ஆன்ம தத்துவம் இருபத்துநான்கும், வித்யாதத்துவம் ஏழும், சிவதத்துவம் ஐந்தும் ஆக 36. வேதாந்திகட்கு உரிய இருபத்தெட்டு, முன்னர் 2172-ம் மந்திரத்துக் கூறப்பட்டன.

வைணவர்கட்குரியன ஆன்ம தத்துவங்கள் மட்டும். மாயாவாதிகட்கு உரியன மூற்கூறிய இருபத்துநான்கும் மூலப் பிரகிருதியாகிய மாயையும் ஆக இருபத்தைந்தும் என்க. (58)

தத்துவ மானது தன்வழி நின்றிடில்
வித்தக ளுகி விளங்கி யிருக்கலாம்
பொய்த்தவ மாமவை போயிடு மவ்வழி
தத்துவ மாவ தகார வெழுத்தே. 2180

இம் – எனின், தத்துவங்களை அடக்கியாளு தலான் விளையும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்; தத்துவங்கள் தம்வழி அடங்கி நிற்பச் செய்யின் மிக்க சதுரளுகி விளங்கி நீடியிருக்கலாம் பொய்யான தவங்கள் அழியும். அவ்விடத்து நேரும் உண்மையாவது அகார எழுத்தாம் என்றவாறு.

தத்துவங்களைத் தம் வயப்படுத்து நடத்தப் பொய்த் தவங்கள் கெடும். அப்பொழுது அகார அனுபவம் விளையும் என்பது கருத்து.

தத்துவங்களைத் தம்வழிநிற்கச் செய்தலாவது திருவருளால் தத்துவதரிசனம் செய்து, தத்துவங்கள் அனைத்தும் நம்மால் ஆக்கப்படுவன அல்ல எனவும் இறைவன் நம்மீது வைத்த எல்லையில்லாக் கருணை யால் அவற்றை ஆக்கித் தந்தனன் எனவும் அவனைப் பரவி அவற்றைக் காத்தலே நம்கடன் எனவும் இடைவிடாது எண்ணின், தத்துவங்கள் தம் வழிப் பட்டு நடக்கும் என்க.

வித்தகன் – செயற்கருஞ் செய்கை செய்யும் மெய்ஞ்ஞானியர்.

பொய்த்தவம் – நிலையில்லாத காமியப் பயன்களைத் தந்து அழியும் தவம். தத்துவம் – உண்மைப்பொருள். அகாரம் – சிவன். 'யாரும் அறிவர் அகரம் அவ னென்று' என்னும் சைவநூல் காண்க. (59)

அறிவொன்றி லாதன வையேழு மொன்றும்
அறிகின்ற வென்னை யறியா திருந்தேன்
அறிகின்ருய் நீயென் றருள்செய்தார் நந்தி
அறிகின்ற நானென் றறிந்துகொண் டேனே. 2181

இ-ம் - எனின், தத்துவங்கள் சடம் என்பதை யும், நான் உணர்த்த உணருச் சித்து என்பதையும், இறைவனுணர்த்து முறைமையை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முப்பத்தாறு தத்துவங்களும் சடப் பொருள்கள். அவற்றுடன் கூடிய அவற்ருல் அறியும் ஆற்றலுடைய என்னையும் அறிபவன் என அறியா திருந்தேன். என்குருநாதன் நீ அறியும் ஆற்றலுடைய வன் ஆதலால் அறிகின்ருய் என்று அருள்செய்தார். அதனுல் நான் அறிகின்றவன் என்பதையறிந்து கொண்டேன் என்றவாறு.

தத்துவங்கள் அனைத்தும் சடம், யான் சித்து, என்பதை நித்திய சித்தாகிய சிவம் உணர்த்த உணர்ந் தேன் என்பது கருத்து. (60)

சாக்கிர சாக்கிர மாதி தனிலைந்தும்
ஆக்கு மலாவத்தை யைந்து நனவாதி
போக்கி யிவற்ருெடும் பொய்யான வாருறு
நீக்கி நெறிநின் ருென்ருகி நிற்குமே. 2182

இ-ம் - எனின், அவத்தைகளையும், தத்துவங்களை யும் நீங்கி நின்ருேன் சிவத்தோடொன்றி நிற்பன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சாக்கிர சாக்கிர முதலான மத்தியாலவத்தை ஐந்தும், மீளவும் பிறப்பை யளிக்கும் கேவலாவத்தை ஐந்தும், நனவுமுதலிய சகலாவத்தை ஐந்தும். இவற்றோடு காரியப்படுத்தும் கருவிகளாகிற முப்பத்தாறு தத்துவங்களையும் நீக்கிச் சிவநெறிக்கண் நின்ற மெய்யன்பன் சிவமேயாக விளங்கும் என்றவாறு.

சகல, கேவல, கீழாலவத்தை, மேலாலவத்தை, மத்தியாலவத்தைகளை நீங்கித் தத்துவங்களும் தாமல்ல என்று கண்டு மெய்ஞ்ஞானி சிவத்தோடொன்றிச் சிவமாகவே விளங்குவன் என்பதாம்.

மலாவத்தை – கேவலாவத்தை • தத்துவங்கள் இவை மாயையின் காரியமாய்த் தோற்றக் கேடுகள் உடையன ஆதலின் பொய்யான 'ஆறாறு' எனப்பட்டது. (61)

ஆணவ மாதி மலமைந் தலரோனுக்
காணவ மாதி நான்காமாற் கரனுக்கு
ஆணவ மாதி மூன்றீசர்க் கிரண்டென்ப
ஆணவ மொன்றே சதாசிவற் காவதே. 2183

இம் – எனின், ஐந்து மூர்த்திகட்கும் உரியமலங்கள் இவையென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : பிரமனுக்கு ஆணவம் மாயை கன்மம் மாயேயம் திரோதாயி என்ற ஐம்மலங்களும் உரியன. திருமாலுக்கு மாயேயம் ஒழிந்த நான்கு மலங்கள் உரியன. உருத்திரனுக்கு மாயேயமும் மாயையும் ஒழிந்த மூன்றும் உரியன. மகேச்சுரனுக்கு மாயேயம்,

மாயை, கன்மம் என்ற மூன்றும் நீங்க ஏனையிரண்டும் உரியன. சதாசிவனுக்கு ஆணவம் மட்டும் உரியது என்றவாறு.

அயன் ஐம்மலமுடையவன். அரி நான்குமலம் உடையவன். உருத்திரன் மும்மலமுடையான். மயேச்சுரன் இருமலமுடையவன். சதாசிவன் ஒரு மலமுடையவன் என்பதாம். (62)

## 5. அத்துவாக்கள்

அத்துவா என்பது நெறி. அஃதாவது பிறவிக்கு ஏதுவாகிய மலத்தைக்கெடுத்து, எங்கணும் வியாபக மாகிய சிவம் பிரகாசித்தற்கு ஏதுவாகிய ஞானத்தைக் கொடுத்துப் பிறவியை ஒழிப்பதற்கு உரிய நெறியே அத்துவா ஆம். ஆன்மாக்களின் மலகன்மங்களைப் போக்கச் சிவனே குருமூர்த்தியை வாயிலாகக் கொண்டு தீட்சை செய்விக்கும்பொழுது தீட்சை பெறும் மாணுக்கர் தகுதிக்கேற்ப ஞானவதி கிரியாவதி என்ற இருமுறையானும் செய்விப்பன். ஆசாரியன் சிவனுணைபெற்றுத் தீட்சை செய்யும் போது மந்திரம் பதம் வன்னம் புவனம் தத்துவம் கலை என்ற அத்துவாக்கள் ஆறனையும் ஒன்றில் ஒன்று ஒடுங்கச்செய்து, இறுதியான கலாத்து வாவைத் திரோதானசத்தியில் ஒடுக்கி அதனைச் சிவத்தில் ஒடுக்கி, மாணுக்கனுடைய மலத்தைக் கெடுத்துப் பிறவியை அறுப்பர்.

வழி அல்லது நெறி என்னும் பொருள்தரும் அத்துவா உயிர்களுக்கு இதம் அல்லது அகிதம் என்னும் கன்மம் வரும் வழி எனவும், உயிர்

இறைவனை அடைதற்குரிய வழி எனவும் இருவகைப் படும். அவற்றுள் கன்மம் வரும் வழி எங்ஙனம் பொருந்தும் எனின், மந்திரங்களை உரத்துச் சொல்லல், மெல்லச்சொல்லல், நினைத்தல் முதலிய சொல்லுதல் பேதங்களில் எந்த மந்திரத்தை எங்ஙனம் சொல்ல வேண்டுமோ அங்ஙனம் சொல்லல் புண்ணியம். மாறிச்சொல்லின் பாவம் ஆம், அங்ஙனமே பதங்களில் பிரிக்கக்கூடாத இடங்களில் பிரித்தலாலும், உதாத்த அனுதாத்த ஸ்வரித ப்லுத பேதங்களை மாறி உச்சரித்தலால் வண்ணத்திற் பாவமும், புவனத்துவாவில் அந்த அந்த புவனத்திற்குரிய பதிகளைப் பூஜியாமையாற் பாவமும், தத்துவாத்துவாவில் பொறிகளால் நேரியவழியில் போகநுகர்தல் புண்ணியம், தீய வழியில் நுகர்தல் பாவம். பஞ்சகலைகளில் கலா சக்திகளுக்கும் பூசைசெய்தால் புண்ணியம். அங்ஙனம் பூசியாமையால் பாவம். ஆக இங்ஙனம் கன்மம் விளைதல்.

இந்த அத்துவாக்களில் மந்திரம் பதம் வன்னம் என்பன சொற்பிரபஞ்சம் ஆம். புவனம் தத்துவம் கலை என்ற மூன்றும் பொருட்பிரபஞ்சம் ஆம். இங்ஙனம் சொல்லும் பொருளுமாயிருக்கிற அத்துவாக்களாறும் ஆணவ கேவலத்துட்கிடந்து அறிவு விளங்காத ஆன்மாக்கட்கு அறிவுதோன்ற வழியாகும். இவ்வறிவு விளக்கம் ஏகதேசம் என்பதை உணர்ந்தபின் அத்துவாக்களை ஒன்றின் ஒன்றடங்க ஒடுக்கும் முறையினால் இறைவனையடைவிக்கும் நெறியாகும் என்க. ஆகவே பேச்சை நிறுத்தி, உலகை வெறுத்து, உடலைத் தானன்றெனத் தெளிந்து, அருள்துணையால் தன்னையும் தலைவனையும்

அறிய உ வும் நெறி என்பதாம். இதனை ஆசிரியர் திருமூலதேவநாயனார் மூன்று திருமந்திரங்களான் உணர்த்துகின்றார்.

தத்துவ மாறாறு தன்மனு வேழ்கோடி
மெய்த்தகு வன்னமைம் பானொன்று மேதினி
ஒத்திரு நூற்றிரு பானான்கெண் பானொன்று
வைத்த பதங்கலை யோரைந்தும் வந்ததே. 2184

இம் – எனின், அத்துவாக்களினுடைய வகையும் தொகையும் கூறுதல் நுதலிற்று.

இ – ள்; தத்துவம் முப்பத்தாறு. மந்திரம் ஏழு வகையான இறுதிகளையுடையது. உண்மையான எழுத்துக்கள் ஐம்பத்தொன்று. பூமியாகியபுவனங்கள் இருநூற்று இருபத்துநான்கு. பதங்கள் எண்பத்தொன்று. கலைகள் ஐந்து. இவைகள் தோன்றின எ – று.

தத்துவம் முதலிய கலைகளின் பெயரும் அவற்றின் தொகையும் உணர்த்தப்பெற்றன.

தத்துவம் முப்பத்தாறு முன்னர்க் கூறப்பெற்றன

மனு – மந்திரம், மந்திரம் – மந்திரங்கள் ஏழு கோடி. நம:, ஸ்வாஹா, ஸ்வதா, ஹூம்பட், பட், வவுஷட், வஷட் என்ற இறுதியையுடைய மந்திரங்கள். கோடி – இறுதி அல்லது முடிவு.

வர்ணம் ஐம்பான் ஒன்று – அகாராதி க்ஷகாராந்த மான எழுத்துக்கள் ஐம்பத்தொன்று.

புவனம் இருநூற்றிருபத்து நான்கு.

பதம் எண்பத்தொன்று. வியோவியாபினி முதலாக நமசிவாய என்பதீறனவை.

கலை : நிவிருத்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதை என்பன. இவற்றின் பகுப்பைப் பின் வரும் படத்தில் சுருங்கக் காணலாம்,

| | மந்திரம் | பதம் | வர்ணம் | புவனம் | தத்துவம் | அதி தெய்வம் |
|---|---|---|---|---|---|---|
| நிவிருத்தி | 2 | 28 | 1 | 108 | 1 | பிரமன் |
| பிரதிட்டை | 2 | 21 | 24 | 56 | 23 | விஷ்ணு |
| வித்தை | 2 | 20 | 7 | 27 | 7 | ருத்ரன் |
| சாந்தி | 2 | 11 | 3 | 18 | 3 | மாகேஸ்வரன் |
| சாந்தியதீதை | 3 | 1 | 16 | 15 | 2 | சதாசிவம் |
| | 11 | 81 | 51 | 224 | 36 | |

இந்த ஐந்து கலைகளும் சிற்சத்தியில் ஒடுங்கும். சிற்சத்தியானது சிவத்தினிடம் ஒடுங்கும். (63)

நாடிய மண்டல மூன்று நலந்தெரிந்
தோடு மவரோ டுள்ளிரு பத்தைஞ்சுங்
கூடுவர் கூடிக் குறிவழி யேசென்று
தேடிய பின்னர்த் திகைத்திருந் தார்களே. 2185

இம் - எனின், தத்துவசுத்தி செய்து குரு உப தேசம் கேட்டவின் பயன் உணர்த்துதல் நுதலிற்று,

இ – ள் : சோம சூரிய அக்கினி மண்டலங்களாக மூன்று மண்டலங்கள் உடம்பில் உள்ளன. இவற்றின் நன்மைகளை ஆராய்ந்து நிற்பவர்களுடன் உள்ளே கலந்திருப்பன மண்முதலான தத்துவங்கள் இருபத்தைந்தாம். அவற்றுடன் கூடி குரு சொன்ன குறிப்பின்படி சென்று ஆராய்ந்தபின் தெளிவுண்டாகித் தற்போத மிழந்திருந்தனர் என்றவாறு.

தத்துவதரிசனம் செய்து குரு உபதேசப்படி நின்றவர்கள் சிவபோதமிக்கு விளங்கினர் என்பதாம். (64)

சாக்கிர சாக்கிர மாதித் தலையாக்கி
ஆக்கிய தூல மளவாக்கி யதீதத்துத்
தாக்கிய வன்பான தாண்டவஞ் சார்ந்தது
தேக்குஞ் சிவமாத லைந்துஞ் சிவாயமே. 2186

இ – ள் : சாக்கிரத்துச் சாக்கிரமுதல் இத்தூல உடலில் பிரமரந்திரம் வரைசென்று, அதன்மேலுள்ள துரியாதீதமாகிய துவாதசாந்தப் பெருவெளியில் கலந்த அன்புவடிவான ஆனந்தக்கூத்தைக் கண்டு. அது நிறைந்த சிவமேயாதலை யநுபவிக்க, இவ்வைந்தும் சிவய என்னும் திருவைந்தெழுத்தனுபவமாம் எ – று.

கருத்து வெளிப்படை.

சாக்கிர சாக்கிரம் ஆதி – சாக்கிரத்திற் சாக்கிரம் சாக்கிரத்திற்சொப்பன முதலிய ஐந்தவத்தைகளும்.

அவற்றைத் தலையாக்குதலாவது மேல்நோக்கி எழச்செய்தல். அதாவது மேலாலவத்தையாகக்

நாணல். அங்ஙனமாக்கிச் செல்லுங்கால் இப்பரு வுடலின் எல்லையாகிய பிரமரந்திரம்வரை செல்லுக என்பார் தூலம் அளவாக்கி என்றார்.

அதீதம் – துவாதசாந்தத்தலம். அங்குத் தாண்டவ தரிசனம்பெற்றுச் சிவமாக சிவமயமாக விளங்குக என்பதாம். அதாவது மலகன்ம எழுத்துக்களாகிய நகாரமகாரங்கள் அற்றுச் சிவமும் சத்தியும் தானுமாக அனுபவிக்க என்பதாம். இதுவே அத்துவா சுத்தி யானபிறகு அடையும் அனுபவமாம் என்க. (65)

## 6. சுத்தநனவாதி பருவங்கள்

ஆன்மா சிவத்தைச் சார்ந்து வியாபகமாய்ச் சுத்ததத்துவம் நனவாதி பருவங்களைச்சாரும் என்ப தாம். சுத்தம் நின்மலம் எனவும் வழங்கப்பெறும். ஆதலால் அது நின்மல சாக்கிரம், நின்மல சொப் பனம், நின்மல சுழுத்தி, நின்மல துரியம் நின்மல துரியாதீதம் என ஐவகைப்படும். அவற்றுள் நின்மல சாக்கிரமாவது இருவினையொப்பு மலபரி பாகம் சத்திநிபாதம் நிரம்பியநிலை. இதில் சிவதத்துவம் ஐந்தல் சுத்தவித்தை நீங்காமல் நீங்கின அவதரம் நின்மலசொப்பனம். குரு தரிசனமாகி அவரானுப தேசம் பெறல். சுத்தவித்தையும் ஈச்சுரமும் நீங்காமல் நீங்கின அவதரம் நின்மல சுழுத்தி உபதேசத்தில் உறைத்துநின்று சாதித்தல். சுத்த வித்தை ஈச்சுரம் சாதாக்கியம் மூன்றும் நீங்காமல் நீங்கிய அவதரம். நின்மலதுரியம் பாசநீக்கம். இதில் சுத்தவித்தை ஈச் சுரம், சாதாக்கியம் சத்தி என்னும் நான்கும் நீங்காமல்

நீங்கின அவதரம் நின்மல துரியாதீதம் சிவப்பேறும் ஆம் என்க. இதில் சுத்த தத்துவம் ஐந்தும் நீங்காமல் நீங்கிய அவதரம்.

இதன் விரிவான விளக்கத்தை,

"இலாடத்தே சாக்கிரத்தை எய்திய வுள்ளம்
இலாடத்தே ஐந்தவத்தை எய்தும் — இலாடத்தே
அவ்வவ இந்திரியத் தத்துறைகள் கண்டதுவே
அவ்வவற்றி னீங்கலது வாங்கு."

என்னும் சிவஞானபோத மேற்கோள் வெண்பாவிற் காண்க.

அதனை நாற்பது மந்திரங்களான் விளக்கப்புகுந்த நாயனார் முதற்கண் பொது வகையான் சகலமாகிய தூல நிலையின் நுண்ணியநிலையே சுத்தம் என அருளுகின்றார்.

நனவாதி தூலமே சூக்கப் பகுதி
அனதான வையைந்தும் விந்துவின் சத்தி
தனதா முயிர்விந்து தானின்று போந்து
கனவா நனவிற் கலந்ததிவ் வாறே. 2187

இம் - எனின், நனவு முதலிய தூலமான ஐந்தவத்தைகளின் நுண்ணிய நிலையே சுத்தம் என உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : நனவு முதலாகச் சொல்லப்படும் தூலப் பகுதியின் சூக்குமநிலையும். அத்தன்மையவான

இருபத்தைந்து தத்துவங்களும் விந்து சத்தி யாகிய சுத்தமாயை யிலிருந்து வெளிப்பட்டதாம். தன்னுடையதான உயிர் விந்து சத்தியினின்றும் வெளிப்பட்டு நனவிற் கனவாக கலந்திருப்பது இவ்வண்ணமேயாம் என்றவாறு.

சகலாவத்தையில் நனவுமுதலாகச் சொல்லப் பட்ட தூலநிலையின் நுண்ணிய தன்மையும், அவற்றுக்குரிய சூக்கும தத்துவங்களாகிற இருபத் தைந்தும், விந்து வாகிய சுத்தமாயையிலிருந்து தோன்றியனவாம் என்பது கருத்து.

அனதான – அன்னது ஆன என்பதன் விகாரம். அத்தன்மைத்தான என்பது பொருள். தூலமாயிருந்து சூக்குமமான என்பது கருத்து. விந்து – சுத்தமாயை.

கனவாம் நனவு – கனவுபோல அவ்வளவு புத்தி கோசரமாகாத நனவு என்பதாம். (66)

**நனவி லதீதம் பிறந்தார் கிடந்தார்**
**நனவிற் றுரிய நிகழ்ந்தார் தவழ்ந்தார்**
**நனவிற் சுழுனை நடந்தார் வளர்ந்தார்**
**நனவிற் கனவோட னன்செய்தி யானதே. 2188**

இ – ளின், சாக்கிரத்து அதீதம் முதலிய நான்கையும் விளக்குதல் நுதலிற்று.

இ - ள் : சாக்கிராவத்தையின் அதீத நிலையில் சிவம் என்ற ஒரு தத்துவத்துடன் செயலற்றுக் கிடப்பவர்களே சுத்தாவத்தையிற் பிறந்தோர் ஆவர். சாக்கிர துரியாவத்தையில் சிவம் சத்தி என்ற இரு

தத்துவங்களுடன் காரியப்பட இருப்பவர்களே பிறந்து தவழ்பவர்கள் ஆவர்; சாக்கிரசுழுத்தியில் பலநாள் பயில்பவர்களே வளர்ந்து நடப்பவர் ஆவர்: சாக்கிரசொப்பனத்து சிவம் சத்தி சாதாக்கியம் ஈச்சுரம் என்ற நான்கு தத்துவங்களுடன் காரியப்படு நிலையில் இருப்பவர்களின் செயல் ஓடுதலாம் எ – று.

சாக்கிர தூரியாதீதம் – பிறத்தல், அதிற்றுரியம் – தவழ்தல், அதிற்சுழுத்தி – நடத்தல், அதிற்சொப் பனம் – ஓடுதல் ஆம் என்பதாம். (67)

செறியுங் கிரியை சிவதத் துவமாம்
பிறிவிற் சுகயோகம் பேரருள் கல்வி
குறிதற் றிருமேனி குணம்பல வாகும்
அறிவில் சராசர மண்டத் தளவே. 2189

இம் – எனின், சாக்கிரத்தே அதீதத்தையடைந்த ஞானிகளின் செயல் முதலியவற்றின் உண்மைகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : நின்மல சாக்கிராதீதம் உடையார் பால் செறிந்துள்ள செயல்கள் அனைத்தும் சிவதத்துவமாம். அவர்கள் பிரிப்பின்றிச் செறிந்திருக்கும் சுகரூபமான யோகம் சிவபரம்பொருளின் பேரருளேயாம். அவர்களுடைய கல்வி குறித்துணரப்படும் சிவ சொரூபத்தின் எண்குணங்களேயாம். அவர்கள் நிலை இவ்வள வென்று அறிய இயலாத சராசரவடிவான உயிர்கள் நிரம்பிய அண்டங்களின் அளவாம் என்றவாறு.

சுத்ததுரியாதீத நிலையில் உள்ள மெய்ஞ்ஞானியர் கிரியை சிவதத்துவம் ; அவர்கள் யோகம் கல்வி உரு அனைத்தும் திருவருளும் சிவனுருவும் குணங் களுமாம். நிலை அண்ட அளவே என்பது கருத்து. நாம் செய்யும் கிரியைகள் இயற்றலும் ஒழிதலும் துறத்தலும் உடையனவாய் இடையீடுபடுவன. நின்மல துரியாதீதம் பெற்றோர் கிரியை ; அங்ஙனன்றி என்றும் சிவதத்துவமாய்ச் செறிந்திருக்கும் என்பார் செறியுங் கிரியை என்றார்.

யோகமாவது – பிரிவிலாச்செறிவேயாதலின் பிறி வில் சுகயோகம் என்றார். பேரருள் கல்வி என்பதனை ஒரு தொடராக்கித் திருவருள் ஞானம் எனலுமாம்.

குறிதற்றிருமேனி - குறித்துணரப்படுவதாய தம் மேனி இறை எண்குணவடிவாம் என்பதாம். அறிவு இல் சராசரம் – அறிதல் இல்லாத இயங்குவ நிற்ப வான உயிர்கள். இதன் கருத்து அவர்கள் அண்டங் களிலுள்ள இயங்குவ நிற்பவான அனைத்துயிர்களிலும் வியாபித்து நிற்பர் என்பதாம். அன்றி அவர்கள் அண்டத்திலுள்ள சராசரங்களின் அறிவில் அவை களின் அளவேயாக விளங்குவர் எனலுமாம். (68)

ஆதி பரஞ்சிவஞ் சத்தி சதாசிவம்
ஏதமி லீசனல் வித்தியா தத்துவம்
போதங் கலைகால நியதி மாமாயை
நீதியீ ருக நிறுததின னென்னே 2190

இம் – எனின், சிவதத்துவம் வித்யாதத்துவங்களை வித்துணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : முதன்மையும் மேன்மையும் உடைய சிவதத்துவம் சிவம். சத்தி, சதாசிவம், குற்றமில்லாத மகேச்சுரம், சுத்தவித்யை என்ற ஐந்துமாம். வித்யையும் கலையும் காலமும் நியதியும் மகாமாயையாகிற சுத்தமாயையும், இவற்றின் முறைமையையும் முடிவாகக்கொண்டு அமைத்தான் இறைவன் என்று சொல் என்றவாறு.

சிவதத்துவம் ஐந்தும் வித்யாதத்த்துவம் ஐந்துமாக அமைத்தான் என்பது கருத்து. (69)

**தேசு திகழ்சிவஞ் சத்தி சதாசிவம்**
**ஈசன னல்வித்தை யிராகங் கலைகால**
**மாசகல் வித்தை நியதி மகாமாயை**
**ஆசில் புருடாதி யான்மாவீ ராறே.** 2191

இம் - எனின், முதற்றிருமந்திரத்துட்கூறியதைத் தொகைகொடுத்து, வகைப்படுத்துதல் உணர்த்துதல் நுதலிற்று

இ – ள் : ஒளிமிக்கு விளங்கும் சிவம். சத்தி, சதாசிவம், மகேச்சுரம். சுத்தவித்தை, அராகம், கலை, காலம், குற்றமற்ற வித்தை, நியதி, மாயை. குற்றமில்லாத புருடனாகிய ஆன்மா எனப் பன்னிரண்டாம் என்றவாறு.

ஈண்டும் சிவதத்துவங்கள் ஐந்தும் வித்யாதத்துவங்கள் ஏழும் கூறப்பெற்றன.

சிவம் ஒளிவடிவாகத் திகழ்வதாகலின் தேசுதிகழ் சிவம் எனப்பட்டது. இது நாதம் எனவும் பெயர் பெறும். இதற்குச் சிவம் அதிபதியாதலால் சிவ

எனவும் சிவதத்துவம் எனவும் வழங்கப்பெறுகிறது. இது சர்வான்மாக்களுக்கும் அறிவை எழுப்புவித்து நிற்கிற ஞானம்.

சத்தி - இதற்கு விந்து தத்துவம் என்றும் பெயர். சர்வான்மாக்களுக்கும் உண்டாகிய தொழிலை எழுப்புவித்து நிற்கிறகிரியை.

சதாசிவம் – இது சாதாக்கியம் எனவும் வழங்கப் பெறும். இது விந்துவினின்று தோன்றுவது. இது ஞானம் கிரியை இரண்டும் சமமாகக் கூடிய தொன்றும்.

ஈச்சுரம் – இது சாதாக்கியத்தில் கிரியை மிகுந்து ஞானங்குறைந்த நிலையில் தோன்றுவது. மகேச்சுரம் எனவும் வழங்கும். இதனையே ஈசன் என்றனர் ஆசிரியர்.

நல்வித்தை – சுத்தவித்தை, ஈசுரதத்துவத்தில் இருந்து ஞானமிகுந்து கிரியை குறைந்த நிலையில் தோன்றுவது. இவ்வைந்தும் சிவதத்துவங்கள் எனவும், சுத்தமாயா தத்துவங்கள் எனவும் வழங்கப் பெறும். இவை ஞான கிரியா சொரூப பேதங்களாம் என அறிக.

இதனை,

*"ஞானமே யானபோது சிவன்றெழில்; ஞானம் ஒக்கின்*
*ஈனமில் சதாசிவன்பேர்; ஈசனார் தொழிலது ஏறின்;*
*ஊனமேற் கிரியை வித்தை;"*

என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானும் தெளிக.

அராகம் முதல் நியதிவரை கூறப்பட்டவை காரியமாயையிலிருந்து உண்டானவை. இவ்வைந்துங் கூடியது புருடன், மகாமாயை என்பது அனந்தேசர் மகேசரின் அதிகாரத்தைப் பெற்று அசுத்த மாயை யின் ஏக தேசத்தைக் கலக்க அதிலிருந்து உண்டான காரிய மாயை என்க. புருடாதி ஆன்மா என்றது புருடன் தனித்ததொரு தத்துவமன்று; ஐந்துங்கூடிய நிலையில் ஆன்மாவிற்குள்ள பெயர் என்பதைத் தோற்றுவிக்க. (70)

ஆணவ மாயையுங் கன்மமு மாமலங்
காணு முளைக்குத் தவிடுமி யான்மாவுந்
தாணுவை யொவ்வாமற் றண்டுல மாய்நிற்கும்
பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே. 2192

இ-ம் - எனின், ஐம்மலங்களையும் உவமமுகத் தான் விளக்குதல் நுதலிற்று',

இ-ள்; ஆணவமும் மாயையும் கன்மமும் ஆகிய மலங்கள் உமியையும் தவிட்டையும் முளையை யும் ஒக்கும். ஆன்மா சிவத்தை ஒப்பாகாமல் அரிசி போல நிற்கும். ஆகையால் உன் பாசத்தை நீக்கித் திருவடியைப் பேணுவாயாக என்றவாறு.

ஆணவம் உமியையும், கன்மம் முளையையும், மாயை தவிட்டையும், இம்மூன்றையும் அநாதியே உடைய அரிசி ஆன்மாவையும் ஒக்கும். இம் மூன்றேடும் கூடியுள்ளமையால் ஆன்மா பசு எனப் பட்டு, பதியோடு என்றும் பிரிப்பின்றிக் கலந்திருப் பினும் அதனை அறியாது சிவத்தோடு அத்துவிதக்

கலப்பின்றி நிற்கும் ஆதலால் பாசத்தை அகற்றித் திருவருளைப் பேணுக என்பதாம். இதனை "நெல்லினுக்குமிதவிடுகள் அநாதியாயே நெல்லை விட்டு நீங்கும் வகை நின்றநிலை நிகழ்த்தீர்" என்னும் சித்தித் திருவிருத்தம் நன்கு விளக்கும். (71)

பசுக்கள் பலவண்ணம் பாலொரு வண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற வாய னொருவண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற வாயன்கோல் போடிற்
பசுக்கட லைவனைப் பற்றி விடாவே 2193

இ-ம் – எனின், உயிர்கள் மலம் நீங்கி யுய்தலைப் பிறிது மொழிதல் அணிவகையால் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள் ; பசுக்கள் பலநிறம். ஆயினும் அவற்றின் பால் வெண்மையாகிய ஒரே நிறம். அப்பசுக்களை மேய்க்கின்ற ஆயனும் ஒரே வண்ணமாவன். அவ் வாயன் மேய்க்குங்கோலைக் கீழே போட்டால் பசுக்கள் அவனைச் சூழ்ந்து கொண்டு விட்டகலா என்றவாறு.

மலவேறுபாட்டால் பசுக்கள் வேறு தன்மைய வாயினும், பந்தப்பட்ட அறிவு ஒரு தன்மையாம். பசு பதியாகிய தலைவன் என்றும் ஒருவண்ணன். அவன் உயிர்களைப் பிறவியுட் செலுத்தி வினைகளை நுகர்த்தும் முயற்சியை விட்டால் உயிர்கள் தம் தலைவனைப் பற்றித் தாடலைபோல அடங்கி நிற்கும் என்பதாம்.

மூலன் செயலற்றுக் கோல்போட்டு உடலைக் கிடத்திய காலத்துச் சிவயோகியார் கண்ட காட்சியைக் கொண்டு, இறைவன் மலகன்மங்களைப் பிணித்துப் பிறவியுட் டள்ளுதலாகிய முயற்சிக் கோலைப் போட்டபோது ஆன்மா தலைவனையே பற்றி நிற்குமாற்றிற்கு இணைத்து உணர்த்தியதாகக் கொள்ளலாம். (72)

**உடலிந் தியமன மொண்புத்தி சித்தம்**
**அடலொன் றகந்தை யறியாமை மன்னிக்**
**கெடுமவ் வுயிர்மயல் மேலுங் கிளைத்தால்**
**அடைவது தானேழ் நரகத்து ளாயே.** 2194

இ-ம் - எனின், உயிர் மயலுட்படின் மறுமையில் நரகெய்தும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எடுத்த தேகத்தின் கண்ணே, ஐம்பொறிகளும், மனம் புத்தி சித்தம் அகங்காரம் அறியாமை இவைகளும் நிறைந்து அழிகிற உயிர் மேலும் மயக்கம் விளைய இடந்தருமாயின், அவ்வுயிர் ஏழு நரகத்துள் அகப்பட்டு இடருறும் என்றவாறு.

பொறி புலன்களுக்கு வயப்பட்ட உயிர் மேலும் மயக்கத்துள் சிக்குமாயின் ஏழு நரகத்துள் வீழ்ந்து வருந்தும் என்பது கருத்து.

இந்திரியம் இந்தியமாயிற்று. இருவகை இந்திரியங்களையும் கொள்க. ஒண்புத்தி – அறிவு விளக்கம் தருவதாய புத்தி. அடல் – வலி. காரியோபாதி ஏழும் வந்ததற்கு மேற்கோளாகக் காட்டுகிறது ஞானாவரண விளக்கம். ( பக் 106 ) (73)

தற்றெரி யாதவ தீதந்தற் காணவஞ்
சொற்றெரி கின்ற துரியஞ்சொற் காமியம்
பெற்ற சுழுத்திப்பின் பேசுறுங் காதலா
மற்றது வுண்டிக் கனாநன வாதலே. 2195

இ‌ம் – எனின், ஐந்தவத்தைகளில் துரியாதீதம் துரியம் சுழுத்தி என்ற மூன்றும் வினைநுகர்ச்சிக்கு ஏதுவாம் என்பதும் பின்னிரண்டும் வினைநுகர்ச்சியாம் என்பதும் அறிவித்தல் நுதலிற்று.

இ – ள்: உயிர் ஆணவத்தோடு கூடித் தன்னையும் அறியாத நிலை துரியாதீதமாம். சொல்வோனாகிய தன்னைத் தெரிகின்ற துரியநிலை சொல்லப்பட்ட கன்மத்தோடு கூடிய நிலையாம். பின்பு பேசப்படுகின்ற மாயையோடு பொருந்திய நிலை அடைந்த சுழுத்தி நிலையாம். ஏனையவாகிய கனவும் நனவும் கன்மங்களின் நுகர்ச்சியாம் என்றவாறு.

ஐந்தவத்தைகளில் துரியாதீதம் ஆன்மா மலத்தொடு கூடிய அறியாதநிலை. துரியநிலை ஆணவ வலி கெடுதற்காகச் சீவன் கன்மத்தொடு பொருத்திய நிலையாம். வினைகட்கு ஆதாரமாய, வினைப்பயனை நுகர்த்தும் மாயையொடு சேர்ந்த நிலை சுழுத்தியாம். இம்மூன்றும் வினை நுகர்வுக்கு ஏதுவாவனவன்றி நுகர்வாகாமையானும், மற்றைய கனவும் நனவும் வினைப்பயனில் வலியவற்றையும் மெலியவற்றையும் நுகர்த்துதலானும் அவை நுகர்வு நிலையாம் என்பது.

தற்கு – தனக்கு. காதல் – காரியவாகுபெயராய் அதனைத் தோற்றுவிக்கும் மாயையையுணர்த்திற்று.
(74)

நனவிற் கனவில்லை யைந்து நனவிற்
கனவிலாச் சூக்குமங் காணுஞ் சுழுத்தி
தனலுண் பகுதியே தற்கூட்டு மாயை
நனவிற் றுரிய மதீதந் தலைவந்தே. 2196

இ-ம் - எனின், நின்மல நனவு முதலியவற்றுள் தொழிற்படுங் கருவிகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: நனவில் கனவு இல்லை ஆதலான் அந்நனவின்கண் சிவதத்துவம் ஐந்தும் காரியப்படும். கனவேயில்லாத நன்றாக அழுந்திய உறக்கமாகிய சுழுத்தியில் நுண்கருவிகளான காரண தத்துவங்கள் தொழிற்படும். தன்னோடு கூட்டப்பெறுகின்ற சுத்த மாயையுடனிருத்தல் தன்னுடைய சுழுத்தியினும் நல்ல பகுதியாம்.

நின்மல சாக்கிரத்துச் சொப்பனம் இல்லை; ஆகையால் அந்நனவில் சிவதத்துவம் ஐந்தும் தொழிற்படும். இதனையே சிவஞானசித்தியார் "ஐந்துசாக்கிரத்தின்" என்றது.

கனவில்லாச்சூக்குமம் - சிவதத்துவம் ஐந்தும் அறிவனுபவமாய்ச் சுத்தமாயாகாரியமாய் நுண்ணிய கருவியாய் விளங்கலின் அதனைக் கனவு இல்லாச் சூக்குமம் என்றார்.

தற்கூட்டும்மாயை - இறைவனால் ஆணவ வலியை வாட்டுதற்காகக் கூட்டப் பெறுகிற சுத்த மாயை. தனது சுழுத்தி நிலையினும் நல்லதாக அனுபவிக்கப்படும் பகுதியான துரியமாம் என்றவாறு. ஈண்டுச் சத்தி தத்துவத்தை மாயை என்றது.

இவ்வைந்தினும் வேறாகத் தன்னை யுணர்தலே அதீதமாம் என்க. முன்மந்திரத்து 'தற்றெரியாத அதீதந்தற் காணவம்' என்றதும் இக்கருத்தேபற்றி என்க. அங்ஙனமே ஏனையவும் மலபரிபாகத்தின் பொருட்டு மாயை கூடிக் காரியப்படுதல் துரியம். நுண்கருவிகளான சுத்தமாயாகாரிய சிவதத்துவங்கள் காரியப் படுதல் சுழுத்தி என்க.

ஆகவே நின்மலாவத்தையில் கனவு இல்லை என்பதை விளக்கியவாறு. (75)

ஆறு நிலையைந் தகல நனாநனா
வாறு மவைவிட வாகு நனாக்கன
வேறுனா வைந்தும் விடவே நனாவினில்
ஈறுஞ் சுழுனை யிதின்மாயை தானே. 2197

இம் – எனின், ஒவ்வோரவத்தையினும் கழியும் தத்துவங்கள் இவை என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: முப்பத்தாறு தத்துவங்களில் ஆன்ம தத்துவம் இருபத்துநான்கும் புருட தத்துவம் ஒன்றும் நீங்கப்பெறுதல் நின்மலசாக்கிரம். வித்யா தத்துவங்களில் புருடனீங்க நின்ற ஏனைய ஆறும் கழலுதல் நின்மல சாக்கிரத்துச் சொப்பனம். தனித்த சிவ தத்துவம் ஐந்தும் கழலல் நின்மல சாக்கிரத்துச் சுழுத்தியாம். இதில் சுத்தமாயை ஒன்றே உயிருடன் கூடி ஆணவ மலத்தைப் பரிபாகப்படுத்துவது என்றவாறு.

ஆகவே நின்மலநனவில் நனவுநிலையில் காரியப் படுவன வித்தியாதத்துவத்தில் அவித்தை விந்தை கலை

நியதி காலம் மாயை என்னும் ஆறும். சிவதத்துவங்களாகிய சுத்தவித்யை ஈச்சுரம் சாதாக்யம் விந்து நாதம் என்ற ஐந்தும் ஆகப் பதினொன்றுமேயாம். அந்த நின்மலநனவிற் கனுநிலையில் சிவதத்துவம் ஆறே காரியப்படும். நனவிற்சுழுத்தி அவைகளும் நீங்க மாயை மட்டும் காரியப்படும் என்றவாறும். இதனால் சகல சாக்கிரத்துக்கும் நின்மலசாக்கிரத்திற்கும் உள்ள வேறுபாடு தெளிவுறும். இங்ஙனமே ஏனைய நிலைகட்கும் என்க.

இங்ஙனம் காரியமான தத்துவங்கள் கழிதல் நின்மல நனவாதி யவத்தை. எனவே காரணமின்மையுங் கருதப்படும் எனக்கூறி ஞானவரண விளக்கம் இந்த மந்திரத்தை மேற்கோள் காட்டுதலானும் காரணமுங் கழிதலே நின்மல நிலைகள் என்றவாறறிக. ( பக் 129. 141 ) (76)

மாயையில் வந்த புருடன் றுரியத்தில்
ஆய முறைவிட் டதுவுந்தா னன்றுகிச்
சேய கேவல விந்துடன் சென்றக்கால்
ஆய தனுவின் பயனில்லை யாகுமே. 2198

இம் – எனின், அதீதநிலையில் உடலும் பயனின்றி கழிதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : முன்திருமந்திரத்திற் கூறியபடி சுழுத்தி நிலையில் மாயை ஒன்றோடுமட்டும் கூடிய ஆன்மா, துரிய நிலையில் மாயையோடு கூடிநிற்கும் அந்தமுறையினின்றும் நீங்கி, அம்மாயையும் தானன்று என உணர்ந்து எட்டாத கேவலாவத்தையில் உள்ள விந்து

வோடுகூட முயன்றக்கால் மாயாகாரியமான இந்த உடம்பால் ஒருபயனும் இல்லையாகும் என்றவாறு.

ஆன்மா காரியமாயை. காரணமாயை இவற்றி னீங்கி விந்து சக்தியோடுகூடின் இவ்வுடலனுபவ மாகிய வினைவிளைத்தலும் நுகர்தலும்கூட இல்லையாம் என்பது கருத்து.

மாயையில் வந்த புருடன் – மாயையோடு வந்த ஆன்மா என உடனிகழச்சிப் பொருளில் வந்த வேற் றுமைப்பொருண் மயக்கம். கீழ்மந்திரத்தில் சுழுத்தி வரையுள்ள அனுபவங் கூறிப்போந்தமையின் ஈண்டு அதன்மேலதாகிய துரியங்கூறத் தொடங்கினர் என்க.

ஆயமுறை – அங்ஙனம் மாயையோடு கூடிய முறை, அது என்றது, அம்மாயையை, தான் அன்றுதல் – மாயை தானல்லன் என உணர்ந்த தத்துவசுத்தி.

சேய கேவல விந்து – காரணமாயை. அது எட்டாததாய்ப் புலனுணர்வு ஒன்றற்கே யுரியதாய்த் தனித்திருத்தலின் இங்ஙனம் அடைகொடுத்து ஓதினர் என்க.

ஆய – மாயையின் காரியமான. தனுவின் பயன்– வினைப்போகங்களை நுகர்தலும், வினை விளைத்தலு மாகிய இருவகைப்பயன். (77)

அதீதத் துரியத் தறிவனு மான்மா
அதீதத் துரிய மதனுற் புரிந்தால்
அதீதத் தெழுந்தறி வாகிய மானன்
முதிய வனலிற் றுரியத்து முற்றுமே. 2199

இ-ம் - எனின், நின்மல துரியாதீத அநுபவம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : துரியாதீதநிலையில் ஞானசொரூபியாய் நிற்கும் உயிர் அந்நிலையில் திருவருளே துணையாகக் கொண்டு நிலைக்கப்பெறின், அக்கடந்த நிலையில் ஞானமே உருவாகி இயமானனாகிய மிகமிகப்பழைமை யான தீயிற் சேர்ந்து, ஒளியுடன் கலந்த ஒளியாய் விளங்கும் என்றவாறு.

நின்மலத் துரிய நிலையில் கேவல விந்துவுடன் கூடிய ஆன்மா துரியாதீத நிலையில் அதனையும் கழன்று அறிவே வடிவாய்ப் பேரொளிப்பிழம்பில் கலந்து இன்புறும் என்பதாம்.

ஆன்மா புரிந்தால் அதீதத்து எழுந்து அறிவாகி யமானன் முதிய அனலில் துரியத்து முற்றும் ஆம் எனக் கூட்டிப்பொருள் கொள்க.

மானன் எனக்கொண்டு மகத்தோடு கூடிய ஆன்மா எனப்பொருள் கொண்டு இடர்ப்படுவாரும் உளர். நின்மல நிலையில் மானாங்கார மின்மையின் அப் பொருள் சிறவாது எனச் சிந்திக்க. இயமானன் - சிவம். உயிர்களை இங்ஙனம் நடத்தித் திருவருளொடு கூட்டிச் சிவஞானம் பெறவைக்கும் முதல்வன் என்றபடி. (78)

**ஐயைந்து பத்துட னாது சாக்கிரங்**
**கைகண்ட வையஞ்சிற் கண்டங் கனவென்பர்**
**பொய்கண்ட மூவர் புருடன் சுழுனையின்**
**மெய்கண்ட வனுந்தி மேவ லிருவரே. 2200**

இ-ம் - எனின், பிண்டும் விளங்கவைத்தல் காரணமாகச் சகலநிலையின் அவத்தைகளை அறிவித்தல் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : முப்பத்தைந்து தத்துவங்களுடன் புருடன் கூடியது சாக்கிரமாம். கண்டத்தானத்து இருபத்தைந்துடன் பயில்வது கனு என்பர். நிலையாத மூன்று தத்துவங்களோடு புருடன் விளங்குவது சுழுத்தி. உண்மையை யாராய்ந்த ஆன்மா பிராண னுடன் உந்திக்கமலத்து ஒடுங்குதல் துரியம் என்றவாறு.

கருத்து வெளிப்படை.

முப்பத்தைந்து என்றது கருவிகளை மட்டும் என்க. ஆன்மாவாகிய புருடனைக் கூட்டின் முப்பத் தாறும். கைகண்ட - பழகிய. (79)

புரியட் டகமே பொருந்தல் நனவு
புரியட் டகந்தனின் மூன்று கனவு
புரியட் டகத்தி லிரண்டு சுழுத்தி
புரியட் டகதொன்று புக்க துரியமே. 2201

இ-ம் - எனின், புரியட்டக சரீரத்தைவைத்துக் கனவில் நனவாதிகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : புரியட்டக உடலுடன் உயிர்பொருந்தல் நனவாம். மனம், அகங்காரம், புத்தி என்ற மூன்றும் தொழிற்படும்நிலை கனவாம். அகங்காரமும் புத்தியும் தொழிற்படும் நிலை சுழுத்தியாம். அகங்காரமட்டும் தொழிற்படும் நிலை துரியமாம்.

கருத்து வெளிப்படை

புரியட்டக உடலாவது சத்த பரிச ரூப ரச கந்த மாகிற தன்மாத்திரைகள் ஐந்தும், மனம் புத்தி அகங்காரம் என்னும் அந்தக்கரணங்கள் மூன்றும் கூடிய நுண்ணுடல். இதில் சீவன் பொருந்துவது கனவில் நனவாம்.

தன்மாத்திரை ஐந்தும் அடங்க, மனம் புத்தி அகங்காரம் என்ற மூன்று உட்கரணங்கள் காரியப்படும் அவத்தை கனவிற் கனவாம்.

புத்தியும் அகங்காரமும் காரியப்படுவது கனவிற் சுழுத்தியாம்.

அகங்காரம் மட்டும் உயிரோடிருந்து காரியப்படு நிலை கனவில் துரியமாம். நான்கு கூறவே, பாரிசேட அளவையான், அகங்காரமும் அடங்க, உயிர் தனித்திருக்கும் நிலை அதீதம் என்க. புகல் என்பது புக்கல் என விரித்தல் விகாரம் பெற்றது. (80)

**நனவி னனவு புலனில் வழக்கம்**
**நனவிற் கனவு நினைத்தன் மறத்தல்**
**நனவிற் சுழுனையுண் ணுடலிலாமை**
**நனவிற் றுரிய மதீதத்து நந்தியே.** 2202

இ-ள்: எனின், நனவில் நனவாதிகளைத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: நனவில் நனவாவது தன்மாத்திரைகள் அடங்கிய நிலையாம், நனவில் கனவாவது நினைத்தலாம். நினைக்கும் மனத்தையும் மறந்துவிடுதல் நனவில் சுழுத்தியாம். மனத்துள் ஆராயும் தன்மையும்

அற்று அடங்கல் நனவில் துரியமாம். சிவமாக இருத்தல் துரியாதீதமாம் என்றவாறு.

நனவில் நனவு ஐம்புலனெடுக்கம். நனவில் கனவு மனத்தின் தொழிலாகிய நினைத்தல். நனவில் சுழுத்தி நினைப்பையும் இழத்தல். நனவில் துரியம் உயிர்ப்பு அடங்கல். நனவில் துரியாதீதம் உயிர் தன் தன்மை யின்றிச் சிவத்தோடு ஒன்றியிருத்தல் என்பதாம். (81)

கனவி னனவுபோற் காண்ட னனவாங்
கனவினிற் கண்டு மறத்தல் கனவாங்
கனவிற் சுழுத்தியுங் காணாமை காணல்
அனுமாதி செய்த லிலான துரியமே. 2203

இம் – எனின், கனவில் நனவாதி அவத்தைகளை விளக்கி உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : கனவில் நனவுபோலக் காண்பது கனவில் நனவாம். கனவில் கண்டு அவைகளை மறத்தல் கனவிற்கனவாம். ஒன்றையுங் காணாதிருத்தல் கனவிற் சுழுத்தியாம். கண்டவற்றை அனுமானித்தல் கனவில் துரியமாம் என்றவாறு.

இத்துடன் உரையிற்கோடலான் உயிர்ப்படங்கலாகிய அதீதமும் கொள்க. அஃதாவது அனுமானித்தலும் இன்றியிருத்தல். (82)

சுழுத்தி நனவொன்றுந் தோன்றாமை தோன்றல்
சுழுத்தி கனவத னுண்மை சுழுத்தியிற்
சுழுத்தி யறிவறி வாலே யழிகை
சுழுத்தித் துரியமாஞ் சொல்லறும் பாழே. 2204

இ-ம் - எனின், சுழுத்தியில் நனவு முதலிய அவத்தைகளின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சுழுத்தியில் நனவாவது ஒன்றும் தோன்றாதுறங்கல். சுழுத்தியிற் கனவாவது உயிராகிய தன் உண்மைமட்டும் தோன்ற நிற்றல். சுழுத்தியிற் சுழுத்தியாவது அறிவு அறிவாலே அழிதலாம். சுழுத்தியில் துரியமாவது சொல்லற்ற அதாவது சொல்ல முடியாத சூனியநிலையாம் என்றவாறு.

அதன் என்றது ஆன்மாவை. (83)

துரிய நனவா மிதமுரை போதந்
துரியக் கனவா மகமுணர் போதந்
துரியச் சுழுத்தி வியோமந் துரியந்
துரியம் பரமெனத் தோன்றிடுந் தானே. 2205

இ-ம் - எனின், துரிய நனவாதியவற்றின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : துரிய நனவாகிய பரசாக்கிரம் காரண மாயோபாதிகளால் சர்வஞ்ஞத்வாதி ஏழும் நிகழாநின்ற நிலையாம். பரசொப்பனம் அவைமடங்க தன்னை யுணரும் அறிவு நிலையாம். பரசுழுத்தி வியோம் வடிவாய் விளங்குதல். பரதுரியம் அனைத்தையும் பரமாகக்காணல் என்றவாறு.

துரியம் என்பது முன்னைய நிலைகளில் ஒன்றை உணர்த்தாது ஈண்டு சகல கேவல சுத்தமென்ற மூன்று அவத்தைக்கும் மேலதாகிய பராவஸ்தையை உணர்த் தியதாகலின் பரசாக்கிரம், பரசொப்பனம் பரசுழுத்தி பரதுரியம் எனக்கொள்க.

இதன் கருத்து பராவத்தையில் சாக்கிரமாவது, எது உயிர்க்கு நிலைத்த இன்பமளிப்பது என்றதை உணரக் கூடிய எல்லாமறிதலாகிய ஏழு குணங்களுடன் கூடிய நிலை. பரசொப்பணம், அவ்வேழும் அடங்கத் தன்னை மட்டும் உணரும் நிலை. ( அதாவது ஆன்மதரிசனம் செய்யும் நிலை ) பரசுழுத்தி தான் ஒரு வடிவினன்றி வியோமரூபி யாதல். பர துரியம் எல்லாம் சிவமயம் எனக்காண்கை என்பதாம்.

இவ்விளக்கம், ஞாநாவரண பாஷ்யத்தில் நவாவத்தைகளைக் கூறுமிடத்து.

जाग्रतुर्यं चतुर्थं च तत्कालपर पञ्चमम् ।
परव्योमंतु षष्टं च परावस्थातु सप्तमम् ॥
विश्वग्रासाष्टमं चैव उपशान्तो नवमंतथा ।
शिवभ्रष्टा दशमं चैव वाच्यावस्था समीरिता ॥

என்றதன்பின், இவ்வாறு திருமந்திரத்தினும் " துரிய நனவாம் " என்ற இம் மந்திரத்தை எடுத்துக்காட்டி, தத்வாமிருத நூலில் வரும் பரவியோமத்தியல்பைக் கூறி ' சீவதுரியத்தில் சான்றாயிருந்த போதமே காரணமாயோபாதிகளாற் சர்வஞ்ஞத்துவாதி ஏழும் நிகழநின்ற இடம் பரசாக்கிரம். அவை ஒடுங்க நின்ற இடம் பரசொப்பனம். அந்த அசைவுமற ஒடுங்குதல் சுழுத்தி எனக் கூறுதலானும் பரிபூரணசித்தியில்,

'சான்றென விரிந்தபோதம் சாக்கிரந்தான் ... ...
தோன்றுகருன் மழுங்கல் சொப்பனம் சொன்ன வித்தில்
ஊன்றிய அசைவுதீர ஒடுங்குதல் சுழுத்தியிந்த
மூன்றுமே பரனவத்தை யெனமொழிந் திடுவர்மேலோர்

எனக் கூறப்பட்டிருத்தலானும் இம்மந்திரங் கூறுவன பராவத்தையாதல் தெளிக. இஃதறியாதார். ' தான் கண்டனைத் திவ்வுலகு ' என்றுங்குத் தாம் தாம் கண்ட அளவில் வாளா உரை கூறி மலைவு தருவாராயினர். அவ்வளவில் அவர் மகிழ்க. (84)

அறிவறி கின்ற வறிவு நனவாம்
அறிவறி யாமை யடையக் கனவாம்
அறிவறி யவ்வறி யாமை சுழுத்தி
அறிவறி வாகு மான துரியமே. 2206

இம் – எனின், ஐந்தாவதாகிய காலபரசாக்கிராதி களின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சிவபெருமானுடைய முற்றறிவின்கண் அடங்கிநின்று அறிகின்றநிலை ஞானசாக்கிரமாகிய காலபரசாக்கிரமாம். அங்ஙனம் அறிகின்ற அறிவு அறிகின்றேம் என்ற உணர்வுமடங்கி அறியாமையாய் அடங்கியநிலை அறிவுக்கனவாம், ஆன்ம அறிவு சிவ அறிவாலறிய அதனுள் அடங்க அதுவேயாய்த் தன்னை மறத்தல் ஞானசுழுத்தியாம். தன்னறிவு இறையறி வாதல் ஞானதுரியமாம் என்றவாறு.

ஞானநனவு, ஞானக்கனவு, ஞானவுறக்கம். ஞானத்துரியம் என்பன தன்னறிவு சிவனறிவில் அடங்கியதாக அறிதலும், தன் அறிவு அங்ஙனம் அடங்கி, அடங்கினேம் என்ற உணர்வையும் இழந்த நிலையும் தற்போதம் சிவபோதமாகவே விளங்குதலும், பரமாகிய சிவதரிசனம் பெறுதலும் ஆம் என்க.

ஞானதுரியமே எனப் பாடங்கொண்டு பரமான துரியம் என ஒருசொல் வருவித்துரைத்தலும் உண்டு. திருமூலதேவர் ஞானசித்தி முதலிய ஆகமங்களை ஆதாரமாகக்கொண்டு ஞானவத்தையிலும் நனவாதிகள் உண்டென்னும் நுணுக்கம் கூறுவதை முன்னும் பின்னுமுள்ள மந்திரங்களால் தெரியலாம். ஆதலால் ஞானநனவாதி கூறியனவேயாதல் வேண்டும். இதனை ஞானவரண விளக்கம்கொண்டு தெளிக, எல்லாவற்றிற்கும் மேற்கோள்காட்டல் இயலாமையின் விரிவஞ்சி விடுத்தனம் என்க. (85)

> தானெங்கு மாயவ னைம்மலத் தான்விட்டு
> ஞானத்த னதுரு வாகி நயந்தபின்
> தானெங்கு மாய்நெறி நின்றது தான்விட்டு
> மேனந்தச் சூக்க மவைவன்ன மேலிட்டே. 2207

இம் – எனின், பரவியோமாவத்தையின் நனவாதி நான்கையும் ஒரு தொடராக்கூறுதல் நுதலிற்று.

இ – ள் : பராகாயம் போலத் தான் எங்கும் வியாபகமாக இருக்கின்ற ஆன்மா அங்ஙனம் வியாபகத் தன்மைக்குத் தடையாக இருந்த ஐம்மலங்களையும் விட்டு, ஞானமே தன் உண்மைவடிவாகி, அதனை விரும்பியபின், தான் எங்கும் வியாபகமாய் நிற்கும் நெறியை உணர்ந்து, அந்த மலச்சேர்க்கையாலான பண்டைய பெத்தநிலை நீங்கி, மேற்பொருந்தக்கூடிய நுண்மைத் தன்மையைப் பெற்று மேலாக விளங்கும் என்றவாறு.

ஆன்மா மலங்களினீங்கி, ஞானமே வடிவாய், ஞானத்தை விரும்பி, அதனால் வியாபகமாய், பழைய பெத்தநிலை கழன்று நுண்மையான முத்தநிலையில் விளங்கும் என்பது கருத்து.

இம்மந்திரத்து இவை இன்ன அவத்தையின் இயல்பு எனக் கூறுவிடினும், உய்த்துணரவைப்பு என்னும் உத்தியால் அதிகாரம் பற்றி, மலங்களை விடுதல் வியோம சாக்கிரம், ஞானத்தை விரும்பல் வியோம சொப்பனம், எங்குமாதல் வியோம சுழுத்தி, சூக்கமாய் பரத்தின் தன்மையாதல் வியோம துரியம் என, மலம்விட்டு, உருவாகி, எங்குமாய், வன்னமே விட்டு சூக்கமவை மேல்நந்த விளங்கும் என்பன வாதிய வினைகளான் விளங்கவைத்தவாறு உணர்க.

(86)

ஐயைந்து மாறுமோ ரைந்து நனவினில்
எய்யு நனவு கனவு சுழுத்தியா
மெய்யும்பின் சூக்கம மெய்ப்பகுதி மாயை
ஐயமுந் தானவ னத்துரி யத்தனே. 2208

இம் – எனின், இதுவும் நனவில் நனவாதிய அவத்தைகளின் இயல்புணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : நனவில் எய்திய நனவு இருபத்தைந்து தத்துவங்களுடன் தொழிற்படும் அவத்தையாம். நனவிலெய்திய கனவு புருடன் நீங்கி வித்யாதத்துவம் ஆறுடன் கூடித் தொழிற்படும் நிலையாம். நனவில் சுழுத்தி சிவதத்துவம் ஐந்தோடும்கூடித் தொழிற்படும் அவத்தையாம். அதற்குரிய மெய்களாவன முறையே தூலமும், சூக்குமமும், மூலப்பிரகிருதியும் ஆவன.

அந்த நனவில் துரியம்பெற்ருேன் மாயையிற்றலைமை பெற்றதையுடையோன் என்றவாறு.

நனவில் நனவிற்குத் தத்துவம் இருபத்தைந்து மெய் தூலம். நனவில் கனவுக்குத் தத்துவம் ஆறு. உடல் சூக்குமம். நனவில் சுழுத்திக்குத் தத்துவம் ஐந்து. உடல் மூலப்பிரகிருதி. நனவில் துரியத்திற்குத் தத்துவம் சுத்தமாயை, அதுவே உடல் என்பதாம்.

மெய் – தூலமெய். பின் மெய் சூக்கம் எனக் கூட்டுக. மெய்ப்பகுதி – மூலப்பிரகிருதி. அத்துரியத்தன் எனச் சுட்டியது நனவில் துரியத்தான் என்பதைக் குறிக்க. ஐயம்மூந்தான மாயை – தலைமையை முதலாகக்கொண்ட மாயை சுத்தமாயை என்க.

ஐயம் – தலைமை. ஐ – தலைமை. அம் பண்புப் பெயர் விகுதி. சாரியையுமாம், மாயை ஐ மூந்து ஆனவன் – தலைமையாய மாயையை யுடையவன் என்க.

ஞானுவரணவிளக்கத்து. 'ஐயைந்தும் ஆறு மோர்' .........துரியத்தனே, எனவருதலான் உபாதி முப்பத்தாறும் வைத்துக் கழிக்கவேண்டும் என்பர் நிராமயதேவர் முதலியோர் – எனக்கூறுமாற்ருனும் தெளிக. (பக்கம் 127) (87)

ஈதென் றறிந்தில னித்தனை காலமும்
ஈதென் றறிந்தபி னேது மறிந்திலேன்
ஈதென் றறியு மறிவை யறிந்தபின்
ஈதென் றறியு மியல்புடை யோனே. 2209

இ-ம் – எனின், தம்மனுபவங்கூறி உலகர்க்கு உண்மையை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: இவ்வுடம்போடு கூடியுழன்ற இவ்வளவு காலமும் நம்மை யியக்குவது இது என்பதை யறிந்திலேன்; அதனையறிந்தபின் இயக்கும் கர்த்தாவை யன்றி வேறொன்றையும் அறியேன்; இதுதான் முதல் என்று அறிவிக்கும் அறிவுருவாகிய சிவத்தை யறிந்த பின் இதுதான் நாமடையும் புகலிடம் என்றறியும் இயல்பையுடையேன் ஆயினேன் என்றவாறு.

உடம்பொடு கூடியுலகினில் பொறியின்பங்களைத் துய்த்துழன்ற காலத்து இது முதற்பொருள்; இயக்குங்கர்த்தா என்பதனை யறியாதிருந்தேன். அதனை யறிந்தபின் அடைக்கலத்தானம் இதுவே எனத் தெளிந்தேன். அத்தெளிவே அடியேனியல்பாயிற்று என்பதாம். " புள்ளிருக்கு வேளூரானைப் போற்றாதே யாற்ற நாள் போக்கினேனே " என்புழிப்போல இத்தனை காலமும் ஈதென்று அறிந்திலன் எனக் கழிந்தமைக்கு இரங்குதல்.

' அறிந்தபின் ஏதும் அறிந்திலேன் ' என்றது பேறு கண்டு வியத்தல்.

அறிவை யறிந்தபின் ஈதென்றறியும் இயல்புடையேன் ஆயினேன் என்பது ஆனந்தத்து அழுந்தல் இங்ஙனம் காண்க.

ஈது என்று அறியும் அறிவை – இதுவென்று சுட்டிக்காட்டி அறிவிக்கும் அறிவுருவான கடவுளை என்க. இயல்புடையேன் ஆயினேன் என ஒருசொல் வருவித்து முடிக்க.

இம்மந்திரம் தந்நிலை கூறுவார்போன்று உலகர்க் குணர்த்தியதாம் என்க. (88)

உயிர்க்குயி ராகி யுருவா யருவாய்
அயற்புணர் வாகி யறிவாய்ச் செறிவாய்
நயப்புறு சத்தியு நாத னுலகாதி
இயற்பின்றி யெல்லா மிருண்மூட மாமே. 2210

இம் – எனின், சிவபெருமான் உயிர்களுடன் கலந்தும் கடந்தும் உடனுயும் இருக்கும் நிலைகளை, உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; சிவபரம்பொருள் உயிருக்கு உயிராகி ஒன்ருயும், உருவாயும் அருவாயும் அயலாகப்புணர்ந்த பொருளாயும். அறிவாயும், எங்கும் நிறைந்த பொருளாயும், சிவத்தை விரும்புகிற சக்தியும் நாதனுமாயும் இருந்து உலகம் உடல் கருவிகளை இயக்காதொழியின் அவை அனைத்தும் அஞ்ஞானத்தால் மூடமாகவே முடியும் என்றவாறு.

சிவம் அனைத்துலகிலும் கலந்தும் கடந்தும் உடனுயும் உருவாய் அருவாய் அறிவாய்ச் செறிவாய் அனைத்தையும் இயக்காதொழியின் எல்லாம் மல இருள் மூடி மூடமாம் என்பதாம். உயிருக்குயிராய் என்றது எல்லா உயிர்களுடனும் கலந்தநிலை. அயல்புணர்வாகி என்பது வேருன நிலை. அறிவாய், செறிவாய் என்பன உடனுயநிலை.

நயப்புறு சத்தி – சிவகாமி. நாதன் நடனநாதன். இயற்பு – இயலுதல். பு. தொழிற்பெயர் விகுதி. இயற்

பின்றி - அவற்ேறாடு தானியங்கி அவற்றை இயக்கா விடின் என்க. காணுமா காணுதலும், நுகருமா நுகருதலும் இறைவனுடைய கருணைச் செயலா தலின் இங்ஙனம் கூறினார். உலகாதி – தநு கரண புவன போகங்களை என்றபடி. ஒழியின் என ஒரு வினை எச்சம் வருவித் தியைக்க. (89)

சத்தி யிராகத்திற் றனல் லுயிராகி
ஒத்துறு பாச மலமைந்தோ டாருறு
தத்துவ பேதஞ் சமைத்துக் கருவியும்
வைத்தன னீசன் மலமறு மாறே. 2211

இம் – எனின், இறைவன் தத்துவ தாத்துவிகங் களை உயிர்களுக்குக் கூட்டி மலபரிபாகம் வருவித்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஈசன் அநாதியே ஆன்மாக்களைப்பற்றிய மலவன்மை நீங்கும்வண்ணம், சத்தியின்மேல் வைத்த ஆசையால் தான் அவளுக்கு உயிராகி நின்று, ஆன்மாக்கள் என்றோ, அன்றே ஒத்து உண்டான பாசத்தோடு, மலம் ஐந்தெனநின்றமையால் அவற் றையும், முப்பத்தாறுதத்துவங்களின் பேதங்களையும் படைத்து அவற்றை நுகர்தற்கேற்ற அகக்கருவி புறக்கருவிகளையும் உயிரோடு கூடவைத்தனன் என்றவாறு,

சிவம் மலபரிபாகத்தின் பொருட்டு மலங்களையும் தத்துவங்களையும் கருவிகளையும் படைத்து உதவினன் என்பதாம்.

உயிர்கட்குத் தனு கரணாதி உதவுதலாகிய சிருட்டி யுன்முகரான சிவம் சத்தியைக்கலக்க

அக்கலக்குண்ட பாகத்திலிருந்துமாயையும் மாயேயங்களும் தோன்றுமாதலின் ' சத்தி இராகத்தின் தான் நல்லுயிராகி ' என்றார்.

ஒத்துறுபாசம் — அநாதியே உயிரோடு ஒத்துற்ற மூலமலம் என்க. பாசமோடு மலம் ஐந்தென ஓடுவைப் பிரித்துக்கூட்டி மூலமலத்தோடு கூட ஐந்தான மலம் எனப் பொருள்கொள்க. தத்துவங்களையும் அவற்றின் பேதங்களையும் என உம்மைத் தொகையாகக்கொள்க. கருவி — அகக்கருவி புறக் கருவியாகிய இருவகைக் கருவிகளையும். அங்ஙனம் அமைத்தலால் ஈசன் வெறு வினை செய்வானல்லன். ஆன்மாக்கள் மலம்நீங்கி உய்யவேண்டும். என்ற பெருங்கருணையிலேயே என்பார் மலம் அறுமாறே வைத்தனன் என்றார். (90)

சாக்கிரா தீதத்தி லாணவந் தன்னுண்மை
சாக்கிரா தீதத் துரியத்திற் றுனுறல்
சாக்கிரா தீதத்தி லாணவந் தான்விடாச்
சாக்கிரா தீதம் பரனுண்மை தங்குமே. 2212

இம் — எனின், சாக்கிராதீத நிலையினை உணர்த் துதல் நுதலிற்று.

இ — ள் : சாக்கிராதீதத்தில் ஆணவமலமும் உயிராகிய தானும் உளனுதலாம் ; சாக்கிராதீதத்துரிய நிலையில் ஆன்மாவாகிய தன் உண்மையுணர்தலாம். சாக்கிராதீதத்தில் உள்ள ஆணவத்தைவிட்டுத் திருவருள் துணைபுரியச் சிவரூபங்கண்டு அதில் ஆன்மா தங்கும் என்றவாறு.

சாக்கிராதீதத்தில் உள்ள ஆணவவலி குன்ற உயிர் சிவனருளில் தங்கும் என்பதாம். ஆணவம் தன் உண்மை – மலமும் தானும் உண்மையை. விடா – விட்டு. (91)

**மலக்கலப் பாலே மறைந்தது சத்தி**
**மலக்கலப் பாலே மறைந்தது ஞானம்**
**மலக்கலப் பாலே மறைந்தனன் ருணு**
**மலக்கலப் பற்ருல் மதியொளி யாமே 2213**

இம் – எனின், மலக்கலப்பால் விளையுந்தீமைகளை யும் மல நீக்கத்தால் விளையும் நன்மைகளையும் உணர்த் துதல் நுதலிற்று.

இ – ள் ; அநாதியே ஆன்மாவோடு மலங்கலந் திருப்பதால் ஆன்மாவின் அறிவாற்றல் மறைந்து அறிவு மறைந்தது ; இறைவன் மறைந்தனன் ; அந்த மலக்கலப்பு செம்பிற் காளித மகன்றதுபோல அகன்ருல் அறிவொளியுண்டாம் என்றவாறு.

மலக்கலப்பால் ஆன்ம அறிவு மறைந்தது; ஆற்றல் மறைந்தது; இறைவனை அறியமுடியாத நிலை வந்தது; அது நீங்க அறிவொளியுண்டாம் என்பது.

தாணு – சிவம். நடுதறியாகிய நாதன் என்பதாம் மதி – அறிவு. (92)

**திகைக்கின்ற சிந்தையுட் சிங்கங்கண் மூன்று**
**நகைக்கின்ற நெஞ்சு ணரிக்குட்டி நான்கு**
**வகைக்கின்ற நெஞ்சினு ளானைக்கன் றைந்து**
**பகைக்கின்ற நெஞ்சுக்குப் பாலிரண் டாமே. 2214**

இம் – எனின், மனத்திலுள்ள குற்றங்களை உருவக வாயிலாக உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : செய்வதின்னதென்று அறியாது மயங்குகின்றமனத்துள் காமம். வெகுளி, மயக்கமாகிய மூன்று சிங்கங்கள் உள்ளன; விஷயங்களைச் சென்று பற்றலால் ஒளிவிடுகின்ற மனத்தில் அதையும் சேர்த்து புத்தி சித்தம் அகங்காரம் என்ற நரிக்குட்டிகள் நான்கு உள்ளன; எவற்றையும் வகை செய்து நுகர்கின்ற மனத்துள் பொறிகளாகிய ஆனைகள் ஐந்துள்ளன. மாறுபட்ட தன்மையையுடைய மனத்திற்கு இருவகையான பகுதிகள் உள என்றவாறு.

திகைக்கின்ற சிந்தை–காம வெகுளி மயக்கங்களில் ஒன்று பற்றினும் மனம் செய்வதறியாது திகைப்படையும், ஆதலின் இங்ஙனம் கூறினார். சிங்கங்கள் தாமிருக்கும் வனங்களில் எதனையும் அணுகவிடாமல் தாமே அனைத்தையும் அடக்கியாள்வது போலக் காம வெகுளி மயக்கங்கள் மூன்றும் தாம் குடிபுகுந்த மனத்துள் வேறெந்த குணமும் சாரவிடாது தகைப்பன ஆதலின் சிங்கங்களாக உருவகித்தார்.

நகைக்கின்ற நெஞ்சு - ஒளிவிடுகின்ற சிந்தை. ஏளனஞ்செய்கின்ற நெஞ்சு எனலுமாம். அந்தக்கரணங்களை நரிக்குட்டி என்றது விரகும், வலைப்படுத்தினும் தப்பியோடும் திறமும் உடைமையான் என்க. நெஞ்செனவே மனமும் அடங்கியிருக்க மீட்டும் நான்கென்றது அதனையும் உளப்படுத்திக் கூறியதாகக்கொள்க.

வகைக்கின்ற நெஞ்சு – இது மலர், இது மாதர், இது அமுதம், இது நஞ்சு, இது அழகிது என்று வகைப்படுத்தி நுகருகின்ற மனம். இங்ஙனம் வகைப் படுத்தியுணர்தல் பொறிகளால் ஆதலின் 'வகைக் கின்ற நெஞ்சுள் ஆனைகள் ஐந்துள' என்று பொறி களைச் சுட்டினார்.

நிவிருத்தி – பிரவிருத்தி, ஓடுதல் – ஒழிதல் என்பன தம்முள் மாறுபட்ட செயல்கள். இவை யிரண்டையும் ஒருங்குடையது மனம் ஆதலால் 'பகைக்கின்ற மனம்' எனப்பட்டது. பால் இரண் டாகும் எனினும் இரண்டு பால் ஆகும் என்க.

"நகைக்கின்ற நெஞ்சி னரிக்குட்டி நான்குள
அகைக்கின்ற நெஞ்சினுள் ஆனைகள் ஐந்தும்
பகைக்கின்ற நெஞ்சிற் பகையென லாமே"

எனவும் பாடம். (93)

கதறு பதினெட்டுக் கண்களும் போகச்
சிதறி யெழுந்திடுஞ் சிந்தையை நீரும்
விதறு படாமுன்ன மெய்வழி நின்றால்
அதிர வருவதோ ரானையு மாமே. 2215

இ – ம்: மனத்தைச் சிதறாமல் அடக்கினால் சிவம் வெளிப்படும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: எப்போதும் கதறித்திரியும் புரியட்டக சரீரத்தையும் வாயுக்கள் பத்தையும் கண்களாகக் கொண்டு அவற்றின் வழியாகப் புலன்களிற்சென்று பற்றிச் சிதறுண்டு செல்லும் மனத்தை நீங்கள் கெடுதி

வ்ருவதற்கு முன்னே உண்மை நெறியாகிய சைவ நெறிக்கண் உறுதிபெற நிலைபெறுத்தின் அத்தத்துவக் கூட்டங்கள் அதிர்ச்சி அடைய வரும் பசுபதியானவன் வெளிப்பட்டருளுவன் என்றவாறு.

மனத்தைப் பொறிவழி போக்காது மடக்கிச் சரியையாதி மெய்ந்நெறிக்கண் நிறுத்தின் சிவம் வெளிப்பட்டருளும் என்பது கருத்து.

புரியட்டகசரீர தத்துவங்கள் எட்டும், வாயுக்கள் பத்தும் ஆகிய பதினெட்டும் மனம் புறஞ்சென்று பற்றும் வழிகளாதலின் அவற்றைக் கண்கள் என்றார். கண் - வழி. சிதறி எழுதல் – மனம் ஒவ்வொரு தத்துவத்தோடும் கூடிக் காரியப்படும்போது அவ்வவற்றிற்குரிய வடிவாயும் குணமாயும் சிதறுண்ணுதல்.

விதறு - கேடு. எடுத்த உடலுக்கு மரண முதலான கேடுகள் வருதற்கு முன் என்க

மெய்வழி – உண்மை வழி. அவை சிவதன்மங்களாகிற சரியை கிரியை யோக ஞானங்கள். நின்றால் – ஒழுகினால்.

அவ்வொழுக்கத்தால், ஆன் + ஐ ஆம் என்க, வினைகளும், மலமும் அதிர்ச்சியுற்று நம்மைவிட்டு விலகிப் போக எழுந்தருளும் பசுபதியாகிய தலைவன் ஆவன் என்பதாம். (94)

நனவகத் தேயொரு நாலுந் துவீடக்
கனவகத் தேயுட் கரணங்க ளோடு
முனவகத் தேநின் றுதறியுள் புக்கு
நினைவகத் தின்றிச் சுழுத்திநின் றானே. 2216

இ-ம் - எனின், நனவாதிகளில் முறையே செல்லு மாறு விளக்குதல் நுதலிற்று.

இ-ள்: நனவின்கட் காரியப்படும் இருபத் தைந்து தத்துவங்களில் பொறிகளும் புலன்களுமாகிய இருபது தத்துவங்கள் புருவநடுவிலேயே விலகிப் போக, கனவின்கண் மனம் முதலிய அந்தக் கரணங்கள் நான்கோடு, முன்னிடமாகிய கழுத்தில் நின்று, அவற்றையும் உதறிவிட்டு நெஞ்சாகிய உள்ளிடத்தில் புகுந்து நினைவும் இன்றிச் சுழுத்தியவத் தையில் நின்றான் ஆன்மா எ - று.

முறையே நனவிற்காரியப்பட்ட இருபத்தைந்துள் இருபது தத்துவங்கள் நெற்றியிலே, நின்றுவிட. மீத முள்ள நான்கோடு கண்டத்தானத்தில் கனவிற்றே யும் உயிர் அங்கே நான்கொழியத் தானும் பிராணனு மாய் நெஞ்சகத்தில் நினைவின்றிச் சுழுத்தியில் நிற்பன் என்பதாம்.

நனவிலிருந்து உறக்கம்வரத் தொடங்கிய வுட னேயே உயிர் கனவிடத்தை எய்தும்போது பொறி டலன்கள் தாமே ஒடுங்கும். கனவில் மனமாதிய கருவிகள் நீண்ட நேரம் தாமே விலகா; அவற்றை உடையவன் வலிய உதறித் தள்ளவேண்டும் என்பார் 'வீட' என்றும் 'உதறிப்புக்கு' என்றும் கூறினர். (95)

நின்றவ னுசா னிகள்துரி யத்தனாய்
ஒன்றி யுலகி னியமா திகளுற்றுச்
சென்று துரியாதீ தத்தே சிலகால
நின்று பரனாய் நின்மல னாகுமே. 2217

இ-ம் – எனின், சுழுத்தியிலிருந்து முறையே உயருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள் : இங்ஙனம் சாக்கிர சுழுத்தியில் நின்ற ஆன்மாவாகிய ஆசானுடைய திருவருள் வாய்ப்பாற் கிடைத்த துரியாவத்தை யுடையவனாகச் சிவத்தோடு ஒன்றி. உலகத்தில் நியமம் தாரணை தியானம் முதலான நிலைகளைப் பெற்றுத் துரியாதீதமான சமாதி நிலையிலே கூடிச் சிலகாலம் உறைத்து நின்று, பரம் பொருளாய – மலநீக்கம்பெற்ற சுத்தான்மா ஆகும் என்றவாறு.

சாக்கிர சுழுத்தியினின்ற ஆன்மா துரியம் துரியாதீதம் என்ற அவத்தைகளை எய்திச் சமாதி கைகூடி, மலநீக்கம் பெற்றுச் சிவமாவன் என்பதாம்.

சிவமாவன் ஏனின் சிவம்போலப் பஞ்சகிருத்தியம் செய்பவன் என்பதன்று. சிவத்தை நுகர்ந்து தன்செயலற்று அவ்வின்ப உருவினனாகவே என்றும் இருப்பன் என்பதாம்.

ஆசான் – ஒழுகுபவன். ஆன்மாவை ஆசான் என்றது சுழுத்தி துரியம் முதலிய நிலைகளில் நின்று ஒழுகுதலான் என்க.

துரியநிலை ஆன்மாக்களுக்குத் தானே கைகூடுவு தன்றி நினைந்து சேர்ப்பதன்று ஆதலால் (தாமே) நிகழ்துரியம் என்றார்.

ஒன்றி – உயிரும் – உயிருக்கு 'உயிரான சிவமும் ஒன்றி. அங்ஙனம் ஒன்றிய நிலையிலும் இடையூறாக விளைவன சித்தசேட்டை; அதனைச் சேட்டியாதவாறு

அடக்க இயமம் நியமம் முதலான கட்டுநெறிகள் மிகத் தேவையாதலின் அவைகளை உலகிலே உடலொடு கூடி இருக்கிறவரையில் விடாது பற்றுதல் வேண்டும் என்பார் உலகில் நியமாதிகள் உற்று என்றார்.

துரியாதீதத்தே சிலகாலம் அண்மியபோதுதான் மலம் மெலிந்து உயிரைப் பந்தியாதொழியும். நின் மலனாகலாம் என்றவாறு. (96)

ஆனவவ் வீச னதீதத்தில் வித்தையாய்த்
தானுல குண்டு சதாசிவ மாசத்தி
மேனிக ளைந்தும்போய் விட்டுச் சிவமாகி
மோன மடைந்தொளி மூலத்த னாமே. 2218

இம் – எனின், துரியாதீத நிலையில் நின்மலனான ஆன்மாவின் சொருபம் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: துரியாதீதநிலையில், அப் பரனான நின்மலன் தன் அறிவாலேயே அனைத்துலகையும் ஒருசேர அனுபவித்து, சதாசிவத்தில் மாசத்தி காரியப்படுவதால் உண்டான சதாசிவன் மயேச்சுரன் உருத்திரன் அரி அயன் என்ற பதமுத்தித் திருமேனிகளில் தங்கி, அவற்றையும் விட்டுப், பரசிவமாகி நாதங் கடந்த மோனநிலையில் எய்தி, ஒளிகளுக்கு மூலமாய காரணச் சோதியாக விளங்குவன் என்றவாறு.

துரியாதீத நிலையில் ஆன்மா பதமுத்திகளனைத்தையுங் கடந்து பரசிவ சொருபமாய் ஒளியான திருமேனியுடன் விளங்குவன் என்பதாம்.

நின்மலனுன ஆன்மாவை ஈசன் என்றது அவ னுக்கு அனைத்தும் உடைமையாந் தன்மை தானே இத்தித்தலான் என்க.

நின்மலனுயினும் உடல்நீங்கும்வரை உலக போகம் வினைச்சேடத்தின் அளவாக அவனுக்குண்டு; ஆனுல் அவன் நுகரும்முறை வேறு. மலசகிதன் உலகிற் பிணிப்புண்டு உலகமே தானுக அழுந்தி நின்று நுகர்ந்து அதனுல் விளையும் துன்ப இன்ப வடிவினனுவன். இவன் அங்ஙனம் ஆகான். வினைச் சேடங்களுக்கு ஏற்ற வினைப்போகத்தை இவ்வுலகில் ஞானத்தாலேயே நுகர்ந்து துன்ப இன்பங்கள் தம்மைத் தொடராதவண்ணம் விளங்குவன். இதனை 'உலகு வித்தையா உண்டு' என்றார்.

சிவம் சத்தியாகிற திருவருளாற்றலாலேயே திரு மேனிகொள்ளும். அப்போது சாதாக்கிய வடிவாகிற சதாசிவன். ஈச்சுர வடிவாகிற மயேச்சுரன், அழிப்பாற்ற லோடு கூடிய உருத்திரன். காப்பாற்றலோடு கூடிய திருமால். படைப்பாற்றலோடு கூடிய பிரமன் என்ற திருமேனிதாங்கும் அந்நிலைகளையும் கண்டு நின்று கடந்துபோய் என்பார் 'ஐந்தும் போய், விட்டு' என்றார்

மோனம் — நாதமுங் கடந்த நிலையாகிய ஞான வரம்பு. ஒளிமூலம் — எல்லா ஒளிகளும் எதனைத் தமக்குத் தோற்றும் இடமாகக் கொள்கின்றனவோ அது ஒளிமூலம் என்பது உபநிடதம். காணப்படும் ஒளிகள் காரிய ஒளிகள், அவற்றிற்கெல்லாம் காரணமாகிய ஒளி மூலஒளி. அது பரசிவம். அஃதாகுவனென்றதாம்,

மண்டல மூன்றினுள் மாயநன் னாடனைக்
கண்டுகொண் டுள்ளே கருதிக் கழிக்கின்ற
விண்டலர் தாமரை மேலொன்றுங் கீழாகத்
தண்டமுந் தானு யகத்தினுள் ளாமே. 2219

இம் – எனின், அகத்தாமரை இரண்டுண்டு என்பதை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சூரிய மண்டலம், சந்திர மண்டலம் அக்கினிமண்டலம் என்ற மூன்றனுள் அந்தந்த மண்டலத்து அதிபதியாக மாயாகாரியமான இவ்வுடலாகிய நாட்டைத் தமக்கு உடைமையாகக்கொண்ட சிவபெருமானைத் தரிசித்துத் தியானித்து, பின் அவற்றைக் கடந்து செல்லுதற்கு உதவியான மலர்ந்த தாமரை பிரமரந்திரத்து ஒன்றும் இதயத்து ஒன்றுமாகத் தண்டோடு உடம்புள் உறும் என்றவாறு.

இதயதாமரையும். பிரமத்தொளையில் ஆயிரமிதழ்த் தாமரையும் ஆக இருதாமரைகள் உடம்புள் உளவாம் என்பது. மண்டலம் மூன்று – சோம சூரிய அக்கினி மண்டலங்கள். மாயநன்னாடன் – மாயாகாரிய தனுவை தன்னாட்சிக்குரிய நாடாக உடைய சிவன். கண்டு கொண்டு – தரிசித்து. விண்டு – வாய்விரிந்து. கீழாக – கீழும் ஆக. அத்தாமரை தண்டோடு அகத்துள் ஆம் என்க.

இதயத்துத் தத்துவங்களே தாமரையாக அமைந்திருக்கும். பிருதிவி தத்துவம் நாபித்தானத்திலே மாணிக்கம் போன்ற கிழங்கு. அப்புமுதல் காலமீருண

இருபத்தொன்பது தத்துவங்கள் நீலநிறமான தண்டு, இதனையே திருமூலர் " தண்டமுந் தாளுப் அகத்தினுள் ஆமே " என்றது. அக்கொடி எட்டங்குல நீளமும் ஒன்பது ஓட்டையும் உள்ளது. புத்தியின் காரியமாகிய ஐம்பதுவித பாவங்களும் அத்தாமரைத்தண்டின் நூல்கள். மாயை அத்தண்டின் நுனியிலே உள்ள முடிச்சு, காலாக்கினி ருத்ரபுவனமுதல் புவனேசபுவன மீறன நூற்றுத்தொண்ணூற்றெரு புவனங்களும் தண்டின் முள்; சுத்தவித்தைபூ. இதில்கிழக்குமுதலாக முறையே ஓம்என்னும் எட்டக்கரங்களும் நான்கங்குல நீளமான எட்டு முழு இதழ்கள் அதில் இந்திராதியர். பீஜமான யகாரமுதல் ஹகாராந்தமான எட்டு எழுத்துக்கள் உண்டு. இவைகளை அட்டவித்யேஸ்வரர் அதிட்டித்து நிற்பர் — இதுவிரிந்தால் பன்னிரண்டங்குல அகலம் உடையது. ஈசுரதத்துவம் கேசரங்கள்; சாதாக்கிய தத்துவம் கர்ணிகை (பொகுட்டு) விந்து தத்துவம் 51 அட்சரங்கள் விதைகள்; நாததத்துவம் பூவின்முனையும் கந்தமும் இதழ்முனைகளாகிற விருத்தம் சூரியமண்டலம்; கேசரமுனைகளால் ஆகிய விருத்தம் சந்திர மண்டலம்; கர்ணிகையின் முனைவிருத்தம் அக்கினி மண்டலம்; இத்தகைய இதயதாமரை மொட்டாகக் கீழ்நோக்கி நாலங்குலம் தாழ்ந்திருக்கும். அதனை மேல்நோக்கி மலரச்செய்து அதன்மத்தியில் ஈசனைப் பூசிப்பது மரபு, அதனையே ஆசிரியர் மண்டல மூன்றினுள் மாயநன்றனை முதலாகக்கொண்டு கூறினர்,

தாமரைமேல் ஒன்று என்றது பிரமத்தொளையுள்ள ஆயிரம் இதழ்த் தாமரையை. அது கீழ்நோக்கி

மலர்ந்த நிலையில் இருக்கும். அதன் பொகுட்டிலும் சிவம் எழுந்தருளி இருக்கும், அதனை எங்கும் காணலே இங்கு உணர்த்தப்பட்டது. (98)

போதறி யாது புலம்பின புள்ளின
மாதறி யாவகை நின்று மயங்கின
வேதறி யாவண நின்றனை னெம்மிறை
சூதறி வாருச்சி சூடிநின் றாரே. 2220

இம் - எனின், உயிர்கள் இறைவனது திருவருள் ஆற்றலை நோக்கியிருப்பதை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்; பறவைக்கூட்டங்கள் காலம் அறியாமல் ஒலித்தன. தத்தமக்குரிய மாதர்களை அறியாதவகையால் நின்று மயங்கின. இவைகள் இப்படியிருக்க, எம்மிறைவன் தன்னை வேறு பிரித்து உணர முடியாத வண்ணம் உயிர்க்குயிராய்க் கலந்து நின்றனன். இறைவன் இப்படியிருக்கும் சூழ்ச்சியை அறிந்தவர்கள் தமது உச்சியாகிய பிரமத்தொளையுள் எழுந்தருளுவித்தார்கள் என்றவாறு.

உயிர்கள் தம் பரிபாகத்தால் இறைவனை அறிய முடியாது தவித்தகாலத்து இறைவன் அவர்களுடனேயே கலந்து நின்றான். இச்சூதைத் தெரிந்த ஞானிகள் பேரின்பமுற்றார்கள் என்பது கருத்து.

போது – உயிர்கள் பரிபாகம் எய்திய செவ்வி. புள்ளினம் என்றது உயிர்களை. "குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே" என்ற வள்ளுவத்தினும் இப்பொருளது ஆதல்காண்க. உயிர்கள் பலவாதலின் புள்ளினம் என்றார்.

மாது என்றது ஈண்டுத் திருவருட்சத்தியை. பறவைகளைப் பாவையர் பாதுகாப்பது போல உயிர்களைப் பாதுகாப்பவள் சிவசக்தியாம் என்க.

வேறு அறியாவண்ணம் நிற்றலாவது கலந்து உயிர்க்குயிராய் இருத்தல். சூது – இறைவன் உயிரோடு கலந்து நிற்கும் சூழ்ச்சி. வேறு அறியா வண்ணம் – வேறுபாடு அறிய இயலாதவண்ணம்.(99)

கருத்தறிந் தொன்பது கண்டமு மாங்கே
பொருத்தறிந் தோம்புவ னுபதி நாடித்
திருத்தறிந் தேன்மிகு தேவர் பிரானை
வருத்தறிந் தேன்மன மன்னிநின் றனே. 2221

இம் – எனின், தவத்தால் இறைவனை எய்தியமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: உயிர்களின் பரிபாகநிலையை அறிந்து, ஆறாதாரமும் சோம சூரிய அக்கினி மண்டலமுமான ஒன்பது பிரிவுகளையும் உடலுள் பொருத்துதலை அறிந் தோனே புவனங்கள் அனைத்திற்கும் தலைவனாகிய பரம்பொருள். அவனை அக்கண்டங்களில் அங்கங்கே ஆராய்ந்து அறிந்தேன். தவங்களினால் உடலை வருத்தி, தேவர்கள் தலைவனாகிய அவனை அறிந்தேன். அவன் என் மனத்துள் என்றும் நீங்காது நிலைபெற்றான் என்றவாறு.

உடலுள் ஒன்பது கண்டங்களை அமைத்தவன் உலக நாதன். என்னுள் அவ்வக்கண்டங்களுள் அவனை நாடி நன்கறிந்தேன், தவம் கிடந்தேன். அவன் என் மனத்துள் மன்னினான் என்பதாம்.

கருத்து அறிந்து – திருவருட் கருத்தையறிந்து என்பாரும் உளர். திருவருள் – பொருந்தறிந்த புவஞ் பதியைக்காட்டிலும் வேறன்று. பிரிக்கமுடியாத சத்தியே ஆதலின் பரிபாகம் அறிந்து எனவே பொருள் கொள்க.

திருத்து – நன்குதிருத்தமாக என்க. (100)

ஆன விளக்கொளி தூண்டு மவனென்னத்
தான விளக்கொளி யாமூல சாதனத்
தான விதிமூலத் தானத்தி லவ்விளக்கு
ஏனை மதிமண் டலங்கொண் டெரியுமே. 2222

இம் – எனின், மூலாதாரத்து ஒளியை மதிமண் டலம் வரை செலுத்துக எனல் நுதலிற்று.

இ – ள் : அடிப்படைச் சாதனங்களைக்கொண்டு விளக்கு ஒளியானதாம். ஆயினும் அவ்விடத்து அவ் விளக்கொளியைத் தூண்டுமவனைப்போல, மூலா தாரத்தில் விளங்குகின்ற அவ்விளக்கை அதற்குரிய விதியால் மற்றை மதிமண்டலமாகிய பிரமரந்திரம் வரையிற் கொண்டு விளங்கச்செய்யும் என்றவாறு.

மூலசாதனங்கள் நிரம்பிய விளக்கொளியாயினும் அதனைத் தூண்டுவான் ஒருவன் வேண்டப்படுதல் போல, சாதகன் மூலாதாரத்தில் உள்ள விளக்கொளி யைத் தூண்டி விட்டு மதிமண்டலம் வரை எரியச் செய்யும் என்பது கருத்து.

மூலசாதனத்து ஆன விளக்கொளி ஆம் (ஆயி னும்) ஆன அவ்விளக்கொளி தூண்டுமவன் என்ன

மூலத்தானத்தில் அவ்விளக்கு ஆனவிதி ஏனை மதி மண்டலங்கொண்டு எரியும் எனக்கூட்டி இப்பொருள் கொள்க.

மூலசாதனம் – விளக்கு ஒளி எரிதற்குவேண்டிய எண்ணெயும் திரியும் தீயும்போலும் உபகரணங்கள். அவற்றால் விளக்கு ஒளியுடையதாம் என்க.

ஆன் – அவ்விடத்து, சாதனங்கள் நிரம்பிய விடத்து. அவ்விளக்கொளி தூண்டும் அவன் என்ன – அவ்விளக்கின் ஒளியைத் தூண்டிவிடுகின்ற ஒருவனைப் போல.

மூலத்தானத்தில் அவ்விளக்கு – மூலாதாரத்தில் உள்ள குண்டலினி என்னும் கொடித்தீபத்தை. ஆன விதி – யோக நூல்களில் சொல்லப்பட்டதான விதிகளின்படி. என்றது பிராணாயாமப் பயிற்சி முறைப்படி என்க. மதிமண்டலம் – சகஸ்ராரமாகிற பிரமரந்திரத்தில் உள்ள ஆயிரம் இதழ்த் தாமரை. அதுவரைகொண்டு சென்று எரியும் – எரிக்கச் செய்யும் எனப் பிறவினையாகப் பொருள்கொண்டு அதற்கு ஏற்பச் சாதகன் என ஒரு எழுவாயையும் வருவித்துக் கொள்க. (101)

உண்ணாடு மைவர்க்கு மண்டை யொதுங்கிய
விண்ணாட நின்ற வெளியை வினவுறில்
அண்ணாந்து பார்த்தைவர் கூடிய சந்தியிற்
கண்ணாடி காணுங் கருத்ததென் றானே. 2223

இம் – எனின், பொறிகளையும் அகமுகப்படுத்தலால் விளையும் பயனையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அகமுகமாக்கப்பெற்ற ஐம்பொறிகளை யும் உடையார்கட்கு, பிரமரந்திரத்தில் ஒதுங்கியுள்ள விண்ணிலே நடமாடாநின்ற வெளியான சிவத்தை ஆராயின், மேல்நோக்கி அகமுகமாக்கப்பெற்ற அந்த ஐம்பொறிகளும் கூடிய சந்தியிலே, ஞானக்கண்ணால் சிந்தைநாடி அவ்வெளியைக் காணும் கருத்தினை யுடையது பேரின்பம் என்று உபதேசித்தான் எ-று.

ஐம்பொறிகளையும் அகமுகமாக்கி மதிமண்டலத் துப் பரவெளியில் விளங்குகின்ற கூத்தப்பெருமானை ஆயத்தொடாங்கின் ஐம்பொறிகளும் சந்திக்கும் சந்தியிலே ஞானக்கண்ணால் நாடப் பேரின்பம் விளையும் என்பது கருத்து.

உள் நாடும் ஐவர் - புறம்போகாது மடங்கி மனத்திற்குள்ளே ஆராயும், அல்லது விரும்பும் ஐந்து இந்திரியங்களையுடைய சாதகர்கள். ஐவர் - ஐந்தை யுடையவர்கள் என்னும் பொருளது.

மண்டை - கபாலம். அதில், ஒதுங்கிய விண் - பிரமத்தொளையாகிறவெளி. அதில் ஆடாநின்றவெளி - நடனம் ஆடாநின்ற பரவெளிப் பெருமான். இறைவனை வெளி என்றது எல்லையும், வடிவும் இல்லாமையான் என்க. வினவுறில் - ஆராயின். இதற்கியைய ஐந்தினை அகமுகமாக்கிய அவர்கள் என வினைமுதல் வருவித்து ஐந்தினையுடையார் ஆராயின் எனக்கொள்க.

அண்ணாந்து பார்த்து - பொறிகளைக் கழுத்தின் மேலே கொண்டு செயற்படுத்தாது மேனோக்கி. அதோ

முகப்பார்வை விளைப்போகத்தழுத்தி வினைகளை விளைக்கும் ஆதலால் ஊர்த்துவ முகமாகவே கண்டு என்க.

ஐவர் கூடிய சந்தி - ஐந்திந்திரியங்களும் ஒன்றும் சந்தி ; புருவநடு. அங்கே அறிவுக்கண்ணை அமைத்துக் காணின் ஆஞ்ஞைத் தானத்திலும் அதற்குமேலும் பரவெளியாட்டம் காணலாம் என்பதாம்.

இங்ஙனம் நேர்மையான பொருள் உதவும் இம் மந்திரத்தைத் தம் மனத்துத் தாம் கண்ட கருத்தின தாகக் கருதத்தேவையில்லை என்க. (102)

அறியாத வற்றை யறிவா னறிவான்
அறிவா னறியாதான் றன்னறி வாகான்
அறியா தவத்தை யறிவானைக் கூட்டி
அறியா தறிவானை யாரறி வாரே. 2224

இம் - எனின், ஆன்மாவை ஐந்தவத்தையுட் படுத்தி அறிவிப்பானை அறிக என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் ; திருவருளால் அறியப்படாத தன்னை யும், தடையையும் ,தலைவனையும் அறிபவனே ஞானி. அவற்றைத் தம் பசுபோத முனைப்பால் அறிபவன் அறியாதவனே. ஆன்ம அறிவுக்கு அகப்படாத சிவன், ஒன்றையும் அறியாது இருக்கும் சித்தாகிய ஆன்மாவை ஐந்தவத்தையுட்படுத்தி, ஆன்மாவாகிய அவன் அறியாமல் தான்மட்டும் அவனைக் கண் காணித்து வருபவனை அறிவார்யார் என்றவாறு.

தன்னறிவால் அறியப்படாதவற்றை அறிபவனே அறிஞன். சிவம் சித்தாகிய ஆன்மாவை ஐந்தவத்தைப்

படுத்தி, அவன் அறியாவண்ணம் சார்ந்திருந்து அவனை அறிவன், அவனை அறிபவர்யார் என்பதாம்.

அறியாதவற்றை - பெற்றகாலத்து அறிவு இருந்தும் மலமறைப்பால் அறிய இயலாதனவாகிய தன்னையும், தடைகளையும், தலைவனையும் என்க.

அறிவான் - பரிபாகம் இல்லாத தன்னறிவால். அதாவது நான் காண்பேன் என முயன்ற அரி பிரமர் போலப் பசுபோத முனைப்பால் என்க. அதனால் அறிய முயல்பவன் அறியாதானே யாம்.

தன்னறிவாகான் அறிவானை அறியாது அவத்தை கூட்டி அறியாது அறிவான் அவனை அறிவார் யார் எனக்கூட்டிப் பொருள்கொள்க,

தன்னறிவு ஆகான் - தற்போதத்திற்கு அகப்படாத பரசிவம். ஆன்மாக்கள் என்றும் உணர்த்த உணரும் சித்தாகலின் அவைகளை அறிவான் என்றே வழங்குகின்றார். ஆன்மாக்களை வினைக்கழிவிற்காகவும் நுகர்ச்சிக்காகவும் அவத்தை உட்படுத்தும் போது அதனையும் அவர்கள் அறியார்கள் என்பார் 'அறியாது அவத்தைகூட்டி' என்றார், முரட்டுப் பசு வேற்றுப் புலம் புகாமலிருக்க மேய்ப்பான் சார்ந்திருந்து கண்காணிப்பதுபோலக் கடவுள் ஆன்மாவை ஐந்தவத்தையுட் படுத்தி அவனறியாமல் அவனைக் கண்காணிப்பர் அவனை அறிவார் யாரே என்றார். (103)

**துரிய தரிசனஞ் சொற்றேரும் வியோமம்**
**அரியன தூடணம் அந்நன வாதி**
**பெரியன கால பரம்பிற் றுரியம்**
**அரிய வதீத மதீதத்த தாமே.** 2225

இம் – எனின், வியோமாதிகளின் தன்மைகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : இதுவரை சாக்கிரத்துத் துரிய தரிசனத்தைச் சொன்னோம். வியோம நிலையோ அடைதற்கு அரியன. அந்த நனவாதி ஐந்தவத்தைகளோ தூடணம்செய்து கழிக்கத்தக்கவை, காலபரமான துரியமோ மிகப்பெரியநிலை. அதீதம் அரியது. கடந்துள்ளது என்றவாறு.

கருத்து வெளிப்படை,

துரியதரிசனம் எனப் பொதுவகையில் கூறப்பட்டதேனும் அதிகார இயைபுநோக்கி சாக்கிர துரியம் எனக்கொள்க.

ஞானாவரண விளக்கத்துள் வரும். "ஈண்டுத் துரிய தரிசனம் வந்தவாறு காண்க" நனவில் அதீதம் என்பது ஈண்டுத் தொடைநோக்கி யதீதம் எனக் கூறப்பட்டது. ஈண்டுக்கூறிய முன்னதனுள் காலபரத் தனைய கனைகன என்றமையில் பரத்தோடு சீவனைக் கூட்டிக் காலபரம் கலப்பிக்கும் என்பது திருமந்திரத்தில் "துரியதரிசனம் சொற்றோம் என வருமாற்றான் உணர்க" எனவரும் பகுதி இம்மந்திரப் பொருளைத் துணியத் துணைசெய்யும் என்க.

ஆகவே, வியோமம் என்பது முன்னர் 2205 திருமந்திரத்து உரையிற் காட்டியவாறு பர வியோமமாகிற ஆறாவது அவத்தையைக் குறிக்கும். அங்ஙனமே, காலபரம் என்பது ஐந்தாவது அவத்தையைக் குறிக்கும் என்பது துணியப்பெற்றது. சொற்றோம் வியாத்தி என்பது ஞானாவரண பாடம். (104)

**மாயையிற் சேதனன் மன்னு பகுதியோன்**
**மாயையின் மற்றது நீவுதன் மாயையாங்**
**கேவல மாகுஞ் சகலமா யோனியுட்**
**டோயு மனிதர் துரியத்துட் சீவனே.** 2226

இம் – எனின், இறைவன் மாயையைப் புணர்ப் பதன்பயனும், உயிர் கேவல சகலப்படுவதன் இழிவும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சேதனனாகிய ஆன்மா மாயையில் பிர கிருதியோனாகப் பொருந்துவன். இங்ஙனம் இறை வன், மாயையைக் கூட்டுவது மாயையால் மற்றதா கிய மலத்தைக் கழுவுதல் நோக்கமாம். மனிதனாகப் பிறந்து சாக்கிர துரியத்து அருளனுபவம் பெற வேண்டிய ஆன்மா அதுபெறாமல் மாயையில் ஆம் போது கேவலாவத்தையில் இருப்பதாம். பின்னர்ச் ச்கலாவத்தையிற் பொருந்தி எண்பத்துநான்கு நூறா யிரம் யோனிபேதத்துட்பட்டுப் பிறந்திறந்துழல்வதாம் என்றவாறு.

சித்தாகிய ஆன்மாவைச் சிவன் மாயையோடு சேர்ப்பது மலவன்மையை வாட்டிச் சாக்கிர துரியத்துப் பேரின்பம் பெறச் செய்வதற்காக என்க. உயிர் அதனை விட்டு மாயையில் பொருந்திக் கேவலா வத்தையினும், தோய்ந்து பல யோனிகளிலும் தோய் வான் என்னே ! என்பது கருத்து.

சேதனம் மாயையிற் பகுதியோன் (ஆக) மன் னும்: மற்றது மாயையின் நீவுதல் ஆம்: துரியத்துள் மனிதர்சீவன் மாயை(யில்)ஆம் கேவலம் ஆகும்;

சகலமாய் யோனியுள் தொயும் எனக்கூட்டிப் பொருள் கொள்க.

சேதனன் – சித்தாகிய ஆன்மா. சிவன் உணர்த்த உணரும் சித்தென்க. ஆன்மாவைச் சிவன் திருவருளால் மாயையிற் கூட்டியபோது அவன் பிரகிருதியே ஆவன். பிரகிருதி – அசுத்த மாயையின் தூல பரிணாமமேயாம். விதை முளைப்பபதற்காகப் பக்குவப்பட்டு உப்பி நிற்பது போன்றதாம். இது சகலருக்குத் தூல தேகாதிகளைத் தோற்றுவித்துச் சங்காரகாலத்தில் அவர்கட்குத் தாரகமாயிருக்கும்.

அவன் தனியே மாயையோடு கூடியகாலத்துக் கேவலாவத்திதன் ஆவன். பகுதியோடானபோது சகலாவத்தையனாய் யோனிகளிற் பிறப்பன் என்பதாம்.

இங்ஙனம் இறைவன் மாயையோடு கூட்டிச் சீவனை பகுதியோடாக்குதல் வினைப்போகங்களைத் துய்ப்பித்து மலவன்மை குன்றச்செய்து துரியத்துள் சிவனாக விளங்குதற்காகவே. அங்ஙனமிருக்க உயிர் மாயையிற்பட்டுக் கேவலநிலையிலும், மாயையோடு பகுதியோடாகிச் சகலாவத்தையனாய் யோனிகளிற் புக்கு உழல்கின்றன. என்னே அறியாமை என அவத்தைகளினியல்பு கூறவந்த ஆசிரியர் அவத்தைகளைக் கழிந்துத் துரியநிலையில் அதீதத்தை யண்ணவேண்டியது உயிரின் கடமையும் முறைமையுமாம் என்பதை வலியுறுத்தி இவ்வதிகாரத்தை முற்றுவிக்கிறார். (195)

## 7. கேவல சகல சுத்தம்

ஆன்மாக்கள் முற்கூறிய கருவிகளுடன் கூடிய போது கேவலம் சகலம் சுத்தம் என்ற மூன்றவத்தைப்படும். அவற்றுட் கேவலமாவது ஒன்றுமில்லாமையும், சகலமாவது எல்லாமுடைமையும், சுத்தமாவது அழுக்கு நீக்கமும் ஆம். அஃதாவது அறிவு முதலியன பிண்டமாய்த் தொழிற்படுதலே அன்றிப் பகுத்துத் தொழிற்படுவதற்கான கருவிகள் இல்லாத நிலை கேவலம். கருவிகளோடு கூடிய நிலை சகலம்; கருவிகளும் மலமுமாகிய அழுக்கு நீங்கிய நிலை சுத்தம் எனப்படும்.

இவை மூன்றும் ஒவ்வொன்று ஐந்தாய்க் காரியப்படும். அப்போது காரியாவத்தை பதினைந்தாம், அவையாவன காரிய கேவலத்தில் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என ஐந்தாகவும் காரிய சகலத்திலும் அங்ஙனமே ஐந்தாகவும், காரிய சுத்தத்திலும் அங்ஙனமே ஐந்தாகவும் பகுக்கப் பெற்றுப் பதினைந்தாமென்பது. காரிய சுத்தம் காரிய நின்மல மெனவும் பெயர்பெறும். இவற்றுடன் காரண கேவலம், காரண சகலம், காரண சுத்தம் என்ற மூன்றையும் கூட்டப் பதினெட்டு அவத்தையாம்.

இவற்றுள் கேவல சாக்கிரமாவது ஆன்மா ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியம் 5. தன்மாத்திரை 5, அந்தக்கரணம் 4, புருடன் 1, வாயு 10, வசனாதி 5 ஆக 35 தத்துவங்களுடன் கூடிப் புருவமத்தியில் இருக்கும் அவதரம்.

கேவல சொப்பனமாவது ஆன்மா, முற்கூறிய வற்றுள் ஞானேந்திரியம் கன்மேந்திரியம் ஆகிய 10 கருவிகளும் புருவ மத்தியிலேயே நின்றுவிட, எஞ்சிய 25 தத்துவங்களுடன் கூடிக் கண்டத் தானத்திலே காரியப்படும் அவதரம்.

கேவல சுழுத்தியாவது ஆன்மா, முற்கூறிய இருபத்தைந்து தத்துவங்களில் 22 கருவிகள் கண்டத்திலேயே நின்றுவிட, எஞ்சிய சித்தமும் புருடனும், பிராணனுமாகிய மூன்றுமட்டும் இதயத் தானத்தில் காரியப்படும் அவதரம்.

கேவல துரியமாவது அம்மூன்றனுள் சித்தம் இதயத்திலேயே நின்றுவிட, புருடனும் பிராணனும் நாபித்தானத்தில் காரியப்படும் அவதரம்.

கேவல துரியாதீதமாவது பிராண வாயு ஒன்றும் நாபியில் நின்றுவிட புருடனை உடம்பாகக் கொண்டு ஆன்மா மூலத்தானத்தில் அடங்கிய அவதரம்.

இதனைச்

"சாக்கிரமா நுதலினிலிந் திரியம் பத்துஞ்
சத்தாதி வசனாதி வாயு பத்தும்
நீக்கமிலந் தக்கரணம் புருடனோடு
நின்றமுப் பானைந்து நில்வுங் கண்டத்
தாக்கியசொப் பனமதனில் வாயு பத்தும்
அடுத்தனசத் தாதிவச னாதியாக
நோக்குகர ணம்புருட னுடனே கூட
நுவல்வர் இருபத்தைந்தாம் நுண்ணியோரே'

"சுழுத்திஇத யந்தனிற்பி ராணஞ் சித்தஞ்
சொல்லரிய புருடனுடன் மூன்ற தாகும்
வழுத்தியதா பியில்துரியம் பிராண னோடு
மன்னுபுரு டனுங்கூட வயங்கா நிற்கும்
அழுத்திடுமூ லந்தன்னில் துரியா தீதம்
அதனிடையே புருடனொன்றி அமரும் ஞானம்
பழுத்திடும்பக் குவரறிவர் அவத்தை ஐந்திற்
பாங்குபெறக் கருவிநிற்கும் பரிசு தானே."

என்னும் தாயுமானவர் பாடல்களானும் தெளிக.

இனிக் காரிய சகலாவத்தையும் சகலத்தில் சகலம், சகலத்தில் கேவலம், சகலத்தில் சுத்தம் என மூன்றாய் ஒவ்வொன்றும் சாக்கிர முதலாகிய ஐந்தால் பதினைந்தாகும்.

சகலமாவது முற்கூறியவண்ணம் கேவலா வத்தையில் உடம்பொடு கூடாது நின்ற ஆன்மா உடம்பொடுகூடி, கலாதி தத்துவங்களைப் பொருந் தித் தருமம் முதலான புத்தி குணங்களை அடைந்து மனமுதலிய கருவிகளைக்கூடி, இச்சித்து, வாக்கால் வினையும் அறிவினையுற்று, செயல்களைப்பொருந்தி, சத்தாதிகளில் மிக விருப்பஞ்செய்து, போகத்தை நுகர்ந்து பிறப்பிறப்பிலே பட்டு ஏகதேசியாய்ச் சீவித்து நிற்கும்.

இதனை,

உருவினைக் கொண்டுபோசக போக்கியந் துன்னல்செப்பல்
வருசெயல் மருவிச் சத்த மாதியாம் விடயம் தன்னில்

*புரிவதும் செய்திங் கெல்லா யோனியும் புக்குழன்று*
*திரிதரும் சகல மான அவத்தையில் சீவன் சென்றே.*

என்னும் சிவஞானசித்தியார்த் திருவிருத்தத்தான் தெளிக.

காரிய சகலத்தில் கேவலமாவது மாயையோடு கூடிக் காரியப்படாது நிற்கும் நிலை. காரிய சகலத்தில் சகலமாவது மாயை காரியப்பட அதனுட்கட்டுண்டு நிற்குநிலை. காரிய சகலத்தில் சுத்தமாவது மாயை கெடத் தூயனுநிலை. இவற்றுள்ளும் ஒவ்வொன்று ஐந்தாய் விரியும் என்க. இவற்றின் விரிவை அசிந்திய விசுவ சாதாக்கியத்தினும், பௌஷ்கர விருத்தியினும் கண்டு தெளிக.

காரண கேவலமாவது. சர்வ சங்காரகாலத்தில் ஆன்மாக்கள் மாயா காரணத்தில் ஒடுங்கிச் சிருட்டி காலமளவும் ஆணவத்தால் மறைப்புண்டு ஒன்றும் அறியாமல் கிடக்கும் அவதரம்.

காரண சகலமாவது சிருட்டிதொடங்கிச் சர்வ சங்காரமளவும் ஆன்மாக்கள் யோனிவிட்டு யோனி பற்றி எண்பத்துநான்கு நூறாயிரம் யோனி பேதங் களிலும் பிறந்து இறந்து வருகிற அவதரம்.

காரண சுத்தமாவது உயிர்கள் சிவன் திருவடி களிலே இரண்டறக் கலந்து நிற்கும் பரமுத்திநிலை. ஆக அவத்தை 18-ம் விரியால் பலவும் ஆகும்.

அவற்றுள் கேவலாதி மூன்றையும் தொகுத்து 42 மந்திரங்களினால் உணர்த்தத் தொடங்கிய ஆசிரியர்

முதற்கண் அம்மூன்றின் இயல்பையும் சுருங்கக் கூறுகின்றார். (105)

தன்னை யறிசுத்தன் றற்கே வலன்றானும்
பின்ன முறநின்ற பேத சகலனு
மன்னிய சத்தசத் துச்சத சத்துடன்
துன்னுவர் தத்தந் தொழிற்கள வாகவே 2227

இம் – எனின், கேவலாதி மூன்றின் இலக்கணத்தைத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : சிவமாகிய தன்னைமட்டும் அறிகின்ற நிலைவனாகிய தற்கேவலனும்; அவனின் வேறான பல வகைப்பட்ட பரிபாகமுடைய சகலனும் தத்தம் வினைகளுக்கு ஏற்ப நிலைபெற்ற சத்தும், அசத்தும், சதசத்துமாகிய இவற்றுடன் தங்குவர் என்றவாறு.

சிவத்தை அறிந்தவன் நின்மலனாவான். தான் மட்டும் ஒன்றையும் அறியாது கிடப்பவன் கேவலன். இவரின் வேறானவன் பேதசகலன். முறையே நின்மலன் சத்தாகிய சிவத்தையும், கேவலன் அசத்தையும், சகலன் சதசத்தையும் பொருந்துவர் என்பது கருத்து.

தன்னை அறி அத்தன் – சிவத்தை அறிந்த தலைவன். மலங்களின் நீங்கிக் கருவிகரணங்கள் சிவமயமாகி, செய்வனவும் சிவச்செயலாகப் பெற்றமையின் அவனை அத்தன் என்றார். அத்தன் என்றது சுத்தனை.

'தற்கேவலன்' – தத் – அது. அது என்றது சடமாகிய மலமும் மாயையும். அதுவே அசத்து எனப்படுவது. அவற்றோடு கூடி அசைவற்றுக் கிடப்பவன் கேவலன்

பின்னமுற நின்ற – முன்னைய கேவல நிலையினும், பின்னைய சுத்த நிலையினும் வேறுபட நின்ற. பேத சகலன் – தனு கரண புவன போகங்களோடு கூடிய தன்மையால் பகுத்து உணர்ந்து நுகரும் பேதத்தையுடைய சத்தோடு கூடிச் சத்தாயும், அசத்தோடு கூடி அசத்தாயும் உள்ள சகலன் என்க.

தொழில் – வினை. வினைகளின் பரிபாகங்களுக்கு ஏற்பச் சத்து முதலிய மூன்றையும் முறையே பொருந்துவர். (10ப)

தானே தனக்குப் பகைவனு நட்டானுந்
தானே தனக்கு மறுமையு மிம்மையுந்
தானே தான்செய்த வினைப்பயன் றுய்ப்பானுந்
தானே தனக்குத் தலைவனு மாமே. 2228

இம் – எனின், தானே அனைத்தும் ஆம் எனல் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : தனக்குப் பகைவனும், தனக்கு நண்பனும் தானே ஆவன் : அங்ஙனமே மறுமைப் பயனும் இம்மைப்பயனும், செய்த புண்ணியபாவ கன்மங்களின் பயனைத்துய்ப்பவனும், தனக்குத் தலைவனும் தானே ஆவன் என்றவாறு.

பகை நண்பு, இம்மை மறுமை, வினைப்பயன், தலைமை எல்லாம் தனக்குத்தானே என்பது கருத்து.

"நன்றுந்தீதும் பிறர்தரவாரா" "நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம்" ஆதலின், தனக்குப் பகைவனும் நண்பனும் தானே ஆவன்.

அங்ஙனமே மறுமைப்பயனாகிய இன்பத்துன்பங் களும், இம்மைப்பயனாகிய புண்ணிய பாவங்களும் அவற்றின் பயனாகப் போக போக்கியங்களும் எல்லாம் தானே என்பதாம்.

வினைகளை விருப்பம்போலச் செய்து நுகர்ந்தும், விளைவித்தும் கொள்ளுதலின் தனக்குத் தலைவனும் தானே என்றார், (107)

ஆமுயிர் கேவல மாமாயை யின்னடந்
தாமுயிர் மாயை யெறிப்ப வறிவுற்றுக்
காமிய மாயேய முங்கல வாநிற்பத்
தாமுறு பாசஞ் சகலத்த தாமே 2229

இ - னில், கேவலநிலையில் கிடந்த ஆன்மா சகலப்படுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்; கேவலநிலையிற்கிடந்த ஆன்மா சுத்த மாயையோடு கூடிநின்று, மேல்தனுவாதிகளை எய்த நிற்கும் நிலையில் அவ்வுயிர் மாயை சிறிது அறிவு விளக் கந்தர அறிவுற்றுக் காமியப்பலன்களுங், அவைகளை நுகர்வதற்கு உரிய மாயேயமாகிய புவனபோகாதி களும் கூடத் தாம் அடைந்த பாசத்தால் சகல நிலையை எய்தும் என்றவாறு.

கேவலநிலையில்கிடந்த ஆன்மா சுத்த மாயை யோடு கூடிச் சிறிது அறிவு விளக்கம்பெற்று,

காமியமும், மாயேயமுமாகிய பாகங்களை எய்திச் சகலநிலையை அடையும் என்பது கருத்து.

ஆம் உயிர் கேவலம் என்பதைக் 'கேவலம் ஆம் உயிர்' எனக்கூட்டிக் கேவல நிலையிற்பட்ட உயிர் எனப் பொருள் கொள்க, ஆணவமலத்தோடு கூடி உயிர் அறிவிச்சைசெயல்கள் விளங்கப்பெறாது நிற்கும் நிலை கேவலமாம்

மலமாயையின் நடந்து – கேவல நிலையிற்கிடந்த ஆன்மா மாயையிற் கலக்குண்ட பாகத்தைப் பொருந்தியபோது என்க.

ஆம் உயிர் – மாயையின் தொடர்பால் சிறிது அறிவு விளக்கம்பெறும் அவ்வான்மா எனச் சுட்டு வருவித்து முன்னதோடு தொடர்புறுத்துக.

மாயை எறிப்ப – மாயா தனு விளக்காம் என்பதானும் "மாயை மயக்கமும் செய்யும்" என்பதானும் முகிலின் மறைப்பு நீங்கினவிடத்துச் சூரியன் ஒளி செய்வது போலச் சரீரமுதலிய மாயை நீங்கின விடத்து ஆன்மாவின் அறிவிச்சை செயல்களை விளக்குதலான் எறிப்ப என்றார். எறிப்ப என்ற வினையான் மாயையை விளக்காகக்கொண்ட பண்டைய மரபு தெரிவிக்கப்பட்டது. அறிவுற்று – ஆன்மா மறைப்பு நீங்கி ஞானத்தைப்பெற்று என்க.

காமியம் – விருப்பின் எய்தும் பயன், மாயேயம் – காமியப்பயனை எய்தற்காக அளிக்கப்பெற்ற தனு கரணாதிகள். இங்ஙனம் காமியமான கருத்தும், அதற்கு உரிய சாதனங்களான தனுவாதிகளும் கூடியபோது

அவற்றினிடம் அகலாத பற்று விளைதலைத் 'தாமுறு பாசம்' என்றார். இந்த நிலையே சகலம் என்றவாறு ஆயிற்று (108)

**சகல வவத்தையிற் சார்ந்தோர் சகலர்**
**புகலு மலமூ வகையும் புணர்ந்தோர்**
**நிகரின் மலரோன்மா னீடுபல் தேவர்கள்**
**நிகழ்நரர் கீட மந்தமு மாமே.** 2230

இம் – எனின், சகலாவத்தையில் நிற்போர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று,

இ – ள் ; சகலாவத்தையில் சேர்ந்தோர் சகலர் ; அவர்கள் ஆகமங்களால் சொல்லப்பெறும் மூவகையான மலங்களோடும் கூடியவர்கள், அவர்கள் தனக் கொப்பார் யாரும் இல்லாத பிரமனும், திருமாலும், பலராகிய பெரிய தேவர்களும், நிகழ்கின்ற நரர்கள் முதலாகப் புழு ஈறாகிய அனைவருமாம் என்றவாறு.

சகலராவார் சகலாவத்தையினில் நிற்போர் ; அவர்கள் மும்மலங்களோடு கூடியவர்கள் ; பிரமன், திருமால், உருத்திரன் முதலான தேவர்களும். நரர் முதல் புழு ஈறான உயிர்களும் சகலர் என்பது கருத்து.

மலமூன்றாவன – ஆணவம், கன்மம். மாயை என்பன. நிகரில் என்ற அடையை நிகரில் மலரோன், நிகரில் மால் என எல்லாவற்றோடும் ஏற்றபெற்றிக் கூட்டுக, (109)

**தாவிய மாயையிற் றங்கும் பிரளய**
**மேவிய மற்ற துடம்பாய்மிக் குள்ளன**
**ஓவ லிலக்கண ரொன்றிய சீகண்டர்**
**ஆவயின் நூற்றெட்டு ருத்திர ராகுமே.** 2231

இ-னின், சகலாவத்தையில் பிரளயாகலர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்; அசுத்த மாயையினுலாகிய உடலைப் பெற்று அம்மாயையிலேயே தங்கிய சீகண்டர் நூற்றெட்டு உருத்திரர்களும், அம்மாயையை உடம்பாகப் பெற்று, தமக்குக் கிடைத்தனவாகிய மர்யையை அகன்ற இலக்கணம் உடையோராய், இயல்பாகவே மாயையகன்ற சீகண்டராதியர்களோடு ஒன்றிய சீகண்டரும் நூற்றெட்டு உருத்திரர்களும் ஆவார் என்றவாறு.

இயல்பாகவே மாயையினீங்கி இருமலமுடைய சீகண்டரும், 108 ருத்திரர்களும். சிவனருளால் பரிபாகப்பெற்று, பிரளயகாலத்தில் மாயையினிங்கிய சீகண்டரும். 108 ருத்ரர்களும் சகலாவத்தையில் பிரளயாகலராவர் என்பது கருத்து.

தாவிய - கடந்த. தா - கேடு. தாவிய - கெட்ட எனலும் ஆம். தாவிய - மாயை அசுத்தமாயை. அதில் தங்குதலாவது அதனாலாய தனுகரணாதிகளைப் பெற்று அதன் காரியமாகிய உலகில் தங்கி. அதிகாரத்தை வகிப்பவர்கள் என்க.

பிரளயம் என்பது பிரளயாகலரை உணர்த்திற்று.

மேவிய மற்றது - அடைந்த அம்மாயை, அம்மாயையாலாகிய உடம்பையுடையராகி. மிக்கு உள்ளன - மாயையின் மிகுதித்தன்மையாகிய மறைக்குந்தன்மைகள். ஓவல் – நீங்குதல். ஓவல் இலக்கணர் – மறைக்குந்தன்மை நீங்கி அருள் விளக்கஞ் செய்யும் தன்மை பெற்ற ஆன்மாக்கள். இவர்கள் மும்மலராக இருந்து பரிபாகத்தால் அருள் விளக்கம்பெற்றுப் பிரளயாகலரான மூத்தான்மாக்கள். அவர்கள் இரண்டு மலம் உடையவர்கள். சுத்தாசுத்த அத்துவாவில் வசிப்பவர்கள்; அசுத்த மாயா தோற்ற மான சூக்கும தனு கரணுதிகளையுடையவர்கள். இவர்களுக்குச் சிவபெருமான் முன்னின்று கருணைக் கண்ணோக்கம், பரிசம், திகழும் வாக்கு என்ற மூவகையானும் தீக்கை புரிந்து, கருணை செய்வார்.

இவர்களில் அநாதியே மலகன்மங்கள் மட்டும் உடைய பிரளயாகலரும், இடையே பக்குவ விசேடத்தால் மாயாபந்த மட்டும் நீங்கிய மலகன்மங் களுடையாரும் என இருவகையராகித் தனித்தனி பக்குவ மலகன்மம் உடையவர்கள்; பக்குவா பக்குவ மலகன்மம் உடையவர்கள்; அபக்குவமலகன்மம் உடையவர்கள் என மூவகைப்படுவர்.

பக்குவ மலகன்ம முடையவர்கள் சீகண்ட ருத்ர ரும், புவனேசர், மகாதேவர், வாமதேவர், பவோத் பவர். ஏகபிங்கர், ஏகேட்சணர், ஈசானர், அங்குஷ்ட மாத்திரர் என்னும் மண்டலர் எண்மரும், இவர் களுக்கு அதிபர்களாய், சம்சார சாகரத்தில் சுழல் கின்ற ஆன்மாக்களைத் திருப்புகிறவர்களாகிய அநந் தர், திரிகலர், கோப்தர், க்ஷேமேசர், பிரமபதி,

துருவர், தேஜோதிபர், கணேசர் என்னும் எண்மரும், வீரரும் எனப் பதினெண்மர். இவர்கள் சிவ கருணையைப் பெற்று, மந்த மல பரிபாகத்தோடு, அட்ட வித்யேசர்களால் ஏவப்பட்டு, பிரகிருதி மாயைக்குக் கீழான காரியங்களைப் புரிந்து, வித்யா கலையில் மாயா கருப்பத்தில் வசிப்பவர்கள். இவர்களில் சீகண்டருத்ரராலே கலையிலிருந்து ஆன்ம தத்துவங்கள் இருபத்தைந்தும் தோன்றும்.

பக்குவாபக்குவ மலகன்மமுடையார் பிரமாண்டதாரகராக விளங்கும் சத்ருத்ரரும் காலாக்கினி ருத்திரரும் ஆவர். இவர்கள் புவனபதிகள்.

அபக்குவ மலகன்மமுடையவர்கள் மிச்சிராத்துவாவில் வசிக்கும் பலர். இங்ஙனம் பிரளயாகலர் பலர் என்பதைச் சுட்டியே திருமூலதேவநாயனார் ஒவல் இலக்கணர் எனப் பொதுமையானும், அவர்களில் சிறந்தார் சீகண்டர் ஆகையால், ஒன்றிய சீகண்டர் எனவும், ஏனையோர் நூற்றெண்மர் ஆகையால், ஆவயின் நூற்றெட்டு உருத்திரராமே எனவும் கூறினர் என்க. (110)

ஆகின்ற கேவலத் தாணவத் தானவர்
ஆகின்ற வித்தே சராமனந் தாதியர்
ஆகின்ற வெண்ம ரெழுகோடி மந்திரர்
ஆகின்ற வீச ரனேகரு மாமே. 2232

இ - னின், விஞ்ஞான கலரியல்பை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : கேவல நிலையில் ஆணவமலம் ஒன்றோடு மட்டும் கூடிய விஞ்ஞானகலர் அட்ட

வித்தியேசர்களாகிய அனந்தாதியரும் சப்தகோடி மகாமந்திரர்களும் மந்திரேசர்கள் பலரும் ஆம் என்றவாறு.

விஞ்ஞானகலர் மூலமலம் ஒன்றுமட்டும் உடையார். அவர்கள் அட்டவித்யேசரும், சப்தகோடி மகா மந்திரர்களும் மந்திரேசர்களும் ஆவர் என்பது கருத்து.

விஞ்ஞானகலர் – விஞ்ஞானத்தால் கட்டுப்படுகிறவர்கள். விஞ்ஞான + அகலர் – விஞ்ஞானகலர். எனின் விஞ்ஞானத்தாலே கலையை அகன்றோர் என்க. இவர்களுக்குப் பிரபோதாகலர் எனவும் பெயருண்டு. பிரபோதம் – விசேடமான ஞானம். இவர்கட்கு அநாதியான ஆணவமலம் ஒன்றுமட்டும் உண்டு. சுத்தாத்துவாவில் வசிப்பவர்கள். நேரே பரசிவத்தின் கருணைக்கு உரியவர்கள். விந்துவாய சுத்தமாயாகாரியமான தனுகரண புவன போகங்களை உடையவர்கள். இவர்கட்குப் பரசிவம் உண்ணின்று திருநோக்கால் அனுக்கிரகம் செய்யும்.

இவர்களிலும் இயல்பாகவே ஆணவமட்டும் உடையாரும், ஏனைய மலங்களிலிருந்து நீங்கி ஆணவ மட்டும் உடையாரும் என இருவகையர் உளர். பக்குவம் பெற்ற இவரும் பக்குவர் அபக்குவர், பக்குவா பக்குவர் என முத்திறப்படுவர்.

இவருள் பக்குவர் அணுசதாசிவரும், அட்டவித்தியேசரும் ஆவர். அணுசதாசிவர்கள் பிரணவர், சுதர், சுதீப்தர், காரணர், சுசிவர், ஈசர், சூக்குமர், காலர், அப்பு, தசேகர், எனப் பதின்மர், இவர்கள்

அன்பே வடிவானவர்கள். இவர்கள் மயேச்சுர னுடைய அனுக்கிரகத்தைப் பெற்று. அதே மாயா புவனங்களில் உள்ளவர்களுக்குக் கருணை செய்து கொண்டு, சாதாக்கிய தத்துவத்திலே போகங்களை நுகர்ந்து, சதாசிவமாகிய யோகமூர்த்தியைச் சேவித் திருப்பவர்கள், இவர்களில் தீவிர சத்திநிபாதம் பெற்றவர்கள் அனந்த ஞானம் அனந்த வீரியம் முதலான ஆறு குணங்களாலே விளங்கி அனைவரை யும் காத்து, அளவிறந்த போகங்களுடன் விந்து தத்துவத்தில் வசிப்பார்கள். இவர்கட்குப் போகத்தில் வைராக்கியம் பிறந்தபோது தீவிரத்தில் தீவிரதர சத்திநிபாதத்தால் சிவம் விடுபேறருளும்.

அட்டவித்தியேசர்கள்; அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்ரர், ஏகருத்ரர், திரிமூர்த்தி, சீகண்டர், சிகண்டி என்னும் எண்மர். இவர்கட்கு அதிகாரமலம் மட்டும் உண்டு. அசுத்தமாயா கன்மங்கட்கு அதிகாரிகள். ஈச்சுரதத்துவ புவனங் கட்கு அதிபதியாய் அங்கு வசிப்பவர்கள். இவர்களில் ஒருவரைவிட ஒருவர் ஒவ்வொரு கலையிற் குறைந் தவர்கள். அனந்தர் மோட்சம்பெறின் அடுத்துச் சூக்குமர் அனந்த பதவிவகிப்பர். இப்படியாகக் கடைசியில் சிகண்டி சீகண்டராகப் பிரளயாகலரில் பரிபாகம் பெற்ற ஒருவர் சிகண்டியாவர் இதனை

ततोमुक्त्यर्थमासन्नं कनिष्ठं तत्पदे विभुः ।
नियुन्क्त्यनुग्रह्यान्यत्तत्पदे नियुन्क्त्ययपि ॥

என்னும் பௌஷ்கர வசனத்தாற்றெளிக. இதனையே ஆகின்ற வித்தேசரா மனந்தர் என்றது.

எழுகோடி மந்திரர் – மந்திரேசர் அநேகர்; இவர்கள் பக்குவா பக்குவமலர் ஆவர். இவர்கள் இயல்பை.

**विद्याः विद्याह्वयं प्राप्ताः संख्यया सप्तकोटयः ।**
**प्रशान्तः कलुषाः सर्वे महात्मानोऽमितौजसः ॥**

என்ற பௌஷ்கராகம வசனத்தாலும் தெளிக. இதனை, " ஏழுகோடி மந்திரர் ... ஈசர் அநேகரும் ஆமே " என்றதால் குறித்தனர். (111)

ஆமாறிற் சிவ ஞாரருள் பெற்றுளோர்
போமலந் தன்னுற் புகழ்விந்து நாதம்விட்
டோமய மாகி யொடுங்கலி னின்மலந்
தோமறு சுத்தா வவத்தைத தொழிலே. 2233

இம் – எனின், சுத்தாவத்தை எய்துமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: முற்கூறிய விஞ்ஞானகலரில் சிவனருள் பெற்றோர் வலியொடுங்கிக் கெட்ட மூலமலத்தால் புகழப்படுகின்ற ஒளிமயமான விந்துவும், ஒலிமயமான நாதமும், ஆகிய உடலையுந்துறந்து, பிரணவ வடிவராகி ஒடுங்கலால், நின்மலமாகிய குற்றமற்ற சுத்தாவத்தையில் தொழிலைப் பொருந்துவர் என்றவாறு.

விஞ்ஞானகலரில் சிவனருள் பெற்றோர் பிரணவ மாகி நின்மலாவத்தையை எய்துவர் என்பதாம்.

ஆம் அவரில் – விஞ்ஞான கலரினின்று ஆக்கம் பெறும் அவரில் என்க. அஃதாவது நிலையினுயர் வாரில் என்பதாம்.

போம் மலம் – வலிகுன்றும் ஆணவம் என்க. விந்து – ஒளி நாதம் – ஒலி ஆகிய இருவடிவும் நீங்கி, உண்மை வடிவாய பிரணவ வடிவெய்தி என்பார், ' ஓமயமாகி ' என்றார். தோம் – குற்றம், மலச் சேர்க்கை

ஒடுங்கலின் – அதிகாரமலமும் நீங்கிச் சிவத் தோடு ஒடுங்கலின் என்க. நின்மலமாகிய சுத்தா வத்தைத் தொழிலாம் என்க. (112)

ஓரினு மூவகை நால்வகை யும்முள
தேரி லிவைகே வலமாயை சேரிச்சை
சாரிய லாயவை தாமே தணப்பவை
வாரிவைத் தீசன் மலமறுத் தானே. 2234

இம் – னின், கேவல நிலையின் பாகுபாடுகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஆராயின் கேவலநிலை மூன்றும் நான்கு மான பகுப்புடையனவாம். தேருமிடத்து இவை கேவலமும், மாயையொடு கூடியமையால் இச்சை யைச் செய்கின்ற கேவல சகலமும், சார்ந்து நின்று போகங்களை நுகர்த்தும் இயல்பினவாய இச்சைகள் தாமே விலகுவனவாய கேவல சுத்தமுமாகிய மூன்றும், அவற்றுடன் கடல்போன்ற அருளாகிய நாலாவதையும் கூட்டி இறைவன் மலத்தை அகற்றி உய்யக் கொண்டனன் என்றவாறு.

கேவல நிலையினைக் கேவலகேவலம், கேவல சகலம், கேவல சுத்தம் என மூன்றாகவும், நின்மல கேவலமாகிய அருட்கேவலம் கூட்டி நான்காகவும் உள்ள அவத்தைகளைக் கூட்டி ஈசன் மலமறுத்தாட் கொள்வன் என்பது கருத்து.

அருட்கேவலம் அருளொடு கூடி ஆன்மா செயலற்று மடங்கியிருப்பதாகலின் அதனை ஏனைய மலசம்பந்தமான கேவலங்களோடு கூட்டாது பிரித் தோதினார்.

சிவானுபவம் உடையது அருட்கேவலம். மலத் தால் சிலைபோலச் செயலும் சிந்தையும் அற்றுக் கிடப்பது கேவல கேவல முதலிய மூன்றும் என்க.

ஈண்டுக் கேவலம் என்றது கேவல கேவலத்தை மாயைசேர் இச்சை – மாயையில் விளையும் இச்சை. அஃதாவது தனிக் கேவலாவத்தையில் மாயையும் மாயேயமாகிய தத்துவங்களும் ஆன்மாவோடு கூடுத லின்மையின் அவற்றால் விளையும் விருப்புமட்டும் கூடிய நிலை கேவல சகலம் என்பதாம்.

இங்ஙனம் சார்ந்த குணரூபமான இச்சையும் தாமே நீங்கிய நிலை கேவல சுத்தம் என்பார் 'சார் இயலாயவை தாமே தணப்பவை' என்றார். இயலாயவை – குணரூபமான இச்சைகள்.

வாரி – பெருக்காய வருவாய். அது ஈண்டுச் சிவ கருணையான பெருக்கினை உணர்த்திற்று. வைத்து என்ற வாய்பாட்டால் சிவம் அருளை ஆன்மாவொடு கூட்டி என உணரவைத்தவாறாம். ஈசன் மலம்

அறுக்கச்செய்யும் உபாயம் திருவருட்சத்தியை ஆன்மாவிடம் பதித்தலாகிய அருட்செயல் என்பது உணர்த்தியவாறு. வாரிவைத்து ஈசன் மலமறுத்து நிலை அருட்கேவலம் என்க. அது உயிர் அருளோடு ஒன்றி அருளனுபவம் ஒன்றையன்றிப் பிறிதொன்றையும் அறியாது கிடக்கும் அருட்கேவலநிலை என்க, (113)

பொய்யான போதாந்த மாறாறு விட்டகன்று
எய்யாமை நீங்கவே யெய்தவன் றானாகி
மெய்யாய் சராசர மாய்வெளி தன்னுட்புக்கு
எய்தாம லெய்துஞ்சுத் தாவத்தை யென்பவே 2235

இ-ம் - எனின், சுத்தாவத்தையின் இலக்கணமும் எய்தும் உபாயமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்; நிலையற்ற மண்முதல் குடிலையீறான முப்பத்தாறு தத்துவங்களையும் விட்டு, தொடர்பு சிறிதுமின்றி நீங்கி, அவற்றுட் பற்றுச் சிறிதுமின்றி நீங்கவே எய்தப்படுகின்ற பொருளாகிய சிவமே தானாகி, நித்தியமாய், சரம் அசரமான எங்குமாய், பரவெளியுள்ளும் கலந்து, அடையாமலே என்றும் அடைதலாகிய நிலையே சுத்தாவத்தை எனப்படுவது என்றவாறு.

ஆன்மா மாயேயங்களின் நீங்கி, அடையப்படுமவனே தானாகி, நித்தியமாய். எல்லாமாய், ஞானாகாயமாய்க் கலந்து என்றும் விளங்குவதே சுத்தாவத்தையாம் என்பது கருத்து.

போதம். - அறிவு, போதாந்தம் - அறிவின் முடிவாகிய குடிலையாகிய நாதம். ஆகவே மண்முதல்

குடிலையீருனமுப்பத்தாறென்பது உணர்த்தப்பெற்றது, விட்டு எனவே அமையுமாயினும் அகன்று என்று மேலுங்கூறியது மாயேயங்கள் விட்ட அளவில் மீளவும் பற்று மியல்பின ; அவற்றை அறவே உதற வேண்டும் என்பது உணர்த்துதற்காக என்க. மேலும் எய்யாமை நீங்க என்றது அவற்றின் வாசனையும் இல்லாது நீங்க என வாசனுமல்மும் நீங்க என்று உணர்த்தியவாறும்,

எய்து + அவன்தாளுகி – அடையப்படுகின்ற – அல்லது கருணையால் ஆன்மாவிடம் தானே வந்து எய்துகின்ற பரம்பொருளே தாளுகி என்க. எய்தவன் என்பதனை வினைப்பெயராக்கி ஒரு சொல்லாகக் கொண்டு முயற்சித்தவன் எனப் பொருள்கண்டும் இடர்ப்படுவர்.

மெய்யாய் – அவனேசானே ஆகிய நெறியில் நித்தியமாதல் கைகூடுதலின் மெய்யாய் என்ருர். மெய்யார் சராசரம் எனப் பாடங்கொண்டு இயங்குதிணையுயிர் நிலைத்திணையுயிர் உலகம் அனைத்தினுங்கலந்து எனப் பொருள்கூறி மெய்யாம் என்பதனை வாளா ஒழிப்பர் சிலர்.

வெளி – ஞானவெளி. எய்தாமல் எய்தும் அவத்தை சொல்லாமல் சொல்லல், நினையாமல் நினைத்தல், செய்யாமல் செய்தல் போன்றதொரு வழக்கு அமைதலாவது பிரிதலின் பின் நிகழ்வதாய்க் கூடுதல் என்னும் பொருளது. எய்தாமல் எய்தலாவது பிரிப்பின்றியே கலந்திருத்தல் என்க. ஆகவே சுத்தாவத்தையாவது சிவத்தொடு கலந்து எங்குமாய்

என்றுமாய் இருக்கும் நிலை என்பது விளக்கப் பெற்றமை காண்க. (114)

அனாதி பசுவியாத்தி யாகு மிவனை
அனாதியில் வந்த மலமைந்தா லாட்டி
அனாதியிற் கேவல மச்சக லத்திட்டு
அனாதி பிறப்பறச் சுத்தத்து ளாகுமே. 2236

இம் – எனின், ஆன்மாவை இறைவன் சுத்தா வத்தையில் ஆட்கொள்ளும் முறைமையை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : பசுக்களாகிய ஆன்மா அநாதி நித்திய மானவை; மலத்தால் வியாபிக்கப்பட்டவையாம். ஆயினும் இவ்வான்மாவை அநாதியிலும், ஆதியிலுமாக வந்துசேர்ந்த ஐம்மலங்களாலும் அலைக்கழித்து, அவற்றின் தீமைகளைப் போக்கி, அநாதியான கேவல சகலாவத்தைகளை எய்துவித்து, அநாதியாகப் பற்றி வருகின்ற பிறவிநீங்க அவ்வான்மா சுத்தாவத்திதனும் என்றவாறு.

ஆன்மாக்களை இறைவன் கேவல சகலத்துட் படுத்தி ஆட்டிவைத்து அவை பிறவி நீங்கச் சுத்த நிலையை எய்துவிக்கும் என்பது கருத்து.

உயிர்கள் நித்தமானவையாதலின் 'பசு அநாதி' என்றார். வியாத்தி – வியாப்தி என்பதன் திரிவு, வியாபி – மற்றவைகளைத் தன்னகத்தடக்கி நிற்பது. வியாத்தி – ஒன்றனுள் தானடங்கியது. ஆன்மா, எவ்வாற்றானும் அசித்தாதலில்லாத வியாபகப்,

பொருளாகிய இறைவன் போல பூரண வியாபகமும். அதிசூக்கும சித்தாதலுமின்றிச் சார்ந்த பொருளினிடத்து அப்பொருளளவாக வசிப்புண்டு வியாபித்திருக்கும் ஏகதேச வியாபி யாயினும் ஆணவமலத்தால் மறைப்புண்டு கிடத்தலின் " வியாத்தி ஆகும் " என்றார்.

இவனை என உயர்திணை ஆண்பால் வாய்பாட்டால் கூறியது பசுத்துவம் உடையனாய் முதன்மை பெற்றதால் என்க.

' அநாதியில் வந்த ' என்பதனை யோகவிபாகஞ் செய்து அநாதியில்வந்த ஆதியில்வந்த என இரண்டாக்குக மலம் ஐந்தனுள் அநாதி மலம் ஆணவம். ஆதியில் வந்தமலம் கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்ற நான்கு என்க. ஆட்டி என்றார் இறைவன் மலங்களோடு கூட்டுதல் ஆன்மாவின் தீயகுணங்களைப் போக்கற்கு என்க.

கேவலசகல நிலைகள் அநாதியானவை. அவற்றுட்படுத்துதலை இட்டு என்றார். அதனால் பிறவி நீங்க என்பதாம். சகலத்தை அச்சகலம் என்றது ஆன்மா சகலப்பட்டபோதுதான் சுட்டி அறியப்படும் தன்மையைப் பொருந்துதலான் என்க.

பிறவி பிரவாகம்போல் அநாதியாகலின் அநாதி பிறப்பு எனப்பட்டது. சுத்தம் – சுத்தாவத்தை. (115)

**அந்தரஞ் சுத்தாவத் தைகேவ லத்தாறு**
**தநதோர்தஞ் சுத்தகே வலத்தற்ற தற்பரத்**
**தின்பாற் றுரியத் திடையே யறிவுறத்**
**தன்பாற் றனையறி தத்துவந் தானே.** **2237**

இம் - எனின், சுத்த கேவலத்திருந்த உயிர் சுத்த துரியத்தில் தன்பால் தன்னை அறியும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் ; சுத்த கேவலாவத்தையின் வழியாகப் பரவெளியை அடைந்தவர்கள், சுத்த கேவலம் நீங்கிய தற்பர சிவத்தின்பால் தம் அறிவானது சுத்த துரியத்தே பொருந்த ஆன்மாவாகிய தன்பால், சிவமாகிய தன்னையே உணரும் உண்மை தானாக விளங்கும் என்றவாறு.

சுத்தகேவலத்தை வழியாகக்கொண்டு ஞானமாகிய ஆகாயத்தை அடைந்தவர்கள் அந்நிலை கடந்த தற்பர சிவத்தின்பால் சுத்த துரியாவத்தையில் பொருந்திச் சிவத்தைத் தன்னுள்ளேகண்டு தாம் நித்தியப்பொருள் ஆவர் என்பது கருத்து.

சுத்த கேவலாவத்தை ஆறு அந்தரம் தந்தோர் சுத்த கேவலத்தற்ற தற்பரத்தின்பால் அறிவு துரியத்தேயுற, தன்பால் தனையறி தத்துவம் தானும் என்று கூட்டிப் பொருள்கொள்க.

சுத்தகேவலமாமது திருவருளிற்றோய்ந்து இன்ப நுகர்வுமின்றிக் கிடக்கும் நிலை. தேன்வண்டு தேன் குடத்து விளிம்பிலிருந்து நாவை நீட்டித் தேனை நுகரின் இனிமையைத் துய்க்கும். தேனிலேயே விழுந்தமிழுமாயின் அவ்வினிமையுட்சிக்கி நுகருமாற்றலையும் இழந்து கிடக்கும்; அதுபோலத் திருவருளிற்றோய்ந்து ஒன்றும் அறியாது கிடக்கும் நிலையாம்.

தேனில் விழுந்த வண்டு எப்படியோ உதறியடித்துக்கொண்டு விண்ணில் இறகை விரித்து எழுமாயின் தன்மேனியில் ஒட்டிய தேனையும் நக்கி நக்கி உணரும். அதுபோல அருளிலாழ்ந்த ஆன்மா அருள் இன்பம்; அதனை நுகர்வோன் யான் என்று அவ்வருளில் நீங்காமல் நீங்கிச் சிறிது புறம்போய் வேறயின் அருள் மேலானது. மேலான சிவத்தின் தன்மையாய் மிகச் சிறந்தது என்பதை உணர்ந்து திருவருளை அனுபவித்து அதன் மேலான நிலையை எய்த அவாவும் இந்நிலையை விளக்கும் பகுதி "சுத்த கேவலத்து அற்ற தற்பரத்தின்பால், அறிவு உற" என்பது.

அங்ஙனம் சிவனருளை நுகர்தலே சுத்ததுரியம். அதுவே தன்னுள் தன்னை அறியும் தத்துவம் என்பதாம். (116)

ஐயைந் தொடுங்கு மான்மாவி லான்மாவு
மெய்கண்டிடுஞ் சுத்த வித்தையில் வீடாகுந்
துய்யவன் வித்தை முதன்மூன்றுந் தொல்சத்தி
ஐயன் சிவஞ்சத்தி யாங்தோற்ற மவ்வாறே. 2238

இம் – எனின், நின்மலாவத்தையில் தத்துவ ஒடுக்கமும் – தோற்றமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: ஆன்மாவின் இடமாக மண்முதல் புருடன் ஈறான இருபத்தைந்து தத்துவங்களும் ஒடுங்கும் ஆன்மா சிவதத்துவம் ஐந்தனுள் சுத்த வித்தையால் உண்மை ஞானம்பெறும்; சுத்தவித்தை முதான மூன்றும் நீங்கும் நிலை துய்ய நின்மல சுழுத்தியாம். அவற்றுடன் பழமையான சந்நிபாதிப

ஐயை, சிவத்துள் ஒடுங்கிய நிலையில், சிவம் ஒன்றே விளங்க நின்ற நிலை நின்மல துரியம்; சிவதத்துவமும் நீங்காமல் நீங்கிய நிலை நின்மல துரியாதீதமாம். இவை ஒடுங்குமுறை தோன்றுமுறையிலும் சிவதத்துவத்தி லிருந்து சத்தியும் அவற்றினின்று சாதாக்கியம், ஈச்சுரம், சுத்தவித்தைகளும் தோன்றும் என்றவாறு.

இருபத்தைந்து தத்துவங்களும் ஆன்மாவில் ஒடுங்கும். ஆன்மா சிவதத்துவங்களில் சுத்தவித்தை நீங்காமல் நீங்கிய அவதரம் நின்மல சாக்கிரம். சுத்த வித்தை, ஈச்சுரம், சதாக்கியம் மூன்றும் நீங்கிய அவதரம் நின்மல சுழுத்தி. அவற்றுடன் சத்தியும் நீங்கின அவதரம் நின்மல துரியம். சத்தியும் சிவத்துள் ஒடுங்க இவற்றால் செலுத்தப்படும் கருவி களும் அடங்க இருக்கும் நிலை நின்மல துரியாதீதம் ஆம் என்பது கருத்து.

ஐயைந்து – மண்முதல் புருடதத்துவம் ஈறான ஆன்ம தத்துவங்கள் இருபத்தைந்து அவை ஆன்மா விற் காரியப்படாது அடங்கி நிற்றலை 'ஆன்மாவில் ஐயைந்தொடுங்கும்' என்றதாற் குறித்தவாறாம்.

ஆன்மாவும் சுத்தவித்தை இல் மெய்கண்டிடும்: ஆன்மா சுத்தவித்தை ஒடுங்கின நிலையில் – நின்மல சாக்கிர நிலையில், நின்று உண்மையை உணரும் என்பதாம்.

துய்ய அவ்வித்தை முதன் மூன்றும் வீடு (நின்மல சுழுத்தி) ஆகும் – சுத்தவித்தை ஈச்சுரம் சாதாக்கியம் என்ற மூன்றும் நீங்காமல் நீங்கிய நிலை நின்மல சுழுத்தியாம் என்பது.

தொல்சத்தி ஐயன்-சத்தியும் ஐயனாகிய சிவத்துள் அடங்க நின்ற நிலையும். சிவதத்துவமும் நீங்காமல் நீங்கிய அவதரமும் நின்மல துரியாதீதமாம் மீட்டும் தோற்றக்காலத்தில் சிவதத்துவத்திலிருந்து சத்திதத்துவமும், அங்ஙனமே பிறவும் ஆம். என்பது.

இம்மந்திரத்திற்குச் சுத்தமான பாடங்கிடையாமையாலும், பொருள்விளங்கச் சாதனங் கிட்டாமையானும், கிடைத்த சாதனத்தைப் பயன்படுத்த மாட்டாமையானும் பலவேறு பாடங்கண்டு பிழைபட உரைவகுத்தனர் பல்லோர், ஞானாவரண விளக்கத்துக் கண்ட பாடமே பிறநூன் மேற்கோள்களுக்கும் இயைந்த கருத்துச் சிறப்புடைமையானும் கயிலை வெள்ளியம்பல வாணமுனிவர் உரைக்குறிப்புகளைத் தத்தமையானும் அதுவே எம்மாலுங்கொள்ளப் பட்டது,

சிவஞான சித்தியாரினும்.

" தத்துவம் எண்மூன் றும்சென்
 றுன்மதத் துவத்தொ டுங்கும்
வித்தையின் ஒடுங்கும் ஆறும்
 சிவத்தினின் ஒடுங்கும் மூன்றும்
நித்தத்த் துவம்இம் மூன்றும்
 என்பர்கள் இரண்டும் நின்ற
சுத்தமாம் சிவத்தொ டுங்கும்
 தோற்றமும் இதுபோல் ஆகும். "

எனவருதல் காண்க. ஞானசித்தியாகமத்தும்.

शुद्धविद्येश सादाख्यं विन्दुनादे लयोदितम् ।
विन्दुनादं द्विधा तत्त्वं कुटिलामध्य लयोदितम् ॥

என வருதலானும் சிவம் சத்தி இரண்டிலும் ஈச்சுரம் சாதாக்கியம் சுத்தவித்தை என்ற மூன்றும், ஒடுங்கு முறையாவது, சிவதத்துவம் ஞானமாகவும், சத்தித் துவம் கிரியையாகவும் இருத்தலின் என்க. சிவசத்தி தத்துவங்களின், சமதையும், குறைவு நிறைவு களுமே சாதாக்கிய, ஈச்சுர, சுத்தவித்யைகளாம் என்க. ஆகவே இம்மந்திரத்து சுத்தவித்தை முதன் மூன்றும் தொல்சத்தி ஐயன் சிவம் சத்தியாம் தோற்றம் என்றதும் தெளியப்பெறுதல் ஓர்க. ( ஞானாவரணம் பக்கம் 85. )

ஐயைந்து மான்மாவி லாறே டடங்கிடும்
மெய்கண்ட மேன்மூன்று மேவுமெய் யோகத்தில்
கைகண்ட சத்தி சிவபாகத் தேகாண
எய்யும் படியடங் கும்நாலேழ் எய்தியே 2239

இம் – ளனின், தத்துவங்கள் ஒடுங்கு முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : இருபத்தைந்து ஆன்ம தத்துவங்களும் ஆறு வித்யாதத்துவங்களும் ஆன்மாவில் அடங்கும். உண்மையான சிவதத்துவங்களில் முன்னுள்ள சுத்த வித்யை, ஈச்சுரம், சாதாக்கியம் என்ற மூன்றும் சிவத் துள் அடங்கும், துணையான சத்திதத்துவம் சிவத்தின் பகுதியாகக்காண இருபத்தெட்டாக எய்தி மீட்டும் தோன்றும்படி யடங்கும் என்றவாறு.

ஆன்மாவில் ஆன்மதத்துவமும், வித்தியா தத்துவமும், வியோமமாகிய சிவத்துள் சுத்தவித்யையாதி மூன்றும், சத்தி சிவத்திலுமாக அடங்கும் என்பது கருத்து.

"இம்மந்திரம், ஞானாவரண விளக்கத்து, சித்தாந்தத்தில் கூறும் வித்தியாதத்துவ சிவதத்துவங்களை வேதாந்தத்தின் அடக்குமாறும், அடக்காது விரிக்குமாறும் கூறுகின்றது. ஈண்டு அடக்குமாறு திருமந்திரத்தில்,

"ஐயைந்து மான்மாவில் ஆறோ டடங்கிடும்
மெய்கண்ட மேன்மூன்றடங்கும் வியோமத்தில்
கைகண்ட சத்தி சிவப்பரத் தேகாண
எய்தும் நாலேழும் இவைகள் அடங்குமே"

எனச் சில பாடபேதங்களுடன் வருதல காண்க. பின்னரும் அந்நூல் பக்கம் 84, 128–லும், இப்பதிப்பில் உள்ள பாடமே காணப்பெறுகின்றது.

மற்றும் ஞானாவரண விளக்க மாபாடியக்காரர் கூறுவது:

நாலேழிருபத்தெட்டு என்றது வேதாந்த தத்துவத்தை. இது முன்னர்க்கூறிய "ஐயைந்துமாகும். குறிக்கிலே (2178) என்றாற்போல ஈண்டும் அடங்கும் வகை கூறியது. ஞானசித்தியிலும்,

तत्त्वनिर्णयसिद्धान्तं शृणु हैमवतीश्वरि ।
आत्मतत्त्वं चतुर्विंशदात्ममध्ये लयोदितम् ॥

विद्यातत्वं तथा पञ्च मायामध्ये लयोदितम् ।
शिवतत्वं तथा पञ्च नित्यं सत्यस्य साधनम् ॥
शुद्धविद्येशसादाख्यं विन्दुनादे लयोदितम् ।
बिन्दुनादं द्विधा तत्वं कुटिलायां लयोदितम् ॥
कुटिला कुण्डली विन्दुरिच्छाज्ञानक्रियोदितम् ।
इच्छाज्ञानक्रियाशक्तिः सर्वत्र जगदुद्भवः ॥
इच्छाज्ञानक्रियाशक्तिः पराशक्तिलयोदितम् ।
परापरविधाशक्तिः शिवतेजोलयोदितम् ॥
शिवमत्यन्तसंभिन्नं जातनाशविनाशनम् ।
अणौ महति तद्व्याप्तं सर्वात्मनां लयः प्रभुः ॥
जगच्छक्तिमयं व्याप्तं जगच्छक्तिमयं शिवम् ।
जगदुत्पद्यते शक्तेः शक्तिस्तु परमः शिवः ॥
एवं तत्वलयं सूक्ष्ममेकं तत्वप्रवर्तकम् ।
एवं तत्वविधानोक्तमेवं तत्वस्य निर्णयम् ॥

என வருமாற்றானுமுணர்க. ஈண்டு உதகரித்த திருமந்திரத்தில் "ஐயைந்து மான்மாவில்" என்றது இத்தந்திரத்திற் புருட தத்துவங்கூட இருபத்தைந்தும் ஆன்மாவிற்றோன்றி யொடுங்கு மாற்றால் என்க. இதனால் கலையிற் பிரகிருதி தோன்றியொடுங்கு மென்பதும் கூடுமென்க.

आत्मतत्वं चतुर्विंशदात्मध्ये लयोदितम् ।

என்பதனாலும் விளங்கும். இதுபோல வித்தியா தத்துவமாறும் மாயையிலொடுங்கு மாகலின்.

विद्यातत्वं तथा पञ्च (?) मायामध्ये लयोदितम् ॥

எனக்கூறுதலின் " ஆறேட்டங்கிடு மெய் " (திருமந்-2239) யென்றது. ஈண்டு மெய்யென்றது மாயாதனு. அதனை மாயையாயுபசரித்தது. அந்த மாயை கண்ட மெனலின். கண்டமேலானது மாயையின் தோற்றஞ் செய்த சுத்தவித்தை. அது மாயையின்கண் ஒடுங்கும் என்க. (?) " மூன்றடங்கும் வியோமத்தில் " என்றது தோன்றியவாறே ஒன்றி லொன்று சென்று ........... மாகிற சத்தியில் அடங்கும். கைகண்ட சத்தி சிவத்தில்; அது பரத்தில் என்க.

இதனுல் வேதாந்த தத்துவங்களாக முன்னர் 2136-ம் மந்திரத்துத் " தத்துவ நாலேழ் எனவுன்னத் தக்கதே " என வந்துள்ளமை காண்க.

மெய்கண்ட மேல் மூன்று - உண்மையுணர்தற்கு ஏற்றதாக ஆன்மாவிற்குச் சிறிது அறிவு விளக்கந் தருவதாகிய, ஆன்மதத்துவங்களுக்கு மேலுள்ள தாகிய வித்யாதத்துவங்களில் முதன்மூன்றும் என்க. இங்ஙனமன்றிக் காயபரம், வியோமம். பரம் என்ற மூன்றென்பாரும் உளர். அஃது ஈண்டியைபின்மை காண்க.

வியோமம் - சிவம், " மெய்த்த வியோமமும் " (2136) என்புழியும் இப்பொருளதாதல் காண்க. 'மெய்யோகத்தில்' எனப் பாடங்கொண்டு தவத்தில் என்பாரும் உளர்.

கைகண்ட சத்தி - இங்ஙனம் ஒடுங்குதலை அறிதற் குத் துணைபுரியும் சத்தி தத்துவம். சிவபாகத்தே

காண – சிவனிடம் ஒடுங்க என்பதாம். சத்தி சிவம் பரத்தே காண' என்பது பாடமாயின் சத்தி சிவ தத்து வத்திலும் சிவதத்துவம் பரத்திலும் ஒடுங்க என்க. இந்தப் பாடமே சிறந்ததாதலை शक्तिःशिवेशिवः परे ॥ என்னும் ஞானசித்தி வசனத்தால் தெளிக. (118)

ஆணவத் தாரொன் றறியாத கேவலர்
பேணிய மாயை பிரளயா கலராகுங்
காண முருவினர் காணுமை காண்பவே
பூணுஞ் சகலமும் பாசமும் புக்கோரே. 2240

இம் – எனின், மூவகையாருயிர்வர்க்கத்தின் இலக்கணத்தைத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: ஆணவமலம் ஒன்றுமேயுடையராய், வேறெதனையும் அறியாத ஆன்மாக்கள் கேவலராவர், ஆணவத்தோடு, பேணப்படுவதாய சுத்த மாயை இரண்டையுமுடையர் பிரளயாகலராவர். காணப் படும் வடிவுடையார்களாகிய சகலான்மாக்கள் இவர் களைக் காணுமை ஒன்றுமே காண்பார்கள். அங்ஙனம் காணுமையையே அணியாகப் பூணும் சகலர் ஆணவம் கன்மம் மாயை என்ற மூன்றும் புக்கோராவர் என்றவாறு.

மூவகை யான்மாக்கள் இலக்கணம் இது என வரையறுத்தவாறு.

பேணிய மாயை – பேணப்படுவதாகிய மாயை என்றது சுத்தமாயாபுவனத்தில் நிகழும்செயலை

யுணர்த்திற்று. ஆகவே ஆணவர், சுத்தமாயா காரிய புவனத்தில் நிகழும் கன்மமும் உடையார் பிரளயா கலர் என்றவாறு.

பின்னர் மாயை என்றது அசுத்த மாயையும் அதன் காரியமாகிய புவனபோகங்களும் என்க.

காணும் உருவினர் – தூல உடலுடையராகிய சகலர், காணாமை – நுண்ணுடலும் ஞானவுடலும் உடைமையாற் காணாமையையே காண்பவர் ஆவர் என்பதாம். இங்ஙனமன்றி விஞ்ஞானகலர் அருவினர். பிரளயாகலர் அருவுருவினர், சகலர் உருவினர் என உரை காண்பாரும் உளர்.

காணாமை காண்பர் என்பதற்கு நிலையாமை யுள்ள உலகினைக் காண்பவராவர் என உரை கூறுவர் சிலர்.

ஆணவ மாகும் விஞ்ஞான கலருக்குப்
பேணிய மாயை பிரளயா கலராகும்
ஆணவ மாயையுங் கன்ம மூன்றுமே
காணுஞ் சகலர்க்குக் காட்டு மலங்களே. 2241

இம் – எனின், இதுவுமது.

இ - ள் : பொருள் – வெளிப்படை.

(120)

கேவலந் தன்னிற் கிளர்ந்தவிஞ் ஞாகலர்
கேவலந் தன்னிற் கிளர்விந்து சத்தியால்
ஆவயிற் கேவலத் தச்சக லத்தையும்
மேவிய மந்திர மாமாயை மெய்ம்மையே. 2242

இம் – எனின், விஞ்ஞான கலரின் வடிவு முதலியன உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: கேவல நிலையில் விளங்குகின்ற விஞ்ஞானகலர், அந்த அவத்தையில் எழுச்சி பெறுவது விந்து சத்தியாலாம்; அங்குக் கேவல நிலையில் சகல நிலையை அடைதற்காக அவர்கள் மாமாயையாகிற சுத்தமாயா காரியமான மந்திர வடிவை அடைவர் என்றவாறு.

விஞ்ஞானகலர் விந்துசத்தியாற் செயற்படுவர், சுத்தமாயாகாரியமான மந்திரவடிவு பெறுவர். அப் போது அவர் விஞ்ஞானகலர் எனப்படுவர் என்பதாம்.

கிளர்ந்த – எழுச்சிபெற்ற அல்லது செயற்பட்ட. விஞ்ஞாகலர் – இடைக்குறையாய் விஞ்ஞான கலரை உணர்த்திற்று.

கிளர் – கிளர்ச்சி முதனிலைத் தொழிற்பெயர். கேவலந்தன்னிற் கிளர்ச்சி விந்துசத்தியால் என்க.

ஆவயின் – அவ்விடத்து. கேவலத்து அச்சகலத் தையும் மேவிய – கேவல சகலாவத்தையைப் பொருந்துவதற்காக. மேவிய – செய்யிய என்னும் வினை எச்சம். மாமாயை மந்திரம் மெய்ம்மை மன்னும் என வினைமுற்று வருவித்து முடிக்க சுத்தமாயை யின் காரியமான மந்திரங்களையே வடிவாகப் பொருந்தும் என்க. “ இருமையும் ஏற்கும் ” என்புழிப்போல மெய்ம்மை என்பது பண்பை உணர்த்தாது மெய் எனப் பொருள் மேல் நின்றது.
(121)

**மாயையின் மன்னும் பிரளயா கலர்வந்து**
**மாயையுந் தோன்ரு வகைநிற்க ஆணவ**
**மாய சகலத்துக் காமிய மாமாயை**
**ஏயமன் னூற்றெட் டுருத்திர ரென்பவே.** **2243**

இ-ம் - எனின், பிரளாகலரியல்பும், அவர் யார் என்பதும் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சுத்தமாயையோடு கூடிய பிரளயாகலர் ஆவார், தம்மைப்பற்றிய மாயை தோன்ருது ஆணவம் விஞ்சியவண்ணம் நிற்க, அவ்வாணவமும் வலிதொலைய அவர்கள் சகளத்திருமேனி கொள்ளுங் காலை இச்சை விளைவிப்பதாகிய சுத்த மாயையே உடலாகப் பொருந்திய நூற்றெட்டு உருத்திரர் என்பர் என்றவாறு.

பிரளயாகலர்க்கு ஆணவம்விஞ்சி மாயை ஒடுங்கியிருப்பதால் ஆணவம் வலியொடுங்க இச்சை வடிவான சுத்தமாயையே உடலாகக்கொள்ளுவர். அவர்கள் 108 உருத்திரர்களாம் என்பது கருத்து.

உருத்திரர்கள் பக்குவாபக்குவ மலமுடையவர் களாக, பிரமாண்ட தாரகராக இருக்கும் சதருத்திரரும் காலாக்கினி யுருத்திரருமாவர் இவர்கள் திக்காலாதிகளுக்கு வசப்பட்டவர்கள் ஆதலால் மாயாசம்பந்தம் இருப்பினும் அது இச்சித்தல் மாத்திரையாய் இருக்கும் என்பார் காமியமாமாயை ஏயமன் உருத்திரர் என்ருர். ஆணவம் மாய - ஆணவவலி தொலைய. சகலத்து - சகளத்திருமேனி தாங்கும்போது என்க. (122)

மும்மலங் கூடி முயங்கி மயங்குவோர்
அம்மெய்ச் சகலத்தர் தேவா சுரர்நரர்
மெய்ம்மையில் வேதா விரிமால் கீடாந்தம்
தம்முறை யோனிபுக் கார்க்குஞ் சகலரே. 2244

இம் – எனின், சகலான்மாக்கள் இவரிவர் என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மூன்று மலங்களோடு கூடி அவற்றைக் கலந்து மயங்கிக் கிடப்பவர்கள் அந்த மெய்ம்மையான சகலான்மாக்கள், அவர்களாவார் தேவர்களும், அசுரர் களும், நரர்களும் உண்மையில்லாத பிரமனும், விரிந்த திருமாலும், புழு ஈ ருனவைகளும் யோனி வாய்ப்பட்டு ஆரவாரிக்கும் சகலராவார் என்றவாறு.

கருத்து வெளிப்படை.

மெய்ம்மை இல் வேதா – இறைவன் முடியைக் கண்டேன் எனப் பொய்உகன்ற பிரமன். சத்யலோ கத்து இருந்தும் மெய்ம்மையேயில்லாத பிரமன் என்று மாம். விரிமிகு கீடாந்தத்து எனப் பாடங்கொள்ளின் விரிந்து பரந்த புழுவரை எனப்பொருள் கொள்க.(123)

சுத்த வவத்தையிற் றோய்ந்தவர் மும்மலச்
சத்தசத் தோடத் தனித்தனி பாசமு
மத்த விருள்சிவ ஞன கதிராலே
தொத்தற விட்டிடச் சுத்தரா வார்களே. 2245

இம் – எனின், சகலான்மாக்கள் சுத்தா வத்தையில் சுத்தராதற்கு உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சுத்தாவத்தையிற்றோய்ந்த சகலான்மாக்கள் மும்மலங்களாகிய உள்பொருள்களும், மும்மல காரியங்களாகிற இல்பொருள்களும் ஓட, மாயேயங்களில் தனித்தனியான நாமரூப இச்சைவடிவாக எழும்பாசமும், அவற்றால் விளையும் மயக்கத்தைச் செய்யும் அறியாமையும் சிவ சூரியனுடைய ஞானக் கதிரால் தொடர்பு அறவே விட்டிடச் சுத்தான் மாக்கள் ஆவர் என்றவாறு.

சுத்தாவத்தையில் நிலைபெற்ற சகலான்மாக்கள் மும்மலமும், மலகாரியங்களும். நீங்க, அவற்றில் விளையும் பாசமும், அறியாமையும் சிவஞானக்கதிரால் அகலச் சுத்தான்மாக்கள் ஆவர் என்பதாம்.

மும்மலச்சத்து – ஆணவம் கன்மம் மாயை ஆகிற நிலையான பொருள்கள். கன்மம் நுகர்ச்சியாயின் அழிவதாய் அநித்தமாகும். அதன் காரணமான மூல கன்மம் நித்தமாதலின் உடன் எண்ணப்பட்டது.

பாசமும், மத்த இருளும் அழியச் சிவன் சூரியனைக் காட்டப் பெற்றனன். பௌதிக சூரியனுடைய கதிராலே பௌதிக இருள் அடியோடு அழிவதில்லை அகலுதலன்றி; ஆயினும், ஒப்பு ஒருபுடையாகலின் அடியோடு தொத்தற அழியும் அவற்றிற்கு இருளையும் 'அழிக்கும் கதிர்க்கு அருளையும் உவமித்தார் என்க. உருவகமும் உவமையும் ஒருபுடையொப்பே பற்றி உரைக்கப் படுதலைக் காண்க.

மத்த இருள் – மயக்கால் விளையும் அறியாமை யாம். (124)

தற்கே வலமுத்தி தானே தனிமையாம்
பிற்பாற் சகலங் கலாதிப் பிறிவதாஞ்
சொற்பாற் புரிசுத்த கேவலஞ் சாக்கிரந்
தற்பாற் புரிவது தற்சுத்த மாமே. 2246

இம் – எனின், சுத்தகேவல, சுத்தசகல, சுத்த சுத்தங்களின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சுத்த கேவலமாவது பற்றற்ற நிலையில் ஆன்மா தனிமையில் இருப்பதாம், பின்னதாகிய சுத்த சகலமாவது, அசுத்த மாயாகாரியமான கலையாதி களினின்று நீங்குவதாம். சுத்த சுத்தமாவது சுத்த கேவல நிலையில் உண்டாம் சாக்கிர முதலியனவும் சிவானுபவத்திற் கூடப்பெறுவதும் ஆம் என்றவாறு.

சுத்த கேவலம் – பற்றற்ற தனிநிலை. சுத்த சகலம் – கலையாதிகள் நீங்கியநிலை. சுத்தசுத்தம் – சுத்தகேவல சாக்கிரத்தில் இருக்கும் பற்றற்ற நிலையின்றி அப்பற்றினைப் பற்றற்ருன் தாளிணையில் பற்றி அச்செயலுமற்று அனுபவிக்கின்ற நிலை என்பது கருத்து.

தற்கேவலம் – சிவமாகிய அதுமட்டும் கூடிய தனி நிலை. முத்தி – பற்றறுதலாகிய விடுபெற்ற நிலை. அதில் ஆன்மாவாகிய தான் தனியே நிற்கும் ஆதலின் தனிமையாம் என்ருர்.

பின்பால் எதுகைநோக்கிப் பிற்பாலாயிற்று. சுத்த கேவலத்திற்குப் பின்னுள்ளதாகிய சுத்த சகலம் என்க. கலாதிப் பிறிவது – கலை வித்தை அராகம்

காலம் முதலியன நீங்கி நிற்றலாம். கலாதிகள் அசுத்த மாயா காரியமாதலின் அவற்றினீங்குதல் அசுத்த மாயையினீங்குதலாம்.

சொற்பால் புரி சுத்த கேவல சாக்கிரம் – சொல்லப் படுமளவிலேயே இன்பமயமானது என்று விரும்பப் படுகின்ற சுத்தகேவல சாக்கிரம் என்க.

தன்பால் புரிவது - சிவமாகிய தன்னிடம் விரும்புவது. புரிதல் – விரும்புதல். புகழ் புரிந்த என்புழிப் போல. தற்சுத்தம் – சுத்த சுத்தநிலை. (125)

அறிவின்றி யமுத்த னராகாதி சேரான்
குறியொன் றிலாநித்தன் கூடான் கலாதி
செறியுஞ் செயலிலான் றினக்கற்ற லில்லோன்
கிறியன் மலவியாபி கேவலத் தானே. 2247

இ - ம் – எனின், காரண கேவலநிலையில் ஆன்ம விலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : கேவலாவத்தையில் கிடந்த ஆன்மா, அறிவின்றி உடலில்லாதவனாகவும், அராகமுதலான குணதத்துவங்கள் பொருந்தப் பெறாதவனாகவும், இச்சையில்லாத நித்தியனாகவும், கலை முதலான அசுத்த மாயா காரியமான தத்துவங்களோடு கூடிச் செய்யும் செயல் ஒன்றுமில்லாதவனாகவும், போக நுகர்ச்சியைக் கற்காதவனாகவும், மயங்கியவனாகவும், ஆணவமலமாத்திரையாய் வியாபித்தவனாகவும் இருப்பன் என்றவாறு.

கேவலநிலையில் ஆன்மா அமூர்த்தனாகிப் பத்துக் குணங்களையுடையன் என்பதாம். இம்மந்திரத்தை,

> " அறிவிலன் அமூர்த்தன் நித்தன்
> அராகாதி குணங்களோடும்
> செறிவிலன் கலாதியோடுஞ் சேர்விலன்
> செயல்கள் இல்லான்
> குறியிலன் கருத்தாவல்லன் போகத்திற்
> கொள்கை யில்லான்
> பிறிவிலன் மலத்திேனாடும் வியாபி
> கேவலத்தி லான்மா. "

என்ற சிவஞானசித்தியார் நான்காம்சூத்திரம் மூன்றும் அதிகரணச்செய்யுளோடும் ஒப்புநோக்கியுணர்க.

| திருமந்திரம் | | சித்தியார் |
|---|---|---|
| அறிவின்றி | ... | அறிவிலன் |
| அமுத்தன் | ... | அமூர்த்தன் |
| அராகாதிசேரான் | ... | அராகாதி குணங்களோடுஞ்செறிவிலன் |
| குறியொன்றில்லான் | ... | குறியிலன் |
| நித்தன் | ... | நித்தன் |
| கலாதி கூடான் | ... | கலாதியோடுஞ் சேர்விலன் |
| செறியுஞ்செயலிலான் | ... | செயல்கள் இல்லான் |

| | | |
|---|---|---|
| நிைனக்கற்றல் இல்லோன் | ... | போகத்திற் கொள்கை யில்லான், கருத்தா அல்லன் |
| கிறியன் | ... | மலத்திேைடும்பிறி விலன் |
| மலவியாபி | ... | வியாபி |

என இயைத்துப் பொருள்நயம் காண்க.

அறிவின்றி ஆன்மா கேவலநிலையில் கலை முதலிய வற்ருேடு கூடாமையின் அறிவின்றி என்றது.

அமுத்தன் – அமூர்த்தன் என்பதன் சிதைவு, உடம்பின் முன்னின்மையை யுடையவன்.

'அராகாதிசேரான்' புத்தியின் குணமாகிய தருமம், ஞானம், வைராக்கியம். ஐஸ்வரியம், அதர்மம், அஞ்ஞானம், அவைராக்கியம். அனைஸ் வரியம் ஆகிய எட்டுக் குணங்களும் சேரப் பெரு தவன். அராகாதி என்ற உபலக்கணத்தால் ஏனைய போக்கிய காண்டங்களும் கொள்ளப்படும். குறி யொன்றில்லான் மனமுதலிய கருவிகள் இன்மையான் இச்சையில்லாதவன். குறி – முதனிலைத் தொழிற் பெயராய்க் குறித்துணரப் பயன்படுவதாய இச்சையை உணர்த்தி நின்றது.

நித்தன் – தோற்றக்கேடுகள் இல்லாதவன்.

கலாதி கூடான் – கலை காலம் நியதி முதலிய வற்ருேடு கூடாதவன்.

செறியுஞ் செயலிலான் – தோய்ந்து இயற்றப் பெறும் வினையொன்றும் இல்லாதவன்.

தினக்கற்றல் இல்லோன் – தினக்கற்றல் – போக நுகர அறிதல். அஃதில்லாதவன் என்பதாம். தனக்கென ஒருவகைச் சுதந்திரமும் இன்மையான், நுகர்தல் இயல்பாகவே உயிர்கட்கு அமைந்தகுணமாயினும் அஃதின்மையான் செயற்கையாகக் கற்றலும் இல்லாதவன் என்றார்.

கிறியன்-மயக்கம் உடையவன். இது சுதந்திரமின்மையையும், மலத்தைச் சார்ந்து மயங்கிய தன்மையையும் உடையவன் என்பதை உணர்த்தியது.

மலவியாபி – மலத்தால் வியாபிக்கப் பெற்றவன் இவனுடைய வியாபகம் அனைத்தும் அவனைப் பற்றியுள்ள மலத்தின் அளவினவே என்பதாம்

இங்ஙனம் நயமும் பொருளும் உணரக் கருவியாய் அமைந்தன; சித்தித் திருவிருத்தமும், மாதவச் சிவஞானசுவாமிகள் செய்த உரைக்குறிப்பும் என்க.

உண்மையான பாடந்துணியப் பெருந்துணை செய்தவை ஆதீனத்துச் சரஸ்வதிமால் நூல்நிலயத்துள்ள ஏட்டுச்சுவடிகளில் இரண்டுபடிகள் ஆம்.

(126)

**விந்துவு மாயையு மேவுங் கிரியையுஞ்**
**சந்தத ஞான பரையுந் தனுச்சத்தி**
**விந்துவின் மெய்ஞ்ஞான மேவும் பிரளயர்**
**வந்த சகலசுத் தான்மாக்கள் வையத்தே. 2248**

இ-ம் – எனின், மூவகை ஆருயிர் வர்க்கங்களின் உடம்பும் புவனமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சுத்தமாயையும் அசுத்தமாயையும், என்றும் ஞானமே வடிவாய்த்திகழும் திருவருட் சத்தியும் உடலாற்றலாக நிற்கக் கிரியையைப் பொருந் தும். பின், பிரளயாகலரும், உலகத்தில்வந்த சகலத் துச் சுத்தான் மாக்களும் விந்துசத்தியான நாலுவாக் காலும் உண்மை ஞானத்தைப்பெறுவர் என்றவாறு.

விஞ்ஞானகலர் முதலான மூவகை உயிர்களும் தந்தம் பரிபாகத்திற்கு ஏற்ப சுத்த – அசுத்த மாயா காரியமான உடல் அடுத்து, அந்தந்தப் புவனங்களில் அதிகாரம்தாங்கி வசிப்பர். பின்னர் விந்தும் தூலமா யும், தூலதரமாயும், தூலதமமாயும் பொருந்த ஞானம்பெற்று, சகலர், சகலிற்சுத்தர்கள், பிரளயர் அவரவர்களுக்கு உரிய உலகில் வாழ்வார்கள் என்பது கருத்து.

விந்து – சுத்தமாயை. இது விஞ்ஞானகலர்க்கு உடற்குக் காரணமாயும், சுத்தமாயாபுவனங்கள் அவர் களுக்கு உரிய இடமாயும் இருக்கும். விந்துகாரிய மான நால்வகை வாக்குகள் தூலமாய் ஞானத்தை உதவும், அதனால் வீடுபெறுவர் எனவும், பிரளயா கலர்க்கும் அங்ஙனமே சுத்தமாயை காரியப்பட, வாக்குகள் மட்டும் தூலதரமாய் ஞானம்நல்கும் எனவும், சகலர்க்கு அசுத்தமாயையின் காரியமான தனு கரண புவனபோகங்கள் பயன்பட வாக்குகள் தூலதமமாய் ஞானத்தைநல்கும் எனவும் கொள்க.

இதனை,

"மூவகை யணுக்களுக்கும் முறைமையின் விந்துஞானம்
மேவினதில்லையாகில் விளங்கிய ஞான மின்றும்
ஓவிட விந்துஞானம் உதிப்பதோர் ஞானம்உண்டேல்
சேவுயர் கொடியினன்றன் சேவடி சேரலாமே"

என்னும் சித்தித்திருவிருத்தத்தானும் அதன் உரையானும் தெளிக.

பிரளயர் வையத்தே வந்த சகல சுத்தான்மாக்கள் விந்துவும் மாயையும், சந்தத ஞானபரையும் தனுச் சத்தி(யாக)கிரியைமேவும்: விந்துவின் மெய்ஞ்ஞானம் மேவும்'எனக்கொண்டுகூட்டிப் பொருள்கொள்க.

(127)

கேவல மாதியிற் பேதங் கிளக்குறில்
கேவல மூன்றுங் கிளருஞ் சகலத்துள்
ஆவயின் மூன்றுமதிசுத்த மூடவே
ஓவலில் லாவொன்பா னுற்றுணர் வோர்கட்கே. 2249

இ-ள்: கேவலம் முதலிய அவத்தைகளின் வேறுபாட்டைச் சொல்லுமிடத்து, கேவலகேவலம், கேவல சகலம், கேவலசுத்தம் எனமூன்றும், கிளர்ச்சியுறுகின்ற சகலத்திலும் சகலகேவலம், சகலசகலம், சகலசுத்தம் என அவ்விடத்து மூன்றும், இறந்த சுத்தமும் சுத்த கேவலம், சுத்தசகலம், சுத்தசுத்தம் என மூன்றாக மூட, அவத்தைகளைப் பொருந்தி ஆராய்பவருக்கு நீங்காத ஒன்பதுவகையாம் என்றவாறு.

இங்ஙனம் ஒன்பதுவகை காண்க.

கேவலசகலமும் சகலகேவலமும் ஒன்றெனமயங்கற்க. கேவலசகலம் கேவலமாகிய காரணுவத்தையுள் சகலமாகிய காரியாவத்தை நிகழ்வது எனவும் அங்ஙனமே ஏனையவும் கொள்க. உதாரணமாகக் காரண கேவலத்தில் இச்சை ஞானம் கிரியைகள் சிறிதும் தொழிற்படாது தான்மாத்திரமாய் ஆணவத்தோடு கூடிநிற்கும் பொழுது தனுகரணுதிகளை இறைவன் கூட்டக்கூடி இச்சையாதிகளான ஒருவாறு விளங்க நிற்றலாம். இங்ஙனமே ஏனையவற்றையும் உணர்க. (128)

> கேவலத்திற் கேவல மதீதா தீதங்
> கேவலத் திற்சக லங்கள் வைந்தவங்
> கேவலத் திற்சுத்தங் கேடில்விஞ் ஞாகலர்க்
> காவயி ழுத னருண்மூர்த்தி தானே. 2250

இம் – எனின், அருட்கேவல கேவலம் முதலியவற்றின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: கேவலத்தில் கேவலமாவது அப்பாலைக்கு அப்பாலுள்ள அனுபவமாம்; கேவலத்தில் சகலம் சுத்தமாயையின் நிலைக்களனும்: கேவலத்தில் சுத்தம் அழிவேயில்லாத விஞ்ஞானகலர்க்கு உரியதாம். அச்சுத்த நிலையில் பரசிவம் அவர்களுக்கு வீடருளும் மூர்த்தியாவன் என்றவாறு,

கேவலம் அருளோடுகூடி ஆன்மா இச்சை ஞானக் கிரியைகளின்றிக் கிடக்கும். கேவலத்தில் கேவலமதில் இருக்கும்நிலை கூறவொண்ணுத

தோன்றுதலின் அதீதாதீதம் என்றார். இவற்றையும் முதல் திருமந்திரத்தில் கூறிய மருள்நிலை எனக் கொள்ளற்க அது அதீதாதீத மன்றுதலின் என்க. ஆன்மா சுத்தமாயா காரியங்களோடுகூடி அறிவிச்சை செயல்களைப்பெற்று மந்திரவடிவாக விளங்குதலின் கேவலத்திற்சகலம் வைந்தவம் என்றார். விந்து — சுத்தமாயை, வைந்தவம் – சுத்த மாயாகாரியம்.

கேவல சுத்தநிலை கேடில்லாமை ஒன்றே என கேடில் விஞ்ஞானகலர்க்கு என உடம்பொடுபுணர்த்திக் கூறினர். இல் என்பதை முற்றுக்கொண்டு கேடில்லாமையாம் என உரைத்தலுமாம். ஆணவம் அதிகார மலமாத்திரமாய் மறைத்தலாகிய கேட்டினைப்புரியும் ஆற்றலிழந்து இருக்குமாதலின் கேவலசுத்தம் கேடு இல்லாதது என்றார். தேள்கொட்டிய விஷம் நெறி ஏறுதிருப்பினும், விஷம் உடலில் இருப்பதுபோல, ஆணவம் விஞ்ஞானர்க்குக் கேடு செய்யாததாயினும் ஆணவம் உண்டென்பது பெறப்படுதலின், அதனையும் வலியொடுக்க நாதன் அருள்மூர்த்தியாக எழுந்தருளி உண்ணின்று ஞானம்வழங்கி வீடுபேரருள்வன் என்பார் " ஆவயின் நாதன் அருண்மூர்த்தி தானே " (129) என்றார்.

சகலத்திற் கேவலஞ் சாக்கிரா தீதஞ்
சகல சகலமே சாக்கிர சாக்கிரஞ்
சகலத்திற் சுத்தமே தற்பரா வத்தை
சகலத்தி லிம்மூன்று தன்மையு மாமே 2251

இ-ள் – எனின், சகலாவத்தையின் வகைகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : சகலத்திற் கேவலம் விழிப்பு நிலையின் கடந்த நிலையாம். சகலத்திற் சகலம் விழிப்பில் விழிப் பாம். சகலத்திற் சுத்தம் ஆன்மா அருளோடு கூடிய நிலையாம். இங்ஙனம் சகலத்தில் இம்மூன்றவத்தையும் பொருந்துவதாம் என்றவாறு.

சகலாவத்தையில் சகல, கேவல, சுத்த நிலை களின் இயல்பு இவையாம் என்பது கருத்து. தத் + பர + அவத்தை - சிவன் அருள் கூடியிருக்கும் நிலை. (130)

சுத்தத்திற் சுத்தமே தொல்சிவ மாகுதல்
சுத்தத்திற் கேவலந் தொல்லுப சாந்தமாஞ்
சுத்த சகலந் துரிய விலாசமாஞ்
சுத்தத்தி லிமமூன்றுஞ் சொல்லலு மாமே. 2252

இம் — எனின், சுத்தாவத்தையினுண்டாய வகை களை உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : சுத்தத்தில் சுத்தம் அனைத்திற்கும் பழமையான சிவமாகுதல். சுத்தகேவலம் நிறைந்த அமைதியா யிருத்தல், சுத்தசகலம் இன்பத்திற்சேரும். நான்காம் நிலையாகிய துரியத்தில் விளங்குதலாம். இங்ஙனம் சுத்தாவத்தையில் இம்மூன்றும் வகை யாகச் சொல்லுதலும் ஆம் என்றவாறு.

சுத்தாவத்தையின் பாகுபாடு இவையாம் என்க.

சிவமாகுதல் என்பதற்கு சிவனுருவெய்தல் என் பாரும் உளர். சிவனுக்குரிய சிறப்பியல்புகள் நீங்க ஏனையவற்றால் உணர்வில் ஒத்தலாம் என்க.

உபசாந்தம் – பசுகன்மம் நீங்கிச் சிவப்பணி செய்தலாகிய பூரண அமைதி. துரிய விலாசம் - ஆஞ்ஞைக்கு மேலான துரிய ஆதாரத்தில் இன்ப மயமாக விளங்குதல். (131)

சாக்கிர சாக்கிரந் தன்னிற் கனவொடுஞ்
சாக்கிரந் தன்னிற் சுழுத்தி துரியமே
சாக்கிரா தீதந் தனிற்சுகா னந்தமே
ஆக்கு மறையாதி யைம்மல பாசமே. 2253

இம் - எனின், நனவில் நனவாதியவற்றை விளக்குதல் நுதலிற்று.

இ – ள் : சாக்கிர சாக்கிரம் சுத்த தத்துவங்கள் ஐந்தும் தொழிற்படும் அவதரம்; சாக்கிரத்திற் சொப்பனம் சிவம் சத்தி சாதாக்கியம் ஈச்சுரம் நான்கும் தொழிற்படும் அவதரம்; சாக்கிர சுழுத்தியாவது சிவம் சத்தி சாதாக்கியம் என்னும் மூன்றும் தொழிற்படும் அவதரம்; சாக்கிர துரியமாவது சிவம் சத்தி யென்னும் இரண்டும் தொழிற்படும் அவதரம்; சாக்கிர துரியாதீதமாவது சிவதத்துவம் ஒன்றே தொழிற்படும் அவதரம். இங்ஙனம் மறைகட்கு ஆதியான சிவம் ஐம்மலங்களாகிய பாசங்களினின்று பிரித்து உயிர்களை ஆக்கம் செய்யும் என்றவாறு.

சாக்கிர சாக்கிர முதலியவற்றின் அனுபவ வேறுபாடு இவையாம் என்பது.

சாக்கிராதீதம் தன்னில் சுகானந்தம் என்றதால் சிவதத்துவம் ஒன்றே தொழிற்படும் நிலையைக் குறித்தமையால் முன்னுள்ள நான்கினும் எவை எவை

தொழிற்படும் என்பதை உய்த்துணரவைத்தவாறும். இது உய்த்துணரவைப்பு என்னும் உத்தி.

மறையாதி – மறைகட்கெல்லாம் ஆதியாகிய சிவம். ஐம்மல பாசம் ஆக்கம் என்பது பாசங்களி னின்றுநீக்கி ஆக்கமுறுத்தும் என ஐந்தாம் வேற்று மைத்தொகை நீக்கப்பொருளினதாகக் கொள்க.

(132)

சாக்கிரா தீதத்திற் றுனறு மாணவஞ்
சாக்கிரா தீதம் பராவத்தை தங்காது
ஆக்கு பரோபாதி யாமுப சாந்தத்தை
நோக்கு மலங்குண நோக்குத லாகுமே. 2254

இ-ம் – எனின், சாக்கிராதீதத்தால் விளையும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சாக்கிராதீரத்தில் சிவதத்துவம் ஒன்றுமே தொழிற்படுதலால் கேவலத்தில் சொழிற்படுத்தாது ஆன்மாவைக் கட்டிக்கிடந்த ஆணவமும் அறும், அதன்மேல் அவ்வவத்தையில் அருளொடுகூடி அருளாயிருக்குந் தன்மையாகிய பராவத்தைகிட்டும். அதன்மேல் அதுவும் தங்காது; பரத்தோடு சம்பந்தம் உண்டாம், அதனுல் உபசாந்தமாகிய நிறைந்த அமைதியை அடையும். அவ்வான்மா மலத்தையும் குணத்தையும் நோக்குதல் விளையுமோ? ஒருக்காலும் விளையாது என்றவாறு.

பர சாக்கிரத் துரியாதீதத்தில் ஆணவச் சேட்டை நீங்கும்; பரையின் கூட்டமும், பரத்தின் சம்பந்தமும்,

உபசாந்தமும் முறையே விளையும் அகனுல் ஆணவம் குணங்களை நோக்காது என்பதாம்.

சாக்கிராதீதம் என வாளாகூறினும் சுத்த சாக்கிராதீதம் எனக்கொள்க. சகல சாக்கிர துரியாதீதமாயின் சுகதுக்கங்களைக் கோட்டமாத்திரையில் திடுக்கிட்டுப் பிராணவாயு சீவியாமல் மூர்ச்சிக்கும் நிலையாதலின் அஃதன்மையும், அங்ஙனமே கேவல சாக்கிராதீதமாயின் அதுவும், மலத்துட்பட்டுக் கிடக்கும் நிலையாதலின் அஃதன்மையும், தெளிக.

ஆணவம் அற்றவுடன் ஆன்மா திருவருளைச் சார்ந்து பராவத்தையாக நுகரும். அங்கும் நிலை பெறாது பரமாகிய சிவத்தைச் சார்ந்து பரோபாதி பெற்று, பர உபசாந்தம் உற்று, விளங்கும். அமுதம் உண்டவன் புளியை விரும்பாதவாறுபோல உபசாந்த முற்றவன் மலகுணங்களை நோக்கான் என்பதாம்.

பராவத்தை – அருளிற்றோயும் நிலை. பரஉபாதி – பரசிவத்தோடு சப்பந்தம். உபசாந்தம் – பூரணசாந்தி. ஆ - பசுவாகிய ஆன்மா. சிலர் உடம்படு மெய்யொடு கூடிய 'ய' என்பதனை அஃறிணைப்பன்மை வினை அடியாகப் பிறந்த பெயராகக்கொண்டு 'ஏதும்' என ஒருமையாகப் பொருள்கொண்டு இடர்ப்படுவர்.

ஆ சாக்கிராதீதத்தில் ஆணவம் அறும்; பராவத்தை (எய்தும்): (அது) தங்காது; பரோபாதி ஆக்கும்;உப சாந்தத்தை நோக்கும்; அந்த ஆ மலம் குணம் நோக்குதல் ஆதமே ? எனக்கூட்டிப் பொருள்கொள்க. (133)

பெத்தமு முத்தியும் பேணுந் துரியமுஞ்
சுத்த வதீதமுந் தோன்றுமற் றுனும்
அத்த னருளென் றருளா லறிந்தபின்
சித்தமு மில்லை செயலில்லை தானே 2255

இ-ம் - எனின், அருளை அருளால் அறிதலால் ஆம் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மலகன்மங்களால் கட்டுண்ட பெத்த நிலையும், அவற்றின் நீங்கிய முத்திநிலையும், துரியநிலை யாகிய ஒடுக்கமும், அவற்றைக்கடந்த தூய துரியா தீத நிலையும் தோன்றுதவண்ணம் சிவனருள் சீவனை விழுங்கிவிடும் என்று அவனருளையே கண்ணாகக் கொண்டு அறியின், சித்தமாகிய அகக்கருவியின் செயலும் அதன் வழியே இயங்கும் புறக்கருவிகளின் செயலும் இல்லையாம் என்றவாறு.

அவனருளாலே அவனருளை அறியின் மனத்தின் ஓட்டமும் செயலுமில்லையாம்; என்றும் இன்பம் உண்டாம் என்பது கருத்து

திருவருட்டோய்வு இது பெத்தநிலை, இது முத்தி நிலை, இதுதுரியானுபவம், இது அதீதானுபவம் என்ற வேறுபாடு தோன்றமல் செய்துவிடும் என்றவாறு.

துரியநிலை நீளப் பயிறற்கு உரியதன்று; வீட்டில் போவார் வருவார்க்குப் பயன்படும் இடைகழிபோல அதீதத்தை யண்ண வழியாக இருப்பது; ஆதலால் சாதனமாகக் கொள்ளப்படுவது துரியம் என்பார் பேணுந்துரியமும் என்றார்.

சுத்த அதீதம் – சுத்தாவத்தைக் கண்ணதாகிய துரியாதீதம். எனவே துரியமும் சுத்த துரியம் என்று கொள்க.

அத்தன் அருள் (அவற்றைத்) தோன்றாமல்தான் உண்ணும் என்பது உயிரினறிவும் கண்ணொளியுங் கலந்துநின்று, பொருளைக் காணுங்கால், காட்சி இன்னாருடையது என்று வேறு பிரித்தறிய இயலாத வாறுபோல, அருளும் ஆன்மாவின் செயலைத் தன் செயலாக்கிய பிறகு, ஆன்மச்செயலா? அருட் செயலா ? என்று அறிய இயலாதவண்ணம் அத்து விதமாய்க் கலத்தலைக் கூறியதாம்

அருள் உண்மையைப் பசுபோதத்தாலும், பாச ஞானத்தாலும் அறிய முடியாது. அவனருளே கண்ணாகக் காணினல்லால் என்பார் 'அருளால் அறிந்தபின்' என்றார்.

சித்தம், செயல் என்பன மாயாகாரியமாதலின் அவையடங்கும்; அருட் போதமே தலைதூக்கும் என்றவாறு. (134)

எய்திய பெத்தமு முத்தமு மென்பன
எய்து மரனரு ளேவிளை யாட்டோ
டெய்தி டுயிர்சுத்தத் திடுநெறி யென்னவே
எய்து முயிரிறை பாலறி வாமே. 2256

இ-ள் – எனின், உயிர்க்குப் பெத்தநிலையும், முத்த நிலையும் எய்துவித்தல் உயிர்களைச் சுத்தமாக்கும் திருவிளையாட்டு என உணர்வதா லுறும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: உயிர்கள் அடைந்த பெத்தநிலையும், முத்திநிலையும் சிவனருளாலே எய்தும். அங்ஙனம் அருள்புரிதல் அரனுக்கு விளையாட்டு; அது ஆன்மாக்களைச் சுத்தநிலையில் செலுத்தும் நெறியாம் என்ற உணர்ச்சியை எய்தும்; உயிர் இறைவனிடம் என்றும் நீங்காத சிவஞானத்தைப் பெறும் என்றவாறு.

உயிர்கள் பெத்த முத்தி. நிலைகளை இறைவன் தம்மைத் தூயநிலையிற் புகுத்த, உதவினர் என்றும், அங்ஙனம் செய்தல் அரன் விளையாட்டு என்றும், உணரின், இறைவன்பால் என்றும் அகலாத அன்பும் ஞானமும் உண்டாம் என்பது கருத்து.

விளையாட்டொடு எய்தும் அரனருளே என இயைக்க. ஐங்கலப்பாரஞ் சுமத்தல் சாத்தற்கு விளையாட்டு என்புழிப்போல இறைவற்கு இங்ஙனம்போக மோட்சங்களை ஆன்மாக்கட்குச் சேர்ப்பித்தல் விளையாட்டு என்றவாறும். இதனால் இறைவன் நிர்விகாரி என்பது உணர்த்தப்பெற்றது.

எய்திடு உயிர் என வினைத்தொகையாகக் கூறியது என்றும் எய்துகின்ற உயிர்கள் எனக் காலவரம்பிகந்த தன்மையை உணர்த்த என்க.

உயிர் இறைபால் அறிவாகும் என எழுவாயாக்கி உரைக்க. இறைபாலறிவு - சிவஞானம். (135)

ஐம்மலத் தாரு மதித்த சகலத்தர்
ஐம்மலத் தாரு மருவினைப் பாசத்தார்
ஐம்மலத் தார்சுவர்க் கந்நெறி யாள்பவர்
ஐம்மலத் தாரர ஞர்க்கறி வோரே. 2257

இம் – எனின், சகலான்மாக்களின் இயல்புணர்த் துதல் நுதலிற்று.

இ – ள் : ஐவகை மலங்களை உடையவர்கள் தம்மைத்தாமே மதித்த சகலான்மாக்கள்; அவர்கள் துய்ப்பினன்றி நீக்குதற்கரிய வினைகளால் தொடக்குண்டவர்; அவர்களே வினைப்பயனால் சுவர்க்க நெறிகளை ஆள்பவராவர்; அங்ஙனமாய அவர்கள் தம் முதலாகிய சிவத்தை அறிவோர் ஆவாரா? ஆகார் என்றவாறு.

சகலான்மாக்கள் வினைத்தொடர்பு உடையவர்களாதலின் சிவஞானம் பெறார் என்பது கருத்து.

ஐம்மலத்தாரும் என்பவற்றிலுள்ள உம்மைகள் அசை. சுவர்க்கந்நெறி – 'ந்' விரித்தல் விகாரம். உம்மைத் தொகையாகக்கொண்டு சுவர்க்கத்தையும் அதற்குரிய நெறிகளையும் ஆள்பவர் எனினுமாம். சுவர்க்கம் நல்வினைப் போகங்களைத் துய்க்கும் இடம்.

அரனுக்கு என்ற நான்கனுருபை இரண்டன் பொருளில்வந்த மயக்கமாகக் கொண்டு அரனை அறிவோரே என்க. அறிவோரே என்பதில் ஏகாரம் எதிர்மறை. ஈற்றசையாகக் கொண்டு, சிற்றறிவினராகிய இவர்கள் அரனை அறியார்கள். முற்றுணர்வினனை அரன் இவர்களை அறிவான் எனக் கருத்துக் கொண்டு அரனுக்கு அறியப்படுபவர்களே எனலுமாம். (136)

கருவி லதீதங் கலப்பிக்கு மாயை
அரிய துரிய மதிலுண்ணு மாசையும்
உரிய சுழுனை முதலெட்டுஞ் சூக்கத்
தரிய கனுத்தூல மங்நன வாகுமே. 2258

இம் – எனின், கருவிலேயே கலப்பனவும் நனவு கனவுகளின் தன்மையும் உணர்த்துதல் நுதலிற்று,

இ – ள் ; கருவிலேயே அதீதநிலையில் ஆன்மாவுடன் மாயையைக் கலக்கச்செய்யும் ; அடுத்த அரிதாகிய துரியாவத்தையில் விருப்பமும், சுழுமுனை முதலான எட்டு நாடிகளும்கூடும். அரியகனு சூட்சும நிலையிலும் அந்த நனவு தூலநிலையிலும் ஆம் என்றவாறு.

மாயை சகலர்க்குக் கலப்பிப்பது கருவிலே கடந்த நிலையிலேயேயாம் : துரியநிலையில் ஆசையும், சுழுமுனைமுதலான நாடிகளும் கலப்பிக்கும் ; கனவு நுட்பம் ; நனவு தூலம் ; ஆம் என்பது கருத்து.

இம்மந்திரத்தின் பொருள் நன்கு விளங்கவில்லை. ஆயினும் வேற்றுரைகளும் குறிப்புக்களும் அத்துணைப் பொர்ருந்துவனவாகத் தோன்றவில்லை.

கேவலாதீதம் போலக் கருவிலும் அதீதநிலை ஒன்றுண்டு, அது இறைவன் ஆன்மாவோடு மாயையைக் கூட்டும், நிலையாகும் அதில் துரியமாகிய பேருறக்க நிலையை ஆன்மா விழிப்பெய்துதலாம். இவ்விருப்பையும் உயிர் உடம்புகொண்டு வளருங்காலத்து எய்தும் எட்டு நாடிகளையும் அடைதல் துரியநிலையாம் ; கனு– சூட்சுமம். நனவு '– தூலநிலை என்று ஒரு வாறுணரலாம்.

நாடிகளைப்பற்றிய சிந்தனை ஈண்டு இயைபுடைத்தன்று. அதிகாரம் அவத்தைகளைப் பற்றியதாதலின், உரிய சுழுனை என்பதற்குப் பதில் உரிய சுழுத்தி என்ற பாடமிருப்பின் பிறர்கூறும் உரைகள் ஏற்புடையன ஆம். சுழுனை என்பது நாடியைக் குறிக்குமேயன்றிச் சுழுத்தியைக் குறித்தல் இவ்வாசிரியர்க்கு வழக்கின்மை பின்னும் முன்னும் உள்ள ஆட்சியால் அறியலாம்.

சுழுனைமுதல் எட்டாவன. சுழுனை, காந்தாரி, அத்தி, சிங்குவை, அலம்புடை, புருடன், சங்கினி, குரு என்பனவாம். சுழுத்தி எனப் பொருள்கொண்டு துரியம், துரியசுழுத்தி துரியநனவு, துரியகனவு, சுழுத்தியில் துரியம், சுழுத்தியில் சுழுத்தி, சுழுத்தியில் கனவு சுழுத்தியில் நனவு என்னும் எட்டென்பர். இவற்றை எங்ஙனம் இயைப்பது என்பதும், அதீதத்தை இரண்டிலும் விலக்குதற்குக்காரணம் என்னவாகலாமென்பதும் அறியக்கூடவில்லை. பாடந் திருந்தின் நல்லபொருள் கிடைக்கலாம். (137)

ஆணவ மாகுமதீ தமேன் மாயையும்
பூணுந் துரியஞ் சுழுத்திபொய்க் காமியம்
பேணுங் கனவு மாமாயை திரோதாயி
காணு நனவின் மலக்கலப் பாகுமே 2259

இம் – எனின், அதீதமுதலான நிலைகளில் பிணித்திருக்கும் மலங்களை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : துரியாதீதநிலையில் ஆணவமலம் மட்டும் உயிர்களைப் பிணித்து நிற்கும்; அதன் மேலுள்ள துரிய

நிலையில் அசுத்த மாயை பூணும். அதன்மேலுள்ள சுழுத்தியில் பொய்யான கன்மங்கள் பிணித்து நிற்கும். பேணப்படுகின்ற கனவில் சுத்தமாயையும், காணப் படுகின்ற நனவில் திரோதாயியும் ஆக ஐம்மலங்களும் கலக்கும் என்றவாறு.

ஐந்தவத்தையிலும் ஐம்மலங்களும் கலந்து காரியப் படுமாறு தெரிவித்ததாக கலந்தநிலையிலேயே கழிக்கப் படவும் கூடுமாதலின் திரோதான மலமாகிய மறைப்பு நனவிலும், சுத்தமாயை நுண்ணுடல் பற்றிய தாதலின் கனவிலும், கன்மமலங்கள் சுழுத்தியாகிய உறக்கத்திலும், அசுத்தமாயை துரியத்திலும், ஆணவம் அதீதத்திலும் நீங்கும். அப்போது சுத்தநிலை எய்தும் என்பதும் உணர்த்தப்பெற்றது.

உறக்கத்து உண்டி வினையின்மையின் வினை கட்கு மிகுதலும் குறைதலும் இல்லையாம். அது போலவே ஏனையவும் என்க. (138)

அரன்முத லாக வறிவோ னதீதத்தன்
அரன்முத லாமாயை தங்கிச் சுழனை
கரும முணர்ந்து மாமாயை கைக்கொண்டோர்
அருளு மறைவார் சகலத்துற் றுரே. 2260

இம் – எனின், அதீதன் முதலியோர் இயல்பு தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; சிவனே முதற்பொருள் என்று அறி கின்றவன் அதீதநிலையை அண்மினேன்; அரனை எண்ணாத அசுத்த மாயையில் தங்கி அதாவது துரிய நிலையில் தங்கி, சுழுத்தியில் கன்மங்களை அறிந்து,

கனவிலே சுத்த மாயையைக் கைக்கொண்டோர் சகலாவத்தையில் பொருந்தியவர்களாக அருளேயும் திரோதாயிகளாக மறைபவர்கள் ஆவர் என்றவாறு.

சிவபரம்பொருளே முதற்பொருளாகக் கருதுபவர் துரியாதீத நிலேயில் இருப்பவர்கள்; அரனை எண்ணுத மாயையைக்கூடியவர்கள் துரியர்; கன்மமும் கூடியவர்கள் சுழுத்திநிலேயைச் சேர்ந்தவர்கள்; மாமாயையாகிற சுத்த மாயையைக் கூடியவர்கள் கனுநிலே பெற்றவர்கள்; திரோதாயியாகிற மறைப்பருளும் பொருந்தியவர்கள் சகலராய நனவு நிலேபெற்றவர்கள் எனச் சகலத்து ஐவகை நிலேகளேயும் கூறியவாறு.

அரன் மூதல் ஆம் மாயை எனப்பிரித்து அரன் உலகப்படைப்பிற்கு முதற்காரணமாகக் கொள்ளும் மாயை எனப்பொருள் கோடலுமாம். முதலா மாயை – கருதாதமாயை. முதலுதல் – கருதுதல் மாயை விளக்கமும் செய்யும் என்பவாகலின் மறைத்தலே இயல்பாம் என்க.

உணர்ந்து – கண்டறிந்து. மாமாயை – சுத்த மாயை. அருளும் மறைவார் – அருளேயும் மறைத்தவர்களாக என்பது திரோதாயி மலம் பொருந்தியவர்களாக என்றதாம். (139)

உருவுற்றுப் போகமே போக்கியந் துற்று
மருவுற்றுப் பூத மனுதியான் மன்னி
வருமச் செயல்பற்றிச் சத்தாதி வைகிக்
கருவுற் றிடுஞ்சீவன் காணுஞ் சகலத்தே. 2261

இம் – எனின், சீவன் சகலப்படுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்; மாயாகாரியமான உருவத்தைப் பொருந்தி அடுத்த தேகத்திற் கேற்ற போக போக்கியங்களை நுகர்ந்து பூதங்களைச் சார்ந்து, மனம் முதலிய உட்கரணங்களை உற்று, அவற்றால் வருகின்ற கன்மங்களை அடைந்து, சத்தாதிகளாகிற தன்மாத்திரைகளில் தங்கிக் கருவை அடைந்த சீவன் சகலாவத்தையில் காணப்பெறும் என்றவாறு.

மாயாகாரியமான தனு கரண புவனபோகங்களைப் பெற்ற ஆன்மா கருவுறின் சகலாவத்தை எய்தும் என்பது கருத்து.

உரு - உடல்; போகம் - நுகர்ச்சி, போக்யம் - நுகரப்படுவதய மாலை மாதர்போல்வன; துற்று - உண்டு அதவாது நுகர்ந்து என்பதாம். பூதம் மருவுற்று - பூதகாரியமான பொருள்களைப் பொருந்தி. பூதம் காரண ஆகுபெயராகி அதன் காரியமாகிய பௌதிகப் பொருள்களை யுணர்த்திற்று. மறுதி - மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்ற உட்கரணங்கள். அவற்றின் செயல் - எண்ணல் சிந்தித்தல் முதலியன.

சத்தாதி - சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தமாகிய தன்மாத்திரை ஐந்தும். கருவுற்றிடும் சீவன் - பிறவியை யெடுக்கக் கருப்பையை யடுத்த ஆன்மா.

(140)

இருவினை யொத்திட வின்னருட் சத்தி
மருவிட ஞானத்தி லாதன மன்னிக்
குருவினைக் கொண்டருட் சத்திமுன் கூட்டிப்
பெருமல நீங்கிப் பிறவாமை சுத்தமே. 2262

இம் - எனின், சுத்தநிலையின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: இருவினை ஒப்புநிகழ, சத்திநிபாதம்சேர, சிவஞானம்பெற்று, உபதேசகுரு வாய்க்க அவரைக் கொண்டு, திருவருட்சத்தியைக் கூடப்பெற்று.மூல மலம் நீங்கி மீட்டும் பிறவியை எய்தாதிருப்பதே சுத்த நிலையாம் என்றவாறு.

இருவினையொப்பும் மலபரிபாகமும் சத்தி நிபாதமும் பெற்றுச் சிவஞானமேவி குருமுகமாக அருளொடுகூடி ஆணவமகன்றுப் பிறவாப்பெருநெறி யமைதலே சுத்த நிலையாம் என்பது கருத்து.

இருவினை – நல்வினை தீவினைகள். இருவினை யொப்பாவது மலபரிபாகக் குறியும் சத்திநிபாதக் குறியும் ஆன்ம அறிவின்கண் விளங்குவதுபோல இருவினைகளும் தம்முள் பொன்விலங்கும் இருப்பு விலங்கும் போல பிறப்பிறப்பில் படுத்துந்தன்மையில் ஒத்தவை என ஆன்ம அறிவின்கண்ணே விளங்கி அவ்விரு வினைகளையும் ஒப்பநாடி உவர்த்துவிடு தலாம்.

இருவினையொப்பும் பசுவினையொப்பு, பதிவினை யொப்பு என இருவகைப்படும். பசு இருவினையொப் பாவது சுவர்க்காதி இன்பங்களை விரும்பி வேள்வி முதலியவற்றைச் செய்தலில் விருப்பமிகுமாயின் அது நீங்கச் சிவன் திருவடிக்கண்ணே அன்பு செலுத்தி அதனை அடைவதற்குரிய சரியையாதிகளைச் செய்தலாம்.

பதி யிருவினை யொப்பாவது சிவாபராதம் விரும்பப்படாதவாறு போல பதிநல்வினைகளும் பசுபோதங் கெடாத சாலோகாதி பதங்கருதி விரும்பப்படாது நீங்கல்.

இன் அருட்சத்தி மருவிட – இனிமையைத் தருவதாய திருவருட் சத்தி பதிய. அதாவது சத்திநி பாதம் வர என்பாதம்.

அஃதாவது திருவருட்சத்தி பதிதல். சிவனடியை அடையவேண்டும் என்ற நாட்டத்தால் ஆன்ம அறிவின்கண் சிவசத்தி பதிதல். சத்திநிபாதம் – சத்தியின் வீழ்ச்சி. பேரவையில் ஒருகல் வந்து வீழின் அக்கல் அங்குள்ளாரை அஞ்சி ஓடச்செய்யுமாறுபோல, ஆன்ம அறிவிலே சத்தி வீழ ஆன்மா தன் மனைவி மக்கள் பண்டம் முதலியவற்றின் நீங்கிச் சற்குருவை நாடி ஓடச்செய்யும் என்பது. இது மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம் என நால்வகைப்படும்.

ஞானத்தில் ஆதனம் மன்னி – ஞானத்தில் ஆசனங்கொண்டு நிலைபெற்று. அதாவது சிவஞானம் பெற்று, தடையான மலநீக்க, துணையாகச் சத்தி பதிய, நுகர் வினையும் கழிய. ஆன்மா ஞானவிளக்கம் பெறும் என்பதாம்.

குருவினைக்கொண்டு – ஆசாரியனை அடைந்து. அருட்சத்தி முன்கூட்டி – திருவருளாகிற சத்தியை உபதேசவாயிலாகச் சேர்த்து என்க.

பெருமலம் – ஆணவம். பெருமலநீங்கி – ஆணவ வலியினின்று தாம் நீங்கப்பெற்று, எனவே ஆணவத்

திற்கு அழிவின்மையும், ஆன்மா அதனின் நீங்கி உய்தல்வேண்டும் என்பதும் உணர்த்தப்பெற்றன.

பிறவாமை – மீளவும் பிறவியை எய்தாதிருத்தல். இதுவே சுத்தம் என்பதாம், இம்மந்திரம்.

"இருவினைச் செயல்கள் ஒப்பின்
ஈசன்தன் சத்தி தோயக்
குருவருள் பெற்று ஞான
யோகத்தைக் குறுகி முன்னைத்
திரிமலம் அறுத்துப் பண்டைச்
சிற்றறி வொழிந்து ஞானம்
பெருகிநா யகன்தன் பாதம்
பெறுவது சுத்த மாமே,

என்னும் சித்தியார் சூ. 4. அதி. 3. 9–ம் விருத்தத்தை ஒத்திருத்தல் காண்க. (141)

ஆறாறு மாறதி னையைந் தவத்தையோ
டீறுமதீதத் துரியத் திவனெய்தப்
பேறான வைவரும் போம்பிர காசத்து
நீறார் பரஞ்சிவ மாதேய மாகுமே. 2263

இம் – எனின், துரியாதீத அனுபவம் பெற்றவன் பெறும்பேறு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : முப்பத்தாறு தத்துவங்களையும் வழியாகக்கொண்டு, அதில் இருபத்தைந்தாகிய அவத்தைகளோடு முடிபாகிய துரியாதீதநிலையை இவ்வுயிர் அடையச் சுத்ததத்துவங்களான சுத்தாவத்தை,

ஈச்சுரம், சாதாக்கியம், விந்து, நாதம் என்ற ஐந்தும் நீங்கும். ஒளிமயமான திருநீறு அணிந்த பரசிவம் இவனை இடமாகக் கொண்டு எழுந்தருளும் என்றவாறு.

தத்துவங்களும், அவத்தைகளும் கழன்று துரியா தீதநிலையை ஒருவன் எய்தின் சுத்ததத்துவங்களும் நீங்க ஒளியான திருமேனிப் பரசிவம் இவனை இட மாகக்கொண்டு எழுந்தருளுவர் என்பது கருத்து.

ஆறாறு - முப்பத்தாறு. எண்ணுகு பெயராகத் தத்துவங்களையுணர்த்தின. அவை முன்னர்க் கூறப் பட்டன. ஆறு - வழி.

ஐயைந்து அவத்தையொடு - சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், அதீதம் என்ற ஐந்தோடு ஐந்தாக உறழவரும் இருபத்தைந்து அவத்தையொடு என்க. இவற்றின் இயல்பும் பயனும் முன்னர்ப் பலமந்திரங்களில் கூறப்பட்டன.

ஈறும் - முடிந்த முடிபான. அதீதத்துரியம் - துரியாதீதம்.

பேறானஐவர் - தூய தத்துவங்களான ஐவர் என்ற சிவதத்துவம் ஐந்தையும், போம் - அகலும் ஐவர் போவர் என்பதே 'ஐவர்போம்' என்பதாம். ஆரிடமாதலின் அமைவுடையதாம்.

பிரகாசத்துச் சிவம் பரஞ்சிவம் நீரூர் சிவம் எனத் தனித்தனிக்கூட்டிப் பொருள் காண்க நீறு - வெண்ணீறு.

ஆதேயம் – இடத்து நிகழ்பொருள். ஆதாரம் – இடம். துரியாதீதனை இடமாகக் கொண்டு சிவம் இடத்து விளங்கும் பொருளாக எழுந்தருளுவர் என்பதாம். (142)

தன்னை யறியா துடலைமுன் றானென்றான்
தன்னைமுன் கண்டான் றுரியந் தனைக்கண்டான்
உன்னுந் துரியமு மீசனோ டொன்றாக்காற்
பின்னையும் வந்து பிறந்திடுந் தானே 2264

இம் – எனின், துரிய நிலையை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்; உடம்பின் வேறாக ஆன்மாவாகிய தான் ஒருவன் உளன் என்பதை அறியாமல் தன்னுடலையே தானென்று மயங்கியிருந்தான். உயிராகிய தன்னை எடுத்த உடம்பின் வேறாக உணர்த்த உணரும் சித்தாக உணர்ந்தான்; தன்னின் வேறான பரசிவத்தையும் கண்டான்; துரிய நிலையும் ஈசனோடு ஒன்றியிராவிடின் அவன் மீளவும் வந்து வினைக்கீடாக பூமியில் பிறப்பன் என்றவாறு.

துரிய நிலையில் ஈசனை அறிந்து அவனோடென்றும் ஒன்றாக. ஒன்றாவிடின் மீட்டும் பிறவி உள்ளதாம் என்பது கருத்து.

தன்னை – உயிராகிய தன்னை. உடல் – சடம், உயிர் – சித்து. சித்தாகிய உயிர் கூடியதால் உடலியங்குகிறது. உணருகிறது. ஆகவே உணருந் தன்மையும் இயக்குந் தன்மையும் உயிருக்கேயுண்டு. ஆகவே உயிரே தான் என வழங்கும் உயர்வையும்

உரிமையையும் படைத்தது என்பதை அறியாமலே உடலைத் தான் என்ருன். முன் என்றது இவ் வுண்மையை உணர்வதற்கு முன் என்க.

பின் சைவநூல்களை ஓதியும், உபதேசங்கள் கேட்டும் உண்மையுணர்ந்தான் உடல்தானல்லன். உடலின் வேருக உயிர் ஒன்றுண்டு. அதுவே வினைப் போகங்களுக்கு ஏற்ப உடலை அடுத்திருக்கிறது. உடலையும் உறுதுணைகளையும் தந்தவன் இறைவன் என்று தன்னை உணர்ந்த பின் என்பார் 'தன்னை முன்கண்டான்' என்ருர்.

துரியம் – பேருறக்கநிலையில் ஆன்மா எய்தும் அனுபவம். அந்த நிலையில் ஈசனேடு ஒன்றியிருக்க வேண்டும். அங்ஙனம் இராவிடில் மீளவும் பிறந்து இறந்து உழலநேரும் என்பதாம். (143)

சாக்கிரந் தன்னி லதீதந் தலைப்படில்
ஆக்கிய வந்த வைந்தவ மானந்த
நோக்கும் பிறப்பறு நோன்முத்தி சித்தியாம்
வாக்கு மனமு மருவல்செய் யாவே. 2265

இம் – எனின், சாக்கிராதீதத்தில் திருவருள் மாயையின் வலிகெட நோக்கி வீடுபேறளித்தலை விளக்குதல் நுதலிற்று.

இ – ள் : விழிப்பு நிலையில் அதீதமாகிய சிவத் தொடு கூடியிருக்கும் நிலை கூடுமாளுல், சகலா வத்தையில் தனுகரணுதிகளை உதவவந்த மாயையின் மயக்கம் கெட, இனி வர நோக்கியிருக்கின்ற பிறப்பு

நீங்கும்; சிறந்த முத்தி சித்திக்கும். வாக்கும் மனமும் காரியப்படா. இவை கடந்த அனுபவம் கைகூடும் என்றவாறு.

சாக்கிராதீதத்தே சிவத்தோடுகூடி விழித்த கண் குருடாயிருக்கும் வீரந்தலைப்படின் மாயை வலிகெடப் பிறப்பு அறும்; முத்தியுண்டாம்; உரைமனங்கடந்து நின்ற உண்மை அனுபவம் விளையும் என்பது கருத்து.

ஆக்கியவந்த – ஆன்மாவைப் பற்றியுள்ள ஆணவத்தைக் கெடுத்து ஆக்கந் தரவந்த; அதாவது தனுகரணாதிகளை உதவி வினைகளையூட்டி மலவன்மை வாட்ட உபகாரப்பட்ட வைந்தவம் என்பதாம். வைந்தவம் – மாயேயமான தத்துவங்கள். மால்நந்த – மயக்கங்கெட

நோக்கும் பிறப்பு – இனி வர நோக்கியிருக்கும் பிறப்பு. ஆகாமிய வினை பரிபாகப்பட்டுப் பிராரத்தமாய் வர இருக்கும் வினைகட்கு ஏற்ற பிறவி.

நோன்மை - பெருமை. மருவல் – பொருந்துதல். முத்திநிலையில் ஆன்மா நுகரும் பேரின்பநிலை உரை மனங்கடந்தது என்பார் மருவல் செய்யா என்றார். கரணங்கள் காரியப்படாத அனுபவம் சிவானுபவம் என்பதாம். (144)

அப்பு மனலு மகலத்து ளேவரும்
அப்பு மனலு மகலத்து ளேவரா
அப்பு மனலு மகலத்து ளேதெனில்
அப்பு மனலுங் கலந்தவவ் வாறே 2266

இ-ம் – எனின், விருப்பு விளையுமிடமும், அகன்ற நிலையும் அறிவித்தல் நுதலிற்று.

இ – ள் : நீர்போன்ற விருப்பும், நெருப்புப் போன்ற வெறுப்பும் மார்பாகிய நெஞ்சில் உயிர் உலவும்போது நிகழ்வன; நெஞ்சத்தையும் அகன்ற அப்பால் நிலையில் விருப்பு வெறுப்புக்களுக்கு இடமில்லை; நீரும் நெருப்பும் நெஞ்சத்து ஏதெனின் எளிதில் உணர இயலாத வண்ணம் கலந்துள்ளமுறை அவ்வாறும் என்றவாறு.

விருப்பு வெறுப்புக்கள் நெஞ்சத்து நிகழ்வன. நெஞ்சங்கடந்த துரியாதீதத்து அவற்றிற்கு இடமில்லை. அவைகளுக்கு நெஞ்சம் இடமானது எங்ஙனம் எனின் அங்ஙனம் வினவி அறியக்கூடிய நிலையில் கலந்துள்ளது அதுதான் விசித்திரம் என்பதாம்.

அப்பு என்றது விருப்பை. அனல் என்றது வெறுப்பை. உடலுள் அப்புமண்டலம் முழந்தாள் தொடங்கி அதாவது அப்புத் தத்துவமுதல் அடிவயிற்றில் மூலப்பிரகிருதி வரையுள்ள பகுதி, அங்கே விருப்பு விளையும் இடம். அதற்குமேல் நெஞ்சுவரை தேயுமண்டலம். நீரும் நெருப்புமாகிய மண்டலங்கள் கூடுமிடமே புருடதத்துவம் காரியப்படும் தலம். அங்கேதான் விருப்பு வெறுப்புக்கள் விளையுமென்பது உணர்த்தியவாறு. (145)

**அறுநான்க சுத்த மதிசுத்தா சுத்தம்**
**உறுமேழு மாயை யுடனேந்து சுத்தம்**
**பெருமா றிவைமூன்றுங் கண்டத்தாற் பேதித்**
**துறுமாயை மாமாயை யான்மாவி னேடே. 2267**

இம் – எனின், மூவகை அத்துவாக்களின் தத்துவங்களைத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: தத்துவங்கள் முப்பத்தாறில், இருபத்து நான்கு தத்துவங்கள் அசுத்த மாயையின் காரியமாக அசுத்தாத்துவாவில் உள்ளவை. மாயையோடு கூடிய ஏழு தத்துவங்களாகிய வித்தியா தத்துவங்கள் சுத்தா சுத்தமாகிய மிசிராத்துவாவில் உள்ளவை; மிகச் சிறந்ததாகிய சிவதத்துவம் ஐந்தும் சுத்த மாயையின் காரியமாகச் சுத்தாத்துவாவில் உள்ளவை. இம்மூன்றையும் ஆன்மா அடையும்வண்ணம் மூன்று கண்டங்களாகப் பிரிந்து மாயை, சுத்தமாயை, அசுத்தமாயை பிரகிருதி மாயையாக ஆன்மாவைப் பொருந்தும் என்றவாறு.

மாயை, சுத்தம் அசுத்தம் பிரகிருதியென மூன்று கண்டங்களாகப் பிரிந்து சுத்தாத்வா, மிசிராத்வா, அசுத்தாத்துவா எனப் பெயர் தாங்கி முறையே சிவ தத்துவம், வித்யாதத்துவம், ஆன்ம தத்துவங்களுக்கு இடமாய் ஆன்மாவோடு கூடிச் செயற்படுத்தும் என்பது கருத்து.

இவ்வாறு மாயை சுத்தம் சுத்தாசுத்தம் அசுத்தம் என மூவகைப்பட்டுத் தன் காரியங்களாலும் முக்காண்டமாகி ஆன்மாக்களின் அறிவு இச்சை செயல்களை விளக்கும் என்பதனை.

"சுத்தமும் அசுத்தஞ் சுத்தாசுத்த நித்தியமாய்த் தூய்தாம்
தத்துவம் ஐந்தொடேழு தருதிருபத்து நான்காய்
ஓததுமுக் காண்டமாகி யுயிர்உணர் விச்சையாதி
வித்தகக கலாதிதன்னால் விளக்கிடு மலமா மாயை."

என்ற உபதேசவிளக்கச் செய்யுளானும் தெளிக.

இங்ஙனம் ஆன்மதத்துவம் கீழ்ப்பாகத்திலும், வித்தியாதத்துவம் நடுப்பாகத்திலும், சிவதத்துவம் மேற்பாகத்திலும் விளங்கும் என்பது,

आत्मतत्वं अधोभागे विद्यातत्वञ्च मध्यमे।
तदग्रे शिवतत्वञ्च क्रमात्तत्वानि संनिहि॥

என்னும் பிருகத்ஜாபால வசனத்தாற் பெறப்படும்.

அன்றியும் திருவிளையாடற் புராணத்து,

"ஆதியிலான்ம தத்துவமான அலர்மகன்
பாகமும் நடுவில்
நீதியில்விச்சா தத்துவமான நெடியவன்
பாகமும் முடிவில்
ஓதியசிவதத் துவமெனலான வுருத்திர
பாகமும் உதிக்கும்
பேதியிம்மூன்றில் எண்ணில்தத் துவங்கள்பிறக்கும்
இம்மூன்றினும் முறையால்."

எனக் கூறப்படுதலின் ஆன்மதத்துவங்கள் பிரமன் பாகம் அடியிலுள்ளது என்றும், வித்யாதத்துவம் ஏழும் திருமால் பகுதி நடுவில் உள்ளது என்றும்,

சிவதத்துவம் ஐந்தும் உருத்திரபாகம் முடியிலுள்ளது என்றும் உணர்த்தப்பெற்றுள்ளது.

அதி – சிறந்ததான சுத்தம். மாயை உறும் ஏழு– வித்யா தத்துவங்கள் ஏழும். அவை புருடன், அராகம், வித்தை, கலை, நியதி, காலம், மாயை என்பன. மாயை ஈண்டுக் காரியமாயையாம் என்க. இவை சுத்தாசுத்தம் எனவும் போககாண்டம் அல்லது போக சயித்ருகாண்டமெனவும் கூறப்படும்.

ஐந்து சுத்தம் – சிவதத்தும் ஐந்து சுத்தம். அவை சுத்தவித்தை, ஈச்சுரம், சாதாக்யம், விந்து, நாதம் என்பன. இவ்வைந்தும ஞானக்கிரியா சொருப பேதங்கள் ஆவன.

இங்ஙனம் மூன்று கண்டம் ஆகி ஆன்மாவைச் சார்ந்து அறிவிச்சை செயல்களை ஆக்கும் என்பது உணர்த்தியவாறு. (14ப)

மாயைகைத் தாயாக மாமாயை யீன்றிட
வாய பரசிவன் றந்தையாய் நிற்கவே
ஏயு முயிர்க்கே வலசக லத்தெய்தி
ஆய்தரு சுத்தமுந் தான்வந் தடையுமே. 2268

இ-ம் - எனின், ஆன்மக்குழந்தை தாய் தந்தை யரால் வளர்க்கப் பெறுகின்ற முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள் : அசுத்த மாயை செவிலியாக, சுத்த மாயை குழந்தையைப்பெற, அதற்கான முறையில்

பரமசிவன் தந்தையாய் நிற்க, இவ்வண்ணம் தாய் தந்தையரைப் பொருந்திய ஆன்மா கேவல சகல அவத்தைகளை எய்தி ஆய்ந்து தெளியப்பெற்ற சுத்தா வத்தையையும் அடையும் என்றவாறு.

இறைவன் தந்தையாக இருந்து மாயாள் வயிற்றில் ஆன்மாவை உதிக்கச்செய்து அசுத்த மாயையைச் செவிலியாக வைத்து வளர்த்து உயிர் களைக் கேவல சகலாவத்தையுட்படுத்தித் தூய்மை யுறுத்திந் தன்னடிக் கீழ்ச் சேர்க்கும் என்பது கருத்து.

கைத்தாய் – செவிலி. மாமாயை – சுத்தமாயை. ஆய பரமசிவன் – அதற்குபகாரமான சிவம். (147)

## 8. பராவத்தை

மிக மேலான நிலை பராவத்தை எனப்படும். அஃதாவது ஞானம்பெருகி நாயகன் தன் பாதம் பெறும் காரணசுத்த நிலையாம். அந்நிலையிலே ஆன்மா தலைவனியல்பை முழுதும் நுகர்ந்து அவன் தம்மை ஆட்கொண்ட அருட்டன்மையை நினைந்திருக்கு மாதலின் இவ்வவத்தை எல்லா வவத்தையிலும் சிறந்தது ஆயிற்று. இதனை இரு பத்தேழு மந்திரங்களான் உணர்த்த உளங்கொண்டார் திருமூலதேவநாயனர்.

அஞ்சுங் கடந்தவ னாதி பரந்தெய்வ
நெஞ்சம தாய நிமலன் பிறப்பிலி
விஞ்சு முடலுயிர் வேறு படுத்திட
வஞ்சத் திருந்த வகையறிந் தேனே 2269

இம் - எனின், இறைவன் ஊனுயிர் வேறு செய்ய மாயையொடு பொருந்தியிருந்ததை உணர்த் துதல் நுதலிற்று.

இ - ள் : ஆணவம் முதலான ஐந்து மலங்களையுங் கடந்த அநாதியாகிய பரதெய்வமும், நெக்கு நெக்கு நிற்பவர் நெஞ்சத்துள் நீங்காது நிற்கும் அநாதி சுத்தனும், நித்தனுகவே பிறப்பில்லாதவனுமாகிய பரசிவம், ஒன்றையொன்று விஞ்சுகின்ற உடலையும் உயிரையும் வேறுபடுத்த மறைந்திருந்த உண்மையை அடியேன் அறிந்தேன் என்றவாறு.

ஊனையும், உயிரையும் வேறுக்க இறைவன் என்னுட் கலந்திருந்த தன்மையை அடியேன் உணர்ந்தேன் என்பது கருத்து.

அஞ்சு - எண்ணுதுபெயராய் ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்னும் ஐந்து மலங் களையும் உணர்த்திற்று. கடந்த - அவை ஐந்தும் தம் மொடு பொருந்ாது அநாதியேயென்ற. அஞ்சும் அநாதி கடந்த எனக்கூட்டி இப்பொருள் கோடலும் ஒன்று. இறைவன் அநாதியே மலமில்லாதவன் என்பதாம்.

பரம் - பரசிவம். அவனே முதல்வன் என்பார் தெய்வம் என்றார். விளக்கமுடையது என்பது சொற் பொருள்.

நெஞ்சமது ஆய நிமலன் - இடைவிடாது நினைப் பவர் மனத்தைக் கோயிலாகக் கொண்டவன் தூயன் என்பதாம். 'நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே புக்குநிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன்' 'நினைப்

பவர் மனங்கோயிலாக் கொண்டவன்’ ‘உள்ளம் பெருங்கோயில்’ என்பனகொண்டு தெளிக.

அஞ்சுங் கடந்தவற்கு அவை காரணமாகவரும் பிறவியும் அநாதியே இல்லையாதலின் பிறப்பிலி என்றார். இதனால் ஆதி மத்திய அந்தம் இன்மை வற்புறுத்தப்பெற்றது.

விஞ்சம் உடல் உயிர் – ஒன்றன் தன்மையை ஒன்று விஞ்சுகின்ற உடலும் உயிரும். வேறுபட – இதுவரை இவன் நான் என்றிருந்த அபேத ஞானங் கழன்று. ஊன் – சடம், உயிர் – உணர்த்த உணருஞ் சித்து என வேறுபடுத்தி உணர என்பதாம். சுந்தரர் சிவயோகி,

*‘ஊனுயிர் வேறு செய்தான்*
*நொடித்தான் மலை உத்தமனே’*

என்றதும் இக்கருத்தேயாதல் தெளிக, ஊனினின்று உயிர்வேறுபாடானது ; ஒற்றுமை நயத்தின் ஒன்றெனத்தோன்றினும், வேற்றுமை நயத்தின் வேறே யுடலுயிர் என உணர்தல்.

வஞ்சத்திருந்தவகை – உள்ளங்கவர் கள்வனுய்க் கரந்திருந்த நிலை. ஆன்மாவை தனுகரணாதிகளினின் றும் பிரித்து உயிரைச் சித்தாக்கும் அருள்செய்யக் கரந்திருந்தநிலை என்க. வஞ்சம் - பிரபஞ்சம் என்பதன் சிதை சொல்லாகக்கொண்டு இவ்வுலகிலேயே குருவாக எழுந்திருந்த தன்மை எனலும் ஆம்.

இது தத்துவ தரிசனம். தத்துவ சுத்தி, ஆன்ம ரூபம். ஆன்ம தரிசனம் செய்தவற்றை விளக்குவது.

(148)

**சத்தி பராபரம் சாந்தி தனிலான**
**சத்தி பரானந்தந் தன்னிற் கடர்விந்து**
**சத்திய மாயை தனுச்சத்தி யைந்துடன்**
**சத்தி பெறுமுயிர் தானங்கத் தாறுமே** 2270

இ-ம் – எனின், பராவத்தையின் நிலை வேறுபாடு களை உணர்த்துதல் நுதலிற்று,

இ-ள்: மேலானவற்றிற்கெல்லாம் மேலான திருவருளாற்றலே சாந்தி; அதில்விளைந்த சத்தி பரானந்தம்; அதில் உண்டாயது பரவிந்து; அழியாததான மாயையில் உண்டாம் உடலின் ஆற்றலாகிய ஐந்தோடு திருவருளிற்றோயும் உயிர் தான் அங்கமாய்த் திருவருளில் இளைப்பாறும் என்றவாறு.

பராவத்தையில் ஆன்மா, சாந்தியும் பரானந்தமும் பரவிந்துவும் பெற்று, ஐவகை ஆற்றலோடு திருவருளாகிய அங்கியில் தான் அங்கமாக நின்று, பிறவிச் சூழலிற்பட்ட வருத்தத்தினின்று ஓய்வுகொள்ளுமென்பது கருத்து.

சாந்தி – அமைதி, பரபரப்பு – பரபரப்பும் அதன் விளைவாய துன்ப இன்ப விளைவுகளும் விருப்பு வெறுப்புக்களால் விளைவதாகலின் வேண்டுதல் வேண்டாமையாகிய இரண்டுமற்றநிலை சாந்தியாயிற்று. ஓயாது அலையுங்கடல் ஆழமான இடத்து அமைதியாக இருத்தல்போலத் திருவருளின் ஆழத்தில் ஆன்மா தோய்ந்துள்ளபோது பரபரப்பின்றி அமைந்திருக்கும் என்பதாம். இது பராபரமாகிய சத்தியால் விளைவது ஆதலின் சத்தி பராபரம் சாந்தி எனப்பட்டது.

பராபரம் – பராத்பரம் என்பது பராபரம் என ஆயிற்று. பரம் + அபரம் அன்மை தேளிக.

தனிலான – அச்சாந்தியினுல் விளைந்த. சத்தி– மலபரிபாகமும், சத்திநிபாதமும். அதன் விளைவு பரானந்தம். பரானந்தம் என்பது பரம்பொருளோடு ஆன்மா இணைந்தபோதுண்டாகும் இன்பநிலை.

தன்னில் – பரானந்தத்தில் என்க. சுடர்விந்து – என்றும் ஒளிவிடுகிறதூயமாயை; என்றது பரவிந்துவை. சத்தியமாயை – அப்பரவிந்துவாகிய சத்தியின் மாயை. அகரம் ஆறனுருபு. நிலையான – அதாவது சத்தியமான மாயை எனலுமாம்.

தனுச்சத்தி – உடலால் உண்டான ஆற்றல். உடலாற்றல் ஐந்தாவன. அறிதல், விரும்புதல், ஆற்றுதல், அகறல், அருளில் தோய்தல் என்னும் ஐந்து வன்மைகள். இவையைந்தும் உயிர் உடலோடுகூடிய காலத்தன்றித்தனியே உடலில் வெளிப்படாவாயினும் அவற்றைத் தனிச்சத்தியைந்து என்றது ஒற்றுமை நயம்பற்றி என்க. இவற்றை வனப்பாற்றல், நடப்பாற்றல், அன்பாற்றல், அறிவாற்றல், ஆற்றலாற்றல் என்பாரும் உளர்.

சத்தி – திருவருள். பெறும் உயிர் – அதனையுடையும் ஆன்மா. அங்கத்து – அங்கமாய் நின்று. தான் – சிவம். சிவம் அங்கியாக விளங்க ஆன்மா அங்கமாய் நின்று இளைப்பாறும் என்றவாறும். (149)

ஆறுறுக் கப்பா லறிவா ரறிபவர்
ஆறுறுக் கப்பா லருளார் பெறுபவர்
ஆறுறுக் கப்பா லறிவா மவர்கட்கே
ஆறுறுக் கப்பா லரனி னிதாமே. 227

இம் – எனின், அறிதல், பெறுதல், நுகர்தல் இம் மூன்றும் பராவத்தையில் நிகழும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : தத்துவாதீதப் பொருளை உணர்பவரே ஞானிகள். அதனை ஆறு அத்துவாக்களின் அப்பாலாகப் பெறுபவர்கள் அருளுடையாரே; ஆறாதாரங் கடந்த அனுபவ ஞானிகட்கே தத்துவாதீதமானசிவன் இனிதாக விளங்குவன் என்றவாறு.

தத்துவங்ககடந்த பொருளையுணர்பவரே ஞானிகள். அதனையடைபவர்களே திருவருளுடையார். அவர்கட்கே சிவன் நுகர்தற்கினிய பொருளாவான் என்பது கருத்து,

ஆறாறு – முப்பத்தாறு தத்துவங்கள். எண்ணுகு பெயர். இரண்டாமடியிலுள்ள ஆறு ஆறு – ஆறத்துவாக்கள். ஆறு–வழி. ஆறத்துவாக்களிலும் வைத்துத் தியானிப்பவர்களே தத்துவாதீதமான சிவத்தினுடைய திருவருளைப் பெறுபவர் என்பதாம்.

மூன்றும் அடியிலுள்ள ஆறு ஆறு – ஆருதார நெறிகள். அவை மூலாதாரம், சுவாதிட்டானம், மணி பூரகம், விசுத்தி, அநாகதம், ஆஞ்ஞை என்ற ஆறு ஆதாரநெறிகள். அவற்றிற்கு அப்பால் என்றது துவாதசாந்தப்பெருவெளி. அங்குதியானிப்பவர்கட்கே அரன் இனிய பொருளாவன் என்றவாறு.

இனிதாமே என்றது கனியினும் இனிது : கட்டி பட்ட கரும்பினும் இனிது ; பனியலர்க் குழற்பாவை நல்லாரினும் இனிது; தனிமுடி கவித்தாளும் அரசினும்

இனிது ; என்ற அப்பர் சுவாமிகள் அருள்வாக்கை நினைந்து இன்புறவைப்பது. (150)

அஞ்சொடு நான்குங் கடந்தக மேபுக்குப்
பஞ்சணி காலத்துப் பள்ளி துயில்கின்ற
விஞ்சையர் வேந்தனு மெல்லிய லாளொடு
நஞ்சற நாடி நயஞ்செய்யு மாறே. 2272

இம் – எனின், பராவத்தையில் ஆன்மா திருவருளோடு நிலைத்திருக்குமாற்றை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; வித்தியாதரர்களுக்குத் தலைவனாகிய ஆன்மா, கருவி கரணங்களைக் கடந்து, தனக்குள்ளாகப் புக்கு, பஞ்சீகரணம் பெற்றகாலத்தில் பள்ளியிலே துயிலுகின்ற திருவருட் சத்தியோடு, தற்போதமாகிய நஞ்சு அற, விரும்பி இன்பந்துய்க்கும் ஆம் என்றவாறு.

ஆன்மா – கருவிகரணங் கழன்று, உள்புக்கு, பள்ளியில் திருவருட் சத்தியோடு கலந்து, தற்போதங் கெட்டு, இன்பம் நுகரும் என்பது கருத்து.

அஞ்சு – அறி கருவியாகிய ஐந்து. அவை மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. நான்கு – அந்தக் கரணங்கள் நான்கு. அவை, மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. இவற்றைக் கடத்தலாவது இவை சேட்டியாதவாறு – அஃதாவது புலன்களிற் சென்று பற்றி மேலும் வினைகளைத் தேடாதவாறு வென்று தம்வயப் படுத்துதல் என்பதாம்.

அகமேபுக்கு – உயிருள் உயிராகக்கலந்து.

பஞ்சணிகாலம் – உயிரும் அருளும் பிரிப்பின்றிப் பஞ்சீகரணம் பெற்றகாலம் என்க. பஞ்சீகரணமாதல் – பிரிப்பின்றிக் கலத்தல். பள்ளி – திருவருள் இன்பந் துய்க்கும் ஆனந்த நிலையம். துயிலுதல் – தன்செயலற்றுக் கிடத்தல். ஈண்டுக் கலத்தலை உணர்த்தியது. தலைவன் தலைவியொடு துயின்றான் எனல்போலக் குறிப்பித்தவாறு.

*மெல்லியலாள்* – அருட்சத்தி. நஞ்சு அறநாடி – மலவிடம்கெட ஆராய்ந்து விரும்பி. நஞ்சுறநாடி என்பது பாடமாயின், நைந்து மிக விரும்பி என்பது. முயக்க காலத்து 'நானிவள் ஆம் பகுதிப்பொற் பாரறிவார்' என்றாற்போல இருவரும் நைந்து ஆரத்தழுவிக் கிடந்து என்க.

நயம் – இன்பம். நயஞ்சொரிதல் – இன்பம் துய்த்தல். பள்ளி என்று உருவகித்தமைக்கு ஏற்ப ... அணிசெய்யப் பெற்ற கால்களையுடைய பள்ளி எனவும் ஒருபொருள் தோன்றநின்றமை காண்க.

விஞ்ஞை – அறிவு. விஞ்ஞையர்வேந்தன்–அறிவுருவான ஆன்மா. நஞ்சு – ஆணவமாகியவிடம், நைந்து எனவும் ஒருபொருள் தோன்றுதல் காண்க. (151)

உரிய நனைத்துரி யத்தி லிவனும்
அரிய துரிய நனவாதி மூன்றிற்
பரிய பரதுரி யத்திற் பரனுந்
திரிய வருந்துரி யத்திற் சிவமே. 2273

இம் – எனின், பரதுரிய சாக்கிரம் முதலியவற்றின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : உரிய நனவில் துரியத்தில் ஆன்மா தனித்து நிற்பன்; அரிய துரிய சாக்கிரம் முதலிய மூன்றனுள் பெருமை மிக்க பர துரியத்தில் பரனுவன்; மாறுபாடில்லாத துரியாவத்தையில் சிவமாம் எ – று.

நனவிற்றுரியத்து ஆன்மா தனித்துநிற்கும். துரிய சாக்கிரம் துரிய சொப்பனம், துரியசுழுத்தி என்ற மூன்றனுள் பரதுரியத்தில் ஆன்மா பரையாகிற அருட் சத்தியோடு கூடிய பரனே ஆவன். மாறுபாடில்லாத துரியத்தில் சிவமாம் என்பது கருத்து

நனுத்துரியம் – நனவில் துரியம் அதாவது சாக்கிராவத்தையில் நிகழும் துரியநிலை. இவன் ஆம் என்றது ஆன்மா ஏனைய தத்துவங்களோடு கூடாது தனித் திருக்கும் நிலை.

*துரியநனு – துரியாவத்தையில் சாக்கிரம்; அது* அரியதொன்றாகலின் அரிய துரியநனு எனப்பட்டது. அருமை ஈண்டு அந்நிலை நிற்றற்கருமை என்பதை உணர்த்திற்று.

பரிய – பருமையினையுடைய. அதாவது பெருமை மிக்க. பரதுரியம் - பராவத்தையின் கண் நிகழும் துரியம். பரம் – சுத்தாவத்தைக்கு மேனிலை. அவ்வவத்தையில் மலவாசனையும் கெடுதலின் சிவமாம் என்றார். (152)

பரமா மதீதமே பற்றறப் பற்றல்
பரமா மதீதம் பயிலப் பயிலப்
பரமா மதீதம் பயிலாத் தபோதனர்
பரமாகார் பாசமும் பற்றென் றருதே. 2274

பஞ்சணிகாலம் – உயிரும் அருளும் பிரிப்பின்றிப் பஞ்சீகரணம் பெற்றகாலம் என்க. பஞ்சீகரணமாதல்– பிரிப்பின்றிக் கலத்தல். பள்ளி – திருவருள் இன்பந் துய்க்கும் ஆனந்த நிலையம். துயிலுதல் – தன்செயலற்றுக் கிடத்தல். ஈண்டுக் கலத்தலை உணர்த்தியது, தலைவன் தலைவியொடு துயின்றான் எனல்போலக் குறிப்பித்தவாறு.

மெல்லியலாள் – அருட்சத்தி. நஞ்சு அறநாடி – மலவிடம்கெட ஆராய்ந்து விரும்பி. நஞ்சுறநாடி என்பது பாடமாயின், நைந்து மிக விரும்பி என்பது. முயக்க காலத்து 'நானிவள் ஆம் பகுதிப்பொறு பாரறிவார்' என்றாற்போல இருவரும் நைந்து ஆரத்தழுவிக் கிடந்து என்க.

நயம் – இன்பம். நயஞ்செய்தல் – இன்பம் நுகர்தல். பள்ளி என்று உருவகித்தமைக்கு ஏற்ப பஞ்சால் அணிசெய்யப் பெற்ற கால்களையுடைய பள்ளி எனவும் ஒருபொருள் தோன்றநின்றமை காண்க.

விஞ்ஞை – அறிவு. விஞ்ஞையர்வேந்தன்–அறிவுருவான ஆன்மா. நஞ்சு – ஆணவமாகியவிடம். நைந்து எனவும் ஒருபொருள் தோன்றுதல் காண்க. (151)

உரிய நனத்துரி யத்தி லிவனும்
அரிய துரிய நனவாதி மூன்றிற்
பரிய பரதுரி யத்திற் பரனுந்
திரிய வருந்துரி யத்திற் சிவமே. 2273

இம் – எனின், பரதுரிய சாக்கிரம் முதலியவற்றின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : உரிய நனவில் துரியத்தில் ஆன்மா தனித்து நிற்பன்; அரிய துரிய சாக்கிரம் முதலிய மூன்றனுள் பெருமை மிக்க பர துரியத்தில் பரனுவன்; மாறுபாடில்லாத துரியாவத்தையில் சிவமாம் எ – று.

நனவிற்றுரியத்து ஆன்மா தனித்துநிற்கும். துரிய சாக்கிரம் துரிய சொப்பனம், துரியசுழுத்தி என்ற மூன்றனுள் பர துரியத்தில் ஆன்மா பரையாகிற அருட் சத்தியோடு கூடிய பரனே ஆவன். மாறுபாடில்லாத துரியத்தில் சிவமாம் என்பது கருத்து

நனுத்துரியம் – நனவில் துரியம் அதாவது சாக்கிராவத்தையில் நிகழும் துரியநிலை. இவன் ஆம் என்றது ஆன்மா ஏனைய தத்துவங்களோடு கூடாது தனித் திருக்கும் நிலை.

துரியநனு – துரியாவத்தையில் சாக்கிரம்; அது அரியதொன் றாகலின் அரிய துரியநனு எனப்பட்டது. அருமை ஈண்டு அங்நிலை நிற்றற்கருமை என்பதை உணர்த்திற்று.

பரிய – பருமையினையுடைய. அதாவது பெருமை மிக்க. பரதுரியம் - பராவத்தையின் கண் நிகழும் துரியம். பரம் – சுத்தாவத்தைக்கு மேனிலை. அவ்வவத்தையில் மலவாசனையும் கெடுதலின் சிவமாம் என்றார். (152)

பரமா மதீதமே பற்றறப் பற்றல்
பரமா மதீதம் பயிலப் பயிலப்
பரமா மதீதம் பயிலாத் தபோதனர்
பரமாகார் பாசமும் பற்றுரென் றருதே. 2274

பஞ்சணிகாலம் – உயிரும் அருளும் பிரிப்பின்றிப் பஞ்சீகரணம் பெற்றகாலம் என்க. பஞ்சீகரணமாதல்– பிரிப்பின்றிக் கலத்தல். பள்ளி – திருவருள் இன்பந் துய்க்கும் ஆனந்த நிலையம். துயிலுதல் – தன்செய லற்றுக் கிடத்தல். ஈண்டுக் கலத்தலை உணர்த்தியது, தலைவன் தலைவியொடு துயின்றான் எனல்போலக் குறிப்பித்தவாறு.

மெல்லியலாள் – அருட்சத்தி. நஞ்சு அறநாடி – மலவிடம்கெட ஆராய்ந்து விரும்பி. நஞ்சுறநாடி என்பது பாடமாயின், நைந்து மிக விரும்பி என்பது. முயக்க காலத்து 'நானிவள் ஆம் பகுதிப்பொற் பாரறிவார்' என்றாற்போல இருவரும் நைந்து ஆரத்தழுவிக் கிடந்து என்க.

நயம் – இன்பம். நயஞ்செய்தல் – இன்பம் நுகர்தல். பள்ளி என்று உருவகித்தமைக்கு ஏற்ப பஞ்சால் அணிசெய்யப் பெற்ற கால்களையுடைய பள்ளி எனவும் ஒருபொருள் தோன்றநின்றமை காண்க.

விஞ்சை – அறிவு. விஞ்சையர்வேந்தன்–அறிவுரு வான ஆன்மா. நஞ்சு – ஆணவமாகியவிடம். நைந்து எனவும் ஒருபொருள் தோன்றுதல் காண்க. (151)

உரிய நனைத்துரி யத்தி லிவனும்
அரிய துரிய நனவாதி மூன்றிற்
பரிய பரதுரி யத்திற் பரனுந்
திரிய வருந்துரி யத்திற் சிவமே. 2273

இம் – எனின், பரதுரிய சாக்கிரம் முதலிய வற்றின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : உரிய நனவில் துரியத்தில் ஆன்மா தனித்து நிற்பன்; அரிய துரிய சாக்கிரம் முதலிய் மூன்றனுள் பெருமை மிக்க பரதுரியத்தில் பரனுவன்; மாறுபாடில்லாத துரியாவத்தையில் சிவமாம் எ – று.

நனவிற்றுரியத்து ஆன்மா தனித்துநிற்கும். துரிய சாக்கிரம் துரிய சொப்பனம், துரியசுழுத்தி என்ற மூன்றனுள் பரதுரியத்தில் ஆன்மா பரையாகிற அருட் சத்தியோடு கூடிய பரனே ஆவன். மாறுபாடில்லாத துரியத்தில் சிவமாம் என்பது கருத்து

நனுத்துரியம் – நனவில் துரியம் அதாவது சாக்கிராவத்தையில் நிகழும் துரியநிலை. இவன் ஆம் என்றது ஆன்மா ஏனைய தத்துவங்களோடு கூடாது தனித் திருக்கும் நிலை.

துரியநனு – துரியாவத்தையில் சாக்கிரம்; அது அரியதொன்றாகலின் அரிய துரியநனு எனப்பட்டது. அருமை ஈண்டு அந்நிலை நிற்றற்கருமை என்பதை உணர்த்திற்று.

பரிய – பருமையினையுடைய. அதாவது பெருமை மிக்க. பரதுரியம் - பராவத்தையின் கண் நிகழும் துரியம். பரம் – சுத்தாவத்தைக்கு மேனிலை. அவ்வவத்தையில் மலவாசனையும் கெடுதலின் சிவமாம் என்றார். (152)

பரமா மதீதமே பற்றறப் பற்றல்
பரமா மதீதம் பயிலப் பயிலப்
பரமா மதீதம் பயிலாத் தபோதனர்
பரமாகார் பாசமும் பற்ருென் றருதே. 2274

இம் – எனின், பரதுரியாதீத நிலையின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; பரதுரியாதீத அவத்தை பற்று அறவே நீங்கச் சிவத்தைப் பற்றுதலாம்; அங்ஙனம் பற்றறப் பழகப் பழகுதலே பராதீதமாம்; அங்ஙனம் பராதீதத்தில் பயிலாத தவசிகள் பரம்பொருளாகார். அவர்களை விட்டுப் பாசமும் பற்றும் ஒன்றும் நீங்காது எ – று.

பராதீதமாவது பற்றுநீங்கி அந்நீங்கிய நிலையிலே நீடித்து நிற்கப் பழகி நிற்றல். அங்ஙனம் பழகிப் பராதீதம் போய் அண்ணுத தவசிகள் பாசமும் பற்றும் நீங்காது இடர்ப்படுவார் என்பது கருத்து,

பரமாம் அதீதம் – பராதீதம். இது சொற்பொருள் விரித்தல் என்னும் உத்தி. பற்றறப்பற்ற என்பதுபாடமாயின் பற்றப் பயிலப் பரமாம் எனக்கூட்டிப் பரம் பொருளாம் எனப் பொருள்கொள்க.

அதீதம் பயிலாத் தபோதனர் – பராவத்தையில் துரியாதீதத்தே நிலைத்து நிற்கப் பழகாத தவசிகள். பரம் ஆகார் – பரசிவம் ஆகார். பாசம் – வினைப் போகங்களிற் பற்றினை மிகுவிக்கும் மலம். ஒன்றும் என்ற உம்மை விகாரத்தாற்றொக்கது. (153)

ஆயும்பொய்ம் மாயை யகம்புற மாய்நிற்கும்
வாயு மனமுங் கடந்த மயக்கறின்
தூய வறிவு சிவானந்த மாகிப்போய்
வேயும் பொருளாய் விளைந்தது தானே. 2275

இம் – எனின், மாயை அகலப் பராவத்தை நிலைக்கும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: ஆராயப்படுகின்ற பொய்யான மாயையானது உயிரினகமாயும், புறமாயும் நிற்கும்; உரையும் மனமும் கடந்துள்ள அம்மாயையின் மயக்கு நீங்கின் சுத்த ஞானமானது சிவானந்தமாய்ச் சென்று ஆன்மாவையே மூடும் பொருளாக விளங்கதது ஆம் எ - று.

மாயையின் மயக்கறின் ஆன்மா தூயதாய்ச் சிவானந்தம் பெற்று, அச்சிவானந்தம் ஆன்மாவை வியாபித்துத் தன்னுளடக்கி நிற்கும் என்பது கருத்து.

ஆயும் பொய்ம்மாயை - அளவைகளானும், காரியத்தானும் உண்டென்று துணிந்து இற்று என ஆராயப்படுவதாகிய பொய்யானமாயை. பொய்ம் மாயை என்றது அதன் காரியமாகிய தனுகரணாதிகள் நிலையின்றி அழிந்துபடும் என்னும் கருத்துப்பற்றிக் கூறியதேயன்றி மாயைபொய்யன்று உள்பொருளே யாம் என்பதை நித்தமாய் என்னும் சித்திவிருத்தத் தானும் தெளிக. மாயை பொய்யென்பார் க்ஷணபங்க வாதிகள். ஆதலின் பொய் என்பதற்கு மாயாகாரியம் நிலையற்றது. மாயை நித்தமானது எனக் கருத்துக் கொள்க.

மாயை அகமாய் நிற்றல் - மனமுதலிய கரணங்களாய் உயிர்க்கு உபகாரப்படுதல். புறமாய் நிற்றல் புவனபோகங்களாக உபகாரப்படுதல்.

வாய் - கருவியாகுபெயராக உரையையும், மனம் எண்ணுதலையும் உணர்த்தின. மாயையின்

மயக்கம் அவ்வியத்தமாதலின் இங்ஙனம் கூறினர். அன்றியும் மாயை யருவாதலின் அதன்காரியமாகிய மயக்கம் இன்னதென்று சொல்லவும் கருதவும் முடியாதாயிற்று.

தூய அறிவு - மலமறைப்பற்ற சிவஞானம். சிவ ஞானத்தா லறிவன யாவும் ஆனந்தமாதலின் சிவா னந்தமாகி என்றார்.

வேயும்பொருள் - சிவஞானம் வியாபகமாய் உயிர் வியாப்பியமாய் அதனுள் அடங்கிச் சிவானந்தமே வடிவாகியிருக்கும் ஆதலின் இங்ஙனம் கூறினர். வேய்தல் - கூறைவேய்ந்தான் என்புழிப் போல மூடுதல் அல்லது, கூடுதல் என்னும் பொருளது.

மயக்கறின், தூயஅறிவு, ஆனந்தமாகிப் போய், பொருளாய் விளைந்தது என முடிவுகாண்க. விளையுந் தானே என எதிர்காலததாற் கூறவேண்டியதைத் துணிவுபற்றி விளைந்தது என இறந்தகாலத்தாற் கூறினர். (154)

துரியப் பரியி லிருந்தவச் சீவனைப்
பெரிய வியாக்கிரத துள்ளே புகவிட்டு
நரிகளை யோடத் துரத்திய நாதர்க்
குரிய வினைகளின் றேலமிட டன்றே. 2276

இ-ம் - எனின், சாக்கிர துரியானுபவம் கூறுதல் நுதலிற்று.

இ - ள் : துரியமாகின்ற குதிரைமேல் இருந்த ஆன்மாவை, பெரிய சாக்கிரமாகிற பராவத்தையில்

புகச்செய்து, நரிகளை வெருட்டிய நாததரிசனம் செய்த அநுபூதிமான்களுக்கு உரியனவாகிய வினைகள் அவர்களைப்பற்றிப் பயனளிக்க மாட்டாமையான் நின்று ஓலமிட்டன என்றவாறு.

சாக்கிர துரியாதீதமாகிய பராவத்தையில் இருந்த ஆன்மா, நாதனுகி வினைப்போகமின்றி மகிழும் என்பது கருத்து.

துரியப்பரி – துரியமாகிய பரி. அதாவது துரியாவத்தையாகிற குதிரையின்மீதிருந்த சீவன் என்றது துரியாதீதத்தை அண்மிய ஆன்மா என்றவாறும்.

வியாக்கிரம் – சாக்கிரம். சகல கேவலாதிகளிலும் சாக்கிரம் உளவாகலின், வி+சாக்கிரம் என்றது பராவத்தையாகிற சிறந்த சாக்கிரம் என்பது தோன்றக் கூறியதாம் சய போலியாதலின் விசாக்கிரம் வியாக்கிரமாயிற்று. இங்ஙனம் அன்றிப் புலியெனப் பொருள் கொண்டு பொருந்தாத உருவகமாக்கிப் பொருணயம் அறியாது இடர்ப்படுவாரும் உளர். முன்னரும் வியாக்கிரம் இப்பொருளில் சார்ந்தமை காண்க. பெரிய வியாக்கிரம் – பரசாக்கிரம்.

புகவிட்டு என்ற வழக்கால் துரியாதீத சாக்கிரம் பிரமரந்திரமாகிய பொள்ளலில் சிகபூம் அநுபவம் அங்கே ஆன்மாவைப் புகச்செய்து அதீதத்தை அடைவித்து என்க.

நரிகள் - மக்களை ஏமாற்றித் தம்வழி அலைக்கழிக்கும் தந்திரமுள்ள விலங்கு. பொறிகளும் புலன்களும் கரணங்களும் ஆன்மாவை யருள் வழிசாராதுதடுத்துத் தம்வழி யீர்ப்பனவாகலின் அவற்றை நரியென்றார்.

நாதர் – சித்தமரபினர். அனுபவசித்தியுடை யார்க்கு வழங்கும் பட்டப்பெயர். அவர்கள் நாதத்தை வென்றவர்களாதலால் என்க. சித்தநாதர், போகநாதர், ஆதிநாதர் என்ற வழக்குகளையும், “நந்தி யருள் பெற்ற நாதரை நாடிடின்” ‘நந்தியருளாலே நாதனும் பேர்பெற்றோம்’ என்பனவாதிய ஆட்சிகளையும் கொண்டு தெளிக. இம் மரபறியாதார் நாதன்–சிவனெனப் பொருள் கொண்டு நாதர்க்குரியவினை–சிவப்பணி எனத்திரியவுணர்ந்து பராவத்தைக் குரியதல்லாத பொருள் கொள்வர்.

நாதர்க்குரியவினைகள் – சித்தநாதர்களுக்கு உரியவான பிராரத்த கன்மங்கள். அவை அவர்களைச் சென்றடைய மாட்டாமையின் ஓலமிடுவவாயின என்க.

நின்றவிச் சாக்கிர நீடுரி யத்தின்
மன்றனு மங்கே மணஞ்செய்ய நின்றிடும்
மன்றன் மணஞ்செய்ய மாயை மறைந்திடும்
அன்றே யிவனு மவன்வடி வாமே. 2277

இ – எனின், சாக்கிர துரியத்தில் கூத்தன் விளங்க மாயை மறையும் என்பதை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; அனுபவமாக நின்ற இந்த சாக்கிர துரியாவத்தையில் மன்றவாணனாகிய கூத்தனும் ஆன்மாவோடுகலக்க இருந்தான். அவன் அங்ஙனம் மணஞ்செய்ய மாயையானது மறையும். அக்கணமே சீவன் சிவமாவன் என்றவாறு.

சாக்கிர துரியத்தில் ஆன்மாவோடு சிவம் கலக்க, ஆன்மா மாயையின் நீங்கிச் சிவ மயமாவன் என்பது கருத்து.

நீள் துரியம் என்றது துரியாதீதநிலையை. மன்றன் - சபாபதியாகிய சிவன். மணஞ்செய்தல் - கலத்தல். சிவத்தோடு சீவன் இரண்டறக்கலத்தல். ஆன்மா மாயையைச்சார்ந்து மாயையாகாது சிவத்தைச் சார்ந்து, சிவமயமாம் என்பதாம். அவன் - சிவன். அவன் வடிவு ஆதல் - சிவனுருப்பெறுதல், அஃதாவது ஞானமே திருமேனியாக்கோடல். (156)

விரிந்திடிற் சாக்கிர மேவும் விளக்காய்
இருந்த விடத்திடை யீடான மாயை
பொருந்துந் துரியம் புரியிற்ற ஞகுந்
தெரிந்த துரியத்துத் தீதக லாதே. 2278

இம் - எனின், சாக்கிர துரிய அனுபவங் கூறுதல் நுதலிற்று,

இ - ள் : சாக்கிரநிலை விரியுமாயின் இருந்த இடத்திலேயே வலிமைபெற்ற மாயை விரும்பத்தக்க விளக்காகப் பொருந்தும், துரியாவத்தை கூடுமாயின் சிவமாம். சாக்கிர துரியத்தில் தீதின்கண் ஆன்மா சென்று பரவாது என்றவாறு.

சாக்கிர நிலையில் மாயை விளக்கம் செய்யும்; சாக்கிர துரியத்து ஆன்மா தீமையிற்சென்று பரவாது என்பதாம்.

சாக்கிரம் - விழிப்பாகிய நனவுநிலை. அது விரிதலாவது அங்குக் காரியப்படும் தத்துவங்களோடு

கூடுதல். சாக்கிரம் விரிந்திடில் மாயை விளக்காய்ப் பொருந்தும் என வினைமுடிவு செய்க. மாயை விளக்காய் மேவும் என முடித்தலுமாம். இங்ஙனம் முடிக்கின் பொருந்தும் துரியம் புரியின் எனத் துரியத்திற்கு அடையாக்குக.

ஈடு – பெருமை. இருந்த இடத்திடை – ஆன்மாவைப்பற்றி மறைத்தலைச் செய்வதாக இருந்த அந்நிலையிலே விளக்கத்தையும் செய்யும் என்பதாம்.

தானுதலாவது சிவம்பிரகாசிக்கச் சிவமேயாதல்.

தீதின்கண் அகலாது என ஏழாவது விரித்துப் பொருள்கொள்க, இதற்குத் தீதின்கண் தாமரை இலை நீர் போல ஒட்டாது நிற்கும் எனத் தோன்றியவாறு உரை காண்பாரும் உளர். (157)

உன்னை யறியா துடலைமுன் ளுனென்றாய்
உன்னை யறிந்து துரியத் துறநின்றாய்
தன்னை யறிந்தும பிறவி தணவாதால்
அன்ன வியாத்த னமலனென் றறிதியே. 2279

இ – னின், துரியஞ்சேரினும் பிறவியறாது; இறைவன் வியாப்தன் நாம் வியாப்பியன் என்றறிந்தாலல்லது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஆன்மாவாகிய உன்னை அறியாமலேயே உடலையே நான் என்று மயங்கியிருந்தாய்; உன்னை அறிந்தபின் துரியாவத்தையின்கண் பிரியாது பொருந்தி நின்றாய்; தன்னை அறிந்தாலும்பிறவி நீங்காது: ஆதலால் அத்தகைய வியாப்தன் மலரகிதனாகிய சிவன் என்று அறிவாயாக என்றவாறு.

தன்னையறிந்து தலைவனையறிந்தாலல்லாது பிறவி யறாது என்பது கருத்து.

உடலே தான் என்று மயங்கியிருப்பானை நோக்கிக் கூறியது; 'உன்னையறியாது' என்பது ஆன்மாவாகிய நீ நித்தன், சித்தன், அநேகன் பெத்தன், பெத்தநிலை நீங்கின் முத்தன் என்றுணராமல் அவன் அவள் அது வெனும் உடம்பென்னத் தான் என்னத் தோன்றாமற் பிரிவற்று நிற்பதால் சடமாகிய உடலையே நானென மயங்கி நிற்கின்றாய் என்பார் இங்ஙனம் கூறினார்.

உன்னையறியாது – ஆன்மாவாகிய உன்னையறி யாது, பிரிவற்று நிற்கும் உடலைத் தானென்றறிந்து நிற்பதனை 'உடலை நானென்றாய்'' என்றது. இவர்கள் தேகமே ஆன்மா என்பவர்கள்.

உன்னையறிந்து–முற்கூறியவாறு தன்னையுணர்த்த உணருஞ் சித்தென்றறிந்து என்க.

துரியம் – நான்காம் நிலையாகிய பரதுரியம். உற நிற்றல் – பிரிப்பின்றி நிற்றல்.

ஆன்மதரிசனம் ஒன்றனே பிறவி நீங்காது, சிவ தரிசனமும் வேண்டும் என்று வலியுறுத்தவாறு.

வியாத்தன் – வியாப்தன் என்பதன் சிதைவு. விளக்கொளியை விழுங்கி நிற்கும் ஞாயிற்றொளியைப் போல ஆன்மாவைத் தன்னகத்தடக்கி நிற்கும் பரம் பொருள். அமலன் – இயல்பாகவே பாசங்களி னீங்கியவன் (158)

**கருவரம் பாகிய காயந் துரியம்**
**இருவருங் கண்டீர் பிறப்பிறப் புற்றூர்**
**குருபரம் பெற்றவர் கூடிய பின்னை**
**இருவரு மின்றியொன் ருகிநின் ருரே. 2280**

இம் – எனின், சிவதரிசனம் சிவப்பேறுகளா லேயே உண்மை ஆனந்தம் உளதாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: கருவாய்ப்படுதலை எல்லையாக உடைய உடலினளவே துரியானுபவம்; நீயும் உன்னுடலு மாய இருவீரும் பிறப்பு இறப்பு இவற்றின்கட் பட்டவர்களே, நன்கு சிந்தியுங்கள். ஆதலால் குரு விடம் மேலான உபதேசம்பெற்று, அச்சிவபெருமான் உன்னை வந்து கூடியபின் அவர் - தான் என்ற இருவரின்றிக் கலப்பால் ஒன்ருய் நின்ருர் என்றவாறு.

துரியானுபவம் உடையார்க்கும் பிறப்பிறப்புண் டாம். ஏனெனின், அவ்வனுபவம் காயத்தினளவா யதே; குருவருளால் சீபஞ்சாக்கர உபதேசமும் வரமும் பெற்று சிவன் கூடிய பிறகே சிவமாந் தன்மை சித்திக்கு மென்பது கருத்து.

கருவரம்பாகிய காயம் – தோன்றும் எல்லை கருவறையாகக் கொண்ட உடல். துரியம் என்றது ஈண்டுப் பர துரியத்தையென்பதை அதிகாரம் நோக்கி யறிக. பர துரியம் பிரமரந்திரத்தை இடமாக உடையது ஆதலின் துரியம் காயம் என்ருர்.

இருவரும் என்ற எண்ணுக்குறிப்பு முன் மந்திரத்து 'உன்' என்ற உயிரையும் அதனோடு

பிறிப்பின்றி நின்ற உடலையும் என்க. உயிர் பிறக்குமோ இறக்குமோ எனின் உடலொடு கூடித் தோன்றுதலையே கூறியதாம் என்க. உயிரும் உடலும் ஆகிய இருவருமே இறப்பு பிறப்புற்றார் என்க. இங்ஙனமன்றி அயனுமாலும் பிறப்பிறப்புற் றார் என்பர். அதிகார இயைபும் முன்பின் மந்திரங்களின் இயைபு மின்மையின் அவ்வுரை பொருந்தாதென்க.

குருவரம் – ஆசாரியன் 'மலமாயை கன்மங் களினின்று நீங்கி – இவன் வீடுபெறுவானாக' என்ற வரமும், அதற்குவாயிலான உரையாகிய சீபஞ்சாக் கரமுமாம்.

அவர் – மந்திரப்பொருளாகிய பரசிவம். கூடிய பின்னை – தியானிப்பார் சிந்தை பிரியாது எழுந்தருளி யான்மாவைக் கலந்தபிறகு என்க. தியானிப்பானும் – தியானப் பொருளாகிய சிவமுமாகிய இருவரும் வேறன்றி, ஒன்றாகி – கலப்பால் ஒன்றாகி, நின்றார் என்க. (159)

**அணுவின் றுரியத்தி லான நனவும்**
**அணுவசை வின்கண் ணான கனவும்**
**அணுவசை விற்பரா தீதஞ் சுழுத்தி**
**பணியிற் பரதுரி யம்பர மாமே.** 2281

இம் – எனின், பரதுரிய சாக்கிரமுதலியவற்றின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஆன்மாவின் துரியசாக்கிரமும், அதன் புடைபெயர்ச்சியில் உண்டான துரிய சொப்பனமும்,

உயிரின் அசைவினுல் கடந்த நிலையாகிய துரிய சுழுத்தியும் அவ்வசைவும் பணிந்தடங்குமாயின் பரதுரீயம் பரமாம் என்றவாறு.

ஆன்மா பேருறக்கநிலை எய்துதலே துரிய சாக்கிரம்; அங்கே ஆன்மாவின் துடிப்பு துரிய சொப்பனம்; அத்துடிப்பிற் பராதீதம் எய்துதல் துரியசுழுத்தி; துடிப்பும் அடங்குதல் பரதுரியமாகிற பராவத்தை என்பது கருத்து.

பணியில் – அடங்கினுல். (160)

**பரதுரி யத்து நனவும் பரந்து**
**விரிசக முண்ட கனவுமெய்ச் சாந்தி**
**உருவுறு கின்ற சுழுத்தியு மோவத்**
**தெரியுஞ் சிவதுரி யத்தனு மாமே.** 2282

இம் – எனின், பரதுரிய சாக்கிரம் முதலிய நிலைகளின் இயல்பை முறையே உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்; பரந்து விரிந்து கிடக்கின்ற உலகத்தை நுகர்ந்த பரதுரிய சாக்கிரமும், நுண்ணுணர்வாக நுகர்ந்த பரதுரிய சொப்பனமும், உண்மையான அமைதியாம்; கருவிகரணங்கள் செயற்படாது உரு மட்டும் தோன்றும் நிலை பரதுரிய சுழுத்தியாம்; உருமாத்திரமாய் நிற்கும் அந்நிலையும் கெடப் புலனுவது பரதுரியமாம் என்றவாறு.

பரதுரிய சாக்கிரமும் பரதுரிய சொப்பனமும் பரந்த உலகத்தை எஞ்சுதலின்றி இருந்த நிலையிலேயே எல்லாவற்றையும் ஒருசேர நுகர்தலும், நுண்ணுணர்

வானுகர்தலுமாம், பரதுரிய சுழுத்தி கருவிகரணங் களின் உருவைமட்டும் உணர்தலாம். அதுவும் கெட்டநிலை பரதுரியதுரியமாம். இதுவே சிவதுரியம் எனப்படும் என்பது கருத்து.

மெய்ச்சாந்தி—உண்மையான அமைதி நிலை. (161)

பரமா நனவின் பின்பார் சகமுண்ட
திரமார் கனவுஞ் சிறந்த சுழுத்தி
உரமா முபசாந்த முற்றல் துறவே
தரனுஞ் சிவதுரி யத்தனு மாமே. 2283

இம் - எனின், இதுவும் மேலவற்றை ஒருவாற்றான் உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்; பராவத்தையின் கண்ணுகிய சாக்கிரத்தில் நுகர்ச்சிக்கு உரியதான உலகத்தை உண்டலாகிய உறுதியான நினைப்பு பரசொப்பனமாம்; நினைப்பும் அற்று ஞானமயமாதல் சிறந்த சுழுத்தியாம்; உபசாந்த மடைதல் பரதுரியமாம். அந்த உபசாந்தத்தே தங்கி யிருப்பவன் சிவதுரியத்தனுவன் என்றவாறு.

பரசாக்கிரம் உலகினை நுகர்தல். அந்நுகர்ச்சியின் உறுதி பரசொப்பனம். அதனை ஞானமயமாக அறிதல் பரசுழுத்தி. உபசாந்தம் முதிர்தல் சுழுத்தியைத்துறந்த பரதுரியமாம். அதனைத்தரித்தவன் சிவதுரியனும் என்பது கருத்து.

சகமுண்டல் நனவு. அதன்திரம் ஆர்கனவு. சிறந்த சுழுத்தி உரமாம். உபசாந்தமுற்றல்—உபசாந்தத்தின் முதிர்ந்தநிலை. உபசாந்தம் — ஆழ்கடல்போல அலையும் உலைவுமின்றிக் களிப்புடன் இருத்தல்.

பரமாம் நனவு - பராவத்தையின் கண்ணதாகிய நனவு; திரம் – உறுதி. சிறந்த சுழுத்தியென்றார் சகல கேவலசுத்தங்களின் சுழுத்திக்கு இது வேறானதென்று உணர. உரம்–அறிவு. தரன் – தாங்குபவன் தரிப்பவன்; (162)

*சீவ துரிய முதலாகச் சீரான*
*ஆவ சிவதுரி யாந்த மவத்தைபத்*
*தோவும் பராநந்தி யுண்மைக்குள் வைகியே*
*மேவிய நாலேழ் விடுத்துநின் றானே.* 2284

இம் - எனின், சீவதுரிய முதலான பத்தவத்தைகளையும் கடந்த நிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சீவதுரிய முதலாகச் சிவதுரியம் ஈறாக உள்ள அவத்தைகள் பத்தாம்; இவற்றைக் கடந்த நிலையில் பரையும் பரனும் நித்யமான மெய்ஞ்ஞானத்தில் தங்கி பதினொன்றவதையும் கடந்து நின்றானல்லவா ? என்றவாறு.

சிவதுரிய முதலான பத்தவத்தையையுங் கடந்த பதினொராவது அவத்தைச் சிவதுரியாதீதம். அதனையுங் கடந்தவன் பராநந்தி என்பது கருத்து.

சீவதுரிய முதல் சிவதுரியமீறான பத்தவத்தைகள் ஆவன :– சீவதுரியம், சீவதுரியாதீதம். பரநனவு, பரகனவு, பரசுழுத்தி, பரதுரியம், சிவநனவு, சிவகனவு, சிவசுழுத்தி, சிவதுரியம் என்பன. இப் பத்தையும் ஒவும் உண்மையாவது சிவதுரியாதீதம்.

மேவும் நாலும் ஏழும் விடுத்து – இப்பதினொரு நிலைகளையும் கடந்து. நாலேழ் உம்மைத்தொகை. ஓவும் – கடந்த. உண்மை – மெய்ம்மையாகிய அதீதம். (163)

பரஞ்சிவன் மேலாம் பரமம் பரத்திற்
பரம்பரன் மேலாம் பரநன வாக
விரிந்த கனவிடர் வீட்டுஞ் சுழுனை
யுரந்தகு மாநந்தி யாமுண்மை தானே. 2285

இம் – எனின், இதுவும் அது.

இ – ள் : பரம் சிவன் இரண்டற்கும் மேலான பொருள் பரமம்; அப்பரமத்தைக்காட்டிலும் பரம் பரன் மேலானவன்; அப்பரம்பரனோடு கலந்து அவனையே விடயித்தல் பரநனவாகும்: அதினின்று இழிறங்கிய கனு துன்பநீக்கமாம்; பரசுழுத்தி ஞானத் தில் தகுதியை அளிக்கும்; ஆண்டு சிறந்த சிவம் உணர்வுக்குரிய பொருளாம் என்றவாறு.

பரத்திற்பரமும், அதிற்பரம்பரமும், சிறந்தன. பரம்பரனை விடயிக்கும் நிலை பரசாக்கிரம், அதனின்று மடங்கிய நிலை பரசொப்பனம்; ஞானத்தகுதி பர சுழுத்தி ஞானத்தாற்சிவப்பேறு துரியமாகிய மெய்ப் பொருள் காட்சியாம் என்பது கருத்து.

பரம் – மேலானது. அது சிவமாம் என்பது பரம் சிவன் என்பதன் கருத்து.

பரமாகிய சிவனைக் காட்டிலும் பரம் மேலானது.

பரத்தில் என்ருரேனும் இயைபு நோக்கிப் பரமத்தில் எனப்பொருள் கொள்க. பரமத்திலும் பரம்பரன் மேலானவன் என்க. பரம்பரன் – மேலானவற்றிற் கெல்லாம் மேலானவன்.

பரம்பரன் விடயமாதல் பரசாக்கிரம் இரிந்த கஞ இடர் வீட்டும் என்க. இரிந்த - விடயிக்கும் பரம் பரனையும் மறந்த. அதாவது பரம்பரனை விடயிக்கிறேம் என்ற தற்போதமும் மடங்கிய நிலே. அஃதுண்டான போது துன்பம் ஏது ?

உரம் - ஞானம். உரந்தரும்-ஞானத்திற் றகுதியை யுண்டாக்கும்; இந்நிலே பரசுழுத்தி; ஞானத்தகுதி முற்றியபோது பரசிவம் ஆன்மாவோடு கலக்கும். அது மெய்ப்பொருட் காட்சியாகிற சிவப்பேறு என்னும் பர துரியாதீதமாம் என்க. (164)

**சார்வாம் பரசிவஞ் சத்தி பரநாத**
**மேலாய விந்து சதாசிவ மிக்கோங்கிப்**
**பாலாய் பிரம னரியம ராபதி**
**தேவா முருத்திர னீசனுங் காணிலே.** 2286

இம் - எனின், பராவத்தையில் நிற்போர் நவந்தரு பேதமாக விளங்குதலே உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஆராயின், உயிர்கள் அனைத்திற்கும் பற்றுக்கோடான பரசிவம் சத்தி பரநாதம் மேலாய பரவிந்து, சதாசிவம், சிறந்து விளங்கும் இப்பாலதாய மயேச்சுரம் பிரமன் மால் தேவ தேவனுகிய உருத்திரன் இவர்களாக விளங்குவர் என்றவாறு.

பராவத்தையின் நிற்போர் பரசிவமுதல் பிரமனீருன நவந்தரு பேதமாகியும் விளங்குவர் என்பது கருத்து.

ஆன்மாக்களுக்கு உண்மைச் சார்பு பரசிவம் ஒன்றேயாதலின் சார்வாம் பரசிவம் என்ருர். வள்ளுவரும் 'சார்புணர்ந்து' என்பதனுல் உணர்த்திய சார்வு இது வாதல் காண்க. பரிமேலழகரும் 'எல்லாப் பொருளுக்கும் சார்பாய அச்செம்பொருளை யுணர்ந்து என்றமை காண்க. செம்பொருள் சிவம்.

பரசிவத்தைச்சாரச் சத்தி என்ருரேனும் பரா சத்தி எனக் கொள்க. அங்ஙனமே பரநாதம் என்றமைக்கு ஏற்பப் பரவிந்து எனக்கொள்க.

மிக்கு ஓங்கு இப்பால் ஈசனுய், அமராபதி தேவாம் உருத்திரனுய் அரியாய், பிரமனுய் ஆம் எனக் கூட்டி முறைசெய்து உணர்க. செய்யுளாதலின் முறை பிறழ்ந்தது. (165)

**கலப்பறி யார்கடல் சூழுல கேழும்**
**உலப்பறி யாருட லோடுயிர் தன்னை**
**அலப்பறிந் திங்கர சாளகி லாதார்**
**குறிப்பது கோல மடலது வாமே.** 2287

இம் – எனின், பராவத்தை கைகூடப் பெருதார் தியானத்தால் சித்தி பெறுக என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பரசிவம் அநாதியே உயிரோடு ஒன்றி யிருந்து இயக்குதலை அறியார்; கடல்சூழ்ந்த இவ்வுலகு

ஏழும் உலந்துபோம் என்பதனையும் அறியார்கள்; உடலோடு உயிரையும் கலந்ததன்மையையும் உணர்ந்து இவ்வுலகிலேயே சிவஞானியாய் அரசாள ஆற்றலிலாதார் இறைவனுடைய பலவகையான அருட்கோலங்களை இடைவிடாது எண்ணுக; அது வலியையும் உறுதியையும் உதவுவதாம் என்றவாறு.

இறைவன் உயிரோடு கலந்திருந்து இயக்குந்தன்மையையறிந்து, உலகம் அழியுந்தன்மையதென்றறிந்து, வேறேயுடலுயிர் என்பதையுணர்ந்து, அவனியில் ஞானியாய் அரசாளுக. அங்ஙனம் இயலாதார் திருவுருவங்களைத் தியானிக்க; அதுவே அவர்கட்கு நாம் கூறும் உறுதி என்பது கருத்து.

உலப்பு – அழிவு. அலப்பு – கலப்பு. அளப்பு என்பதன் திரிபு எதுகை நோக்கியது. குறிப்பது – இடைவிடாது தியானிப்பது. கோலம் – இறைவனுடைய பல திருவுருவங்கள். அவை அருளால் 'அவரே மேற்கொண்டனவன்றிப் பிறரால் படைக்கப்பட்டன அல்ல என்க. (166)

பின்னை யறியும் பெருந்தவத் துண்மைசெய்
தன்னை யறியிற் றயாபர னெம்மிறை
முன்னை யறிவு முடிகின்ற காலமும்
என்னை யறியலுற் றின்புற்ற வாறே. 2288

இம் – எனின், பரிபாகம் எய்தியகாலத்து இறைவன் அருளும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; நெடுநாளிருந்து பயின்ற பின்பு அறியப்படுவதாய்ப் பெரிய தவத்திலிருந்து அதனால் பராசத்தி அறிவளாயின், கருணையே உருக்கொண்ட எம்மிறைவன் முன்னை அறிவாய ஆன்மபோதம் கெடுகிற காலத்தில் என்னை அறிந்து அருள அதனால் அடியேன் இன்புற்றவாறு என்னே ? என்றவாறு.

தவமாகிய பராவத்தையில் பழகியதால் சத்திநிபாதமும், சிவகருணையும்சேரச் சிவானந்தத்தில் திளைத்தேன் என்பது கருத்து.

பின்னையறியுந்தவம்; தவம்தொடங்கும் காலத்துப் பொறியடக்கமும். உற்றநோய் நோன்றலுமாகத் தொடங்கிப் பயின்று பயின்று தேறியகாலத்துப் பயன் அறியப்படுவதாகலின் இங்ஙனம் கூறினார் என்க.

உண்மைசெய்து – உளதாதலைச் செய்து. அதாவது பலகாலம் பயின்றென்க. அன்னை அறியில் – திருவருட்சத்தியின் பதிவு சீவன்பால் விளையின் என்க. அதாவது சத்திநிபாதம் விளையின் என்க.

தயாபரன் – கருணையே மேலான இறைவன். முன்னையறிவு – ஆன்மபோதம். பசுபோதங் கெட்ட காலத்து என்பதாம்.

என்னை அறியலுற்று – இருவினை ஒப்பும் மலபரிபாகமும் சத்திநிபாதமும்பெற்ற பரிபாகி என என்னைத் திருவுளத்தடைத்து.

அரியலுற்று – அறிந்தமையால் எனக் காரணப் பொருளில் வந்த வினை எச்சமாக்குக.

இன்புற்றவாறு – யான் பேரின்பம் எய்தியவாறும் என்பது. (167)

**பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்**
**பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணந்**
**தன்னை மறைத்தது தன்கர ணங்களாந்**
**தன்னின் மறைந்தது தன்கர ணங்களே** 2289

இம் – எனின். ஆன்மதரிசனம் செய்யும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: பொன்னால் அழகுபெறச் செய்யப்பட்ட அணி பொன் என்ற எண்ணமே உண்டாகாதவாறு தன் கலைத்திறன் அழகு முதலியவற்றால் மறைத்தது; இது நல்லதங்கம் என்று காணுங்கால் நகையி னுடையதன்மைகள் ஒன்றும் தோன்றுவதில்லையாம். அதுபோல ஆன்மாவை மறைத்தது தனு கரணங் களாம். ஆன்மா தன்னை உணரும்போது தனு கரணங்கள் ஆன்மாவாகிய தன்னின் மறைந்து அவை உணரப்படாவாம் என்றவாறு.

ஆன்மா தன்னையுணரும்போது தனுகரணங்களை தன்னின் வேறாகச் சடமாக உணரும் தனுகரணங் களே தான் என்று எண்ணுகிறபோது தனுகரணங் களே உணரப்படுவனவாகத் தன்னையறியாதாம் என்பது கருத்து

இம்மந்திரம் எடுத்துக்காட்டுவமை. (168)

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே. 2290

இ-ம் – எனின், சிவதரிசனம் செய்யும் முறைமை கூறுகிறது,

இ-ள் : மரத்தானியன்ற யானைப்பதுமை மரம் என்ற உணர்வே நமக்குத் தோன்ருவண்ணம் செய்து அதனை மறைத்துத் தன் நலமே காணுமாறு செய்தது, அதுபோலப் பிருதிவி முதலாய பூதங்கள் அப் பூதங்களை ஆக்கி உடனின்று இயக்கும் பரம் பொருளை மறைத்துத் தாமே விளங்கின்றன. பின்னர் உண்மைஞானம் உண்டாகி பார்முதல் பூதங்கள் காரியப்பாடுடையன; ஒரு கர்த்தாவையுடையன, கருத்தா பரம்பொருள் என்று கருதியவழி, எல்லாம் அவன் செயலாகத் தோன்றப் பூதங்கள் அவனிடம் மறைந்து தோன்ருவாயின என்றவாறு.

உலகத்தையே உணரின் இறைவன் உணரப் படான். இறைவனை உணரின் உலகந்தோன்ருது, இறைவனருட்செயலே தோன்றும் என்பதாம். இதுவும் எடுத்துக்காட்டுவமை.

பரம் – சிவம் பாசஞானிகளாய்ப் பதபதார்த்தங் களை நோக்குவார்க்கு அவை புலனுமேயன்றிப் பரந் தோன்ருது அங்ஙனமே உண்மைஞானம் கைவரப் பெற்றுப் பரமே பார்த்திருப்பார் பதபதார்த்தங்கள் பாரார் என்பதாம். (169)

ஆரு றகன்று நமவிட் டறிவாகி
வேருன தானே யகாரமாய் மிக்கோங்கி
ஈருர் பரையி னிருளற்ற தற்பரன்
பேருர் சிவாய வடங்கும்பின் முத்தியே. 2291

இம்—எனின், சிவப்பேற்றைச் சீபஞ்சாக்கரத்தில் வைத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : முப்பத்தாறு தத்துவங்களேயும் கடந்து. 'ந' எழுத்தின் பொருளாகிய திரோதாயி மலத்தையும், 'ம' எழுத்தால் குறிக்கபெறும் மாயா மலத்தையும் உதறி; ஞானசொரூபியாய், மலகன்மங்களே விட்டு வேருன தானே யகாரம் என உணரப்பட்டு, ஈற்றில் பொருந்திய பரையெழுத்தாகிய வகாரத்தினும், மலத்தினியல்பாகவே நீங்கிய சிவபரம் பொருளேக் குறிக்கும் எழுத்தாகிய சிகாரத்தைப் பொருந்தி சிவாய சிவ என நிற்கும். அதன்பின் முத்திப்பேறும் என்றவாறு.

தத்துவசுத்தியும், ஆன்மசுத்தியும் பெற்று சிவய என்பதனுடன் வகரம் ஈற்றிலும் சிகரம் அதன் முன்னும் பொருந்த சிவய சிவ என ஆன்ம எழுத்தாகிய யகரம் அம்மையப்பருள் அடங்க ஆன்மா முத்தி நிலையில் இருக்கும் என்பதாம்.

ஆருறகன்று – தத்துவசுத்தி, நமவிட்டு – மலபரிபாகம். அறிவாகி – சிவஞானப்பேறு; வேருன தானே – ஆன்மரூப, ஆன்மதரிசன, ஆன்மசுத்திகள். மிக்கு ஓங்கி – சிவரூபம் சிவதரிசனம்; தற்பரன்பேறு ஆர்ந்து – சிவப்பேறு பின் முத்தியே அடங்கும் –

சிவபோகம் எனத்தெளிக. அகன்று எனத் தத்துவ சுத்தி கூறவே உருவமும் காணுது சுத்தங் கூடாமையின் தத்துவரூபம் தத்துவ தரிசனம் அடங்கியதாம் என்க. (170)

துரியத்தி லோரைந்துஞ் சொல்லக ராதி
விரியப் பரையின் மிகுநாத மந்தம்
புரியப் பரையின் பராவத்தா போதந்
திரியப் பரமந் துரியந் துரியமே. 2292

இ-ம் – எனின், துரியமாகிய மேனிலையை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; துரியநிலையில் சாக்கிராதி ஐந்தும் தெரிவாயாக; சொல்லுலகில் முதலாகிய அகார முதலான ஐம்பத்தொரு எழுத்துக்களும் தோன்றக் காரணமான நாதம் பரையாகிய சுத்த மாயையினின்று தோன்றும். தோன்றிய முறையே அந்தம் எய்தப் பரையின் பராஅவத்தைக் காட்சியும் அகல பரமமாகிய சிவம் தோன்றும். இதுவே பரமமாகிய துரிய துரியாதீதமாம் என்றவாறு.

துரியத்தின் நிகழும் ஐந்தவத்தைகளுள் துரிய துரியாதீதம் சிவம் ஒன்றே பிரகாசிக்கும் நிலையென்பதாம்.

துரியத்தில் ஓரைந்தும் – துரியசாக்கிரம், துரிய சொப்பனம், துரிய சுழுத்தி, துரிய துரியம், துரிய துரியாதீதம் என்பன.

அவற்றுள் துரியசாக்கிரமாவது சிறிது அறிவு விளக்கத்தைத்தரும் கலைஞானத்திற்கு முதலான

அகாராதி க்ஷகாராந்தமான 51 எழுத்துக்களும், சொற்களும் விரியப்பெறுதலாம்.

துரிய சொப்பனமாவது அச்சொற் பிரபஞ்சம் நாதத்தில் தோற்றமும் ஒடுக்கமும் உடையதென உணர்தலாம்.

துரிய சுழுத்தியாவது அந்நாதமும் பரையாகிய சுத்தமாயையினின்று விரிதலும் ஒடுங்குதலும் உடைய தெனக் காண்டலாம். இதனையே நாதம் அந்தம் புரிய எனக்குறித்தனர் ஆசிரியர் என்க.

துரிய துரியமாவது பரையாகிய சுத்தமாயை விமலனுக்கோர் பரிக்கிரக சத்தியாக இருத்தலை உணர்தல். இதனையே பராவத்தா போதம் என்றார் ஆசிரியர்.

துரியதுரியாதீதமாவது முற்கூறிய பராவத்தா போதமுங்கெட, அதாவது பரிக்கிரக சத்தியான சுத்த மாயையும் விமலனுள் ஒடுங்கப் பரமாகிய சிவம் மட்டும் உணரப்படும் அவதரம். இதனையே ஆசிரியர் பரமம் துரியம் எனக் குறிக்கின்றார். இவை ஞானவரண விளக்கத்துட் கண்டவை. (171)

ஐந்துஞ் சகலத தருளாற் புரிவுற்றுப்
பந்திடுஞ் சுத்த வவத்தைப் பதையபினில்
நந்தி பராவத்தை நாடச் சுடர்முனம
அந்தி யிருள்போலு மைம்மல மாறுமே. 2293

இ-ள் — எனின், சுத்தாவத்தையில் மலங்களின் நிலை யிவ்வாறும் என உணர்த்துதல் நுதலிற்று

இ – ள் ; பரசிவத்தின் கைம்மாறு வேண்டாத கருணையால் சகலாவத்தைக் கண்ணவாகிய சகல சாக்கிர முதலான ஐந்தவத்தைகளிலும் பற்றற்று, அவ்வனுபவ முதிர்ச்சியால் பந்திக்கும் சுத்தாவத்தைக் கண் நிகழும் துடிப்பினால் நந்தியாகிய சிவத்தை நாடும் பராவத்தையை அடைய, சகலநிலையில் ஆன்மாக்களைப் பந்தித்திருந்த ஐம்மலங்களும், சூரியன் முன் சந்தியா காலத்து இருள்போல மாறும் என்றவாறு.

சகலநிலை ஐந்துங்கடந்து சுத்தநிலையெய்தல் அதில் முடிவாகிய பராவத்தையில் சிவதரிசனம் பெற ஐம்மலங்களும் அந்திக்காலத்துக் கதிர்முன் இருள் போல மாறும் என்பதாம்.

புரிவு – விருப்பம். பந்திடும் – கட்டும். நந்தி – சிவம். பராவத்தை – திருவருளோடு கூடிய மேனிலை. நந்தி – கதிர். மலங்கள் – இருள், பராவத்தை–அந்திக் காலம். அந்திக்காலத்து இருளும் கருமேகமும் கதிரொளி பட்டுச் சிவத்தல்போலச் சிவனருளொளி பட்டு மலங்களும் தம் தன்மைமாறி மறைப் பொழியும்; விளக்கஞ் செய்யும் என்று உவமை நயம் காண்க. (172)

ஐயைந்து மடடுப் பகுதியு மாயையும்
பொய்கண்ட மாமாயை தானும் புருடன்கண்
டெய்யும் படியா யெவற்றுமா யன்றாகி
உய்யும் பராவத்தை யுள்ளுறல் சுத்தமே 2294

இம் – எனின், சுத்தாவத்தையின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : இருபத்தைந்து தத்துவங்களும், மூலப் பிரகிருதியும், அசுத்த மாயையும், நிலையாமை யுடையன; சுத்த மாயை தன்னை ஆன்மா கண்டு, எல்லாப் பொருளிடத்தும் கலந்தும், வேறாகியும் உய்வதற்கு உபாயமான பராவத்தையை எண்ணுதலே சுத்த நிலை ஆம் என்றவாறு.

மாயேயங்களின் நீங்கிச் சிவதத்துவம் ஐந்தையும் துணைக்கொண்டு கலந்தும் கிடந்தும் உய்யும்படிப் பராவத்தையை எண்ணுதல் சுத்தநிலையாம் என்பது கருத்து.

ஐயைந்து என்றது ஆன்மதத்துவம் இருபத்து நான்கும் புருடன் ஒன்றும் ஆகிய இருபத்தைந்து.

மட்டு – மூலம்; அடி. மட்டுப்பகுதி – மூலப் பகுதி. மாயை – அசுத்தமாயை. மண்முதல் மூலப் பகுதி யீறான தத்துவங்களனைத்தும் அசுத்த மாயா காரியமானவை நிலையற்றவை எனத்தெளிதல் சுத்தம் எய்த மூதற்படியாம் என்றவாறு. பொய்கண்ட – பொய்ம்மைகண்டன. கண்ட • அன்பெறாத அஃறிணைப் பன்மை வினைமுற்று.

மாமாயை – சுத்தமாயை, என்றது அதன்காரிய மாகிய சிவதத்துவங்களை யுணர்த்தின. புருடன் – ஆன்மா. கண்டு – ஆராய்ந்து. எய்யும்படியாய் – அவற்றையுங் கடக்கும்படிப் பராவத்தையை எண்ணுக என்பதாம்.

பராவத்தை எய்தினோர் எங்குமாய் எவற்றுமாய்க் கலந்தும் – கடந்தும் இருப்பர், என்க. உள்ளுறல் – எண்ணல். (173

நின்ற னருளும் பரமுமன் னேயமும்
ஒன்றாய் மருவு முருவு முபாதியுஞ்
சென்ற னெனைவிடுத் தாங்கிற்செல் லாமையு
நன்றான ஞானத்தி னாதப் பிரானே. 2295

இம் – எனின், இறைவன் செய்த உபகாரங்களை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்; சரியையாதி மூன்றிலும் முறையாக நின்றமையாலும், பண்டை நற்றவத்தாலும் நன்றான ஞானத்தின் நாதனான சிவபிரான், தான் ஆன்மாக்கள் மாட்டுச்செய்யும் அருளும, பரமும் அவர்கள் தன் மீது செலுத்தும் அன்புமாக நின்றான், ஆன்மாக்களோடு அபின்னமாய்க் கூடியிருக்கும் தூலமும் சூக்குமமுமாய உடலும், காரணசரீரமுமாகிய இவைகள் உயிரைவிட்டு அகலும்படிச் சென்று அருள்செய்வான்; அடியேனைவிட்டு ஆங்கு எங்கும் செல்லாமையையும் பூண்டான் என்றவாறு.

ஞானநாதனாகிய பிரான் அருளும் பரமும் அன்புமாக நின்றான்; மூவகையுடல்களையும் ஒருவி யான்மா உய்தியடையச் சென்றான்; அடியேனை என்றும் எங்கும் பிரியாமையும் பூண்டான் என்பது கருத்து.

நேயம் – அன்பு. உபாதி – காரணசரீரம். செல்லாமையும் பூண்டான் என வினைச்சொல் வருவித்து முடிக்க. (174)

## 9. முக்குணம் - நிர்க்குணம்

முக்குணம் – சாத்துவிகம் ராசதம் தாமதம் என்பன. அவ்வியத்தமாய் நின்ற மூலப்பகுதி வியத்த மாதற்பொருட்டு, சீகண்ட ருத்திரருடைய சத்தி கலக்கக் கலக்குண்டு முக்குணமாய்ப் பகுப்புற்று நிற்பது. ஆகவே முக்குணம் மூலப்பகுதியின் விருத்தியே என்க.

நிர்க்குணம் – குணமற்ற நிலை. அவத்தைகள் நான்கும் எவ்வெக் குணங்களைப் பொருந்துவன என்பதை ஒரு மந்திரத்தால் விளக்குவது இந்த அதிகாரம்.

**சாத்திக மெய்து நனவெனச் சாற்றுங்கால்**
**வாய்த்த விராசத மன்னுங் கனவென்ப**
**ஒய்த்திடுந் தாமத முற்ற சுழுத்தியாம்**
**மாய்த்திடு நிர்க்குண மாசி றுரியமே.** 2296

இ-ம் – எனின், முக்குணங்களுக்கும் – நிர்க் குணத்திற்கும் உரிய அவத்தைகள் இவை எனல் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; விழிப்புநிலை எனச் சொல்லுமிடத்து சாத்திகம் எய்தும்; கனவு நிலையில் பொருந்திய இராசதகுணம் பொருந்தும் என்ப; பொருந்திய சுழுத்தி அனைத்தையும் ஒயவைக்கும் தாமதகுண மாம். குற்றமற்ற துரியாவத்தை அனைத்துச் சேட்டைகளையும் அழிக்கும் நிர்க்குணமாம் எ – று.

கருத்து வெளி.

சாப்திகம் என்பது சாத்திகம் என ஆயிற்று. சாத்துவிகம் சாத்துவிதம் எனவும் வழங்கும். குணங்களை அதன் விருத்திகளால் அறியலாமே யன்றி நேரே இலக்கணங்கூற முடியாமை தெளிக. ஆதலால் சாத்துவிக விருத்திகளைக் கொண்டு அதனியல்பை யுணர்க. சாத்துவிக விருத்திகளாவன :- உறுதி, வீரம், கண்ணோட்டம், மென்மை, எளிமை, மகிழ்ச்சி, மெய்ம்மை, தூய்மை, முயற்சியுடைமை, பொறுமை, நினைப்பு, நன்மை, மேலான ஆசை, பொறியடக்கம், மனஅடக்கம், கருணை என்பன வாம்.

ராசதகுணம்–இது அடக்கியாளப் பயன்படுத்தும் குணம். இதனுடைய விருத்திகளாவன :- சூரத்தனம், கொடுமை, கிளர்ச்சி, அபிமானம், வைரம், பிடிவாதம், கருணையற்றதன்மை, போகம், இடம்பம் என்பன.

தாமசகுணம் – அறியாமை வயப்பட்ட குணம். இதன் விருத்திகளாவன :- சுவையற்ற தன்மை, மந்தம், இழிதகைமை, பிசுனத்தன்மை, வலிதாதல், தூக்கமிகுதி, சோம்பல், தடை, மூடத்தன்மை என்பன.

— பௌஷ்கரம் பும்ஸ்தத்துவ படலம் சுலோகம் 39 - 42.

நிர்க்குணம் – குணமேயில்லாத தன்மை. (175)

## 10. அண்டாதி பேதம்

அண்டங்களின்வகைகள் என்பதாம். மாணிக்க வாசக சுவாமிகளும் 'அண்டப்பகுதியின் உண்டைப் பிறக்கம், அளப்பருந்தன்மை வளப்பெருங்காட்சி, ஒன்றனுக்கொன்று நின்றெழில்பகரின், நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன' என அண்டங்களின் அளப்பற்ற தன்மையை விளக்கினர். அவை அனைத்தையும் இருக்கையாகக் கொண்டு பரசிவம் விளங்குகிறது என்பதை இவ்வதிகாரத்து இரண்டு மந்திரங்களால் அறிவிக்கிறார்.

பெறுபகி ரண்டம் பேதித்த வண்டம்
எறிகட லேழின் மணலள வாகப்
பொறியொளி பொன்னணி யென்ன விளங்கிச்
செறியுமண் டாசனத் தேவர் பிரானே. 2297

இம் – எனின், இறைவன் எல்லா அண்டங்களிலும் பிரிப்பின்றி உறைகின்றார் என உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: அண்டங்களை ஆசனமாகக்கொண்டு அவற்றின்மீது எழுந்தருளி உள்ள தேவதேவனாகிய பெருமான், பெற்ற புற அண்டங்களும், வேறு வேறாகப் படைக்கப்பட்ட அண்டங்களும் அலை மோதுகின்ற ஏழுகடலின் கரைகளிலும் உள்ள மணலின் அளவாக அவற்றில் கண்ணும் ஒளியும் போலவும், பொன்னும் பூணும்போலவும் விளங்கிச் செறிவர் என்றவாறு.

அண்டங்களனைத்திலும் இறைவன் வேறாயும், அதுவாகியும் செறிவன் என்பதாம்.

தேவர்பிரான் பெறுபுகிரண்டம், பேதித்த அண்டம் எனக்கூட்டி இறைவன் படைப்பாகிய எல்லா அண்டங்களும் என்க. அவற்றின்தொகை சப்தசாகரத்தில் உள்ள மணல் எத்துணையோ, அத்துணை என்பது. அளவிடற்கரியது என்பதாம்.

பொறி–கண், ஒளி–காணுதற்குபகாரப்படும் ஒளி. கண்ணும் ஒளியும் உடனுயிருத்தற்கும்; பொன்னும் பூணும் அதுவாய்க் கலத்தற்கும் காட்டப்பட்ட உவமைகள். இறைவன் இங்ஙனம் இருவகையிலும் இருந்து அண்டங்களுக்கு உதவுகிறன் என்பதாம்; கண்ணொளி, பொன்னணி பிரிப்பின்றி நிற்றல்போல இறைவனும் நிற்பன் எனலுமாம். (176)

ஆனந்த தத்துவ மண்டா சனத்தின்மேன்
மேனியைந் தாக வியாத்தமுப் பத்தாருய்த்
தானந்த மில்லாத தத்துவ மானவை
ஈன மிலாவண்டத் தெண்மடங் காமே. 2298

இ–ம் – எனின், தத்துவங்களின் தொகையும் விரியும் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; அண்டாசனத்தின்மேல் சச்சிதானந்த வடிவான சிவமிருக்கிறது. அது ஐவகைத் திருமேனி கொண்டு, முப்பத்தாறு தத்துவங்களாய் வியாபித்தும் முடிவற்ற தத்துவங்களானவை குறையில்லாத அண்டங்களின் தொகையைப்போல எண்மடங்கு ஆகும் என்றவாறு.

அண்டத்தை இருப்பிடமாகக் கொண்டு சத்தித் ஆனந்த தத்துவமான பரம்பொருள் இருக்கிறது.

அது ஐவகைத் திருமேனிகொண்டு, முப்பத்தாறு தத்துவங்களை வியாபிக்கச் செய்து எல்லையற்ற தத்து வங்களாய், வியாபித்து அண்டங்களைப் போல் எண் மடங்கு பலவாய் விரிந்துள்ளன, என்பதாம்.

இது அண்டங்களின் எல்லையற்ற தன்மையை விளக்கியதாம். அவையனைத்தையும் இடமாகக் கொண்டு பரசிவம் விளங்குகின்றது எனப் பரசிவத்தின் எங்குமான தன்மையும் இயம்பப் படுகிறது. (171)

## 11. பதினோராந்தானமும் அவத்தை எனக்காணல்

பதினோராந்தானம் என்ற ஆசிரியர் குறிப்பு பிராசாதத் தலங்களுள் பதினோராவதை என்க. பிராசாதம் என்பது சிவசத்திகளுடைய வடிவாகி எல்லையிலா இன்பவாரியில் தோய உதவும் யோகத் தானங்கள் பதினாறுமாம். அவை சோடச கலா பிராசாதமெனவும் துவாதச கலாபிராசாத மெனவும் சொல்லப்பெறும். பன்னிரண்டு கலைகளை விடப் பதினாறு விரிந்தநிலையே அன்றி வேறன்று. ப்ரா – சிவம். ஸா – சத்தி. தம் - இரண்டன் வடிவு. ஆகவே சிவ சத்திகளின் வடிவே பிராசாதம். அது சுத்தம், மூலம், தத்துவம், ஆதி, ஆத்மா என ஐவகைப் படும். சுத்தபீஜம் ஹ; மூலபீஜம் ஹ்ரௌம், தத்துவ பீஜம் ஹாம், ஆதிபீஜம் ஹௌம், ஆத்மபீஜம் ஹம்ஸ: என்பன. பிராசாத யோகத்தில் இந்தப் பீஜங்களையும் தியானித்தல் வேண்டும். இதனை,

प्राशब्दंस्यात शिवंश्चेयं साशब्दं शक्तिरुच्यते ।
तत्स्वरुपंतु शब्दं त्रिवर्णं अभिधीयते ॥
प्रासादं पञ्चधा प्रोक्तं तत्भेदंवक्ष्यतेऽधुना ।
शुद्धोमूलः तथातत्वं आदिरात्मेति पञ्चधा ॥

என்னும் வாதுளாகம வசனத்தால் அறியலாம்.

பிராசாதகலைகள் பதினாறும். அவற்றினுடைய வன்னம் தானம் அளவு முதலியவற்றைப் பின்வரும் பட்டியலாலறிக. இந்தப் பதினாறு கலைகளுக்குரிய தானங்களில், ஐந்து, ஏழு, முன்னிலை, ஒன்பது, பதினொன்றாகிய தானங்களையும் அவற்றின் நுகர்ச்சியையும் இவ்வதிகாரத்தான் உணர்த்துகின்ற ஆசிரியர் மூன்று மந்திரங்களை மொழிகின்றார். அவத்தை பேதங்களால் அறியப்படும் அனுபவமும். கலாத் தானங்களான் அறியப்படுகின்ற அனுபவமும் ஒத்த இடம் அவத்தைகளான் உணர்த்தப்பட்டமையின் அவற்றின் மேலான இடமும் அனுபவமும், உடன் எண்ணவேண்டிய அனுபவமும் இவ்வதிகாரத்தான் உணர்த்துகிறார்.

அஞ்சி லமுதுமோ ரேழின்க ணைந்த
முஞ்சிலோங் காரமோ ரொன்பான் பதினொன்றில்
வஞ்சக மேநின்று வைத்திடிற் காயமாங்
கிஞ்சுகச் செவ்வாய்க் கிளிமொழி கேளே. 2299

இம் – எனின், பிராசாத யோகத்தானத்தில் ஒன்று ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று ஆகிய ஐந்திடங்களின் ஆன்மானுபவம் உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஓராந்தானமாகிய முன்னிலையில் ஓங்காரம்; அஞ்சாமிடத்தில் உள்ள அர்த்த சந்திரகலை அமுதமயமாம்; அதன்மேல் ஏழாந் தானத்துள்ள நாதகலை ஆனந்தமயமாம்; ஒன்பதாந் தானத்தி லுள்ளது சத்திகலை, பதினோராந்தானத்திலுள்ளது வியாபினி கலை - இவை ஞான சொருபமாதலின் வியஞ்சகமாய் நின்று அங்கங்கே ஆன்மா அதிதேவதைத் தியானத்துடன் வைத்திடின் ஞானசரீரம் உண்டாம். இவ்வுண்மையை முருக்கிதழ் போன்ற சிவந்த வாயையும், கிளிபோன்ற மொழியையும் உடைய சத்தியே கேட்பாயாக என்றவாறு.

பிராசாதத் தானங்கள் பதினாறில் ஒன்று, ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று இவற்றில் அனுபவம் இவ்வாறாம், இவற்றுள் ஒன்பது, பதினொன்று அனுபவங்கள் அருவமான ஞான அனுபவமாம் என்பது கருத்து.

முஞ்சில் ஓங்காரம், அஞ்சில் அமுதம், ஓரேழின்கண் ஆனந்தம், ஒரொன்பான் பதினொன்றில் வஞ்சகமே நின்று வைத்திடின் காயமம் எனக் கூட்டிப் பொருள் கொள்க.

முஞ்சில் - மூஞ்சியில் - மூஞ்சி - முன்பக்கம் முகம் அதாவது தொடக்கம் என்பதாம். மூஞ்சியாகிய முன்னிலையில் ஓங்காரம் என்பதாம். அகாரகலை உகாரகலை, மகரகலையாகிய மூன்றன் கூட்டம் ஓங்காரம். இது நாபிக்குமேல் 12 அங்குல அளவில் உள்ளது; ஒலி. ஒளி. இரண்டுங் கலந்தது; அயன் மால் உருத்திரன் என்ற மூவரையும் அதிதெய்வமாகக் கொண்டது; பிரணவமான நிலை; ஆறுமாத்திரை

யளவு ஒலிக்கப்படுவது; ஆன்மாக்களுக்கு அறிவு விளக்கந்தரும் அக்கரங்கட்கு அடியானது; இதனையே மூஞ்சில் ஓங்காரம் என்றார்.

அஞ்சில் அமுது – அஞ்சு அகாரகலை நிற்கும் நாபிக்குமேல் நாலங்குல அளவில் தொடங்கி மேலுள்ள ஐந்தாவது இடம்; அது புருவநடுவிற்கு மேல் மூன்று அங்குலத் தானமாம். அதாவது நெற்றி எனலாம். அங்கே அர்த்தசந்திரகலை பிறைமதி போலும் வடிவுடன் சதாசிவத்திற்கு இடமாய்த் தூலகலையாய், அசுத்தமாயையின் சம்பந்தமுடையதாய் தீட்டிய வாளொளி போல விளங்குவது. இதனைத் தியானிக்கும்போது அமுதூறி உடல் முழுதும் வியாபிப்பது போன்ற உணர்வுண்டாம் ஆதலின் அஞ்சில் அமுது என்றார்.

ஏழின் ஆனந்தம் – ஏழு அகாரகலையின் நிலையாகிற நாபிமுதல் ஏழாவது தானமாகிய உச்சிக்கு மேல் மூன்று அங்குல வெளி. அது நாதகலையின் இடம். அது மாணிக்க ஒளியாய்ச் சதாசிவமூர்த்தியின் இடமாய் சுத்த மாயையைக் கூடியதாய் விளங்குவது. இந்நாதகலை அர்த்தசந்திரகலை நிரோதினிகலை இரண்டிலும் தோன்றுவது. பல எழுத்துக்களின் வெவ்வேறான ஒலிகட்குச் சூக்கும காரணமாயிருப்பது. இதனை.

“இந்துவின் நின்றெழு நாதம் இரவிபோல்
வந்துபின் நாக்கின் மதித்துஎழும் கண்டத்தில்
உந்திய சோதி இதயத்தெழும் ஒலி
இந்துவின் மேலுற்ற ஈறிது தானே.”

என்றும்,

"ஈறதிலாகத் திருந்திய ஆனந்தம் செந்நெறி
நண்ணி"

என்றும் நாலாந்தந்திரத்துக் குறிப்பைக் கொண்டு ஞான ஆனந்தத்தை விளைப்பது நாதகலை என்று உரைப்படும். அதனால் ஈண்டு ஏழினில் ஆனந்தம் என்று அருளியவாறம்

'ஒன்பான், பதினொன்று வஞ்சகம்' ஒன்பான் ஒன்பதாவது தானம். அது உச்சிக்குமேல் 10 அங்குல அளவில் சத்தி விளங்கும் இடம். அச்சத்தி நூறாயிர கோடி சூரிய ஒளிவடிவானவள் அக்கலை ஆகிற சிவத்திற்கு இடமானது. திரோதாயியோடு கூடியது. நிராதாரகலை அதிசூக்குமமானது.

பதினொன்று சமனாகலை. இதுவும் பேரொளிப் பிழம்பானது. துவாதசாந்தத் தலத்துள்ளது மகா சூக்குமகலையாய் அநாகத சிவத்திற்கு இடமாய் ஆணவமலம் ஒன்றைக் காரியப்படுத்தித் தீப்பதா யுள்ளது.

இவ்விருகலைகளும் நிராதார கலைகளாய் வியஞ்ச மாக அறியக்கூடியன ஆதலின் வஞ்சகமே நின்று என்றார். வஞ்சகமே நிற்றல் குறிப்பாகத் தியானித்தல். பாவனையாகத் தியானித்தல். பாவனையாக நின்றால் பாவனைமுற்றப் பாவகமாய் அங்கே ஆன்மாவையும் அநாகத சிவத்தையும் ஒருங்கிணைத்துத் தியானிக்கக் கூடும். அவ்வனுபவம் நிலைக்கப் பழக வேண்டு மென்பார் வைத்திடின் எனச் செயின் என்னும் வாய்பாட்டால் கூறினார்.

காயமாம் – உச்சிவரை தூல உடலும், ஞான வுடலும், அதன்மேல் ஞான உடல்மட்டும் இருத்தலின் காயம் ஆம் என்றார். இதனை இரட்டுற மொழிதலாகக் கொண்டு உச்சிவரையுள்ள கலை உடலாம். அதன்மேல் உன்மனைவரையுள்ள உடல் ஆகாயமாகிய ஞான வெளியாம் எனலும் ஒன்று. உன்மனைக் கலையோ ஒன்றுந்தோன்றாத பேரொளியாதலால் ஒரேயருளாய் அநாகத சிவத்தை யனுபவிக்கும் இடமாய் மகா சூக்குமமாய் உள்ளது. ஆதலின் அதனைக் காயத்திற்கு அப்பாற்பட்ட அனுபவத் தலமாகக் காட்டியவாறு. ஆகவே பதினோராந்தலம் சமனை என்க.

இவ்வனுபவமுதிர்வை உணர்த்தியவள் பராசத்தியாதலின் அவளையே முன்னிலைப் படுத்திக் 'கிளி மொழியேகேளே' என்றது.

இம்மந்திரத்திற்கு. அஞ்சில் அமுது – சிவம், ஏழின் ஆனந்தம் – வித்யா தத்துவங்களின் ஈறன மாயை; மூஞ்சில் ஓங்காரம் –. அழிவில்லாத ஓங்காரம். ஒரொன்பான் பதினொன்றில் – ஓங்காரம் மூன்று ஆக ஐவது தத்துவமாகிய ஆங்காரம். ஆங்காரம்-ஆங்காரி. ஆங்காரிதந்த ஆங்கார மெய் எனப்பொருள் உரைப்பாரும் உளர். ஆசிரியர் ஈண்டு உபதேசிக்கப் புகுந்தது அவத்தைகளும், அவற்றின் முதிர்வால் அனுபவிக்கத்தக்க கலாதிகளும் ஆதலின், இரண்டுரைகளையும் ஆய்ந்துநோக்கி அருட்டுணைகொண்டு தெளிக. (178)

புருட னுடனே பொருந்திய சித்தம்
அருவமொ டாறு மதீதத் துரியம்
விரியுஞ் சுழுத்தியின் மிக்குள்ள வெட்டும்
அரிய பதினொன்று மாமவ் வவத்தையே. 2300

இ-ம் — எனின்,

இ — ள்; புருட தத்துவத்தோடு சித்த முதலிய வற்றைத் தொழிற்படுத்தும் அருவமாகிய சிவதத் துவம் ஐந்தோடுங்கூடி ஆறும் தொழிற்படும் அவதரம் அதீதமாகிய துரியாவத்தையாம்; அசுத்த மாயாகாரியம் வித்தியாதத்துவம் ஏழும் சுத்த வித்தையும் கூடிய எட்டும் துரியநிலையினின்று விரியும் சுழுத்தியாம். சிவதத்துவம் ஐந்தும், வித்யாதத்துவம் ஆறுமாகிய பதினொன்றும் பராவத்தைக்கு உரியனவாம் என்றவாறு.

கருத்து வெளிப்படை:

சுத்தமாயா காரியமான சிவதத்துவம் ஐந்தும் புருடனும் ஆக ஆறுடன் ஆன்மா தொழிற்படும் அவதரம் அதீதநிலைத் துரியமாம். அசுத்தமாயா காரிய மாகிய வித்தியா தத்துவம் ஏழும் சுத்தவித்தையும் இயங்குவது அதீத சுழுத்தியாம். முற்கூறிய சிவதத் துவம் ஐந்தும் வித்தியாதத்துவம் ஆறும் இயங்கும் அவதரம் பராவத்தையாம். வித்தியாதத்துவம் ஏழு என்றவர். பின்னர் ஆறு எனக் கொள்ளவைத்தது. புருடன் நீங்கலாக, என்க. அவ்வவத்தை — முற்கூறிய அதீததுரியம். அதீதசுழுத்தி என்பன. (179)

காட்டும் பதினொன்றுங் கைகலந் தாலுடல்
நாட்டி யழுத்திடி னந்தியல் லாலில்லை
ஆட்டஞ் செய்யாத வதுவிதி யேநினை
ஈட்டு மதுதிட மெண்ணலு மாமே. 2301

இம் – எனின், அதீத துரிய சுழுத்திகளைச் சிந்திப் பதால் வரும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : முன்காட்டிய பதினொரு தத்துவங் களும் உயிரோடு கூடினால் தூலமும் சூக்குமமுமாகிய உடல்கள் உண்டாம். அவற்றை நன்கு நிலைபெறச் செய்து உணரின் சிவமல்லது துணையின்மை உணரப் படும். சித்த சலனமில்லாத அதுவே முறைமை: நினைப்பாயாக; இதைச் சிந்திப்பதே உறுதி; ஆதலால் இதனை இடைவிடாது எண்ணுக என்றவாறும்.

முற்கூறிய பதினொரு தத்துவங்களியங்க உயிர் அதினிலைபெறின் தூலசூக்கும உடல்கள் உளவாம். இங்ஙனம் உண்டான வாற்றை நன்றாக அழுந்தி யறியின் நாதனல்லாது நற்றுணை இன்மை புலப்படும்; சலனமில்லை, அதுவே முறை; உறுதி ஆதலால் இடைவிடாது அதீத துரிய சுழுத்திகளை எண்ணுக என்பதாம். (180)

## 12. கலவு - செலவு

கலவு – கலத்தல். செலவு – பிரிதல். ஆன்மா அவத்தைகளில் கலத்தலும், அவற்றில் பிரிந்து மேலவத்தைகளில் செல்லுதலுமாய் இவ் இவ் வதிகாரத்தில் இரண்டு மந்திரங்களான் உணர்த்தப் பெற்றின்றன.

**கேவலந் தன்னிற் கலவச் சகலத்தின்**
**மேவுஞ் செலவு விடவரு நீக்கத்துப்**
**பாவுந் தனைக்காண்டன் மூன்றும் படர்வற்ற**
**தீதறு சாக்கிரா தீதத்திற் சுத்தமே. 2302**

இம் – எனின், சுத்த சாக்கிராதீதத்தின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : கேவலாவத்தையில் ஆன்மா கருவி கரணங்களோடு கலக்க அது சகலாவத்தையில் பொருந்தும்; அவற்றில் பிரிய அரிய சுத்தத்தில் செல்லும்; அப்பொழுது ஆன்மா சிவத்தை மட்டும் காணுதலைப் பொருந்தும்: ஆக இவை மூன்றும் துன்பமற்ற குற்ற மற்ற சுத்த சாக்கிராதீதமாம் என்றவாறு.

ஆன்மா கருவிகரணங்களுடன் கூடாத நிலை கேவலம், கூடிய நிலை சகலம், கூடிப் பிரிந்து சிவத்தொடு சேர்ந்த நிலை சுத்தம். இம்மூன்றும் சாக்கிராதீதத்தில் சுத்தமாம் என்பது கருத்து

கலவ என்பதற்கியைய மாயாகாரியமாகிற கருவி கரணங்களுடன் கூட என்க. சகலத்தின் செலவு மேவும் எனவும் விட நீக்கத்துவரும் தனைக்காண்டல் பாவும் எனவும், மூன்றும் சாக்கிராதீதத்திற் சுத்தம் எனவும், கூட்டிப் பொருள் கொள்க. (181)

**வெல்லு மளவில் விடுமின் வெகுளியைச்**
**செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை**
**அல்லும் பகலு மருளுடன் தூங்கினல்**
**கல்லும் பிளந்து கடுவெளி யாமே. 2303**

இ-ம் – எனின், சகலநிலையிலிருந்து சுத்தம் எய்து தற்குரிய எளிய உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : விடயங்களை வெல்லும் அளவில் சினத்தை விட்டுத்தொலையுங்கள்; மனத்தைச் செல்லு மளவிற் செலுத்துங்கள்: இரவும் பகலும் திருவரு ளோடு உடனுறைந்தால் மலையும் பிளந்து பரந்த ஆகாயமாகும் என்றவாறு.

வெகுளியை யடக்கி, மனத்தை ஒருமுகமாக்கித் திருவருளோடு இடைவிடாது உறையின் ஞானவெளி தோன்றும் என்பதாம்

வெகுளி உயிர்க்குணமாதலின் அதை ஆணவ மலம் இருக்கும்வரையில் வெல்ல இயலாது என்ற அருமை தோன்ற வெல்லும் அளவில் என்றார். வெகுளி யடக்கிய அளவு பயனுண்டென்றவாறும்

சிந்தை ஒருமுகப்பட்டு ஒருவழிச் செல்லாது. அதனையும் முற்கூறியவாறு முடிந்தவரை செலுத் துங்கள் என்றார்.

இங்ஙனம் வெகுளியையடக்கி மனத்தையும் ஒரு வழிப்படுத்தினால் அதன் பயன் அருளொடு தூங்கு தலாம். அங்ஙனம் தூங்கின் மலையும் வெடிக்கும். பரந்த வெளியாம். மலை யென்றது வாழ்க்கைப் பாதையில் உண்டாகும் த டை க ளை. அவை நீங்கத் தங்கு தடையின்றி எங்கும் போகலாம் என்பதாம். (182)

# 13. நின்மலாவத்தை

நின்மலம் – மலம் அற்ற நிலை. நின்மலாவத்தை மலம் தன் வலியொடுங்கியநிலை. ஆன்மா சார்ந்ததன் வண்ணம் இருப்பது அறியாமையைச் செய்யும் மலத்தைச் சார்ந்து அறியாமையாகிக் கேவலநிலையி லிருந்த ஆன்மா, ஏகதேச ஞானத்தைத்தரும் கருவிகளைச் சார்ந்து ஏகதேசமாய்ச் சகலநிலையில் இருந்து, பரிபாகம் எய்தி வியாபகமாகிய சிவத்தைச் சார்ந்து வியாபகமாக இருக்கும் நிலைநின்மல நிலையாம். அதிலும் நின்மல சாக்கிரம், நின்மல சொப்பனம், நின்மல சுழுத்தி, நின்மல துரியம், நின்மல துரியா தீதம் என ஐந்து நிலைகள் உள. அவற்றுள் நின்மல சாக்கிரமாவது இருவினை ஒப்பு மலபரிபாகம் சத்தி நிபாதம் நிரம்பியநிலை, சிவதத்துவம் ஐந்தில் சுத்த வித்தை நீங்காமல் நீங்கின அவதரம். நின்மல சொப்பனமாவது குருதரிசனமாகி அவரருளுபதேசம் பெற்றுச் சுத்த வித்தையும், ஈச்சுரமும் நீங்காமல் நீங்கின அவதரம். நின்மல சுழுத்தியாவது உபதேசத் தில் உறைத்து நின்று சாதித்துச் சுத்த வித்யை ஈச்சுரம் சாதாக்கியம் என்னும் மூன்றும் நீங்காமல் நீங்கிய அவதரம். நின்மல துரியமாவது பாசநீக்கம் பெற்றுச் சிவதத்துவத்தில் சிவம் தவிர ஏனைய நான்கும் நீங்காமல் நீங்கின அவதரம். நின்மல துரியாதீதமாவது சிவப்பேறெய்தி சிவதத்துவம் ஐந்தும் நீங்காமல் நீங்கின அவதரம். இந்த நிலை வேறுபாடுகளையும் அவற்றால் ஆன்மாக்கள் எய்தும் பேறுகளையும் ஐம்பது மந்திரங்களான் உணர்த்தத் தொடங்கிய ஆசிரியர் முதன் மந்திரத்து நின்மலா வத்தையின் இலக்கணம் இயம்புகின்றார்.

**ஊமைக் கிணற்றகத் துள்ளே யுறைவதோர்**
**ஆமையி னுள்ளே யழுவைக ளைந்துள**
**வாய்மையி னுள்ளே வழுவா தொடுங்குமேல்**
**ஆமையின் மேலுமோ ராயிரத் தாண்டே. 2304**

இம் – எனின், நின்மலாவத்தையின் நிற்போர் எய்தும் பயனை உவமைவாயிலான் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; வாயில்லாத கிணற்றுக்குள்ளே தங்குகின்றதோர் ஆமைக்குள்ளே ஐவகை அனுபவங்கள் உள்ளன. அவை ஐந்தும் உண்மையுள் எஞ்சாது ஒடுங்குமாறல் ஆமை இனிமேலும் ஆயிரம் ஆண்டு உயிர்வாழும் என்றவாறு.

நின்மலாவத்தையில் ஆன்மா சாக்கிராதி ஐந்தனுபவங்களை எய்தும். இறுதியனுபவமாகிய அதீதத்தையும் கடந்து சிவத்தோடு ஒன்றியிருக்குமாயின் மரணமிலாப் பெருவாழ்வு எய்தும் என்பதாம்.

ஊமைக்கிணறு - வாயில்லாத கிணறு என்றது நின்மலாவத்தையை. அதனுள் உறைவது ஓராமை – நின்மலா வத்திதனுக மலபரிபாகமும் இருவினையொப்பும் சத்திநிபாதமும் பெற்ற ஆன்மா. அதனுள் வாழும் அழுவைகள் ஐந்து – நின்மல சாக்கிராதி அவத்தைகள் ஐந்து. அழுவை–அழுந்திய அனுபவம். வாய்மை – மெய்ப்பொருளாகிய சிவம். அவத்தா பேதங்களில் நின்று நின்று விடத்தகுவனவற்றை விட்டு அதீதத்தே சென்று அங்கும் சிவதத்துவத்தை விடாதே விட்டுச் சிவத்தைப்பற்றிநிற்குமாயின் மரணமில்லை என்பதாம். இன்மேலும் – இனிமேலும் என்பதன் குறையான செய்யுள் வழக்கு. (183)

காலங்கி நீர்பூக் கலந்தவா காய
மாலங்கி யீசன் பிரமன் சதாசிவன்
மேலஞ்சு மோடி விரவவல் லார்கட்குக்
காலனு மில்லை கருத்தில்லை தானே. 2305

இம் – எனின், காரியத்தேவர்களை விட்டுக் காரணேஸ்வரர்களை அடையின் மரணமில்லாப் பெருவாழ்வு வாழலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : காற்றும், தீயும், நீரும், பூமியும், ஆகிய இந்நான்கும் தம்முள் விரிந்து விளங்க இடங்கொடுத்து நிற்கும் ஆகாயமும் என்ற ஐந்தையும் இயக்கும் கடவுளர் அயனும், மாலும், உருத்திரனும், மகேசனும், சதாசிவனுமாவர். இவர்களை விட்டு இவர்களுக்குக் காரணேசர்களாக விளங்குகின்ற அயனாதி ஐவரையும் ஓடிச்சென்று கலக்கவல்ல நின்மலாவத்திதர்க்கு யமனும் இல்லை. திருவடிச் சார்பு தவிர்த்து வேறு எந்தக் கருத்தும் இல்லையாம். என்றவாறு.

ஐம்பூதங்களை இயக்கும் ஐந்து கடவுளர்க்கும் மேலான காரணேஸ்வரர்களைக் கலந்தால் மரணமில்லை. கருத்தும் இல்லை என்பது கருத்து.

அதிதெய்வங்களின் முறை செய்யுளாதலின் மாறியுள்ளது. ஆயினும் நிலம் – பிரமன், நீர் – மால், அங்கி – உருத்திரன், காற்று – மகேசன், ஆகாயம் – சதாசிவம் எனக் கொள்க. இவர்களும் உயிர் வர்க்கத்தைச் சார்ந்தோரேயாவர். இவர்களை இவ்வதிகாரத்தில் நியமித்துப் பணி கொள்வோர்க்கும் இப்பெயர்களே. அவர்கள் காரணேசுவரர்கள் என்க.

காரியப்பாட்டிற் கலந்துள்ளபோது தான் அழிவும் அதற்குரிய காலன் காட்சியும் உண்டு. அதனைக் கடந்து காரணத்தன்மையில் விரவ அவையில்லை என் பதாயிற்று. கருத்து – எண்ணம். தவாப்பிறப்பினும் வித்து அதுவாதலின் அஃதும் இல்லையென்றார். (184)

**ஆன்மாவே மைந்த னாயின னென்பது**
**தான்மா மறையறை தன்மை யறிகிலர்**
**ஆன்மாவே மைந்த னரனுக் கிவனென்றால்**
**ஆன்மாவு மில்லையா லையைந்து மில்லையே. 2306**

இம் – எனின், உயிர்கள் பரசிவத்தின் மக்கள்; ஆகவே அவர்களுக்கு ஆன்மாவும், பாசபந்தமு மில்லை என உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: 'தானே மைந்தனாகிறான்' என்பது வேத வழக்கு அதனை அறிகிலர்; சிவபெருமானுக்கு ஆன்மாவே மைந்தன் என்றால், அம்மைந்தனுக்கு ஆன்மா என்ற பெயரேது? ஆன்மாவுக்குரிய தத்துவங்களாகிய இருபத்தைந்துந்தாம் ஏது? இல்லை என்றவாறு.

ஆன்மாக்கள் அனைவரும் சிவகுமாரராக ஆனால் அவர்கட்கு ஆன்மா என்ற பெயரும் அதற்குரிய தத்துவக்கட்டும் இல்லையென்பது கருத்து.

**आत्मा वै पुत्रो भवति** என்பது உபநிடதம். தானே மகனாகின்றான் என்பது அதன் பொருள். ஆயின் உயிர்கள் அனைத்தும் அரன் மக்களானால் அவர்களைப் பிணித்து நிற்கும் தத்துவங்கள் ஏது? அவர்கட்கு

ஆன்மா என்ற பெயர்தானேது ? இல்லை, உயிர்கள் அனைவரும் நின்மலாவத்தையில் சிவமேயாகத் திகழுவர் என்பதாம். (185)

உதய மழுங்க லொடுங்கலிம் மூன்றின்
கதிசாக் கிரங்கன வாதி சுழுத்தி
பதிதரு சேதனன் பற்றுந் துரியத்
ததிசுப முயனந் தானந்தி யாகுமே. 2307

இம் – எனின், ஆன்மா அழிவின்றிச் சிவமாம் பேறு எய்தும் என உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: தோற்றமும், அழுங்கலாகிய பிணிப் புண்ட நிலையும், பிணிப்பகன்று ஒடுங்குதலும் இம் மூன்றனையும் அறிவிக்கும் கதிகள் சாக்கிரம் சொப்ப னம் சுழுத்தி ஆம். இவை பதிந்த சித்துப்பொருளாய ஆன்மா தமக்குப் பற்றுக்கோடாக விளங்கும் துரிய நிலையில் மிகுந்த மங்கலவடிவினனுவன். அழியான். சிவமாம் பேறு எய்துவன் என்றவாறு.

மூவகை அவத்தையுங் கடந்து துரியானுபவம் பெற்ற ஆன்மா நித்யமங்கல வடிவினனுக விளங் குவன் என்பது கருத்து.

உதயம் – தோற்றம். இது நனவு. அழுங்கல் – பிணிப்புண்ணல். மழுங்கல் எனப் பிரித்து குறைவு எனப் பொருள்கண்டு தொழிற்குறைபாடாகிய கனவு என்பாரும் உளர். கனவு தொழிற்குறைபாடன்று. பரிபாகப்படாத சூக்குமகன்ம நுகர்ச்சி கனவாதலான் என்க. ஒடுங்கல் – சார்பகன்று மெய்ச்சார்பு ஒன்ற னைப் பற்றி அதனருளில் ஒடுங்குதல். இது சுழுத்தி

நிலை. இதனைப் பரசாக்கிரம் முதலியனவாகப் பெயரிட்டுத் தத்துவாமிருதத்தில்,

"ஓதிய சகல ஞான திகளெலாம்
ஒளிக்குந் தேயம்
ஏதது பரமன் றன்சாக் கிரமதாம்
அழுங்கிற் றெங்கே
யாதது பரமன் றன்பாற் கனவதாம்
மாண்ட தெங்கே
ஓதிய பரமன் றன்பால் உபாதியாம்
சுழுத்தி காணே."

என்று கூறும். மற்றும் சீவதுரியமே சிவசாக்கிரம். இதில் காலபரம் சிவசொப்பனம். பரவி யோமத் துரியத்தில் பரமசாட்சியாதல் சிவசுழுத்தி இதனை,

"சீவன் துரியம் திகழும் பரனுக்கு
ஏவும் நனவாம் இதிற்கால பரம்
பாவுங் கனவாம் அதுபர மாயத்
தோயுஞ் சுழுனை விடவொண் பரமே."

எனவரும் நிராமயதேவர் நூலான் உணர்க. (186)

எல்லாந்தன் னுட்புக யாவுளுந் தானாகி
நல்லாந் துரியம் புரிந்தக்கா னல்லுயிர்
பொல்லாத வாறுறுட் போகாது போதமாய்ச்
செல்லாச் சிவகதி சென்றெய்து மன்றே. 2308

இம் – எனின், நின்மலாவத்தையில் ஆன்மா எய்தும் பேறு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : மாயேயங்களாகிற எல்லாம் சித்தாகிய தன்னுள் ஒடுங்க ஆன்மாவாகிய தான் எல்லாவற்றினும் வியாபியாய் நின்று நன்றான துரியநிலையிற் பயின்றால் சுத்தான்மா தீமையேபயக்கும் முப்பத்தாறு தத்துவங்களுடன் கூடாது; ஞானமே வடிவாகச் சென்று அடையாத சிவகதியைச் சென்றடையும் என்றவாறு.

சுத்தான்மா வியாபகமாய், மலகன்மங்களோடு பொருந்தாது ஞானசொரூபியாய்ச் சிவகதிபெறும் என்பது கருத்து.

'எல்லாம் தன்னுட்புக' என்றது வியாபித்து நின்று என்பதாம். 'யாவுளும் தான் ஆகி' என்பது வியாப்தமாகி என்பதாம். ஆகாயத்துள் அடங்கி நிற்கும் மற்றைய பூதங்கள் இயங்குவ நிற்பவான யாவையும் தன்னுள் அடங்கத் தான் வியாபகப் பொருளாய், என்றும், எல்லாப் பொருள்களினுள்ளும் சிவம் கலந்திருத்தல் போலத் தான் எல்லாப் பொருளிடத்தும் கலந்து வியாபிக்கப்பட்ட பொருளாக இருக்கும் என்க.

நல்லாம் துரியம் - சுத்ததுரியம் அதாவது நின்மல துரியம். நல்லுயிர் – சுத்தான்மா. பொல்லாத ஆறுஆறு – என்றும் பிறவியுட் படுத்தும் கருவிகளாகிற முப்பத்தாறு தத்துவங்கள். போதமாய் – ஞானசொரூபியாய். இதுவே ஆன்மாவின் சொரூப இலக்கணமாம் என்க.

செல்லாச் சிவகதி – பூவினுட்கந்தம் பொருந்தியவாறு போலச் சிவகதி, தானே வந்தெய்துதற்குரியதேயன்றி ஒருவன் முனைந்து நின்று சென்றடைவதற்கு

உரியதன்று. திருவருள் அழைத்துச் செல்லு மாறல் சென்றடையலாம் எனப் பிறகூறுகின்றார். திருமாலும் அயனும் தாமே சென்றடையலாம் என முனைந்து சென்று மாட்டாமை உணர்ந்தமை ஈண்டு நினைவு கூரத்தக்கது. (187)

காய்ந்த விரும்பு கனலை யகன்றாலும்
வாய்ந்த கனலென வாதனை நின்றாற்போல்
ஏய்ந்த கரண மிறந்த துரியத்தும்
தோய்ந்த கருமத் துரிசக லாதே. 2309

இம் – எனின், நின்மல துரியத்தில் கரணம் இல்லை. ஆயினும் கன்மவாசனை ஒழியாதென உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: தீயில்காய்ந்த இரும்பு தீயைவிட்டுப் பிரிந்தாலும், பொருந்திய கனல் என்று சொல்லும் வண்ணம் அத்தீயின் வாசனை நின்றது போலப் பொருந்திய கரணங்கள் யாவும் ஓய்ந்து ஒழிந்த துரிய நிலைக் கண்ணும், இதுவரை பொருந்தியதால் உண்டான குற்றம் நீங்காதாம். வாசனையாகப் பற்றி நிற்கும் என்றவாறு.

தீயிற்காய்ந்த இரும்பு தீயை அகன்றாலும் நிறமும் சுடுந்தன்மையும் இருப்பதுபோல், உயிர் துரியாவத்தையி லிருந்தும் கரணங்கள் நழுவியும் கன்மவாசனை யுடனிருக்கும் என்பது கருத்து.

பரனைக் கண்டவுடன் பிரகிருதி தீர்ந்ததாயினும் வாசனையாயிருந்து பரசாக்கிரத்துப் பரனுக்கு உபாதி யாம். இதனை 'காய்ந்த இரும்பு' என்னும் திருமந்தி

ரத்தானும் உணர்க என்னும் ஞானுவரணபாடியம் ( பக்கம் 131 ) இங்கு எண்ணுதற்குரியது. (188)

ஆன மறையாதி யாமுரு நந்திவந்
தேனை யருள்செய் தெரிநனு வத்தையில்
ஆன வகையை விடுமடைத் தாய்விட
ஆன மலாதீத மப்பரந் தானே. 2310

இம் – எனின், சுத்த துரியாதீதத்தில் சிவதரிசனம் நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஞானத்தை உதவுவதான வேதங்களுக் கெல்லாம் முதன்மையாகிய உருவமுடைய சிவம் எழுந்தருளி வந்து அருளார்தேனை அருள்செய்தலை நேரே காணுகின்ற நனவுநிலையில் ஆன அனுபவ வகைகளை விட்டொழியுங்கள்; அவைகளை முற்றும் விட நிகழும் மலங்களைக் கடந்த அப்பால் நிலையா கின்ற பராதீதம் விளையும் என்றவாறு.

சிவம் எழுந்தருளிவந்து அருட்டேன் வழங்கும் பரநனவு நிலையைக் கடந்தால் நின்மலாதீத பரநிலை கைகூடும் என்பது கருத்து.

ஆன என்ற செய்தெனெச்சத்திற் கேற்ற ஞானத்தை உதவுவதான எனச் சில சொற்கள் வருவிக்க. மறையாதியாம் உரு – வேதமுதலாகிய திருவுரு. மறையாதி – வேதங்களுக்கு முதலாகச் சொல்லப்படும் பிரணவ உரு எனலுமாம். பிரணவ பஞ்சாக்கரமே சிவனுரு. “யாரும் அறிவர் அகரம் அவனென்று” என்பர் ஆசிரியர். நந்தி – சிவம்.

தேனை அருள்செய் நனு; தெரி நனு என்க. திருவருளைத் தந்து தேன் தந்தாற்போலத் தூய வாழ்வை இனிக்கச்செய்கிற நனவு. நேர்முகக் காட்சிக்கு இலக்காகும் நனு என்க. நனு+அவத்தை நனுவத்தையாயிற்று. அதில் ஆனவகை – சுத்த மாயாகாரியமான சிவதத்துவங்கள் ஐந்தோடுங் கூடித் தொழிற்படும் நிலை. விடும் – முன்னிலைப்பன்மை ஏவல்.

அடைத்தாய் – முற்றும். மலாதீதமான அப்பரந் தானே எனக் கூட்டுக. ஆன் அமலாதீதம் அப்பரந் தானே எனப் பிரித்து அவ்விடம் விளைவது நின்மலா தீதவத்தையாம். அது பராவத்தையுள் ஒன்றாகும் எனலுமாம். (189)

சுத்த வதீதஞ் சகலத்திற் றோய்வுறில்
அத்த னருணீங்கா வாங்சணித் தானுகச்
சித்த சுகத்தைத் தீண்டா சமாதிசெய்
தத்தனோ டொன்றற் கருண்முத லாமே. 2311

இம் – எனின், நின்மலாதீத சகலத்தில் தோய்ந் தாலும் திருவருள் துணைசெய்து அத்தன்றாள் சேர்ப் பிக்கும் என்பது உணர்த்ததுல் நுதலிற்று.

இ – ள்: நின்மலாதீதத்தில் சகலாவத்தையிலே தோயப்பெற்றால், சிவனருள் என்றும் நின்மலாதீத சகலத்தனை விட்டு நீங்காதாம்; அவ்விடத்துத் தானுகவே சித்த விகாரத்தான் விளையும் மாயாகாரிய போகங்களைத் தீண்டாமல், திருவடியிலே ஒன்றியிருத் தலாகிய சமாதி கைகூடிச் சிவத்தோடு பிரிப்பின்றி விளங்குதற்குத் திருவருள் முதற்காரணமாகும் என்றவாறு.

நின்மலாதீத சகலா வத்தையில் திருவருள் என்றும் பிரிப்பின்றி நிற்றலால் பிரபஞ்சத்தை நாடாமல் சிவசமாதியே கைகூடிப் பேரின்பம் சித்திக்கும் என்பது கருத்து.

அமுதமுண்டார் கடுக் கருதாததுபோல நின்மலாதீதம் சென்றவர்கள் அந்நிலையில் சகலத்தில் தோயார். ஒருக்கால் தோய்ந்தாலும் அவர்களை விட்டுத் திருவருள் பிரியாது; ஆகவே அவர்கள் ஒருபோதும் மாயாகாரியமான புவன போகங்களை நாடார்; பரங் கண்டார் பரமே பார்த்திருப்பர்; பதபதார்த்தங்கள் காணார்; அதற்கு அருள் துணைசெய்யும் என்பதாம்.

ஆங்கணில் – அவ்விடத்து. சித்தசுகம் – சித்தம் காரியப்பட அதனால் விளையும் மாயாகாரிய போகம். தீண்டாச் சமாதியென ஒற்று மிகுத்துப் பாடங் கொள்ளின் உலகபோகங்களை விரும்பாத சமாதி என ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சத் தொடராக்குக.

அத்தன் – சிவன். ஒன்றல் – பிரிப்பின்றி நாயகன் சேவடி தைவரு சிந்தையராதல். முதல் – முதற்காரணம்.

வேறுசெய் தானிரு பாதியின் மெய்ததொகை
வேறுசெய் தானென்னை யெங்கணும் விட்டுய்த்தான்
வேறுசெய் யாவருட் கேவலத் தேவிட்டு
வேறுசெய் யாவத்தன் மேவிநின் றானே. 2312

இம் – எனின், நின்மல கேவலத்தின் அனுபவத்தை அறிவித்தல் நுதலிற்று

இ - ள் : உமையொருபாகனை இருக்கும் தன் நிலையில் உலகமக்களின் உடற்கூட்டத்தை ஆணும் பெண்ணுமாக வேறுபடுத்தினன்; உயிராக என்னை எங்கும் உலவவிட்டான்; மருட் சகல நிலையினின்று வேறுபடுத்திச் சுத்தமாக்கி அருளொடுபுணர்த்தி அருட் கேவலாவத்தையில் செலுத்தி, அதினின்று பிரிக்காத பரம்பொருள் என்னுளத்தே விரும்பிப் பிரியாதிருந்தான் என்றவாறு.

தான் பெண்ணுரு ஒரு திறனாய் ஆணும்பெண்ணுமாக இருப்பதனால் மெய்த்தொகையையும் வேறு செய்தான் என்க. மெய்த்தொகை - உடற்கூட்டம். உயிருள் ஆண் பெண் பகுப்பில்லை. ஆயினும் ஆணாகப் பெண்ணாக உடலெடுக்கும் வினைவாய்ப்பு உண்டு. ஆதலால் அவ்வினை வாய்ப்பை வெளிப்படுப்பன உடலாதலின் மெய்த்தொகை வேறு செய்தான் என்றார்.

என்னை என ஒருமையாற் கூறியது உயிர் என்ற சாதியொருமைபற்றி என்க.

அவரவர் போகநுகர்ச்சிக் கேற்ற புவனங்களில் எங்கும் உலவவிட்டான் என்பார் எங்கணும் விட்டு உய்த்தான் என்றார் உய்த்தல் செலுத்துதல் மட்டு மன்று; உய்வித்தலுங்கூட, வினைப்போகங்கள் உண்டு கழிக்கப்பெறுமாயின் உய்யச்செய்ததாமன்றே.

அங்ஙனம் ஆணாகிப் பெண்ணாகி மருட்சகலத்துழன்ற எங்களைத் தூயமாக்கி அருட்கோலத்துள் அடங்கியிருக்கச் செய்தான் என்பார் ' வேறுசெய்யா அருட்கேவலத்தேவிட்டு ' என்றார்.

சகல நிலையில் வேறுசெய்த அத்தன், நின்மல நிலையில் வேறுபடுத்தாதவனாக என்னிடமே மேவி நின்றான் என்றார். (191)

கறங்கோலை கொள்ளி வட்டங் கடலிற்
றிரைநிறஞ் சேர்மத்தின் மலத்தினி னின்ற
அறங்காண் சுவர்க்க நரகம் புவிசேர்ந்
திறங்கா வுயிரரு ளாலிவை நீங்குமே. 2313

இம் – என்னின், மலத்தில் சிக்கிப் பல பிறவி எடுத்துழலும் உயிர் திருவருளால் உய்திபெறுதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: காற்றாடியின் ஓலையும், கொள்ளி வட்டமும் கடலலையும் மத்தால் கடையப்படுகின்ற வெண்ணிறமான தயிரும்போல மலத்தால் சுழன்று; தத்தம் அற மறங்களுக்கு ஏற்பச் சுவர்க்கம், நரகம், கன்ம பூமி இவற்றில் பிறந்து, இரங்குகிற உயிர்கள் இறைவன் திருவருள்சேரின் இங்ஙனம் அலைதலி லிருந்து ஒழிவு அடையும் என்றவாறு.

கொள்ளிவட்டமும் காற்றாடியும் போலப் பல பிறவிகளிற் சிக்கியுழலும் உயிர் திருவருள் சேரின் பிறவி நீங்கி உய்யும் என்பது கருத்து.

ஆன்மா தாம் செய்த வினைக்கீடாக மேலும் கீழுமாக மாறிப்பிறத்தற்குக் காற்றாடி ஓலை உவமம். கொள்ளிக்கட்டை வட்டமாகச் சுற்றும் போது வட்டம் இடையறாது தோன்றுதல் போல ஆன்மா ஒரு நிலையில் நில்லாது பலபிறவிகளிற்பட்டு உழலி

னும் ஒன்று போலத் தோன்றுதலானும், மேலும் கீழுமாக மாறிப் பிறத்தலானும் உவமிக்கப்பெற்றது. கடல்அலை ஒன்று கரையில்வந்து மடிந்தொழிய மற்றொன்று கிளம்ப இங்ஙனம் ஒன்றன்பின் ஒன்றாக வருதல்போலப் பிறவியும் ஒன்று அழியப் பின்னென்றாக இடையறாது வருதலின் உவமிக்கப் பட்டது. அலையில் ஒன்று பெரிதும் ஒன்று சிறிது மாக வருதற்குக் கடலிற்படும் காற்றின்மோதல் காரணம் ஆதல்போல ஆன்மாக்களின் வினைப்பரிபாசமும் காரணமாம் என்க. அதனாலும் உவமிக்கப்பட்டது.

மத்தால் தயிர் மாறிமாறிக் கடையப்படும்போது கடைதயிர் ஒருபக்கமும் சுழலாது இருமருங்கும் மாறி மாறி இடர்ப்படும். அதுபோல ஆன்மாவும் வினை வயமாகப் பிறக்கும்போது இருவினை மத்து மோத இடர்ப்படுதலுக்கு உவமிக்கப்பட்டது. இங்ஙனமே ஆன்மா சுவர்க்கம் நரகம் பூமிகளில் மாறி மாறிப் பிறத்தற்கு முத்திறத்தான் முத்திறவுவமை பொருந்து மாறு தெரிக.

அறங்காண் சுவர்க்கம் என்றதில் அறம் பசு புண்ணியம் என்க. இரங்கா என்பதுஎதுகை நோக்கி இறங்கா எனலாயிற்று. (192)

**தானே சிவமான தன்மை தலைப்பட**
**ஆன மலமு மப்பாச பேதமு**
**மான குணமும் பரான்மா வுபாதியும்**
**பானுவின் முன்மதி போற்பட ராவே. 2314**

இ-ள் – எனின், சிவமாந்தன்மை எய்திய ஆன்மா விற்கு மலபாசங்கள் கெடும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள் : ஆன்மாவிற்குத் தானே சிவமாம் தன்மை திருவருள் வசமாகப் பொருந்த தொன்மையே யான ஆணவமலமும், மலவன்மை வாட்ட இறைவனால் புணர்க்கப்பட்ட பாசவகைகளும், அவற்றால் ஆகிய ஆன்மகுணங்களும், பசுத்தன்மை நீங்கினாலும் வாசனையாகவுள்ள உபாதியும் சூரியன் முன் மதிபோல ஒளி மழுங்கும் என்றவாறு.

ஆன்மா சிவமாம் பெரும்பேறு எய்தின் ஆணவம் கன்மம் மாயைகளும் அவற்றால் விளையும் குண வேறுபாடுகளும் பரான்ம உபாதியும் சூரியன் முன் மதிபோல ஒளிகெடும் என்பது கருத்து.

சிவமான தன்மை தலைப்பட என்றதனால் தானே சிவமாதலாகிய அகம்பிரம வாதம் அன்மை தெளிக. பாதிரிப்பூச் சேர்தலால் நீரும் குடமும் மணம் பெறுவதுபோலச் சீவன் சிவச் சார்பால் சிவத்தன்மை எய்தும் அவ்வளவேயாதல் தெளிக.

ஆனமலம்–பண்டேயான மூலமலம். அப்பாசம் - அம்மலம் நீக்க இறைவன் புணர்த்திய கன்மமலமும் மாயாமலமுமாகிய ஆகந்துக மலங்கள். பேதங்கள் என்றமையால் திரோதாயியும், மாயேயமும் அடங்கும்.

ஆனகுணம் – பாச சம்பந்தத்தால் ஆன ஆன்ம குணங்கள்.

பரான்மா – சுத்தான்மா. அதற்குள்ள உபாதி – மலங்கழன்றாலும் மலவாதனையோ, அல்லது மல மிருந்து கழன்றதற்கேற்ற குறியோ விளங்குதல்.

உபாதி என்பது ஒன்றன் சொரூபத்திற் பிரவேசியாமல் வியாவிர்த்தகமாய் நிற்பது யாது அது உபாதி எனப்படும். காதுத்தொளையின் இடையீடற்ற வெளியே காதாகியபொறி எனின், இதில் காதுத் தொளை உபாதியாம் என்க. அதுபோல ஆன்மா சுத்தமடைந்தாலும் வியாவிர்த்தகமாய் இருக்கும் வாசனை உபாதியாம்.

பானு – பேரொளி; மதி - சிற்றொளி. பானு இயல்பான ஒளியுடையது. மதி – பானுவினிடமிருந்து பெற்ற ஒளியுடையது. ஆதலால் பேரொளியில் சிற்றொளி அடங்கியிருப்பது போலத் தன் வியாபகமிழந்திருத்தலாம் என்க. (193)

**நெருப்புண்டு நீருண்டு வாயுவு முண்டடங்**
**கருக்கனுஞ் சோமனு மங்கே யமருந்**
**திருத்தக்க மாலுந் திசைமுகன் றானும்**
**உருத்திர சோதியு முள்ளத்து ளாரே.** 2315

இம் - எனின், நின்மலாவத்தை எய்திய உயிர்கள் உள்ளத்திலும் அட்டமூர்த்திகள் உண்டெனல் உணர்த்துதல் நுதலிற்று,

இ – ள் : வெளிப்படை.

கருத்தும் அங்ஙனமே.

அருக்கன் சோமன் கூறவே அவர்கள் உலாவரும் ஆகாயமும் உடன் கூறப்பட்டதாகக் கொள்க.

திருத்தக்கமாலும், திருத்தக்க திசைமுகனும், திருத்தக்க உருத்திர சோதியும் எனக்கூட்டுக.

சகலராய் அதிகாரமலத்தாற் கட்டுண்டு கிடக்கும் அரிபிரமாதிகள் அல்லர்; நின்மலாவத்தையில் உள்ள ஆன்மாக்கள் உள்ளத்தில் இருப்பவர்கள். பின்னை யோர் காரணேசுரர்களான அரிபிரமாதிகள் என்க.

உருத்திரசோதி என்றார்; உருத்திரன் அங்கிமிச மாதலின். (194)

ஆனைக ளைந்து மடக்கி யறிவென்னு
ஞானத் திரியைக் கொளுவி யதனுள்புக்
கூனை யிருளற நோக்கு மொருவற்கு
வானக மேற வழியெளி தாமே. 2316

இம் – எனின், சிவலோகம் எய்தும் எளிய உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அறிவென்னும் தோட்டியால் யானைகள் ஐந்தையும் தம் வயமாகும்படி அடக்கி, சிவஞானத் திரியை ஏற்றி, அதுவெனச் சுட்டப்படும் பொருளாகிய அறிவினுள் புகுந்து, உடலை மயக்கமற ஆராயும் நின்மலாவத்தையில் இருப்பவர்க்குச் சிவலோகம் ஏற வாய்ப்பான வழி மிக மிக எளிதாம் என்றவாறு.

பொறிகளை அறிவென்னும் அங்குசத்தால் அடக்கி, ஞானவிளக்கை ஏற்றி, அறிவினுள் புகுந்து, தடையான உடலை மயக்கவுணர்வற நோக்கினால், வீடெய்துதல் எளிதாம் என்பது கருத்து.

யானை அறிந்தறிந்தும் பாகனையே சொல்லுவது போலப் பொறிகளும் தம்மைப் பல்லாற்றானும்

வளர்த்த பாகனாகிய ஆன்மாவையே வதைத்தலின் அவற்றை யானைகளாக உருவகித்தார். அறிவென்னும் தோட்டி என்க. 'உரனென்னுந் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்' என்பதும் இப்பொருட்டு, ஏகதேச உருவகம்.

திரி - தானியாகு பெயராக விளக்கை யுணர்த்திற்று. திரியைக்கொளுவி எனவே, ஞானவிளக்கேற்றி என்க.

"அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை யிடுதிரியா - நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணர்க்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்."

என்னும் பூதத்தாழ்வார் கருத்தும் இதுவே.

அதனுள் - அந்த ஞானத்துள். ஊன் - ஆகு பெயராக உடலையுணர்த்தியது. ஊனை இருளிருக்கிற வரையில் யான் என்றிருந்த ஆன்மா, இருளற்றதும் எனது என்றும், காரியம் முற்றினால் கருவிகளைக் கைவிடுவதுபோல வினையழிவும் பாசநீக்கமும் நீங்கின் கருவியான உடல் தானே கழியும் என்றும், உணர்ந்தால் என்க. இதனையே இருளற நோக்கினால் என்றது. வானகம் - சிவலோகம்; சுவர்க்கமன்று.

ஊனைச் சீவன் என்றும் வானகம் ஆஞ்ஞைத் தானம் என்றும் உரை கூறுவாரும் உளர். சின்மலாவத்தை ஆஞ்ஞைகடந்த நிலையாகலின் அவற்றைக் கூறுதல் சாலாது என்க. ஊனை இருளற நோக்கி எனின் ஊனை இருளுற நோக்கும் இயல்பும்

முன்னிருந்ததாதல் வேண்டும். சிவம் என்றும் இருளுற இருத்தலில்லை. ஆகவே உடலை எனப் பொருள் கோடலே சிறப்புடைத்தென்க. (195)

ஆடிய காலி னசைகின்ற வாயுவுந்
தாடித் தெழுந்த தமருக வோசையும்
பாடி யெழுகின்ற வேதாக மங்களும்
நாடியி னுள்ளாக நான்கண்ட வாறே. 2317

இம் – எனின், நாத தரிசனம் செய்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: பரமானந்தத் தாண்டவக் காலத்துத் தூக்கி நின்றாடிய திருவடியால் அசைக்கப்படுகின்ற காற்றும், மின்னொளிபோல எழுந்த தமருக ஒலியும் அவரால் பாடப்பெற்று வெளிப்பட்ட வேதசிவாகமங்களும் ஆகிய அனைத்தொலிகளையும் நின்மல துரியத்தில் சுழுமுனைநாடியின் வழியாக நானறிந்தேன் என்றவாறு.

சிலம்பொலியும் தமருக ஒலியும், வேதாகம ஒலிகளும் என் சுழுமுனை யனுபவத்திற் கண்டேன் என்பதாம்.

ஆடியகால்–நடமாடுகின்ற திருவடி. அசைகின்ற வாயு என்றது சிலம்பொலியை. வாயு நாதத்தையும் நாற்றத்தையும் தாங்கிச் செல்லுவதாதலின் வாயு என்றே நாதத்தைக்குறித்தவாறும். சிவபெருமானுக்கு வேதங்களே சிலம்பு. அதன் ஒலி பரநாதம் என்க.

தாடித்து – தடித்தென்பது செய்யுள் நோக்கி முதனீண்டது. தாடித்து - மிகுத்து. தமருகம் – உடுக்கை. நாதப்பறையினர் என்பர் மணிவாசகர். இதுவே, ஒலி உலகப்படைப்பு அனைத்திற்கும் மூலம். வேதாகமங்கள் இறைவன் வாக்கு. ஆதலால் நின்மலதுரிய நிலையிலிருப்பார் சிவத்தையன்றிச் சிந்தை செய்யாராதலால் அவர் கேட்பன யாவும் பரநாத ஒலியாம் என்றவாறு. கேட்பதும் செவியினாலன்று; சுழுமுனை நாடியாலாம் என்க. (196)

முன்னை யறிவினிற் செய்த முதுதவம்
பின்னைப் பிறவியின் பெற்று லறியலாந்
தன்னை யறிவ தறிவாமஃ தன்றிப்
பின்னை யறிவது பேயறி வாகுமே. 2318

இம் – எனின், சிவனையறிதலே அறிவு, ஏனைய பேயறிவு என உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: பழம்பிறவிகளில் செய்த முதிர்ந்த தவத்தின் உயர்வைப் பின்வரும் பிறவிகளில் தாமடையும் பேறுகளான் அறியலாகும்; உயிராகிய தன்னையும் தலைவனையும் அறிவதே அறிவாகும். அஃதன்றி மாயேயமான பிறவற்றை அறிதல் பேயறிவாகிய மருண் ஞானமாம் என்றவாறு.

தலைவனையறிதல் தெருண்ஞானம். பிறவற்றை யறிதல் மருண்ஞானமாம் என்பது கருத்து.

காரியத்தைக் கொண்டு காரணச் சிறப்பை யறியலாம். மரத்தின் நலங்கொண்டு வித்தினுடைய உயர்வு அறிவதுபோல. ஆதலின், பண்டை நற்

வத்தின் பயனை எடுத்த இப்பிறவியில் எய்தும் பேறுகளைக் கொண்டு உணரலாம் என்பதாம்.

தன் – சிவம். ' தமையுடைய தன்னுணர்வால் ' என்புழியும் இப்பொருட்டாதல் காண்க. ஆகவே சிவஞானமே ஞானம்; ஏனைய ஞானம். பேயறிவாய மருண் ஞானம்; மயக்கவுணர்வு. (197)

செயலற் றிருக்கச் சிவானந்த மாகுஞ்
செயலற் றிருப்பார் சிவயோகந் தேடார்
செயலற் றிருப்பார் செகத்தொடுங் கூடார்
செயலற் றிருப்பார்க்கே செய்தியுண் டாகுமே. 2319

இம் – எனின், செயலற்ற சமாதிச்சிறப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சிந்தையற ஒடுக்கிச் செயலற்று நிட்டையில் இருப்பவர் ஞானசாதனமாகச் சிவயோகத்தை நாடார்; உலகத்தில் தொடக்குண்ணுர்; செயல் அற்றிருக்கச் சிவானந்தம் விளையும்; சிவயோகமாகிய செயல் செயலற்றிருப்பார்க்கே யுளதாம் என்றவாறு.

கருத்து வெளிப்படை.

செயலறுதல் சிந்தையும் ஒருங்கித் திருவடியில் பதிதல். உபலம் போல அறிவின்றி அடங்கிக் கிடத்தல் அன்று. சிவயோகம் – ஞானசாதனம். சிவஞானம்சித்தித்தமையான் சாதனம்வேண்டாதாயிற்று.

செகம்- உலகம். போக போக்கியங்கள். செய்தி - சிவஞானச் செய்தியாகிய யோகம். (198)

தானவ ளுகுஞ் சமாதிகை கூடிடில்
ஆன மலமறு மப்பசுத் தன்மைபோம்
ஈனமில் காய மிருக்கு மிருநிலத்
தூனங்க ளெட்டு மொழிந்தொன்று வோர்கட்கே. 2320

இம் – எனின், சமாதி கைகூடிஞல் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; ஆன்மாவாகிய தான் பரசிவமாகுந் தன்மையதாகிய சமாதி கைகூடிஞல், அநாதியே பிணித்த மூலமலம் நீங்கும், பசுத்தன்மை அகலும்; மிகப்பெரிய பூமியாகிய சிவ உலகத்துக் குற்றமில்லாத உடல் நீடித்து நிற்கும். எட்டுவகையான குற்றங் களையும் ஒழித்துச் சிவனடியிலே ஒன்று பட்டு இருப்பவர்கட்கு என்றவாறு.

திருவடி சம்பந்தம் இடையீடின்றி யுடை யார்க்குச் சிவலோக வாழ்வு உண்டாம் என்பது கருத்து.

சமாதி – தாரணை. நாட்கணக்கில் – ஆண்டுக் கணக்கில் நீடித்து நிற்பது என்று முன்னர் நான் காந்தந்திரத்தே யுணர்த்தப்பெற்றது. ஈண்டும் சொல்லு கிருர். "எதை நினைக்கிருயோ அது நீயாகிருய்" என்ற உபநிடதத்தின் வண்ணம் சிவனையே எண்ணிச் சமாதியிலிருந்தால் சிவமாம் பெரும்பேறு சித்திக்கும். அத்தகைய சமாதிகைகூடிஞல், தடையாய் – மறைப் பாயிருந்த மலம் அறும் என்பதாம். பசுத்தன்மை – பாசங்களாற் கட்டுண்டதன்மை; அஃதறும் என்ற தாம். தூல உடல் நுண்ணுடல் அனைத்தும்

உண்டாய் இல்லையாம், ஈனம் உடையது. காரண சரீரமான ஞான உடலோ என்றும் அழியாதது. ஆதலின் ஈனமில் காயம் இருக்கும் என்றார். இரு நிலம் – பெரிய பூமியாகிய சிவலோகம். ஊனம் எட்டு – பஞ்சமாபாதகங்களும், தெய்வ நிந்தை, குருநிந்தை, சாத்திர நிந்தையும் ஆகிய எட்டுமாம். இவ்வெட்டையும் நீக்கித் திருவருளில் ஒன்று வோர்க்குச் சிவவாழ்வு கிட்டும் என்க. (199)

**தொலையா வரனடி தோன்றுமச் சத்தி**
**தொலையா விருளொளி தோற்ற வணுவுந்**
**தொலையாத் தொழின்ஞானந் தொன்மையி னண்ணித்**
**தொலையாத பெத்தமுத் திக்கிடை தோயுமே. 2321**

இம் – எனின், சத்திநிபாதத்தினுடன் நிகழ்வன சில அனுபவம் அறிவித்தல் நுதலிற்று.

இ – ள் : என்றும் ஆன்மாவைவிட்டு நீங்காத திருவருட் சத்தி வெளிப்படும்; கூடவே சிவபெருமா னுடைய திருவடியுந் தோன்றும்; என்றும் அழியாத மலமாகிய இருளும், சிற்றறிவாகிய பசுஞானமும் தோற்ற, ஆன்மாவும் கெடாத கிரியை ஞானம் இவற்றைப் பழமையாகவே எய்தி, மாறிவருத லன்றித் தொலையாத பெத்தநிலை – முத்திநிலை இரண்டற்கும் இடையே அழகிய அருட்சத்தியில் தோயும் என்றவாறு.

ஆன்மா – சத்திநிபாதம் உண்டானவுடன் திருவடிப்பேறும், மலதரிசனமும் பெற்று இச்சாஞானக் கிரியைகளை எய்திப் பெத்த முத்தியாகிய இரு நிலைகளிலும் திருவருளிலே தோய்ந்து நிற்கும்.

பெத்தநிலையிலும் அருளிற்றோய்தல் நின்மலா வத்தையில் என்க. ஞானம் பதிஞானமும், கிரியை சரியையாதி சிவகன்மங்களுமாம். (200)

தோன்றிய பெத்தமு முத்தியுஞ் சூழ்சத்தி
மான்றுந் தெருண்டு முயிர்பெறு மற்றவை
தான்றரு ஞானந்தன் சத்திக்குச் சாதனு
மூன்றலில் லாவுள் ளொளிக்கொளி யாமே. 2322

இ-ம் - எனின், பெத்த முத்தி நிலைகளில் ஆன்மா அறியும் அறிவின்திறன் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : தோன்றிய பெத்தநிலையிலும் முத்தி நிலையிலும் ஆன்மா தன்னிடம் பதிந்த திருவருட் சத்தியை மயங்கியும் தெளிந்தும் அடையும்; சிவனுதவும் அறிவு அவ்வான்மாக்கள் பால் நிலவும் திருவருளுக்குத் துணையாம்; நிலைபேறில்லாத ஆன்மாவின் அறிவுக்கும் அறிவாய் விளங்கும் என்றவாறு.

ஆன்மா பெத்தநிலையில் திருவருட்சத்தி யறிவை மயங்கி யறியும். முத்திநிலையில் தெருண்டு அறியும்; சிவனருள் செய்யும் ஞானம் சத்திக்குந் துணையாம்; அதுவே ஆன்மாவின் அறிவுக்கும் அறிவாய் விளங்கும் என்பது கருத்து.

தோன்றிய பெத்தம் - வினைவயத்தால் பிறவியை யுற்ற உடலோடு கூடியதால் ஆன்மாவிற்குளதான கட்டுநிலை. தோன்றியமுத்தி - பரிபாக விசேடத்தால் விளைந்த வீட்டுநிலை. இவ்விரு நிலையிலும் ஆன்மாவை அகலாதே சூழ்ந்துள்ள சத்திநிபாதம். அதாவது

திருவருட்பதிவு, அச்சத்தி நிபாதத்தை உயிர்கள் பெத்த நிலையில் மயங்கி அடையும். முத்திநிலையில் தெளிந்து பெறும். மான்று – மயங்கி தெருண்டு – தெளிந்து. தான் தரும் ஞானம் மற்றவைதன் சத்திக்குச்சாதனும் - சிவமாகிய தான் உதவும் பேரறிவு அவ்வான்மாக்களின் சத்திநிபாதத்திற்குத் துணையாய் விளக்கந்தருவதாம் என்க.

உள்ளொளி–ஆன்ம ஞானம். அது விடயாந்தரங் களிற் சென்று பற்றுவதால் நிலையற்றது. ஆதலால் ஊன்றலிலா உள்ளொளி என்ருர். உள்ளொளிக்கும் ஒளியாய் விளங்கும் தான்தரும். ஞானமாகிய சிவ ஞானமாம் என்க. சாதனும் என்பது குறைந்து சாதனும் என வந்தது செய்யுளாதலின். (201)

அறிகின் றிலாதன வையேழு மொன்றும்
அறிகின்ற லென்னை யறியா திருந்தேன்
அறிகின்ருய் நீயென் றருள்செய்தா னந்தி
அறிகின்ற நானென் றறிந்துகொண் டேனே. 2323

இம்–எனின், என்னையறிவென்ருன் நந்தியா தலின் அறிந்தேன் எனல் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; தம்மையும், பற்றிய என்னையும் அறிய ஆற்றலில்லாதனவாகிய முப்பத்தாறு தத்துவங்களை யும் உணர்கின்ற என்னை யான் அறியாமலிருந்தேன். அந்நிலையில் சிவகுருநாதன் நீ அறிகின்ருய் என்று விளக்கினுன்; அதனுல் நான் அறிகின்றவன் என்று அறிந்து கொண்டேன் என்றவாறு.

சடமாகிய தத்துவங்களையும் என்னையும் யான் அறியாதிருந்தேன். ஆசிரியனாகிய சிவன் என்னையறி வென்றான். பின்பு என்னைச் சித்தாக யான் அறிந்தேன் என்பது கருத்து.

ஐயேழும் ஒன்றும் — முப்பத்தைந்தும் ஒன்றும் முப்பத்தாறு தத்துவங்கள். இவை மாயாகாரியமாய்ச் சடமாவன ஆதலால், அவை தம்மையும் அறியா. பற்றிய என்னையும் அறியா. ஆதலால் 'அறிகின்றிலா தன' எனப்பட்டன.

அறிகின்ற என்னை — சித்தாகிய என்னை சித்தென்று உணராதிருந்தேன். யான் உணர்த்த உணருஞ் சித்தாகலின் இறைவனாகிய குருநாதன் என்னையறி வென்றான். அதன்பிறகுதான் என்னை அறிபவனாக அறிந்தேன் என்றவாறு. (202)

தானவ னாகிய ஞானத் தலைவனை
வானவ ராதியை மாமணிச் சோதியை
ஈனமின் ஞானத் தின்னருட் சத்தியை
ஊனமி லாடன்னை யூனிடைக் கண்டதே. 2324

இ-ம் — எனின், உடம்பினுள் உத்தமனைக்கண்ட வாற்றை உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்; என்னை அவனாகச் செய்த ஞானநாயகனும் தேவர்கள் அனைவர்களுக்கும் முதல்வனும், மாணிக்கச் சோதியும் ஆகிய சிவனையும் குற்றமில்லா தவளான குற்றமற்ற ஞானத்தில் விளங்கும் இனிய திருவருட்சத்தியையும் என் உடம்பகத்துக் கண்டேன் என்றவாறு.

சிவம் சத்தியிருவரையும் ஊனுடம்பாலயத்திற் கண்டேன் என்பது கருத்து.

நின்மலாவத்தையில் சிவனும் அவன் அருளும் அன்றி வேறு அறியப்படுவன இன்மையின் அவற்றைக் கண்டேன் என்கின்றார்.

ஞானநாயகன் எனக்கு ஞானத்தை நல்கினார். அதனால் அவனே தானேயாகிய அந்நெறியில் நின்றேன். அவன் தானவனாயினன் என்பார் இங்ஙனம் கூறினார்.

வானவர் – பசு புண்ணிய விசேடத்தால் பதவி பெற்றோர். அவர் இந்திரன் மால் பிரமனாதியர். அவர்கட்கும் காரணராய்ப் பதவியில் நிறுத்துவார் சிவனாதலின் வானவராதியை என்றார் மாமணி – பெரிய மாணிக்கம். அதனுட் சோதி எங்குமாயிருந்து ஒளி செய்வதுபோல இயங்குவ நிற்பவான எவற்றினும் எங்குமாக நின்று ஞானவொளி நல்குபவன் சிவனாதலின் மாமணிச்சோதியை என்றார்.

ஈனம் இல்ஞானம் – சிவம்பெருக்கும் மெய்ஞ்ஞானம். அதனால் அடையத்தகுவது திருவருட்சத்தி.

ஊன் – ஆகுபெயராக உடலை யுணர்த்திற்று (203)

ஒளியு மிருளும் பரையும் பரையுள்
அளிய தெனலாகு மான்மாவை யன்றி
அளியு மருளுந் தெருளுங் கடந்து
தெளிய வருளே சிவானந்த மாகுமே. 2325

இ-ள் – எனின் அருளே ஆனந்தமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் ; ஆன்ம போதமாகிய சிற்றறிவும், ஆணவமாகிய இருளும். இவற்றை விளக்கும் கிரியாசத்தியாகிய பரையும், அச்சத்தியுள் அருளத்தக்கதாகிய ஆன்மாவும் ஆகிய இவற்றையே யன்றி, ஆன்மாவைப் பரிபாகப்படுத்துகின்ற அருளையும் தெளிவையுங் கடந்து தெளிய, சிவனுடைய வேறுபாடில்லாத பிரிக்க இயலாத சக்தியே சிவானந்தமாக நுகரப்படும் என்றவாறு.

ஆன்மாவின் அறிவு விளக்கத்திற்குத் துணையான ஒளி முதலானவற்றையும் அதற்குத் துணையான இச்சையும் கிரியையுமான ஆற்றல்களையும், அவற்றை எழுப்பும் அருட்சத்தியையும் கடந்த துரியங் கூடுமாயின் அருளே ஆனந்தமாக ஆன்மா அதில் தோய்ந்து விளங்கும் என்பது கருத்து.

ஒளி – ஆன்மா மலமாயா கன்மங்களோடு கூடிக் கட்டுண்ட நிலையில் சிறிது அறிவு விளக்கம் பெறுதற்காகப் புணர்க்கப்பட்ட கலாதிகளால் விளைந்த ஆன்ம ஞானம்.

இருள் – ஆன்மாவை அநாதியே மறைத்துள்ள ஆணவ இருள்.

பரை – சத்தியின் வகையாய் ஆன்மாவின் செயலைத் தூண்டும் கிரியாசத்தி.

பரையுள் அளியது எனலாகும் ஆன்மா – அச்சத்தியின் வியாபகத்துளடங்கிச் சத்தியால் கருணைசெய்யத் தக்க உயிர். இவைகளை அன்றி, கருணை வழங்குந் திருவுருளும் ; திருவருள் கூடியதால் விளைந்த தெளிவும்

ஆகிய இவைகளும் சிவபோகத்திற்கு இடையூரு தலின் இவற்றையுங் கடந்த அனுபவம் நிகழுமாயின் அந்த அருள்முதுநிலையே சிவானந்தமாம் என்பது. அளி – கருணை. அருள் – அதன் காரணமான இறைவனது ஆற்றல். (204)

ஆனந்த மாகு மரனருட் சத்தியிற்
ருனந்த மாமுயிர் தானே சமாதிசெய்
தூனந்த மாயுணர் வாயுள் ளுணர்வுறிற்
கோனந்த வாய்க்கு மகாவாக்கிய மாமே 2326

இம் – எனின், திருவருளில் தானற்று, உடல், உணர்வு கடந்து உணர்விற்குணர்வான சிவத்தொடு கூடிச் சிவத்தன்மை எய்தும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஆனந்தானுபவமாகும் சிவத்தின் திருவருளாற்றில் முடிவாகத் தோய்ந்த உயிர் தானே தியானங் கைகூடி, அதற்குச் சாதனமாகக் கிடைத்த உடலையுங் கடந்து, இறை அறிவே சொருபமாய் உள்ளுணர்வாகச் சிவனறிவையே தம்மறிவாகப் பொருந்தின் சிவமாந்தன்மை கிடைக்கப்பெறும். இத்தன்மை எய்துதலே தத்துவமசி என்னும் மகாவாக்கிய அனுபவமாம் என்றவாறு.

திருவருளிற்றோய்ந்து ஆன்மபோதமழிந்து சிவபோதமிக்குச் சிவத்தோடுகூடிச் சிவமாந்தன்மை எய்துதலே மகாவாக்கிய நிலையாம் என்பது கருத்து.

அருள் – இறைவனுடைய பிரிக்க இயலாத குணம், தீயிற்சூடுபோல : அருளை ஆன்மா அறிவது

ஆனந்த வடிவமாக. அங்ஙனம் ஆனந்தமாக நுகரப் படும் திருவருளாற்றலிலே ஆன்மா தன்னையிழக்கும் என்பதனை 'அருட்சத்தியில் உயிர்தான் அந்தமாம்' என்றார். அந்தமாதலாவது தனது தன்மைகெட்டு அருளின் தன்மையேயாதல்.

தானே சமாதிசெய்து, ஆன்மாவிற்கென்று தனியே கருவிகரணங்கள் இல்லாமையால் சமாதி யாகிய இடையீடில்லாத் தியானத்திலிருந்து.

ஊன் – உடல். ஊனந்தமாய் – உடலனுபவ மாகிய மாயாகாரிய நுகர்ச்சிகளைத் தாண்டி.

உணர்வாய் – ஞானமேவடிவாய். உள்ளுணர் வுறின் – அறிவினுள் அறிவாய்ச் சிவம் மன்னப் பெற்றால்.

கோனந்தம் – சிவமாந்தன்மை.

மகாவாக்கியம் – பெரும்பெயர்க்கிளவி. அது சீபஞ்சாக்கரம். அதனுள் சிவசத்தியினிடையில் ஆன்மா தற்போதமற்று மடங்கிக்கிடக்கும் அனு பவம் பெறும். தத்துவம் அசி என்பது என்பாரும் உளர். அதுவும் அது நீ ஆகிறாய் என்னும் பொருள தாகலின் ஓரளவு சீபஞ்சாக்கரப் பொருளையே உணர்த்துவதாம், தத்துவம் அசி மகாவாக்கியம் அது நீ ஆகிறாய் எனப்போதிக்கும். 'சிவயநம' என்பது அம்மையப்பர் அருளணைப்பிலே ஆன்மா முனைப் பற்று, தந்தை தாயின் மடியிலே குழந்தையிருப்பது போல இருக்கும் நிலையை உணர்த்தும். ஆகவே இரண்டு மகாவாக்கியங்களும் கண்ணோய்க்குக்

கண்ணுடியும், மருந்தும் போலும் வேற்றுமை யுடையனவாம் என்க. (205)

அறிவிக்க வேண்டா மறிவற் றயர்வோர்க்கும்
அறிவிக்க வேண்டா மறிவிற் செறிவோர்க்கும்
அறிவுற் றறியாமை யெய்திநிற் போர்க்கே
அறிவிக்கத் தம்மறி வாரறி வோரே. 2327

இ - ள்: அறிவேயின்றித் தம்மை மறந்து திரிவோர்க்கு ஞான நூல்களையறிவிக்க வேண்டாம்: தகுதியின்மையான். பண்டைநற்றவத்தால் ஞானத்தில் செறிந்த ஞானிகளுக்கும் அறிவிக்கவேண்டாம்: முற்றும் உணர்ந்தமையின். ஆகவே சித்தாயும் அறியுந் தன்மை மழுங்கியவர்களுக்கே அறிவிக்க. அவர்கள் அறிபவர்களாகித் தம்மை அறிவார் என்றவாறு.

இம் - எனின், உணர்த்த உணரும் சிற்றறிவினோர்க்கே உபதேசம்வேண்டும் எனல் உணர்த்துதல் நுதலிற்று.

உணர்த்த உணரும் ஆன்மாக்களுக்கே உபதேசம் இன்றியமையாதது; உபதேசம் கேட்ட பின்னர் அவர்கள் தம்மையுடைய தனை உணர்வார் ஆவர் என்பது கருத்து.

அயர்தல் - மறத்தல், போக போக்கியங்களில் அழுந்தித் தான் ஒரு சித்துப்பொருள்; திருவருளனுபவமாகிய பேரின்ப நுகர்ச்சிக்கு உரியவன் என்பதை மறந்து பொறி புலன் கண்டதே காட்சியாய் மயங்கி நிற்போர், அயர்வோர் என்க.

அறிவிற்செறிவோர்—ஞானசொரூபமான சிவபரம் பொருளின் அருளிலே இடைவிடாது உறைபவர் சிவ ஞானிகள்.

அறிவுற்று—அறியாமையெய்தி; நிற்போர்-உணர்ச்சி யிருந்தும் உணர்த்துவாரின்மையின் உணர்வு மழுங்கி நிற்போர். வேடரிடத்து வளர்ந்த மன்னவன் குமரன் மன்னர்க்குரிய அறிவும் ஆற்றலும் பெற்றிருந்தும் அதனையறியாது வேடனென்றே நினைத்ததுபோல இருந்தவர்கள். அவர்கள்தாம் உபதேசத்திற்குரிய தகுதியிடையவராவர் என்பதாம். அவர்களுக்கு உப தேசித்தால் அவர்கள் ஞானத்தால் அறிவார் ஞான சொரூபியான சிவத்தை என்றவாறு. (206)

சத்து மசத்துஞ் சதசத்துந் தான்கூடிச்
சித்து மசித்துஞ் சிவசித்த தாய்நிற்குஞ்
சுத்த மசுத்தந் தொடங்காத் துரியத்துச்
சுத்தரா மூன்றுடன் சொல்லற் றவர்களே. 2328

இ—ள் : என்றும் உள்பொருளும், இல்பொருளும் இரண்டுவித தன்மையுங்கூடிய பொருளும் தம்முள் இயைந்து அறிவுடைப்பொருளும், சடப்பொருளும், சிவசித்துமாக விளங்கும். அசுத்தமாகிய அறியாமை யும்,சுத்தமாகிய அறிவும் தொடாத தனித்த நிலையாகிய சுத்தமே துரியமாம். அதன் கண்ணும் அதுபோலச் சுத்தமாகிய நின்மலசாக்கிரம் சொப்பனம் சுழுத்தி

இம் — எனின், நின்மல சாக்கிரமுதலிய நான் கவத்தைகளிலும் நிற்பார் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

என்ற மூன்றோடும் கூடிய காலத்தும் குறைச்சொல் லற்றவர்களாய் இருப்பர் என்றவாறு.

நின்மலாவத்தை கூடியவர்கள் நால்வகை நிலை யிலும் அறிவு அறியாமைகள் பற்றாமல், நிரந்தரமான ஞானசொரூபிகளே யாவர் என்பது கருத்து.

சத்து-என்றும் அழிவில்லாத நித்தியப்பொருள்; அது சிவம். அசத்து-சத்துப்போல என்றும் மாறாது இருக்குந் தன்மையதல்லாதது. இது மாயை மலம் முதலியன. சதசத்து – சத்தொடுசார்ந்து சத்தாயும் அசத்தொடு சார்ந்து அசத்தாயும் இருக்கும் சார்புத் தன்மையுடையது; இது ஆன்மா. இது அறிவுரு வாகிய சிவத்தொடுசாரின் சித்தாம். அசித்தொடு சாரின் அசித்தாம். இவ்விருநிலையும் இன்றி, என்றும் சிவத் தைச் சார்ந்து அறிவுருவாகவே திகழும் நின்மலநிலை சிவ சித்தாம். இந்த அவத்தையை யெய்தற்குரியர் அறிவு அறியாமைகளிற்றொடக்காத சுத்ததுரியமுடை யோரும் சுத்தசாக்கிராதி மூன்றுடன் கூடியவர்கள் என்ற சொல்லற்றோருமே யாவர். அதாவது நனவாதி கடந்து சுத்ததுரியம் உற்றோரேயாவர் என்பது. (207)

தானே யறியா னறிவிலோன் றானல்லன்
தானே யறியா னறிவு சதசத்தென்
றானா லிரண்டு மரனரு ளாய்நிற்கத்
தானே யறிந்து சிவத்துடன் றங்குமே. 2329

இ-ம்-எனின், தானே அறியும்வகை உணர்த்துத தல் நுதலிற்று.

இ – ள் : ஆன்மா தானே அறியும் சுதந்தர முடையன் அல்லன்; ஆனால் அறிவில்லாதவனும் அல்லன்: தன்னறி சத்தும் அசத்துமாய இரு தன்மையும் இயைந்ததென்று அருளால் தானே யறிவான், இங்ஙனம் அறியும் தன்மைகளிரண்டும் சிவனருளால் என்று எண்ணி அவ்வருள் வழியே நிற்பனாயின், தானே தன்னையும் தலைவனையும் அறிந்து சிவத்துடன் கூடிப் பேரின்பந் துய்ப்பன் என்றவாறு.

ஆன்மா தன்னைச் சதசத் தென்று அறிவது திருவருள் துணைக்கொண்டே என்ற உறுதியில் நிலைப்பனாயின் தானே சிவத்தையும் அறிந்து சிவத் தொடுங்கூடி விளங்குவன் என்பது கருத்து.

தானேயறியான் என்றது சுதந்திர மின்மையான்; ஆன்ம அறிவு உணர்த்த உணரும் சிற்றறிவாதலின் அறிவில்லாதவனும் ஆகான். 'உணர்த்தினாலன்றி உணராவுளங்கள்' என்பதும் இக்கருத்தை நன்கு விளக்கும்.

திருவருள் துணைநின்று காணுங் கண்ணுக்குக் காட்டுமுளம்போல் காணக்கண்ணினைக் கண்டு காட்டினால் தன்னைச்சதசத்து என்றுணருவான். அங்ஙனம் உணரும்போதும் தனக்குத் திருவருள் துணைசெய்தது, அதனாலுணருகின்றேன் என்பதை யுணரான். அங்ஙனம் அருள் உண்மையை யுணருமாயின் சிவத்தோடு கூடிச் சிவமாவன் என்பதாம். (208)

தத்துவ ஞானந் தலைப்பட் டவர்க்கே
தத்துவ ஞானந் தலைப்பட லாய்நிற்குந்
தத்துவ ஞானத்துத் தானவ னாகவே
தத்துவ ஞானானந் தந்தான் றொடங்குமே. 2330

இம் - எனின், தத்துவஞானம் பெறுவதற்கும் ஞானானந்தம் பெறுவதற்கும் உரியாரிவர் என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: முப்பத்தாறு தத்துவங்களின் உண்மையையுணரும் அறிவு சிறந்தார்கட்கே திருவடி ஞானமாகிய உண்மை ஞானம் கைவரப் பெற்றுத் தானவ னாதலாகிய சிவோகம் பாவனைகூட, உண்மைச் சிவஞானத்தானுண்டான சிவானந்தம் அனுபவத்திற்குப் புலனாகத் தொடங்கும் என்றவாறு.

தத்துவரூபாதி மூன்றும் பெற்றவர்கள் ஆன்மரூபாதி மூன்றையும் சிவரூபாதி மூன்றையும் ஒருசேரப் பெற்றுச் சிவபோகந்துயப்பர் என்பது கருத்து.

உணவால் பசியாகிய துன்பத்தினீக்கமும், இன்பப் பேறும் ஒருங்கெய்தப் பெறுதல் போலத் தத்துவஞானம் தலைப்படின் உணர்வரிய மெய்ஞ் ஞானமும் திருப்பெருகு சிவஞானமும், அதனால் சிவோகம் பாவனையும் அதனால் சிவானந்தமும் உடங்கியையும் என்பதாம். (209)

தன்னையறிந்து சிவனுடன் றானாக
மன்னு பதங்குண மாளும் பிறப்பறும்
பின்னது சன்முத்தி சன்மார்க்கப் பேரொளி
நன்னது ஞானத்து முத்திரை நண்ணுமே. 2331

இ-ம் – எனின், மலவன்மை கெடுதற்கும் பிறப்பு நீங்குதற்கும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று

இ-ள் : ஆன்மா தன்னையறிந்து, சிவனோடு கூடிச் சிவமாக, அநாதியே ஆன்மாவினிடம் நிலை பெற்ற ஆணவமலத்தின் குணங்கெடும்; அதனால் பிறவிநீங்கும்; பின் சன்முத்தியும், சன்மார்க்க ஞானமும், நன்மையை உடையதாகிய ஞானமுத்திரையும் கிட்டும் என்றவாறு.

ஆன்மா தன்னையறிந்து தலைவனைக் கூடினால் மல வன்மைகெடும் ; பிறவியறும் : சன்முத்தி நன் ஞானங்கள் அவற்றின் அடையாளம் அனைத்துமாம் என்பது கருத்து.

ஆன்மா தன்னையறிதலாவது ; சிற்றறிவும் சிறு தொழிலும் உடையேன் எனவும், இறைவற்கு என்றும் மீளா அடிமையெனவும், அநாதியே மல கன்ம மாயைகளால் மறைக்கப்பட்டவன் எனவும், தத்துவங்களாகிய மாயேயங்கள் தடையாக அதனால் உலகமே பெரிது, போகமே சிறந்தது என மயங்கிய வன் எனவும், முன்னைய வினைகளை உண்டு கழிக்கவும், மலவன்மையைக் கெடுக்கவும் இவ்வுடல் மாயாகாரிய மாக உதவப்பட்டதெனவும், இதனைக்கொண்டு வினைக்கேடும், மலவன்மையி னழிவும் திருவருள் துணையால் தேடிக்கொள்ளத் தக்கவன் யான் எனவும் உணர்ந்து அதற்குரிய சரியை யாதிகளைக் கடைப் பிடித்தல்.

சிவனுடன் தானாக – சிவபெருமானோடு கூடிக் கூடி அச்சார்பால் அவனே தானாக என்க.

மன்னும் மலம் ; உயிரினிடமாக அநாதியே தங்கிய மலம். அது மூலமலம் என்னும் ஆணவம். அதற்கு முத்தியிலும் அழிவில்லையாதலின் அதன் வலி கெடுதலைக் குணம் மாளும் என்றார்.

மலம் குன்றவே வினைகளும், உபகாரமாகக் கொடுக்கப்பெற்ற மாயையும் அழியும். எரிவதை இழுத்தால் கொதிப்பது நிற்பதுபோல ; அதனால் பிறவியறும்.

பின்னது ; அது பகுதிப்பொருள் விகுதி. சன் முத்தி – ஞானத்தால் அடைகின்ற வீடு. சன்மார்க்கப் பேரொளி – ஞானத்தால் எய்தும் தெளிவு.

நன்னது ஞானத்து – நன்மையாகிய ஞானத்தில். அது சிவஞானம் ; சிவஞானச் செய்தியுடையோர்க்கு உள்ள அடையாளம்; அதாவது முத்திரை. காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி அடியாரையும் ஆலயத்தையும் அரன் எனத் தொழும் உயர்வு. முத்திரை – பொறி ; திருவடிக்குறி என்பாரும் உளர். (210)

**ஞானந்தன் மேனி கிரியை நடுவங்கந்**
**தானுறு மிச்சை யுயிராகத் தற்பரன்**
**மேனிகொண் டைங்கரு மத்துவித் தாதலான்**
**மோனிகண் ஞானத்து முத்திரைபெற் றார்களே. 2332**

இம் – எனின், இறைவன் அறிவிச்சை செயல் களால் திருமேனி தாங்கிப் பஞ்சகிருத்தியம் பண்ணு தலால் மோனிகள் மலநீக்கமும் திருவடிப் பேறு மாகிய சின்முத்திரை பெற்றார்கள் என உணர்த்துதல் நுதலிற்று,

இ – ள் : பரசிவத்திற்கு ஞானமே திருமேனி, அதில் நடுவுடல் கிரியை ; சிவம் எய்தும் இச்சை உயிர்; இவ்வாறாகப் பரசிவம் திருமேனிதாங்கி ஐந்து தொழிற்கும் மூலமாதலான், மோனநிலை எய்திய நின்மல ஞானிகள் ஞானமுத்திரையைத் தமக்கு உபதேசமாகப் பெற்றார்கள் என்றவாறு.

பரசிவம் அறிவிச்சை செயல்களாலே திருமேனி தாங்குதலால் நின்மலஞானிகள் உபதேசமாக ஞான முத்திரையைப் பெற்றார்கள் என்பது கருத்து.

இறைவனுக்கு ஞானமே வடிவென்பதனை,

*'காயமோ மாயை யன்று காண்பது சத்திதன்னால்*
*சத்திதன் வடிவே தென்னிற் றடையிலா ஞானமாகும்'*

என்பவற்றால் உணரலாம். கிரியை நடுவங்கம் ; உயிர் இச்சை என்றார்,

இங்ஙனம் இறைவன் ஒளியான திருமேனி கொண்டு பஞ்சகிருத்தியங்களையும் பண்ணுகின்றார். அவர் பஞ்சகிருத்தியம் பண்ணுவது ஆன்மாக்கள் மும்மலத்தினின்று நீங்கிச் சுத்தான்மாவாய் முத்தி எய்துதற்கேயாதலால், நீங்கவேண்டியது மும்மலம், சுட்டுப்பொருளாகிய சதசத்தாகிய ஆன்மா முனைப் பற்று மடங்கித் தலைவன் தாளிணைதலை உடமை யும் முறைமையும் என்று உணர்த்தும் முத்திரை சின்முத்திரை. அதுவே இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்டிய உபதேசம். அதனைப் பெற்றார்கள் என்றார். (211)

**உயிர்க்கறி வுண்மை யுயிரிச்சை மானம்**
**உயிர்க்குக் கிரியை யுயிர்மாயை சூக்கம்**
**உயிர்க்கிவை யூட்டுவோ னூட்டு மவனே**
**உயிர்ச்செய் லன்றியவ் வுள்ளத்து ளானே. 2333**

இ-ம் - எனின், உயிரினறிவாதியன இவை என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்; உயிரின் அறிவு சத்தியம்; உயிரின் இச்சை மானம்; உயிரின் செயல் உயிரோடு கூட்டிய மாயையால் ஆயனவே; இவையனைத்தும் சூக்குமம். இவைகளை உயிரோடு புணர்த்தியவன், நுகர்த்துபவனாகிய முதல்வனே. ஆதலால் உயிர்கள் செய்யும் கன்மங்கள் பசுகன்மங்களாகா. உள்ளத்திருந்து இயக்கும் முதல்வன் செயல்களே என்றவாறு.

உயிர்களின் அறிவிச்சை செயல்களும் அவைகட்குச் சுதந்தரமாக உள்ளவையன்று; இறைவன் உதவியவை; உயிர்ச்செயல்கள். இறைவன்செயலே என்பது கருத்து.

உண்மை-நிலைத்த பொருளைச் சார்ந்து நிலையான இன்பம் எய்துதலாகிய உண்மை. இதுவே உயிர்க்குள்ள அறிவு. அது அடையும் இச்சை ஆணவமல காரியமாய அஃதெய்தும் மானம் அல்லது அகங்கார காரியமாகிய பெருமையே யாம்.

உயிர் செய்யுங் கிரியைகள் மாயேய நுகர்ச்சிக்காக மாயையால் விளைந்தனவாதலான் மாயையே. இம்மூன்றும் நுட்பமானவை. இவற்றை ஆன்மாக்களுக்கு அருத்துவோன் அரன். ஆதலால்' உயிர்

களின் அறிவு இச்சை செயல்களால் விளையும் புண்ணிய பாவச்செயல் உயிர்களின் செயலன்று ஊட்டிய இறைவன் செயல்களே என்க.

'அவ்வுள்ளத்துள்ளான் செயல்' என ஒரு சொல் வருவித்து முடிக்க. (212)

தொழிலிச்சை ஞானங்க டொல்சிவ சீவர்
கழிவற்ற மாமாயை மாயையி னாகும்
பழியற்ற காரண காரியம் பாழ்விட்டு
அழிவற்ற சாந்தாதீ தன்சிவ னாமே 2334

இம் – எனின், இறைவற்கும் உயிர்கட்கும் உள்ள வேறுபாடுகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சிவன் உயிர்க்குயிராகக் கலந்துள்ள சீவர்களுக்குள்ள அறிவும் இச்சையும் செயலுமாகிய மூன்றும் நீங்காத சுத்தமாயை அசுத்த மாயைகளின் காரியங்களாகிய தனுகரணங்களான் விளைவனவாகும்: சிவனோ குற்றமற்ற காரணம் காரியம் சூனியம் இவற்றைக்கடந்து, நிலைபேறாக விளங்குகின்ற ஆனந் தாதீதன் ஆம் என்றவாறு.

உயிர்கள் இறைவனருளால் மாயை மாயேயங் களாலான கருவிகரணங்களால் அறிவிச்சை செயல் களையுடையன சிவனே. காரணகாரியமில்லாத சூனி யத்தையுங் கடந்த நிலையான ஆனந்தாதீதன் என்ப தாம். இதனால் சிவ சீவ வேறுபாடு உணர்த்தப் பெற்றது.

சிவசீவர் — சிவன் உடனாக விளங்க அவருடன் கூடிய சீவர்கள். சீவர்கள் யாண்டும் தனித்து நிற்கும் சுதந்திரமற்றவர்கள். இறையுண்மையை ஒப்பாதார் மாட்டும் இறைவன் மறைய நிற்பான். ஆகவே மெய் உயிரையின்றி யியங்காதவாறு போலச்சீவர்கள் சிவனை யின்றி ஒன்றையும் உணரார் புரியாமல் என்பார் சீவனைத் தனியே கூறாது சிவ சீவர் என்றார். சீவர் எனப் பன்மையாற் கூறியது சீவர்கள் பலராதலான். அநேகர் என்பதும், 'அலகிலாவுயிர்கள்' என்பதும் இக்கருத்தே பற்றி என்க. சிவசீவர் என்ற இத் தொடரால் உடலின் உயிர்போல முதல்வன் உயிர் களோடு கலந்துள்ள தன்மையால் உயிர்களேயாயும். கண்ணில் அருக்கன் போலப் பொருட்டன்மையாக வேறாயும், கண்ணொளியின் ஆன்மபோதம் போல உயிர்க்குயிராதற்றன்மையான் உடனாயும் இருத்தல் உணரப்படும் என்க. 'அவையே தானேயாய்' என்பதுமது.

'என்று நீ அன்று நான் நின்னடிமை யல்லனோ' என்பவாகலின் சிவனும் சீவர்களும் அநாதிநித்தியர் என்பார் தொல்சிவ சீவர் என்றார்.

அத்தகைய ஆன்மாக்களுக்கு உரிய அறிவிச்சை செயல்கள் மாயை மாயேயச் சேர்க்கையால் விளைவன வாகும் என்றார். அநாதியே ஆணவமலத்தால் மறைப் புண்டுகிடந்த பசு என்னும் பெயருடைய ஆன்மா அறியாமையால் துன்புற்று வருந்துவதற்கு இரங்கி அநந்த தேவரருளால் தரப்பட்ட அசுத்த மாயையிற் கலக்குண்ட பாகமாகிய காரணசரீரத்தைப் பொருந்தும். அப்போது ஆன்மாவின் அறிவிச்சை

செயல்கள் பொதுவகையாற் சமட்டி ரூபமாய் விளங்கும். பின் அவ்வசுத்த மாயாகாரியமான கலை முதலான கஞ்சுக சரீரத்தைச் சேர்ந்து அறிவிச்சை செயல்களை விளக்கமாகச் சிறப்பிற்பெறும். இதனையே ' தொல்சிவ சீவர் தொழிலிச்சை ஞானங்கள் கழிவற்ற மாயை மாமாயையினுகும் ' என்றார்.

பழியற்ற காரணம், பழியற்ற காரியம், பாழ் விட்டு, மாயை மாயேயங்கள் போலச் சடமாய் அழிவதாய் உள்ள மெய்களைத் தமக்குக் காரணமாகக் கொள்ளாது தம்மிச்சை ஒன்றையே காரணமாகக் கொண்டு வேறு காரணமின்றிக் காரணமில்லாத அதனால் காரியமின்றி, இரண்டு மில்லையாகவே சூனியமோ எனின் அதுவும் இன்றி இம்மூன்றிலையும் கடந்து என்பார் இங்ஙனம் கூறினார்.

சாந்தம் – ஆழ்கடல் போல ஆனந்தாதீதத்தால் அலைவற்று அமைதியாக இருத்தல். சாந்தாதீதன் – அத்தகைய ஆனந்தத்திற் கடந்த நிலையில் கடந்திருப் பவன் சிவன் என்றதாம்.

ஆகவே சிவசீவ வேறுபாடு உணர்த்தப்பெற்றது. இவ்வதிகாரத்தோடு இயைபு யாதோ எனின், இயல் பான முற்றறிவுடைய சிவத்தோடு சீவன் நின்மலா வத்தையிற் பொருந்த சிவமாந்தன்மை எய்தும் என்பதை உய்த்துணர வைத்ததேயாம் என்க. (213)

இல்லது முள்ளது மியாவையுந் தானாகி
இல்லது முள்ளது மாயன்று மண்ணலைச்
சொல்லது சொல்லிடிற் றூராதி தூரமென்
றெல்லை யுணர்ந்தா லுயிர்க்குயி ராகுமே. 2335

இ-ம் – எனின், சிவத்தையுணரும் உபாயமுணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : நிலையற்ற காரியப்பொருளினும் நிலையுற்ற காரணத்திலும் எல்லாவற்றிலும் சிவன் தானாகிக் கலந்தும், பொருட்டன்மையால் இல்லது உள்ளதுமாய அப்பொருள்களின் வேறாயும் உள்ள சிவனைச் சொல்லால் சொல்லலுறின் சேய்மைக்கும் சேயனாவன் விரைந்து அவன் சொரூபத்தை ஞானத்தாலறியின் உயிர்க்குயிராக நம்முள்ளே விளங்குவன் என்றவாறு.

சொல்லிற் சொல்லத் தூரியனான சிவன் உணருமா உணர அண்ணியனாவன் என்பது கருத்து.

இல்லது – நிலையற்ற மாயாகாரியப் பொருள்கள். அவை தனு கரண புவன போகங்கள். உள்ளது – நிலையான காரணமாயை முதலிய பொருள்களும் உயிருமாகிய யாவையும்இவை யிருவகையையும் உண்டாக்கியது. அனைத்திலும் கலப்பால் இறைவன் தானாகி நிற்கின்றான் என்பது உணர்த்தப்பெற்றது. சித்தும் அசித்தும். சத்தும் அசத்துமாய பொருட்டன்மையால் சிவமும் முற்கூறிய பொருள்களும் வேறேயாதலின் அன்றும் அண்ணலை என்றார், சொல்லது சொல்லிடில் என்பதனை சொல்லதைக்கொண்டு சொல்லிடின் என்னும் பொருளதாகக்கொள்க. தூராதி தூரம் : சொல்சுத்த மாயாகாரியமாதலின் இறைவனும் அவன் குணங்களும் சமமாகிய மாயையினும் அதன் காரியமாகிய சொல்லினும் அடங்காத எல்லையற்ற பண்புடைமையின் தூர அதிதூரம் எனப்பட்டது.

உணர்ந்தால் எனின் – அவனருளே கண்ணாகக் கொண்டு ஞானத்தால் அறிவார் சிலஞானிகள் என்ற

மறைவழியின் வண்மை உணர்ந்தார்களாயின், அணி மைக்கு அணியனுவன் என்பார் உயிருக்குயிராகும் என்றார். (214)

உயிரிச்சை யூட்டி யுழிதருஞ் சத்தி
உயிரிச்சை வாட்டி யொழித்திடு ஞானம்
உயிரிச்சை யூட்டி யுடனுற லாலே
உயிரிச்சை வாட்டி யுயர்பதஞ் சேருமே. 2336

இம் – எனின், இச்சாஞானக்கிரியைகள் செய்யும் உபகாரம் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : சத்தி ஆன்மாக்களுக்கு இச்சையை விளைவித்து அலைதருமாறு செய்யும் ; ஞானசத்தி உயிர்களுக்கு உலகத்தினிடம் விளையும் இச்சையை வாட்டி அவ்விச்சையை ஒழிக்கும் : உயிர்களுக்கு இறைவன்பால் அன்பு உண்டாகச்செய்து இறைவன் உயிரோடு உறைதலால், உயிர்கள் தமது இச்சையைக் கெடுத்து உயர்ந்த வீட்டுலகுசேரும் என்றவாறு.

உயிர்களை இச்சையும் செயலும் பரிபாகமுறுத்திய தால். உயிர்கள் இறைவனோடுகூடி, மலநீக்கம் பெற்று வீடுபெற்றுய்யும் என்பதாம்.

சத்தி என்றது கிரியை வடிவான ஆதிசத்தி. ஞானம் என்றது இச்சைவடிவான பராசத்தி ஒன்று இச்சையை யூட்டுவது. மற்றது ஒட்டுவது. பராசத்தி இச்சையை வாட்டிச் சிவத்தோடு உயிருள் உறைவ

தால் உயிர்கள் வீடுபேறு அடைகின்றன என்பது உணர்த்தியவாறு. உழிதரும் – அலையும். (215)

சேருஞ் சிவமாகு ரைம்மலந் தீர்ந்தவர்
ஓரொன்றி லாரைம் மலவிரு ளுற்றவர்
பாரின்கண் விண்ணர கம்புகும் பான்மையோர்
ஆருங்கண் டோரா ரவையரு ளன்றே. 2337

இம் – எனின், முத்தரும் பெத்தருமாவாரிவரென உணர்த்ததுல் நுதலிற்று.

இ – ள்: ஐந்து வகையான மலங்களினின்றும் நீங்கினவர் ஆன்மாவோடு வந்து கலக்கும் சிவமே யானவர்கள். ஓர்ந்துணரத்தக்க சிவத்தோடோன்று தலில்லாதவர்கள் ஐம்மலங்களோடும் அவற்றால் விளையும் அறியாமையோடும் உற்றவர்கள். ஐம்மல முடையோர் தத்தம் வினைகட்கேற்பப் பூமியில் மக்களாகவும் விண்ணின்கண் தேவர்களாகவும் பிறக்கும் தன்மையை உடையார் ஆவர். இங்ஙனம் பிறத்தல் சிவனருளால் விளைவன என்பதை யாரும் உணர்வர் என்றவாறு.

பெத்தர்கள் மலம் ஐந்தோடுங் கூடியவர்கள். முத்தர்கள் மலமகன்றோர். பெத்தர்கள் தத்தம் வினைக் கேற்ப மண்ணிலும் விண்ணிலும் பிறப்பர். இங்ஙனம் பிறப்பது திருவருளால் என்பதை உணர்வார்கள் என்பது கருத்து.

சேரும் சிவம் – காரணமில்லாத கருணையால் வந்தடையும் சிவம் என்க. உயிர் சென்றடையும்

சிவம் எனின் உயிர்க்கு முதன்மையில்லாமையால் அவ்வுரை பொருந்தாது என்க.

மூலமலம் - வலிகுன்றுதலும், மாயாமலம் - வினை குன்றியவழித் திருவருட்சத்தியாக மாறுதலும், மாயேய மலம்-போகத்திற்குச் சாதனமாகித் திரிதலும், கன்மமலம் – உண்டு களிக்கப்பெறுதலும் உடைமை தோன்றப் பொதுமையின் தீர்ந்தார் என்றார்.

ஓர் ஒன்றிலார் – ஓர்ந்துணர்ந்து ( சிவத்தோடு ) ஒன்றுதல் இல்லாதவர்கள். விண்ணர் அகம் என்பதில் அர் தவிர்வழி வந்த அசை. பாரின்கண்ணும் விண்ணகமும் புகும் பான்மையர் என்க.

இங்ஙனம் பிறக்கச் செய்தல் மலவன்மையை வாட்ட இறைவன் செய்யும் திருவருள் என்று யாரும் அறியார் என்பதாம். அன்று, ஏ – அசை. (216)

எய்தினர் செய்ய மிகுமாய சத்தியின்
எய்தினர் செய்யு மிருஞால சத்தியின்
எய்தினர் செய்யு மிருஞால சத்தியின்
எய்தினர் செய்யு மிறையரு டானே. 2338

இம் – எனின், உயிர்கள் சுத்தம் அசுத்தம் பிர கிருதி ஞானம் என்ற சத்திகளை எய்திச் செய்வன செய்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: உயிர்கள் சுத்தமும் அசுத்தமுமாகிய இருவகை மாயாசத்திகளை அடைந்தவர்களாய்,

அவற்றல் செய்வனவற்றைச் செய்வர்; அங்ஙனமே ஞானத்தை எய்தினவர்களாய்ச் செய்வன செய்வர்; பெரிய உலக சத்தியாகிய பிரகிருதியை எய்தினராகப் போகங்களைத் துய்ப்பர். இங்ஙனம் இவர்கள் துய்ப்பன சிவன் அருளால் என்றவாறு.

மாயாசத்தியை எய்தினர் துய்ப்பனவும், ஞானசத்தி எய்தினர் துய்ப்பனவும், ஞாலசத்தி எய்தினர் துய்ப்பனவும் ஆகிய அனைத்தும் அரன் அருளால் என்பதாம்.

இரு மாயாசத்தி எய்தினர் (செய்வன) செய்யும் – எய்தினராய்ச் செய்வன செய்யும் எனப் பொருள் கொள்க. எய்தினர் – முற்றெச்சமாக்குக. இல்லையேல் பலர்பால் செய்யும் என்னும் முற்றுக்கொண்டதாக உருவாம் என்க. செய்வன செய்தலாவது கலாதி களால் அறிவு விளக்கப் பெறுதலும், அசுத்த மாயையின் புணர்ப்பால் உலகத்தைப் பொருந்துதலு மாம்.

ஞானசத்தி எய்தினர் – திருவருள்ஞானம் பெற்ற வர்களாக: தத்துவங்களையும், மாயைகளையும் நானல் ல்ன என நீங்கி திருவடிப் பற்றுடையராதல்.

இருஞாலசத்தி – பிரகிருதி மாயாகாரிய சத்திகள். அதனை யெய்தினராகி உயிர் செய்வன – போகபோக் கியங்களை நுகர்தல். இங்ஙனம் உயிர்கள் இச்சத்திகளை எய்தினராகிச் செய்யும் செயல்களனைத்தும் திருவரு ளால் என்பதாம். (217)

திருந்தனர் விட்டார் திருவி னரகந்
திருந்தனர் விட்டார் திருவார் சுவர்க்கந்
திருந்தனர் விட்டார் செறிமலக் கூட்டந்
திருந்தனர் விட்டார் சிவமா யவமே. 2339

இம் – எனின், திருவடிஞானத்தால் திருத்த முற்றார் செயல் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : திருவடிஞானத்தால் திருந்திய உயிர்கள் இன்பமில்லாத நரகத்தைவிட்டார்கள்; இன்பமயமான சுவர்க்கத்தையும் விட்டார்கள் ; உயிர்களோடு செறிந்த மலக்கூட்டத்தையும் விட்டார்கள்; சிவமாகி அவமாகிய பிறப்பினையும் விட்டார் ஆவார் என்றவாறு.

திருவடி சம்பந்தத்தால் அறிவு திருந்திய பக்குவ ஆன்மாக்கள் எய்தும் பேறுகள் இவையெனத் தொகுத்துணர்த்தியவாறு.

திருந்தனர் என்பது அன்சாரியைபெற்ற பலர் பால் வினையாலணையும் பெயர். இன்சாரியைபெற்று வருதலே மரபாயினும் ஈண்டு அன்சாரியை பெற்று வந்தது. திருந்தினர் எனப் பாடம் இருப்பின் நலமாகக்கூடும்.

திரு – அழகு அல்லது இன்பம். நரகம் அவ்விரண்டு மில்லாதது என்பதாம். திரு – இன்பம். அவம் – பயன்படாத பிறவி (218)

அவமுஞ் சிவமு மறியா ரறியார்
அவமுஞ் சிவமு மறிவா ரறிவார்
அவமுஞ் சிவமு மருளா லறிந்தால்
அவமுஞ் சிவமு மவனரு ளாமே. 2340

இ - ள் ; அவப்பேற்றிற்குரிய செயலையும் சிவப் பேற்றிற்குரிய செயலையும் அறிபவர்களே அறிந்தவர் கள். அவற்றை அறியாரே அறியாராவர். அவ்விரண்டும் எய்துவது அருளால் என்பது அறிந்தால், இரண்டுமே அவரருளால் ஆனவையாம் என்றவாறு.

பிறப்பும் வீடும் திருவருளால் வந்தன என உணர்ந்தால் எல்லாமே அவனருளாம் என்பது கருத்து.

அவம் - வீண். பிறப்பு, தம்குறிக்கோள் தவறிய போது வீணாகின்றது. குறிக்கோளை நிறைவேற்றிய போது பயனுடையதாகிறது. நாம் பிறவி எடுத்ததின் பயன் கடவுளை வணங்கி முத்தியின்பம் பெறும் பொருட்டேயாம். அங்ஙனமாகப் பொறிவிருந்து தேடிப் புலன் நிறைவே செய்வோமாயின் எடுத்த பிறவி வீண்தானே ! இவற்றை விளக்கும் சாதனங் கள் " பேசாத நாளெல்லாம் பிறவாநாளே ! மனித்தப் பிறவியும் வேண்டுவதே யிம்மாநிலத்தே " என்பன,

அவம் - குறிக்கோள் நிறைவேறாத பிறவிக்கு ஏதுவாய பசுபாச வினைகள். சிவம்-சிவப்பேற்றிற்குச் சாதனமான சரியையாதி நான்கு பதிகன்மங்கள். இவற் றின் வேறுபாடும் பயனும் அறியார் அறியாரே ; அறிவாரே அறிவர் என்பதாம்.

அவற்றை அறிதற்குரிய சாதனம் திருவருள் ஒன்றே என்பார் அருளால் அறிந்தால் என்றார்.

அவம் எனப்படும், பிறப்பும், அதற்கு ஏதுவாகிய தத்துவங்களும் [illegible] மலவலி [illegible]

தற்கும், பிறவி அறுத்தற்கும் துணையாதலின் திருவரு ளாம் எனப்பெற்றது. (219)

அருளான சத்தி யனல்வெம்மை போலப்
பொருள்வ னுகத் தான்போதம் புணரும்
இருளொளி யாய்மீண்டு மும்மல மாகுந்
திருவரு ளானந்தி செம்பொரு ளாமே. 2341

இம் – எனின், அருட்சத்தியின் இயல்பு உணர்த் துதல் நுதலிற்று.

இ – ள்; திருவருட்சத்தி தீயும் அதன் சூடும் போல அச்சிவம் பொருளாகத் தான் அதன் தன்மை யாகக் கூடியிருக்கும். அத்திருவருட்சத்தி ஆன்மா வின்பால் சாரும்போது இருளாயும், ஒளியாயும், மீண்டும் மும்மலங்களாயும் விளங்கும். பின்னர்த் திருவருளால் தன் தன்மைகெட்டுச் சிவமேயாய்த் திகழும் என்றவாறு.

திருவருட்சத்தி திரோதாயியாய், மும்மலமாய், தன்மைகெட்டுச் சிவமாய்த் திகழும் என்பதாம்.

அருளானசத்தி – அருளாகிய சத்தி. சிவம் – அனல். சத்தி – அதன்வெம்மை. தான்போதம் புணர்தலாவது – பொருட்டன்மையான அறிவாய்ச் சிவத்தோடு கூடியிருத்தல்.

சத்தி யனலின்கண் வெம்மைபோல, அவன் பொருளாகத் தான்போதமாகப் புணரும் என வேண்டியன விரித்துப் பொருள்கொள்க.

இருள் ஒளியாய் - திரோதானமலம் முன்னர் இருள்போல மறைப்பாற்றலாகிப் பின் ஞானமான அருளாற்றலாகி ஆன்மாவிற்கு உதவும் என்பார் இங்ஙனம் கூறினர்.

மும்மலமாகும் - கன்மம், மாயை, மாமாயை என மூன்று மலமாகும் என்றது திருவருட்சத்தி யியக்க இயங்கும் என்ற அளவே உரைதருவது. இங்ஙனம் ஆன்ம அறிவை மயக்கிப் போகத்தி லாழ்த்த உதவிய ஆகந்துக மலங்களாகிய மூன்றும் திருவருளாற்கெட, ஆன்மா சிவமாகிப் பிரகாசிக்கும் என்றவாறும்

நந்தி என்பதனை நந்த எனத்திரிக்க. ஆம் என்ப தற்கு இயைய எழுவாய் வருவித்து முடிக்கப் பட்டது.

ஆதித்தன் றோன்ற வரும்பது மாதிகள்
பேதித்த தவ்வினை யாற்செயல் சேதிப்ப
ஆதித்தன் தன்கதி ராலவை சேட்டிப்பப்
பேதித்துப் பேதியா வாறருட் பேதமே. 2342

இ - ன்னின், உலகம் தோன்றி நின்றழிவதும் அருள் வேறுபாட்டான் என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: சூரியன் உதிக்க நீரில்வரும் தாமரை முதலிய பூக்கள் ஒன்றுபோல் அனைத்தும் அலராமல் மாறுபட்டன. அந்தந்தப் பூக்கள் செய்தவினையால் வந்த கன்மம் சேதிப்ப ஆனதன்று. சூரியன்றன்

கிரணத்தாலே அக்கன்மங்கள் சேட்டிப்பன, ஆயி னும் வேறுபடுத்தியும் வேறுபடாதவாறு செய்வது திருவருளின் வேறுபாடேயாம் என்றவாறு.

சூரியன் உதிக்க நீர்ப்பூக்கள் சில மலர்வன; சில குவிவன; சிலபோதாவன; சில அரும்புவன; இங் ஙனமாதற்குக் காரணம் சூரியன் கதிரினல் மட்டு மன்று. அவ்வப்பூக்களின் பரிபாகத்திலும் உள்ளன. அது போல மூவகை யுலகமும் தோன்றி நின்றழி கின்றன. இங்ஙனம் வேறுபடற்குரிய காரணம் உலகிடை உண்டாயினும் உலகைத் தொழிற்படுத்து கின்ற திருவருளிலும் வேறுபாடுண்டென்றவாறு.

ஆதித்தன் தோன்றவரும் பதுமாதிகள் பேதித்து அவ்வினையால் அங்ஙனம் செயல்சேதிப்ப ஆதித்தன் தன் கதிரால் அவை சேட்டிப்ப பேதித்துப் பேதியா வாறு (இருத்தல்) அருட்பேதமே எனக்கூட்டுக.

பதுமாதிகள் – தாமரை முதலிய நீர்ப்பூக்கள். அவ்வினையாற் பேதித்தது – அவ்வப்பூக்களின் வினை விசேடத்தால் அலர்வனவும், குவிவனவும், உதிர் வனவும், உலர்வனவுமாக வேறுபடுத்தியதாம். இவ் வண்ணம் செய்கை வேறுபடுவன ஆதித்தன் கதிரால் அவை சேட்டிப்பனவாம். சேட்டித்தல் - தொழிற் படுதல் ; அது போலவே உலகம் பேதித்துப் பேதியா வாறு அருட் பேதமேயாம் என்க. (221)

**பேத மபேதம் பிறழ்பேதா பேதமும்**
**போதம் புணர்போதம் போதமு நாதமு**
**நாத முடனாத நாதாதி நாதமு**
**மாத னருளி னருளிச்சை யாமே. 2343**

இ-ம் — எனின், ஆன்மாக்களுடையும் அறிவு வேறுபாடு அனைத்திற்கும் அருளின் இச்சையே காரணம் எனவுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் ; உடலுயிர்களுள் ஏற்படும் வேற்றுமையும், ஒற்றுமையும், இவ்விருதன்மையும், இயற்கை அறிவும், கல்வியறிவும், அதனடியான கலையாதி தத்துவ ஞானமும், அதற்கும் அடியான ஒலியும், அதற்கு மூலமான பரநாதமுமாகிய அனைத்தும் இறைவன் கருணையால் ஆம் திருவருளின் இச்சை வழியே ஆவதாம் என்றவாறு.

உடல் உயிர் வேறுபாடு ஒற்றுமை, இருமை, அறிவுவகைகள். ஒலிவகைகள். அதற்கு மூலமான நாதம், பரநாதம் அனைத்திற்கும் திருவருளிச்சையே காரணம் என்பதாம்.

பேதம் — வேறுபாடு. உடலுக்கும் உயிர்க்கும் உள்ள வேறுபாடு ; சடமும் சித்துமாதல் போல்வன.

அபேதம் — நான் என ஒற்றுமை நயத்தான் ஒன்றெனு அறியப்பெறுதல்.

பேதாபேதம் — இருவகையானும் உணரப்படுதல்.

போதம் — ஆன்மாக்களுக்கு பண்டை நற்றவத்தால் விளைந்த இயற்கையான அறிவு.

புணர்போதம் — கல்வி முதலிய சமற்கார விசேடங்களாற் புணர்ந்த அறிவு.

போதம் — செயற்கையும் இயற்கையுமான அறிவோடு உலகை நோக்கும்போது தாம் அனுபவஞானமும், அவற்றிற்கு அடியாகக் கலை என்னும் தத்துவந் தரும் சிறிது விளக்கமும்.

நாதம் — அவ்வறிவுக்கு அடியான ஓசை வடிவான அறிவு.

நாதமுடன் நாதநாதாதிநாதம் — அவ்வெழுத் தொலியாகிய நாதத்துடன் அதற்கு மூலமான பரநாதமும் அதற்கும் அடியான ஓசை ஒலியெலா மான பொருளும் என்க.

ஆதன் அருளின் — ஆதனுகிய ஆன்மாவிற்கு அருள் செய்வதற்காக என நான்கனுருபு விரித்துப் பொருள் கொள்க. அருளிச்சை — திருவருளின் திருவுள்ளக்குறிப்பு. (222)

**மேவிய பொய்க்கரி யாட்டும் வினையெனப்**
**பாவிய பூதங்கொண் டாட்டிப் படைப்பாதி**
**பூவியல் கூட்டத்தற் போதம் புரிந்தருள்**
**ஆவியை நாட்டு மரனரு ளாமே. 2344**

இ — எனின், உடலில் உயிரைப் புகுத்து ஆட்டுவிப்பது அருளாம் எனல் நுதலிற்று.

இ — ள்: பொருந்திய பொய்யானையை ஒரு மனிதன் உட்புகுந்து நின்று ஆட்டும் தொழில்போல, பரந்த பூதங்களைக்கொண்டு ஆடச்செய்து, படைத்தல் முதலான தொழில்களால் பூமி முதலியவற்றிற் கூடச்செய்து அக்கூட்டத்தால் ஞானம் வரப்பண்ணுதல், உயிரை நிலைபெறச் செய்யும் சிவனருட் குறிப்பாம், என்றவாறு.

பொய்யானையில் மனிதன் புகுந்து நின்றாட்டுவது போலத் திருவருள் பௌதிகமான உடலில் உயிரைப் புகுத்தி ஆட்டுவித்து ஞானம் வரப்பண்ணுகிறது என்பதாம்.

பொய்க்கரி – பொய்யான யானை. பொய்க்கால் குதிரைபோல, யானையின் உருவத்தை வைக்கோலாலும் துணியாலும் புனைந்து அதனுள் இருமனிதர் புகுந்து நின்று ஆட்டுவிப்பார்கள். அது ஆடும். அதுபோல பௌதிக உடலில் உயிர் புகுந்து நிற்கத் திருவருள் பூமியில் படைத்தலாதிய தொழில்களைச் செய்து ஆட்டுவிக்கும். அது உயிர்கட்கு ஞானம் வரச் செய்வதற்காம் என்பது.

மேவிய – விரும்பிய, அல்லது பொருந்திய. கரி – யானை. பொய்க்கரி – பொய்யானை. பாவிய – பரந்த. பூ இயல் கூட்டத்தால் – பூமியின்கண் இயலுகின்ற சேர்க்கையால். போதம் – அறிவு. அது தத்துவ தரிசனம். ஆன்மதரிசனம், சிவஞானம் என்பன. புரிந்தருள் என்பது முதனிலைத் தொழிற்பெயராய் புரிந்தருளல் என்னும் பொருளில் வந்தது. (223)

ஆரு றகன்று தனையறிந் தானவன்
நீருசி யாவினு மியாவுந் தனிலெய்த
வேருய் வெளிபுக்கு வீடுற்று னம்மரு
டேருத் தெளிவுற்றுத் தீண்டச் சிவமாமே. 2345

இம் – எனின், சிவமாம் தன்மை யெய்தினோர் சிறப்பியல்புகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: முப்பத்தாறு தத்துவங்களையும் நாமல்ல என்று கழித்து, உயிராகிய தன்னை இறையடிமை என உணர்ந்தவனாகிய அவனே, எல்லாப் பொருள்களிலும் தான்ஒடுங்கி. எல்லாப்பொருள்களும் தம்மில் ஒடுங்க, தான் அவற்றின் வேறாய். அருள்வெளியிற் கலந்து, வீடுபெற்றவனாவன். அவன் நம் திருவருளை யுணர்ந்து, தெளிந்து சிவகுருநாதன் எழுந்தருளித் தம்மைத் தீண்டச் சிவமாவான் என்றவாறு.

தத்துவசுத்தியும், ஆன்மதரிசனமும், ஆன்ம சுத்தியும் பெற்று யாம் சிவனடிமை என்ற உறுதி பிறந்து, எல்லாந் தன்னிலாக – தான் எல்லாவற்றினு மாகக் கலந்தும் வேறாயும், அருளிலே கலந்து வீடுற்று திருவருளையுணர்ந்து தீட்சை பெற்றுச் சிவமாக விளங்குவன் முமுட்சு என்றவாறும்.

ஆறாறு அகலல் – தத்துவ ரூபமுதல் தத்துவ சுத்தியீறான மூன்றும். தனையறிந்து – ஆன்மரூபம் முதல் மூன்றும். யாவினும் ஈறாகி என்பது முதல் வீடுற்றான் என்பது வரையுள்ளன சிவரூபம் சிவதரிசனம் சிவயோகம் சிவபோகம் என்பன.

தேரு – தேறி; உறுதிகொண்டு என்பதாம். தீண்ட – சிவகுருநாதன் தீண்ட. தீட்சையில் குருநாதன் அஸ்த மஸ்தக சம்யோகமும், திருவடி தீட்சையும் பண்ணித் தீண்டுவனாதலின் அவற்றைக் குறித்தவாறாம்.

இங்ஙனம் குருசெய்த செயலின் பயன் ஆன்மா சிவமாதலாம். (224)

**தீண்டற் கரிய திருவடி நேயத்தை**
**மீண்டுற் றருளால் விதிவழி யேசென்று**
**தூண்டிச் சிவஞான மாவினைத் தானேறித்**
**தாண்டிச் சிவனுடன் சாரலு மாமே.** 2346

இம் – எனின், திருவடிப்பற்றை முதலாகக் கொண்டு முத்தியெய்தும் சோபான முறையைச் சொல்லுதல் நுதலிற்று.

இ – ள் : திருவருளானன்றித் தற்போதத்தால் அணுகவுமுடியாத திருவடிப்பற்றினை மிகவும் பொருந்தி, குருநாதன் குறிப்பின் வழியே சென்று சிவஞானத்திற்கு வாயிலான சிவயோகக் குதிரையை ஏறி, அதனைத் தூண்டிச்செலுத்தி, அதனையுங்கடந்து, சிவனோடு சார்தலுமாம் என்றவாறு.

திருவடிப்பற்றுக் கொண்டு குருநாதர் சொற்படி நின்று, சிவபோகத்தைச் செய்து சிவஞானத்தைச் சார்தலுமாம் என்பது கருத்து.

திருவடி – மாயாகாரியமல்லாதது அருளே வடிவானது. ஆதலால் அதனை மாயாகாரியமான மனம்புத்தி முதலியன உடையார் எவ்வாற்றானும் அணுகவும் இயலாது. ஆதலின் தீண்டற்கரியதிருவடி என்றார். நேயம் – அன்பு. மா – குதிரை. தாண்டி – சிவயோக நெறியைக் கடந்து. சாரலும் என்பதில் உம்மை அசை. (225)

**சார்ந்தவர் சாரணர் சித்தர் சமாதியர்**
**சார்ந்தவர் மெய்ஞ்ஞான தத்துவ சாத்தியர்**
**சார்ந்தவர் நேயந் தலைப்பட்ட வானந்தர்**
**சார்ந்தவர் சத்த வருட்டன்மை யாரே.** 2347

இ-ம் - எனின், நால்வகைச் சாதனங்களையும் சாதித்தோரியல்பும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: திருவடியே நமக்கு உறுதுணையாவது என்று சார்ந்தவர்களாகிய சரியாவான்களாகிய சாரணர்களும், நீக்கமற நினைப்பவர்களாய யோக நெறியில் நிற்கும் சித்தர்களும், பிறிவற்று நினையும் யோகநெறி நிற்போராகிய சமாதியர்களும், உண்மை ஞானத்தைப் பெற்றவர்களாக விளங்கும் சாதனங் கைவரப்பெற்ற சாத்தியர்களும், ஆகிய இந்நால்வரும் திருவடிச்சார்பு பெற்றோராவர். இவர்களே இறைவனோடு கணமும் நீங்காத அன்பிற்றலைப்பட்டவர்; ஆனந்தமுடையவராவர்; இவர்களே நிலையான அருட்டன்மையராவர் என்றவாறு.

கருத்து வெளிப்படை.

சாரணர் - சரியையின் நிற்போர். சித்தர் - கிரியை நெறிநிற்போர். சமாதியர் - யோகநெறி நிற்போர். சாத்தியர் - ஞானநெறி நின்று உண்மை சாதித்துக் கொண்டவர்கள். இவர்களில் இறுதியினின்ற சாத்தியரே இறைவனிடம் என்றும் நீங்காத அன்பால் சிறந்த ஆனந்தானுபவ முடையோர், நிலையான அருளையும் பெற்றோர் என்பதாம். சத்த அருள் - நிலையுதலையுடைய அருள் என்க. அருள் சிவமாதலின் அதன் தன்மையை நுகர்வோர் என்றார். (226)

**தானென் றவனென் றிரண்டென்பர் தத்துவந்**
**தானென் றவனென் றிரண்டற்ற தன்மையைத்**
**தானென் றிரண்டுன்னார் கேவலத் தானவர்**
**தானின்றித் தானாகத் தத்துவ சுத்தமே. 2348**

இம் – எனின், அருட்கேவலத்தினின்றார். அருட் சுத்தம் எய்தும் உபாயப் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஆன்மாவாகிய தானென்றும், சிவமாகிய அவனென்றும் மெய்ப்பொருள் இரண்டென்பர் ; தானும் அவனும் ஆன இரண்டுபொருள் அற்ற ஒன்றான தன்மையைத் தானென்று வேறுபட எண்ணமாட்டார் அருட்கேவலாவத்தையில்நிற்போர். ஆன்மாவாகிய தானென்பதொரு பொருளில்லையாகிச் சிவமாகிய தானேயாக அங்நிலை தத்துவசுத்த நிலையாம் என்றவாறு.

மெய்ப்பொருள் இரண்டு ; உயிரும் இறையும் என அங்ஙனம் இரண்டு தன்மையற்ற தன்மையே தான் என்று எண்ணாது தானும் சிவம் என்றே எண்ணுவார் அருட்கேவலத்தர். தான் என்ற சிந்தனை அறவேயின்றிச் சிவமாகவே விளங்குபவர் அருட்சுத்தம் பெற்ற உயர்ந்தோராவர் என்பது கருத்து

தத்துவம் – மெய்ப்பொருள் ; இரண்டாக எண்ணுமை மட்டுமன்று, இரண்டற்ற தன்மையுந்தானே அதாவது ஆன்மாவே என்று எண்ணுமையும் அருட்கேவலம் என விளக்கந் தந்தவாறு. ஆதனை,

“தானவனென் றெண்ணினர்க்கு
நாடுபஉளம உண்டாதல்
தானெனவொன் றின்றியே
தானதுவாய் – நான்எனவொன்(று)
இல்லென்று தானே
யெனுமவரைத் தன்னடிவைத்(து)
இல்லலன்று தானு மிறை.”

என்னும் சிவஞானயோக வெண்பாவும்

தூல அறிவாகிய 'உயிரும், சூக்கும அறிவாகிய சிவமும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலை பிரித்தறிய வாராமையின் உயிராய்க்காணுங்காற் சிவமில்லை; சிவமாய்க்காணுங்கால் உயிரில்லை; இரண்டுமாய்க் காணப்புகினும் தற்போத முற்பட்டு நிற்றலின் சிவம் ஐயக்காட்சிக்குப் புலனாய் நிற்பதல்லது தெளிவுக் காட்சிக்குப் புலனாய் நிற்பதில்லை என்னும் மாபாடிய விளக்கமும் வலியுறுத்தும்.

தானின்றி – அறிவோனாகிய தான் என்ற உணர்வு சிறிதுமில்லாமல் அறியப்படும் பொருளாகிய சிவம் ஒன்றே விளங்க இருப்பவர்கள் அருட்சுத்தராவார் என்பது. (227)

தன்னினிற் றன்னை யறியுந் தலைமகன்
தன்னினிற் றன்னை யறியத் தலைப்படும்
தன்னினிற் றன்னைச் சார்கில னாகில்
தன்னினிற் றன்னையுஞ் சார்தற் கரியவே. 2349

இம் – எனின், தன்னில் தன்னையறிதலே சிறந்தது எனவுணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: உயிராகிய தன்னில் சிவம்கலந்து விளங்குதலை அதனையறியுந் தலையாய ஞானமுடைய தலைவன் தன்னில் தன் தலைவனையறிய முற்படும். அங்ஙனம் தன்னில் தன் தலைவனைச் சார்கிலனாயின் அத்தலைவனும் அவனால் அடைதற்கரியனாவன் என்றவாறு.

ஆன்மா பரிபாகமுற்றுத் தன்னிடம் தலைவனையறிய முற்படுக. அங்ஙனம் அறியாதாயின் அத்தலைவனும் அவனைக் காவான் என்பது கருத்து.

தன் + ஐ – தன் தலைவன். இந்தக் கருத்தும் சொல்லும் அப்படியே,

*" தன்னில் தன்னை யறியுந் தலைமகன்*
*தன்னில் தன்னை யறியத் தலைப்படும்*
*தன்னில் தன்னை அறிவிலன் ஆயிடின்*
*தன்னில் தன்னையுஞ் சார்தற் கரியனே."*

என அப்பர் வாக்கிலும் வருதல் காண்க.

தன்னில் என்பதற்குத் தன்னுடலில் என்பாரும் உளர். உடலுள் இறைவன் இருக்கிறன் என்பது ஊனுடம்பாலயம் என்ற தொடராற்பெறப் படுமாயினும், ஒளியுள் ஒளி தங்குமேயன்றி, இருளில் தங்காத வாறுபோல, இயல்பாகவே சித்தானசிவம் உணர்த்த உணருஞ் சித்தொடு கூடியிருத்தலே இயைபுடைத் தாகலின் தன்னில் என்பதற்கு உயிருள் என்றே உரை கொள்க. உயிருக்குயிராக இறைவன் விளங்குதலை விளக்கியவாறும். உயிர் விளங்குதற்கு உடலிட மாகலின் சீவன்சிவலிங்கமானதற்கியைய ஊனுடம்பு ஆலயம் என்றதாகக் கொள்க. (228)

**அறியகி லேனென் றாற்றுதே நீயு**
**நெறிவழி யேசென்று நேர்பட்ட பின்னை**
**இருசுட ராகி யியற்றவல் லானும்**
**ஒருசுட ராவந்துன் னுள்ளத்துள் ளாமே.** 2350

இம் – எனின், அறிய ஒண்ணுத தென்று கவலற்க எனத்தேற்றி யறியு முபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: முற்கூறிய வண்ணம் திருவருளால் அறிய கில்லேன் என்று நீயும் கவலற்க; சிவத்தைச் சென்று சேர்தற்குரிய சரியையாதி நான்குநெறிகளின் வழியே சென்று சேர்ந்த பின்பு, சிவனும் சீவனு மாகிய இரண்டு அறிவுப் பொருளாய் வந்து ஆட் கொள்ளவல்ல சிவனும் ஒப்பற்ற ஞானச்சுடராக எழுந்தருளி என் உள்ளத்துளாவன் என்றவாறு.

சரியையாதி நெறியின் நின்றால் சிவன் சீவன் என்ற வேறுபாடின்றிச் சிவனே உள்ளத்தில் எழுந் தருளுவன் என்பது கருத்து.

என்னில் அவனை யறியகில்லேன் அதற்குரிய திருவருளைப் பெருமையால் என்று நீ கவன்று அரற்றதே. என்று தேறுதல் கூறுவார் இங்ஙனம் கூறினர்.

பின்னர் அறிதற்கு உபாயம் நெறிவழியே செல்லுதல் ஒன்றே என்றார். நெறி – சரியை கிரியை யோகம் ஞானம் என்பன. அவற்றின் வழியொழுகி ஞல் அவனைச் சந்திக்கலாம் என்பார் நெறிவழியே சென்று நேர்பட்டபின்னை என்றார். நேர்படுதல் – எதிர்ப்படுதல்.

இருசுடர் ஆகி – இரண்டு ஒளிபடைத்த பொரு ளாகி. ஒரொளி – பேரொளி, மற்றது ஒளியினிட மிருந்து ஒளியேற்ற சிற்றொளி. முன்னது கதிரோன்; பின்னது மதி. அதுபோல முன்னது சிவமாகிய பிரமம் மற்றது சீவன். இறைவனே சிவனும் கலப் பாற் சீவனுமாகி இருக்கின்றான் என்றவாறும். ஒரு சுடராக வந்து – அத்துவிதத்தால் சிவமேயாக வந்து.

உன் உள்ளத்துள் ஆமே என்க. என் உள்ளத்துள் ஆமே என்று பாடங்கொள்ளின் இருசுடராகி நின்றான், ஒரு சுடராகி என்னுள்ளத்துள் ஆம் ஆதலான் நீயும் அரற்றாதே நெறிவழியே சென்று நேர்பட்டபின்னை சொல் என ஒரு சொல் வருவித்து முடிக்க.

உள்ளத்துள் ஆமே என்பதற்குப்பதில் நெல்லை ஏடு ஒன்றில் உள்ளத்துள்ளானே என்ற பாடமும் உள்ளது. இப்பாடம் ஒன்றும் வருவிக்க வேண்டாது நேரிய முடிபினதாதல் காண்க. (229)

**மண்ணொன்று தான்பல நற்கல னுயிடும**
**உண்ணின்ற யோனிகட் கெல்லா மொருவனே**
**கண்ணொன்று தான்பல காணுந் தனைக்காணா**
**அண்ணலு மவ்வண்ண மாகிநின் றானே. 2351**

இம் — எனின், அண்ணல் ஒருவனே கலப்பால் அனைத்துமாகி றான் என்பதை உவமவாயிலாக விளக்குதல் நுதலிற்று.

இ — ள்: மண்ணொன்றே பல கலன்கள் ஆகின்றது. அதுபோல இவ்வுலகில்நின்ற எண்பத்து நான்கு நூறாயிரயோனிபேதங்கட்கு எல்லாவற்றினும் ஒருவனே ஆகியுள்ளான். கண் ஒன்றுதான் ஆயினும் அது பல பொருள்களைக்காணும். ஆனல் காணுங் கண்ணைப் பொருள்கள்காணா. அதுபோல அண்ணலும் அங்ஙனம் எல்லாவற்றையுங் காண்பன் என்றவாறு.

இறைவன் ஒருவனே அனைத்துமாய், அனைத்தின் அறிவுமாய் இருப்பன் என்பதாம். குடம் சட்டி

மட்க்கு முதலியவை வடிவால் வேறுயின ஆயினும் முதற்காரணமாகிய மண் ஒன்றே. அதுபோல மரம் முதல் தேவரீறான யோனிவகைகள் பலவாயினும் கலந்துள்ள சிவம் ஒன்றே

கண் பலவற்றையுங்காணும்; கடவுளும் எல்லா வற்றையும் காண்பர். பொருள்கள் காணுங்கண்ணைக் காணா; கடவுளை உயிர்கள் உணரா என்பது பின் இண்டடிகளானும் விளக்கப்பெறுவது.

இம்மந்திரம் சில பிரதிகளில் இல்லை (230)

ஒம்புகின் றனுல கேழையு முண்ணின்று
கூம்புகின் றார்குணத் தின்னெடுங் கூறுவர்
தேம்புகின் றார்சிவஞ் சிந்தைசெய் யாதவர்
கூம்பகில் லாவந்து கொள்ளலு மாமே. 2352

இம் – எனின், மனங்குவிவாரே இறைவனைக் கூடுவர் என உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: இறைவன் இந்த ஏழுலகத்தையும் அதனுள் விரவிநின்றே காக்கின்றான் : இவ்வரிய பண்பை, மனங்குவியும் மெய்ஞ்ஞானியர் அச்சிவனை அவனுடைய சிறப்பியல்புகளோடும் பாராட்டுவர் ; சிவத்தைத் தியானியாத பாமரர்கள் வருந்துவார்கள் ; மனங்குவியாத அவர்கள் வந்து சிவத்தையடைதலும் ஆமோ ? ஆகாது என்றவாறு.

மனங்குவிவார் சிவத்தைக்கூடுவர் அல்லார்கூட மாட்டார் என்பதாம்.

உள்நின்று – உலகில் கலந்து நின்று. ஓம்புதலாவது உலகினரைப் போகங்களை நுகர்வித்துப் பரிபாலித்தல்.

கூம்புகின் றார்–மனம்பொறிவழிச் சென்று புலன்களைப்பற்றி அலையாது திருவடிச் சார்பு ஒன்றிலே இறுகப் பற்றி நின்று குவிதலாம். ஆகவே ஒன்றிய சிந்தையர் என்றதாம்.

குணத்திடெுடும் – இறைவன் குணங்களாய தன் வயத்தனுதல் முதலிய எட்டுடனும், அக்குணங்களையும் குணிப்பொருளாய சிவத்தையும் கண்டு அனுபவித்து, அதனையே சிரிப்பார் களிப்பார், தேனிப்பார் திரண்டு திரண்டு உன்திருவார்த்தை விரிப்பார் என்ற நிலையில் கூறுகின்றவர்கள் என்பதாம்.

தேம்புதல் - தேம்பியழுதல். கூம்பகில்லார் என்பதற்கு உள்ளத் தளர்ச்சி யில்லாதவர்கள் என உரைப்பாரும் உளர். அங்ஙனம் தளராதவர்கள் சிவன் திருவடியை வந்து கூடலுமாம் என உடன்பாடாக்கி யுரைப்பார். செய்யுளமைதி அங்ஙனம் இன்மையும் சிந்தித்தற் குரியது. (231)

குறியறி யார்கள் குறிகாண மாட்டார்
குறியறி யார்கடங் கூடல் பெரிது
குறியறி யாவகை கூடுமின் கூடி
அறிவறி யாவிருந் தன்னமு மாமே. 2353

இம் – எனின், தன்னையும் தலைவனையும் அறிவோரே சிவப்பேறெய்துவர் எனவுணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: தன்னைத் தன்னுள் குறித்துணரமாட்டாதவர்கள் தாம் அடையக்கடவதாகிய குறிக்கோளாகிய சிவத்தையும் அறியமாட்டார்கள்; அங்ஙனம்

இருவகைக் குறிகளை யுணராதார் குடம் போல் வதாகிய உடம்பொடுகூடிப் பிறத்தல் பலவாம்; ஆதலால் சிவத்தொடு குறித்துணர முடியாத வகையில் அத்துவிதமாகக் கூடுங்கள்; அங்ஙனம்கூடி அறிவால் அறிவு வடிவான சிவத்தையறிய இயலாமல் அதுவதுவாகவே இருந்து ஹம்ஸம் ஆகுங்கள் என்றவாறு.

தற்போதம் இழந்து சிவபோதமேயாகு '(நானவன்)' ஹம்ஸ: என ஆகுங்கள் என்பதாம்.

குறி – குறித்துணரும் உயிர். குறி – குறித்து. இலக்காக எண்ணி உணரப்படும் சிவம். இரண்டும் முதனிலைத் தொழிலாகு பெயர்கள். முன்னது செய்வினை; பின்னது செயப்பாட்டு வினைவாய்ப் பாடுகளான் வந்த தொழிற்பெயர்கள்.

மூன்றுவதான குறியறியார்கள் என்பது குறிப் பதும் குறிக்கப்படுவதும் ஆய சீவ சிவன்களை அறியா தவர்கள் என்பதாம்.

குறி – அடையாளம். கூடினால் இது சீவன் இது சிவம் எனக்கூடிய அடையாளம் அறியவொண்ணாத வண்ணம் கூடுங்கள். அதாவது நீரும் நீரும் போல – விளக்கொளியும் கதிரொளியும்போல அத்துவிதமாகக் கூடுங்கள்.

அறிவு அறியா இருந்து – அறிவு கருவியாகக் கொண்டு அறிய இயலாவண்ணம் இருந்து. அஃதா வது அறிவதும் அறியப்படுவதுமாய பொருள்களின்

அபேதக்கலப்பில் " நானிவளாம் பகுதிப்பொற்பு ஆர் அறிவார் " என்ற வண்ணம் கலத்தலால் இங்ஙனம் கூறினர்.

அன்னம் – ஹம்ச மந்திரம். அதன்பொருள் ஹம்– நான். ஸ: – அவன். அதாவது நான் அவன் : ஆன்மா சிவன் என ஆகுங்கள். ஆம் ஆகும் என்பதன் செய்யும் என்னும் முற்று உயிர்மெய் ஏகிவந்தது. ஆகும் முன்னிலை ஏவல் வினைமுற்று. (232)

ஊனோ வுயிரோ வுறுகின்ற தேதின்பம்
வானோர் தலைவி மயக்கத் துறநிற்க
தானோ பெரிதறி வோமென்னு மானுடர்
தானேய் பிறப்போ டிறப்பறி யாரே. 2354

இம் – எனின், அருள்வழி நிற்க இன்பு எய்தலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் ; இன்பமடைவது உடலோ ? உயிரோ ? இவற்றுள் எது ? தேவதேவன் தலைவியாகிய பராசத்தியின் கலப்பால் மயங்கி அம்மயக்கத்து நிலைபெறுக. அங்ஙனன்றித் தானோ மிகத் தெரிந்திருக்கிறோம் என்ற மக்கள், தாம் எய்தும் பிறப்பிறப்புகளின் தொகையை அறியார்கள் அல்லவா என்றவாறு.

தாமே அறிகிறோம் என்னும் தருக்குளார் யார் அவர் தாம் எய்தும் பிறப்பிறப்பின் எண்ணிக்கைகளைத் தாம் அறியார் என்பது கருத்து.

பராசத்தியின் கருணையிற் கலந்தபோது இன்பம் அடைவது ஊனோ உயிரோ எதுவென்று சொல்ல

இயலாது. எவனொருவன் தானறிவேன் என்கின்றானோ அவன் கருணையிற் பிரிந்து பிறக்கின்றான் இறக்கிறான். அவனடையும் பிறப்பிறப்புக்களுக்கு எல்லையேயில்லை என்பதாம். (233)

## 14. அறிவுதயம்

நின்மல துரியத்தில் பராசத்தியோடு கூடி ஆன்மா இன்பமயமாக இருக்கின்ற வேளையிலே சிவத்தை உள்ளவாறு உணரும்; ஞானம் உதிக்கும். அதற்கு ஞானோதயம் எனப் பெயர். ஞானோதயம் எனினும் அறிவின் தோற்றம் எனினும் ஒக்கும். இதுவே அனுபவ நிலைகளுக்கு அடியாதலின் அவத்தாபேதங்களின்பின் வைக்கப்பெற்றது. இதனைப்பதினான்கு கலிவிருத்தங்களினால் கூறப்போந்த ஆசிரியர் முதற்கண் தன்னை அறிதலே சிறந்த நெறியென்பதை உணர்த்துகின்றார்.

தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமற் றானே கெடுகின்றான்
தன்னை யறியு மறிவை யறிந்தபின்
தன்னையே யர்ச்சிக்கத் தானிருந் தானே. 2355

இம் – எனின், தன்னை அறிதலால் வரும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : தன்னை அறியத் தனக்கொரு கேடும் இல்லையாம்; அங்ஙனமிருந்தும் ஆன்மா தன்னை அறியாமல் தானே கெடுகின்றான்; தன்னை அறியும் உண்மை ஞானத்தைப் பெற்றபின் தன்னையே பிறரருச்சிக்கத் தான் சிவபரம் பொருளாக இருந்தான் என்றவாறு.

தன்னை அறிந்தவன் சிவமாகப் பிறர்போற்ற விளங்குவன் என்பதாம்.

தன்னை அறிதலாவது தான் ஒரு உணர்த்த உணரும் சித்துப்பொருள்; உண்ணின்று உணர்த்தும் பரம்பொருளை உள்ளவாறு உணர்ந்து உய்தலே என்கடமை. இந்த உடல், கருவி, கரணங்கள், உறுபோகம் இவற்றினுல் மயங்குதல் முறைமையு மன்று. கடமையுமன்று; ஆகவே சித்தாகிய யான் சத்சித்தாகிய பரசிவத்தைக்கூடலே முறையென்று உணர்தல்.

இங்ஙனம் அறிந்து எல்லாம் சிவன்செயல் என்று இருந்தானுயின் வினைகள் ஏரு; ஆதலின். அவனுக்கு வருவதொரு கேடும் இல்லையாம்.

ஆகவே தன்னை அறியும் அறிவைப் பெற்ருனுயின் தன்னைச் சிவமாக எண்ணி உலகம் போற்ற அவன் இருந்தான் ஆவன் என்பதாம்.

இருப்பான் என்ுது இருந்தான் என்றது துணிவு பற்றிய உரையாம் என்க. (234)

அங்கே யடற்பெருந் தேவரெல் லாந்தொழச்
சிங்கா சனத்தே சிவனிருந் தானென்று
சங்கார் வளையுஞ் சிலம்புஞ் சரேலெனப்
பொங்கார் குழலியும் போற்றியென் ருளே. 2356

இம் – எனின்; ஞானுேதயம் பெற்றவன் சிவனே யாகிச் சத்தியும்போற்ற இருப்பன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : அங்கே வலிமையும் பெருமையும் படைத்த பிரமனுதி தேவரெல்லாம் வணங்கச் சிங்காதனத்திலே சிவபெருமானே எழுந்தருளியிருந் யிருந்தார் என்று சொல்லத் தக்க நிலையில், சங்குகளா னியன்ற ஒலிக்கும் வளையல்களும் காற் சிலம்பும் சரேல் என ஒலிக்க. விளக்கமிக்க கூந்தலே யுடைய பராசத்தியும் போற்றிக் கூறுவாளன்றே என்றவாறு.

ஞானேதயம் பெற்ற உயிர் சிவனேயாய்ச் சிங்கா தனத்தில் பராசத்தியும் போற்ற இருப்பன் என்பதாம்.

அடலால் மிக்க தேவர் – திருமாலும் உருத் திரனும் போன்றவர். பெருமையால் மிக்கவர் அயன் போன்றவர்கள். அவர்களும் தொழத்தகும் தன்மையனுவன் உண்மை ஞானேதயம் பெற்றவன் என்பதாம்.

ஞானேதயம்பெற்ற ஆன்மா சிவனே ஆவன் என்பார் சிங்காதனத்தே சிவனிருந்தான் என்று சத்தியும் போற்றி என்ருள் என்க. (235)

அறிவு வடிவென் றறியாத வென்னை
அறிவு வடிவென் றருள்செய்தா னந்தி
அறிவு வடிவென் றருளா லறிந்தே
அறிவு வடிவென் றறிந்திருந் தேனே. 2357

இம் – எனின், யான் ஞானியென்பதைச் சிவன் உணர்த்த உணர்ந்தேன் என்பது விளக்குதல் நுதலிற்று.

இ – ள் : அறிவு வடிவுடையேன் என்பதையும் அறியாது மயங்கியிருந்த என்னை, என் ஆசானாகிய பரசிவம் என்னை அறிவென்று தெரிவித்தான். அவனருளாலே அடியேன் ஞானசொரூபி என்பதை உணர்ந்தேன்: அறிந்து அறிவே வடிவாய் அதிற் பிரியாது இருந்தேன் என்றவாறு.

(236)

கருத்து வெளி.

அறிவுக் கழிவில்லை யாக்கமு மில்லை
அறிவுக் கறிவல்ல தாதார மில்லை
அறிவே யறிவை யறிகின்ற தென்றிட்டு
அறைகின் றனமறை யீறுக டாமே. 2358

இம் – எனின், அறிவை அறிவது அறிவே என்பது வேதமுடிபு என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : அறிவுக்குத் தோற்றக்கேடுகள் இல்லையாம்; அறிவுக்கு அறிவன்றி ஆதாரம் வேறு இல்லையாம்; அறிவே அறிவை அறிவது என்று வேதாகமங்கள் உரைக்கின்றன.

அறிவு நித்தியமானது: அறிவு அறிவையே சார்ந்திருப்பது; அதனை அறிவதும் அதுவே என்பதாம்.

ஆன்மாவும் அறிவுரு. ஆண்டவனும் அறிவுரு. ஆனால் முன்னது சிற்றறிவு. பின்னது பேரறிவு. ஆகவே அறிவை அறிவே அறிகிறது: அனுபவிக்கிறது; அதற்குத் தோற்றக்கேடுகள் இல்லை என்பது விளக்கப்பெற்றது.

(237)

மன்னிநின் ருரிடை வந்தருண் மாயத்து
முன்னிநின் ருனை மொழிந்தேன் முதல்வனும்
பொன்னின்வந் தானோர் புகழ்திரு மேனியைப்
பின்னிநின் றேனீ பெரியையென் ருனே. 2359

இம் – எனின், அரன் அடியார்கட்கு அருளு கின்ற அருமையை அறிவித்தல் நுதலிற்று.

இ - ள்: தம் திருவடிக்கண் இடைவிடாது பொருந்தி நிற்பாரிடத்து வலியவந்து அருளாலே மாயாகாரியமான உடலிலே பொருந்தி நிற்கின்ற முதல்வனை இடைவிடாது புகழ்ந்தேன். அவனும் பொன்போலும் மேனியனுகி எழுந்தருளினன்; நான் புகழத்தக்க ஒப்பற்ற திருமேனியைக் கலந்து பின்னி நின்றேன்; அவன் என்னை நோக்கி 'நீ பெரியவன் ஐயா' என்ருன் என்றவாறு.

நான் இறைவனைப் புகழ்ந்து அவன் மேனியி லேயே கலந்து நின்றேன். அவன் நீ பெரியை என்று பாராட்டினுன் என்பது கருத்து.

மன்னி நின்ருரிடை – 'மனத்திடை மன்னிய மன்னே' என்ருற்போல இறைவன் தன்னிடத்துப் பொருந்தி இடைவிடாது நின்ருரிடத்து.

வந்து - வலியத் தாமேபுகுந்து 'தாமே புகுந்து தலையளித் தாண்டருளும் வான்வார்கழல்' என மணி வாசகம் கூறுதலும் காண்க.

மாயத்து முன்னி நின்ருன் – மாயாகாரியமான உடலில் தலைப்பட்டு விளங்கினுன். அவன் அங்ஙனம்

விளங்குதற்குக் காரணம் அவனிடம் உள்ள காரணம் வேண்டாத கருணையே என்பார் அருளால் முன்னி நின்றானை என்றார்.

பொன்னின் வந்தான் — பொன்போலும் மேனியனாக வந்தான் என்று அவன் திருமேனி அழகில் ஈடுபட்டுக் கூறியதாம்.

அங்ஙனம் மேனியைக் கண்டதோடு மட்டுமன்றி வியந்தேன் என்பார் புகழ் மேனியை என்றும், கலந்தேன் என்பார் பின்னி நின்றேன் என்றும் கூறினார். அவன் ஆசி 'நீ பெரியை' என்றது. அருவாய் அருளாய் அறியொணாதவனாய் நின்ற என்னை உருக்கொளச்செய்து அவ்வுருவில் ஏகதேசியாய் நீ கலந்தாய் ஆதலால் 'நீ பெரிய ஆள்' என்றான் என்பதாம். (238)

அறிவறி வாக வறிந்தன்பு செய்ம்மின்
அறிவறி வாக வறியுமிவ் வண்ணம்
அறிவறி வாக வணிமாதி சித்தி
அறிவறி வாக வறிந்தனன் நந்தியே, 2360

இம் — ன்னின், ஞானசொரூபியாக இறைவனை அறிந்து அன்புசெய்யும் உயிர்கள் எய்தும் பயனை உணர்த்துதல் நுதலிற்று.

இ — ள் : மக்களே நும்மறிவு பேரறிவாதற்கு இறைவனை அறிந்து அன்புசெய்யுங்கள், அங்ஙனமே அவனும் அறிவன் ; அங்ஙனம் அவன் நும்மறிவைத் தம்மறிவாகக் கருதுவானாயின், அணிமாதி சித்திகள் தாமே ஆம் ; ஆதலால் சிவபெருமான் நும்மறிவைத் தம்மறிவாகத் திருவுளத்து உணர்ந்தனன் என்றவாறு.

ஆன்ம அறிவு சிவனறிவாக வேண்டுமாயின் அதற்குரிய ஒருபாயம் அவனை அறிந்து அன்புசெய் தலே. அன்புசெய்யின் அவன் 'சீவனறிவு எம்மறிவு போலப் பேரறிவாகட்டும்' எனத் திருவுளம் பற்று வான். அங்ஙனம் பற்றின் அணிமாதி சித்திகள் ஆம்; சித்திகள் எய்தியதாயின் அவன் அங்ஙனம் உணர்ந் தனன் என்பதை உணரலாம் என்பது கருத்து. (239)

அறிவறி வென்றங் கரற்று முலகம்
அறிவறி யாமை யாரு மறியார்
அறிவறி யாமை கடந்தறி வானால்
அறிவறி யாமை யழகிய வாறே. 2361

இ-ம் - எனின், அறிவு அறியாமை இரண்டையும் கடந்தநிலை ஞானசொரூபமாகவே விளங்குதலென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்; உலகம் அறிவு அறிவு என்று ஓயாமல் அரற்றுகின்றது. அறிவும் - அதன் எதிர்மறையாகிய அறியாமையுமாகிய இரண்டு தன்மைகள் உயிர் களிடம் உண்மையை யாரும் அறியார்கள். இவ்விரு நிலைகளையும் கடந்து அறிவே வடிவானால், உயிரிட மிருந்த அறிவு அறியாமைகள் மிக அழகின! என்பது வெளிப்படும் என்றவாறு.

உயிர்கள் அறிவும் அறியாமையும் உடையன. இந்நிலைமாறி அறிவே உருவாக அவை ஆமாயின் பண்டைய நிலை நகைக்கு இடமாகத் தோன்றும் என்பதாம்.

அறிதோறும் நாம் காண்பது அறியாமையையே என்பான் வள்ளுவன்; ஆகவே உயிர்கள் அறிகின்றன என்பேமாயின் அத்துணை யறியாமை தம்மிடம் இருந்தமையை இத்துணைநாளும் அவை அறியாமலே இருந்தன என்பதே கருத்து. அந்நிலை மாறி என்றும் அறிவாகத் திகழ்வதே இறையனுபவம். அதனை எய்துமாயின் நாம் நிலைத்த ஞானவடிவினம் என்பதை யுணர்ந்து தம்மிடம் முன்பிருந்த இரண்டுபட்ட நிலையை ஏளனம் செய்யும் என்பதாம். (240)

அறிவறி யாமையை நீவி யவனே
பொறிவா யொழிந்தெங்குத் தானான போது
அறிவா யவற்றினுட் டானு யறிவின்
செறிவாகி நின்றவன் சீவனு மாமே. 2362

இ-ம் - எனின், சீவன் அறிவாய் விளங்கும் உபாயம் இதுவென உணர்த்துதல் நுதலிற்று

இ-ள்: அறிவு அறியாமைகளை ஒழிந்தவனே பொறிகளை வாயிலாகக்கொண்ட புலனுணர்வைப் போக்கி எங்குந் தானான இறைநிலை எய்தியவன்; அங்ஙனம் ஆனபோது சீவனும், அறிவாயும், அறிவுக்கறிவாயும், அதனுட் செறிபொருளாயும் நின்றவனாகிய சிவனாவன் என்றவாறு

இரு உபாதிகளையும் கடந்து அறிவே வடிவாய்ப் பொறிகளை அடக்கிய சீவன் எங்கும் அறிவாய், அறிவினுள் அறிவாய் மன்னிச் செறிவொழியாது நின்ற சிவமாவன் எனபது கருத்து

ஆன்மாக்கள் சிவத்தைச்சார்ந்தபோது அறிவாயும் மலத்தைச் சார்ந்தபோது அறியாமையாயும் இருக்கும்

இரண்டு உபாதிகளையுடையன. அங்கிலை ஒழிந்து ஞானவடிவான சீவனே பொறிகளை வென்றவனு வான். அவனே அறிவுருவாகத் திகழ்வன். சிவனு வன் எனவும், சிவமோ அறிவே வடிவானது; அறிவினுள் அறிவாய் மன்னுவது. எங்கும் என்றும் நீக்கமற நிறைந்த பரிபூரணானந்த போதமாகச் செறிந்தது எனவும் முன்னிரண்டடிகளும் பின்னிரண்டடிகளும் விளக்குகின்றன. (241)

அறிவுடை யார்நெஞ் சகலிட மாவது
அறிவுடை யார்நெஞ் சருந்தவ மாவது
அறிவுடை யார்நெஞ்சொ டாதிப் பிரானும்
அறிவுடை யார்நெஞ்சத் தங்குநின் றானே. 2363

இம்-ரனின், ஞானிகள் நெஞ்சமே சிவனுறையும் இடம் என உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : ஞானிகள் மனமே உலகம் ; அதுவே செய்தற்கரிய பெருந்தவமானது: அதனொடு கூடியே ஆதிபகவனாகிய இறைவன் எழுந்தருளியிருக் கின்றான் என்றவாறு.

ஞானிகள்மனமே இறைவன் எழுந்தருளியுள்ள இடம் என்பதாம். (242)

மாயனு மாகி மலரோ னிறையுமாய்க்
காயநன் னாட்டுக கருமுத லானவன்
சேய னணியன் றித்திக்குந் தீங்கரும்
பாயமு தாகிநின் றண்ணிக்கின் றானே. 2364

இம் – ரனின், இறையனுபவம் இருந்தவாற்றை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : அரியும் அயனும் அரனுமாக மூன்று உருவாய், உடலாகிற நல்ல நாட்டுக்கு கருவுக்குரிய விதையாயிருக்கும் முதல்வன், தூரத்திலுள்ள பொருளாயும், அண்ணியனுயும், தித்திக்கும் இனிய கரும்பாயும், அமுதமாயும் நின்று இனிக்கின்ருன் என்றவாறு.

தேனும் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான் என்பது கருத்து.

படைத்தலாதி தொழில்புரிய மூன்று திருமேனி தாங்கிநின்று, ஆன்மாக்களுக்கு வினைப்போகங்களை யூட்டி, மலகன்மங்களை வீட்டி, ஆன்மாக்கட்கு ஞானோதயம் வரச்செய்து அவர்கள் ஞானிகளான வுடன், கரும்பாய்த் தேனுய் அமுதமாய் தித்திக்கின்ருன் என்பதாம்.

ஆன்மாக்களின் முத்திநிலை அனுபவத்தைக் ' கரும்பைத் தேனைப் பாலைக் கட்டியை ஒத்திருப்பன் அந்த முத்தியினிற் கலந்தே ' என்னும் சித்தியார் திருவாக்கானும் உணர்க.

மலகன்மங்களின் மறைந்து மறந்தொழுகுவார்க்குச் சேயன். தெளிந்தார்க்கு அண்ணியன். நுகர்வார்க்கு அமுத முதலியனவாகி அண்ணிப்பவன் என முந்நிலை அனுபவம் மொழிந்தவாறு. (243)

என்னை யறிந்திலேன் இத்தனை காலமும்
என்னை யறிந்தபின் ஏது மறிந்திலேன்
என்னை யறிந்திட் டிருத்தலுங் கைவிடாது
என்னையிட் டென்னை யுசாவுகின் ருனே. 2365

இம் – எனின்; 'யான் அறிவுருவினன்' என அறிந்த பின் உளதாம் அனுபவம் உரைத்தல் நுதலிற்று.

இ – ள் : இத்தனைக் காலமாக என்னை யான் அறிந்திலேன் ; என்னை அறிவுருவினன் எனச் சிவனுணர்த்த உணர்ந்தபின் என்னைப் பற்றியிருந்த – யானுக மதித்து இதுவரை நடந்த மலமாயா கன்மங்களை அறிந்திலேன். அங்ஙனம் யான் என்னை யறிந்திருத்தலும் என்னைவிட்டு நீங்காது என்னுட னிருந்தே என்னையே தூண்டிவிட்டு என்னையே வினவுகின்றுன் இறைவன் என்றவாறு.

யான் ஞானியானபின் என்னுடன் கலந்துநின்று என்னைவிட்டே என்னை வினவியறிய வைக்கின்றுன் இறைவன் என்பது கருத்து.

'என்னையறியேன் இத்தனை காலமும்' என்றது பெத்த நிலை கூறியது.

என்னையறிந்தபின் ஏதும் அறிந்திலேன் என்றது முத்தி அனுபவம் மொழிந்தது.

என்னை அறிதலும் கைவிடாது என்னை யிட்டு என்னை உசாவுகிறுன் என்பது அனுபவ முதிர்வும் அதன்கண்விளையும் ஆனந்த அடிப்படையான ஆய்வு நிலையும் கூறியது.

ஏதும் என்றது மலமாயா கன்மங்களை. குருட்டுக் காலத்து இருளையன்றி யறியாதிருந்தது உயிர். அது போலப் பெத்தநிலையில் மலமாயா கன்மங்களால் மறைக்கப்பெற்றிருக்கிறேம் என்பதையும் உணரா

திருந்தது. குருடுநீங்கியவுடன் ஒளியையன்றி இருளை யுணராதிருக்கும்; அதுபோல அறிவு பெற்றபின் அறிவையன்றிப் பிறிதொன்றனையும் உணராதிருக்கும் என்பதாம். (244)

**மாய விளக்கது நின்று மறைந்திடுந்**
**தூய விளக்கது நின்று சுடர்விடுங்**
**காய விளக்கது நின்று கனன்றிடுஞ்**
**சேய விளக்கினைத் தேடுகின் றேனே.** 2366

இம் – எனின், விளக்கைக்கொண்டு விளக்கைத் தேடுதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்; மாயையாகிற விளக்கு ஒன்று, அது எம்முடன் நின்று பொருள்களை மறைப்பதோடு மட்டு மன்று. தானும் மறையும்; தூய்மையான ஞானவிளக் கொன்று அதுநிலைபெற்று நின்று தன்னையுங்காட்டும் பொருளையும் விளக்கும்; உடலாகிற விளக்கொன்று; அது உடன் நின்று நம்மை வருத்தும்; நானோ சிறந்த விளக்கொன்றைத் தேடியலைகின்றேன் என்றவாறு

எனக்குக் கிடைத்த மூன்றில் இருவிளக்கு இடையூறு செய்யும். ஒருவிளக்கின் துணைக்கொண்டு மற்றொரு விளக்கைத் தேடுகின்றேன் எனத் தன்மேல் வைத்து ஞானத்தால் சிவனைத்தேடு கின்றேன் என்கின்றார் திருமூலர். அப்பர் சுவாமி களும் 'ஞானத் தாலடைவார் ஞானிகள்' எனல் காண்க.

மறைந்திடும் எனவே மறைக்கும் என்பதும் உடன் போந்தது. அங்ஙனமே சுடர்விடும் என்பதும் காட்டும் என்பதும் உடன்போந்தது. கனன்றிடும் - காமக் குரோதாதிகளை உண்டுபண்ணி எந்நேரமும் பசி தாக காமங்களில் ஈடுபடுத்தி வருத்தும். சேய விளக்கு - செம்மையாகிய ஞானசொரூபம். அது சிவம். இருளைக்கொண்டு விளக்கைத் தேட முடியாது. ஆகையால் விளக்கைக் கொண்டே விளக்கைத் தேடுகின்றேன் என்றார் (245)

தேடுகின் றேன்றிசை யெட்டோ ரிரண்டையும்
நாடுகின் றேனல மேயுடை யானடி
பாடுகின் றேன்பர மேதுணை யாமெனக்
கூடுகின் றேன்குறை யாமனத் தாலே. 2367

இம் - எனின், நிறைந்த மனத்தால் இறைவனை நேர்ந்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்; பத்துத்திசைகளிலும் பரனைத்தேடி அலைகின்றேன்; இன்பமே வடிவான இறைவனுடைய திருவடிகளை நாடுகின்றேன்; பரம்பொருளே எனக்கு உற்ற துணையாம் என்று அதனையே பாடுகின்றேன்; நிறைந்த மனத்தால் அப்பரம்பொருளைக் கூடுகின்றேன் என்றவாறு.

இறைவனைப் புறத்தும் அகத்தும் தேடி அகத்திலே கண்டு அங்கே கூடிக் களிக்கின்றேன் என்பதாம்.

இனித் திசை தேடுகின்றேன்; எட்டோடு இரண்டையும் நாடுகின்றேன்; நலமேயுடையானடி பாடுகின்றேன்; குறையா மனத்தாலே பரமே

துணையாமெனக் கூடுகின்றேன் எனக் கூட்டிப் பொருள் கோடலுமாம். எட்டு – அ. அகரமாகிய சிவம். இரண்டு – உ. உகார வடிவாகிய சத்தி, எட்டோடிரண்டு – பத்து. ய – உயிர். ஆகவே, சிவம் சத்தி உயிர் மூன்றனையும் தேடினேன். அதாவது ஆன்ம ரூபம் ஆன்மதரிசனம் ஆன்மசுத்தியும், சிவரூபம் சிவதரிசனமும் பெற்றேன் என்பதாம்.

குறையாமனம் – மலகன்மவாதனையால் ஆசையுட்படாதமனம். (246)

முன்னை முதல்வினை யாட்டத்து முன்வந்தோர்
பின்னைப் பெருமலம் வந்தவர் பேர்த்திட்டுத்
தன்னைத் தெரிந்துதன் பண்டைத் தலைவன்றன்
மன்னிச் சிவமாக வாரா பிறப்பே. 2368

இ்ம் – எனின், அநாதியே மலத்தொடுவந்த உயிர்கள் அதுநீங்கிச் சிவமாகிப் பிறவாப் பெருநிலை எய்தியவாற்றை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: முதல்வனுடைய முதற்படைப்பின் கண்ணே முதன்முதலிற் படைக்கப் பட்டவர்கள் பெருமலமாகிய ஆணவத்தோடு வந்தவர்கள் ஆவார்கள், அவர்கள், அரனருளால், பின்னை அம்மலத்தைப் பேர்த்து, ஆன்மாவாகியதன்னை உள்ளவாறு அறிந்து, தன் பழைமையான தலைவன் தாளையும் அடைந்து, சிவமாம் பெருநிலை எய்தப் பிறப்பு வாரா அன்றே! என்றவாறு.

அநாதியே ஆணவத்தோடு படைக்கப்பெற்ற ஆன்மாக்கள். அருளால் அது நீங்கத் தலைவன்

திருவடியைச் சார்ந்து சிவமாகிப் பிறவியற்று என்றும் இன்பம்பெருக இருக்கலாம் என்பது கருத்து.

இறைவற்குப் படைத்தலாதித் தொழில்கள் விளையாட்டு; அதனால் அவன் விகாரியாகான் என்பார் விளையாட்டத்து என்றார். முதல் பண்பாகுபெயராக முதல்வனை உணர்த்திற்று. முன்வந்தோர் – ஆதி சிருட்டியில் வந்தவர்கள்.

பெருமலம்-மூலமலம். தன்னைத்தெரிதல்-ஆன்மா தன்னைச்சித்தென்றும், மலம் அநாதியேபற்றிய தடையென்றும், தன்னை இந்நிலையில் வைத்த தலைவன் ஒருவன் உண்டென்றும். யான் அவனுக்கு என்றும் மீளா அடிமை என்றும் உணர்தல்.

சிவம் அநாதியே ஆன்மாக்களை அடிமையாக உடையவனாதலின் பண்டைத்தலைவன் என்றார்.

தான் மன்னி – ஊசல் கயிறற்றால் தாய்தரையே தாரகமானாற் போலத் திருவடியே பற்றுமிடம் எனத் தெளிந்து அதிலே தங்கி என்க.

இங்ஙனம் சிவமாகப் பிறவியறும், பேரின்பம் வளரும் என்றவாறும். (247)

## 15. ஆறந்தம்

திருமூலதேவ நாயனார் எட்டாந் தந்திரம் தொடங்கி, உடலிற் பஞ்சபேதம் முதலாக நின்மலாவத்தையும் (13) அறிவுதயமும் (14) கூறியருளிய பின்பு ஆறந்தம் என்னும் (15) தலைப்பிலே 35

மந்திரங்களை அருளிச் செய்வாராயினர். அந்தம் – முடிவு. முதற்பாடலில் வேதாந்தம், சித்தாந்தம், நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், கலாந்தம் எனக் கூறினும் 'கலாந்தம், நாதாந்தம், யோகாந்தம், போதாந்தம், வேதாந்தம், சித்தாந்தம் என்னும் இந்த முறையிலே அநுட்டிக்கவேணும்' என்று சிவயோகா சாரக் கட்டளை என்னும் ஒரு தொகுப்பில் அந்த ஆசிரியர் கட்டளையிட்டருளுகின்றார்.

வேதத்தி னந்தமு மிக்கசித் தாந்தமு
நாதத்தி னந்தமு நற்போத வந்தமும்
ஓதத் தகுமெட் டியோகாந்த வந்தமும்
ஆதிக்க லாந்தமு மாறந்த மாமே. 2369

இதன்பொருள் : வேதங்களின் அந்தமாகிய உபநிடதங்களும், மேம்பாடுற்ற சித்தாந்தமாகிய ஆகமாந்தமும், நாத தத்துவத்தின் முடிவும், நல்ல அறிவின் முடிவும், அட்டாங்கயோகம் என்னும் அதன் முடிவும், கலைகளின் முடிவும் என்று சொல்லப்படும் முடிவுகள் எல்லாம் ஒன்றே என்றவாறு.

மேலே கூறப்பட்ட ஆறு முடிவுகளும் ஒரு பரம்பொருளையே குறித்தன என்பது கருத்து.

வேதாந்தம் என்பது ஆன்மாக்களுக்குப் பொதுவாகக் கூறியுள்ள வேதமுடிவு. சித்தாந்தம் என்பது இருவினையொப்பு மலபரிபாகம் வாய்ந்த சத்திநிபாதத்து உத்தமர்க்குச் சிறப்பாகக் கூறியுள்ள ஆகம முடிவு.

வேதம் நான்கு :- அவை இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்பன. வேதம் நான்கும் பிரமகாண்டமும். பிரமஞானத்திற்கு நிமித்தமான கருமகாண்டமும் உணர்த்துவனவாம். சிவாகமங்களும் பிரம காண்டமாய் அடங்கும் என்ப. வேதாகமங்கள் பரமசிவன் வாய்மொழி என்று சுருதியும் புராணமும் சிவாகமமும் ஓதுதலானும், பஞ்சப்பிரமம் பிரணவம் பஞ்சாக்கரம் பிராசாதம் முதலிய மந்திரங்களும், பதி பசு பாசம் முதலிய பொருள் வழக்கமும், திருநீற்றின் உத்தூளனம் திரிபுண்டரம் உருத்திராக்கம் தரித்தல் சிவலிங்க பூசை முதலிய கருமங்களும், பிறவும் இரண்டன்கண்ணும் ஒப்பச் சுருக்கமாகவும் விரிவாக வும் சொல்லப் பட்டுள்ளன. வேதசத்தத்தில் சிவாகமமும் அடங்கும். " வேத சிவாகமங்களுக்குப் பேதம் காண்கின்றிலம் ; வேதமும் சிவனால் செய்யப் படுதலின் ஆகமம் எனப்படும் " என்பர் நீலகண்ட சிவாசாரியர். " வேதம் சிவாகமம் என் இருபகுதிப் பட்டது. மூன்று வருணத்திற்கும் உரிமையாதலும் நான்கு வருணத்திற்கும் உரிமையாதலும்பற்றி " என நீலகண்ட பாடியத்தில் கூறப்பட்டது. " இனி, வேதமும் சிவாகமமும் ஒன்றேயாயினும் இருபகுதிப் பட்டது, வேதம் மூன்று வருணத்தாருக்கும் சிவாகமம் நான்கு வருணத்தாருக்கும் பொதுவாதல் பற்றி ஆதலால் சிவாகமங்கள் பிரமாணமென்பது தெற்றென உணர்க. இங்ஙனம் சைவாகமங்களுக்குப் பிராமாணியம் பவுட்கரவுரையில் உமாபதி சிவாசாரியார் காட்டியவாறே காண்க " என்பது சிவஞான பாடியம்.

இனி, ஆன்றோரால் தழுவப்பட்டமைபற்றி வேதம் சிவாகமம் இரண்டும் பிரமாணம் எனத் துணிந்த பின்னர் அவற்றானே அவை பரமசிவனால் செய்யப்பட்டன என்பது துணியப்படும். " துறக்கம் வேண்டியோன் சோதிட்டோமத்தான் வேட்க " என்றற்றொடக்கத்துச் சுருதிகட்கு, அவை வேட்கு மாறு வகுத்துக் கூறும் சுருதிகளும் அத்தன்மைய வாகிய கற்ப சூத்திரங்களும் இன்றியமையாது வேண்டப்படும்; அதுபோல, வேதத்துள் விதிக்கப் படும் சிவபூசை முதலிய விதிகட்கும் அவற்றை வகுத்துக்கூறும் காமிகம் முதலிய சிவாகமங்கள் இன்றியமையாது வேண்டப்பட்டு நிற்றலின், அவை ஆன்றோரால் தழுவப்படுதல் ஒருதலை; ஆகலான் என்க. இது சதுர்வேத தாற்பரிய சங்கிரகத்தில் அரதத்தாசாரியர் கூறியவாற்றான் அறிக. இதனை,

" வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கும் நூலிவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூ லநாதியம லன்றருநூ லிரண்டும்
ஆரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலாம்
நீதியினா லுலகர்க்கும் சத்திநிபா தர்க்கும் [ தாந்தத்
நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள்வே
தீதில்பொருள் கொண்டுரைக்கும் நூல்சைவம் பிறநூல்
திகழ்பூர்வம் சிவாகமங்கள் சித்தாந்த மாகும். "

என்னும் சிவஞான சித்தித் திருவிருத்தத்தானும்;

" உலகியல் வேதநூ லொழுக்க மென்பதும்
நிலவுமெய்ந் நெறிசிவ நெறிய தென்பதும் "

என்னும் பெரிய புராணத் திருவிருத்தத்தானுமுணர்க.

இங்ஙனம் கூறியவாற்றனே. வேதமும் சித்தாந்த சைவாகமமும் என்னும் இரண்டுமே உத்தமநூல் என்பது பெறப்பட்டது.

சைவாகமங்களில், "உலகநூல், வைதிகம், அத்தியான்மிகம், அதிமார்க்கம், மாந்திரம்" என நூல்களை ஐவகைப்படுத்து, "மாந்திரம் ஒழிந்த நான்கும் புறநூல்" என வைதிகத்தினையும் அவற்றுடன் விலக்கு தலானும்; "வேதாந்தத்தில் ஏகனே ஆன்மா" என வேதாந்தத்தைப் புறச்சமயங்களோடு எடுத்தோதி மறுத்தலானும், வேதம் பிரமாணமன்றென்பர் சைவரில் ஒருசாரார். ஆண்டு வைதிகம் என்றது மீமாஞ்சை நூலும், வைசேடிக நூலும், நையாயிகநூலும் எனும் மூன்றுமேயாம் எனவும்; புறச்சமயங்களோடு வைத்து எண்ணிய வேதாந்தமாவது ஏகான்மவாதம் கூறும் வியாசநூல் எனவும் சித்தாந்தப் பிரகாசிகையில் சர்வான்ம சம்பு சிவாசாரியார் கூறுதலான், அது வேறு என்பது தெற்றென விளங்கும்; ஆண்டு வேதம் என்றதூஉம் மீமாஞ்சை நூலை எனக் கொள்க; வேதத்துள் விதித்த கரும காண்டத்தை ஆராய்ச்சி செய்தலின் அதற்கும் அப்பெயராயிற்று, அங்ஙனம் கொள்ளாக்கால், வேதசாரம் சிவாகமம் ஆகலான் சைவாசாரத்திற்கு உரியோன் வைதிகன்" எனவும், 'வேதாந்தப் பொருளைத் தெளித்துக் கூறுவது சித்தாந்தம்' எனவும், 'பிறநூல் பிறபொருள்களைக் கூறும்' எனவும் வேதத்தோடு ஒற்றுமையுடைமை பற்றியே சிவாகமங்கட்குப் பிரமாணமாதல் கூறும் வசனங்களோடு முரணுமாறு அறிக. 'வேதாந்தம்' என்பது யோகப்பெயரான் வேதத்தின் முடிபாகிய உபநிடதங்

களைக்கூறும்; உருடிப்பெயரான் அவற்றை எடுத்துச் செய்த ஏகான்மவாதநூலைக்கூறும்; ஆதலின், அவ் விருவேறு வகையும் தெரிந்து உணர்ந்துகொள்க' என்று ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் அருளிச் செய்தனர்.

யோகம் - காரணம். உருடி - இடுகுறி.

" ஓரும் வேதாந்தமென் றுச்சியிற் பழுத்த, ஆரா இன்ப அருங்கனி பிழிந்து, சாரங் கொண்ட சைவ சித்தாந்தத் தேனமு தருந்தினர் சிலரே " என்றருளி னர் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள். இங்கே வேதாந்தக் கனியின் சாரமே சைவசித்தாந்தம் எனக் குறித்தமை காண்க. மற்றும், 'சித்தாந்தோ வேதசார த்வாத் ||' "சைவ சித்தாந்தம் வேதசாரமா யிருத்தலான்" என்று சுப்பிரபேத ஆகமமும்; 'வேதசார மிதந் தந்திரம்;||' "இந்தச் சித்தாந்தம் வேதசாரம்" என்றும் 'வேதாந் தார்த்தம் இதம் ஞானம் சித்தாந்தம் பரமம் சுபம் ||' "வேதாந்தார்த்தமாகிய இந்தச் சைவசித்தாந்த ஞான மானது பரமோசிதமாம்" என்றும், மகுடாகமமும்: "வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தம்" என்று சிவப்பிரகாசமும் கூறுவனவாம்.

வேதங்களில் பற்பல சமயங்களை எடுத்துக் கூறி, அவற்றிற்கெல்லாம் அதிகாரிகளைச்சுட்டி அவற்றைச் சிறப்பித்துப் பின்னர் வேதமுடிவான உபநிடதங் களில் அவற்றை எல்லாம் மறுத்து உண்மைப் பொருளை நிலைநிறுத்தியது. ஆகமங்களில் அங்ஙனம் கூறுது முதல் இடை கடை முழுவதிலும் முதல்வன் பெருமையினையே கூறி முழங்குகின்றன. ஆதலின் வேதாந்தமும் ஆகமங்களும் ஒரே முடிவினையுற்றன.

வேதாந்தம் பதி பசுபாசம் முதலியவற்றை நித்திய பதார்த்தங்கள் என விரித்துக்கூறும். ஈண்டு வேதாந் தங்கள் எனப்படுவன ; ஈசாவாசியம், கேனம், கடம், பிரசினம், முண்டகம், மாண்டூக்கியம், ஐதரேயம், தைத்திரீயம், சாந்தோக்கியம், பிருகதாரணியம், மைத்திராயணம், மகோபநிடதம் எனப்படும் மகா நாராயணம் கௌஷீதகிப் பிராம்மணம், காலாக்கினி ருத்திரம், கைவல்லியம், சுவேதாசுவதரம், அதர்வ சிரசு, அதர்வசிகை, பஸ்மஜாபாலம், பிருகஜ்ஜாபாலம், உருத்திராக்ஷ ஜாபாலம், சரபம், சிவசங்கற்ப முதலிய உபநிடதங்களேயாம்.

ஏகான்மவாதமும் வேதாந்தம் எனப் பேசப்படு வதற்குரிய காரணம் வேதாந்த உபநிடதங்கள் சில வற்றை எடுத்துக்கொண்டு பொருந்தாக் கூற்றால் பொருள் செய்து மயங்குவதேயாம். ஏகான்ம வாதிகட் குரிய 'சர்வசாரம்' முதலிய உபநிடதங்களிலே நிர்க் குணப் பிரமமே கூறப்படுகின்றது. இந்தப் பிரமம் பரோபநிடத சுருதிப்பிரகாரம் ஆன்மாவேயாம். இந்த ஆன்மப் பிரமத்துக்குச் சர்வஞ்ஞத்துவாதி குணங்க ளேனும் சத்துவ முதலிய குணங்களேனுமில்லை என் பது ஏகான்ம வாதிகட்கும் சைவர்களுக்கும் ஒத்த கருத்தேயாம். வேதாந்த சூத்திரத்துக்கு ஆதாரமா யுள்ள முண்டகம் தைத்திரீயம் முதலிய பரோப நிடதங்களிலே 'சர்வஞ்ஞத்துவாதி குணங்களையும், சத்தியம், ஞானம் ஆனந்தம் என்னும் குணங்களையும் சொரூபமாகவும் குணமாகவும் உடைய ' பரமான்மப் பிரமமே ' கூறப்பட்டுள்ளது. பிரமம் ஆன்மா என்னும் பெயர்கள் ஏகான்மவாத உபநிடதங் களினும், பரோபநிடதங்களினும் முறையே பிரதி

பாதிக்கப்படும் ஆன்மப் பிரமத்துக்கும் பரப்பிரம சிவனுக்கும் வழங்கப்பட்டுள்ளது. இதனைப் பாகத் தியாக லக்ஷணையினால் "பிரமத்துக்குக் குணகுணி பாவம் இல்லை" என்பர். பாகத்தியாகமாவது பதத் தின் வாச்சியார்த்தத்தில் ஒரு பாகத்தை நீக்கிவிட்டு மற்றோர் பாகத்தைக் கிரகிப்பதேயாம்.

ஏகான்மவாத மதமாவது: 'கடோபாதி வசத் தால் ஆகாயமானது இரண்டாய் நின்றாற்போல' வும், 'பலபாத்திரங்களிலுள்ள சலோபாதி வசத்தால் ஒரு சந்திரன் பலவாய்த் தோன்றினாற்போல' வும், 'அகண்ட பரிபூரணமா யிருக்கின்ற முதல்வன் தானே மாயா காரியங்களாக இருக்கிற தேகோபாதி கள் தோறும் சீவ பேதத்தினை அடைந்து, பெத்தம் நீங்கி முத்தியின்கண் அந்தக் கடமும் பாத்திரங்களும் பின்னமாய் உள்ள அளவில் கடாகாயமும் மகா காயமும் ஒன்றாய் நின்றாற் போலவும், பலவாகத் தோன்றின சந்திரப் பிரதிபிம்பங்கள்போல் ஒன்றாய் நின்றாற்போலவும், மகத்துக்களை ஆசிரயித்து வேதாந்த சிரவணம்செய்து அதனால் முன் உண்டான மாயோபாதி நீங்கிச் சீவனே பிரமமாய் இருக்கையே நான் அதுவாயிருக்கை" என்பதாம்.

இந்தக் கொள்ளகையில் உண்டாகும் சில ஐயப் பாடுகள்: ஒரு பொருள் இரண்டாய்ப் பின் ஒன்றும் என்னில் சீவ பரம் இரண்டிற்கும் குணம் ஒன்றா யிருத்தல் வேண்டும். அன்றியும், இப்படி இருப்ப தொன்றிற்கு மாயோபாதிகளிலே நின்று சுக துக்கப் படவும் அவை நீங்குதற்கு மகத்துக்களைச் சேர்ந்து வேதாந்தம் கேட்கவும் வேண்டாம். அன்றியும்,

சாயுச்சிய இன்பம் பெற்றாலும் பின்பு சென்னம் உண்டாதல் வேண்டும். ஆதலால், ஏகான்மவாதம் பொருந்துவதன்று. இன்னும் அவ்வம் முதற்காரணங்களின் குணமெல்லாம் அவ்வக் காரியங்கட்கும் உள என்பது நியமம். ஆகலின், சித்தாகிய பிரமத்தில் தோன்றிய பிரபஞ்சமும் சித்தாதல் வேண்டும்; அன்றிச் சடமாதல் செல்லாது.

ஏகா : 'இரண்டில்லை' என்பதற்குப் 'பிரமத்தினைக் காட்டிலும் வேறொரு பதார்த்தமில்லை' என்றும், 'ஒன்று' என்பதற்குப் பிரமம் ஒன்றே என்றும் பொருள் கொள்ளவேண்டும்.

மறு : பிரமம் ஒன்று என்று சொல்லுகிற ஒருவன் அந்தப் பிரமத்தின் வேறாய்ப் பசு என்று அறிதல் வேண்டும்.

ஏகா : இங்ஙனம் வேற்றுமை கூறில் "பிரமம் இல்லையாயின் ஒருபொருளுமில்லை" என்னும் வேதத்திற்குத் தாற்பரியந்தான் என்னை?

மறு : 'அகரவுயிர் இல்லையாயின் அக்கரங்கள் இல்லையாம்' என்னும் முறைபற்றி, வேதம் 'பிரமப் பொருள் இல்லையாயின் ஒருபொருளும் இல்லை' என்று ஓதும்.

**"ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்**
**ஒன்றென்ற நீபாசத் தோடுளைகாண் - ஒன்றின்றேல்**
**அக்கரங்க ளின்றாம் அகர வுயிரின்றேல்**
**இக்கிரமத் தென்னும் இருக்கு".**

என்பது காண்க.

மிக்க சித்தாந்தமாவது ;

முழுமுதற்கடவுள் நிறுத்திய சமயம், சமயங்களுள் வைத்து இராஜாங்க அந்தசமயம் எனப்படும். எனப்படும் இராஜாங்க சமயமே சித்தாந்த சைவமாம். இப்பொழுது சித்தாந்தம் என்பதை ஆராய்வோம். சித்தாந்தம் என்பது சித்தம் + அந்தம் எனப்பிரிக்கப்படும். அந்தம் என்பது முடிபு. சித்தம் என்பது சித்தித்தது ; அஃதாவது கிடைத்தது எனப் பொருள்படும். ஆகவே, ஆராய்ச்சி அநுபூதி என்னும் இரண்டாலும் நமக்குக் கிடைத்ததாகிய முடிபு என்பதாம். இனி, சொல் வழக்கு உத்தர மீமாம்சையில் கூறப்படும் அதிகரண சப்தத்திற்குப் பொருள் கூறுமிடத்து நீலகண்ட சிவாசாரியர்

*' விஷய ஸம்சய பூர்வபக்ஷ ஸித்தாந்த நிர்ணய*
*ஸங்கதீநாம் ஆதாரத்வம் இஹாதி கரணத்வம்'*॥

என்று கூறியிருக்கின்றார்.

திராவிட மாபாஷ்யகாரராகிய ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகளும் சிவஞானபோத மாபாடியத்தில்,

' தன்னால் கூறப்படு பொருளும், அதன்கண் ஐயப்பாடும் அதற்குப் பிறர் கூறும் பக்கமும், அதனை மறுத்துக்கூறும் சித்தாந்தத் துணிபும், இயைபும் என்னும் இவற்றிற்கு நிலைக்களம் ஈண்டு அதிகரணம் எனப்படும்' என்று அருளுகின்றார்கள்.

ஆகவே, சித்தாந்தம் என்னும் சொல் ஒருவன் ஒரு விஷயத்தைச் சொல்லிய வழி, அவ்விஷயத்தில் பலர்க்கு ஐயப்பாடுதோன்ற, அப்பலரும் தாம் தாம்

கண்ட அளவிலே தமது கருத்தைக்கூற அப்பொழுது முற்கூறியோன் இன்ன இன்ன காரணங்களால் அப்பலர் கூறும் கருத்துக்கள் அனைத்தும் பொருந்தா என மறுத்து இன்ன இன்ன காரணங்களால் தான் கூறிய விஷயமே பொருத்தமானது என்று துணிந்த இடத்து வழங்கப்படுவது என்பது புலனும். எனவே, சித்தாந்தமே முடிந்த முடிபு; அதனை மறுத்துக் கூறுவது யாதுமில்லை என்பது பெறப்பட்டது.

சித்தாந்தத்தின் பெருமையானது :

*'ஆப்தோக்தி நத்ர ஸித்தாந்த: சிவஏ வாப்தி மாந்யத:*
*நதாப் யாம் ஸத்ருச: கச்சிச் ச்ரேய ஆப்தி விதாயக':*

என்றும்,

*'ஸித்தாந்த ஏவஸித்தாந்த: பூர்வ பக்ஷாஸ்தத; பரே*
*ஆப்தஸ்து சிவ ஏவகை: சிவாந்யே த்வசிவா மத';*

என்றும்,

*'ஸித்தாந்த: ஸேவ்யதே ஸத்பி: சக்திபாத பவித்ரிதை:'*

என்றும் இரத்தினத்திரயம் என்ற நூலிலே ஸ்ரீகண்ட சூரி என்னும் ஆசாரியரால் நன்கு கூறியருளப்பட்டது காண்க. அவ்வாசிரியர் கூறுமாறு "இங்கே ஆப்தவாக்கியம் என்பது சித்தாந்தமாகும்; எதனால் சிவனொருவனே ஆப்தனாயிருக்கின்றானோ அதனால், சிவ என்னும் இரண்டனோடும் ஒப்பாக நன்மையை உண்டாக்குவதில்லை. சித்தாந்தம் ஒன்று தான் சித்தாந்தம்; மற்றவையெல்லாம் பூர்வ பக்ஷங்கள். சிவன் ஒருவன்தான் ஆப்தன்; சிவனின் வேறானோ

ரெல்லாம் சிவத்தன்மை இல்லாதவரென்று கொள்ளப் பட்டனர். சித்தாந்தமானது சத்தி நிபாதத்தால் தூய்மையாக்கப் பட்ட சத்துக்களால் பூஜிக்கப் படுகின்றது " என்பதாம்.

இதுகாறும் சொல்லியவாற்றல் சித்தாந்த மென்பது முடிந்த முடிபு என்றும் அதனை மறுப்பது யாதுமில்லை என்றும் தெரிந்தோம். எனினும், இக்காலத்தில் சிலர் சித்தாந்தத்தை மறுத்துப் பேசுகின்றதை நாம் கண் கூடாகக் காண்கின்றோம் அன்றோ? அங்ஙனமிருக்க சித்தாந்தத்திற் கூறப்பட்டது எவ்வாறு முடிந்த முடி பாகும் என்னில், இந்த ஐயப்பாட்டை இரத்தினத் திரய ஆசிரியராகிய ஸ்ரீகண்டசூரி என்பவர் எடுத்துக் கூறி அதற்குச் சமாதானமும் பின்வருமாறு கூறி யிருக்கின்றார்.

அஃதாவது :

*'காமகாரி தயா ந்யைஸ்து நிந்த்யதே*
*பசுசாஸ்திரவத் '|| 12*

*' நஹி கஸ்தூரி காமோத : புருஷை : ப்ரதிஹந்யதே*
*ஹேதுபி : ஸாத்யதே கிம்து தந்யை ராக்ராயதே*
*ஸதா '|| 13*

என்பதாம்.

" இஷ்டப்படி செய்கின்ற மற்றவர்களால் பசுக் களால் செய்யப்பட்ட நூல்களைப்போலச் சித்தாந்த மும் நிந்திக்கப்படுகிறது. கஸ்தூரியின் வாசனையானது மக்களால் வெறுக்கப்படுகிறதில்லை; மேலும் ஏதுக் களால் சாதிக்கப்பட்டுத் தன்யர்களால் எப்பொழுதும்

முகரப்படுகிறது" என்பது அந்த சுலோகத்தினுடைய பொருளாம். இவ்விடத்தில் நம்முடைய திராவிட மாபாடியகாரர் சித்தாந்தமரபு கண்டன கண்டனத்தில் "பொருள்மேல் வைத்தெழுதிய குற்றமெல்லாம்", நானம் என்பது மணங்கமழ்கின்ற பொருள் என்ற வழி அது 'நாவில் உண்பதுவோ' என்று ஆசங்கிப் பார் கூற்று என அருளியிருப்பது நினைவிற்கு வருகின்றது.

இதுவரை சித்தாந்தமென்ற சொல்லின் பொருளும், அந்தச்சொல் வழக்காறும், அதன் பெருமையும் தெரிந்தோம்.

வேதம் – அறியப்படுவது. ஆகமம் – பதி, பசு பாசம் என்னும் முப்பொருளையும் விளக்கிக் காட்டுவது. ஆ–பசு, க–பதி, ம–மலம். அன்றியும், ஆ - ஞானமும், க–மோட்சமும், ம - மலநாசமும் ஆதலால் ஆன்மாக்களுக்கு மலத்தினை நாசம்பண்ணி ஞானத்தை உதிப்பித்து, மோட்சத்தைக் கொடுத்தல் பற்றி ஆகமம் எனக் கூறுதலும் ஒன்று. (248)

**அந்தமோ ராறு மறிவா ரதிசுத்தர்**
**அந்தமோ ராறு மறிவா ரமலத்தர்**
**அந்தமோ ராறு மறியா ரவர்தமக்**
**கந்தமோ டாதி யறியவொண் ணாதே.** **2370**

இ – ள்: ஆறு அந்தங்களையும் அறிபவரே மிக்க தூயராவார். மலக்கோணினின்று விடுபட்டோரே அந்தங்கள் ஆறனையும் அறிபவர்கள். இங்கே கூறப் பட்ட ஆறு அந்தங்களையும் அறியப்பெறாத சமலர்க்கு

பிரபஞ்சத்தின் அந்தமும் ஆதியும் அறியமுடியாததே யாம் என்றவாறு.

ஆறும் என்றது முற்றும்மை. அதிசுத்தர்–மிக்க சுத்த தத்துவத்திலுள்ளார். சுத்த தத்துவமாவது சிவ தத்துவம் ஐந்தும். அமலம் – குற்றமின்மை. சமலம் - குற்றமுடைமை. மலம்–குற்றம் என்றது ஆணவ மலத்தை. (249)

தானான வேதாந்தந் தானென்னுஞ் சித்தாந்த
மாஞத் துரியத் தணுவன் றனைக்கண்டு
தேனார் பராபரஞ் சேர்சிவ யோகமாய்
ஆன மலமற் றருஞ்சித்தி யாதலே. 2371

இ–ள்: தான் பிரமமான வேதாந்தமும், சிவம் தானான சித்தாந்தமும், நீங்காத துரிய நிலைக்கண் சீவான்மா தன்னைத் தரிசித்து, இனிய மிக மேலான சிவப்பொருளைச் சேர்தற்குரிய நீங்குதற்கரிய ஆணவ மலவலி தொலைந்து, பெறுதற்கு அருமையான சித்தி கைவரப் பெற்றவராதலேயாம் என்றவாறு.

பிருதிவி முதல் நாதம் ஈறாகிய பிரபஞ்சத்தை இது சத்தன்று இது சத்தன்று என்று ஒவ்வொன்றாகக் கண்டு கழித்து, அங்ஙனம் கண்ட தன் அறிவின் கண்ணே சுட்டுணர்வு இன்றி நின்ற சத்தாகிய சிவத்தை ஆராய்ந்து, அந்தச் சிவஞானத்தினாலே ஆசாரியன், "அயமாத்மா" அது இந்த ஆன்மா; "சிவோயம் அஸ்தி" சிவன் இதுவாய் இருக்கின்றான் என்று தன்னுள்ளே பாவித்து; "தத்துவமசி" அது நீ ஆகின்றனை; "சிவத்துவ

மசி " ' நீ சிவன் ஆகின்றனை ' என்று அறிவுறுக்கும் வேதாந்த சித்தாந்த மகாவாக்கியப் பொருளை நாடோறும்பயின்று;

" சிவோகம் அஸ்மி சித்தாந்தே வேதாந்தே சோகம் அஸ்மிது " வேதாந்தம் ' சோகம் அஸ்மி ' என்று கூற, சித்தாந்தம் அதனைச் ' சிவோகம் அஸ்மி ' என்று கூறு மாற்றல். ' சோகம் அஸ்மி ' அவன் நான் ஆகின்றேன் என்றேனும், ' சிவோகம் அஸ்மி ' சிவன் நான் ஆகின்றேன் என்றேனும் பாவிப்பானுயின் அப்பாவனையில் விளங்கும் சிவனுல் அநாதி கூடிய பொது இயல்பையும், அதற்கு ஏதுவாகிய மாயா கன்மங்களையும் தான் விட்டு நீங்கும் இயல்பு ' கருடோக மஸ்மி ' நான் கருடன் ஆகின்றேன் என்னும் கருட மந்திர தியானத்தில் விளங்கும் கருடனுல் அந்தக் கருடபாவனை விடத்தைப் பிரத்தியட்சத்தில் தீர்த்துவிடுதல் போலாம் என்க.

" இந்தத் தேவதை வேறு, நான் வேறு என்று எவன் மற்றோர் தேவதையைப் பாவனை செய்யுங்கால், அவன் அந்தத் தேவதையை அறிவானல்லன்; அது பற்றி அவன் தேவர்களுக்குப் பசுப்போலாகின்றான். ஆதலால், எவன் நான் பிரமம் என்று அபேத பாவனை பண்ணுகின்றானோ அவன் ஈதெல்லாம் (உலகெல்லாம்) ஆகின்றான் " என்று பிருகதாரணிய சுருதி சொல்லுகின்றது.

" சிவன் வேறு, நான் வேறு என்னும் துவித பாவனையை விடுத்து, எந்தச் சிவன் உளனோ அந்தச் சிவன் நான் என்று எக்காலமும் அத்துவித பாவனை

செய்க" என்று சர்வஞ்ஞானோத்தர ஆகமமும் கூறுகின்றது. இன்னும்,

"பேத மாகிய பாவனை பேணுவ தெல்லாம்
ஏத மாகிய பந்தமே எனதியா னெனுமால்
போத வாருயிர் அபேதபா வனைபுரி வஃதே
மாத ராகுயர் மூத்தியென் றுரைத்திடும் மறையும்"

எனத் திருவானைக்காப் புராணத்தில் கவிராக்ஷஸ — ஸ்ரீ கச்சியப்பமுனிவர் அருளிச்செய்தமை காண்க.

இதுகாறும் கூறியவாற்றால் துவித பாவனையை விடுத்து அத்துவிதபாவனை புரிதல்வேண்டும் என்பது பெறப்பட்டது. இந்தப் பாவனை மாயாவாதிகள் கூறும் பாவனை போல்வதன்று என்க.

இனி, "கருட தியானத்தினால் விஷமானது நீங்குகின்றது: அங்ஙனம் அவன் (முக்தன்) சிவானந்த பர தியானத்தினாலே சர்வ பாசங்களினின்றும் நீங்கி முத்தியைத் தலைப்படுகின்றான்" என்று வாதுளாகமம் கூறுகின்றது. இதனை,

'கருடனுருவங் கருது மளவில்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோல்
குருவி னுருவங் குறித்தவப் போதே
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே" (2659)

என்று திருமந்திரம் கூறும்.

கருதும் அளவில் — தியானிக்கும்போது, குறித்த— தியானித்த, சிவனவனும் (அவன் சிவனும்) — அச்

சீவன் சிவனுவான்; என்றது சிவமாந்தன்மைப் பெருவாழ்வடைவான் என்பதே. "சிவமாக்கி யெனையாண்ட அத்தன்" என்றருளியதும் இக் கருத்துப்பற்றியேயாம். "உயிர் தானும் சிவானுபவம் ஒன்றினுக்கு முரித்தே" என்றமை காண்க.

அத்துவிதத்திற்குச் சிறந்தெடுத்துக் காட்டப் படும் உவமையாவது ஆன்மபோதமும் கண்ணொளி யும் தம்முள் அத்துவிதமாய் நிற்றலாம் என்க. "காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற் – காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்" எனவும்; "காட்டக் கண்டிடுந் தன்மையுடைய கண்ணுக் – கேயுமுயிர் காட்டிக்கண்டிடுமா போல ஈசனுயிர்க்குக் காட்டிக் கண்டிடுவன்" எனவும், "அறிவொளி போற் பிறிவருமத் துவிதமாகும்" எனவும் மூன்று நூலாசிரியரும் சித்தாந்த முடிபு உணர்த்தும் வழி இதனை எடுத்துக்காட்டியவாறு அறிக. (250)

> நித்தம் பரனோ டுயிருற்று நீண்மனஞ்
>
> சுத்த முதலைந்துந் தத்துவத் தானீங்கிச்
>
> சுத்த மசுத்தந் தொடரா வகைநினைந்
>
> தத்தன் பரன்பா லடைதல்சித் தாந்தமே. 2372

இ – ள்: எப்போதும் சிவப்பொருளோடு ஆன் மாப் பொருந்தி நின்று மனமும் சத்தம் முதலாகவுள்ள தன்மாத்திரை ஐந்தும் தத்துவவுண்மையாராய்ச்சியான் அவற்றின் நீங்கி, சுத்தமாயையும் அசுத்தமாயையும் பந்தியாவண்ணம் தியானித்து, தலைவனுகிய முழு முதற்கடவுளை அடைதல் சித்தாந்தமாகும்.

சித்தாந்தம் - முடிந்த முடிபு. சித்தம் - சித்தித்தது. ஆராய்ச்சி அனுபூதி இரண்டாலும் தமக்குக் கிடைத்தது. விரிவு முன்னர்க் கூறப்பட்டது காண்க.

சித்தாந்த சைவத்திற் பேசப்படும் பொருள்கள் மூன்று. அவை; பதி பசு பாசம் என்பனவாம். இதனை, திரிபதார்த்தம் என்றும், முப்பொருள் என்றும் கூறப்படும்,

*" பலகலையா கமவேதம் யாவையினுங் கருத்துப்*
*பதிபசுபா சந்தெரித்தல் "*

என்றருளினர் நமது உமாபதி சிவாசாரியசுவாமிகள்.

*" சான்றவ ராய்ந்திடுத் தக்க வாம்பொருள்*
*மூன்றுள மறையெலா மொழிய நின்றன*
*ஆன்றதோர் தொல்பதி யாரு யிர்த்தொகை*
*வான்றிகழ் தளையென வகுப்ப ரன்னவே "*

என்று கந்தபுராணத்தில் கூறப்பட்டது. இங்கே பதி என்றது முழுமுதற்பொருளாகிய கடவுள்; ஆருயிர்த் தொகை என்றது பசு; தளை என்றது பாசம். இம்மூன்று பொருள்களில் பதியாகிய கடவுளைப் பற்றிச் சித்தாந்த சைவ நூல்களாகிய வேத சிவாகமங்கள் யாது கூறுகின்றன ? பதிக்குப் பெயராகச் சிவம் என்னும் சொல்வழங்கப்படுவதை நாம் காண்கிறோம். சிவம் என்ற சொல் மங்கலம் என்னும் பொருளைத் தரும். சிவபெருமான் சிவத்துவமாகிய குறைவில்லாத மங்கல குணங்கள் தம்மிடம் உடைய வராதலின் அவர் சிவன் எனப்பட்டார். அன்றியும், நம்மைப்போல் அன்றி ஆணவம் முதலிய பாசக்

கட்டினின்றும் அநாதியே நீங்கியவராதலாலும், அப்பெருமான் சிவன் எனப்பட்டார். இவ்வுண்மை.

*" அநாதிமல ஸம்ச்லேஷ ப்ராகபாவாத் ஸ்வபாவத:*
*அத்யந்த பரிசுத்தாத்மே த்யதோயம் சிவஉச்யதே: |*
*அதவாசேஷ கல்யாண குணைக்கத ஈச்வர:*
*சிவஇத் யுச்யதே ஸத்பி: சிவதத்வார்த்த வேதிபி:||"*

என்று வாயு சம்ஹிதையில் கூறப்பட்டது இப் பொருளை நமது திராவிட மாபாடியகாரராகிய ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள்.

*" குறைவிலா மங்கல குணத்த னாதலின்*
*நிறைமல மநாதியின் நீங்கி நிற்றலின்*
*அறைகுவர் சிவனென அறிவின் மேலோர் "*

என்று அருளிச்செய்தார்கள்.

சிவம் என்னும் சொற்பொருள் வேறுவகை யாகவும் கூறப்படும். வடமொழியில் ' சீ ' என்னும் தாது ' கிடத்தல் ' என்று பொருள்படும். ஆகவே, உலகத்தின் இறுதிக்காலத்தில் எல்லாப் பொருள் களும் பரம்பொருளாகிய முதல்வனிடம் ஒடுங்கிக் கிடத்தலால், அவர் சிவன் எனப்பட்டார்; அன்றி நல்லோர் மனம் தம்பாற்கிடத்தலானும் அவர் சிவ னெனப்பட்டார் என்பதும் பொருந்தும். வேறு வகையாகவும் சிவசப்தப்பொருள் விளக்கப்படும். ' சீ ' என்னும் பகுதி வடமொழியில் மெலிவித்தல். மிகுவித்தல் என்னும் இரண்டு பொருள்களையும் தரும். ஆகவே, உயிர்களுடைய பாச சக்தியை மெலிவித்துச் சிற்சத்தியை மிகுவிக்கின்றவர் ஆதலால் அப்

பெருமான் சிவனென்று சொல்லப்பட்டார் என்க. வர்ண விபரியம் என்பது ஒன்று இலக்கணத்திலே பேசப்படும். அஃதாவது எழுத்து நிலைமாறுதலாம். வடமொழியில் 'ஹிம்ஸி' என்பது 'ஸிம்ஹ' என்றும், 'பச்யக' என்பது 'கச்யப' என்றும் வரும். அதுபோல வசி என்னும் சொல் சிவ என்று நிலைமாறியதாகக்கொண்டு சிவ சப்தத்திற்குக் 'காந்தி' என்று பொருள் கூறுவதும் பொருந்தும். இன்னும் பலவாறாகவும் சிவச் சொற்பொருள் விரிக்கப்படும்.

இச் 'சிவ' என்னும் திருநாமத்தை வேதம் தன்னுடைய இருதயத்தில் வைத்துப் போற்றும். வேதங்கள் 'திரயீ' என்னும் பெயரால் வழங்கப் படும். வேதம் நான்காயினும் அதர்வவேதம் மற்றை மூன்றனுள் அடங்கும் என்னும் கருத்துப் பற்றி மூன்று எனப்பட்டது. ஆகவே இருக்கு யசுர் சாமம் என்னும் மூன்றனுள் நடுவே உள்ளது யசுர் வேதம். அது ஏழு காண்டங்களை உடையது. அவற்றுள், நடுக்காண்டத்தில் உள்ளது ஸ்ரீ ருத்திரமாகும். அந்த ஸ்ரீ ருத்திரத்தின் நடுவிலே 'நமச்சோமாயச' என்னும் அநுவாகத்தின் நடுவிலே உள்ளது 'நமச்சிவாய' என்பதாகும். இங்ஙனம் வேதம் இம்மந்திரத்தைப் போற்றுதலால் நமது திருஞானசம்பந்தப்பெருமான்;

> "வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
> நாதன் நாமம் நமச்சி வாயவே"

என்று அருளிச் செய்தார்கள். மேலும் வேத புருஷனுக்கு ஸ்ரீ ருத்திரம் 'கண்ணும்' அதனுள்ளிருக்கும் 'சிவ' என்பது 'அந்தமணியின் ஒளியு' மாகும்.

இதுவரை 'சிவ' என்னும் சப்தத்தின்பொருளையும் வேதம் அம்மந்திரத்தைப் போற்றும் திறத்தையும் தெரிந்தோம். இனி அதன் இலக்கணம் பல இருப்பினும் முடிவாகச் சுருக்கமாக "எது பிறப்பு இறப்பு இல்லாததோ அது சிவம்; எது பிறப்பிறப்புள்ளதோ அது சீவன்" எனச்சொல்லிவிடலாம். வேதம் "ந ஜாயதே ந ம்ருயதே தேவா" என்று சிவபெருமானுக்குப் பிறப்பு இறப்பு இல்லாமையைக் கூறுகின்றது.

திருஞானசம்பந்தப் பெருமான் "பிறப்பில் பெருமான்" என்றும்; திருமூல தேவர் "பிறப்பிலி பேர் நந்தி" என்றும் சிவபெருமானை வழங்குகின்றார்கள். திராவிட மாபாடிய காரராகிய நமது ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் சிவஞான சித்தியார் உரையிலே "நால்வகை யோனியில் ஒரு யோனிவாய்ப்பட்டுப் பிறப்பன யாவை அவையெல்லாம் சீவவர்க்கம்; அவ்வாறில்லாதது யாது அது சிவம்" என்று அறுதியிட்டு விளக்கிக் கூறியருளினார்கள். அதர்வ சிகோபநிடதம் "ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரேந்த் ராஸ்தே ஸம்ப்ர ஸூயந்தே ||" என்று தொடங்கிச் "சிவ ஏகோ த்யேய: சிவம் கர: ஸர்வமந்யத் பரித்யஜ்ய ஸமாப்தா அதர்வ சிகா" என்று ஏனைய பிரம விஷ்ணு முதலியவர்களுக்குப் பிறப்பு இறப்புக்களைக் கூறி, இவர்கள் இவ்வாறுதலின் காரணராக மாட்டார்கள்: மற்றவற்றைக் கைவிட்டுச் சிவன் ஒருவனையே தியானிக்கப்படும் பொருளாகக் கொள்க. அதர்வசிகை முற்றிற்று என்று நிர்ணயித்து விசிராந்தி அடைந்தது. மேலும் அவ்வுபநிடதம் சிவசப்தப் பொருளைச்

"சிவம்கர:" என்றும் விளக்கிற்று. பிறப்பில்லாமை என்கிற ஓர் இலக்கண அளவிலே பதியிலக்கணத்தை முடிப்போம். மற்றும் பசுக்களைப் பற்றியும் பாசத்தைப் பற்றியும் இடங்தோறும் விளக்குவோம். காண்க. (251)

**மேவும் பிரமனே விண்டு வுருத்திரன்**
**மேவுமெய் யீசன் சதாசிவன் மிக்கப்பால்**
**மேவும் பரவிந்து நாதம் விடாவாரு**
**ரேவும் பொழுதணு வொன்றுள தாகுமே.** 2373

இ – ள்: பொருந்திய பிரமனும், விண்டுவும், உருத்திரனும், பொருந்திய மகேசுரனும், சதாசிவனும் ஆகிய இவர்களுக்கு அப்பால் பொருந்திய விந்து நாதங்களுமாகிய முப்பத்தாறு தத்துவககளும் நீங்கும் பொழுது ஆன்மா ஒன்றே உளதாம் என்றவாறு.

விடா – விட்டு ஆரு று–முப்பத்தாறு தத்துவங்கள். ஓவும்–நீங்கும். அணு ஒன்று உளது ஆகும்– ஆன்மா ஒன்றே உளதாம்.

நிவிர்த்தி முதலிய பஞ்சகலைகட்கும் அதிதெய்வமான பிரமன் முதலிய ஐவருள் பிருகிருதி மாயைகாறும் வியாபித்து நிற்கும் பிரதிட்டாகலைக்கு அதிதெய்வம் மாயோன் என்க.

அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம் என்பன சூக்குமபஞ்சாக்கரங்களாம். இவ்வக்கரங்கள் பகுக்கப்படாது நிற்கும் காலத்துப் பிரணவம் எனப்படும். அகாரம் பிரமா, உகாரம் விஷ்ணு, மகாரம்

உருத்திரன், விந்து மகேசுவரன், நாதம் சதாசிவம் என்னும் அதிதெய்வங்களையுடையன என்க.

சதாசிவத்தை அதிதெய்வமாகக் கொண்ட நாதத்தினால் செலுத்தப்பட்டு உணரும் புருட தத்துவமாகிய ஆன்மா, மகேசுவரனை அதிதெய்வமாகக் கொண்ட விந்துவினால் செலுத்தப்பட்ட சித்தமாய் நின்று, சிந்திக்கும். உருத்திரரை அதிதெய்வமாகக் கொண்ட மகாரத்தால் செலுத்தப்படும் மனமாய் நின்று பற்றும் அதன்பின் பிரமாவை அதிதெய்வமாகக் கொண்ட அகாரத்தினால் செலுத்துப்படும் அகங்காரமாய் நின்று ஆமோ அன்றோ எனத் தெளியும்படி எழும்பும். அதன் பின்னர் விஷ்ணுவை அதிதெய்வமாகக் கொண்ட உகாரத்தினால் செலுத்தப்படும் புத்தியாய் நின்று, இன்னதெனத் தெளியும். ஆன்மா மனம் முதலிய அந்தக் கரணங்களுக்கு வேறாம். கண்ணுக்கு விளக்குப்போல இவை உயிர்க்குக் கருவியாய் வேறு, நிற்பன என்று அறிந்து நீங்கி நின்று இவற்றைக் கொண்டு அறியும் கருத்தாவின் உண்மை யாது என்று ஆராய்ந்தார்க்கு ஆன்ம சொருபம் இனிது விளங்கும். அதன் பின்பு அங்ஙனம் ஆராயும் அறிவு பசு ஞானம் ஆகலான் அதனைத் தரும் பொருள் யாது எனத் தேர்வார்க்குச் சிவஞானம் அதற்கு மேலாய் விளங்கும்.

அநந்ததேவர் முதலியோர் கட்டுநீங்கி முழுவதும் உணர்ந்தாராகவும் சவிகற்ப உணர்ச்சிக்கு மூலகாரணமாகிய நாதகலை ஒன்றனை உணராமையின் பரமுத்திக்குத் தடையாகிய அதிகாரமல வாசனையுடையராயினர் ஆகலின், இதுவே அவற்றினும் மேலாய பந்தம்

எனவும், இதனின் நீங்குதலே பரமுத்தி எனவும் உணர்க. இதனை, 'ஒவிட விந்துஞான முதிப்பதோர் ஞானமுண்டேல்–சேவுயர் கொடியினுன்தன் சேவடி சேரலாமே" என்றருளினர் ஸ்ரீ அருணந்தி சிவா சாரியர்.

"பிருதிவியாதி தத்துவம் இருபத்து நான்கும் ஆன்மதத்துவம் எனவும், வித்யாதத்துவம் முதலிய ஏழும் வித்தியா தத்துவமெனவும், அதற்கு மேலுள்ளது சிவதத்துவம் எனவும், கூறப்படும்; இங்ஙனம் இந்த மூவகைத் தத்துவம் அனைத்தும் கிரமமாக ஒன்றிலொன்று லயத்தை அடையும்" என்று சிந்திய விசுவாகமம் கூறுகின்றது.

பிருதிவி முதல் மூலப்பிரகிருதி ஈருகிய இருபத்து நான்கு தத்துவங்களும் ஸ்ரீ கண்டருத்திரரால் ஒடுங் கும். மூலப்பிரகிருதிக்கு மேலுள்ள ஆறுதத்துவமும் (முப்பத்துமூன்ரும் தத்துவத்தினராகிய) அனந்தேசு வரரால் ஒடுங்கும். அவற்றின் மேலுள்ள சுத்தவித்தை முதலிய மூன்று தத்துவமும் சத்திதத்துவ சிவதத்து வத்தின் பாலராகிய லய சிவனுல் ஒடுங்கும். ஏனைச் சத்திதத்துவம் சிவதத்துவம் இரண்டும் சுத்த சிவத் தினுல் ஒடுங்கும். இங்ஙனம் இந்தத் தத்துவம் அனைத்தும் இடையிலே நீங்கிவிடும் என ஆன்மா காணுதல் தத்துவசுத்தி எனப்படும். (252)

உள்ள வுயிராருற தாகு முபாதியைத்
தெள்ளி யகன்றுநா தாந்தத்தைச் செற்றுமேல்
உள்ள விருணீங்க வோருணர் வாகுமேல்
எள்ளலி ஞுதாந்தத் தெய்திடும் போதமே. 2374

இ – ள் ; இவ்வாறு தத்துவங்களின் வேறு என ஆராய்ச்சி அனுபூதிகளாற் கண்ட ஆன்மா, முப்பத் தாறு தத்துவங்களின் காரியத்தையும் ஆராய்ந்துகண்டு நீங்கி நாதாந்தத்தைக் கடந்து, மேலே உள்ள அறியா மையும் ( ஆணவ இருளும் ) நீங்க. ஓர் உணர்வாக உறைத்து நிற்பின் இகழ்தலில்லாத நாதாந்தத்தின் கண் அறிவு பொருந்தும் என்றவாறு.

நாதாந்தம்: நாத தத்துவத்தின் முடிவு. நாத தத்துவம் ஒடுங்கும் முறைக்கண் முப்பத்தாறும். நாத தத்துவம் சிவதத்துவம் ஐந்தனுள் இறுதிக்கண்ணது. " நாதவிந்துகலாதி நமோநம: " என்றருளிய அருண கிரிநாதர் " ஆறு றையும்நீத் ததனமே னிலையைப், பேறு வடியேன் பெறுமா றுளதோ " என்றருளினார்.

இதனை,

*" விரிகின்ற பூதத் தலைவரும் விந்துவும் விட்டகல*
*வருகின்ற நாதத் தொனிகண் டதனுள் மனமடங்கத்*
*தருகின்ற தத்துவம் ஆறுறு நீங்கத் தனதுருவாய்த்*
*தெரிகின்ற நாதாந்த நேயமு மாகுந் திரிபுரையே "*

என்ற புவனை கலைஞான தீபங்கூறும், அசுத்த மாயை பிரகிருதி மாயைகளைக் கடந்ததே யன்றிச் சுத்த மாயையினையும் கடந்திருப்பதாம். (253)

**தேடு மியம நியமாதி சென்றகன்**
**றுடேஞ் சமாதியி லுற்றுப் படர்சிவன்**
**பாடுறச் சீவன் பரமாகப் பற்றறக்**
**கூடு முபசாந்தம் யோகாந்தக் கொள்கையே. 2375**

இ – ள் : அறிஞர்களால் ஆராயப்படும் இயமம், நியமம் முதலிய எட்டுறுப்புக்களானும் முறையே அநுட்டிக்கப்பெற்று, அவ்வுறுப்புக்களை ஆதார மாகக் கொண்டு ஊடுருவிச் செல்லும் சமாதியிலே பொருந்தி விளங்கும் சிவபரம்பொருள் அணுக்க மாகச் சீவபோதங் கெடப் பாசங்கள் அடியோடு கெட்டொழியும்படி கூடும் வெறுப்பு விருப்பற்ற தன்மையே யோகாந்தக் கொள்கையாம் என்றவாறு.

போதம் முளையாது பதைப்பு நீக்கி வறிதேயிருந்து அறிவிடத்துக்கூடும் சமாதியே நிட்டை முறையாம் என்க.

உபசாந்தம் – வெறுப்பு விருப்பற்ற தன்மை

“ *அறியாமை அறிவகற்றி அறிவி னுள்ளே*
*அறிவுதனை அருளினால் அறியாதே அறிந்து*
*குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடும்*
*கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயிற்*
*பிறியாத சிவன்றானே பிரிந்து தோன்றிப்*
*பிரபஞ்ச பேதமெல்லாம தானாய்த் தோன்றி*
*நெறியாலே யிவையெல்லாம் அல்ல வாகி*
*நின்றென்றுந் தோன்றிடுவன் நிராதா ரனாய*”

(சித்தி ; சூத் 8–செய் 30)

([illegible])

“ சுட்டதுபோ லாசை விட்டுலகா சாரத்
துக்குமிலா ஞானச் சுகமேவிச்
சொற்கரணா தீத நிர்க்குண [illegible]
[illegible]

மொட்டலர்வா ரீச சக்ரசடா தார
முட்டவுமீ தேறி மதிமீதாய்
முப்பதுமா ரூறு முப்பதும்வே ருன
முத்திரையா மான மடைவேனே ''
(திருப்புகழ்)

'' மண்முதற் சிவம தீருய் வகையதிற் ருனி லாது
கண் ணுத லருளால் நீங்கல் சுத்தியாய்க் கருது
மன்றே ''
(உண்மைநெறி விளக்கம்)

என்பதும் காண்க.

இதனை,

'' விரிக்கு மியம நியமா சனத்தின் விதியறிந்து
சரிக்கு மனிலனை நேரே நிறுத்திச் சமாதிபெற்றே
இருக்கும் பொழுதி லுபசாந்த நிட்கள நேயமெய்திப்
பரிக்குந் தனியின்ப யோகாந்த மெங்கள்
பராபரையே ''

என்று புவனை கலைஞான தீபம் கூறும். (254)

கொள்கையி லான கலாந்தங் குறிக்கொள்ளில்
விள்கையி லான நிவிர்த்தாதி மேதாதிக்
குள்ளன வாமவிந்து வுள்ளே யொடுங்கலுந்
தெள்ளி யதனைத் தெளிதலு மாமே. 2376

இ - ள் : அறிவிலே கொள்ளுதலுற்ற கலாந்தத்தைக் குறித்து விசாரிக்கின், சொல்லுவதாகிய நிவிர்த்தி முதலாகவுள்ள கலைகளும், மேதை முதலிய கலைகளும் பொருந்தும் விந்து சத்தியினுள்ளே ஒடுங்கி

யிருத்தலும் தெளிவாக அதனை ஆராய்ந்து அறிந்து உணர்வதுமாம் என்றவாறு.

இனி, தீயின் சத்தியொன்றே சுடுதல் அடுதல் முதலிய தொழில் வேறுபாட்டால் சுடுஞ்சத்தி, அடுஞ் சத்தி என்றத் தொடக்கத்துப் பலவேறு வகைப்படு மாறுபோலச் சிவசத்தியொன்றே காரிய வேறுபாட் டால் பராசத்தி, திரோதானசத்தி, இச்சாசத்தி, ஞான சத்தி,கிரியாசத்தி எனப் பஞ்சசத்திகளாயும்; முறையே ஐந்தும், நான்கும், எட்டும், பதின்மூன்றும், எட்டு மாகிய கூறுபாடுடைய ஈசானம் முதல் சத்தியோசாதம் ஈறாகிய பஞ்சசத்திகளாயும் ; ஆரணி, சனனி முதலிய மூவகைச் சத்திகளாயும் ; நிவிர்த்தி பிரதிட்டை முதலிய பஞ்ச சத்திகளாயும் ; வாமை சேட்டை முதலிய அட்டசத்திகளாயும்; பரவாகீசுவரி, அபரவா கீசுவரி, மனோன்மனி, மகேசை, உமை, திரு, வாணி என்று எழுவகைச் சத்திகளாயும் ; அத்தியான் மிகமான உன்மனை சமனை முதலிய கலைகளாயும் இன்னும் பலவேறு வகைப்பட்டு நிற்கும். அவ்வச் சத்திகளோடு புணர்ந்த சிவமும் அங்ஙனம் பலவேறு வகைப் பெயர்பெற்று நிற்கும். அவ்வச் சத்திகளுக்கு இடமாய விந்துவும் அங்ஙனம் பலவேறு வகையான் விருத்திப்பட்டு நிற்கும். இவற்றின் இயல்பெல்லாம் ஆகமங்களுள் காண்க.

ஈசானம் முதல் கூறிய சத்திகள் ஐந்தும் ஈசானி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி எனப் பெயர்பெறும். இவற்றுள், ஈசானியின் ஐந்து கூருவன : சசினி, அங்கதை, இட்டை, மரீசி, சுவாலினி என்பன. பூரணி யின் நான்கு கூருவன: சாந்தி, வித்தை, பிரதிட்டை,

நிவிர்த்தி என்பன. ஆர்த்தியின் எட்டுக் கூறுவன, தமை, மோகை, சயை, நிட்டை, மிருத்யு, மாயை, பயை, சரை என்பன. வாமையின் பதின்மூன்று கூறுவன; இரசை, இரட்சை, இரதி, பாலி, காமை, சமுயமினி, கிரியை, புத்தி, காரி, தாத்திரி, பிராம்மணி, மோகினி, பவை என்பன. மூர்த்தியின் எட்டுக்கூறுவன: சித்தி இருத்தி, தியுதி, இலக்குமி, மேதை, காந்தி, சுவதை, திருதி என்பன; இவை முப்பத்தெட்டும் அட்டத்திரிம் சத்கலை எனப்படும். "ஐயா றதன்மிசை எட்டுத்தலையிட்ட, மையில் வான்கலை மெய்யுடன் பொருந்த" என்றார் திருக்கோவையாருரையில் பேராசிரியர்.

ஆரணி, சனனி, இரோதயித்திரி என்பன மூவகைச் சத்திகள். நிவிர்த்தி முதலிய பஞ்சசத்திகள்; நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்பன. வாமை முதலிய அட்டசத்திகள்; வாமை, சேட்டை, இரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூதமனி என்பனவாம். உன்மனை முதலிய கலைகள்; உன்மனை, சமனை வியாபினி, சத்தி, நாதாந்தம், நாதம், நிரோதி, அர்த்தசந்திரன், விந்து, விடம், அருக்கீசம், மேதை என்பனவாம். இவை துவாதசகலைப் பிராசாதம் எனவும் வியாபினியின்மேல் வியோமரூபை, அனந்தை, அனுதை, அனுசிருதை என்னும் நான்கும் கூட்டிச் சோடசகலைப் பிராசாதம் எனவும் வழங்கப்படும்.

பஞ்சகலைகள்:

ஆன்மாக்களைப் பந்தத்தினின்றும் நிவிர்த்தி செய்யும் சிவசத்தி நிவிர்த்தி எனப் பெயர்பெறும்.

பந்தத்தினின்றும் நிவிர்த்திபெற்ற ஆன்மாக்கள் மீள நோக்காதவண்ணம் பிரதிட்டை செய்யும் சிவ சத்தி பிரதிட்டை எனப் பெயர்பெறும்.

அங்ஙனம் நிலைபெற்ற ஆன்மாக்கட்கு அனுமான ஞானம் ஆகமஞானம் அன்றி அனுபவஞானத்தைப் பயப்பிக்கும் சிவசத்தி வித்தை எனப் பெயர்பெறும்.

அங்ஙனம் அனுபவஞானம் பெற்ற ஆன்மாக் கட்கு விருப்பு வெறுப்புச் சங்கற்ப முதலிய எல்லாத் துன்பங்களும் சாந்தமாகச் செய்யும் சிவசத்தி சாந்தி எனப் பெயர் பெறும்.

அங்ஙனம் சாந்தமாய் நின்றதும் ஒழியச்செய்யும் சிவசத்தி சாந்தியதீதை எனப் பெயர்பெறும்.

இங்ஙனம் சிவசத்தியொன்றே காரியப்பாட்டால் நிவிர்த்தி முதலிய பெயர்பெற்று ஐவகைப்பட்டவழி. அவற்றிற்கு முதல்வனும் நிவிர்த்திபதி. பிரதிட்டாபதி வித்தியாபதி, சாந்தியபதி, சாந்தியதீதபதி எனப் பெயர் பெற்று ஐவகைப்பட்டு நிற்பன.

*"களிக்கும் புவனம் புவனத் தலைவர் கலைகளைந்திற்*
*றிளைக்குநற் சத்திகளெல்லாந்தெரிந்து செக மனைத்தும்*
*விளைக்கும் பரவிந்து தன்னு ளடங்கமெய்ஞ் ஞானவின்பம்*
*அளிக்குங் கலாந்தமுமாய் தானாகி நிற்பவ ளம்பிகையே".*

எனப் புவனை கலைஞானதீபம் கூறுதல் காண்க (255)

தெளியு மிவையன்றித் தேரைங் கலைவே
ரொளியு ளமைத்துள்ள தோரவல் லார்கட்
களியவ ளுகிய மந்திரந் தந்திரந்
தெளிவுப தேசஞா னத்தொடைந் தாமே. 2377

இ-ள்: ஆராய்ச்சி அநுபூதி என்னும் இவைகளினாலே தெளிவுபெற்ற இவைகளை அல்லாமல் தேரப்படும் நிவிர்த்தி பிரதிட்டை வித்தை சாந்தி சாந்தியாதீதம் என்னும் ஐந்து கலைகளும் வேறுபட்ட ஒளியினுள்ளே பொருந்தி உண்மையை ஆராய்ந்தறியும் வன்மை உடையவர்கட்குச் சிவபரம்பொருள் மிக்க கருணையுடையோராவார். அப்பெருமான் கலைகளாகிய வேத சிவாகமங்களையும், அவற்றுட்கூறப்படும். தந்திர கலையும், மந்திரகலையும், உபதேச கலையும் என்னும் மூன்றனையும் ஞானகலையையும் குருவடிவிலே நின்று அநுக்கிரகிப்பர். தந்திர கலையாவது கருமகாண்டம், மந்திர கலையாவது உபாசனா காண்டம், சிவ சீவர்களுடைய அத்துவிதக் கலப்பை உணர்த்துவது ஞானகாண்டம் எனப் பெயர்பெறும்; அது ஞானகலை என்றவாறு. (256)

ஆகு மனாதி கலையா கமவேதம்
ஆகுமத் தந்திர மந்நூல் வழிநிற்றல்
ஆகு மனாதி யுடலல்லா மந்திரம்
ஆகுஞ் சிவபோ தகமுப தேசமே 2378

இ-ள்: அநாதியாகவுள்ள கலைகள் ஆகமங்களும் வேதமுமாகும். தந்திர கலையாவது அந்நூல் சொல்லும் வழியிலே நிற்றலாகும். மனம் முதலிய

அஃக்கருவிகள் நீங்கி அறிவினுல் கணிக்கும் காரண பஞ்சாக்கரம் முதலியன மந்திரகலைகளாம். அகாரம் உகாரம் மகாரம் விந்து நாதம் என்பன சூக்கும பஞ்சாக்கரம்; இவை மனம் முதலியவற்றைச் செலுத்துவன. சிவபோதகம் ஆகிய சிவஞானத்தைத் தரல் உபதேசகலையாம் என்றவாறு.

விந்துத் தானமாகிய புருவநடுவிலே சிகார யகார வகாரங்கள் முறையே தற்பதப் பொருளும் துவம் பதப் பொருளும் அசிபதப் பொருளுமாம் முறை மையின் அவ்வைந்தெழுத்தால் சிவோகம்பாவனை செய்தல்.

பஞ்சாட்சரங்களைப் பஞ்சாட்சர சொரூபமாய் இருக்கிற சிவனை இருதய கமலத்தில் சதாசிவ வடிவாகத் தியானம்பண்ணி, ஓம் நமசிவாய என்றும், ஓம் சிவாய நம என்றும், ஔம் நமசிவாய என்றும், ஔம் சிவாய நம என்றும், நமசிவாய என்றும், சிவாயநம என்றும், சிவாயவாசி என்றும், சிவாய என்றும், யவாசி என்றும், சிவாய சிவசிவ என்றும், சிவ என்றும், வசி என்றும், சீ என்றும் இப்படிப் பஞ்சாட்சரத்தைப் பன்னிரண்டு விதமாக உள்ள மையை ஆசாரியர் அறிந்து அந்தந்தப் பக்குவத் துக்குத் தக்கதாக அநுக்கிரகம் பண்ணுதலே உபதேச கலையாம். இது ஞானசாரியர் அனுக்கிரகம் பெற்று அனுட்டிக்கும் அதிதீவிர பக்குவர்களுக்கே விளங்கும் என்க.

இதனை,

" அறையுங் கலாந்தமும் நாதாந்தமும்
அட்ட யோகாந்தமாம்
துறையுந் தெரிந்துபின் ஆறும்
நீங்கித் துணிந்தங்ஙனே
நிறையுமப் போதத்தி னுள்ளே
யடங்கிட தேயவின்பம்
உறையும்போ தாந்த வுருவமு
மாமெங்க ளுத்தமியே ".

எனப் புவனை கலைஞானதீபம் கூறுதல் காண்க.(257)

தேசார் சிவமாகு தன்ஞானத் தின்கலை
ஆசார நேய மறையுங் கலாந்தத்துப்
பேசா வுரையுணர் வற்ற பெருந்தகை
வாசா மகோசர மாநந்தி தானே. 2379

இ – ள் ; சிவஞான கலையாவது பேரொளிப் பிழம் பாகவுள்ள சிவமேயாகும். கலாந்தத்திலே ஆசாரமும் அன்பும் சொல்லப்படும். பெருமை பொருந்திய சிவ பெருமானே பேசா அனுபூதிநிலையில் உள்ளவர், உரையையும் உணர்வையும் கடந்த நிலையினர், வாக்கு மனத்துக்கு எட்டாதவராவார் என்றவாறு.

தேசு-ஒளி; புகழ்; இங்கே பேரொளிப்பிழம்பாம். தன் ஞானம் என்றது சிவஞானத்தை. இதனை " ஒளியில் ஒளியன் – கலாதத்துவத்துக்கு மேலாகிய ஒளியான அசுத்த மாயை ஒளி, அதற்கு மேலாகிய சுத்த வித்தையொளி, அந்தச் சுத்தவித்தை ஒளிக்கு மேலாகிய விந்து ஒளி, அந்த விந்து ஒளியின் மேலாய பரம ஒளி அருளொளி; அது மிகுந்த ஒளியாம்.

அதுவே பரைதரிசனம். அப்பரையொளியில் தம்பரம் அற்று அமர்தல் பரானந்தம். அந்தப் பரானந்த ஒளிக்குள் ஒளியாக இருப்பது சிவமாகும் என்க.

" அந்தமிலாத அறிவின் அரும்பொருள் - சுந்தரச் சோதியும் தோன்றிடுந்தானே " (619 சுந்தரச்சோதி - மறைந்திருந்து வெளிப்பட்ட சோதி. சுந்தரம் – நஷ்டத் திரவியலாபம் என்ற உரையையும் காண்க. " சோதித் தனிச்சுடராய் நின்ற தேவனும் " (630) என்றருளினர்.

**தானவ னுகுஞ் சமாதி தலைப்படில்**
**ஆனக லாந்தநா தாந்தயோ காந்தமும்**
**ஏனைய போதாந்தஞ் சித்தாந்த மானது**
**ஞான மெனஞேய ஞாதுரு வாகுமே. 2380**

இ - ள் ; சமாதியானது ஒருவனுக்குக் கூடு மாயின் சீவன் சிவமாந்தன்மைப் பெருவாழ்வடையும். பொருந்திய கலாந்தமும் நாதாந்தமும் யோகாந்தமும் போதாந்தமும் சித்தாந்தமே ஆனது. அச்சித்தாந்த மானது காண்பான் காட்சி காட்சிப் பொருள்களாகிய ஞாதுரு ஞானம் ஞேயம் ஆகும் என்றவாறு.

சமாதியின் இயல்பாவது ; ஒளியோடு கூடிய ஒப் பற்ற சுடர்வடிவாக நின்ற சிவமும், ஆதியாகிய சத் தியும், உள்ளே விளங்குகின்ற சீவனுமாகிய மூன்றன் கலப்பேயாம். இவை சமாதி நிலையில் இயைந்தன. எப்போதும் சிவத்தோடு சேர்ந்தேயிருப்பின் சமாதி வேண்டாம். அட்டாங்கயோகத்தின் பயன் சிவ சீவச் சேர்க்கையே யாம். ஞாதிருவும் ஞேயமும் ஒன்றுன போது சமாதியேயில்லை.

" எல்லார் அறிவுகளின் தாற்பரியம் ...... ".

என்னும் (56) திருக்களிற்றுப் படியாரிலே ........ " அவை எல்லாவற்றினும் வாசனையைப்போக்கி முத்தியைக் கூட்டுகைக்கு முறைமையாகக் கண்டது சைவ சித்தாந்தத்தில் சொல்லப்பட்ட அந்த ஞான யோகம் ஒன்றுமேயாதலான். இந்த அனுபூதி எல்லாக் குற்றங்களும் அறுகைக்குக்கண்ட அர்த்த " மாம் என்ற அதன் உரைப்பகுதியையும் இதனோடு ஓட்டுக.

இன்னும் ஐந்தாம் தந்திரத்திலே " வேதாந்தங் கண்டோர் " (1435) " வேதாந்தம் சுத்தம் விளங்கிய சித்தாந்தம் " (1422), " நானென்றும் தானென்றும் " (1441), விரிவான வேதாந்த சித்தாந்தம் ஆறும் " (1449), " யோகச்சமயமே " (1466) எனக்கூறிய மந்திரங்களையும் அவற்றிற்கெழுந்த பஞ்சாக்கர தீபவுரையையும் இதனுடன் கூட்டிச் சிந்திக்க. ' வேதாந்த சித்தாந்தம் ஆறும் ' என்றது இங்கே ஆறங்கங்களை நோக்கி எழுந்தனபோலும். " ஞானத்தில் யோகமே நாதாந்த நல்லொளி " என்றமையும் காண்க. சிவயோகம் என்பது ஞான நிர்வாணம் என்பர்; " ஞானச்சமயமே " (1476), காண்க.

இதனை,

" மறுவா மலஞ்செற்று மேலாந்
துரியத்தின் வாழ்வறிந்து
நிறுவா மனத்தை நிறுவிச்
சிற்பூரண நின்மலமாய்ப்

பெறுவாரும் பேறுமற் றொன்றுஞ்
சிவயோகப் பெரியவின்பம்
உறுவா ருறுகின்ற வேதாந்த
மெங்க ளுலகம்மையே."

எனப் புவனை கலைஞானதீபம் கூறுதல் காண்க. (259)

ஆறந்த மும்சென் றடங்குமங் ஞேயத்தே
ஆறந்த ஞேய மடங்கிடு ஞாதுரு
கூறிய ஞானக் குறியுடன் வீடவே
தேறிய மோனஞ் சிவானந்த வுண்மையே. (2381)

இ – ள் : மேலே கூறப்பட்ட ஆறு அந்தங்களும் சென்று அடங்குகின்ற அந்த ஞேயப்பொருளிலே, ஆறந்தங்களாலும் பெறப்படும் ஞேயப்பொருள் அடங்கும். ஞாதுருவானவன் குரு உபதேசித்த ஞானநெறியே சென்று காண்பானும் காட்சியுமின்றிக் கலப்பினால் தான் அற்று நிற்க, அதனால் விளைந்த மோன நிலை சிவானந்த உண்மையாம் என்றவாறு,

ஆறந்தங்களாவன – கலாந்தம் நாதாந்தம், யோகாந்தம், போதாந்தம், வேதாந்தம், சித்தாந்தம் என்பன. இவற்றை இம்முறையிலேயே கொள்க. காண்பானும் காட்சியுமற்றுக் காட்சிப்பொருளாகிய சிவமேயாதல். சிவபெருமானே பரம்பொருளாகும் என்று அறிந்து அதனைச்சார்ந்து, சார்ந்துள்ளோம் என்ற நினைப்பும் அற்று, அச்சிவத்தோடு கலத்தலும் சிவானந்தமேயாக விளங்குவதுமாம்; இதுபரமுத்தி. 'சுத்த அநுபோகத்தைத் துய்த்தல் அணு' எனவும் "ஒன்றிநின்று உணருமுண்மை" எனவும் யாண்டும்

ஓதுதலின், ஆன்மா பரமுத்தியில் சிவானந்தானு பூதியை விடயித்தல் உண்மை யாதல் காண்க.

ஞேயப்பொருள்–சிவம். (260)

உண்மைக் கலையாறொ ரைந்தா னடங்கிடும்
உண்மைக் கலாந்த மிரண்டைந்தோ டேழந்தம்
உண்மைக் கலையொன்றி லீறுய நாதாந்தத்
துண்மைக் கலைசொல்ல வோரந்த மாமே. (2382)

இ – ள்: உண்மையை உணர்த்துவனவாகிய கலைகள் பதினொன்றும். அவற்றை யுள்ளே அடக்கி நிற்பனவாகிய கலாந்தம் பதினேழாம். உண்மைக் கலைகளிலே சென்று தோயின் முடிவாகிய நாதாந்தத்து உண்மையான கலையை அறிவுறுத்த ஒரு அந்தத்தை உடையதாகும் என்றவாறு.

யோகிகள் தீவிரபக்குவர் ஆதலின், அவர்கள் பஞ்சகலாப் பிராசாதம், அட்டகலாப் பிராசாதம், தச கலாப்பிராசாதம், துவாதசகலாப் பிராசாதம். சதுர்த்த கலாப் பிராசாதம் சோடசகலாப் பிராசாதம் பூதப் பிராசாதம் ஆரம்பப்பிராசாதம் மூர்த்திப் பிராசாதம் சிவப்பிராசாதம் ஆனந்தப்பிராசாதம் எனக் கலைகள் பதினொன்றும் என்பர்.

கலாந்தம் பதினேழு என்றது அகாரகலை முதல் பதினாறு கலைகளும். கலாந்தமும் ஆம். உயிர் நின்ற உடம்பு எய்தத்தகும் நிலை கலாந்தத்துக் கடவுளைக் கூடுதலே என்பர். எனவே வளிகளையும் மனம் முதலிய அந்தக்கரணங்களையும் கட்டுப்படுத்தி அகாராதிகலைகளைத் தியானித்து. கலாந்தத்தில் சிவ

தரிசனம் பெற்றால் அவ்வுடம்பு உயிர்நின்ற உடம்பு எனக் கருதப்படும். கலாந்தத்துக் கடவுள் என்றது கலைகளின் முடிவிலே விளங்கும் சிவகலைக்கண் உள்ளாரை என்க. உண்மையில் உணருந்தன்மை வாய்ந்த உயிர் நின்ற உடம்பு. "மேல் நிற்கும் யோகிக்கு விந்துவும் நாதமும் காயமாம்" (2135). விந்து—சிவசத்தி. நாதம்-சிவம். (261)

ஆவுடை யாளை யரன்வந்து கொண்டபின்
தேவுடை யானெங்கள் சீர்நந்தி தாடந்து
வீவற வேதாந்த சித்தாந்த மேன்மையைக்
கூவி யருளிய கோனைக் கருதுமே. (2383)

இ – ள்: சிவசத்தியைச் சிவபரம்பொருள் வந்து அதிட்டித்த பின்பு தேவர்களையெல்லாமும் தமக்கு அடிமையாகக் கொண்டு ஆட்கொண்டருளும் சிவ பெருமான் ஆகிய எங்களுடைய சிறந்த நந்தி யென்னும் திருநாமத்தையுடைய பிரான், திருவடி களைத் தலையின் மேல் சூட்டி அழியாதபடி வேதாந்த சித்தாந்தங்களின் சிறப்பை வலியக் கூப்பிட்டழைத்து அருள் செய்தான் ஆதலின், அந்தச் சிவகுருவாகிய தலைவனைச் சிந்தித்திருத்தலே கடப்பாடாகும் என்றவாறு.

ஆவுடையாள் – சிவசத்தி. அரன் – சிவபிரான். தேவுடையான் – தேவர்களைத் தனக்கு அடிமை யாகவும் உடைமையாகவும் உடையான். ஆவுடை யாளை அரன் வந்துகொள்ளுதல் – அருளையே தனக்குத் திருமேனியாகக்கொண்டு எழுந்தருளல். தாள்தந்து – திருவடி சூட்டி: "என்னைப் பவத்திற்

சேரா வகையெடுத்து என் சித்தத்தே, தன்னைவைத் தருளினாலே தாளிணை தலைமேற் சூட்டும், மின்னமர் பொழில்சூழ் வெண்ணெய் மேவிவாழ் மெய்கண்டான்" தமக்குத் தந்த உபகாரத்தை ஸ்ரீ அருணந்தி தேவர் கூறியவாறு காண்க. இவ்வாசிரியர், 'திருவடி வைத் தென் சிரத்தருள் நோக்கிப், பெருவடிவைத் தந்த பேர்நந்தி தன்னைக். குருவடிவிற்கண்டகோனை யெங் கோவைக், கருவழி வாற்றிடக் கண்டு கொண்டேனே' (1597) எனவும், 'இதயத்தும் நாட்டத்தும் என்றன் சிரத்தும். பதிவித்த பாதப் பராபரன் நந்தி, கதிவைத்த வாறும், மெய் காட்டிய வாறும், விதிவைத்த வாறும் விளம்ப வொண்ணாதே' (1593) எனவும் அருளியமை காண்க.

**கருது மவர்தங் கருத்தினுக் கொப்ப**
**அரனுரை செய்தரு ளாகமங் தன்னில்**
**வருசம யப்புற மாயைமா மாயை**
**உருவிய வேதாந்த சித்தாந்த வுண்மையே. (2384)**

இ—ள்: கருதுகின்றவர்களுடைய கருத்துக்குத் தக்கதாகச் சிவபரம்பொருள் அருளிச்செய்த ஆகமங்களில் வரும் சைவசமயத்துக்குப் புறமாயுள்ளவற்றையும் மாயையும், மாமாயையும் ஊடுருவிச் சென்று அதன்மேல் விளங்கிய வேதாந்த சித்தாந்தங்களாக நிற்கும் என்றவாறு.

" புறச்சமய நூல்வழியே ஒழுகியும், அகச்சமய நூல்வழியே சென்று ஒழுகியும், மிருதி நூல் சொல்லும் வழியே சென்று ஒழுகியும், வேதங்களிற் கூறியவாறு ஆச்சிரம தரும நெறிகளின் வழுவாது

ஒழுகியும், செயற்கரிய தவங்களைச் செய்தும் அரிய கலைஞானங்கள் பலவற்றைப் பயின்றும், வேதங்களை ஓதியும், சிறப்பினையுடைய புராணங்களை அறிந்தும், உபநிடதப் பொருளை மிக ஆராய்ந்து தெளிவுற்றும், இங்ஙனம் சோபான முறையால் பல பிறவிகளினும் மேற்பட்டு நிகழ்ந்து முற்றுப்பெற்றுச் சென்றால் சைவக்கூற்றின் முடிபாகிய சித்தாந்த சைவத்தைத் தலைப்படுவரன்றி ஒருங்கே ஒருகாலத்தும் முற்றுப் பெறுவதன்று. இச் சித்தாந்த சைவத்தினும் சரியை கிரியா யோகங்களை அநுட்டித்து முற்றியபின் ஞானத்தைப்பெற்று அதனால் சிவபிரான் திருவடிகளைச் சேர்வர் என்க" எனவே, மேற்கூறிய அநம்பருவமடைதல், இங்ஙனம் சோபான முறையால் பல பிறவிகளிலும் மேற்பட்டு நிகழ்ந்து முற்றுப் பெறுவதன்றி ஒருங்கே ஒருகாலத்து முற்றுப்பெறுவதன்று.

உயிர் பருவமடைதலாவது அறிவித்தவாறே அறிய வல்லும் செவ்வித்தாதல். மலமுதிர்தலாவது தனது சத்தி தேய்தற்குரிய துணைக்காரணங்கள் எல்லாவற்றோடும் கூடிப் பதனறியும் செவ்வித்தாதல். இதனை எய்துதல் அருமை என்பர்.

வீடுபேற்றைக் காதலித்து அவ்வச்சமயந்தோறும் உளவாகிய "பந்தமும் பிரிவும் தெரிபொருட்பனுவற் படிவழி சென்று சென்றேறி" சைவத்தின் மெய்தப் பெற்றோர் ஆசிரியன் காட்டும் சைவாகம நெறியில் சமய தீக்கையுற்றுச் சரியை நெறியைத் தலைப்பட்டு, அது முற்றிய பின்னர் விசேட தீக்கையுற்றுக் கிரியை நெறியைத் தலைப்பட்டு, அது முற்றிய பின்னர் யோக நூல் கேட்டு யோகநெறியைத் தலைப்பட்டு, இம்

மூன்றும் முறையான் முற்றிய பின்னர் நிருவாண தீக்கை பெற்று ஞானநெறியைத் தலைப்பட்டு வீடு பேறடைவர். இதனைப் "புறச்சமய நெறிநின்றும்" என்னும் சித்தித் திருவிருத்த முதலியவற்றான் உணர்க.

"படிவழி சென்று சென்றேறி" என ஓதிய அதனானே முதல்வன் வியாபகமாய் நின்றவாறே விளக்கினும் ஆன்மாக்களின் அறிவு தூலஅறிவு ஆகலின், அவ்வாறு விளங்கமாட்டாது தத்தமக்கு ஏற்ற சோபான முறையே சிறிது சிறிதாக ஏகதேச மாய் விளங்கிவிளங்கி மேம்பட்டு வந்தே வியாபகமாய் விளங்கும் ஓர் இயல்பிற்று என அறிக.

புறப்புறம், புறம், அகப்புறம், அகம் எனச் சொல்லப்படும் நான்கனுள் அகச்சமய மொழிந்த சமயங்கள் முக்கூற்றுப் புறச் சமயங்களாம். பாடாணவாத சைவர் முதலியோர் அறுவரும் அகச்சமயத்தார்.

பாடாணவாத சைவர் முதல் நிமித்தகாரண பரிணாம வாதசைவர் ஈறாக ஆறுவகைப்படும் சமயத்தார் சித்தாந்த சைவத்தைப் போலப் பதி பசு பாசம் என்னும் பொருள்களை உடன்பட்டவர் களாகலும் அவற்றிற்குக் கூறும் பொது இலக்கணம் சிறப்பு இலக்கணங்களில் மாறுபடுவர். அகப்புறச் சமயத்தார்கள் மாவிரதர் முதல் ஐக்கியவாத சைவர் ஈறாக அறுவகைப்படுவர். அவர்களில் ஐக்கியவாத சைவர் அல்லாத ஏனைய ஐவரும் வேதாகமங் களின்றி, வேதாகம விரோதமான சில நூல்களைப் பரம பிரமாணமாகக் கொள்வர்.

ஐக்கியவாதசைவர் ஆணவ மலத்தை உடன் படார். புறச்சமயத்தவர்கள் தார்க்கிகர் முதல் யோக வாதிகள் ஈறாக அறுவகைப்படுவர். அவர்கள் சிவாகமங்களை நிந்திப்பர்; அன்றியும், வேதத்திலும் தமக்கு உடன்பாடான சிலபகுதிகளை மட்டுங்கொண்டு ஏனையவற்றை, புறக்கணிப்பர். புறப்புறச்சமயத்தார்கள் உலோகாயதர் முதல் ஆருகதர் ஈறாக அறுவகைப்படுவர்; இவர்கள் வேதாகமம் இரண்டனையும் நிந்திக்கும் நாஸ்திகர்கள். இவ் விஷயம் சிவஞான மாபாடியத்தில் விளக்கப் பட்டது

சித்தாந்த சைவத்திற் பேசப்படும் பொருள்கள் பதி, பசு, பாசம் என்னும் மூன்றுமாகும். இவைகளுள் பதிப்பொருளைப் பற்றி முன்னர் விரித்துக் கூறினோம்: அங்கே காண்க.

வேதாகமங்கள் சிவபெருமான் சத் சித் ஆனந்தப் பொருள் என்றும்; அப்பெருமான் முற்றறிவு, வரம்பி லின்பம், இயற்கை யுணர்வு, தன்வயம், குறைவிலாற் றல். வரம்பிலாற்றல் என்னும் ஆறு குணங்களையும் உடையவர் என்றும் பலபடியாகக் கூறும். (263)

வேதாந்தஞ் சித்தாந்தம வேறிலா முத்திரை
போதாந்த ஞானம் யோகாந்தம் பொதுஞேய
நாதாந்த மானந்தஞ் சீரோ தயமாகு
மூதாந்த முத்திரை மோனத்து மூழ்கவே (2385)

இ - ள் : வேதாந்தம் சித்தாந்தமாகிய இரண்டும் வேற்றுமை இல்லாத ஒற்றுமைப்பட்ட குறிப்பினை உடையனவாம். ஆன்ம சிற்சத்தியின் முடிவு அருள்

ஞானத்தை அடைவிக்கும்; யோகாந்தமானது பொது வாக ஞேயப்பொருளைக் காட்டும். நாதாந்தமானது இன்பத்தைத்தரும் மூதாந்த முத்திரையானது மோன நிலையில் மூழ்குவிக்கும் என்றவாறு.

'இன்னும் பரசமயிகள் பாசத்தைச் சொல்லும் முறையில் மலங்கள் ஐந்தையும் இல்லை என்றும், ஆணவம் இல்லை என்றும், தத்துவங்களைப் பதினான்கு என்றும், இருபது என்றும், இருபத்து நான்கு என்றும், இருபத்தேழு என்றும், முப்பது என்றும், முப்பத்தொன்று என்றும், முப்பத்து மூன்று என்றும். முப்பத்துநான்கு என்றும் கூறிப் பலவித மாகப் பாசத்தில் இவ்விதமாக மயங்கியும்;

" ஆன்மாவைச் சரீரத்தில் ஏகதேசி என்றும், எல்லாருக்கும் ஓர் ஆன்மா என்றும், உடம்பளவு நிறைவு என்றும், அறிவற்றது என்றும், அறிவு தானுயிருக்கும் என்றும், ஒளியாய் இருக்கும் என்றும், அணுவாய் இருக்கும் என்றும். உருவ மென்றும் அருவமென்றும். ரூபாரூபம் என்றும், சரீரத்தை நடத்தியிடும் என்றும் கருவிகளுக்கு நாயகமாம் என்றும். சுத்தம் என்றும். அசுத்தம் என்றும். சுத்தாசுத்தம் என்றும். மனம் என்றும், புத்தி என்றும், சித்தமென்றும். ஆங்காரமென்றும், பிரகிருதி என்றும். புருடன் என்றும், மூலாதாரத்தில் என்றும், விந்து என்றும் நாதம் என்றும் சரீரம் நான் என்றும். பிரமம் என்றும், பொறிகள் என்றும், குணம் என்றும் இப்படிப் பலப்பல விதமாகப் பசுத் தன்மையின் மயங்கியும்,

“பதியை உருவென்றும், அருவென்றும், உருவரு என்றும், சிவ தத்துவமென்றும், சத்தி தத்துவமென்றும், சதாசிவமென்றும், மகேசுரன் என்றும், உருத்திரன் என்றும், மால் பிரமன் என்றும், ஆன்மாவே சீவன் என்றும், சிவன் என்றும், இரண்டாய் இருக்கும் என்றும், ஒன்றாய்ப் போம் என்றும், இரண்டும் ஒன்று மாய் இருக்கும் என்றும், சரீரம் என்றும், புருடன் என்றும், வேதமென்றும், ஆன்மாக்கலந்திருக்கு மென்றும், சத்தெனத் தங்கியிருக்கும் என்றும் ,பூதங்கங் என்றும், பிரமம் என்றும் இப்படிப் பலப் பல விதமாகப் பதித் தன்மையிலே மயங்கியும் நிற்பார்கள்.

ஆகையால், இந்தப்பரசமயங்களில் சிறிது ஒத்தும் ஒவ்வாமலும் இருக்கின்றபடியினலே சைவ சித்தாந்த முறையால் மும்மலம்விட்டு நீங்கி, ஆன்மா அருளைப் பெறுகின்ற முத்தியே நித்தியமான முத்தி. இந்த முத்தியைப் பெறுவதற்குச் சாம்பவதீட்சை பண்ண வேண்டும்.

> “ஞானச் சமயமே நாடுந் தனைக்காண்டல்
> ஞான விசேடமே நாடு பரோதயம்
> ஞானநிர் வாணமே நன்றறி வானருள்
> ஞானபி டேகமே நற்குரு பாதமே” (1476)

‘நண்ணும் பரோதயம்’; ‘நிர்வாணமே நற்சிவோகம் யாவம்’ எனப்பாட வேறுபாடு உண்டு.

இந்தப்படி ஞானத்திற்குச் சமய விசேட நிருவாண அபிடேகம் பண்ணிச் சைவ சித்தாந்த உண்மை உணர்ந்து வருமாறு:-

ஆகையால் மலபந்தமாயிருந்த ஆன்மாவுக்குத் திருவருளே அந்தந்த அவதரங்கள் தோறும் உடனாக இருந்துஊட்டுவித்த உபாயமும், திருவருள் ஆர்ச்சித்த முறைமையும் சொல்லுதற்கு வருமாறு: ஆன்மா இந்திரிய வியாத்தியில் பொருந்தும் போது சீவனென்றும், இருவினை நுகர்வில் பசு என்றும், சகலாவத்தையிற் பொருந்தி உடலை யான் என்று அபிமானிக்கச் சகலான்மா என்றும், இவை யனைத்தும் நீங்கிக் கேவலப் படுந்தன்மையில் கேவலான்மா என்றும், கேவலம் சகலம் இரண்டையும் நீங்கி மயக்கமற்ற இடத்தில் சுத்தன் என்றும், எல்லாம் தான் என்று வியாபித்த இடத்தில் வயிந்தவன் என்றும், தான் என்று அபிமானித்த சுதந்திரம் நீங்கி அதீதப்பட்ட இடத்திலே திரோதான்மா என்றும், ஞானத்தை நேராகக் கண்ட அளவில் ஞானவான்மா என்றும், நிறைந்த ஞானத்தைப் பொருந்தில் அறிவன் என்றும். அங்ஙனம் நிறைந்த ஞானந்தானே பரிபூரணமாக நின்றதை அகம் புறம் என்னும் சுட்டகற்றி அந்த அருளே சொரூபமாய் நின்றபோது பரர்பரன் என்றும், அங்ஙனம் நின்ற எண்ணில்லாத சுகரூபதரிசனம் ஆம் போதில் சுகதரிசனன் என்றும், அங்ஙனம் நின்ற பரமானந்தத்தில் பொருந்தி அதுவே தனுவாய் நின்ற போது பரமானந்தி என்றும், அங்ஙனம் நின்ற நிலையில் கூடுதல் நீங்குதலின்றித் தாடலைபோல் நிற்பது சுபாவம் என்றும் ஆகும். ஆனந்தம் மேலிடில் சிவநாமமாக ஆன்மாவின் அவதரப்பேர் பதினாறும்.

மேல் அருளின் அவதரப்பேர் வருமாறு: ஆன்மா வானது கேவலத்திற் பொருந்தின் அருளின் நாமம் பிரகிருதியான்மா. சகலாவத்தையிற் பொருந்தின் அருளான்மா. சத்தி ஆன்மா, சுத்தத்திற்பொருந்தில் அருட் சிவத்துவ ஆன்மா. ஆன்மா. உடலை அறிந்து அருளைக் காணுமிடத்தில் அருள் திரோதையாம். ஆன்மா அருளை அறிகிறபோது அருளறிவான்மா. ஆன்மா அருளுருவமாகில் அருட் கருணையாம். ஆன்மா சிவனை அணுகில் ஞானனந்தமாம்.

" இப்படியே திருவருளானது அந்தந்த அவதரங் கள் தோறும் உடந்தையாய் நீக்கமற நின்றுணர்த்து வது என்று அறிக. இந்தத் திருவருள் ஆன்மாவுக்கு சாலோகாதிபதம் அடைவிக்கும் வகை வருமாறு:

" ஆன்மா தத்துவாதீதனுய்த் தன்னைக்கண்ட இடம் சாலோகம். தன்னைக்கண்டு அருளைத் தரிசித்த இடம் சாமீபம். அருளும் ஆன்மாவும் இரண்டறக் கலந்த இடம் சாரூபம். அருள் சிவம் ஆன்மா மூன்றும் ஏகமாய் இரண்டற்று ஆனந்தவெள்ளத்து அழுந்துதல் சிவசாயுச்சிய பதம். இந்த நிட்டையை மேற்செய்யுளில் விரித்துச் சொல்லச் சித்தாந்த நிலை நிற்பது வருமாறு:

" முன்சொன்ன மந்திராதிகாரமும், அர்ச்சனுதி காரமும், யோகாதிகாரமும் உபாசனுமார்க்கத்தில் அநுட்டிக்கிறதனுல் சரியை கிரியை யோகம் மூன்றும் கிரியையாயிற்று. இந்தஉபாசனுமார்க்கத் தினுல் ஞானம் வரவேண்டும். ஞானமாவது: திரி பதார்த்த சொருப சுபாவங்களை அறிவது. அவற்றுள், பதி இலக்கணம்:

பதியாவது: உருவம் அருவம் ரூபாரூபம் என்னும் மூன்றுமாய், அவை அல்லவுமாய், ஓர் அடையாளப்படாததாய், வாக்கு மனங்களுக்கு எட்டாததாய். ஓர் ஆதரவும் இல்லாததாய், ஆதார மாகிய பாசமுமாய், அதற்கு இதமுமாய், பரபோகமு மாய், போதானந்தமாய், சிவமாய். சிவானந்தமாய், ஆனந்தாதீதமாய், அப்பாலாய், சர்வத்திர பரிபூரண மாய், சச்சிதானந்த வடிவாய் இருக்கும். மேற்பசு இலக்கணம்;

பசுவாவது; கிஞ்சிக்ஞனுய், அறியாதவனுய்' இத அகிதங்களிலே சுக துக்கப்படுகின்றவனுய், சீவன் புருடன் புமான் என்னும் பெயரையுடைய வனுய், கருவிகட்கு நாயகமாய், அந்தக்கரண சாட்சி யாய், அறிவே வடிவாய் இருப்பதாம். மேற்பாச இலக்கணம்;

பாசமாவது: ஆன்மாவை அநாதியிலே விட்டு நீங்காமல் செம்பில் களிம்புபோலவும், இரத்தினத்தை அடக்கின சர்ப்பம் போலவும், கண்ணை மறைத்த படலம் போலவும் மறைத்து நிற்பதாய், பஞ்சமலங் களாய், தனு கரண புவன போகங்களுமாய் இருப்பது பாச சொரூபம். ஆக இந்தத் திரிபதார்த்த சொருப மும் அறிந்து பரகதியடைவதற்குப் பரமேசுவரன் அருளிச்செய்த சிவாகமங்களில் உணர்த்துகின்ற முறைமையில் முப்பது அவதரமாக அருளிச் செய்தது. அவை வருமாறு:

பஞ்சபூதப் பழிப்பு, பொறியறவுணர்தல், அந்தக் கரண சுத்தி, கலாதி ஞானநிராகரணம், சுத்த தத்துவ தூடணம், தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவ

சுத்தி, கேவலம், கேவலதரிசனம், கேவலாதீதம், ஆன்ம சொரூபம், ஆன்மதரிசனம், ஞானதரிசனம், ஞானாதீதம், பரைஞான தரிசனம், பரைஞான யோகம், பரைஞானபோகம், சாக்கிராதீதம், சுத்தாவத்தை, சுகரூபம், சுகாதீதம், சிவப்பேறு. முன் சொன்ன ஆன்மசுத்தி, பரமானந்ததரிசனம், பரமானந்தயோகம், பரமானந்தபோகம், ஆன்மலாபம், பரமானந்த மேலீடு, உலகப்பழிப்பு ஆக அவதரம் முப்பதாம் என்க.

இந்த முறைமையில் குருவருளினுலே அனுக்கிரகம் பெற்றுப் பரகதி அடையவேணும், இவை விரிவானபடி இதனுலே சுருக்கமாக இந்த முப்பது அவதரத்தையும் தசகாரியமாகச் சொன்னது. அவை யாவன: தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி இவை மூன்றும் பூதப்பழிப்பு. பொறியறவுணர்தல், அந்தக்கரணசுத்தி, கலாதிஞானம், நிராகரணம், சுத்ததத்துவதூடணம் இவை நான்கும் ஆன்ம சொரூபம். கேவலம், கேவல தரிசனம், கேவலாதீதம், தன்னுண்மை இவை நான்கும் ஆன்ம தரிசனம், சைதன்னியதரிசனம், ஞானதரிசனம், ஞானாதீதம் இவை மூன்றும் ஆன்மசுத்தி. பரைதரிசனம், பரைஞானயோகம், பரைஞானபோகம், பரைஞானமேலீடு இவை நான்கும் சிவரூபம், சாக்கிராதீதம், சுத்தாவத்தை. சுகரூபம், சுகாதீதம், சிவப்பேறு இவை ஐந்தும் சிவதரினம். பரமானந்த தரிசனம், பரமானந்த யோகம், பரமானந்தபோகம். பரமானந்தமேலீடு இவை நான்கும் சிவயோகம். உலகப்பழிப்பு, மறித்தக்காட்சி, சீவன்முத்தி இவை மூன்றும் சிவபோகம். ஆக இந்தப்படி முப்பது

அவதரமும் தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோக மாகப் பத்து காரியமாகச் சொன்னது.

பதிமுதுநிலை, உயிரவைநிலை, இருண்மலநிலை, அருளதுநிலை, அருளுருநிலை, அறியும்நெறி, உயிரவை விளக்கம் இன்புறுநிலை, அஞ்செழுத்தருள்நிலை, அணைந்தோர்தன்மை ஆகட்டத்து, மெய்கண்டசாத்திரம் உண்மைநெறி விளக்கத்தில் ஏழு வினுவாகச் சொன்னது. தத்துவ விளக்கம், ஆணவ தரிசனம், வினைப்பயன், ஆன்மதரிசனம், அருள்தரிசனம், நடன தரிசனம், அஞ்செழுத்துண்மை ஆக வினு ஏழு. இப்படி உணர்த்தும் முறைமையில் விரிவும் குறைவு மாக இருக்கிறதினுல் இந்தநூலில் பன்னிரண்டு அவதரமாகச் சொன்னது. அவை யாவை எனில், பாசம், பாசாதீதம், போதம், போதானந்தம், அருள், அருளானந்தம், பரை, பரானந்தம், சிவம், சிவானந்தம், ஆனந்தா தீதம், அப்பால் நின்ற பேரொளி ஆக அவதரம் பன்னிரண்டும் தரிசிக்க, சிவசாயுச்சியபதம் அடையலாம். தரிசன முறை எப்படி ? என்னில், விரித்துச் சொல்லில் உரை பெருகும், அவற்றை முதனூல்களில் கண்டு கொள்க, (264)

வேதாந்தந் தன்னி லுபாதிமே லேழ்விட
நாதாந்த பாசம் விடுநல்ல தொம்பத
மீதாந்த காரணே பாதியேழ் மெய்ப்பரன்
போதாந்த தற்பதம் போமசி யென்பவே. 2386

இ – ள்: வேதாந்தத்திலே சீவோபாதி ஏழும் விட நாதாந்தமாகிய பாசம் விடும் நல்ல தொம்பதமாம்

தொம் என்பது நீ என்னும் ஆன்மாவைக் குறிக்கும். மேலுள்ள முடிவாகிய காரண உபாதிகள் ஏழாம், உண்மைப் பொருளாகிய பரம்பொருள் அறிவின் முடிபாகிய போதாந்தத்திற்கூறும் தத்பதமாம். (தத்—அது) அசி என்பது சீவ சிவன் ஒன்ரும் நிலை என்பர். என்றவாறு.

" சீவ உபாதிகளாவன: சுரோத்திராதி 5, வாக்காதி 5 ஆகப்பத்து சத்தாதி 5, வசனுதி 5 ஆகப் பத்து, உடல் 1, இந்திரியம் 1. அந்தக்கரணம் 4, பிராணவாயு 1 ஆக ஏழு உபாதியோடும் கூடித் தூலதேக வியாத்தியாய் இருப்பன். இதற்கு நவசயிக்கினையாவன; தூலதேகம், சாக்கிராவத்தை, விசுவன் அபிமானி, இராசதகுணம், கிரியாசத்தி, நேத்திரத் தானம், உயுத்தபோகம், அகார மாத்திரை, சீவாத்மா என்னும் இந்த நவசயிக்கினையோடும் கூடிக் கூடாமல் நின்ற சீவாத்மனே தூலதுரியம்.

" இந்தத் தூல துரிய லட்சணத்தையும் விட்டு மேலாகி நின்றதே தூலத்தில் துரியாதீதம். மேல் சூக்குமதேகம்: தூலத்தில் உடல் இந்திரியம் இரண்டும் நிற்க அந்தக்கரணம் நாலும், பிராணவாயு ஒன்றும் சூக்குமதேகம் ஆச்சுது. இதற்கு நவசயிக்கினையாவன: சூக்குமதேகம், சொப்பனுவத்தை, தைசதன் அபிமானி, சாத்துவிககுணம், இச்சாசத்தி, கண்டத்தானம், பரியுத்தபோகம், உகாரமாத்திரை, அந்தராத்மா என்னும் இந்த நவசயிக்கினையோடும் கூடிக் கூடாமல் நின்ற அந்தராத்மனே சூக்கும துரியம்.

" இந்தச் சூக்குமதுரிய லட்சணத்தையும் விட்டு மேலாகி நின்றதே சூக்கும துரியாதீதம், மேல் காரண தேகம். சொப்பன தேகத்தில் நின்ற உபாதி ஐந்தில் மனமும் புத்தியும் ஆங்காரமும்நிற்க. சித்தமும் பிராணவாயுவும் காரணதேகம் ஆச்சுது.. இதற்கு நவசயிக்கினையாவன :- காரணதேகம், . சுழுத்தி அவத்தை, பிராக்ஞன் அபிமானி, தாமதகுணம், திரோதானசத்தி, இருதயத்தானம், ஆனந்தபோகம், மகாரமாத்திரை, பரமாத்மா என்னும் இந்த நவசயிக்கினையோடும் கூடிக் கூடாமல் நின்ற பரமாத்மனே காரண துரியம்.

" இக்காரண துரிய லட்சணத்தைவிட்டு மேலாகி நின்றதே காரண துரியாதீதம், மேல் மகா காரண தேகம், காரணதேகத்தில் நின்ற உபாதி இரண்டில் சித்தம் நிற்கப் பிராணவாயு ஒன்றும் மகா காரண தேகம் ஆச்சுது. இதற்கு நவசயிக்கினையாவன :- மகாகாரண தேகம், துரியாவத்தை, பிரத்தியே காத்மன் அபிமானி, சுத்த சாத்துவிககுணம், ஞான சத்தி, இலாடத்தானம், ஆனந்த உபாசபோகம் ஓங்காரமாத்திரை, நின்மலாத்மா் என்னும் இந்த நவசயிக்கினையோடும் கூடிக் கூடாமல் நின்ற நின்மலாத்மனே காரண துரியம்.

" இந்த மகா காரண துரிய லட்சணத்தையும் விட்டு மேலாகி நின்றதே மகா காரண துரியாதீதம். இந்த நின்மலாத்மா உபாதியோடும் கூடி நிற்கின்ற முறைமையும், உபாதியும் நீங்கித் தன்னை அறியும் தன்மைக்கு உதாரணம் வருமாறு;

அஞ்ஞானம், ஆவரணம், விட்சேபம், பரோட்ச ஞானம், அபரோட்சஞானம், சோகநிவிர்த்தி, நிரங் குசதிரத்தி ஆக சீவ சத்தாவத்தைகள் ஏழு.

இதில் பிரத்திகாத்மனை அறியாதிருப்பதே அஞ் ஞானம். பிரத்திகாத்மன் இல்லை என்றும், தோற்றுது என்றும் இந்த உபயவித சந்தேகமே ஆவரணம். தேகாபிமானியான சிதாபாச சீவன்தானே கன்மத் துரு, கன்மபலபோத்துரு என்று எண்ணுகிறதே விட்சேபம். 'நீயே பிரமம்' என்னும் வேதவாக்கிய விசார பரிபாக. வசத்திருந்து பிரத்திகாத்மனே சுருதி ஆசாரியர் வாக்கிய விசாரத்திலிருந்து பிரத்திகாத்மா உண்டென்று அறிகிறதே பரோட்சஞானம், இந்தச் சைதன்னியன் சீவ உபாதியை நீங்கும் தன்மை எப்படி? என்னில், தூலதேகம், அந்தக்கரணம் 1, அவித்தை 1, சீவன் 1, சீவசாட்சி 1, சைதன்னியன் 1, ஆக ஆறுவிதமாயிருந்து சைதன்னியன் சீவ சாட்சியை நடத்த. சீவசாட்சி சீவனை நடத்த, சீவன் அவித்தையை நடத்த, அவித்தை அந்தக்கரணத்தை நடத்த, அந்தக்கரணம் தூலதேகத்தை நடத்தும். அஃது எப்படி ? என்னில்,

குடம்போல தேகம், குடத்தில் நீர் போல அந்தக் கரணம், தண்ணீரில் அழுக்குப்போல அவித்தை, ஆகாசம் பிரதிபிம்பம்போல சீவன், குடத்துள் ஆகாசம் போல சீவசாட்சி. வெளி ஆகாசம்போல சைதன்னியன் என்க. ஆகையால் இதற்கு நிவிர்த்தி வருமாறு:-

ஆகாச பிரதிவிம்பமும், குடத்துள் ஆகாசமும், வெளியாகாசமுமாக மூன்று விதமாகக் கண்டாலும்

ஆகாசம் ஒன்றானதுபோல சீவனும் சீவசாட்சியும் சைதன்னியமும் ஒன்று. கண்ணீரும் மூக்கும்போல ஒப்புமையால் அந்தக் கரணமும் அவித்தையும் ஒன்று. குடம்போலத் தேகமாகக் குடம் உள்ள அளவுமே தண்ணீர் இருக்கிறது. அதுபோல, தேகம் உள்ள அளவும் அந்தக் கரணமும் அவித்தையும் இருக்கும், இது தேகம் என்றும், அந்தக் கரணம் என்றும் அறிகிறது சீவசாட்சி. அவ்வறிவாகிய ஞானக்கினியினாலே தேகத்தை மித்தையாகப் பார்த்திடில் குடம் உடைந்த உடனே தண்ணீர் சிந்திப் போகிறது போல அவித்தையும் அந்தக் கரணமும் நாசமாம். அப்போது குடத்துள் ஆகாசமும் வெளி ஆகாசமும் என இரண்டாக இருந்ததுமில்லை, கூடினதுமில்லை. குறைந்ததும் இல்லை. போக்குவரவும் இல்லை. சும்மா இருந்தபடியே இருந்தது. அ போல சீவசாட்சியும் சைதன்னியமும் என்றறிக. இதுவே சீவன்முத்தி இதற்கு இலக்கணை விட்டலக்கணை. இதற்கு உதாரணம்:

" பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணம்
தன்னை மறைத்தது தன்கர ணாங்களாத்
தன்னின் மறைந்தது தன்கர ணங்களே. " — 2289.

தொம்பத சிரவணம் முற்றியது. இனி தொம்பத லட்சணம் கூறுவாம், பஞ்சாக்கரத்தில்:

நம – தொம்பதம், சிவ – தற்பதம், ய - அசிபதம்; இவை தூலம். சூக்குமம்; ய – தொம்பதம், வ – தற்பதம், சி – அசிபதம். நகாரம் வகாரத்தில் அடங்கும்

மகாரம் சிகாரத்தில் அடங்கும். சூக்கம பஞ்சாட்சரம் மூன்று பதமாயிருக்கும். இந்தப் பரமாத்மா சைதன்னியமாய் ஆத்மாவாகவும் ஏகமாகவும் நின்றது எப்படி ? என்னில், 'நமயவசி' என்பது நகாரம் திரோதம், மகாரம் மலம், யகாரம் ஆத்மா, வகாரம், அருள், சிகாரம் சிவம், நகார மகார யகார வகாரம் யகாரம் வரைக்கும் உயிராகையால் சீவாத்மா என்று பேராயிட்டு, சிகாரத்தில் பரம் ந – ம பொருந்தி யிருக்கும். உபாதி நீங்கின இடத்தில் சீவாத்மாவே பரமாத்மாவாம்.

" இனி, ஒரு விடயத்தைக் காணுங்கால் ஆன்ம போதம் கண்ணொளி எனத் தான் என வேறு இன்றி, உடனாய் நின்று காணுமாறுபோல, முதல்வன் ஐந் தொழில் செய்யுங்கால் உயிர்களின் உடனாய் நின்று செய்வன். " அவையேயாய்த் தானேயாய் அவையே தானேயாய் " என்றமை காண்க.

" அது நீ ஆகின்றாய் " எனவும் "அதுவானேன்" எனவும். " அதுஇது " எனவும், " அதுநான் " எனவும் பொருள்படும் " தத்துவமசி " முதலிய மகாவாக்கியங்களின் பொருளே ஈண்டு எடுத் தோதினர். மகாவாக்கியப் பொருளாகலானன்றே பயன் ஒத்துள். " அவனே தானே ஆகிய அந்நெறி " என இதனை அநுவதித்துச் சுட்டியமை காண்க.

இன்னும், ஆன்மாக்களின் முதல்வன் நிற்குமாறு கூறவே அவ்வான்மாக்களின் வியாப்பியமான மாயை கன்ம மாயேயங்களினும் அவ்வாறே நிற்பன் என்பது போதரும்.

வேதத்துள் 'ஏகம்' என்ற சொல் வேறு பொருள் படாது 'ஒன்றென்றது ஒன்றேகாண்' என்றும், அதற்குத் தாற்பரியம் 'விண்ணும் மண்ணும் தோற்றுவிக்கின்ற தேவன் ஒருவனே' (சுவேதாச் சுவதரம்) என்றும், 'ஒருவனே உருத்திரன் இரண்டாம் முதற்கடவுள் இல்லை' என்றும், பிரமப் பொருள் ஒன்றே என்றும், (பிருகதாரணியம்) ஓது கின்ற அச்சுருதிப் பொருளே பற்றி 'ஒன்றே பதி' என்றும் பதியோடு உயிர்களிடை வேற்றுமை கூறுவார் 'பாசத்தோடு உளேகாண்' என்றும், 'பிரமப்பொருள் இல்லையாயின் ஒரு பொருளுமில்லை' என்னும் சுருதிப்பொருள் முரணுகாது, வேருயினும் வேறன்மைக்கு அனுபவம் 'அக்கரங்கள் இன்ரும் அகர உயிரின்றேல் இக்கிரமத்தென்னும் இருக்கு' என்பதனுல் பெறப்படும். இதன் விரிவெல்லாம் சிவஞான பாடியம் நோக்கி அறிக. (265)

அண்டங்க ளேழுங் கடந்தகன் றப்பாலும்
உண்டென்ற பேரொளிக் குள்ளா முளவொளி
பண்டுறு நின்ற பராசத்தி யென்னவே
கொண்டவ னன்றிநின் றனெங்கள் கோவே. 2387

இ – ள் : அண்டங்கள் ஏழையுங்கடந்து அகன்று அப்பாலும் உண்டு என்ற பேரொளியினுள்ளே ஆகும் உள்ள ஒளியானது அநாதியே பொருந்தி நிலைபெற்ற பராசத்தி என்றே கொண்டருளினன். அல்லாமலும் எங்கள் தலைவனுகிய சிவபெருமான் கலப்பால் ஒன்ரு யிருந்தான் எனினும் பொருட்டன்மையால் வேறு பட்டு நின்றருள்வான் என்றவாறு.

சிற்பர வியோமமாகும் திருச்சிற்றம்பலம் பராசத்தி வடிவேயாம், பேரொளி சிவபரம் பொருள், அந்த ஒளிக்குள்ளாம் உள்ள ஒளி – பராசத்தி. அஃது அநாதியே பேரொளிக்குள் உள்ளொளியாய் அடங்கியிருந்தது என்க.

கலைக்கு மேலாகிய ஒளியான அசுத்த மாயை ஒளி, அதற்கு மேலாகிய சுத்த வித்தை ஒளி, அந்தச் சுத்த வித்தை ஒளிக்கு மேலாகிய விந்து ஒளி, அந்த விந்துவாகிய ஒளிக்கு மேலாய் அநுக்கிரகமே தொழிலான சதாசிவனுக்கு மேலாய்க் கிருபைதானை பராசத்தி ஒளி, அந்தப் பராசத்திக் தக் காரணமாகிய பரமசிவம் என்க (266)

**கோவுணர்த் துஞ்சத்தி யாலே குறிவைத்துத்**
**தேவுணர்த் துங்கரு மஞ்செய்தி செய்யவே**
**பாவனைத் தும்படைத் தர்ச்சனை பாரிப்ப**
**ஓவனைத் துண்டொழி யாத வொருவனே. 2388**

இ – ள்: சிவ சத்தியை அதிட்டித்து நின்று சிவ பரம்பொருள் ஆன்மாக்களுக்கு உணர்த்தும், திருவருளே திருமேனியாகக்கொண்டு எழுந்தருளிய குருபரன் ஒரு குறியின்கண் நிறுத்தி உணர்த்தியருளுவர். அவர் அவ்வாறு உணர்த்தியருளியபடியே பூசை, தியானம், ஓமம் முதலியவற்றைச் செய்க அவ்வாறு செய்வதனால். தோத்திரப் பாட்டுக்களையெல்லாம் கூறி அருச்சனைகளை நிரம்பச்செய்ய அனைத்துமாகிய பாச ஞானம் பசுஞானங்களும் மலங்களும் எஞ்சிய வினைகளும் ஒழிந்துபோம். பின்பு ஒழியாத பரம்பொருள் ஒன்றே நிலைபெறும். ஆகையால் அவ்வாறு செய்து

சிவபரம்பொருள் உள்ளத்திலே விளங்கித் தொன்று மாறு செய்க என்றவாறு.

' குருவின் அருளால் அறிவதொரு குறியின்கண் உறைத்து நின்றுகொண்டு, காலாக்கினிபுவனம் முதல் அநாசிருதபுவனம் ஈறுயுள்ள எவ்வகைப்பட்ட புவன மும் இதற்குமுன் அனுபவித்துக் கழித்தமையின் கான்ற சோறு எனக்கண்டு அருவருத்து விட்டு, அறுவகை அத்துவா உட்பட்ட மூவகைப் பிரபஞ்ச மும் காரண ரூபத்தில் சிறிதும் காணப்படாமையால் பித்திகை வடிவம் காண்பார்க்குக் காணப்படாததாய் அதன்கண் மறைந்த சித்திரவடிவம் போல முழுப் பொய்யெனக் கண்டு அவ்வாறுகண்டகாட்சி சலியா திருக்கப் பெறின், அப்பிரபஞ்சத்திற்கு விலக்கண மான ஞானசொரூபம் ஆண்டு இனிது விளங்கித் தோன்றும். தோன்றவே, வறியார்க்கு நிதிவாய்த் துழிப்போல அதன்கண் பெருங்காதல் மீதூரும். அது மீதூரவே "இன்பில் இனிதென்றல் இன்றுண்டேல் இன்றுண்டாம் – அன்பின் நிலேயே அது" ஆகலான், அந்த அன்பின் வழியே பேரின்ப மயமாய்ப் புகுந்து உயிரின்கண் விளங்கித் தோன்றும் அந்த ஞானத் திற்கு முதலாகிய ஞேயம் என்க."

இதனுனே ' ஆசைதரும் உலகமெலாம் அலகைத் தேராம் ' என்று அறிந்து அகலுமாறும் அங்நிலேயே ஆமாறும் வகுத்துணர்த்தியமை காண்க.

கோ – சிவம் ; ஆன்மா எனினுமாம். தே சத்தி யாலேகுறிவைத்து உணர்த்தும்: தே குறிவைத்து உணர்த்தும் கருமம் செய்தி ; செய்ய அனைத்தும் ஓ

(வுதல்) உண்டு: பின்பு ஒழியாத ஒருவனே உண்டு எனக்கூட்டுக. ஒவுதல் – ஒழிதல். (267)

ஒருவனை யுன்னா ருயிர்தனை யுன்னார்
இருவினை யுன்னா ரிருமாயை யுன்னார்
ஒருவனு மேயுள் ளுணர்த்திநின் றூட்டி
அருவனு மாகிய வாதரத் தானே 2389

இ – ள்: ஒப்பற்ற பரம்பொருளாகிய சிவபெருமானை எண்ணமாட்டார். உயிரைப்பற்றிய உண்மையினையும் ஆராய்ந்தறியார். நல்வினை தீவினைகளையும் அதனால் விளையும் இன்பத் துன்பங்களையும் எண்ணார். சுத்தமாயை, அசுத்தமாயைகளையும் குறித்துணரமாட்டார் ஒப்பற்ற சிவபெருமானே இவைகளெல்லாவற்றையும் உள்ளே நின்று உணர்த்தியும், அவ்வினைகளெல்லாம் கழியுமாறு இருவினைப் பயனையும் ஊட்டி அருளுகின்றான். அவ்வாறு உணர்த்தியும் ஊட்டியும் அருவப் பொருளாயும் நின்றான். அப்பெருமானே எல்லாவற்றுக்கும் ஆதாரமாயுள்ளான் என்றவாறு.

இருவினை நல்வினை தீவினைகள், இருமாயை, சுத்தமாயை அசுத்தமாயைகள். சுத்தப் பிரபஞ்சத்துக்கு முதற்காரணம் சுத்தமாயை; அசுத்தப் பிரபஞ்சத்துக்கு முதற்காரணம் அசுத்தமாயை, சுத்தப் பிரபஞ்சம் சிவதத்துவம் முதலாயின; அசுத்தப் பிரபஞ்சம் கலை முதலாயின சுத்தம் அசுத்தம் என்பன யாவை எனின். துன்பத்தோடு விரவுதலின்றி இன்பமாத்திரையே பயத்தற்கு ஏதுவாயது சுத்தம் ஏனையது அசுத்தம் என்க. ஆதாரம் – நிலைக்களம். (268)

அரனன்பர் தானம தாகிச் சிவத்து
வருமவை சத்திகண் முன்ளு வகுத்திட்
டுரனுறு சங்நிதி சேட்டிப்ப வென்றுங்
திரனுறு தோயாச் சிவாநந்தி யாகுமே. 2390

இ - ள்: அரன் என்னும் திருநாமத்தையுடைய சிவபெருமான் மெய்யடியார் உள்ளத்தையே தமக்குக் கோயிலாகக்கொண்டு அங்கே எழுந்தருளியுள்ளார். "முதல்வன் சங்நிதியில் உயிர் சேட்டிக்கும்" என்பது ஆகம அளவை. ஈண்டுச் சங்நிதி என்றது சிவசத்தி, அவ்வக்காரியங்களில் உன்முகமாதலாகிய சங்கற்ப மாம். தன் வயத்தனுகிய முதல்வன் சத்தி சங்கற்பத்தால் அனைத்தையும் செய்தலால் விகாரமில்லாது நிற்பன். ஆகலின் உரன் உறு சங்நிதி எனக்குறித்தார். உரன் - சத்தி, சேட்டித்தல் என்றது தொழிற் படுதலாம். உயிர்கள் எப்பொழுதும் நிலைபெறத் தோய்ந்து சிவானந்தத்தை நுகரும் என்றவாறு.

உயிர்களுக்குப் பலவகையாக உணர்வு நிகழ்கின் றது. இங்ஙனம் உயிர்களுக்குப் பலவகையாக உணர்வு உண்டாவதற்குக் காரணம் முதல்வன் பலவகையால் உணர்த்துதலாம். உயிர்களுக்குப் பசுத்தன்மை நீங்கிச் சிவத்தன்மை விளங்குதற்குரிய இரக்கம் முதல் வனுக்கு அநாதியே உள்ளதாம். அவ்விரக்கம் முதல் வனுக்கு வேறன பொருளன்று. முதல்வனுக்குரிய சத்தியாகும் அவ்விரக்கமாகிய அருள்குணமாம்; முதல்வன் குணியாம். ஆகலால், அவ்வருள் முதல்வனையின்றித் தனித்திராது முதல்வன் அவ்வருளையின்றித் தனித்திரான் ஞாயிறு தன் ஒளியோடு தாதான்மியமாய்க்கூடி நிற்றலைப்போல, முதல்வனும் அவ்வருளோடு தாதான்மியமாய்க் கூடி

நிற்பன். இவ்வியல்பு சித்தாந்த நெறியுடையார்க்கு இனிது விளங்கும். ஆதலால் தன்வயத்தனுகிய முதல்வன் தனது சத்தியின் சங்கற்பத்தால் எல்லாம் செய்தலின் விகாரமடைவானல்லன் என்க.

இங்கே சந்நிதி என்றது முன்னிலே அன்று, சிவ சத்தி அந்தந்தக் காரியங்களில் எழுதலாகிய சங்கற்பத்தையாகும்,

" இனி இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேருவான் காணவே தமது முதல் சீபாதத்தை அணையும் என்றது மேற்கோள். "

பலவகையான விடயங்களைத் தன்னிடத்தில் காட்டி நிற்றலாகிய பொது இயல்பினைச் செய்கின்ற 'பொறிகளைத் தமக்கு வேறு' என்று உணர்ந்து பொது இயல்பு பொய்யாக ஒழியும்படி தன்னுடைய சித்தாயும் வியாபகமாயும் உள்ள சிறப்பியல்பை உணர்ந்தவர்களுக்கு அங்ஙனம் உணர்த்தலே அமையும் ; கருவிகள் நீங்கியபோது முயற்சிசெய்தல் இயலாது. ஆதலால் சிவசத்துக்கு அடிமையாதல் பெறப்படாது என்பர் பேதவாத சைவர் முதலியோர்.

ஐம்பொறிகளால் மயக்கமுற்றுத் தன்னுடைய சிறப்பியல்பை உணராத ஆன்மா, சித்தாகியும் வியாபகமாகியும் உள்ள தன்னுடைய சிறப்பியல்பைச் சடமாயும் ஏகதேசமாயுமுள்ள இந்திரியங்களின் வேறு என்று உணரும் வியாபக உணர்வினுக்கு இந்திரியங்களினுல் செய்யக்கூடியது ஒன்று மில்லாமையால் குருவினுல் அங்ஙனம் உணரவே வேறு காரணத்தை விரும்பாமலே தனக்கு ஆதாரமாகிய முதல்வனது திருவடியினை அடையும் என்க.

இந்திரியத்தின் வேறுவான் காணுதலே திருவடியை அணைதற்கு உரிய காரணமாம் என்றபடி.

ஒருவன் ஊசலில் ஏறியிருந்து ஆடுகின்றபோது ஊசலினது கயிறு அறுமேயானால் அப்பொழுது அவனுக்குத் தாய்போல ஆதாரமாக இருந்து தாங்குவது நிலனாகும், அங்ஙனம் தாங்குவது நிலனல்லாது வேறில்லை.

ஒருவன் அணையை உயர்த்திக் கட்டித் தடுக்க அதனால் அவ்விடத்தில் தடைப்பட்டுத் தேங்கியிருந்த ஆற்றுநீர் தடையாகிய அணை உடைந்து, தடை நீங்கிய பொழுது, இடையில் நில்லாது முடுகிச் சென்று கடலினை அடைந்து கடல் நீரேயாய்க் கடலினுள் தான் அடங்கி மீண்டும் திரும்பி வாராது நிற்கும். அது போல். உயிர் ஐம்பொறிகளாகிய கருவிகளினால் உண்டாகிய பாசஞானம் தன்னுடைய வியாபகத்தைத் தடைசெய்ய அப்பாச ஞானத்தினிடத்து ஏகதேசமாய் அடங்கித் தடைப்பட்டு நின்று பாசஞானமாகிய தடை நீங்கிய பொழுது எப்பொழும் கேடிலதாகிய சிவபிரானது திருவடியை அடைந்து திருவடிமயமாய் அத்திருவடியின் கண்ணே அடங்கிப் பிறகு மீளாது நிற்கும்.

வேதாந்த தொம்பத மேவும் பசுவென்ப
நாதாந்த பாசம் விடநின்ற நன்பதி
போதாந்த தற்பதம் போயிரண் டயிக்கியஞ்
சாதா ரணஞ்சிவ சாயுச்சிய மாமே. 2391

இ – ள் ; வேதாந்தத்திலே சொல்லப்படும் தொம்பதமானது பசு என்னும் ஆன்மாவைக் குறிப்பதாம்

என்று சொல்லுவர். நாதாந்தத்திலே உள்ள பாசத்தை இயல்பாகவே நீங்கிநின்ற நல்ல பதிப்பொருள் அறிவின் முடிபாகவுள்ள தத் என்னும் பதமாம். பாசம் நீங்கப் பெற்ற உயிரும் இயல்பாகவே பாசத்தின்நீங்கிய பதிப் பொருளும் ஆகிய இரண்டும் இரண்டறக் கலத்தலே இயல்பாகச் சிவசாயுச்சியம் என்று கூறப்படும்.

'தத்துவமசி' அது நீ ஆகின்றனை எனவும், 'சோகமஸ்மி' அவன் நான் ஆகின்றேன் எனவும், 'சோய மஸ்தி' அவன் இது ஆகின்றான் எனவும், மூவிடம்பற்றி மகா வாக்கியம் நிகழும்.

'அது நீ ஆகின்றனை' என்பது முன்னிலை மகா வாக்கியம். இந்த மகா வாக்கியத்தில், அது என்பது சிவமாகிய ஒரு பொருள், நீ என்பது ஆன்மாவாகிய மற்றொருபொருள், ஆகலின் ஒரு பொருள் மற்றொரு பொருள் ஆதல் எப்படி ?

'அவன் நான் ஆகின்றேன்' என்பது தன்மை மகா வாக்கியம். இந்த மகா வாக்கியத்தில், அவன் என்பது சிவனாகிய ஒருபொருள், நான் என்பது ஆன்மாவாகிய மற்றொரு பொருள், ஆகலின் ஒரு பொருள் மற்றொரு பொருளாதல் எப்படி ?

'அவன் இது ஆகின்றான்' என்பது படர்க்கை மகாவாக்கியம். இந்த மகா வாக்கியத்தில், அவன் என்பது சிவனாகிய ஒரு பொருள். இது என்பது ஆன்மாவாகிய மற்றொரு பொருள். ஆதலின் ஒரு பொருள் மற்றொரு பொருளாதல் எப்படி ? என ஐயம் நிகழுமன்றே ! அவ்வையம் நீங்குதற்கு.

" சொன்ன தத்துவ மசியெனும் சுருதியின் மொழியும்
மன்னு காரண பதியும்நான் எனவரும் பசுவும்
என்ன வேபொருள் இருமைகண் டியைந்துவே றன்மை
தன்னை நாட்டிய தல்லது தனியென்ப தின்றே "

எனப் பெரியோர் கூறுவர். அவ்விருபொருட்கும் உளதாகிய சம்பந்த விசேடம் உணர்த்துதலே ' அத்து விதம் ' என்னும் சொற்குப் பொருளாம்.

'அத்துவிதம்' என்னும் சொல்லியல்பு அன்மைப் பொருள்பற்றி இரண்டன்று என வேற்றுமைப்படா மையை விளக்கி நிற்பதாம் என்க.

இனி, நித்தியாநித்திய வஸ்து விவேகம்–இகமுத் திரார்த்த பலபோக விராகம் – சமாதிசட்க சம்பத்தி – முமூட்சுத்துவம் எனச் சாதனம் நான்கு என்பர். நித்தியா நித்திய வஸ்து விவேகமாவது – பரமான்மா நித்தியன் என்றும், தேகாதிப்பிரபஞ்சம் காரியப் பாட்டால் அநித்தியம் என்றும் பகுத்தறிதல், இக முத்திரார்த்த பலபோக விராகமாவது; இகலோக பரலோகங்களில் உள்ள போகங்களில் அநித்த துக்காதி தோஷதரிசனத்தால் வாந்தாசன மூத்திர புரீஷங்களிற்போல வெருவருப்புற்று ஆசைவிடுவது. சமாதி சட்க சம்பத்தியாவது: சமம் தமம் உபாதி திதீட்சை சமாதி சிரத்தை முதலியவற்றின் பிராப்தி; முமூட்சுத்துவம் – சிவப்பிராப்தியும் அனர்த்த நிவிர்த்தியும் மோட்சதுக்கு ஏதுவாகலின் இவற்றின் கண் உளதாகும் இச்சை

மேலே குறித்த சாதனங்களிலே நான்காவது சாதனம் முமூட்சுத்துவம். இந்த முமூட்சுத்துவம்

எய்தினவன் முமூட்சு. இந்த முமூட்சுவால் அடையத்தக்க முதல் மோட்சம் சிவசாலோக்கியம், இரண்டாவது மோட்சம் சிவசாமீப்பியம், மூன்ருவது மோக்ஷம் சிவசாரூப்பியம், நான்காவது மோட்சம் சிவசாயுச்சியம், இதுவே முடிந்த மோட்சம். இவைகளைப் பெறுதற்குச் சரியையாதிகளைச் செய்தே தீர வேண்டும். ஆகலின், சாதன சதுட்டயம் அடைந்த பின்னர் சரியையாதிகள் அடைய வேண்டும். இதனுல் சிறப்பு நூலாகிய ஆகமங்களில் குறித்த சாதனங்களுக்குப் பொது நூலாகிய வேதங்களில் குறித்த சாதனங்கள் சோபானம் என்பதாயிற்று.

முன்னே பிரம சொரூபம், செகசீவபரம். சீவ த்ரிசனம் பரதரிசனம் சிவதரிசனங்கள்; தொம்பதம், தொம்பதலட்சணம் தத்பதமனனம் முதலியன விரித்துரைக்கப் பெற்றன.

இனி, அசிபதமாவது சிவம். அந்தச் சிவத்துக்கு உபாதி அபிமானத்துள் அடக்க, மாயையால் அபிமானி மூன்று, அவை: சித்சொலிதை, பிரசாபத்தியன், புற்புவ சாந்தன் என்ற மூன்று அபிமானியோடும் கூடி, சீவ பரம் இரண்டும் சமரச ஐக்கியமே சிவதரிசனம், இதற்குக் கண்டமான குண அவத்தை நாலு. அவை வருமாறு: தொம் பதத்தில் தூலதேகமும் தத்பதத்தில் விராட்டு தேகமும் ஏகார்த்தமானதே, அசிபதத்தில் கண்ட பரமே – சாக்கிரம்; இதற்கு அபிமானி – சிற்சொலிதை, தொம்பதத்தில் சூக்கும தேகமும், தத்பதத்தில் இரணிய கெர்ப்ப தேகமும் ஏகார்த்தமானதே, அசிபதத்தில் கண்ட விசுவக் கிராசனே – சொப்பனம், இதற்கு அபிமானி–

பிரசாபத்தியன், தொம்பதத்தில் காரணதேகமும், தற்பதத்தில் அவ்வியாகிருத தேகமும் ஏகார்த்த மானதே. அசிபதத்தில் கண்ட உபசாந்தமே—சுழுத்தி. இதற்கு அபிமானி – புற்புவசாந்தன். தொம்பதத்தில் மகா காரண தேகமும். தத்பதத்தில் மூலப்பிரகிருதி தேகமும் ஏகார்த்தமானதே. அசிபதத்தில் கண்ட துரியம் இதுவே. அவத்தை நாலும் முற்றியது.

"இதற்குப் பிரமாணம் வேதவசனம் காண்க. மேல் சித்திற் கண்டமான நிர்க்குண துரியம் – 4, துரியா தீதம் – 4. அவை வருமாறு எப்படி என்னில்.

" அசிபதத்தில் இருக்கின்ற அகண்ட பரமாத்மா சைதன்னியனிடத்திலே பிண்டப் பிரமாண்டம் முத லான சகலதத்துவக்கருவி கரணாதிகள் எல்லாம் சமரச ஐக்கியமானதினாலே இங்கே நவசயிக்கினை இல்லை. இதுவே அசிபதத்தில் விசுவக்கிராசம் என்கிற நிர்க் குணப் பிரதமத்துரியம். இந்த விசுவக்கிராசம் என்கிற துரியமே ஆதி என்கின்ற சத்துருப பதத்திலே நிர்க் குணமாகி நின்றதே விசுவக்கிராச துரியாதீதம். இந்த விசுவக்கிராசம் என்கின்ற துரியாதீதம் முழு பூசாந்தம் என்கின்ற துரியத்திலே ஏகார்த்தமானதே. அசி பதத்திலே அகண்ட நிர்க்குணமானது இத்துரியம். இந்தப் பூசாந்தம் என்கின்ற துவிதிய துரியாதீதமும், புவிசாந்தம் என்கின்ற துரியாதீதத்திலே ஏகார்த்த மானதேயாம்.

" அசிபதத்திலே அகண்ட நிர்க்குணமான திருதிய துரியம் இந்தப் புவிசாந்தம் என்கிற துரியமே நிராளம் என்கின்ற பரத்தில் நிர்க்குணசொருபமாகி

நின்றதே புவிசாந்த துரியாதீதம். அந்தப் புவிசாந்தம் என்கின்ற துரிய துரியாதீதம் துரியத்திலே ஏகார்த்த மானதே. அசிபதத்தில் கண்ட நிர்க்குணமான சதுர்த்த துரியம்; இந்தப் பரதுரியமே நிராலம்பத்திலே நிர்க்குண சொரூபனாகி நின்றதே பரதுரியாதீதம். இதுவே அசிபதத்தில் கண்ட நிர்க்குணமான சதுர்த்த துரியாதீதமும், இதற்கு இலக்கணை விட்டுவிடாத இலக்கணை, வாக்கியம். கண்ட வாக்கியம். " சொயம் தேவதத்தர் " என்கிற சுருதிவாக்கியத்தில் கண்டு கொள்க. இதுவே சீவன்முத்தி, இதற்கு உதாரணம்;

*" காரிய மேழ்கண் டறுமாயைப் பாழ்விடக்*
*காரண மேழ்கண் டறும்போதப் பாழ்விடக்*
*காரியம் காரணம் காணுமுப் பாழ்விடச்*
*சீரிய லான சிவமென லாமே "*

என்னும் (?) பாடலால் காண்க.

முன்கூறிய தொம்பத லட்சணத்து இறுதியிலே,

*" தத்தொ மசியே தகநல்ல வேதாந்தம்*
*அத்த மனுவிரண்டும் அயிக்க சிவோகமாம்*
*முத்த முதுபொருள் மூசச் சமயத்தில்*
*கத்து மதமென் னுருங்கைக் கொண்டதே "*

என்னும் பாடலில் (?) வைத்துக் காண்க. இன்னும்.

*" தொம்பதம் மாயையில் தோன்றிடும் தற்பதம்*
*அம்பரை தன்னில் உதிக்கும் அசிபதம்*
*நம்புறு சாந்தியில் நண்ணுமவ் வாக்கியம்*
*உம்பர் உரைதொந்தத் தசிவாசி யாமே. "* (2492)

என மேல் வரும் திருமந்திரம் நோக்கியும் அறிக.

இப்படி செக சீவ பர சிவமாய். சகல தேவாதி தேவர்கள் இருதய தேகமான வஸ்துவாய், அநந்த கோடி பிரமாண்டங்களுள்ளும் புறம்பும் எங்கும் சர்வத்திர பரிபூரணமாய், அகண்டாகாசமாகி மூலத் தம்பனமானதுவே வஸ்து. இது நாம ரூப செகம் இறந்து பஞ்சப் பிரளயம்பண்ணின பிறகு மிஞ்சின அதுவே வஸ்து, சச்சிதானந்த வடிவாய் இருந்த பொருளும் இதுவேயாம் என்க. (270)

**சிவமாதல் வேதாந்த சித்தாந்த மாகும்**
**அவமவ மாகு மவ்வவ் விரண்டுஞ்**
**சிவமாஞ் சதாசிவன் செய்தொன்று ஞான**
**நவமான வேதாந்த ஞானசித் தாந்தமே.** 2392

இ – ள்; வேதாந்தம் சித்தாந்தம் என்பனவாகிய இரண்டும் சீவன் சிவமாந்தன்மைப் பெருவாழ்வு அடைதலையே கூறுவனவாம். ஏனைய நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், கலாந்தம் என்னும் நான்கு அந்தங்களும் அத்துணைச் சிறப்பின்றும். சிவபரம் பொருள் சதாசிவ மூர்த்தியை அதிட்டித்து நின்று பஞ்சகிருத்தியங்களைப் பண்ணும்; பின்னர்த் தோற்றிய முறையே சங்கரித்து ஒரு பொருளாகத் தன்னுள்ளே அடக்கிக் கொண்டு தான் ஒருவனுமே நிற்கும். இவ்விஷயங்களையெல்லாம் ஆராய்ந்து வேதாந்த முடிபால் கிடைத்த சித்தாந்த ஞானமே வேதாந்த சித்தாந்தப்பொருளை வேறில்லாமல் உணர்த்த வல்ல தாம் என்றவாறு.

சிவபெருமான் அக்கினியில் சூடும் பூவில் மணமும் பருதியில் கிரணமும்போல பிரிவற்றுச்

சமவாயமாய், அநந்தசத்தி ரூபையாயுள்ள பராசத்தியை அதிட்டித்து, அநாதியே ஆணவமல சம்பந்தமுற்று அறிவற்று மூடமாய்க் கிடக்கும் ஆன்மாக்களை இரட்சிக்கத் திருவுளங்கொண்டு, பராசத்தியினின்று ஆதிசத்தியைத் தோற்றுவிப்பார். பின்னர் இச்சாசத்தி ஞானசத்தி கிரியா சத்திகள்தோன்றும். இச்சத்திகளை அதிட்டித்த சிவனும் பராசத்தியை அதிட்டித்தபோது பரசிவம் என்றும், ஆதி சத்தியாகிய திரோதான சத்தியை அதிட்டித்த போது திரோபவன் என்றும், இச்சாசத்தியை அதிட்டித்தபோது இச்சிதா என்றும், ஞானசத்தியை அதிட்டித்தபோது நாதா என்றும், கிரியாசத்தியை அதிட்டித்தபோது கர்த்தா என்றும் பெயர் பெறுவர்.

கண்ணாடியுள் நிழலைப்போலவும், ஆகாசத்தில் இந்திரவில்போலவும் நிஷ்களத்தில் சகளம் தோன்றும். இதற்குச் சாதாக்கியம் என்றுபெயர். இதுவே யோகிகட்கும் ஞானிகட்கும் தியானம் பண்ணுதற்கு உரியது.

இந்தச் சாதாக்கியம் சிவசாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், மூர்த்தி சாதாக்கியம், கர்த்திருசாதாக்கியம், கன்ம சாதாக்கியம் என ஐந்து வகைப்படும். சிவசாதாக்கியம் பராபரம், அமூர்த்திசாதாக்கியம் பரம். மூர்த்தி சாதாக்கியம் சூக்குமாசூக்குமம், கர்த்திரு சாதாக்கியம் சூக்குமதூலம், கன்ம சாதாக்கியம் தூலம், இவைகளுக்கு முறையே சதாசிவன், ஈசன், பிரமன், ஈச்சுரன், ஈசானன் என்னும் ஐவரும் அதிபதிகளாவார். பஞ்ச சாதாக்கியங்களும் தத்துவம் என்றும், அதிபதிகள் மூர்த்திகள் என்றும் வழங்கப் டுவர். ஈசாநாதி ஐந்தும் பஞ்சப்பிரமம் எனப்படும்.

இவற்றிற்கு முறையே ஈசானர், வாமதேவர், சத்தியோசாதர், தற்புருடர், அகோரர் என்னும் ஐவரும் மூர்த்திகளாவார்.

இந்த மந்திரத்திலே 'நவமான' என்ற குறிப்பு சிந்தித்தற்கு உரியது. இது சிவபெருமானது நவவடிவங்களைக்குறிக்கும், நவவடிவங்களாவன: சிவம் சத்தி நாதம் விந்து என அருவம் நான்கும். சதாசிவன் என்னும் அருவுருவம் ஒன்றும், மகேசுரன் உருத்திரன் விஷ்ணு பிரமன் என்னும் உருவம் நான்குமாம்.

இங்கே கூறப்பட்ட விஷ்ணு பிரமர்கள் சிவபெருமானது நவவடிவங்களில் சகளவடிவம் நான்கனுள் சுத்த வித்தியா தத்துவத்தில் வைகும் விஷ்ணு பிரமர்களாகிய காரணேசுவரர்கள்; சகலரில் தவத்தால் அதிகாரம் பெற்ற காரியேசுவரராகிய விஷ்ணு பிரமர்கள் அல்லர் என அறிக.

இன்னும் வியக்கத்தக்க வேதாந்த ஞானம் சித்தாந்தமே யாகும் என்று கூறுதலும் ஒன்று. நவமான – மேலான, வியக்கத்தக்க: இன்னும் நவமான என்றது பிருதிவி முதல் நாதம் வரை தோற்றம், ஒடுக்கம், தொகை, வகை, தொழில், நிறம், குணம், தானம், அதிதேவதை என்னும் நவசம்பிரதாயம் எனலுமாம். (271)

சித்தாந்தத் தேசீவன் முத்திசித் தித்தலாற்
சித்தாந்தத் தேநிற்போர் முத்திசித் தித்தவர்
சித்தாந்த வேதாந்தஞ் செம்பொரு ளாதலாற்
சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே. 2393

இ - ள் : சித்தாந்த சைவத்திலே சீவன் முத்தி நிலை கைகூடுதலால் சித்தாந்த சைவநெறியிலே நிலைத்து நிற்பவர்கள் முத்தி நிலையாகிய சிவப் பேற்றைப் பெற்றவரேயாவார். சித்தாந்தம் வேதாந்த மாகிய இந்த இரண்டும் செம்பொருளாகிய சிவத்தைக் குறித்தனவேயாகலின் சித்தாந்தமும் வேதாந்தமும் சிவனையே காட்டும் என்றவாறு.

சீவன் முத்தராவார் அளத்திற்பட்ட புற்போலச் சிவப் பிரகாசத்திலுலே போக சாதனமாயுள்ள உட்கரணங்களும் புறக்கரணங்களும் ஆகிய பசு கரணங்கள் எல்லாம் சிவகரணமாய் நிகழப்பெற்று. சகல கருவியோடும் கூடியிருக்கும் சாக்கிராவத்தை யிலே நின்மல துரியாதீதத்தைப் பொருந்தினோர்களாய், பூமியின்கண் உள்ள ஆன்மாக்களை ஈடேற்றும் பொருட்டுச் சஞ்சரிக்கும் இயல்புடையோராம் என்க.

சிவஞானிகள் சரியை முதலியன செய்ய வேண்டு வது இன்றே எனின், திருநாவுக்கரசு நாயனார் சிவ தலங்கள்தோறும் சென்று. சிவனைத் தரிசித்து வலம் வந்து வணங்கித் துதித்தல்களும்: திருக்கோயில் பிராகாரங்களிலும் திருவீதிகளிலும் புல்லைச் செதுக்கு தலும் பிறவும் செய்தருளினர். இவர் பசுத்துவம் நீங்கித் தஞ்செயலற்றுச் சிவனேயாய் நின்றார். இவை யெல்லாம் இவர் செயலாகாது சிவன் செயலேயாய் நிகழ்ந்தன காண்க. இதனை, திருவுந்தியார் ஆறும் திருப்பாட்டால் உணர்க.

இவையெல்லாம் சிவன் செயலாய் நிகழ்தல் எற்றுக்கு? எனின், ஆன்மாக்களுக்கு அறிவுறுத்தி

அவர்களை உய்வித்தற்பொருட்டாம். சிவபெருமான் தட்சிணாமூர்த்தியாய், திருக்கரத்திலே செபமாலை கொண்டு செபம் பண்ணுதல் உயிர்களுக்கு உய்யும் நெறி காட்டுதற்பொருட்டேயாம். நாயனார் செயல்கள் எல்லாம் உயிர்கள்பொருட்டே நிகழ்ந்தன என்பதைச் சேக்கிழார் சுவாமிகள் பெரிய புராணத்து அருளிய வாற்றான் உணர்க.

மற்றும், "இங்கிலை தானில்லையேல்" "சாக்கிரத்தே யதீதத்தை" என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தங்களானும்:

*" காணுங் கரணங்க ளெல்லாம்பே ரின்பமெனப்*
*பேணு மடியார் பிறப்பகலக் - காணும்*
*பெரியானை நெஞ்சே பெருந்துறையி லென்றும்*
*பிரியானை வாயாரப் பேசு "*

என்னும் திருவாசகத்தானும் அறிக. "இம்மையிலே உயிரின் பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவ ரன்றோ" என்னும் சித்திப் பகுதியும் உணர்த்தும். பராவு சிவர் — சஞ்சரிக்கின்ற சிவம் என்றபடி: பராவுதல் — சஞ்சரித்தல்.

*" நிராமய பராபர புராதன பராவுசிவ ராக வருளென்*
*றிராவுமெதி ராயதுபரா நினை புராணம ராதிபதியாம் "*

எனத் திருப்பிரமபுரம் வழிமொழித் திருவிராகத்தில் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அருளியமையும் காண்க. (272)

சிவனைப் பரமனுட் சீவனுட் காட்டும்
அவமற்ற வேதாந்த சித்தாந்த மானன்
நவமுற் றவத்தையின் ஞானஞ் சிவமாந்
தவமிக் குணர்ந்தவர் தத்துவத் தாரே. 2394

இ — ள் : முழுமுதற்கடவுளாகிய சிவபரம்பொருளைத் 'தம் முதல் குருவுமாய்' வந்த பரமன் சீவனுள்ளே காட்டக்கண்டு வீணுதல் ஒழிந்த வேதாந்தம் சித்தாந்த நெறியே என் உணர்ந்து அதனைக்கடைப்பிடித்தொழுகி அச்செந்நெறியிலே உறைத்து நிற்பானாயின், அவனுக்கு மேலான பரம துரியநிலையான ஞானமே பிரகாசிக்கும். அதனுல் அவன் சிவமாந்தன்மைப் பெருவாழ்வு அடைவான். இத்தகைய சிவானந்தத்தைக் குருவருளாற் பெற்றுள்ள தவம் மிக்குடைய பெரியோர் திருவடியிலே பொருந்தி நிற்கத்தக்க மெய்யடியாராவார் என்றவாறு.

காட்டும் பரமன் உள் சீவனுள்காட்டும் என்க. " சத்தமாதியாம் விடயம்தன்னில் புரிவதும் செய்தல் கழிவதற்கு ஏதுவாகிய இருவினையொப்பும், போக போக்கியக் கருவிகளின் செறிவு கழிதற்கு ஏதுவாகிய சத்தி நிபாதமும், உருக்கழிதற்கு ஏதுவாகிய குருவருளும். எல்லா யோனியும் புக்கு உழலுதல் கழிதற்கு ஏதுவாகிய ஞானசாதனமும், சென்று திரிதருதலாகிய ஏகதேசத்தன்மை கழிதற்கு ஏதுவாகிய மும்மல நீக்கமும், சத்தமாதியாம் விடயந்தன்னில் நுகர்வது கழிதற்கு ஏதுவாகிய வாதனை நீக்கமும், பாச அறிவு இச்சை செயல்கள் கழிதற்கு ஏதுவாகிய ஞானப் பெருக்கமும், முறையே கிடைப்ப அவற்றன் அந்தக் காரியம் பத்தும் நீங்கப்பெற்றுத் திருவருளைக்கூடுதல் சுத்தம் என்க.

சத்திநிபாதத்திற்கு மூலம் மலபரிபாகம். இருவினை யொப்புக்கு மூலம் சிவபுண்ணியம் ஆம்.

எல்லாவற்றிலும் அதுவதுவாய் நிற்கும் தன்மையில் ஆன்மாவானது அறுவகைப்படும். பூத பரிணாமமாகிய உடம்பினைப்பற்றியவிடத்து ஆன்மா பூதான்மா எனப்படும். அகத்தின் கண்ணவாகிய சூக்குமை முதலிய வாக்குகளைப் பற்றிய இடத்து ஆன்மா அந்தரான்மா எனப்படும் சப்தம் முதலிய சூக்கும தத்துவங்களைப் பற்றியபோது ஆன்மா தத்துவான்மா எனப்படும். புருடதத்துவமாய் நின்று பிரகிருதி குணங்களைப் பற்றிய இன்ப துன்பங்களை ஆன்மா அநுபவிக்குங்கால் சீவான்மா எனப்படும். மந்திரங்களைக் கணிக்கு மிடத்து ஆன்மா ஸ்படிகம்போல அவ்வம் மந்திரமயமாய் நிற்குங்கால் மந்திரான்மா எனப்படும். ஆன்மா அத்துவித பாவனையால் பரமான்மா என நிற்குங்கால் பரமான்மா எனப்படும்.

அத்துவித பாவனையுடையோன் ஞானக் கண்ணால் சிவனை ஆன்மாவிற்கண்டு, முழுதும் வியாபகமாய் நின்று அறிவதாகிய முற்றுணர்வு உடையனாய் அவ்வப்பொருள் இயல்பெலாம் உணர்ந்து மலவாசனை தீர்ந்து கேவலமாய் நின்று முடிவு காண்கிலாப் பேரின்பத்தைப் பெறுவன்" என்று ஆன்மா பரமான்மாவாய் நின்று பேரின்பம் பெறுமாறு சர்வஞானோத்தரத்தில் கூறப்பட்டது.

மாயாவாதியின் நிர்க்குணப் பிரமநிலை சீவன் முத்திநிலை : இதற்கு மேம்பட்டது அதிகார முத்தி நிலை ; இதற்கு மேற்பட்டது போக முத்திநிலை ;

இதற்கு மேற்பட்டது. லயமுத்திநிலை ; இதற்கு மேற்பட்டது பரமுத்திநிலை.

மாயாவாதிகள் தமது நிர்க்குணப் பிரமநிலையைச் சீவன் முத்தர்நிலை என்பர். சித்தாந்த சைவர்கள் பரமுத்தி நிலையையே சீவன் முத்தர்நிலை என்பர்: ஆகலின், அவ்விரண்டன் தாரதம்மியங்கள் இங்கே கூறிய நிலைபற்றி உணரக்கடவர். (273)

தத்துவ மாகுஞ் சகள வகளங்கள்
தத்துவ மாம்விந்து நாதஞ் சதாசிவந்
தத்துவ மாகுஞ் சீவன்றன் றற்பரந்
தத்துவ மாஞ்சிவ சாயுச்சிய மாமே 2395

இ – ள் : சகள அகளங்கள் தத்துவமாகும் என்பது: சகளம் - உருவம், சகள அகளம்—அருவுரு. அகளம் - நிஷ்களம். சகள அகளம் - சகள நிஷ்களம். சகளத்திருமேனிகள் : பிரமன் மால் உருத்திரன் மகேசுரன் என்பன; இவை உருவம். சகள அகளம் - அருவுருவம்; அது சதாசிவம். விந்து நாதம் இரண்டும் அருவம். தத்துவ மயமாகிய சீவன் மேலான பரம் பொருளை அடைந்து சிவமாம் தன்மைப் பெருவாழ்வைப் பெறுதல் சிவசாயுச்சியமாகிய உண்மை நிலையாம் என்றவாறு.

தற்பரம் – மேலான பரம்பொருள்; தனக்குத் தானே பரமாகவுள்ளது. "தொற்பதம் மேவித் துரிசற்று மேலான, தற்பரற் கண்டுளோர் சைவசித்தாந்தரே" என்றார் முன்னும். சிவசாயுச்சியமே உண்மைப்பரமுத்தி நிலை; ஏனைய பதமுத்திகளாம்.

பிருதிவி தத்துவம் ஒன்றைக் கொண்டது நிவிர்த்தி கலை; பிரமன் அதிதேவதை: இது பிருதிவி மண்டலம். அப்பு தத்துவம் முதல் பிரகிருதிகுண தத்துவம் ஈறான தத்துவங்கள் 23-ம் பிரதிட்டாகலை; இதற்கு அதிபதி விஷ்ணு; இது அப்பு மண்டலம், புருடன் முதல் காரிய மாயை ஈறாகிய வித்தியா தத்துவங்கள் ஏழும் கொண்டது சாந்திகலை; இதற்கு அதிபதி மகேசுரர்; இது வாயு மண்டலம், விந்து தத்துவம் நாததத்துவம் இரண்டும் கொண்டது சாந்தியாதீதகலை; இதற்கு அதிபதி சதாசிவன் : இஃது ஆகாய மண்டலம். பன்னிரண்டு கலைப்பிராசாதத்திலும், பதினாறு கலைப் பிராசாதத்திலும் சமனை வரையில் பாசக்கூட்டம். உன்மனை அந்தத்தில் பிராசாதமந்திரவாச்சியராகிய பரமசிவன் விளங்குகிறார். உன்மனைக்கு அப்பால் உள்ள பரமசிவன் தெளிந்த கண்ணாடி நிறமும், சரற்காலத்துத் தண்ணீர் நிறமும் உடையவர் என்பர். முப்பத்தாறு தத்துவங்களையும் ஏறிச் செல்லும் படிக்கட்டுகளாகக் கொண்டு தத்துவங்கடந்த பரம்பொருளாகிய சிவத்தைக் கண்டு ஆன்மா சிவமாந்தன்மைப் பெருவாழ்வு அடைகின்றது.

ஏகதேச அறிவினால் சுட்டி உணரப்படும் பிருதிவி தத்துவம் முதல் சிவதத்துவம் ஈறாகிய பிரபஞ்சத்தை ஒவ்வொன்றாகச் சுட்டி அசத்து என்று கண்டு கழித்துக் கொண்டு சென்றபோது முடிவின்கண் விஷயமாவது சத்தே ஆகும். அந்தச் சத்தானது ஒரோவொன்றாகச் சுட்டி அறிந்துவந்த ஆன்மாவுக்கு வேறாகிய சிவஞானமேயாம் அச்சத்தை அசத்தென்று அறிவினால் ஒழிவிக் கண்டபோது உளதாகிய சத்தினை

ஆன்மாவானது அடிமையாய்ச் சென்று சத்தின் வசத்ததாய் அதனை உணர்ந்தால், சுட்டி அறிவதாகிய ஏகதேச அறிவைச் செய்யும் பொது இயல்பு ஆன்மாவைவிட்டு நீங்கும். ஆதலால், அந்தச் சத்தானது மற்றோர் அசத்தன்று; அது பரஞான சொரூபமே ஆம்; " பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் " என்க. (274)

**வேதமோ டாகம மெய்யா மிறைவனூல்**
**ஓதுஞ் சிறப்பும் பொதுவுமென் றுள்ளன**
**நாத னுரையவை நாடி லிரண்டந்தம்**
**பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே.** 2396

இ-ள்; வேதங்களோடு ஆகமம் இருபத்தெட்டும் மெய்ம்மையாகிய சிவபெருமானால் அருளிச்செய்யப்பட்டன. அவை, சொல்லப்படும் பொதுவும் சிறப்பும் என்று உள்ளனவாம். சிவபெருமான் வாக்கினின்று வெளிவந்த அவைகளை ஆராயப்புகின் வேதங்களின் முடிபும் ஆகமங்களின் முடிபும் வேறு வேறு என்று கூறுவர் சிலர். பெரியோர்களாகிய சிவஞானிகளுக்கு அவற்றின் முடிபுகள் எல்லாம் ஒன்றேயாம் என்றவாறு.

*" அண்ணல் அருளால் அருளுந்திவ் யாகமம்*
*பெருநெறி யாகிய பிரானை நினைந்து*
*குருநெறி யாம்சிவ மாநெறி கூடும்*
*ஒருநெறி ஒன்றாக வேதாந்தம் ஓதுமே. "*

என்று திருமூலதேவர் பாயிரத்துள் அருளிச்செய்தமை காண்க.

" ஆகம மாகிநின் றண்ணிப் பான் "

என்று மாணிக்கவாசகசுவாமிகள் அருளினர்.

" பரனுய்ப் பராபரங் காட்டி உலகில்
தரனுய்ச் சிவதன்மம் தானேசொல் காலத்து
அரனுய் அமரர்கள் அர்ச்சிக்கும் நந்தி
உரனுகி ஆகமம் ஓங்கிநின் றுனே. " (61)

என்று வேதம் ஆகமம் இரண்டனையும் சிவபெருமான் அருளிச்செய்ததெனக் கூறப்பட்டமை காண்க.

வேதச்சிறப்பு ஆகமச் சிறப்புக்களைப் பாயிரத் துள்ளே காணலாம். " வேதநூல் சைவநூல் என்று இரண்டே நூல்கள் .... ஆதிநூல் அநாதி அமலன் தரு நூல் இரண்டும் ஆரணநூல் பொது சைவம் அருஞ் சிறப்பு நூலாம். நீதியினுல் உலகர்க்கும் சத்திநிபா தர்க்கும் நிகழ்த்தியது நீண்மறையின் ஒழிபொருள் வேதாந்தத், தீதில் பொருள் கொண்டுரைக்கும். நூல் சைவம் பிறநூல் திகழ்பூர்வம் சிவாகமங்கள் சித்தாந்த மாகும், " (சித்தி-) என்றமையும் காண்க. (275)

பரானந்தி மன்னுஞ் சிவானந்த மெல்லாம்
பரானந்த மேன்மூன்றும் பாழுரு னந்தம்
விராமுத்தி ரானந்த மெய்ந்நட ஞனந்தம்
பொராநின்ற வுள்ளமே பூரிப்பி யாமே. 2397

இ - ள் : சீவன் முத்தர் நுகரும் சிவானந்தம் முழுதும் பரானந்தமாம், மேலேசொல்லப்பட்ட மூன் றும் பாழ்பொருந்திய ஆனந்தமாம். பாழ் மூன்றுவன:- போதப்பாழ், சீவப்பாழ், சிவப்பாழ் என்பன. போதப் பாழாவது, தத்துவரூபம் முதலிய மூன்றையும்

அறிந்து பாழ்படுத்தி நீங்கல். சிவப்பாழாவது, ஆன்ம ரூபம் முதலிய மூன்றையும் அறிந்து நீங்குதல். சிவப்பாழாவது, சிவரூபம் முதலிய இரண்டையும் அறிந்து நீங்குதல் என்பர். பொருந்தும் சாம்பவி முத்திரை முதலியவற்றின் பயிற்சியால் உண்டாகும் இன்பமும், உண்மையை உணர்த்தும் ஐந்தொழில் நடனத்தால் உண்டாகும் இன்பமும், அடைந்த உள்ளமே (ஆன்மாவே) பொலிவினை உடையதாம் என்றவாறு.

உள்ளம்—ஆன்மா. பூரிப்பி—பூரிப்பினையுடையது.

பிருதிவி முதல் நாத தத்துவம் வரையில் தோற்றம் முதலிய நவ சம்பிரதாயமும் அறிவது பாச தரிசனம், இவை பாசம் என்று கண்டு கடந்த இடம் பாசாதீதம். இந்தப் பாசத்தை இது இது எனக் கண்டறிந்து அப்பாசத்தைக் கடந்தது போதம், அந்தப் போதம் ஒன்றினும் தாக்காமல் நிற்கிற அவதரத்தில் ஆனந்தம் உண்டாம்: அது போதா னந்தம். அந்தப் போதானந்தத்துக்குப் போதமாய் நின்று உணர்த்துவது அருள், அந்த அருள்நெறியில் தன்னொளி அடங்கியிருப்பது அருளானந்தம். அந்த அனுபவத்தில் நின்றால் அருள்ஒளி மிகுந்த ஒளியாம்; அதுவே பரைதரிசனம். அந்தப்பரை ஒளியில் தம் பரம் அற்று அமர்தல் பரானந்தம். அந்தப் பரானந்த ஒளிக்குள் ஒளியாக இருப்பது சிவம். பரை என்றும் சிவம் என்றுமின்றி இரண்டறக் கலந்து நின்ற இடம் சிவானந்தம்.

சர்வபூத நிரந்தரமாய். சுட்டற்ற பேரொளியாய். வாக்குமனாதீதமாய் நின்ற தன்மை ஆனந்தாதீதம்.

நவரத்ன ஒளி, விளக்கின் ஒளி, மின்னொளி, சோம சூரியாக்கினி ஒளி என்று இங்ஙனம் சொல்லப்பட்ட ஒளிகட்கெல்லாம் உள்ளொளியாயும், அவைகட்கு அப்பாலாயும்; போதானந்தம், அருளானந்தம், பரானந்தம், சிவானந்தம் என்று சொல்லப்பட்ட ஆனந்தமே குணமாயும் இந்த ஆனந்தத்தைத் தரப் பட்ட சிவமே குணியாயும் இந்தக் குணகுணி பாவங் களையும் கடந்து அப்பாலாயும்; ஆகாசாதீதம். பிரமா ணாதீதம், துரியாதீதம், வாசாதீதம், மனாதீதம், பாவா தீதம் ஷட்சூனியாதீதம், நிர்மலாதீதம், ஆனந்தாதீதம் என்று சொல்லப்படும் அதீதங்களைக் கடந்து அப் பாலும் இருக்கின்ற சூதானப் பொருள் என்றதாம்.

ஆகையால், இந்தப் பன்னிரண்டு அவதரமும் சுருதி யுக்தி அநுபவங்களால் அநுபவசித்தம் வரச் சிவம் சித்தம் ஆகையினாலே இந்த நூலில் சொன்ன கிரமத்திலே மந்திராதிகாரம் முதல் ஞானாதிகாரம் வரைக்கும் சற்குருவினிடத்திலே அனுக்கிரகம் பெற்றுக் கதியடையக் கடவர்.

எனவே, முத்தி பெறுங்காலம் வரையும் ஆன்மா சென்ற கருமத்துறை வழியே ஆன்மாவை விட்டு, ஆன்மாவோடும் விரவியிருந்தும் வெளிவராது நின்றருளியதன் தன்மையைப்போல தன் செயலின் வழியே எக்காலத்தும் மீளாது, ஆன்மா வியாப்பிய மாய் அடங்கி நிற்கும் அந்நிலைமை விளங்கும்படி தன் போகமாகிய சிவப்பேற்றையும், தன் ஞானத்தினாலே தன்னை உணரும் முறையின் வைத்து ஆன்மாவை உணரும் ஆன்ம லாபத்தையும் தந்து, தனது அருட் செயலும் ஆன்மாவினது ஞாதுரு ஞான ஞேயப்

பகுப்புணர்வும் நீங்கும்படி அசுத்தம் மிச்சிரம் சுத்தம் என்னும் மூவகைப் பிரபஞ்சத்தினின்றும் நீங்குமிடத்து ஆன்மா வியாபகத்தைத் தலைப்பட்டு மூழ்ந்து அடங்கலும், அருளிற்றலைப்பட்டு ஐந்தொழில் செய்யக் கருதித் துவளலும், அவ்வருளில் வியாப்பியமாய் அடங்கலும் என்னும் மூவகைப் பாழின் மேலே அத்துவித சம்பந்தமாய முழுப் பாழாகியுள்ள மிக்க பேரின்பமாம். முழுப்பாழ்ஆனந்தாதீதம்; முத்தி என்க.

*"முப்பாழுக் கப்பால் முதற்பாழ் மனையகத்தே*
*தப்பாம லென்னைத் தனியே யழைத்தருளி*
*ஒப்பா மமளியிலே யொன்றுபடச் சேர்வதென்றோ*
*செப்பாய் புகழ்ச்சென்னைச் சென்னமல்லி யீச்சுரனே."*

என ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் அருளியமையும் காண்க.

இனி, இதற்கு ஓர் உபாயம் வருமாறு:- சுரர் நரர் மிருக தாவர பட்சியாதிகளாகத் தோன்றுகிற தேகங்களைப் பாராமல் சீவிக்கிற தத்துவங்களைப் பார்க்க, சத்தாதி மறையவே பிரபஞ்சமும் மறையும், போதத்தைப் பார்க்கவே இந்திரியங்கள் மறையும். ஆன்ம போதத்தைப் பாராமல் அதன்மேல் வந்த அருள் மேலீடு பார்த்தால் பாசஞானமும் பசுஞானமும் அகலும், நிட்டை தீர்ந்தபோது அருள்வழியே சென்று, பரையதீதத்திலே அழுந்தி, அவிழ நின்றல் சுகம் விளையும்; சுகப் பேரின்பத்தில் ஆனந்த மேலீடு தோன்றும்: அப்போது ஆனந்தாதீதமாகக் கர்த்தாவே கூட்டியருளுவார். அவ்விடத்தில் எப்படியிருக்கும் என்னில், அது நீர்போல் அழுந்தி, அந்த நீர்நிழற்

போல கரந்து, பார்போல் தரிப்பும் கொடுத்து. பேதம் அபேதம் பேதாபேதமும் கடந்து, ஆன்மாவினுடைய சிற்றறிவைப் பேரறிவு ஆக்கினுற்போல் அதன் சிற்றின்பத்தையும் பேரின்பமாக்கி, அண்டத்தை மறைத்து அகண்டம் மேலிட்டாற் போலவும், மணத்தின் மேல் மணம் பிறந்தாற் போலவும், சிவ மணம் மேலிட்டுக் கண்ட இடமெல்லாம் ஆனந்தக் கடலாய், மொண்டு கொளலாய், நிறைந்த முத்தியாய் இருக்கும் ஆனந்த வெள்ளமாய் உள் அடங்காவகை கரைபுரண்டு நிற்கும். ஆகையால்திரும்பவொட்டாது. ஒளியிலே இருள் ஏறாதாற்போலப் பாசம் தாக்காது, உரையற்று உணர்வற்று, உள்ளும் புறமும் ஒன்ருய், ஆனந்தாதீதத்திலே அழியாத முத்தியையும் பெற்றிருப்பர். இப்படி நின்ருல் 'பராவுசிவர்' என்றும், 'பரமானந்தி' என்றும் பெயராம் என்க.

இதுவே சன்மார்க்கமான ஞானமார்க்கம்.

முத்தியில் ஆன்மா சிவானந்தத்தை அனுபவிப்பன் என்றதற்குப் பிரமாணம் "சிவானுபவம் சுவானுபூதிகமாய்" (சிவஞான சித்தி: 8ஆம் சூ: 34.) என்பது. இன்னும் "சிவானந்தம் ஆன்மாவால் அநுபவிக்கப் படுவது. ஆனந்தமாகலின்; உலகானந்தம் போல" என்னும் வழியளவையும் பிரமாணமாம் என்க.

*"தின்பர மானந்தம் நேரே அனுபவித்தங்*
*கொன்றுபட உள்ளுருகி ஓவாமல் - என்றும்*
*மதுவுண்ட வண்டுபோல் மாளாச் சுகத்தைப்*
*புதிதுண் டிருந்துவிடிப் போது"*

எனவும்,

" ஒன்றுஞ் சுகவடிவுக் குள்ளான தம்பிரான்
அன்றி ஒருபொருளும் ஆகாதே – நின்றமுந்திச்
சொல்லரிய இந்தச் சுகத்துக் கதீதமாய்
நில், அவன்தா ளுமே நிலை "

என்வும்,

" இந்தச் சுகத்தில் இனிநீ விழியாமல்
அந்த அறிவின் அயர்ந்ததுபோல் - தொந்தமறப்
போதாய் இதுவே சுகாதீதம் பொய்யற்றோர்க்
காதார மான வருள் "

எனவும் துகளறு போதநூலில் ஸ்ரீ சீகாழிச் சிற்றம் பலநாடிகள் அருளிச்செய்தமையும் இங்கே வைத்துச் சிந்திக்கக் கடவோமாக.

" ஆன்மாவின்வேறாகிய மூலப்பகுதியின் கண்ண தாகிய சாத்துவிக குணம் ஆன்மாவின்மாட்டு மேற் பட்டு விளங்குதலே உலகஇன்பம் ; அது அதுவாய் அழுந்திநின்று அறிதலே அநுபவம் எனப்படும். ஆக லின், அதுபோல ஆன்மாவின் வேறாய்ச் சிவன் கண்ணே உளவாகிய முற்றுணர்தல் முதலிய எண் வகைக் குணங்களும் ஆன்மாவின் மாட்டு மேம்பட்டு விளங்கும் விளக்கமே சிவாநந்தவின்பம் : ஆன்மா அதுவாய் அழுந்திநின்று அவ்விளக்கத்தை அறிதலே அநுபவம் எனப்படுமென்பது எம்மனோர் சித்தாந்தம்" என்பது சிவஞானமாபாடியம். (276)

ஆகுங் கலாந்த மிரண்டந்த நாதாந்தம்
ஆகும் பொழுதிற் கலையைந்தா மாதலின்
ஆகு மரனேபஞ் சாந்தக னுமென்ன
ஆகு மறையா கமமொழிந் தானன்றே. 2398

இ – ள் : கலாந்தம் இரண்டு ஆகும். அவை அகாரகலை முதல் பதினாறு கலைகளும் நிவிர்த்தி முதலிய ஐந்து கலைகளுமாக உள்ளன. கலைகளின் முடிவில் உள்ளது சிவகலை. அந்த நாதமும் சாந்தியாதீதகலையின் இறுதிக்கண் விளங்குவது. ஆதலின், நிவிர்த்தி, முதலிய ஐந்துகலைகளின் முடிவிலே அரன் என்னும் சிவபரம்பொருளே விளங்குவது. அப்பெருமானே பஞ்சாந்தகன் எனப் பேசப்படுவார், அச்சிவனே வேதங்களையும் ஆகமங்களையும் அருளிச் செய்தார் என்றவாறு.

ஐங்கலைகளின் முடிவிலுள்ளவர் அரனே ஆகலின் பஞ்சாந்தகன் எனப்பட்டார். அரனே என்றது சங்கார காரணனாயுள்ள முதல்வனை, சங்காரம் ஐவகைப்படும்: அவற்றுள் முதலாவது நிவிர்த்திகலையில் அடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம் ; இரண்டாவது பிரதிட்டாகலையில் அடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம் ; மூன்றாவது வித்தியாகலையில் அடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம் ; நான்காவது சாந்தி கலையில் அடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம் ; இறுதியது சாந்தியதீதகலையில் அடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம்.

அவற்றுள், ஈண்டைக்கு ஏற்புடையது இறுதிக் கண்ணது ஆதலின், ஈண்டு அரனே பஞ்சாந்தகன் என அருளினார். (277)

அன்றாகு மென்னாதை வகையந்தந் தன்னை
ஒன்றான வேதாந்த சித்தாந்த முள்ளிட்டு
நின்றாலி யோகாந்த நேர்படு நேர்பட்டான்
மன்றாடி பாத மருவலு மாமே. 2399

இ – ள் ; ஐவகையான அந்தங்களையும் ஒன்றோடொன்று மாறுபட்டன என்று கருதாமல் ஒரு பொருளையே உணர்த்தும் வேதாந்த சித்தாந்தங்களை நன்கு ஆராய்ந்து தன் அறிவின்கண்ணே விளங்கக் கண்டு ஒழுகினால் யோகத்தின் முடிபாகவுள்ள பொருள் விளக்கமுறும். அந்தநிலை கைவருமாயின் ஐவகை மன்றங்களிலும் ஓவுதலின்றித் திருக்கூத்தினைச் செய்தருளும் சிவபிரானுடைய திருவடியைப் பொருந்துதலும் கைகூடும் என்றவாறு.

அன்றுதல் – மாறுபடுதல், வேறுபடுதல், அன்றினார் – பகைவர், ஐவகை அந்தம் என்றது; ஆறுஅந்தங்களையும் தனித் தனியே எடுத்துக்கூறிப் பின்பு 'ஒன்றான வேதாந்த சித்தாந்தம்' என்று இரண்டாகக் கூறாது ஒன்றாகவே கொண்டமையால் என்க. 'நின்றால் நேர்படும்' என்றும், 'நேர்பட்டால் மன்றாடி பாதம் மருவலும் ஆகும்' என்றும் கூறியருளினது அருமை நோக்கியேயாம்

மன்றம் – அம்பலம்; இங்கே திருச்சிற்றம்பலம். தில்லைச்சிற்றம்பலம் அருள்வடிவம். திரு + சிறு + அம்பலம்; திருச்சிற்றம்பலம். சித் + அம்பரம் = சிதம்பரம், ஞானாகாசம், தகராகாசம். திருச்சிற்றம்பலம் சிற்சபை; பொன்னம்பலம் கனகசபை; பேரம்பலம் தேவசபை; ஊர்த்துவதாண்டவர் எழுந்தருளியுள்ள இடம் நர்த்தனசபை; ஆயிரக்கால் மண்டபம் இராசசபையாம்.

"அம்பல மாவது அகில சராசரம்
அம்பல மாவது ஆதிப் பிரானடி
அம்பல மாவது அப்புத்தீ மண்டலம்
அம்பல மாவது அஞ்செழுத் தாமே" (2775)

அம்பலம்: சர்வ ஆன்மாக்களுக்கும் பொதுவாய், சங்கார வழக்கறுக்கிற அம்பலமாய், களங்கமற்ற கனகமய ரூபமாய், சுத்தகேவலமாய், பூமிக்கு இருதய கமலமாய், யாவர்க்கும் புகலிடமாய், சாக்கிராதீதம் கழன்ற சுத்தமாய், பரஞானமாய், காணுந்தோறும் காணுந்தோறும் புதுமையாய் இருப்பதாய், சத்திய ஞானரூபமாய், சுழுமுனை மார்க்கத்தில் எழுந்தருளி யிருக்கிற பிரகாசமான ஞானமாய், தன்னைத் தரிசித்த வர்களுக்கு ஞானானந்தத்தைத் தோற்றுவிக்கும் பொருளாய், பசு பாசஞானம் நீங்கியிருப்பதாய், சர்வத்திற்கும் இடங்கொடுப்பதாய், பதமுத்திகளைக் கைவிட்ட இடமாய், மகாமாயைக்கு மேலாய், எப் பொழுதும் எல்லாப் பாதத்திலும் விளங்கும் ஞான மாகிய சபையாய், சிவசொரூபமாய், தத்துவாதீத சிவபிரான் அனவரத தாண்டவத்திற்கு அதிட்டான மாய் இருப்பதாம். "அத்தன் பரதத்துவன்" (கோயிற் புராணம்) காண்க.

அபிநயம், நாட்டியம் என்பன வாக்கியார்த் தத்தை வெளிப்படுத்துவன. நிருத்தம்—பதார்த்தத்தை வெளிப்படுத்துவது. தாண்டவம் – தாளத்துக்கியைய ஆடுவது என்பர்.

மன்ருடி : பெயர். பாதம் – திருவடி; அஃது எடுத்த பொற்பாதம். ஐவகைமன்று: திருவாலங்காடு

தில்லை, கூடல், நெல்வேலி, குற்றாலம் என்னும் ஐந்து தலங்களினும் முறையே உள்ள இரத்தினசபை, கனகசபை, இரசதசபை, தாமிரசபை, சித்திரசபை என்பனவாம்.

**அனாதி சீவனைம் மலமற்றப் பாலாய்**
**அனாதி யடக்கித் தனைக்கண் டானாய்த்**
**தனாதி மலங்கெடத் தத்துவா தீதம்**
**வினாவுநீர் பாலாதல் வேதாந்த வுண்மையே 2400**

இ-ள்: பதி பசு பாசம் ஆகிய முப்பொருள் களும் அநாதி நித்தியப் பொருள்கள் ஆகலின், அநாதி யாகவுள்ள ஆன்மாவைக் கன்மமலம் மாயாமலம் ஆணவமலம் ஆகிய மூன்று மலங்களும், நெல்லி னுக்கு முளை தவிடு உமி போல் பந்தித்து நின்று போகமும் பந்தமும் போத்திருத்துவமும் பண்ணுவன வாம். இம்மலங்கள் மூன்றனோடும். மாயேய மலம் திரோதாயி என்னும் இருமலங்களும் ஆக இந்த ஐவகை மலங்களும் நிலைபெறுதலால் ஆன்மா பிறப் பிறப்புக்களில் பட்டுக் கொள்ளிவட்டமும் காற்றாடி யும் போலச் சுழலும். ஆன்மா ஐவகை மலங்களும் நீங்கப்பெற்றுச் சுத்தமாய், துரியாதீத நிலையை அடையும். அடையவே தொன்று தொட்டுள்ள ஆணவமலப் பகை அடங்கும். மேல் தன்னையும் கண்டு சிவப்பொருளையும் காணவே ஆதிமலமாகிய கன்மமலம் மாயாமலம் இரண்டும் நீங்குவனவாம். அதன்மேல் முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து தத்துவாதீதத்தில் ஆன்மாப்பொருந்தி, "பாலோ டளாயநீர் பாலாகு மல்லது நீராய் நிறந்திரிந்து தோன்றாதாம்" ஆகலின் சிவனுடைய எண்குணங் களும் தன்மாட்டுப் பதியப்பெற்று நிற்றலால் சிவனும்

இவனில் வேறுதல் இன்றி அத்துவிதமாய்த் தோன்றி மலங்கள் முழுதும் நீக்கிச் சுத்தனாகச் செய்வன். பழைய வேதாந்தமும் 'அது நானானேன்' என்னப் பாவிக்கச் சொல்வதும் இதுவே ஆகலின் வேதாந்த மகாவாக்கியத்திற்கும் இதுவே பொருளாகக்கொள்க. இதனால் வேதாந்த மகாவாக்கியமும் சித்தாந்த மகா வாக்கியமும் பொருளான் ஒன்றே எனச் சித்தித்தமை காண்க என்றவாறு. (279)

**உயிரைப் பரனை யுயர்சிவன் றன்னை**
**அயர்வற் றறிதொந் தத்தசி யதனாற்**
**செயலற் றறிவாகி யுஞ்சென் றடங்கி**
**அயர்வற்ற வேதாந்த சித்தாந்த மாமே. 2401**

இ – ள் : ஆன்மாவையும், திருவருளையும், எல்லாவற்றிற்கும் மேலான பரமசிவனையும் மயக்க மின்றித் தெளிவுற்றுக்காண்க. (த்வம் தத் அசி –) தொந்தத்தசி – நீ அது ஆகின்றாய் என்னும் மகா வாக்கியப் பொருளை நன்குணர்ந்து உன்செயல் அற்று அறிவாக விளங்குக. அறிவு வடிவாக விளங்கினும் திருவடிக்கீழ் அடங்கி நிற்க. இந்நிலைதான் மயக்க மற்ற வேதாந்த சித்தாந்தம் ஆகும். என்றவாறு.

இருள் நீங்குதலும் ஒளி விளங்குதலும் ஒரே காலத்தில் நிகழ்வன ; அதுபோல, பசுத்துவநீக்கமும் (மலம் நீங்குதலும்) சிவத்துவ விளக்கமும் (சிவத் தன்மை விளங்குதலும்) முன்னும் பின்னுமாக நிகழாது ஒரே காலத்தில் நிகழ்வனவாம். இருள் நீங்குதலும் ஒளி விளங்குதலும் ஒரேகாலத்தில் நிகழ்வதுபோல் பாசமாகிய மல நீக்கமும் அருள்

விளக்கமும் ஒரேகாலத்தில் நிகழுமே அல்லாமல் ஆனந்த விளக்கமும் உடன் நிகழாது. பாசம் நீங்கப் பெற்றவன் சிவப்பேருகிய சுவானுபூதியை உடையனுவான்.

'ஏகனுகி இறைபணி நிற்றல்' 'அறிவாகியும் சென்றடங்கி' என்பதனுல் விளங்கும் ஏகனுகி இறைபணி நிற்றலாகிய 'அறிவாகியும் சென்றடங்குதல்' என்பது துரியநிலையிலுள்ள அருள் நிலையாகும். அதலால் மலம் நீங்கிய அளவில் சுகப்பிரபை மட்டும் விளங்குமே அல்லாமல் துரியாதீத நிலையிலுள்ள சிவத்துவ விளக்கம் என்று கூறப்படும் பரமசுகம் விளங்காது. சுகப்பிரபை – சுகத்தின் சிறுதோற்றம். அப்பரமசுகம் அவனருளால் அல்லது ஒன்றையும் செய்யாமையாகிய இறைபணியில் நிற்றலால் மட்டும் விளங்காது. ஆதலால், 'செயலற்று அறிவாகியும் சென்று அடங்கி' என்ருர். எனவே, அவ்விடத்துச் செய்யக்கடவது ஒன்று உண்டு என்பது பெறப்படும்.

இனி, கண் உயிரையல்லாமல் உருவத்தை அறியாது. அக்கண் உருவத்தைக் காணும்பொழுது உயிரினது அறிவு கண்ணொளி என்றும் தான் என்றும் வேற்றுமையில்லாமல் கண்ணொளியோடு உடனுய்க் கலந்துநின்று கண்ணுக்குக்காட்டிய அவ்வுருவத்தைக் கண்கண்டது என்றும், கண்ணை இடமாகக்கொண்டு நின்ற உயிர் கண்டது என்றும் பிரித்தறியப்படாமல் உயிரையில்லாமல் கண்காணுதலும்,கண்ணையில்லாமல் உயிர்காணுதலும் இயலாமையால் கண்காணுதலும் உயிர்காணுதலும் ஆகிய இரண்டும் ஒன்றை ஒன்று

விட்டு நீங்காமல் அத்துவிதமாய் ஒருங்கே (ஒன்றாக) நிகழும். அதுபோல, முதல்வனையில்லாமல் விடயங்களை அறியாத உயிர் விடயங்களை அறியும்பொழுது முதல்வனுடைய சிற்சத்தி, ஆன்மசிற்சத்தி என்றும் தான் என்றும் ( முதல்வன் சிற்சத்தி என்றும் ) வேற்றுமையில்லாமல் உடனாய்க் கலந்து நிற்றலால் முதல்வனும் அங்ஙனம் வேற்றுமையில்லாமல் உடனாய்க் கலந்து ஆன்மாவிற்கு அறிவித்த விடயத்தை அந்த ஆன்மா அறிந்தது என்றும், அந்த ஆன்மாவை இடமாகக்கொண்டு நின்ற தான் ( முதல்வன் ) அறிந்தான் என்றும், பிரித்து அறியப்படாமல், முதல்வனையில்லாமல் ஆன்மா அறிதலும் ஆன்மாவையில்லாமல் அம்முதல்வன் அறிதலும் இயலாமையால் ஆன்மா அறிதலும் முதல்வன் அறிதலும் ஆகிய இருவகை அறிவும் ஒன்றையொன்று விட்டு நீங்காமல் அத்துவிதமாய் ஒருங்கே நிகழும்.

இங்ஙனம் முதல்வன்செய்யும் காட்டிக்காணும் உபகாரம் பெத்தம் முத்தி என்னும் இவ்விரண்டிலும் ஒரே தன்மையாகவே நிகழும். அங்ஙனம் அத்துவிதமாய் நின்று உபகாரம் செய்தலை நோக்குமானால் நோக்குந் தோறும் நோக்குந்தோறும் முதல்வனிடத்தில் அன்பானது ( இச்சை) மிகவும் உண்டாகும். அங்ஙனம் அடங்காத இச்சையுண்டாதல் அவ்விடத்தில் அவ்விச்சையே வடிவமாக விளங்கித் தோன்றும் பேரானந்தத்தை அநுபவிக்கும். இங்கே துரியாதீத நிலையின் தன்மை அறிக.

உயிர்கள் முதல்வனைச் சார்ந்தவிடத்து முதல்வன் மயமாய் ( சிவமாய் ) ஒரு தன்மையுற்று ஒற்றுமைப்

பட்டு நின்று அம்முதல்வனுடைய திருவடிகளை உணரும் பொழுது அந்த உயிர்களுக்குப் பரபோக மாய் ( சிவபோகமாய் ) மேன்மேலும் விளைவான் என்க.

அயர்வற்ற-சோர்தலில்லாத, மறவாத என்றபடி.

இனி, சிவத்தையும் அருளையும் உள்ளவாறு விசாரிக்கில் வித்தும் முளையும் போலத் தாதான்மியமா யிருக்கும். வித்தைப்போலும் சிவம், முளைபோலும் திருவருள். வித்திடத்து முளையிருப்பதே நிச்சயம். அஃதில்லை என்று உணரக்கூடாது. வித்தைப் பெற்ற இடத்து வித்தைப்போல முளையானது கையாட்சிக்கு வருதல் இல்லை அதுபோல, சிவத்தைப் பெற்றவர் களுக்குச் சிவத்தைப்போல அருள் கையாட்சிக்கு வருதலின்று. ஆகலின், சிவானுபவத்தைக் கண்ட வர்கள் பரையநீதமே சிவபோகம் என்பார்கள். இந்த உண்மை உணராது திருவருள் ஆண்டு இல்லை என்ற வர்கள் சிவானுபவத்தை இழந்தவர்களே. பரம் பொருள் நிற்கும்தானம்; திருவருளும் சிவமும் பொருள் ஒன்றேயாய்த் தம்மில் இரண்டாகும் ஆன் மாவும் உளது என்று வேறு காணப்படுவதில்லை. ஞானமேயாகிய திருவருளும் ஆன்மாவும் மெய்ப் பொருளுக்கு இருப்பிடமாம் " சத்தியாய்ச் சிவமாய் உலகெலாம் படைத்த தனிமுழு முதலுமாய் அதற் கோர் வித்துமாய் ஆரூர் ஆதியாய் வீதி விடங்கராய் நடங்குலா வினரே " என்றமை காண்க. (280)

மன்னிய சோகமா மாமறை யாளர்தஞ்
சென்னிய தான சிவோகமா மீதன்ன
அன்னது சித்தாந்த மாமறை யாய்பொரு
ளுன்னிய வாகம நூலெனத் தோன்றுமே. 2402

இ - ள்: நிலைபெற்ற ஸ: அகம் - சோகம் என்பது அது நான் என்னும் பொருளைத் தரும். வேதியர்களுடைய சிரத்தானமாக உள்ளது அந்த சோகம்பாவனை. அந்தச் சோகம்பாவனை சிவோகம்மாம் இதுவே என்று சொல்ல அது முடிந்த முடிபாயிற்று. சிறந்த வேதங்களால் ஆராயப்படும் பொருள் அவை களோடு தொடர்பாகவுள்ள ஆகமங்கள் என்று சொல்லப்படும் என்றவாறு.

மன்னிய - நிலைபெற்ற ஸ: அகம் - சோகம். சிவ: அகம் = சிவோகம். மன்னிய சோகம் - நிலைபெற்ற சோகம்பாவனை. மாமறையாளர் - வேத வேதாந்தங் களை உணர்ந்தோர். சென்னியதான சிவோகம் - சிரத் தானமாகக் கொண்டெழுகும் சிவோகம்பாவனை. அன்னது - அந்தப் பாவனை. " சிவோகம் பாவிக்கும் அத்தால் சிவனுமாவர் "; " சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன் வேறின்றி "; " பண்டைமறைகளும் அது நானானேன் என்று பாவிக்கச் சொல்லுவது இப்பாவகத்தைக் காணே " என்பன சிவஞான சித்தியார்.

இனி, விந்துத்தானமாகிய புருவநடுவிலே சிகாரம் தத் பதப்பொருளும், யகாரம் துவம் பதப்பொருளும், வகாரம் அசிபதப் பொருளுமாம் முறைமைகொண்டு அப்பஞ்சாக்கரத்தினால் சிவோகம்பாவனை செய்யின் அப்பொழுதே அங்ஙனம் விளங்கித் தோன்றும் சிவ பெருமானுக்கு ஆன்மா அடிமையாம். ஸ்ரீ பஞ்சாக் கரம் ஓதும் முறைமையிலே வைத்துக் கண்டு சிந்திக்கச் சிந்திக்க, அஃது சிவதரிசனத்தை விளக்கி வாசனை மாத்திரத்தினால் புறத்தே போய்ப் பற்றும்

ஏகதேச அறிவைப் பற்றறக் கெடுத்துப் பூரண நிலையிலே கொண்டுசெல்லும். இதனை,

'அந்தமொ ராறினுஞ் சைவசித் தாந்த மரிதரிது
விந்துவும் நாதமும் யோகமும் போதமும்
வேதமுமாம்
இந்த வகையைந்திற் கப்புற மாமிஃதெய்த
வென்றாற்
சுந்தரி பாதந் தொழுதிடிற் கூட்டுவள்
சொல்வதன்றே.'

எனவும்,

"புரையின்றிப் போக்கு வரவின்றி யாதினும்
பூரணமாய்க்
கரையின்றி வாக்கு மனத்துக்கெட் டாது
கடந்துநின்ற
பரைநின் றிருவுரு வீதென யாரே பகர்வரம்மா
உரையின் றுறக்கத் திருப்பதல் லாலென்
னுரைப்பதுவே."

எனவும் வரும் புவனை கலைஞான தீபத்தானறிக. (281)

முதலாகும் வேத முழுதா கமமகப்
பதியான வீசன் பகர்ந்த திரண்டு
முதிதான வேத முறைமுறை யாலமர்ந்
ததிகாதி வேதாந்த சித்தாந்த மாகவே. 2403

இ – ள்: 'வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள்' எனக் கூறியருளியபடி முதல் நூலாகிய வேதமும் பூரணத் தன்மை வாய்ந்த சிவாகமங்களும்

என்னும் இரண்டும் முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானால் அருளிச் செய்யப்பட்டன. சிவனொருவனே பதிப்பொருள் ஆகலின் ' அப்பதியான ஈசன் ', என்று அருளினார், இரண்டும் மிகப் பழைமை உடையன. ஆயினும் வேதம் அதிகாரி பேதம் பற்றி முறைமுறையாக (படிப்படியாக) வைத்து அருளிச் செய்யப்பட்டதாம். அவ்வேத முடிபாகவுள்ள வேதாந்தம் சிறந்தது. அதிகமாக விளங்கும் ஆதிவேதாந்தம் சித்தாந்தத்தின் முடிபையேகொண்டு விளங்குவதாம் என்றவாறு.

அதிக + அதி = அதிகாதி – மிகமேம்பட்ட.

இனி, வேதாந்தமும் சித்தாந்தமும் வேறுவேறு என்பார் சிலர், " பல பொருள்படும். சூத்திரத்தை அங்ஙனம் படாமைத் தெளித்துரைக்கும் பாடியம் போல வேதாந்தத்தைத் தெளித்துரைப்பதே சைவ சித்தாந்தம் என்பார். மகுடாகமம் முதலியவற்றுள் ஓதியவாறே " " வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத்திறன் " என்றார் புடை நூலாசிரியர் ஆகிய ஸ்ரீ உமாபதிதேவ நாயனார். " ஈண்டு வேதாந்தம் என்பது வேதத்தின் முடிபுகளாகிய உபநிடதங்களை". சிவஞான மாபாடியம் காண்க.

சைவ சித்தாந்தத்தின் எய்துதற்கு அருமை கூறுவார், " பெருநூல் சொன்ன அறத்திறனால் விளைவதாய் " என்றார். எனவே. அஃது இல்வழி விளையாது என்பதாம். (282)

## 16. பதி பசு பாசம் வேறின்மை

அறிவறி வென்ற வறிவு மநாதி
அறிவுக் கறிவாம் பதியு மநாதி
அறிவினைக் கட்டிய பாச மநாதி
அறிவு பதியிற் பிறப்பறுந் தானே 2404

இ – ள்; அறிவு அறிவு என்று சொல்லப்படும் ஆன்மாவும் அநாதி நித்தப்பொருளாம். அறிவாகிய ஆன்மாவுக்கு அறிவாகவுள்ள பதிப்பொருளும் அநாதி நித்தப் பொருளேயாம். அறிவாகவுள்ள ஆன்மாவைப் பந்தித்துள்ள பாசமும் அநாதியாக உள்ளதேயாம். ஆன்மாவினிடத்தில் சிவஞானம் விளக்கமுறின் பிறப்பு இறப்புக்கள் நீங்கும் என்றவாறு.

முதல்வன் உயிர் என்கிற இருபொருளும் சித்துப் பொருள்களே; சித்து – அறிவுடைப்பொருள். முதல்வன் – அருட்சித்து; உயிர் அவ்வருளைச்சேரும் சித்தாம். முதல்வன் பிறப்பை ஒழித்துப் புத்தி அளிக்கும் சித்து ஆம்; உயிர் அவைகளில் அழுந்தும் சித்தாம். முதல்வன் தானே அறியும் சித்தாம். உயிர் அறிவிக்க அறியும் சித்தாம். ஒளி என்னும் பொதுமையால் ஒத்து ஒன்றாலும் பற்றுக்கோட்டை இன்றியமையாததாய் அது அதுவாய் முற்பட்டுக் காணும் கண்ணொளிக்கும். அதுபோலத் தனக்கு ஒரு பற்றுக் கோடு வேண்டாமல் தானே பற்றுக்கோடுள்ளதாய் எல்லாவற்றையும் ஒருங்கே விளக்கி நிற்கும் சூரியன் ஒளிக்கும் உள்ள வேற்றுமை பெரிதாம். அதுபோல அறிவுடைப் பொருளாகியஉயிருக்கும் முதல்வனுக்கும் உள்ள வேற்றுமை பெரிதும் உள்ளதாம்.

இனி, அரிசியோடு அநாதியே நின்ற முளை தவிடு உமிகள் அந்த அரிசியைவிட்டுக் கெட்டொழிய அரிசி கேடின்றி நிலைபெறுவதைக் காண்கிறோம். அநாதியே உயிர்களோடு சகசமாய் நின்ற மலம் மாயை கன்மங்களாகிய மும்மலங்களும் உயிரைப்பந்தித்து நிற்றலால் பசு என்று சொல்லப்படும். முத்திநிலைக்கண் மும்மலங்களும் விண்டொழியும்.

நெல்லின் கண்ணே உமியும், செம்பின்கண்ணே களிம்பும் எக்காலத்து உளவாயின என்று ஆராயுங்கால், அந்த நெல்லும் செம்பும் உளவாயினவன்றே உள்ளன; அல்லாமல் இடையே வந்தன அல்ல.

ஆன்மா சிவபெருமானைப்போல அறிவுடைப் பொருளாயினும், செம்பிற்களிம்பு போல வேறு காரணமின்றித் தன்னோடு உடனாய் நிற்கும் மலத்தின் மறைப்பினால் தன் இயல்பை அறிதல் இல்லை. சகசமலமாகிய ஆணவம் ஞானத்தை மறைப்பதாய், திரவியமாய், அறியாமைக் குணத்ததாய், செம்பிற் களிம்பு போல, உயிரின்குற்றமாய், அநாதிபந்தமாய், ஒன்றேயாய், உயிர்கள் தோறும் தனித்தனி வெவ்வேறாய், தத்தம்கால எல்லையில் நீங்குவனவாகிய சத்திகள் பற்பலவுடைத் தாய், ஆன்மாக்கள் கேவலாவத்தை முதலிய மூன்று அவத்தை அடைதற்கு மூலகாரணமாய், நித்தமாய், வியாபகமாய், வியாபகமாகிய உயிரை அணுத்தன்மை யுறுமாறு செய்தலினால் ஆணவம் எனப் பெயர் பெற்றது விளங்கும்.

இது "பசுத்துவம்" பசுநீகாரம், மிருத்தியு, மூர்ச்சை, மலம், அஞ்சனம், அவித்தை, ஆவிருதி,

ருக்கு, கிலானி, பாவமூலம், க்ஷயம் என்னும் காரணப் பெயர்களையுடையது. அறிவிக்க அறியும் தன்மைத்தாய ஆன்மா அநாதியே அறிவித்தால் அறிய மாட்டாமையின், அதுபற்றி அவ்வறிவை இழந்து அறியாமையாய் அழுந்துதலின், அந்த ஆணவமலம் அவ்வுயிர்க்குப் பந்தமாயிற்று என்க.

ஆன்மா, தான் என வேறு காணப்படு மாறின்றிச் சிவனோடு ஒற்றுமைப்பட்டு ஏகனாகி நின்றால், யானும் எனதும் எனப் பகுத்துக்காணும் மயக்க உணர்வுக்கு ஏதுவாகிய மலம் நீக்கி அச் சிவபிரான் திருவடியாகிய சிவானந்தத்தைப்பெறும். ஆகலான், சிவபெருமானோடு ஆன்மா ஒற்றுமைப் பட்டு நிற்றல் வேண்டும்.

ஆன்மாவும் பதிப்பொருளும் சித்துப் பொருள் என்பது: "சிவன் சீவ னென்றிரண்டும் சித்தொன் றும்" (சித்தி 11-11.) திருமூல தேவரும் "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்றருளினமை காண்க. (283)

பசுப்பல கோடி பிரமன் முதலாய்ப்
பசுக்களைக் கட்டிய பாசமூன் றுண்டு
பசுத்தன்மை நீக்கியப் பாசமறுத்தாற்
பசுக்க டலைவனைப் பற்றி விடாவே. 2405

இ-ள்: பிரமன் முதலாகவுள்ள ஆன்மாக்கள் அளவிறந்தன. ஆன்மாக்களைப் பந்தித்துள்ள பாசங் கள் மூன்றுள்ளன. ஆன்மபோதத்தை அகற்றி அப் பாசங்களைப் போக்கினால் ஆன்மாக்கள் அந்தப் பதிப் பொருளைப் பற்றிப் பின்பு நீங்கா என்றவாறு.

ஆன்மா பாசத்தால் பந்திக்கப்பட்டமையின் பசு என்னும் பெயர் பெற்றது.

பதிப்பொருளின் வேறாய் அதனோடு கலந்த உயிர்கள் பலவகைப்பட்டன. அவை இருள்போல மறைத்தலைச் செய்யும் ஆணவமலத்தோடும் தழுவிக் கிடத்தலினால் கேவலாவத்தையுடையன ; கருவிகளோடும் கூடிப்பொருந்துவதனால் வியாபகத்தையுடையன : மலபந்தம் நீங்க வீடுபெறுவனவுமாய் உள்ளன. இனி, அவ்வுயிர்கள் அளவிறந்தன ஆயினும் அனாதி ஆணவ மலபந்தத்தின் மயக்கம் மாத்திரமே பந்திக்க நின்ற விஞ்ஞானகலர் எனவும், அம்மலபந்தத்துடனே கரும மலமும் பந்திக்கும் வகையில் நின்ற பிரளயாகலர் எனவும், அவ்விரு மலத்துடனே மாயாமலமும் பந்திக்கும் மிகுதியால் நின்ற சகலர் எனவும் மூவகைப் பேதம் உடையனவாம்.

பசுக்கள் என்றால் உயிர்கள் என்று தெரிந்தோம். இந்த உயிர்கள் எங்கிருந்தன. எவ்வாறு தோன்றின என்னும் விஷயங்களை ஆராயத்தொடங்கினால், சில சமயங்கள் உயிரென்று ஒரு பொருள் முன்பு இல்லை ; பின்பு கடவுளால் படைக்கப்பட்டது என்று கூறும். இவ்வாறு கூறுவதில் பல ஆட்சேபனைகள் உண்டாகும். இல்லாத உயிர்களைக் கடவுள் ஏன் படைக்கவேண்டும் ? இந்த உயிர்களைப் படையாததால் கடவுளுக்கு என்ன குறையிருந்தது ? நாம் இப்பொழுது அநுபவிக்கும் துன்பப் பெருக்கைக் கவனித்துப் பார்த்தால் கடவுள் நம்மைத் துன்பம் அநுபவிப்பதற்காகவா படைத்தார் ? இல்லாத உயிரைப் படைத்துத் துன்பம் அடையச் செய்பவர்

கடவுள் ஆவரா ? என்றெல்லாம் வினுக்கள் எழுவது இயற்கையேயாம்.

இன்னும் கடவுள் உயிரை எங்கிருந்து படைத்தார் ? தம்மிடத்திலிருந்து படைத்தாரென்ருல் அவரைப் போலவே நாமும் இன்பமயமாய் இருக்க வேண்டுமே ! அவ்வாறு இல்லையே ; ஆகவே, கடவுளிடமிருந்து நாம் படைக்கப்படவில்லை. கடவுளுக்கு வேருய் நாம் படைக்கப்படுமுன் இருப்பது உலகம் ஒன்றே, உலகத்தினின்றும் நம்மைப் படைத்தார் என்ருல் உலகமோ அறிவில்லாத பொருள் ; மண்ணுகிய சடத்தினின்றும் தோன்றிய கடமும் சடமே. அதுபோல, உலகத்தினின்றும் நாம் படைக்கப்பட்டால், நாமும் சடப்பொருளாகவே இருக்கவேண்டும். அவ்வாறில்லாமல் நமக்கு அறிவு காணப்படுகின்றதே ! இதனுல், உயிர்கள் படைக்கப் பட்ட பொருள்கள் அல்ல என்றும் விவரிக்கப்படும்.

இவ்விஷயத்தில் நமது வேதாகமங்கள் யாது கூறு கின்றன ? இவ்வுயிர்கள் கடவுளாகிய சிவபெரு மானைப் போலவே அநாதி நித்தியப்பொருள்கள் என்று நமது வேதாகமங்கள் கூறுகின்றன. சிவபெருமானும் அநாதி நித்தியப்பொருள். உயிர்களாகிய நாமும் அநாதி நித்தியப்பொருள் என்ருல் இரண்டு பொருள்களுக்கும் வித்தியாசம் யாது ? இவ்விரண்டும் பொருள்களுக்கும் உள்ள வித்தியாசத்தை ஸ்ரீ அரதத்தாசாரிய சுவாமிகள் சுருதிசூக்திமாலையில்.

> *"ஆத்மாந்த ராணி பசவ ; பரதந்த்ர பாவாத்*
> *ஸ்வாதந்த்ராயத : பசுபதே பதிரீச்வரத்வம் |*
> *ஆத்மாந மௌபநிஷதா : ப்ரவதந்த்ய நீசம்*
> *ஈசம் பவந்தமுபயோ ருபயம் ஸ்வபாவ :" ||*

என்றருளினர். இதன்பொருள்; "ஆன்மாக்களெல்லாம் பரதந்திர முடைமையால் பசுக்கள் எனப்படும். சிவபிரான் சுதந்திர முடைமையால் அப்பசுக்களுக்குப் பதி எனப்படுவர். சுவேதாச்சுவதரோபநிடதம் முதலியன ஆன்மாக்களுக்கு அநீசத்துவமும் சிவபிரானுக்கு ஈசத்துவமும் கூறும். இனி, அவற்றிற்கும் அவருக்கும் அவ்விருதன்மையும் இயற்கையே என்க" என்பதாம்.

உயிர்கள் கடவுளாகிய சிவபெருமானைப் போலவே அநாதி நித்தியப் பொருள்கள் என்பதை "அறிவறிவென்ற அறிவுமநாதி, அறிவுக்கறிவாம் பதியும் அநாதி" என இவ்வதிகாரத்து முதல் மந்திரத்திலேயே அருளிச் செய்தமையும் காண்க.

இதனைப் பருப்பொருளாயுள்ள ஓர் உதாரணத்தால் விளக்குவோம். தங்கம் இரும்பு என்னும் இரண்டு உலோகங்களும் ஒரு காலத்திருக்கின்றன. ஒருகாலத்தில் இருக்கின்றன என்ற காரணத்தால் அவற்றிற்குள் வேற்றுமையில்லாமற் போகுமா? வேற்றுமை இருக்கிறது. தங்கத்தில் துருப்பிடியாது, இரும்பில் துருப்பிடிக்கும். இப்படி ஒருகாலத்திலேயுள்ள இரண்டு பொருள்களில் தன்மை வேறுபட்டதனால், இரண்டும் வேறு வேறு பொருள் என்று நிச்சயிக்கின்றோம். அதுபோல, சிவமும் உயிர்களும் அநாதி நித்தியப் பொருள்களாயினும், சிவம் தங்கத்தைப் போன்று அநாதியே ஆணவாதி மல சம்பந்தமில்லாத பொருள்; உயிர்கள் இரும்பைப் போன்று அநாதியே ஆணவமல சம்பந்தமுடைய பொருள் என்று இலக்கணத்தின் வித்தியாசம் இருத்

தலின். இரண்டும் வேறு வேறு பொருள்கள் என்பது நிச்சயிக்கப்படும். இதுவரை கூறியதனுல் உயிர்கள் கடவுளைப்போல அநாதி நித்தியப்பொருள் என்பதும், அவை படைக்கப்பட்ட பொருளல்ல என்பதும், அவை ஆணவம் முதலிய பந்தங்களையுடையன என்பதும் தெளிவாக்கப்பட்டன.

'பசுக்களைக் கட்டிய பாச மூன்றுண்டு' என்பதனையும் விசாரிப்போம். பாசம் என்பது தொகையால் ஒன்ருகக் கூறப்படினும் வகைப்படுத்திப் பார்க்குமிடத்து அது ஆணவம், கன்மம், மாயை என மூன்று வகைப்படும். இம்மூன்றனுள் ஆணவம் என்பது சகசமலம் என்றும், மற்றைக் கன்மம் மாயை என்னும் இரண்டும் ஆகந்துகமலம் என்றும், சொல்லப்படும். ஆணவம் என்பது எங்ஙனம் இரும்புக்குச் சகசமாய்க் கறையாகிய துரு உள்ளதோ அதுபோல அங்ஙனம் உயிர்களைப்பற்றி இருக்கின்ற குற்றமாகும். பரம கருணைமூர்த்தியாகிய சிவபெருமான் நம்மீது வைத்த பெருங் கருணையினலே பொல்லா ஆணவத்தைப் போக்குவதற்காக ஏனைய இரண்டு மலங்களாகிய கன்மம், மாயை என்பவற்றைக் கூட்டி அருளினர். இதனைச் சாதாரண உவமையில் வைத்து நமது சித்தாந்த சாத்திரம் விளக்கும். ஒரு வெண்மையான ஆடையிலே அழுக்குப் படிந்திருக்கின்றது. அந்த அழுக்கை நீக்குவதற்கு வண்ணன் சாணி உவர்மண் என்னும் வேறிரண்டு அழுக்குகளை ஏற்றுவான்; ஏற்றி அவை அனைத்தையும் கழிப்பான். அதுபோல, பரம கருணைமூர்த்தியாகிய சிவபெருமான் நம்மைப் பந்தித்த ஆணவமலத்தை ஏனை இரு மலங்களையும் கூட்டிக்கழிப்பன். உயிர்களில் விஞ்ஞான

கலர், பிரளயாகலர், சகலர் எனப்படும் பாகுபாடும்; ஆணவமலத்தின் ஆவாரகசக்தி அதோநியாமிகாசக்தி என்பனவும்; கன்ம மலத்தின் பாகுபாடான சஞ்சிதம் பிராரத்தம், ஆகாமியம் எனபனவும்; மாயாமலத்தின் பாகுபாடான சுத்தமாயை அசுத்தமாயை என்பனவும் சித்தாந்த சாத்திரங்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

சைவசமயத்தில் கூறப்படும் பதி பசு பாசம் என்னும் மூன்று பொருள்களைப்பற்றிப் பொதுவகை யாகத் தெரிந்தோம். இனி, சைவசித்தாந்தத்தில் கூறப்படும் முத்தியாவது: பாசத்தைப் பசுக்கள் விட்டுப் பதியினை அடைவதே முத்தியாகும். அதுவே உயிர் அடையும் பரமானந்த நிலயமாகிய மோட்ச நிலை. இதனை,

"படிக்கு நூல்கள் சிவாக மம்பசு
பாச மோடு பதித்திறம்
எடுத்தி யம்புவ தீசன் வார்கழல்
ஏத்தி டுந்தொழில் என்றுமே
விடுத்தி டும்பொருள் காம மாதிகள்
வேண்டி டும்பொருள் ஈண்டருள்
முடித்து மும்மலம் விட்டு நின்மல
னோடு நின்றிடல் முத்தியே."

எனச் சிவஞான சித்தியார் நாம் அநுட்டிக்க வேண்டிய காரியங்களையும், அவற்றால் நாம் எய்தும் பயனையும் சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறியது காண்க. (284)

கிடக்கின்ற வாறே கிளர்பயன் மூன்று
நடக்கின்ற ஞானத்தை நாடோறு நோக்கித்
துடக்கொன்று மின்றித் தொழுமின் றெழுதாற்
குடக்குன்றி லிட்ட விளக்கது வாமே. 2406

இ — ள் : உயிர்கள் பாசத்தால் கட்டுண்டு கிடக்கும் நிலையிலே அப்பாசங்களினின்றும் வீடு பெற்றுய்யுமாறு உள்ள சரியை கிரியா யோகங்களாகிய தவங்களை முற்பிறவிகளில் செய்து முடித்தவிடத்து, அந்தத் தவங்கள் வீடுபேறு அடைதற்குச் சன்மார்க்க மாகிய ஞானத்தைக் கொடுத்து, அந்த ஞானம் வாயிலாக முத்தியைக் கொடுக்கும். ஆகலின், 'கிளர் பயன் மூன்றும் நடக்கின்ற ஞானம்' என்றார். 'மேல் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டி அல்லது மோட்சத்தைக் கொடா ஆகலான்' என்றமை காண்க. மேலாகிய உண்மைச் சரியை கிரியை யோகங்கள் எனினுமாம். 'மூன்றும் நடக்கின்ற' என்றது மூன்றனும் நடக்கின்ற எனப்பொருள் கொள்க. சரியை கிரியா யோகங்களாகிய தவத்தால் ஞானம் பெறும் முறைமை எவ்வாறு ? என்னில், சரியை யாகிய தவத்தைச் செய்தவர்கள் அத்தவப்பயனைக் கொடுக்கும் சாலோகபதத்தையும், கிரியையாகிய தவத்தைச் செய்தவர்கள் அத்தவப்பயனைக் கொடுக்கும் சாமீப பதத்தையும், யோகமாகிய தவத்தைச் செய்த வர்கள் அத்தவப் பயனைக் கொடுக்கும் சாரூப பதத் தையும் அடைந்து அவ்விடத்து உள்ளனவாகிய இன்பங்களை யநுபவித்துப் பின்பு மீண்டும் தவத்தைச் செய்தற்கு உரிய தவச் சூழலில் வந்துபிறந்து தவத்

தால் ஆசை மேலும் மேலும் வளராதவண்ணம் அறுத்து உண்மை ஞானத்தைப் பெற்றுப் பற்றொன்று மின்றித் திருவடியைத் தொழுவீராக. தொழுதால் பாசத்தால் கட்டுண்டு குடத்தினுள் விளக்காய் அறிவு விளக்கமின்றி நின்ற உயிர் குன்றிலிட்ட தீபம்போல ஞானமே சொரூபமாக விளங்குவதாம்; வியாபக அறிவைப்பெற்றுப் பதியின் திருவடியில் வியாப்பிய மாய் அடங்கும் என்றவாறு.

ஞானத்தை நாடோறும் நோக்குதலாவது: அயரா அன்பினைச்செய்தல்; இடையறாப் பேரன்புடையராதல் என்றபடி மறவாமையால் உண்டாகிய அன்பு என்க. இறைவன் உயிருக்குச் செய்துவரும் கருணையை மறவாமல் கடைப்பிடித்துச் செய்யும் அன்பினால் அம்முதல்வன் திருவடியாகிய சிவானந்தாநுபூதியை அடையும் எனக் கூறியபடி. தொடக்கு – ஆசா பாசாங்கள். (285)

பாசஞ்செய் தானைப் படர்சடை நந்தியை
நேசஞ்செய் தாங்கே நினைப்பர் நினைத்தலுங்
கூசஞ்செய் துன்னிக் குறிக்கொள்வ தெவ்வண்ணம்
வாசஞ்செய் பாசத்துள் வைக்கின்ற வாறே. 2407

இ – ள் : அநாதி பந்தமாகவுள்ள ஆணவமலத் தின் வலிகெடச் செய்யும்பொருட்டுக் கன்மம் மாயை என்னும் இரு மலங்களையும் கூட்டி அருளிய சிவ பெருமானை, விரிந்த சடையினையுடைய நந்தி என்னும் திருநாமத்தையுடைய பதிப்பொருளை மறவாமல் அன்பு செய்து இருப்பீராக. மறவாத அன்புடைய வராய் நினைக்க, அப்பதிப்பொருள் கூசி நினைந்து

அவ்வுயிரைக் குறிக்கொள்ளுவது எவ்வாறு? மலரும் பக்குவமுடைய தாமரை மற்றைத் தாமரைகளைப் போல நின்றாலும் மலரும் பக்குவமுடைய தாமரையினது கூம்புதலை நீக்கி மலரச் செய்கின்ற சூரியன் போல மலம் நீங்காத பெத்தர்கள் உடம்பொடு நின்றாலும் பக்குவமுடையவர்களாய்ப் பத்தியினால் தன்னை மறவாமல் உணர்கின்றமையால் அவர்களுக்கு முதல்வன் தன்னுடைய திருவருட் பார்வையால் பாசத்தைநீக்கிப் பூரண அறிவை விரியச்செய்வான். ஆதலால் உடம்போடு நின்றாலும் சீவன் முத்தர்கள் பாசமுடையவர்கள் அல்லர், எனவே, இதுவரையில் பாசத்தால் கட்டுண்டு பிறப்பிறப்புச் சுழலில் அகப்பட்டுத் துன்புழந்த உயிரை மேலும் பிறப் பிறப்புக்களில் அகப்படச் செய்வது எவ்வாறும்? என்றவாறு.

பாசஞ்செய்தல் ; தனு கரண புவன போகங்களைக் கூட்டுதல். சிவஞானமே கண்ணாகக்கொண்டு முதல் வனை அவ்வறிவிற் காணப்பெற்றுத் திருவடியைத் தலைக்கூடில் பாசம் நீங்கும் ; நீங்காது கலந்திடினும் சிவபாவனையை விடாதுசெய்து சிவபிரானை அவன் திருவடி ஞானத்தால் சேறலே பொருத்த முடையதாம்.

இனி, மயக்கந்தருவதாகிய ஆணவமலம் நீங்கவே மாயாமலமும் கன்மமலமும் உண்மை ஞானிகட்குப் பிரகாசிக்கின்ற அருள்மயமாகியே நிலைபெறும். இதனை,

"உள்ள மலமூன்றும் மாய வகுபெருந்தேன்
வெள்ளந் தரும்பரியின் மேல்வந்த - வள்ளல்
மருவும் பெருந்துறையை வாழ்த்துமின்கள் வாழ்த்தக்
கருவும் கெடும்பிறவிக் காடு"

என்னும் திருவாசகத்தானும் அறிக. (286)

விட்ட விடமேரு வாறுபோல் வேறுகி
விட்ட பசுபாச மெய்கண்டோன் மேவுருன்
கட்டிய கேவலங் காணுஞ் சகலத்தைச்
சுட்டு நனவி லதீதத்துட் டோன்றுமே. 2408

இ - ள் : கருடோகம் பாவனைபோலச் சிவோகம் பாவனை ஒருவன் செய்யப்பெறுமாயின், அக்கருடன் அம்மாந்திரிகனுக்கு வேருதலின்றி அத்துவிதமாய்த் தோன்றி விடத்தை நீக்கித்தெளிவுசெய்யுமாறு போலச் சிவபிரானும் இவனில் வேருதலின்றி அத்துவிதமாய்த் தோன்றி மலங்கள் முழுவதும் நீக்கிச் சுத்தனுகச்செய் வன், ஆகலின், வேறுகி விட்டகன்ற பசுஞான பாச ஞானங்களைச் சீவன் முத்தன் ஒருக்காலமும் பொருந் தான், பந்தப்படுத்தி ஆணவமலமாய் நின்ற கேவலத் தையும், காணப்படும் சகலத்தையும் நீங்கிச் சுத்தனுய் நிற்கும் முறைமை காயத்தோடு நிற்புழித்தானே கை கூடப்பெறும், சுட்டப்படும் சாக்கிர நிலையிற்றனே நின்மல துரியாதீத நிலையை அடைவன், இதனை, "சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்தவர்கள் உலகில் சருவ சங்க நிவர்த்தி வந்த தபோதனர்கள் இவர்கள். பாக்கியத்தைப் பகர்வதுவென் இம்மையிலே உயிரின் பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவ ரன்றே" எனக் குறிப்பித்தமையும் காண்க என்றவாறு.

நாடும் பதியுட னற்பசு பாசமு
நீடுமா நித்த னிலையறி வாரில்லை
நீடிய நித்தம் பசுபாச நீக்கமு
நாடிய சைவர்க்கு நந்தி யளித்ததே. 2409

இ - ள்: ஆராயப்படுகின்ற பதிப்பொருளுடன் பசுவும் பாசமும் ஆகிய இவைகள் பலதிறப்படுவன வாம். நித்தியமாகிய சிவப்பொருளின் நிலையினை இத் தன்மையினையுடைதென்று உள்ளவாறு அறிந்து கொள்பவர் இல்லை. என்றும் அழியாது தொன்று தொட்டுவரும் பசுபாசங்களின் நீக்கமும் திருவருளின் துணைகொண்டு ஆராயும் சித்தாந்த சைவர்களுக்கு அவைகள் எல்லாம் விளங்குமாறு சிவபெருமான் அருளிச்செய்தனர் என்றவாறு.

நித்தம் நீடிய பசுபாசம் எனக்கூட்டுக. நாடிய - ஆராயும் தன்மையுள்ள; விரும்பிய எனினுமாம். நித்தன் - சிவபெருமான். (288)

ஆய பதிதா னருட்சிவ லிங்கமாம்
ஆய பசுவு மடலே றெனநிற்கும்
ஆய பலிபீட மாகுநற் பாசமாம்
ஆய வரனிலை வாய்ந்துகொள் வார்கட்கே. 2410

இ - ள்: கலப்பினால் ஒன்றாயும் பொருட்டன்மை யால் வேறாயும் உடனாயும் நின்று உபகரிக்கும் பதிப் பொருளாகிய சிவம் அருட்சிவலிங்கம் ஆகும். பொருந்திய ஆன்மாவும் சிவசந்நிதியிலே வலிய இடபமாக ஒரு நெறிப்பட்ட நிலையிலே நிற்கும். பொருந்திய பலிபீடமானது இடபதேவரின் பின்னே

பலிபீடமாக விளங்கும். ஆகலின், அரன் நிலையாகிய திருக்கோயிலின் இயல்பை ஆராயவல்லவர்கட்கு அப்பலிபீடம் பாசப்பொருள் என்று கூறித் துணியப் படும் என்றவாறு.

திருக்கோயில் பதிபசுபாச உண்மைகளை விளக்கு வனவாய் அமைந்துள்ளது. சத்தியும் சிவமுமாய தன்மை இவ்வுலகமெல்லாம் என்பது அறியவே சிவமும் சத்தியுங் கொண்டருளிய பீடலிங்கவடிவாம். சிவசந்நிதியில் இடபதேவர் சிவலிங்கத்தை நோக்கிய படியே இருத்தல் ஆன்மாக்கள் சிவனையன்றி வேறு பதார்த்தங்களில் புத்தியைச் செலுத்துதலாகாது என்பதன் குறிப்பாம். இடபதேவரின் பின் பலிபீடம் இருத்தல் ஆன்மாக்கள் உலக இன்பங்களில் துவண்டு சென்று இறைவன் தரிசனத்துக்குச் செல்லுங் காலத்தில் மனம் வேறொன்றிலும் பற்றொழிய அங்கே திரிந்த மனத்தைப் பலியிடுதல் என்பதைக் குறித்தற்காகவேயாம் என்க. இன்னும் கோயில் களின் உள்ளே செல்லும்போது இடபதேவர் வடிவத்தைப் பெரிதாக வெளியில் காண்கின்றோம். உள்ளேசெல்லின் இடபம் அவ்வளவு பெரிதாக இல்லாமல் ஓரளவிலே நடுத்தரமுள்ளதாக அமைந் துள்ளது. சிவசந்நிதியை அடைந்தபோது சந்நிதி யிலுள்ள இடபதேவர் மிகச்சிறிய வடிவுடன் காணப் படுகிறது. இதற்குக் காரணம் என்ன? உலக நிலையிலே உயிர் தன்னைவிட யாருமிலர் என்னும் அகந்தைகொண்டு விளங்குமென்பதைச் சுட்டிக் காட்டுவது, எல்லாம் வல்ல இறைவன் முன்செல்லச் செல்லத் தன் செருக்கொழிந்து தன்னினும் சிறியர் — எளியர் யாருமிலர் என்பதை விளக்கி நிற்பதென்பர்.

இதனாலேயே 'ஆய பசுவும் அடலே றெனநிற்கும்' என்று அருளிச் செய்தார்.

அரனிலை – கோயில். (289)

பதிபசு பாசம் பயில்வியா நித்தம்
பதிபசு பாசம் பகர்வோர்க் காருக்கிப்
பதிபசு பாசத்தைப் பற்றற நீக்கும்
பதிபசு பாசம் பயில நிலாவே. 2411

இ – ள் : பதி பசு பாசம் என்னும் முப்பொருள் உண்மையினையும் நாடோறும் இடைவிடாமல் பயிலும் படி செய்து பதி பசு பாச உண்மையில் தலைப் படு வோருக்கு நல்ல மார்க்கத்தையும் காட்டித் தந்து, அந்த மார்க்கத்திலே செவ்வே நின்று ஒழுகுதலால் பதிப்பொருள் பசுபோதத்தையும் பாசஞானத்தையும் அடியோடு கெடுக்கும். பதிவியாபகத்துள்ளே பசுவும் பாசமும் வியாப்பியமாய் நிற்கும். ஆகலின் பதிபசு பாசத்தை உணர்த்தும் பஞ்சாக்கர மந்திரத்தை ஓதும் முறை நிற்குமுறைகளை விளக்கமாக அறிந்து அறி வாற்கணிக்கில் பதிப்பொருள் அறிவிலே விளங்கித் தோன்றப் பசுபாசங்கள் நில்லாதொழிவனவாம் எ - று.

'ஈசன் அருள் ஆவி எழிலார் திரோதமலம்' என்னும் ஐந்து பொருளுமே பஞ்சாக்கரமாக, அந்தப் பஞ்சாக்கரத்தின் உண்மை உள்ளவாறு அறிவதே ஞானக் கிரியைக்கு இயல்பாகக்கொண்டு, கேவல சகலங்களில் அறிவுசெல்லாமல் அந்தப் பஞ்சாக்கரத்து உண்மையை அறிந்திருப்பதே உபாயமாம், மும்மல அழுக்கைக் கழுவுதற்கு ஞானநீராகிய தூயபொருள் இதுவேயாம்.

இனி, பஞ்சாக்கரமே திருவருளையும் சிவத்தையும் காட்டுகின்ற பொருளானதால் அந்தப் பஞ்சாக்கரமே சிவபூரணத்திற் சேறற்கு வழியாகக்கொண்டு, இடைவிடாது பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்கில் அந்த வழியாகச் சிவம் உனது அறிவிற் புகுந்து, ஆன்மாவின் முதன்மையையும் ஞானக் கிரியையையும் கெடுத்து அந்தக் கேவல சகலங்கள் நீங்க, திருவருட் பெருமான் திருமேனி கொண்டு வந்து உனது அறிவில் சிவம் பிரகாசிக்கும்படி அநுக்கிரகம் செய்வான் எனவுணர்க.

எனவே, "ஆன்மாவும் சிவமும் உடைமையும் உடையானுமாய் நிற்கும் பரிசை ஐங்செழுத்தோதும் முறையின் வைத்துணர்ந்து, "ஆடும்படிகேள்" எனவும் "சேர்க்கும் துடிசிகரம்" எனவும் ஓதியவாறே அவன் திருமேனி அஞ்செழுத்தாலமைந்த பரிசும் உணர்ந்து அம்முறையே அங்கநியாச கரநியாசங்களும் அவ்வைங்தெழுத்தால் செய்து கொண்டு, இதயம் உந்தி புருவநடு என்னும் மூன்றும் பூசைத்தானம் ஓமத்தானம் தியானத்தானமாகக் கற்பித்துக் கொண்டு அங்ஙனம் வழிபட்டு நின்று கொண்டு, அவ்வஞ் செழுத்தை விதிப்படியே மாறி நெஞ்சமுத்தி உச்சரித்தல் செய்க...முப்பொருள்களுள் யான் இதனை அறிந்தேன் அறிகின்றிலேன் என்னும் அறிவிற்கு விடயமாய்த் தோன்றும் என்ப பசுபாசங்கள் போலப் புலனாகாதவழிப் பதிப்பொருள் அவ்வுச்சரிப்பில் ஆன்மாவின் மாட்டு விளங்கித்தோன்றும்."

"இனி ஆன்மாவையும் அரனுடைய பரிசாகிய திருவருளையும் சிவசொருபத்தையும் அஞ்செழுத்தால் உணர்ந்து என்றும், அஞ்செழுத்தால் அமைந்

தொழிந்த மலங்களையும் ஐந்தெழுத்திலுணர்ந்து என்றும் உண்மைவிளக்கம் சிவப்பிரகாசம் முதலிய வற்றுள் ஒதியவாறு பற்றி உரைத்தலுமொன்று ''

என்னும் சிவஞானசித்தியார் பொழிப்புரை நோக்கி அறிக. மேலும் விரிந்த நூல்களில் அங்கங்கே கண்டு கொள்க. (290)

பதியும் பசுவொடு பாசமு மேலைக்
கதியும் பசுபாச நீக்கமுங் காட்டி
மதிதந்த வானந்த மாநந்தி காணுந்
துதிதந்து வைத்தனன் சுத்தசை வத்திலே. 2412

இ – ள் : பரமான்மா ஆகிய பதிப்பொருளும் ஆன்மாவாகிய பசுவும், அவ்வான்மாவைப் பந்தித் துள்ள பாசமும், பாசம் நீங்கிய விடத்துப் பெறும் சிவப்பேருகிய பரமுத்தியும் ஆகிய இவற்றையும் பசு பாச நீக்கத்தையும் அருட்குருவாய் எளிவந்து எழுந் தருளிக் காட்டிச் சிவஞானத்தைக் கொடுத்தருளிய ஆனந்த வடிவாகிய சிவபெருமான் சித்தாந்த சைவத் திலே சொல்லி வைத்தார்.

மேலைக்கதி – பரமுத்தி, மதிதந்த – சிவஞானத் தைக் கொடுத்தருளிய. ஆனந்தமாம் நந்தி – சிவபெரு மான். 'உண்மை அறிவானந்த' வடிவமுடைமை பற்றி ஆனந்தமாம் நந்தி என்றார். பாசநீக்கமும் மேலைக்கதியும் பசுவுக்குக் காட்டி என்க. (291)

அறிந்தணு மூன்றுமே யாங்கணு மாகும்
அறிந்தணு மூன்றுமே யாங்கணு மாகி
அறிந்த வணுதி வியாத்தனு மாகி
அறிந்த பதிபடைப் பானங் கலற்றையே. 2413

இ – ள் : பசுப் பலகோடி யாகலின் அளவிறந்த அவைகளை அறிந்து, ஆணவமலத்தால் அணுத்தன் மைப்பட்ட உயிர் வருக்கம் எவ்விடத்தும் மூன்று வகையாக உள்ளன ; எவ்விடத்தும் ஆணவமலம் ஒன்றேயுடைய விஞ்ஞானகலரும், ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களையுமுடைய சகலரும் உளராக, வியாபகமாயுள்ள பதிப்பொருள் தம்முள் வியாப்தமாகிய அவ்வான்மாக்களுக்கு அவ்வவற்றிற்கு வேண்டிய தனு கரண புவன போகங்களையெல்லாம் அவரவர் கன்மத்துக்கு ஈடாகக்கூட்டி முடித்தருளு வார் என்றவாறு. (292)

படைப்பாதி யாவது பரஞ்சிவஞ் சத்தி
இடைப்பா லுயிர்கட் கடைத்திவை தூங்கல்
படைப்பாதி சூக்கத்தைத் தற்பரஞ் செய்யப்
படைப்பாதி தூய மலமப் பரத்திலே. 2414

இ - ள் : பதிப்பொருள் காருண்ணியமே வடிவு டையராதலால் உயிர்களின் மேல் வைத்த இரக்கம் காரணமாகவே படைப்புத்தொழிலை மேற்கொண்டார். அவ்விரக்கம் எல்லையில்லாத காலம் பிறப்பு இறப்புத் தொழில்களில் பட்டு உழல்வனவாகிய உயிர்களுக்கு முத்திப்பேற்றை அளிப்பதே அவருடைய இச்சை யாம். அவர் சர்வக்ஞர் ஆகலின் உயிர்களின் இச்சையை அறிந்து அவரவர் கன்மங்களுக்கு ஈடாகத் தனு கரண புவன போகங்களைக் கொடுத்து ஆணவமல சத்தியை வலியிழக்கச்செய்து பின்னும் பிறப்பு இறப்புக்களில் வராமல் முத்தியை அருளுவர் என்றவாறு.

பசுவும், பாசமும், அதிகாரம்செய்து நிற்பதாகிய பதியும், அதிகாரத்தின் ஒழிந்து தன் இயல்பில் நிற்பதாகிய சிவமும் எனப் பதார்த்தம் நான்கு என்று சர்வஞானோத்தராகமம் கூறும். இந்தப் பதி சிவம் சத்தி நாதம் விந்து சதாசிவன் மகேசுரன் உருத்திரன் விட்டுணு பிரமன் என்னும் நிஷ்களம் சகளநிஷ்களம் சகளமாக ஒன்பது பேதப்படும். இவர்களில் சிவத்திற்குச் சத்தியும் நாதத்திற்கு விந்துவும் இவ்விரண்டும் ஒழிந்த மூர்த்திகள் ஐவருக்கும் முறையே மனோன்மணி, மகேசை, உமை, இலக்குமி, சரசுவதி என்னும் சத்தி பேதம் ஐவகைப்படும். பதிக்கு இந்தச் சிற்சத்தியே தேகம் கரணம் இடமெல்லாமாம். காரிய பேதத்தினாலே சத்தி சிவங்களும் பேதமாயின. கர்த்தா காரியத்திலே உன்முகமாயிருக்கிற சத்தியுடன் கூடியிருப்பவர் ஆதலால் அவர் சங்கற்பமாத்திரையிலே சிருட்டி முதலிய தொழில்களைப் பண்ணுவர்.

பதியாகிய சிவத்தை அக்னிக்கு உஷ்ணம் போலப் பிரிவற்றிருக்கும் சத்தியானது நித்தமாய் ஒன்றாய் இச்சா ஞானக் கிரியா சொரூபமாய் இருக்கும். இது காரிய பேதத்தினாலே பரை ஆதி இச்சை ஞானம் கிரியை என ஐவகைப்படும். சத்தியினுடைய பேதத்தால் சிவனும் சத்தர் உத்தியுத்தர் பிரவிருத்தர் என மூவகைப் பேதப்படுவர்.

முதற்காரணமாகிய மாயையில் ஒடுங்கிய பிரபஞ்சத்தை நிமித்த காரணகர்த்தவானவர் அதனினின்று மீளத் தோற்றுவிப்பர். பிரபஞ்சத்துக்கு ஆதாரம் மாயை; மாயைக்கு ஆதாரம் சிவசத்தி; அச்சத்தி சிவனுக்கு வேறாதல் இன்மையின் சிவத்தினிடம்

சிவசத்தி ஒடுங்கும் என்க. ஆதலால், மாயையில் ஒடுங்கித் தோற்றிய பிரபஞ்சம் தனக்கு ஆதார மாய் நின்ற சிவபிரானது சத்தியில் ஒடுங்கித் தோன்றியதேயாம். ஒரு காரியத்தை 'இஃது இவ்வாறாகுக' என்று கருதுதலாகிய சங்கற்ப ஆற்றல்கொண்டு செய்பவர் சிவபெருமான் ஒருவரே யாவர். இது சிவபிரானது ஸ்தூல பஞ்சகிருத்தியம். மாயையானது சத்தியின்கண் உள்ளதாய் நின்று அச்சத்தி சங்கற்பித்த வழி அவரவர் வினைக்கு ஈடாக அவ்வக்காரியங்களை மாறுபடாது தோற்று விக்கும் வன்மையுடையது.

மா என்பது ஒடுங்குதல், யா என்பது வருதல்; ஆகலின், எல்லாக் காரியங்களும் தன்பால்வந்து ஒடுங்குதற்கும். தன்னினின்று தோன்றுதற்கும் காரணமாய் நின்றது மாயை எனப்படும். ஆதலான், ஒன்றற்கொன்று நுண்ணிதிற் செல்லும் சூக்குமங் கட்கு முடிவிடமாய் நின்ற சூக்குமப்பொருள் யாது? அதனை மாயை என்றலே பொருத்தமுடைத்து என்க. (293)

ஆகிய சூக்கத்தை யவ்விந்து நாதமும்
ஆகிய சத்தி சிவபர மேலேந்தால்
ஆகிய சூக்கத்தி லேங்கரு மஞ்செய்வோன்
ஆகிய தூயவீ சானனு மாமே. 2415

இ – ள்: சூக்குமமாகிய ஐந்தொழிலையும் விந்து, நாதம், சத்தி, சிவம், பரமென்னும் மேல்நிலைக் கண்ணே நின்று இயற்றுவர், சூக்குமத்திலே ஐந் தொழிலையும் செய்தருளுபவர் சதாசிவராம். இவர் காரியம்பண்ண உத்தியோகிக்கிற சத்தியை உடை

யவர் ஆகலின் உத்தியுத்தர் ஆவார். காரியம்பண்ண உத்தியோகிக்கின்ற பொழுது ஞானக் கிரியா சத்திகள் ஒப்பில் உண்டானவர். பரை ஆதி இச்சை ஞானக் கிரியை என்னும் பஞ்ச சத்திகள் சுத்தமாயையிலே பதிந்தபொழுது உண்டாகிய ஈசானம் முதலிய பஞ்சப் பிரமங்களையே திருமேனியாக உடையவர், பாசகலை களுடன் கூடியிருத்தலால் சகளமும், சத்திகலை களுடன் கூடி இருத்தலால் நிஷ்களமும் உடைமை யால் சகள நிஷ்களராம் இவருக்குச் சதாசிவர் என்றும் போகர் என்றும் பெயர் என்றவாறு.

மாயை சடமாய் இருத்தலினாலும், ஆன்மாக்கள் தடைப்பட்ட ஞானக்கிரியைகளை உடைமையால் சுதந்திர ஈனமுடையவராய் இருத்தலினாலும், இவ் விரண்டையும் தொழிற்படுத்தும் கர்த்தா தேகாதி சகல உபாதிகளும் அற்றவரேயாவர். தேகாதிகளை யுடைய அனந்தேசுவரர் ( மகேசுவரர் ) முதலான வர்கள் அவாந்தர கர்த்தாக்களாம்.

ஆன்மாக்கள் மலத்தை யுடைமையினாலும் கர்த்தா நிர்மலர் ஆனதாலும், ஆன்மாக்களுக்கு வேறாகியும் எள்ளுக்குள் எண்ணெய் போலப் பிரிவற்று இரண்டற நின்றும் கன்மத்துக்கு ஈடாகத் தனது சமவாய சத்தியினாலே சுத்தாசுத்தமாயைகளைச் சேர்த்துத் தனு கரணாதிகளை உண்டாக்குவர்.

சமவாயம் – விட்டுப்பிரியாமை.

கர்த்தா சுத்தமாயையைத் தனது சத்தியால் கலக்கி, சத்தரூபமாகிய நாதவிந்துக்களையும், அர்த்த ரூபமாகிய நாதம் விந்து என்னும் பெயரையுடைய

சிவதத்துவம் சத்திதத்துவங்களையும், இந்தத் தத்துவங் களிலே புவனங்களையும், இந்தப் புவனங்களிலே இருக்கிறவர்களுக்குத் தனு கரணுதிகளையும், விந்து தத்துவத்திலே நின்றும் சதாசிவ தத்துவத்தையும் உண்டாக்கி, அந்தச் சதாசிவ தத்துவத்துக்குச் சதா சிவரை நாயகராகப் பண்ணி அவரை வேறறக்கூடி நின்று சிருட்டியாதிகளைப் பண்ணுவர் என்க.

உத்யுத்தராகிய சதாசிவர் சாதாக்கிய தத்துவத் தினின்று ஈசுர தத்துவத்தையும் ஈசுர தத்துவத் தினின்று சுத்தவித்தியா தத்துவத்தையும் உண்டாக்கி மகேசுரரை நாயகராகப் பண்ணுவதும், அவ்வத் தத்து வங்களில் உள்ள புவனங்களையும் அங்குள்ளவர் களுக்கு தனு கரணுதியையும் உண்டாக்குவர்.

மேல் ஐந்து என்றது விந்து, நாதம், சத்தி, சிவம், பரம் என்பன. (294)

**மேவும் பரசிவ மேற்சத்தி நாதமு**
**மேவும் பரவிந்து வைம்முகன் வேறீசன்**
**மேவு முருத்திரன் மால்வேதா மேதினி**
**ஆகும் படிபடைப் போனரு ளுமே. 2416**

இ – ள் : அரன் என்னும் திருநாமத்தையுடைய சிவபெருமான் படைத்தல் முதலிய ஐந்தொழில் களையும் உன்முகமாகச் சத்தி சங்கற்பத்தால் இயற்றி யருளுகின்றுர். சிவம் சத்தி நாதம் விந்து என்பன அருவநிலை; சதாசிவம் அருவுருநிலை; மகேசுரன் உருத்திரன் மால் வேதா என்பவர் உருவ நிலையில் உள்ளார். சுத்தமாயை அசுத்த மாயைகளின் காரிய

மாக உள்ளன காரியப் பிரபஞ்சம். பரநாதம் அபர நாதம், பரவிந்து அபரவிந்து முதலியவைகளை விரிந்த நூல்களால் அறிக.

ஐம்முகன் என்றது சதாசிவமூர்த்தியை. இங்கே மால் வேதா என்பவர் சம்பு பக்கத்தவர். அணுபக்கத்தவரல்லர். கர்த்தாவானவர். சுத்தாத்துவாவுக்குச் சத்தரும் உத்யுத்தரும், அசுத்தாத்துவாவுக்கு அனந்தேசுரர் ஆகிய பிரவிருத்தருமாக வருவார். (295)

படைப்பு மளிப்பும் பயிலிளைப் பாற்றுந்
துடைப்பு மறைப்புமுன் ரேன்ற வருளுஞ்
சடத்தை விடுத்த வருளுஞ் சகலத்
தடைத்த வனுதியை யைந்தென லாமே. 2417

இ - ள் : படைத்தல் காத்தல் என்னும் தொழில்களும், இடைவிடாமல் இளைப்பாற்றுதல் என்னும் துடைத்தலும், வினைப் பயன்களை நுகருமிடத்து அதனை நுகர்கின்றோம் என்னும் எண்ணமின்றி அழுந்திநுகரச் செய்வது ஆகிய மறைப்புத்தொழிலும் ஆகிய இந்நான்கும் முற்படும்படித் தோன்றுவன. திருவருட்சத்தி முற்பட்டு இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதங்களை நோக்கிநின்று ஆன்மாக்களை மலப் பிணிப்பினின்றும் விடுவித்துச் சிவமாந்தன்மைப் பெருவாழ்வடையச் செய்யும்; இதுவே அநுக்கிரகம் என்பது. முற்கூறிய படைத்தல் முதலிய நான்கினையும் சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம் எனக் கூறுவர். இந்த ஐந்து தொழில்களும் ஆன்மாக்களினிடத்துள்ள இரக்கம் காரணமாகச் சூக்குமத்திலிருந்து தூலமாகச் சகல நிலையிற் கூட்டிப் புசிப்

பித்துச் சகலம் நீங்கியவாறே சுத்தாவத்தையிலே நின்மல துரியாதீதத்தைப் பெற்றிருக்கச் செய்தல் சிவபோகமாம் என்றவாறு.

சடத்தை விடுத்த – சகலநிலையை நீங்கின; விடுத்த – விடுவித்த: விவ்விகுதிதொக்கது. முன் தோன்ற அருளும் அருள் – திரோதசத்தி: அதுவே பின்பு அருட்சத்தியாய் நின்று சிவபோகத்தை நுகர் விக்கும். (296)

ஆருறு குண்டலி தன்னி னகத்திட்டு
வேருகு மாயையின் முப்பான் மிகுத்திட்டங்
கீருங் கருவி யிவற்றால் வகுத்திட்டு
வேரும் பதிபசு பாசம்வீ டாகுமே. 2418

இ – ள்: குண்டலியாகிய சுத்தமாயையிலிருந்து முப்பத்தாறு தத்துவங்கள் தோன்றுவன. முப்பத்தாறு தத்துவங்களையும் வேறுபட்ட மாயைகளால் மூன்று வகையாகப் பகுக்கலாம். அவை:– சிவ தத்துவம் – 5, வித்தியாதத்துவம் – 7, ஆன்ம தத்துவம் – 24 என்பன. மற்றும் சுத்தமாயை, அசுத்த மாயை, பிருகிருதிமாயை என மாயையை மூன்று வகைப்படுத்துவர். சிவதத்துவம் ஐந்தும் சுத்த மாயை. சுத்தமாயை சிவனுக்கு வைப்புச்சத்தி. இது குண்டலி, குடிலை, மகாமாயை, ஊர்த்துவமாயை, விந்து எனப் பரியாயப் பெயர்களைப் பெறும். சுத்த மாயையின் அதோபாகம் . அசுத்தமாயை. இது சிவனுக்குப் போகசத்தியாகிய பரிக்கிரக சத்தியாய் இருப்பது. இதற்கு அதோமாயை, மோகினி முதலான பரியாயப் பெயர்கள் உண்டு.

சுத்த மாயையிலே சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி என நான்கு வாக்குகளும் சிவசத்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை என்னும் சுத்த தத்துவங்கள் ஐந்தும் உண்டாம்.

அசுத்தமாயையிலே மாயை, காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன் என ஏழு தத்துவங்கள் உண்டாம்.

பிரகிருதிமாயையிலே சித்தம், புத்தி, அகங்காரம், மனம்; சோத்திரம், தொக்கு, சட்சு, சிங்நுவை, ஆக்கிராணம்; வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம்; சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம்; ஆகாயம், வாயு, தேயு, அப்பு, பிருதிவி என்னும் இருபத்து நான்கு உண்டாம். ஆன்மாக்களுக்கு முடிந்த முடிபாகவுள்ள கருவிகளையும் இவற்றைக்கொண்டே வகுத்தருளினன். ஆகலின் பதி பசு பாச உண்மைகளையும், பசு பாசத்தினின்று விடுதற்குரிய நெறிகளையும், திருவருட்டுணைகொண்டு அறிவினுல் ஆராய்ந்தால் பாசத்தினின்றும் பசுவானது வேருகும். வேருகவே பசு பதிப்பொருளைச் சென்று அடையும். பாசநீக்கமும் சிவப்பேறும் உண்டாம் என்றவாறு.

மாயையின் முப்பால் : முப்பால் – மூன்று பகுதி. குண்டலி – சுத்தமாயை. ஈருங்கருவி – சுத்த தத்துவங்கள்.

சுத்த தத்துவத்துக்குள்ளே சுத்தாவத்தையைக் கொண்டோர் எண்மர். சுத்த தத்துவங்களுக்குள்ளேயும் சிறிது சிவதத்துவ அதீதத்துவம் பேசிக்கொண்

டவர் சுத்தசைவர், சித்தாந்த சைவர் முப்பத்தாறும் விட்டு அப்பால் ஆன்ம வியாபக தரிசனமாதி முதல் சாக்கிராதி கொண்டவர்கள், ஆகையால், சித்தாந்த சைவத்துக்குச் சுத்தசைவர் ஈறனவர்கள் எல்லாம் அங்க உபாங்கப் பிரத்தியாங்கங்களாதியாய்ப் புறம் புறப்புறம் ஆதிய நாத்திகப் பொய்தரு சமயிகள் ஆவார், (297)

வீட்கும் பதிபசு பாசமு மீதுற
வாட்கு மிருவினை யாங்கவற் றலுணர்ந்
தாட்கு நரக சுவர்க்கத்திற் றனிட்டு
நாட்குற நான்றங்கு நற்பாச நண்ணுமே. 2419

இ – ள் : பதிப்பொருள் ஆணவமல நீக்கத்தின் பொருட்டு ஆன்மாக்களை மாயாகாரியமாகிய பாசபந்தங்களில் மிகுதியாக விருப்பமுண்டாகச் செய்து இருவினைகளைச் செய்யும்படி விழுத்தும் (ஆழச்செய்யும்). இருவினைப்பயனாகிய இன்பத்துன்பங்களை அநுபவித்துத்தொலைக்கும்படி அவ்வான்மாக்களைச் சுவர்க்க நரகங்களிலே இட்டு ஆழ்த்தும். இவ்வாறு அநுபவித்து இருவினைப்பயனையும் போக்கிய பின்பு நான் என்னும் செருக்குவந்து பொருந்த நல்ல திரோபவம் வந்து கூடும் என்றவாறு.

வீட்கும் - வீழ்த்தும்; வீழ்தல் - விரும்புதல். ஆட்கும் – அழுத்தும், ஆழச்செய்யும், அவற்றால் – இருவினைகளால், நாட்குற – நாளாக. எனவே, இன்பத்துன்பங்களை நுகரும் காலம் முற்றுற. நான் – அகந்தை.

நண்ணிய பாசத்தி னுனென லாணவம்
பண்ணிய மாயையி லூட்டற் பரிந்தனன்
கண்ணிய சேதனன் கண்வந்த பேரருள்
அண்ண லடிசே ருபாயம தாகுமே 2420

இ – ள் : பொருந்திய பாசமென்னும் மாயாகாரிய மாகிய தனுகரணங்களிலே கூடிநின்று நான் என்னும் முனைப்பு உண்டாதல் ஆணவ மலத்தின் தன்மையே யாம். அவ்வாணவமல வலிதொலையும் பொருட்டே மாயாகாரியங்களாகிய தனு கரண புவன போகங்களை ஆன்மாக்களுக்கு இறைவன் அருளாற் கொடுத்து நுகரச்செய்தனன். அந்நுகர்ச்சியால் ஆணவ மலவலி குன்றும், குன்றவே அறிவிக்க அறியும் தன்மையை யுடைய ஆன்மாவினிடத்து வைத்த பேரருளினுல் சிவ பெருமான் திருவடியைப் பொருந்தும் உபாயத்தை அருட்சத்தி தோற்றுவிக்கும். இதுவே திருவடி சேர் தற்குரிய உபாயமாம் என்றவாறு.

ஆணவ வலிகுன்றச் செய்யவே மாயையைக் கொண்டு ஊட்டுவித்தான். கண்ணிய – கருதிய. பாச வலிகெடப்பதிப்பொருளை அடையக்கருதிய சேதனன் – அறிவிக்க அறியும் ஆன்மா. முன்னர் திரோதசத்தியாய் நின்று ஊட்டுவித்த சத்தியே பின்பு திருவருட் சத்தியாய்த் திருவடி கூட்டுவிக்கும் என்க. பரிந்தனன் – இரக்கங்கொண்டான், பேரருளாளன் ஆகலின். (299)

ஆகு முபாயமே யன்றி யழுக்கற்று
மோக மறச்சுத்த னுதற்கு மூலமே
ஆகு மறுவை யழுக்கேற்றி யேற்றல்போல்
ஆகுவ தெல்லா மருட்பாச மாகுமே. 2421

இ - ள் : ஆன்மாவுக்கு வினைகளை ஊட்டிக் கழித்துச் சிவபோகத்தை நுகர்விக்கும் உபாயமு மல்லாமல் ஆணவமலமாகிய உயிர்க்குற்றம் நீங்கி. அவாவற்றுச் சுத்தன் ஆவதற்கும் இதுவே மூலமாம். அழுக்குத் துணியை வண்ணான் அழுக்கைப் போக்கு தற்காக மேலும் அழுக்காகவுள்ள சாணகம், உவர்மண், சவர்க்காரம் இவைகளைக் கூட்டிப் பல படியாகக் கல்லில் அறைந்து தோய்த்துத் தூய்மைப் படுத்துவதுபோல, இறைவன் ஆன்மாக்களுக்குச் செய்வ தெல்லாம் அருளே ஆகும்.

அருட்பாசம்-அருளினால் வைத்தருளிய இரக்கம். அறுவை - துணி. ஏற்றல் - மேலும் மேலும் புரட்டுதல்; எற்றுதல் என்பது ஏற்றல் எனவந்தது எனினுமாம்.

பாசம் பயிலுயிர் தானே பரமுதல்
பாசம் பயிலுயிர் தானே பசுவென்ப
பாசம் பயிலப் பதிபர மாதலாற்
பாசம் பயிலப் பதிபதி யாகுமே. 2422

இ - ள் : பாசத்துடனே இடை விடாமல் பொருந்தும் ஆன்மா முதற்சுமையுடையதாம். பரம் - பாரம், சுமை. இயல்பாகவே ஆணவமலத்துடன் கூடியிருத்தலால் அது அதற்குச் சுமையாயிற்று. பாசத்தால் கட்டுண்ட உயிர்தான் பசு எனப்படும். (ஆணவம் ஆன்மாவை அணுத்தன்மைப்படுத்தித் தான் நிறையும்) ஆன்மா பாசத்தினின்று விடுபடுதற் பொருட்டு மாயாகாரியங்களைக் கூட்டியமைத்தல் பதியின் கடமையாயிற்று; அது அப்பதிக்கு இரக்கத்

தால் வந்த சுமை. இறைவன் ஆன்மாக்களைச் சுமந்து திரிகின்றான் ஒன்றாயும் வேறாயும் உடனாயுமிருந்து உபகரிக்கிறான். ஆன்மாக்களுக்குப் பாசத்தைக் கூட்டி மலவலி தொலைக்கத் திருவுளங் கொண்டு அருளிலே முதன்மை பெற்று விளங்குகின்றான் என்றவாறு. (301)

அத்தத்தி லுத்தரங் கேட்ட அருந்தவர்
அத்தத்தி லுத்தர மாகு மருண்மேனி
அத்தத்தி னாலே யணையப் பிடித்தலும்
அத்தத்திற் றம்மை யடைந்துநின் றாரே. 2423

இ – ள் : கல்லாலின் புடையமர்ந்த கடவுள்பால் நான்மறை ஆறங்கமுதல் கற்ற கேள்வி வல்லார்கள் நால்வரும் வந்து ஞானத்தை உபதேசிக்க வேண்டும் என்று விண்ணப்பிக்க, இறைவர் புன்னகை கொண்டு அது கூறுந்தரத்ததன்று, அநுபவத்திலே உணரற்பாற்று என்று தமது திருக்கரத்திலே அமைத்த ஞானமுத்திரையினால் மோன நிலையில் அறிவித்தருளினார். அன்றியும், அவ்வருட்டிரு மேனியுடன் தமது திருக்கரத்தினாலே சிரத்தில் வைத்து அணைத்துப் பிடித்த அளவிலே ஊமைத் தசும்புள் நீர் நிறைந்தாற்போலச் சிவஞானம் நிறைவுற்று அதன்பொருளாகவுள்ள தம்மையடைந்து சிவபோகத்தை நுகர்ந்திருந்தனர் என்றவாறு.

சின்முத்திரையாகிய மோனமுத்திரை; "மும்மலம் வேறுபட்டாலொழிய" என்னும் ஸ்ரீ கச்சியப்ப முனிவர் வாக்கு இங்கே கருதத்தக்கது. (302)

## 17. அடிதலை அறியும் திறங்கூறல்

காலுந் தலையும் அறியார் கலதிகள்
காலந்தச் சத்தி யருளென்பர் காரணம்
பாலொன்று ஞானமே பண்பார் தலையுயிர்
காலந்த ஞானத்தைக் காட்டவீ டாகுமே 2424

இதன்பொருள்: கலதிகள் காலும் தலையும் அறியார். கலதி – வீணர். வீணர்கள் கால் என்பதும் தலை என்பதும் அறியமாட்டார். கால் என்பது அந்தச் சத்தியேயாம்; சத்தியாவது அருள் என்று பெரியோர் சொல்லுவர்: "அருளது சத்தியாகும் அரன்றனக்கு அருளையின்றித், தெருள்சிவமில்லை அந்தச் சிவமின்றிச் சத்தியில்லை" (சித்தி – 239): கால் என்பது 'வ' என்னும் குறியீடு. வ – சிவசத்தி; ஆகலின் அந்தச் சத்தி என்றார். சிவசத்திகள் உண்மையும், சிவசத்திகள் இலக்கணமும் கலதிகள் அறியார்; எனவே, சிவஞானிகள் அவற்றை அறிவர் என்றபடியாம். தலை என்றது முடி; முடிவாம். முடிவாவது ஞானமே. அது சிவஞானம். கால் இன்றித் தலை இல்லை. அருளின்றி ஞானம் கிடைக்குமாறில்லை. அருள்ஞானம் – அடிசேர் ஞானம். அது திருவடி ஞானம். "யான் எனது என்று அற்ற இடமே திருவடியா, மோன பரானந்தம் முடியாக" என்றார் குமரகுருபர சுவாமிகள். அந்தச் சத்தி – சிவசத்தி, பராசத்தி. அது முன்னே உயிர்க்குயிராய் நின்று அறிவித்தது; அதுவே உயிரிலே யான் எனது என்பது அற நின்றது. காரணம் என்றது நிமித்த காரணம் துணைக் காரணம், முதற் காரணம் என்பவைகளை. முதற்காரணம் மாயை;

துணைக்காரணம் சத்தி, நிமித்தகாரணம் சிவன். இங்கே துணைக்காரணமாயுள்ளது பால் ஒன்று ஞான மேயாம். பால் – பகுதி. அது சிவசத்தியே, பரையே. இதனை, "பரை உயிரில் யானெனதொன் றறநின்ற தடியாம்–பார்ப்பிடமெங் குஞ் சிவமாய்த் தோன்றலது முகமாம் உரையிறந்த சுகமதுவே முடியாகும் என்றங் – குண்மையினை மிகத்தெளிந் " திருத்தல் என்பர் உண்மைநெறி விளக்க நூலார்.

இறைவன் உயிர்களுக்கு ஏகதேச அறிவை நிகழ்வித்துச் சிறுபோகங் கொடுத்துப் பிறவியுட் செலுத்துகின்ருன். அதனுற்பயன் பருவம் முதிர் வித்து வியாபக அறிவை நிகழ்வித்துப் பரபோகங் கொடுத்தற்பொருட்டேயாம். ஏகதேச அறிவு நிகழ்ந் தன்றிச் சிறுபோக நுகர்ச்சி செல்லாது, வியாபக அறிவு நிகழ்ந்தன்றிப் பரபோக நுகர்ச்சி செல்லா தென்க. இறைவன் இவ்வாறு போகங்கொடுத்து, அறிவுகாட்டி, வீட்டை அளிப்பன். அது கருணையே யாம். அக்கருணை இறைவனுக்கு இயற்கைக்குணம் எனப்படும் சத்தியாம். சத்தி குணம், இறைவன் குணி, குணம் குணியைவிட்டு நீங்காது. சூரியன், கிரணத்தால் உலகத்துப் புற இருளை ஓட்டிக் கண் களுக்குப் பிரகாசத்தைச் செய்கின்ருன். அதுபோல, இறைவன் அவ்வருளால் உயிர்க்கு அறியாமையாகிய மயக்கத்தை நீக்கி அநுக்கிரகம் செய்வான் என்க.

இனி, 'பண்பார் தலையான உயிர்' என்றது தீவிர மலபாகமுடையாரை. தலையுயிர் – தலையான உயிர் என்க. 'கால் அந்த ஞானத்தைக் காட்ட' என்றது திருவருளானது சிவஞானம் வாயிலாக ஞானமே

சொரூபமாக உள்ள சிவத்தைக்காட்ட என்றவாறு. 'வீடு ஆகும்' வீடு எளிதாகக் கிட்டும் என்க. 'காலும் தலையும் அறியார்' என்றது கால் தலை என்னும் இரண்டு சொற்களும் புணருமிடத்துக் காறலை என்று ஆதல்போல, வீடு பேறுற்ற ஆன்மா இறைவன் வேறு தான்வேறு என்பதின்றி அத்துவிதக் கலப்புடையதாய் நிற்றலேயன்றி ஒன்றுய்ப் போமாறில்லை என்பது அறிவித்தற் பொருட்டே; தாடலை என்பதும் அது. இதுபற்றியே "கருப்பைத் தேனைப் பாலைக் கனிய முதைக் கண்டைக் கட்டியை யொத்திருப்பன் அந்த முத்தியினிற் கலந்தே" என்றமையும் காண்க. 'கருப் பஞ்சாறு தேன் பால் கனியிரதம் கற்கண்டு சருக்கரை முதலிய சுவைப்பொருளெல்லாம் ஒன்றுகக் கலந்தவழி உளதாகிய சுவை இவ்வியல்பிற்று எனப் பிரித்தறிய வாராமைபோல இறைவனும் பரமுத்தியில் உயிரின் கண் அங்ஙனம் கலந்தவழி இவ்வியல்பிற்று எனப் பிரித்தறிய வாராத ஆனந்த சொரூபமாய் நிற்பன். அறிவிறந்து நிற்றலான் உயிர் சிவானுபவம் ஒன்றி னுக்கே உரித்தாதல் காண்க. (303)

தலையடி யாவ தறியார்கா யத்தில்
தலையடி யுச்சியி லுள்ளது மூலம்
தலையடி யான வறிவை அறிந்தோர்
தலையடி யாகவே தானிருந் தாரே. 2425.

இ – ள்: காயத்தில் தலை ஆவதும் அடி ஆவதும் அறியார். தலை உச்சியில் உள்ளது. அடி மூலத்தில் உள்ளது. தலை அடி ஆன அறிவை அறிந்தோர் தலை அடியாகவே தான் இருந்தார்.

காயம் – மனித உடம்பு. தலை – உச்சி. அடி – மூலம். மனித உடம்பினுள்ளே உச்சியையும் மூலத்தையும் ஆராய்ந்தறியார் பலர். உச்சி என்றது பிரமரந்திரத்தை. மூலம் – மூலாதாரமாம். சுழுமுனை நாடி மூலாதாரத்திலிருந்து புருவநடுவரையில் ஒன்றாக உள்ளது. சுழுமுனை நாடியை மூலநாடி என்றும் கூறுவர். அந்த மூலநாடி இரண்டு பாதங்களின் பெருவிரல் தொடங்கி மூலாதாரம் வரையில் இரண்டு பகுதிகளாக உள்ளது. மேலே புருவ நடுவரையில் அது ஒன்றாகும் என ஆராய்ச்சியுடையோரறிவர். சத்தியாதி சத்திபரியந்த முள்ள தொடர்பே மூலாதார முதல் பிரமரந்திரம் வரையில் உள்ளது: அது குண்டலி சத்தி முதல் பராசத்திவரை என்க. குண்டலி சத்தியை அடையின் அச்சத்தியின் உபகாரத்தால் மூலாதாரத்தினின்றும் ஆறு ஆதாரங்களும் கடந்து, மதியமுதமுண்டு ஆன்புறலாம். இதனைச் சிவராசயோகப் பகுதியாலறிக. தலை அடியான அறிவை அறிந்தோர் என்றது அனுபவத்தால் குருமுகமாக உணர்ந்தோரை. தலை அடியாக – அடி தலையாக எனமாறுக. அடி - கால். கால் தலை என்னும் இருசொற்கள் புணருங்காலத்துக் 'காறலை' என்று ஆகும். அதுபோல, ஆன்மாவும் பரமான்மாவும் இரண்டறக் கலப்புற்றுப் பேரின்பம் துய்த்திருந்தது என்றவாறு.

**நின்றான் நிலமுழு தண்டமும் மேலுற**
**வன்றா ளசுரர் அமரரு முய்ந்திடப்**
**பின்றா னுலகம் படைத்தவன் பேர்நந்தி**
**தன்றா ளிணையென் தலைமிசை யானதே.** 2426

இ – ள் : நிலம் முதலிய அண்டங்களிலெல்லாம் உள்ளும் புறம்புமாக நின்றவனுகிய சிவபெருமானே வலியதாள்களையுடைய அசுரரும் தேவரும் உய்யும் படி தானே பின்னும் உலகங்களையெல்லாம் படைத் தவன் ஆயினான். அவன் திருப்பேர் நந்தி என்பதாம். அப்பெருமான் தன் இரண்டு திருவடிகளையும் என் சிரத்திலே சூட்டி ஆட்கொண்டருளினுன் என்ற வாறு.

நிலம் என்றது பிருதிவி அண்டத்தை. முழு தண்டம் – ஏனை அப்பு அண்டம், தேயு அண்டம், வாயு அண்டம், ஆகாச அண்டம் என்பன. சுத்தம் அசுத்தம் மிசிரமாகிய மாயா காரியமாயுள்ள அண்டத் தொகுதிகளை எல்லாம் என்றபடி. அசுரரும் சுரரும் உய்ய எனக் கூறவே எல்லா உயிர்களும் உய்யும்படிக் காம். " புல்லாகிப் பூடாய் ... வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய் ... ... எல்லாப் பிறப்பும் பிறந்து " என்றமை காண்க. பின் தான் உலகம் படைத்தவன் – அப் மாயா காரியமாயுள்ள அண்டத் தொகுதிகளெல்லாம் மகா சங்கார காலத்தில் முறையே காரணமாயையில் ஒடுங்க அம்மாயை சிற்சத்தியில் ஒடுங்க. சிற்சத்தி தனக்கு ஆதாரமாகிய சிவத்தில் ஒடுங்கும். சிவம் சின்மாத்திரமாய்ச் சேடித்துத் தானே தானுய் நிற்தும். யாது யாண்டு ஒடுங்கும் அஃது அதனில் உற்பத்தியாம். மண்ணிற் குடம் போலும் என்னும் அவினுபாவத்தால் மீளத் தோன்றுமிடத்து சத்தி சங்கற்பித்த வழிக் காரணமாயையின் காரியப் பாட்டால் அண்ட நிரைகளெல்லாம் முன்புபோல விரிந்து தோன்றும்.

பின்னும் தான் உலகத்தைப் படைப்பானேன் என்னில், உயிர்களால் அநாதிமுதல் ஈட்டப்பட்டுப் பல்வேறு வகைப்பட்ட இன்பதுன்பங்களை யெல்லாம் விளைவிக்கும் வினைவலியினையும், எல்லாப் பெருங் கொடுமைக்கும் மூலமாகிய சகல மல சத்திகளையும், அதற்றன் வரும் துன்பங்களையும் கெடுத்து, எல்லா உயிர்களையும் ஒருங்கே வீடுபேறு அடைவியா மைக்குக் காரணம் குடங்கையின் ஏந்திய தீயின் சூட்டினை நிகழவொட்டாது தனக்கு மாறாகிய மந்திரம் உச்சரிக்குங் காறும் தடுத்து நிற்கும் குளிகை போல, அம்முதல்வனைச் சிறப்பியல்பால் உணரும் மெய்யுணர்வு தோன்றுங்காறும் அவனது பெருங் கருணை உயிர்கள் மாட்டு ஒருங்கே நிகழாதவண்ணம் தடுத்து நிற்கும் உயிர்க் குற்றமாகிய அம்மல சத்திகள் பக்குவப்பட்டு வருதற் பொருட்டேயாம் என்க.

பிரபஞ்சம் அநாதியாகலின், அம்முதற்கோடி நம் மனோரால் அறிய வாராமையானும், ஒடுங்கியினின்றும் மீள உளதாமாறு ஆயிற்று. "விச்ச தின்றியே விளைவு செய்குவாய்" எனவும், "விண்ணும் மண்ணக முழுதும் யாவையும், வைச்சு வாங்குவாய்" எனவும் ஓதிய திருவாக்கானும் உணர்க.

'தன் தாளிணை என் தலை மிசையானதே' என்றது, ஆணவமலம் பக்குவப்பட்டு வரவர இருவினையொப்பும் சத்திநிபாதமும் தோன்ற இறைவன் குருமூர்த்தியை அதிட்டித்து நின்று திருவடிசூட்டித் தீக்கை செய்து ஆட்கொண்டருளுவன் என்றபடியாம் "இணையார் திருவடி என் தலைமேல் வைத்தலுமே, துணையான சுற்றங்கள் அத்தனையும் துறந்

தொழிந்தேன் " என்னும் திருவாசகப் பகுதியும், 'மாயாவிடயம் நீக்குதல்' என்னும் கருத்தமைதியும் நோக்கி யறிக. (305)

சிந்தையி னுள்ளே எந்தை திருவடி
சிந்தையு மெந்தை திருவடிக் கீழது
எந்தையு மென்னை யறிய கிலானாகில்
எந்தையை யானும் அறியகி லேனே. 2427

இ - ள்: எந்தை திருவடி சிந்தையினுள்ளே (உள்ளது). (என்) சிந்தையும் எந்தை திருவடிக் கீழது. எந்தையும் என்னை அறியகிலானாகில், யானும் எந்தையை அறியகிலேன் என்க.

எந்தை – எமது பரமபிதாவாகிய சிவபெருமான். அப்பெருமானது திருவடிகள் என் சிந்தையினுள்ளே இயல்பாகவே பொருந்தியுள்ளன. சிந்தை–உள்ளம்: உள்ளக்கமலத்தில் பொருந்தியது. என் சிந்தையும் எந்தை திருவடியின்கீழ் பொருந்தியுள்ளது; திருவடி வியாபகத்தில் அடங்கியது. இஃது இயல்பாக உள்ள தாயினும் அதனை யான் ஆன்ம அறிவினால் அறிதற் கில்லை: அஃது அவன் அருளினால் அன்றி ஆகாது. எனவே, எந்தை என்னை அறியாதபொழுது நான் அவனை அறிந்திலன். எந்தை என்னைத் தன்னடியான் என்று அறிந்தான். அஃது அவனுக்குள்ள இயல் பாகிய கருணை. அந்தக் கருணையால் யானும் எந்தையை உயிர்த்தலைவன், என்னை ஆளுடையான், அவனுக்கு நான் மீளா அடிமை என்றெல்லாம் அறிந்தேன். அவன் அறிவியாதபோது நான் ஒன்றனை யும் அறியும் தன்மை உடையேனல்லேன். அவன்

என்னை அறிதான், நானும் அவனை அறிந்தேன். அவன் அறிவித்தான் நான் அறிந்தேன். பந்தகாலத்தினும், முத்திக்காலத்தினும் உயிர்களுக்கு முதல்வனது உதவி இன்றியமையாத தொன்றும், முதல்வன் காட்டிக் காணும் உபகாரத்தைச் செய்கின்றான் என்க. "காணும் கண்ணுக்குக் காட்டு முளம்போற், காணவுள்ளத்தைக் கண்டு காட்டலின், அயரா அன்பின் அரன்கழல் செலுமே" (சிவஞானபோதம்– சூத் – 11).

"காட்டக் காணும் தன்மை யுடைய கண் உருவத்தைக் காணும்படி அதனோடு ஒருங்கு இயைந்து நின்று காட்டி அவ்வுருவத்தைக் காண் கின்ற. ஆன்மாப்போல, அறிவிக்க அறியும் இயல்பை யுடைய அவ்வான்மா விடயத்தை அறியும்படி முதல்வன் அதனோடு ஒருங்கு இயைந்து நின்று அறிந்து வரு" வான் என்க.

ஆன்மா, சுத்தனைவிடத்துச் சிவன் ஆன்மாவைத் தானுங்கண்டு தன்னையும் காணக்காட்டுவன் என்பது: எவ்விடத்தும் திருவருளே தாரகமாம் என்பதறிக. திருவடி – திருவருள். இதனை,

*"என்னை யேது மறிந்தில னெம்பிரான்*
*தன்னை நானுமுன் ஏது மறிந்திலேன்*
*என்னைத் தன்னடி யானென் றறிதலும்*
*தன்னை நானும் பிரானென் றறிந்தேனே".*

(திருநாவுக். தேவா.) (306)

பன்றாத பாரொளிக் கப்புறத் தப்பால்
என்றா யகனுர் இசைந்தங் கிருந்திடம்
உன்றா ஒளியு முரைசெய்யா மந்திரம்
சொன்றான் கழலிணை சூடிநின் றேனே. 2428

இ – ள் : பன்றாத பார் ஒளிக்கு அப்புறத்து அப்பால் – சொல்ல வொண்ணாத பிருதிவி ஈறாக அடைவே தரப்பட்ட ஆகாச வெளிக்கும் வெளியாகிய பிரகிருதி வெளி, அதற்குக் காரணமாகிய கலையான வெளி, அந்தக் கலைக்கு மேலாகிய ஒளியான அசுத்த மாயை ஒளி, அதற்கு மேலாகிய சுத்தவித்தை ஒளி, அந்தச் சுத்தவித்தை ஒளிக்கு மேலாகிய விந்து ஒளி, அந்த விந்துவுக்கு மேலாய் உள்ள நாத ஒளி, நாதத்திற்கு மேலான பராசத்தி ஒளி, அப்பராசத்திக்குக் காரணமாயுள்ள பரமசிவம், அதனையே என் நாயகனுர் இசைந்து அங்கு இருந்த இடம் என்றது.

பாரொளிக்கு அப்புறம் என்றமையால் பரமாகாயத்தினும், இதயாகாயத்தினும், ஞானாகாயத்தினும் கலந்திருப்பவர் என்பதும் குறித்தபடியாம்.

ஆகாயபூத வியாபக அந்தமான சாந்தியாதீத கலைக்குக் காரணராகிச் சுத்த மாயையின் அதோமுகமான விந்துவான பராசத்தியையும், அந்தச் சுத்த மாயையில் ஊர்த்துவ முகமாய் ஓசைவடிவாகிய அபர நாதத்தையும் புறகிட்டு மேற்சென்று சுத்த மாயா காரணங்கடந்து நின்மலமாகி, நிராமயமான பரவிந்து என்னும் பராசத்தியினது முடிவில்லாத வியாத்தியாகிச் சித்தம் செல்லாத சூனியம் எங்கும் குறைவற நிரம்பி, அவ்வளவிலும் நில்லாது பரந்து, ஞானபாதங்களில்

முதற் பேசப்பட்ட பராசத்தி ஞானத்து மேலாகி, பூரணமான பரநாதத்தையும் தனக்குள்ளேயாக மேல் தனது எல்லை அளவு செறிந்து ஓடும் நீர்மையாய்ச் சுத்தப் பேரறிவே ஆகிய நாயகன் என்க.

'உன்னுஒளி, உரை செய்யா மந்திரம்' என்றது ஆன்ம போதத்தால் நினைத்தற்கும் அரிய ஒளியாம். வாக்கால் மனத்தால் உரைசெய்தற்கும் உன்னுதற்கும் அரிதாகிய மந்திரமாம். அம்மந்திரம் அறிவாற் கணித்தற்குரியதாம் என்பர்.

அப்பெருமான் உண்மையைச் சொல்லுமிடத்துச் சுத்தம் என்ற அபரவிந்துவையும், வெளியாய அபர நாதத்தையும், பாழாய பரவிந்துவையும், வெறும் பாழாய பரநாதத்தையும் கடந்து இவைகளில் தோய்ந்தகுணம் இல்லையாய்த் துகள்தீர்ந்த ஆன்மாக்கள் பெறும் பேருய்ச் சலனம் அற்ற தனிமுதல்வன் என்க,

'அப்புறத்து அப்பால் நின்ற நாயகன்' என்றது உயிர் என்பது ஒருமுதலும் அற்று ஞேயம் தானேயாய் நிற்கும் இடத்துள்ள நாயகனையாம்; நினைக்கவும் ஒண்ணாது உரைக்கவும் 'ஒண்ணாது: அப்படிப்பட்ட நிலையை அநுபவமுகமாய் உணர்த்திய அம்முதல்வன் திருவடிகளைச் சூடி நிலைபெற்றேன் என்றவாறு. (307)

பதியது தோற்றும் பதமது வைம்மின்
மதியது செய்து மலர்ப்பத மோதும்
நதிபொதி யுஞ்சடை நாரியோர் பாகன்
கதிசெயுங் காலங்கள் கண்டுகொ ளீரே. 2429

இ – ள் : பதம் அது வைம்மின் பதி அது தோற்றும், மதி அது செய்து மலர்ப்பதம் ஓதும், காலங்கள் கண்டு கொளீர், நதி பொதியும் சடை நாரி ஓர் பாகன் கதிசெயும்.

திருவடிகளை உம்முடைய இருதய கமலத்தின் மேல் வைத்துப் பூசித்துத் தியானம் செய்யுங்கள். தியானிக்கத்தியானிக்க, பதிப்பொருள் விளங்கித் தோன்றும், மேலும் மலர்போன்ற திருவடிகளை அறிவோடுகூடி ஓதுவீர்களாக. பூசிக்கும் காலமும் தியானிக்குங் காலமும் துதிக்குங் காலமும் ஆராய்ந்து கொள்வீர்களாக, அவற்றைக்கண்டு ஞானகங்கையை அடக்கிய சடையினையுடைய உமாதேவியை ஓர் பாகத்திலுடைய சிவபெருமான் முத்தியின்பத்தைக் கொடுத்தருளுவர்.

பதி அது, பதமது, மதியது; அது பகுதிப்பொருள் விகுதிகள்,

பதி – பதிப்பொருள். பதம் – திருவடி, வைத்தல்– தியானித்தல் : இதயகமலத்தில் வைத்துப் பூசித்தலும் புருவமத்தியில் வைத்துத் தியானித்தலும் செய்க என் பார் வைம்மின் என்றார். அறிவு புறம் போகாமல் தோத்திரம் செய்க என்பார் மதியதுசெய்து ஓதும் என்றார். நாரி ஓர்பாகன் என்றது அருளோடு கூடிய இறைவன் என்றபடி. கதி – முத்தியின்பம். நாரி – உமாதேவியார். அடிதலை அறியும் திறம் ஆதலின் வைம்மின் என்றது தலையில் வைம்மின் என்க. மதி அது செய்தல் – அறிவாற் கணித்தல். " சிந்தனை நின் தனக்காக்கி நாயினேன்தன் கண்ணிணை நின் திருப்

பாதப் போதுக் காக்கி, வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி, வாக்குஉன் மணிவார்த்தைக் காக்கி .... .... " என்பது திருவாசகம்.

'நாரியோர்பாகன் கதிசெயும் காலங்கள்' என்றது பூசைக்குரிய திருப்பள்ளியெழுச்சி முதல் அத்தயாமம் வரையுள்ள காலங்கள். காலங்களில் சென்று கும்பிடு தல் சிறப்பு என்பது ஆகமங்களில் விதிக்கப்படும். 'காலமெல்லாம் துதித்திறைஞ்சி' ( திருஞான - புரா - 164 ). என்று ஆளுடையபிள்ளையார் திருத்தில்லையில் அவ்வக் காலங்களில் கும்பிட்டமையும், நம்பியாரூரர் " திருமூலட் டானத்து ளிடைதெரிந்து மாறில்திரு வத்தயா மத்திறைஞ்ச வந்தணைந்தார் " (ஏயர்கோன் - புரா - 304 ) என்பதும் பிறவும் எனினுமாம். " கால முண்டாகவே காதல்செய் துய்ம்மின் "; " கரப்பார் கால மடைந்தவர் தம்வினை, சுருக்கு மாறுவல்லார் " ( திருப்பராய்த்துறை - திருக்குறுந்தொகை ). (308)

தரித்துநின் றானடி தன்னிட நெஞ்சில்
தரித்துநின் றானம ராபதி நாதன்
கரித்துநின் றான்கரு தாதவர் சிந்தை
பரித்துநின் றானப் பரிபாகத் தானே. 2430

இ - ள் : நிலைபெற்று நின்றவனாகிய சிவபெரு னுடைய திருவடிகளைத் தன்னுடைய நெஞ்சில் அமராபதி நாதனாகிய இந்திரன் தரித்து நின்றான். (நினைவார் நெஞ்சில் நீங்காது நிற்கும் இறைவன் ) தம்மை நினையாதவரது சிந்தையை வெறுத்து நின்றான். ஆகலின் நீங்கள் அப்பெருமானுடைய திருவடிகளை நெஞ்சிலே இடைவிடாது வைத்துத்

தியானம் செய்வீர்களாக. அவன் திருவடிகளைத் தலையில் சூட்டிக்கொள்வீர்களாக. அவ்வாறு செய்வதால் உண்டாகும் பக்குவ நிலையைக் கண்டு பக்குவம் உடையோரைத் தாங்கி நிற்பன் என்றவாறு.

தரித்தல் – தங்குதல், தாங்குதல். தன்னிட நெஞ்சில் – தன்னுடைய நெஞ்சில். அடிதரித்து நின்றன் – திருவடியை நிலையாகவைத்துள்ளவன். சிவபெருமான் அங்கு இங்கு எனுதபடி எங்கும் பூரணப்பொருளாய் நிறைந்து நிற்பவனுயினும் நினைப்பவர்பால் விளங்கித் தோன்றுவன்; நினையாதவர்பால் விளங்குமாறு தோன்றுவானல்லன். கரித்து – வெறுத்து. பரித்து – தாங்கி. அமராபதிநாதன் – இந்திரன். பரிபாகம் – பக்குவம்: அது ஆணவமலம் பக்குவப்படுதல். ஆணவமலம் பக்குவப்படுதற்கு இடையறுது சிவனடியை நெஞ்சிலே இருத்தித் தியானித்தல்வேண்டும். 'உயிர் பருவம் அடைதலாவது அறிவித்தவாறே அறியவல்லும் செவ்வித்தாதல்'; 'மலமுதிர்தலாவது தனது சத்தி தேய்தற்குரிய துணைக்காரணங்கள் எல்லாவற்றேடும் கூடிப் பதனழியும் செவ்வித்தாதல்' என்பர் ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள். (309)

ஒன்றுண்டு தாமரை யொண்மலர் மூன்றுள
தன்றுதை தாளும் இரண்டுள காயத்துள்
நன்றுகக் காய்ச்சிப் பதஞ்செய வல்லார்கட்
கின்றேசென் றீசனை யெய்தலு மாமே. 2431

இ – ள்: தாமரை என்று குறிப்பாகச் சொல்லப்படும் சுழுமுனை நாடி ஒன்று உடம்பிலுள்ளது. அதனிடத்து ஒளி பொருந்திய மலர்களும் மூன்று

உள்ளன. காயத்துள் தன் தாதை தாளும் இரண்டு உள. ஒண்மலர் மூன்று என்றது இடைகலை, பிங்கலை, சுழுமுனை ஆகிய மூன்று நாடிகளும் கூடிய முடிச்சு என்பர். தாள் இரண்டு என்றது இடைகலை, பிங்கலை என்னும் இரண்டு நாடிகளையும். காயம் – உடம்பு. உடம்பிலே அதனை நன்றாகக் காய்ச்சிப் பதஞ்செய்ய வல்லார்கட்கு இப்பொழுதே ஈசனைச் சென்று எய்தலும் ஆகும் என்றவாறு,

காயத்துள் நன்றாகக் காய்ச்சுதல் - இடைகலை பிங்கலைகளை அடக்கிச் சுழுமுனை வழியே பிராண வாயுவைச் செலுத்துதல். 'மூலக்கனலை காலால் எழுப்பும் கருத்து அறிவித்து' என்றதும் அது, உச்சுவாசம் நிச்சுவாசம் இரண்டையும் அடக்கிச் சுழுமுனை மார்க்கத்திலே பிராணவாயுவை நிறுத்தி, விஷயங்களின் வழி மனத்தைச் செல்ல ஒட்டாமல் திருப்பி, மூலாக்கினியை அக்கினி பீஜாக்கர உச்சாரணத்தினலே எழுப்புதல். அதனால் நன்றாக வெதும்பும். அப்பொழுது உள்ளம் செவ்வி வாய்க்கும், பதம் செய்தல் என்பது மனத்தை வசப்படுத்துதல். காய்ச்சுதலாவது மூலாக்கினியால் வெதுப்புதல். உள்ளத்தை வசப்படுத்தவல்ல ஞானிகளுக்கு இறைவனை எடுத்த பிறப்பிலேயே எய்துதல் கூடும், ஈசனை எய்துதல் சீவன் முத்தநிலையாம். அவர் உடம்பு கழிந்தபின் அடையும் முத்திநிலையை உடம்பு உள்ளபோதே பெற்றனுபவிக்கும் பெரும் புண்ணியம் வாய்ந்தவர். ஆகலின் பதஞ்செய வல்லார் என்றார். பதஞ்செய்தல் யாவர்க்கும் எளிதன்றாகலின் வல்லார் என்றார். (310)

கால்கொண்டென் சென்னியிற் கட்டறக் கட்டற
மால்கொண்ட நெஞ்சின் மயக்கிற் றுயக்கறப்
பால்கொண்ட வென்னைப் பரன்கொள்ள நாடினன்
மேல்கொண்டென் செம்மை விளம்பவொண் ணாதே. 2432

இ – ள் : சிவபெருமான் தமது அரிய திருவடியை என்னுடைய இழிந்த தலையிலே சூட்டினான் ; ஆகலின் கால்கொண்ட என் சென்னியில் என்றார். அவன் திருவடியைச் சூட்டலினால் ஆணவமலக் கட்டு அற்றது. அக்கட்டு அற கன்மத்தினுடைய கட்டும், மாயை காரணமாகவுள்ள கட்டும் என்னுடைய மயக்கம் பொருந்திய நெஞ்சில் அம்மாயா காரியமாக உள்ள பொருள்களிலுள்ள பற்றும் அற்றது. அந்தத் தொடர்பானது நீங்க, பால் போன்ற தூய என்னைச் சிவபெருமான் பற்றிக் கொள்ளத் திருவுளம் கொண்டான். அதனால் என்னுடைய திருநின்ற செம்மை என்னால் சொல்லுதற்கு முடியாததாம் என்றவாறு.

கால்கொண்ட என் சென்னி – திருவடியை வைத்த என்தலை. கால்கொள்ளுதல் – வேரூன்றுதல். கொண்ட என் : அகரவீறு தொக்கது. கால் – திருவடி, கட்டு – பற்று. ஆணவமலக் கட்டற்றது, அதன் வழித்தாக விளைந்த கன்மக்கட்டும் மாயைக் கட்டும் அழிந்தன. அதனால் என்னுடைய பிறப் பாகிய கட்டும் நீங்கியது. ஆணவமலப் பிணிப்பு வலிகெடவே கொண்ட என் நெஞ்சும் மயக்கத் தினின்று நீங்கியது. பற்றற நீங்கியது. ஆகலின் பரன்கொள்ள நாடினன், பரன்கொள்ள நாடியது நான் தூயனான போது ஆகும். தீயனான போது அவன்

என்னை நாடிலன். எனது சென்னியில் அவன் திருவடி சூட்டிய காரணத்தால் என் நெஞ்சின் மயக்கற்றது. துயக்கற்றது. பால் போலும் தூயனுனேன், அவன் என்னை நினைந்தபோது அன்றி அவனை நினைய எனக்கு வாய்ப்பில்லை. அவன் என்னைச் சிவமாக்கினுன். சிவமாந்தன்மைப் பெருவாழ்வை அருளினுன். அதனுல் நான் செம்மை பெற்றேன், சிவமாவது மங்கலம். மங்கலமாவது பிறப்பின்மை, நான்பெற்ற செம்மையாவது பேரின்ப நுகர்ச்சி. அந்நுகர்ச்சி வாயால் சொல்ல முடியாதது. சிவானுபவத்தைத் தமதாகக்கொண்டு அநுபவித்தலே அதுவாம். (311)

பெற்ற புதல்வர்போற் பேணிய நாற்றமுங்
குற்றமுங் கண்டு குணங்குறை செய்யவோர்
பற்றைய வீச னுயிரது பான்மைக்குச்
செற்றமி லாச்செய்கைக் கெய்தின செய்யுமே 2433

இ – ள்: தாய்தந்தையர்கள் தாம் பெற்ற புதல்வர் மாட்டுக் குணத்தையும் குற்றத்தையும் கண்டு அப் புதல்வரை நல்ல வழியில் திருத்திக் காப்பாற்றும் பொருட்டு அன்பினுல் அணைத்தும், தண்டித்தும், குணம் குற்றங்களுக்கு ஏற்ற முறையினைச் செய்வர். அதுபோல உயிர்களின் மாட்டு உள்ள கன்ம வாசனையையும் அதனுல் உண்டாகிய குற்றத்தையும் நோக்கி அருளினுல் அக் குற்றங்களைப் போக்குதற்குரிய தண்டங்களைச் செய்து திருந்திய அவ்வுயிர்களின் குணங்குற்றங்கட்கு ஏற்றவாறு இறைவன் இன்ப துன்பத்தைக் கொடுத்தருளுவன். அப்பெருமான் இன்ப துன்பங்களை உயிர்கட்குக் கொடுப்பது அவ்வுயிர்களின்மேல் வைத்த அருளாலேயாம். தாம்

அருளிய வேதாகம நூல்களின் வழி நில்லாமை பாவம் ஆம். நூல்வழி நின்று அருள்வழி நில்லாமை புண்ணியம். இரண்டும் உயிர்களுக்கு நோயே. அதனால் பந்தம் உண்டாம். அந்தப் பந்தம் நீங்குதற் பொருட்டே சிவபெருமான் இன்பதுன்பங்களை உயிர்களின் கன்மங்களுக்கு ஈடாக ஊட்டித் தீர்ப் பான் என்றவாறு.

பெற்ற புதல்வர்போல் அவ்வீசன் உயிரது பான் மைக்குச் செய்யும் செய்கைக்கு எய்தின செய்யும். அ ஈசன் – அகர எழுத்துப்போல் தான் தனித்து நிற்றலே அன்றி எல்லாப் பொருள்களோடும் கலந்து நிற்கும் தலைவன். ஈசன் – எப்பொருட்கும் தலைவன், உயிர்த் தலைவன். அத்தலைவன் உயிர்களின் கன்மத்துக்கீடாக குணம் குற்றங்களைக்கண்டு அதற்கேற்ற முறைமை யாகிய இன்ப துன்பங்களைக் கூட்டி அருளுவன். அவன் பற்றற்றவன், செற்றம் இலான். பற்றற்ற பரம்பொருளாகிய அவன் உயிர்களினிடத்துப் பற்றுச் செய்கின்றான். அப்பற்று அருட்பற்று. வேறொரு பற்றன்று. அவனே உயிர்களால் பற்றுதற்கு உரியவன் ஏனைய எல்லாம் பற்றுதற்கு உரியன அல்ல ஏனைய பற்றுக்கள் நீங்குதற்காகவே பற்றற்ற பரம் பொருளினிடத்தில் பற்றுச் செய்தல் வேண்டும். அப்பற்றுத்தான் பெரும்பற்று, பெறும் பற்றும் அஃது ஆகும். அப்பற்று உயிர்ப்பற்று. பொருட்பற்றுக் களின் பற்றன்று உயிர்கள் பற்றறவேண்டின் பற்றற்ற பரம்பொருளினிடத்திலேயே பற்றுச் செய்தல் வேண்டும் ஆகலின் உயிரது பான்மைக்குத்தக ஈசனும் அவற்றின்பால் பற்றுவைத்தான் அப்பற்று செற்றமிலாப்பற்று, செய்கைக்கு ஏற்ற பற்று

ஆகலின் அவன் நடுநிலை தவறியவன் அல்லன், அவன் செய்வனவெல்லாம் உயிர்களின் நன்மைக்கு ஏற்பன, பிறிதன்று.

நோய்க்கு மருத்துவன் மருந்து அருத்துவது போலவே இறைவனும் உயிர்களுக்கு மலப்பிணி தீர இன்ப துன்பங்களைக் கொடுத்துப் பிணியை நீக்கிப் பேரின்பத்தில் அழுத்துவன். ஆகலின் முன்மந்திரத்திலும் அத்தன்மை சொல்லவொண்ணாது என்று அருளினர். (312).

## 18. மூக்குற்றம்

மூன்றுள குற்ற முழுது நலிவன
மான்றிருள் தூங்கி மயங்கிக் கிடந்தன
மூன்றினை நீங்கினர் நீக்கினர் நீங்காதார்
மூன்றினுட் பட்டு முடிகின்ற வாறே. 2434

இ - ள்: குற்றம் மூன்று உள - உயிர்க் குற்றங்கள் மூன்று உள்ளன. அவை முழுதும் நலிவன. அதனால் உயிர்கள் மயங்கி இருளிலே தூங்கி மயக்கமுற்றிருந்தன. குற்றம் மூன்றுவன: காமம் வெகுளி மயக்கங்கள். இவை மூன்றும் உயிர்களைத் துன்பப்படுத்துவனவே. இம்மூன்றனுலும் விழுங்கப் பட்ட உயிர்கள் இருளிலே மயக்கமுற்றுக்கிடந்தன. மான்று - மயங்கி. இருள் தூங்கி - ஆணவமலத்துள் புதைந்து. மயங்கிக் கிடந்தன - மாயையால் மயக்கமுற்றிருந்தன. "மாயை மயக்கமும் செய்யுமன்றே" என்பது அறிக. மூன்றினை நீங்கினர் என்பது காமம் வெகுளி மயக்கம் ஆகிய மூன்றினின்று விடுபட்

டோர். நீக்கினர் – பிறப்பு இறப்புக்களை நீக்கினோ ராவர். திருவருளினால்தான் இம்மூன்றினின்று தப்ப முடியும். இம்முக்குற்றத்தினின்று நீங்காத உயிர்கள் பிறப்பு இறப்புத் துன்பங்களை இடையறாமல் பெற்று அவதிப்படுவனவாம். காமவெகுளி மயக்கங்களால் வரும் வினை காரணமாகக் கணக்கில்லாத துன்பங்கள் வந்து சூழ்ந்து உயிர்களை அழிப்பனவாம். உயிர்களை அழித்தலாவது நிலைபெறாது பிறவியில் அலைக் கழித்தல்.

*" காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்*
*நாமம் கெடக்கெடும் நோய் "* — குறள் 360.

ஞான யோகங்களின் முதிர்ச்சியுடையார்க்கு விழைவு வெறுப்பு அவிச்சை என்னும் இக்குற்றங் கள் மூன்றனுடைய பெயருங்கூடக் கெடுதலான் அவற்றின் காரியமாய வினைப்பயன்கள் உளவாகா என்று உரைவரைந்தார் பரிமேலழகர். ' இடையறாத ஞானயோகங்களின் முன்னர் இந்தக் குற்றங்கள் காட்டுத்தீ முன்னர்ப் பஞ்சுத் துய் போலும் ஆகலின், அம்மிகுதி தோன்ற இவை மூன்றன் நாமங்கெட என்றார். காரணமாய அக்குற்றங்களைக் கெடுத்தார் காரியமாகிய இருவினைகளைச் செய்யாமையின் அவர்க்கு வரக்கடவ துன்பங்களும் இல்லை. முன் கிடந்த துன்பங்களும் மேல்வரக் கடவ துன்பங் களும் இலவாதல் மெய்யுணர்வின் பயனும் ' என விளக்கமும் கூறினர்.

" பஞ்சக்கிலேசத்தை மூன்றாய் அடக்கிக் காமம் வெகுளி மயக்கம் என்றார் வள்ளுவனாரும். " – (சிவ

ஞான - சூத் 2-அதி2) என்றருளினுர்கள் ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகளும். பஞ்சக்கிலேசமாவன அநாதியாய அவிச்சையும், அதுபற்றி யான் என மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கு இதுவேண்டும் என்னும் அவாவும், அதுபற்றி அப்பொருட்கண் செல்லும் ஆசையும், அதுபற்றி அதன் மறுதலைக் கண் செல்லும் கோபமும் ஆம். வடநூலார் குற்றம் ஐந்து என்ருர். அவற்றுள் அகங்காரம் அவிச்சைக் கண்ணும், அவாவுதல் ஆசைக்கண்ணும் அடங்குதலான் மூன்று எனப்பட்டது. (313)

காமம் வெகுளி மயக்க மிவைகடிந்
தேமம் பிடித்திருந் தேனுக் கெறிமணி
ஓமெனும் ஓசையி னுள்ளே யுறைவதோர்
தாம மதனைத் தலைப்பட்ட வாறே 2435

இ - ள் : முற்கூறிய முக்குற்றங்கள் இவை என இம்மந்திரத்தால் விரித்தருளுகின்ருர்.

காமம் வெகுளி மயக்கம் ஆகிய முக்குற்றங்களையும் நீக்குதல் வேண்டும்.

கடிதல் – நீக்குதல். அவை கடிதல் அருளாலன்றி இயலாது. அக்குற்றங்கள் மூன்றும் நீங்கின விடத்துப் பற்றுக்கோடாக இறைவன் திருவருள் கிட்டும். அதனுல் திருவடிப்பேருகிய இன்பம் கைவரும். ஏமம் – பாது காவல். அவ்வாறு பாதுகாவலாகத் திருவருளைப் பெற்றிருந்தேனுக்கு அடிக்கின்ற மணியினின்று தோன்றும் நாதம் ஆகிய ஓங்காரத்தினுள்ளே நிலைத்திருக்கும் ஓர் ஒளி உண்டாம் என்றவாறு.

எறிமணி ; வினைத்தொகை. பிடித்திருந் தேனுக்கு – வினையாலணையும் பெயர், ஓம் – ஓங்காரம், ஓசை – நாதம். நாதத்தினுள்ளே தங்கும் ஒளி என்க. தாமம் - ஒளி. அது சிவ ஒளி, திருவருளொளி. அவ்வொளி முக்குற்றமும் கடிந்தார்க்குத் தானே வந்து தலைக்கூடும். ஏமம் சிவானந்தம் எனவும் கூறுவர். (314)

## 19. முப்பதம்

தோன்றிய தொம்பதந் தற்பதஞ் சூழ்தா
ஏன்ற அசிபதம் இம்மூன்றே டெய்தினேன்
ஆன்ற பராபர மாகும் பிறப்பற
வேன்றனன் மாளச் சிவமா யிருக்குமே. 2436

இ – ள் : தத்துவமசி என்பது அது நீ ஆகின்றனை எனவும், சோகமஸ்மீ என்பது அவன் நானாகின்றேன் எனவும், சோயம் அஸ்தி என்பது அவன் இது ஆகின்றான் எனவும் மூவிடம்பற்றி மகா வாக்கியங் கள் நிகழும். தத்துவமசி என்பது முன்னிலை மகா வாக்கியம். அதன்பொருள் அது நீ ஆகின்றனை என்பது. அது என்பது சிவமாகிய ஒரு பொருள். நீ என்பது ஆன்மா வாகிய மற்றொரு பொருள். ஒரு பொருள் மற்றொரு பொருளாதல் எப்படி என்ற வினா எழும் அன்றே !

சோஹம் அஸ்மி என்றது அவன் நானாகின்றேன் என்னும் தன்மை மகாவாக்கியமாம். இதனுள் அவன் என்பது சிவனாகிய ஒரு பொருள். நான் என்பது ஆன்மாவாகிய மற்றொரு பொருள். ஆகலின் ஒரு

பொருள் மற்ருெரு பொருளாதல் எப்படி என விஞ நிகழும் அன்றே !!

சோயம் அஸ்தி என்றது அவன் இது ஆகின்றன் என்னும் பொருளைத்தரும் படர்க்கை மகாவாக்கிய மாம். இதில் அவன் என்பது சிவனுகிய ஒரு பொருள். இது என்பது ஆன்மாவாகிய மற்ருெரு பொருள். ஆகலின் ஒரு பொருள் மற்ருெரு பொருளாதல் எப்படி என விஞ நிகழும் அன்றே !!!

இவ்வாக்கியங்களில் எழுந்த ஐயம் நீங்குதற்கு உரியதாம் அஃது அத்துவித சம்பந்தமாம். அத்துவித மாவது அந்த இருபொருளுக்கும் உள்ள சம்பந்த விசேஷமாகும். இதனை,

*" சொன்ன தத்துவ மசியெனுஞ் சுருதியின் மொழியு*
*மன்னு காரண பதியுநா னெனவரும் பசுவு*
*மென்ன வேபொரு ளிருமைகண் டியைந்துவே றன்மை*
*தன்னை நாட்டிய தல்லது தனியென்ப தின்றே. "*

என்னும் செய்யுளான் உணர்க.

அத்துவிதம் என்னும் சொல்லியைபு அன்மைப் பொருள்பற்றி இரண்டன்று என வேற்றுமைப் படாமையை விளக்கி நிற்பதாயிற்று. இதனை சிவ ஞான போதம் 2-ம் சூத்திரத்தில் கூறியவாற்ருன் உணர்க.

தொம் தத் அசி என்ற பதங்கள் மூன்றும். தொம் என்பது துவம் என்றதாம். துவம் என்பது நீ என்ப

தாயிற்று. தத் என்னும் பதம் அது என்னும் பொருளைத் தந்து சிவனைக் குறித்ததாம். நீ என்பது ஆன்மாவை. தத் என்றது சிவத்தை. தொம் பதம் தத்பதம் இரண்டனையும் ஆராய்க. சூழ்தல்-ஆராய்தல். சூழ்தர – ஆராயும்பொழுது. ஆன்மஞானத்தாலன்றித் திருவருள் ஞானத்தால் இதனை ஆராய்தல் வேண்டும். ஆராயும்போது தத் பதத்திற்குரிய சிவத்தை திருவருளால் ஆராய்தலாம். அது ஏன்ற அசிபதம் ஆக்கும். ஏன்ற – இயன்ற, இயைந்த, பொருந்திய, அசி – ஆகின்றாய் என்பது. நீ அது ஆகின்றாய் எனவே நீ சிவமாந்தன்மைப் பெருவாழ்வை அடைகின்றாய் என்பதாம். எய்தினேன் – அடைந்த ஆன்மா. ஆன்ற பராபரமாகும் என்றது பூரணமான பராபரப்பொருள் ஆவான். ஆன்ற – அகன்ற, நிறைந்த.

பிறப்பு அற ஏன்றனன் - அநாதிகாலந் தொட்டு மலச்சார்பினால் இடையறாதுவந்த பிறப்பை நீங்கும்படி ஏன்றுகொண்டான். பிறப்பு இறப்புக்கள் மலச்சார்பினால் உயிர்களுக்கு உண்டாயின. அதை நீங்குதற்கு உரிய வழியை நன்கு ஆராய்ந்து இறைவன்பால் ஒப்புவிக்கத் தெரியவேண்டும். அதனால் மலச்சார்பு மாண்டொழியும். சிவச்சார்பு உண்டாம். அச்சார்புதான் சிவமாந்தன்மைப் பெருவாழ்வைத்தரும். அவ்வாழ்வுதான் இங்கே சிவமாயிருக்கும் வாழ்வாம். "சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட, அத்தன் எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே" என்ற அருளிப்பாடு சிந்தித்தற்குரியது. (315)

போதந் தனையுன்னிப் பூதாதி பேதமும்
ஓதுங் கருவிதொண் ணூறுடன் ஓராறு
பேதமும் நாதாந்தப் பெற்றியிற் கைவிட்டு
வேதஞ்சொல் தொம்பத மாகுதன் மெய்ம்மையே.

இ — ள் : திருவருள் ஞானத்தால் ஆன்ம அறிவு விளங்கவேண்டுமாயின் பூதத்தை முதற்காரணமாகச் சொல்லப்பட்ட உடலிலுள்ள தத்துவங்கள் தொண் ணூற் றாறும் ஆராய்ந்து கைவிடல் வேண்டும். இதனைப் பொதுவாகிய தத்துவம் தொண்ணூற்றாறு எனவும், சிறப்பாகிய தத்துவம் முப்பத்தாறு எனவும் சைவர் கொள்வரென்பதை, 'ஆகின்ற தொண்ணூ றோடாறும் பொது என்பர், ஆகின்றவாறா றுஞ் சைவர் தத்துவம்' என்னும் திருமந்திரத்தான் அறிக.

போதந்தனை உன்னி — திருவருளால் கிடைக்கும் ஞானத்தை வழியாகக்கொண்டு, பூதம் முதலிய வற்றின் பேதங்களும், பொதுவாகச் சொல்லப்படும் தொண்ணூற்றாறு தத்துவங்களின் பேதமும் நாதத் தின் முடிவை உணர்தலால் கைவிட்டு வேதங் களினுல் சொல்லப்படும் துவம் — தொம் பதப் பொருளாகிய நீயாதல் உண்மை நெறியாம்.

போதம் — திருவருள் ஞானம், பூதாதி பேதம் — பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பூதங்கள் ஐந்து; சத்த பரிச ரூப ரச கந்தம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்து; மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஞானேந்திரியம் ஐந்து; வாக்கு பாதம் பாணி பாயு உபத்தம் என்னும் கன்மேந்திரியம் ஐந்து; மனம் சித்தம் புத்தி அகங்காரம் என்னும் அந்தக்கர

ணங்கள் நான்கு; ஆகிய இருபத்துநான்கு தத்துவங்களும் ஆன்மதத்துவம் என்று சொல்லப்படும்.

இவை பிரகிருதி மாயையில் தோன்றுவனவாம். காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை ஆகிய ஏழு தத்துவங்களும் வித்தியா தத்துவங்கள். இங்கே மாயை என்றது அசுத்த மாயையை. சுத்தவித்தை, ஈசுவரம், சாதாக்கியம், விந்து, நாதம் ஆகிய ஐந்து தத்துவங்களும் சிவதத்துவங்கள். மேலே கூறப்பட்ட மூன்று வகைகளையுடைய முப்பத்தாறு தத்துவங்களும் அருஞ்சைவர் தத்துவங்கள்.

தத்துவ சம்பந்தமுடையது தாத்துவிகம் ஆகும். பிருதிவியின் கூறு எலும்பு முதலிய ஐந்து, அப்புவின் கூறு மூத்திரம் முதலிய ஐந்து, அக்கினியின் கூறு இருதய உஷ்ணம் முதலிய ஐந்து, வாயுவின் கூறு பிராணன் முதலிய பத்து, ஆகாயத்தின்கூறு அத்தி முதலிய பத்து, காமம் முதலிய ஐந்து, கன்மேந்திரியத்தின் தொழிலாகிய வசனம் முதலிய ஐந்து. ஞானேந்திரியத்தின் விடயமாகிய சத்தம் முதலிய ஐந்து, வாக்கு நான்கு, குணம் மூன்று, அகங்காரம் மூன்று ஆக அறுபதும் புறக்கருவிகள் ஆம்.

நாதம்வரையிலுள்ள தத்துவங்களை விட்டு நீங்கி, தத்துவ அதீதமான நிலையினை உணர்வதால் தன்னைக் காண்டலாகிய தன்மை சித்திக்கும். தன்னைக் காண்டல் என்பது ஆன்ம தரிசனம். அதுவே தொம்பதத்தின் பொருளாம். தொம் – நீ; என்றது பசுவாகிய ஆன்மாவை.

இனி, பூதாதி பேதம்—பூதத்தை முதற்காரணமாக வுடைய பிரபஞ்சம் எனப் பொருள்கொள்க: அன் மொழித்தொகை. பூதத்துக்கு மேலுள்ள தத்து வங்களை உலோகாயதர் கொள்ளாமையால் பூதம் முதலிய தத்துவங்கள் என்று பொருள் கொள்ளுதல் பொருந்தாது.

தற்பதம் என்றுந் துவம்பதந் தானென்றும்
நிற்ப தசியத்துள் நேரிழை யாள்பதஞ்
சொற்பதத் தாலுந் தொடரவொண் ணுச்சிவன்
கற்பனை யின்றிக் கலந்துநின் ருனே. 2438

இ—ள்: தத் என்பது அது எனப் பொருள் படும், துவம் என்பது நீ எனப் பொருள்படும். அசி ஆகின்ருய் என்பது நீ அது ஆகின்ருய் என்றவிடத்து நீ யாகிய ஆன்மா சிவமாக ஆகின்ருய் எனப் பொருள் படும். சிவம் ஆதலாவது சிவமாம் தன்மைப் பெரு வாழ்வை அடைதல். சீவன் சிவமாதல், சீவத்தன்மை கெட்டுச் சிவமாந்தன்மையை அடைந்த விடத்தாம். ஆன்மா சிவத்தன்மை அடைதற்கு உரிய எல்லாச் சாதனங்களையும் கைக்கொள்ளுதல்வேண்டும். அந்தச் சாதனங்களில் ஒன்று குறைந்தாலும் சிவமாந்தன்மை எய்தாது. உயிர்கள் சிவத்தைச்சார்ந்து சிவத்தன்மை பெற்று அச்சிவத்தை அனுபவித்து நிற்கும் நிலை அம் மம்ம! எளிதில் கூடாத காரியம். அப்படி அனுப வித்து நிற்கும் நிலையைத்தான் அது நீ ஆகின்ருய் என்றது. சிவத்தைச் சார்ந்து நிற்றல் திருவருள் வழியன்றி வேருென்ருனும் கூடாது. ஆதலின் நேரிழையாள் பதம் என்ருர். நேரிழையாள் பதமாவது சத்தி நிபாதம், திருவருள் வீழ்ச்சி. சத்தி நிபாதத்தால்

தான் அது நீ ஆகின்றாய். அத்திருவருள்நிலை சொல்லால் தொடர முடியாது. தொடராமைக்குக் காரணம் சிவ பெருமான் திருவருளைக் கலந்து நிற்பதனாலேயேயாம். 'அவனருளாலே அவன்றாள் வணங்கி' என்று அருளினார் அந்நிலையில் நின்ற அருளாளர்.

அவனருளாலன்றி அவனை அணுகுதலுங் கூடாது. அணுகுதலாவது பூசித்தல், தியானித்தல் என்பன. கற்பனை இன்றி என்பது வேறுபாடில்லாமல் என்றபடி. தொடரவொண்ணாச் சிவன் – மாயை காரியமாக உள்ள கருவிகரணங்களால் தொடர முடியாத சிவன். ஞானமே வடிவாகவுள்ள அப்பரம் பொருளை ஞானிகள் ஞானத்தாலேயே வழிபடுவர்.

> "ஞானத் தால்தொழு வார்சில ஞானிகள்
> ஞானத் தால்தொழு வேனுனை நானலேன்
> ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு
> ஞானத் தாயுனை நானும் தொழுவனே".

என்று அருளினர் திருநாவுக்கரசு சுவாமிகள். ஞானம் என்றது சிவஞானத்தை; ஆன்மஞானத்தை அன்று. சிவன் கலந்துநின்றான் – சிவன் சீவனாகிய உன்னுடன் பேதமில்லாமல் கலந்து இரண்டற விளங்கினான் என்றவாறு. (317)

> அணுவும் பரமும் அசிபதத் தேய்ந்து
> கணுவொன் றிலாத சிவமுங் கலந்தால்
> இணையறு பால்தேன் அமுதென இன்பத்
> துணையது வாயுரை யற்றிடத் தோன்றுமே. 2439

இ – ள்; அணுவாகிய ஆன்மாவும், பரமாகிய பரமான்மாவும் அசி என்னும் பதப்பொருளாகிய ஆனாய் என்னும் சொல்லுக்கு இலக்காதல் தடையில்லாத சிவமும் கலப்புறும்: அவ்வாறு கலப்புற்றால் ஒப்பற்ற பாலும் தேனும் அமுதுமாய்த் தித்திக்கும்; தெவிட்டாத இன்பமாம். அவ்வின்பம் சொல்லற்ற இடத்திலே விளங்குவதாம். 'மோன மென்பது ஞானவரம்பு' என்றார் ஔவையார். 'சும்மா இரு சொல்லற என்றலுமே, அம்மா பொருளொன்று மறிந்திலனே' என்றார் அருணகிரிநாதர்.

"பாடுதும் பஞ்சாக் கரவனை யென்று படர்தலொடும்
கூடுவ தன்னவன் பாதம்; அதுவந்து கூடுதலும்
நீடுவ தின்பம்; மனவாக்குக் காய நிகழ்செயலற்
றேடுவ; வாளாங் கிருப்பதல் லாற்பின்னை யொன்றில்
[லையே"

என்பது பஞ்சாக்கரதேசிகரந்தாதி.

உலக வியாபாரத்தின்கண்ணே யிருந்து தனக்கு அன்னியமாயுள்ள பதார்த்தங்களிடத்தில் புத்தி செலுத்தி ஒவ்வொன்றினையும் சுட்டியறியும் அறிவு உள்ளவரையில் அவ்வின்பம் விளையாது. இத்தகைய வியாபாரங்கள் அனைத்தையும் அறவே கைவிட்டு நிர்விகற்பமாயிருக்கும் நிலையை அடைந்தவர்கட்கே அவ்வின்பவிளைவு உண்மையில் விளையும். மனமானது பாசத்தின்காரியம். பாசமானது இம்மையில் உலக இன்பத்தை ஊட்டுவதுபோல, மறுமையிலும் பேரின்பத்தை ஊட்டும். "முத்தியிலு மூன்று முதலு மொழியக்கேள்" என்றமை அறிக.

கருப்பஞ்சாறு தேன் பால் கனியிரதம் கற்கண்டு சருக்கரை முதலிய சுவைப்பொருள்கள் எல்லாம் ஒன்றாகக் கலந்தவழி உளதாகிய சுவை இவ்வியல்பிற்று எனப் பிரித்தறிய வாராமைபோல இறைவனும் பரமுத்தியில் உயிரின்கண் அங்ஙனங் கலந்தவழி இவ்வியல்பிற்று எனப்பிரித்தறியவாராத ஆனந்த சொரூபமாய் நிற்பன். ஆகலின், உயிர்தானும் சிவானுபவம் ஒன்றினுக்குமே உரித்தாம். இதனாலேயே 'இன்பத் துணையது வாய்த் தோன்றும்' என்று அருளியது. இதனை, '' இரும்பைக் காந்தம் '' என்னும் சிவஞான சித்தித் (321) திருவிருத்தத்தாலும், ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் அருளிய பொழிப்புரையானு முணர்க. (318)

தொம்பதந் தற்பதந் தோன்றும் அசிபதம்
நம்பிய சீவன் பரன்சிவ னய்நிற்கும்
அம்பத மேலைச் சொருபமா வாக்கியஞ்
செம்பொருள் ஆண்டருள் சீர்நந்தி தானே. 2440

இ - ள் : தொம் (துவம்) பதமும் தற் (தத்) பதமும் தோன்றுகின்ற அசிபதமும் ஆகிய மூன்றும் முறையே சீவனும் பரனுமாய் நிலைபெறும். தொம்–நீ; சீவன். தத் – அது; சிவன், பரன். சீவன் சிவனாய் நிற்கும் முறையதுவாம். அம் பதம் மேலை சொருப மாவாக்கியம் – அழகிய அந்தப்பதமானது முற்பட்ட சொரூப நிலையையுணர்த்தும் மகாவாக்கியமாம். மாவாக்கியம் - பெரும் பெயர்: '' அரும்பெறன் மரபிற் பெரும் பெயர் முருக '' ( திருமுருகு – 269). பெயர் – பொருள், பெரும் பொருள் என்றது வீட்டினை. '' பெரும் பெயரே பெயராக வந்த, ஒருவாய்மை

தன்னை நினையினு முள்ளம் உருகுவதே " என்றார் கவிராக்ஷஸ கச்சியப்ப முனிவர் பஞ்சாக்கரதேசிகர் அந்தாதியில்.

" பெரும்பெயர்க் கடவுளிற் கண்டு கண்ணிருள் தீர்ந்து " என்பது சிவஞானபோதம் சிறப்புப்பாயிரம். " பெரும் பெயர்க்கடவுள் என ஞேய மொன்றே பெரும் பெயர்க்குப் பொருளாகக் கூறினார்; ஏனைய வற்றைத் தன்னுள் அடக்கி நிற்றலிற் றலைமைபற்றி என்றுணர்க. பெரும் பெயரெனினும், மகாவாக்கிய மெனினும், ஒரு வார்த்தையெனினும் ஒக்கும். பெரும் பெயர்ப் பொருளே அஞ்செழுத்திற்கு மாதலின், பெரும் பெயரோடு அஞ்செழுத்திடை வேற்றுமை இன்மையுணர்க. ஈண்டிய பெரும் பெயர் – எல்லா நூற்பெருளும் திரண்டுகூடிய பெரும் பெயரென்க. " அருணூலும் ஆரணமும் அல்லாதும் அஞ்சின் பொருணூல் தெரியப் புகின் " (திருவருட் பயன் – ஐந்தெழு - 1 ). என்பதனானு முணர்க. " எனச் சிவஞானபோத மாபாடியத்தில் ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் அருளிச் செய்தமை காண்க.

காணப்பட்ட இவ்வுடம்பால் காணப்படாத ஆன் மாவையும், ஆன்மாவால் பரமான்மாவையும் அநு மானப் பிரமாணத்தால் ஆராய்ந்து, தடத்தலக்கணம் எனப்படும் பொதுவியல்பையுணர்ந்து, பெரும்பெயர் எனப்படும் மகாவாக்கியத்தால் சொல்லப்படும் முதற் கடவுளது திருவருளால் சொருபலக்கணம் எனப் படும் சிறப்பியல்பை அநுபூதி ஞானத்தால் அறிந்து சிவானுபவம் பெறுதல் வேண்டும். செம்பொருள் – சிவப் பொருள். மாவாக்கியத்தாற் பிரதிபாதிக்கப்

படும் செம்பொருள் ஆவான் சீர்நந்திதான்; அவன் சிவன்தான். என்னை ஆட்கொண்டு அருள்செய்கின்ற சீர் நந்திதான் என்க. நந்தி – சிவபெருமான்: " நந்தி நாமம் நமச்சி வாயவே " (தேவா).

" தோற்றக் கேடுகள் இன்மையின் நித்தமாய், நோன்மையால் தன்னை ஒன்றுங் கலத்தல்இன்மையின் தூய்தாய்த் தான் எல்லாவற்றையும் கலந்து நிற்கின்ற முதற்பொருள் விகாரமின்றி, எஞ்ஞான்றும் ஒருதன் மைத்தாதல் பற்றி, அதனைச் செம்பொருள் என்றார் " எனப் பரிமேலழகர் (திருக்குறள் – மெய்யுணர்தல் – 8) " சிறப் பென்னுஞ் செம்பொருள் காண்ப தறிவு " என்பதன் உரையில் கூறியவாற்றானு முணர்க. (3.9)

ஐம்ப தறியா தவரு மவர் சிலர்
உம்பனை நாடி யுரைமுப்ப தத்திடைப்
செம்பர மாகிய வாசி செலுத்திடத்
தம்பர யோகமாய்த் தானவ னுகுமே. 2441

இ – ள்: மக்கள் யாக்கையைப் பெற்றுள்ளோர் பலர்; ஐம்பது பிராயமாகியும் அவருட்சிலர் ஒன்றும் அறியார். ஒன்றும் அறியார் என்றது வாழ வகை அறியார் என்க. வாழ்தலாவது பிறவா திறவா திருத்தல். பிறவா நெறியை இதுவென்றறியார். பிறவா நெறியாவது சிவமாந்தன்மைப் பெருவாழ்வு உறுதல். அப்பெருவாழ்வுறுதற்கு உபாயம் முப்பதத் திடை வாசி செலுத்துதல். உம்பனைநாடி உரைப்பது அம்முப்பதம். உம்பன் – சிவபெருமான்: தத் தொம் அசி என்றது அது நீ ஆகின்றாய் என்பதாம். தத் அதுவாகிய சிவம், தொம் நீயாகிய ஆன்மா. அசி

ஆகின்றாய் என்பது; இதுவே சீவன் சிவமாதலாம்; ஆதல் சம்பந்தம். முப்பதம் என்றது இடைகலை, பிங்கலை, சுழுமுனை நாடிகள் எனக் குறித்தவாறு. மூன்று நாடிகளும் சேர்ந்துள்ள இடம் புருவமத்தி. வாசி செலுத்திட – பிராண வாயுவைச் செலுத்த. செம்பரமாகிய வாசி – செம்பொருள் ஆகிய வாசி என்க. வ – அருள். சி – சிவம். உச்சுவாச நிச்சுவாச நிலைகண்டு அவற்றை உள்ளடக்கிச் சுழுமுனை வழியாகச் செலுத்த என்றபடி. உச்சுவாச நிச்சுவாச நிலையாவது ஹம்ஸ மந்திரம்; ஹம் சிவபீஜம், ஸம் சத்தி பீஜம். இதுவே செம்பொருளாகிய வாசியாம். அவ்வாறு செலுத்தி நிற்கும் நிலையின் முதிர்வே தம் பரயோகமாய் முடியும்; தம்முடைய மேலான யோகமாம் என்றவாறு.

இடைகலையானது எப்போதும் வலது நாசியிலும் முக்கால் அம்சம் எனவே நிற்கும். ஹம் ஸம் என்பது ஆன்மாவுக்குள்ள பெயராம். வெளியிலே வரும் சுவாசத்தின் சத்தமாகிய ஹம் என்பதையும், உள்ளே சொல்லும் சுவாசத்தின் சத்தமாகிய ஸம் என்பதையும் கண்டறிக. ஹம் ஸம் என்னும் சத்தத்தை அறிந்தவரே இதன் முதற்படியைத் தெரிந்துகொண்டவராவார். இது ஒரேகாலத்தில் இயலாத காரியமாம். இதனை அநுட்டித்துவரும் யோகியானவன் சந்நியாசியாகவேண்டும் என்ற நியமம் இல்லை. கிருகத்தில் உள்ளவர்கள் எல்லோருமே இதனை அநுட்டிக்கலாம். திரிகரணசுத்தியுடன் எவர் அநுட்டித்தாலும் அவர்கட்கு அது சித்தியாம். யோகாப்பியாசத்தை ஒருவன் பதினெட்டு வயதில் தொடங்குவானானால் ஐம்பதாவது வயதில் அவன் கேசரி முத்திரையை

அடைவான். ஆகலின், 'ஐம்பதறியாதவரும் அவர் சிலர்' என்றார்.

இனி, கேசரி முத்திரையாவது யாது என அறிந்து கொள்ளுதல் வேண்டும். அஃதாவது :

'இடதுநாடி வலது நாடிகளில் உள்ள வாயு எந்த மத்தியப் பிரதேசத்தில் செல்லுகின்றதோ அந்தப் பிரதேசத்தில் கேசரி முத்திரையானது ஸ்திர முடையதாகின்றது. சூரிய சந்திரர் எனப்படும் இடை கலை பிங்கலைகளின் மத்தியில் நிராலம்பமாகிய உள் ஆகாயத்தில் இருக்கும் ஆகாய சமுதாயத்தில் செவ்வையாகப் பொருந்தி யிருப்பதுவே கேசரி முத்திரை என்பர்.'

இதனை, அப்பியாசம் செய்யும்படி :

'முன்னமே சுழுமுனையைப் பிராணவாயுவினால் பூரிக்கவும். அப்போது நிச்சயிக்கப்பட்ட கேசரி முத் திரை உண்டாகின்றது. புருவ மத்திய ஸ்தானமே சதாசிவம் என்னும் சுகவடிவாகிய பரமாத்மாவின் ஸ்தானமாம். சிவத்தில் ஒடுங்கவேண்டி, மனத்தை நிராலம்பமாக்கி ஒன்றையும் சிந்தியாதிருப்பவன் எவனோ அவனே கேசரிமுத்திரை இன்னதென்பதை உணர்கின்றான். அவனே சொரூபத்தில் நிலைத்தலாகிய சீவன்முத்தனாவான்.'

'சாம்பவி முத்திரைக்கு வெளிதிருஷ்டியும், கேசரிமுத்திரைக்கு அந்தர்முக திருஷ்டியும்; சாம்ப விக்கு இருதயப்பார்வையும், கேசரிக்குப் புருவ நடுப் பார்வையுமாம். 'சாம்பவி முத்திரைக்கும் கேசரி முத்திரைக்கும் ஸ்தானபேதமுண்டு. சித்தம் லயமானால்

பேதமில்லை, சாம்பவி முத்திரையினால் நிலைபெற்ற மனமுடையனும் நாசி நுனியிலே வைக்கப்பட்ட திருஷ்டியையுடையனும். நிஷ்பந்தத் தன்மையாலும் தேகேந்திரியம் மனம் முதலியவற்றின் நிச்சலத் தன்மையாலும் சந்திர சூரியர்களை இலயம் ஆக்கு கின்றவனும், பிராணவாயுவின் சஞ்சாரத்தைத் தம்பிக்கச் செய்பவனும் உள்ளவன் எவனோ ? அவனே ஆன்ம சொரூபத்தில் நிலைத்தவனா கின்றான்.'

மற்றும், 'சுவாசம் வெளிப்படும்போது சகாரம் ஆகிறதை அதாவது ஸோ என்னும் சுவாசத்தை உட் கொள்ளும்போது அகாரத்தை ஹம என்றே தியானிக்கவும். அந்த அகாரம் மறுபடியும் உள்ளே செல்கின்ற படியால் ஹம ஸ ஹம ஸ என்னும் மகாமந்திரத்தையே ஆன்மாவானவன் எப்பொழுதும் செபம் செய்து கொண்டிருக்கின்றான். குரு உபதேசத் தினால் இந்த மந்திர செபமானது சுழுமுனையில் விபரீதமாகவே உண்டாகிறது அது ஸோஹம் ஸோஹம் என்று ஆகிறது. சகாரம் கேசரி என்று சொல்லப்படும். அது 'த்வம்' (தொம்) பதம் என நிச்சயிக்கப்படும். அகாரம் பரமேசுவரன் ஆகிறது. அது 'தத்' பதம் என்று நிச்சயம் செய்யப்படும். சகாரத்தைத் தியானிக்கும் ஆன்மாவும் நிச்சயமாய் அகாரமே ஆகின்றான். இதனையே 'தானவன் ஆகுமே' என்று அருளினார் என்க. (320)

**நந்தி யறிவும் நழுவில் அதீதமாம்**
**இந்தியம் சத்தாதி விடவிய னாகும்**
**நந்திய மூன்றிரண் டொன்று நலமைந்து**
**நந்தி னனவாதி மூட்டும் அனாதியே.** **2442**

இ – ள் : நந்தி அறிவும் நழுவில் அதீதம் ஆம் – திருவருளாக்கம் பெற்று உயிரினது அறிவும் உலக பாசத்தினின்று ஒழிந்தால் அதீதநிலையுண்டாம் : அறிவும் நழுவில் – உலகபாசமும் ஒழிந்தால். அதீதம் – மேல்நிலை. இந்திரியங்களும் சத்தாதி விடயங்களும் விட்டவனுவான் ; விடவியன் – விட்டவன். மெய் வாய் கண் மூக்குச் செவி என்பன ஐந்து இந்திரியங்கள். சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்பன விடயங்கள். மூன்று இரண்டு ஒன்று நலமைந்து என்பதை ஒன்று இரண்டு மூன்று நலம் ஐந்து என மாறுக, இவை ஐந்தும் அவத்தைகள். சாக்கிரம், சொப்பனம். சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பன அவை ; நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் என்பன அவத்தைகளே. இவை கீழாலவத்தை, மத்தியாலவத்தை, மேலாலவத்தைகளிலும் நிகழ்வன.

நந்திய மூன்று இரண்டு ஒன்று நலம் ஐந்து – மேலாலவத்தையின்கண் உள்ள மூன்று முதலியன. மேலாலவத்தை என்றது சுத்தாவத்தையை ; அது நின்மலாவத்தை. நந்திய – மேம்பட்ட நின்மல சாக்கிரம், நின்மல சொப்பனம், நின்மல சுழுத்தி, நின்மல துரியம், நின்மலதுரியாதீதம் என்பன. இருவினையொப்பு மலபரிபாகம் சத்தி நிபாதம் நிரம்பிய நிலை நின்மலசாக்கிரம். குருதரிசனமாகி அவர் அருளுபதேசம் பெறல் நின்மல சொப்பனம். உபதேசத்தில் உறைத்து நின்று சாதித்தல் நின்மலசுழுத்தி. பாச நீக்கம் நின்மலதுரியம். சிவப்பேறு நின்மலதுரியாதீதம் என்பர். மூன்று இரண்டு ஒன்று எனக்கூறியது உபதேசத்தில் உறைத்து நின்று சாதித்தலின் இன்றி

யமையாமை கருதி. அதன்பின் உபதேசம், சத்தி நிபாதம் கூறியது இவைகளின்றி இது சாதித்தலில்லை என்பது கருதியதாம். முறை பிறழக் கூறியமை வற்புறுத்தற் பொருட்டே என்க. நாலாம் அவத்தை கூறாது நலம் ஐந்து என்றருளினர்; பெறும்பயன் சிவப் பேறு ஒன்றுமே, நாலாவது ஆகிய பாசநீக்கம் சிவப் பேற்றுள் அடங்கியதேயாம்.

பரஞானத்தால் பரத்தை தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர்; பதார்த்தங்கள் பாரார்; ஆகலின், துரியசாக்கிரம் இருந்த நிலையிலேயே எஞ்சுதலின்றி எல்லாவற்றையும் ஒருசேர நுகர்தல்; துரியசொப்பனம் நுண்ணுணர்வால் நுகர்தல்; துரிய சுழுத்தி கருவி கரணங்களின் உருவைமட்டும் உணர்தல், அதுவும் கெட்டநிலை துரிய துரியமாம், இந்நாலுங் கெட்ட நிலையே துரியதுரியாதீதம். இதுவே அனாதியை மூட்டும் என்க. முன்னைய ஐந்தும் நந்தின் அனாதியை மூட்டும். நனவாதிமூட்டும்.

'நாலுங் கெட்டான்' என்பது பழமொழி. (321)

பரதுரி யத்து நனவு படியுண்ட
விரிவிற் கனவும் இதனுப சாந்தத்
துரிய சுழுனையு மோவுஞ் சிவன்பால்
அரிய துரியம் அசிபத மாமே. 2443

இ - ள்: பரதுரியத்தின் கண்ணே சாக்கிரத்தில் படிந்து விரியாத காலத்துச் சொப்பனமாம். பரதுரியமே மேலான துரியம். இருந்த நிலையில் உலகினை நுகர்தலே பரசாக்கிரம். அந்நுகர்ச்சியிலே உறுதியான நினைவே

பரசொப்பனம். இத்துரிய நிலைக்கண்ணே உள்ள நினைப்பும் அற்று ஞானமயமாதல் துரிய சுழுனையாம். உபசாந்தம் என்றது ஆழமான கடலைப் போல அலைவும் உலைவுமின்றிக் களிப்போடிருத்தலை என்க. உபசாந்தத் துரியத்தின்கண் உள்ள சுழுத்திநிலையும் நீங்குதல் அரிய துரியமாம். உபசாந்தத்து உரிய சுழுனை எனினுமாம் அரிய துரியம் என்றது பர துரியத்தை. ஓவும் — நீங்கும். கனவும் நனவும் சுழுனையும் ஓவும்துரியம். விரிவு இல் கனவு — காரியப் படும் தத்துவங்களோடு கூடாமை.

" ஆன்மா பேருறக்கநிலை எய்துதலே துரியசாக் கிரம்; அங்கே ஆன்மாவின் துடிப்பு துரியசொப்பனம்: அத்துடிப்பில் பராதீதம் எய்துதல் துரியசுழுத்தி; துடிப்பும் அடங்குதல் பரதுரியம் எனப்படும் பராவத் தையாம் ". இதுவே சிவதுரியம் ஆம் என்க. சிவன் பால் துரியம் என்றது பத்தாவது: அவைகளைக் கடந்த உண்மைநிலை சிவதுரியாதீதம். அசிபதம் ஆம் என்றது சிவமாகின்றாய் என்பது. (322)

## 20 முப்பரம்

தோன்றியென் னுள்ளே சுழன்றெழு கின்றதோர்
மூன்று படிமண் டலத்து முதல்வனை
ஏன்றெய்தி யின்புற் றிருந்தே யிளங்கொடி
நான்று நலஞ்செய் நலந்தரு மாறே. 2444

இ — ள் : உடம்புள்ளபோதே உண்டாகி என் னுள்ளேயே சுழித்தெழுகின்றதாகிய ஒப்பற்ற மூன்று வகையாகவுள்ள மண்டலங்கள் உள்ளன. அவை அக்கினிமண்டலம், சூரியமண்டலம், சந்திர மண்டலம்

என்பனவாம். அக்கினிமண்டலம் மூலம் முதல் நாபி வரையில்; சூரியமண்டலம் நாபிமுதல் கண்டம் வரையில்; சந்திரமண்டலம் கண்டம் முதல் புருவ மத்தி வரையிலாம், அம்மூன்று மண்டலங்களினும் சிவம் விளங்கும். சிவன் சூரியமண்டலத்தில் பிரமனும், சந்திரமண்டலத்தில் விஷ்ணுவும், அக்கினி மண்டலத்தில் உருத்திரனுமாக வீற்றிருப்பார். இவை உடலின்கண் உள்ள மண்டலங்களாம். இளங்கொடியாகிய குண்டலிசத்தி, மூலம் முதல் ஆஞ்ஞைவரையில் உள்ள ஆறு ஆதாரங்களையும் கடந்து மேற்சேர வேண்டும். குண்டலி சத்தியை மூலக்கனலால் வெதும்பி எழும்பச் செய்து தடையாகவுள்ள மூன்று கிரந்திகளையும் பேதித்துப் பிரமரந்திரத்தில் உள்ள பராசத்தியுடன் கூட்டுவித்தல் வேண்டும்.

சுழுமுனை நாடியானது வீணைதண்டம் என்னும் முதுகந்தண்டோடு பிணைந்திருக்கும்; இவ்வுடம்பிலுள்ள மூன்று கிரந்திகளையும் அது வியாபித்து நிற்கும். சோம சூரியாக்கினி என்னும் மூன்று மண்டலங்களும் யோகிக்கு ஒத்து நிற்பனவாம். குண்டலி சத்தியை கிரந்திகளைத்தாண்டி பிரமரந்திரம் வரையிற்கொண்டு போகப் பேரின்பம் விளையும் என்பார். முதல்வனை ஏன்று எய்தி – சிவப்பொருளைத் திருவருள் முகமாக அடைந்து. நான்று நலஞ்செய் இளங்கொடி என்றது சுழுமுனையின் வாயிலை முகத்தால் மூடிக்கொண்டு நித்திரை செய்யும் குண்டலி சத்தியை என்க.

இந்தக் குண்டலி சத்தி கந்தத் தானத்தின் மேல் பாகத்தில் யோகிகளுக்கு மோட்சத்தின் பொருட்

டாகவும் மூடர்களுக்குப் பந்தத்தின் பொருட்டாகவும் நித்திரை செய்கின்றது. நான்று நலம் செய் – கலந்து இன்பத்தைச் செய்யும். இளங்கொடி நலந்தருமாறு ஏ–(சண்டலி சத்தி நன்மையைச் செய்யுமாறு அறிக. (323)

மன்று நிறைந்தது மாபர மாயது
நின்று நிறைந்தது நேர்தரு நந்தியுங்
கன்று நினைந்தெழு தாயென வந்தபின்
குன்று நிறைந்த குணவிளக் காமே. 2445

இ – ள் : மன்றினுள்ளே நிறைந்து விளங்குவதும், மிக மேம்பட்ட பரம்பொருளாயுள்ளதும், நிலைபெற்று, (எள்ளினுள் எண்ணெய் போலவும் பாலினுள் நெய்போலவும்) பூரணப் பொருளாக உள்ளதுமாகித் (தம்மை அன்பினால் வழிபட்டுத் துதிக்கும் மெய்யன்பர்கள்பால்) தோன்றி அருள்செய்யும் நந்தியென்னும் திருநாமத்தையுடைய சிவபெருமானும், ஆன்மாக்களின் பக்குவநிலையை நோக்கிப் பச்சிளங் கன்றை நினைந்து விரைந்து செல்லும் தாய்ப்பசுவைப் போல எழுந்தருளிவந்த பின்பு அவ்வான்மா மலையின் மேல் நிறைந்து ஒளிரும் விளக்கைப்போன்று எண் குணங்களும் தம்மாட்டுப் பதியப்பெற்று விளங்கும் என்றவாறு.

மன்று – கனகசபை; திருச்சிற்றம்பலம். திரு சிறு அம்பலம் – தகராகாசம். இதனை "பிரமபுரமாகிய இச்சரீரத்தில் உள்ள தகரமாகிய புண்டரீக வீட்டினுள்ளே இருக்கும் ஆகாசம்" என்பது முதலாகத் தகரவித்தை சாந்தோக்கியோப நிடதத்திலே கூறப்

பட்டது. இங்கே ஆகாசம் என்றது பிரமமாகிய சிவத்தை என்க. புறத்தும், இவ்வாறே இப் பிரமாண்டம் பிரமபுரம் எனவும், இப்பிரமாண்டத்தி னுள்ளே இருக்கும் தில்லைவனம் புண்டரீக வீடு எனவும், இத்தில்லைவனத்தில் நிருத்தம் செய்யும் சிவம் ஆகாசம் எனவும் கூறப்படும். இவ்வாகாசம் பூதாகாசம்போல் சடமாகாது சித்தேயாம். ஆதலால், சிதம்பரம் எனப்படும். இச்சிதம்பரம் எந்நாளும் நீக்க மின்றி விளங்கும் தானமாதலால் இந்தத் தில்லையும் சிதம்பரம் எனப் பெயர் பெறும்.

சித் + அம்பரம் = சிதம்பரம் ; சித் – ஞானம். அம்பரம் – ஆகாசம்.

தாவரமாகிய அண்டமும், சங்கமமாகிய பிண்ட மும் சமமாம். ஆதலால், பிண்டமாகிய சரீரத்தில் இடைக்கும் பிங்கலைக்கும் நடுவிலுள்ள சுழுமுனை நாடியும், பிரமாண்டத்திலுள்ள இப்பரதகண்டத்தில் இலங்கைக்கும் இமயமலைக்கும் நடுவிலுள்ள தில்லையும், கருணாநிதியாகிய சிவன் ஆனந்த நிருத்தம் செய்யும் ஸ்தானமாம். இதனை, "வலங்கைமான் மழுவோன்", "நாடரு நடுவிஞடி" என்னும் கோயிற்புராணச் செய்யுட்களாலும், "இடம்படு முடம்பின்", "எண்டரு பூதமைந்தும்", "ஆதலால் இந்தவண்டத்" என்னும் வாதவூரடிகள் புராணச் செய்யுட்களாலும் அறியலாம்.

மாபரம் – மிகமேம்பட்ட பரம்பொருள் ; பெரு வெளியெனினுமாம் : வெறுவெளி என்றும் அது பேசப்படும். பிருதிவி முதலிய தத்துவ சமூகங்

களெல்லாம். இறைவனுக்குத் தூலசரீரமும், ஆன்மா சூக்கும சரீரமும், சிவசத்தி அதிசூக்கும சரீரமும் ஆம்; எனவே, ஆகாய சரீரமாம் என்க; ஆகலின், நின்று நிறைந்தது என்றபடியாம்.

'கன்று நினைந்தெழு தாய்என'; "சிவனே சிவனே சிவனேயென் பார்பின், சிவனுமையா ளோடுந் திரிவன் – சிவனருளாற், பெற்றவிளங் கன்றைப் பிரியாது பின் தொடர்ந்து, சுற்று பசுப்போல் தொடர்ந்து" என்பதனால் அறிக.

'வந்தபின்' என்றது; "அருபரத் தொருவன் அவனியில் வந்து, குருபரனாகி யருளிய பெருமையைச், சிறுமையென் றிகழாது" எனவும், "சிவனென யானும் தேறினன் காண்க. அவனெனை ஆட்கொண் டருளினன் காண்க" எனவும் கூறும் திருவாசகம் காண்க. "சுத்த சிவனே குருவாய் வந்து தூய்மை செய்து, அத்தனை நல்கருள்" என்றது திருமந்திரம்.

*"அகளமய மாய்நின்ற அம்பலத்தெங் கூத்தன்*
*சகளமயம் போலுலகிற் றங்கி – நிகளமாம்*
*ஆணவ மூல மலமகல வாண்டனன்காண்*
*மாணவக என்னுடனாய் வந்து",*

*— திருக்களிற்றுப்படியார்.*

'சுணவிளக்கு' என்றது, தன்னுண்மை அறிய மாட்டாது குருடாய்க்கிடந்த ஆன்மாவுக்குப் பலவாற்றானும் அதின் உண்மையைத் தெளிவித்து, எத்தனையும் எளிய அந்த ஆன்மா தன்னை அறிந்து விடத்து முற்றுணர்வு, வரம்பிலின்பமுடைமை

இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, தன்வயமுடைமை, இயற்கை உணர்வினனாதல், தூய மேனியினனாதல் என்னும் எண்குணங்களால் நிறைந்து தன்வண்ணமாகச் செய்தலின் குணவிளக்காய் எங்கும் பிரகாசிப்பன் என்க.

" சர்வஞ்ஞதை, திருப்தி, அநாதிபோதம், அலுப்த சக்தி, அனந்தசக்தி, சுவதந்திரத்துவம், நிராமயான்மா, விசுத்ததேகம் என்பவற்றை யுடையனாய் அவ்வான்மா சிவத்தை அடைகின்றான்" என்று சர்வஞானோத்தராகமம் கூறும். (324)

ஆறாறு தத்துவத் தப்புறத் தப்பரங்
கூறா வுபதேசங் கூறிற் சிவபரம்
வேறாய் வெளிப்பட்ட வேதப் பகவனார்
பேறாக ஆனந்தம் பேணும் பெருகவே. 2446

இ - ள் : ' அருஞ்சைவர் தத்துவமாகிய ஆறாறு தத்துவங்களையும் கடந்து ' தத்துவாதீதனாய் நின்ற அந்தப் பரம்பொருள் உபதேசத்தைச் சொல்லாமல் சொல்லியது; கூறா உபதேசம்-சொல்லாமல் சொல்லல்; என்றது குறிப்பாலுணர்த்துதல் என்றபடி; அதுவே சின்முத்திரையாம். சுட்டுணர்வுக்கு எட்டாது யாங்கணும் பிரிவின்றிச் சமவேதமாய் நிறைந்து, வாக்கிறந்த பூரணமாய் விளங்கும் பதிப்பொருளையும், பசு பாசங்களையும் சின்முத்திரையால் காட்டி உணர்த்திய வாறு. தான் அருளால் உணர்த்தினமையால் கூறாவுபதேசம் கூறியவாறாயிற்று. அவ்வாறு உணர்த்தியதும் அச் சிவபரமேயாம். அச்சிவபரம்பொருளே அருளால்

குருமேனி தாங்கிவந்தது. வேதப்பகவனுர் என்றது சதாசிவ மூர்த்தியை. அக்குருவருளால் கிடைத்தது சிவப்பேறு. அப்பேறு பேரின்ப பரபோகம், பரமானந்த சிவபோகம் ஆம். கிடைத்த சிவபோக பரானந்தத்தைப் 'பெருகப் பேணும்' என்று கட்டளையிட்டருளுவது இத்திருமந்திரம். கிடைத்தற்கரிய பேறு இதுவாம். சிவபோக பரானந்தம் இதுவாமாகலின் பெருகப் பேண வேண்டும் என்றருளினுர். சின்முத்திரை:-

"மும்மலம் வேறுபட் டொழிய மொய்த்துயிர்
அம்மலர்த் தாள்நிழல் அடங்கு முண்மையைக்
கைம்மலர்க் காட்சியிற் கதுவ நல்கிய
செம்மலே யலதுளஞ் சிந்தி யாதரோ."

— திருவானைக்காப் புராணம்.

(325)

பற்றறப் பற்றிற் பரம்பதி யாவது
பற்றறப் பற்றிற் பரனறி வேபரம்
பற்றறப் பற்றினிற் பற்றவல் லோர்கட்கே
பற்றறப் பற்றிற் பரம்பர மாமே. 2447

இ — ள்: பிரபஞ்ச வாசனையாகிய பற்றுக்கள் முழுவதும் கெடுமாறு சிவபெருமானுடைய திருவடிகளைப் பற்றில் அத்திருவடிப்பற்றே மேலான பதிப் பொருளோடு சேர்க்கவல்லதாம். பாசஞானம் பசு ஞானங்கள் முழுவதும் கெட்டொழியுமாறு ஆன்மாக்கள் திருவடிகளைப்பற்றி நிற்கப்பெறின் அந்த அறிவு பரனறிவேயாம்: பரனறிவு—சிவஞானம், பதிஞானம். பிரபஞ்சவாசனை என்னும் மயக்கத்துக்கு ஏதுவாகிய மலவாசனை நீங்கும்படி உண்மையன்பினுல் பரம்

பொருளைப் பற்றவல்லோர்களுக்கே அம்மலவாசனை யாகிய பற்றுக்கழியப் பரம்பொருட் பற்றினுல் ஆன்மாச் சிவமாம் என்றவாறு.

பற்று என்றது பிரபஞ்சப்பற்றை; பிரபஞ்சமுகமாயிருந்து காலங்கழிக்கும் வரையில் பரம்பொருளினிடத்து உண்மைப்பற்று நிகழாது, சிந்தை தெளிவு உருது, கதியும் கூடாது, ஆகலின் பற்றற என்ருர். குருவினருளுபதேசத்தைப் பெற்றும் அவ்வுபதேச வழியில் நின்று அனுபவிக்கும் காலத்துப் பிரபஞ்ச முகமாயிருந்து கொண்டிருத்தலின் உபதேச மொழியால் விளையும் ஆனந்தம் ஒரொருகால் சிறிது தோன்றும். ஆகலின், பற்றறப் பற்றில் பரம்பதியாவது என்றருளினர்.

பிரபஞ்சமுகமாயிருந்து மாயாகாரியங்களில் பற்றுள்ள வரையில் உய்தற்கு இடமில்லை என்று அறிந்து, முதல்வனை அடைக்கலம் என அடைந்தாருக்கே சிவனருள் கிட்டும். அவ்வருளாலேதான் பரனறிவுண்டாகும். முதல்வனைப்பற்றி விசாரிக்கில் அவன் திருவருள் உண்மை தோன்றும். அவ்வருள் தோன்ற அதன் முகமாக அம்முதல்வனை ஆன்மா தலைப்படும்.

'பரம்பற்றற' என்றது பெரிதும் பற்று நீங்க என்றபடியாம்; முழுதும்கெட என்க. பற்றினில் பற்ற வல்லோர் - திருவருள் பற்றினுல் பரம் பொருளைப் பற்றவல்லோர். 'அவனருளாலே அவன்ருள் வணங்கி' என்றமை காண்க. பற்றவல்லோர் என்றது ஆன்மாக்களின் மாட்டாமை கருதியது. பரம்பரமாம் - ஆன்மா சிவமாந்தன்மைப் பெருவாழ்

வெய்தும் எனக்கூறியபடி : " நினையாமல் நினைந்து பவத்தொடக்கை வெல்வாம் " (பரஞ்சோதி திருவிளையாடல் ).

இதனால், பற்றும் பதார்த்தங்களின் மயமாக விளங்குதல் மனத்திற்குரிய தொழிலாகும். மருளைப் பற்றில் மருள்மயமாகவும், அருளைப்பற்றில் அருள் மயமாகவும் மனம் இருக்கும். பிரபஞ்ச முகமாக இருந்து வாளா அலைக்காது. பிரபஞ்சமயமாகச் சார்தலை அறவே விட்டு அருள் மயமாகச் சார்தல் வேண்டும் ; ஆன்மா சார்ந்ததன் வண்ணமுடையது என்பது கருத்து. (326)

பரம்பர மான பதிபாசம் பற்றுப்
பரம்பர மாகும் பரஞ்சிவ மேவப்
பரம்பர மான பரசிவா னந்தம்
பரம்பர மாகப் படைப்ப தறிவே. 2448

இ - ள் : பரம்பரமான பதியைப் பாசம் பற்று(து) ; பாசப் பற்றுப் பரம்பரமாகும் – மிக மேலானதாகவுள்ள பதிப்பொருளைப் பாசம் பற்றாது ; பாசத்தினின்று வீடு பெற்ற ஆன்மா மேலானதாம். பரம் – ஆன்மா. பரம் பரம் - மேலானது. பரம் சிவம் மேவ – ஆன்மா சிவத்தைச்சார. பரம்பரமான பரசிவானந்தம் (ஆம்). மிக மேலாகவுள்ள பரசிவா னந்தம் உண்டாம், பரம்பரமாக அறிவே படைப்பது– அந்தப் பரசிவானந்தத்தை முறையாகச் சிவஞானமே விளைப்பதாம் என்றவாறு.

எனவே, பதி பசு பாசம் என்னும் முப்பொருள் களும் அநாதியாம். பதிப்பொருளைப் பாசம் பற்றாது.

பசு, பாசத்தைப்பற்றும்; பதிப்பொருளையும் பற்றும். பதி சத்துப்பொருள். பாசம் அசத்துப்பொருள், பசு சதசத்துப்பொருள். பாசத்தினின்று நீங்கிய ஆன்மா முத்தான்மா, எல்லாவற்றினும் அதுவதுவாய் நிற்கும் தன்மையுடையது ஆன்மா. ஆகலின் சார்ந்ததன் வண்ணமுடைத்தாம். பாசம்பற்ருத பரமாகிய ஆன்மா பதியின் பற்றுகப் பரம்பரமானது. பரம்பரமாவது வியாபக அறிவைப்பெற்று முற்றுணர்வுடையனுய் மலவாசனை தீர்ந்து பேரின்பவாழ்வைப் பெற்றது. பதி பற்ருகச் சிவமேவப்பெற்றது. " அந்தமிலா ஆனந்தம் அணிகொள்தில்லை கண்டேனே " எனவும், " அந்த மொன்றில்லா ஆனந்தம் பெற்றேன் யாது நீ பெற்ற தொன்றென்பால் " எனவும், " கருப்பஞ் சாற்றினும் அண்ணிக்கும் காண்மினே " எனவும், " உள்ளத் தேறலமுத வொளிவெளி, கள்ளத்தேன்கடியேன் கவலைக் கடல், வெள்ளத் தேனுக்கெவ்வாறு விளைந்ததே " எனவும் வரும் திருவாக்குக்களானு முணர்க.

சிவபெருமான் ஆனந்த குணமுடையவர். சிவா னந்தத்தைச் சீவான்மா அடைந்து ஆனந்த மயமாய், சிவானந்த மயமாய், பரசிவானந்தமாய் விளங்குவான் என்க. (327)

நனவிற் கலாதியா நாலொன் றகன்று
தனியுற்ற கேவலந் தன்னில் தாளுகி
நினைவுற் றகன்ற அதீதத்துள் நேயந்
தனையுற் றிடத்தானே தற்பர மாமே. 2449

இ—ள்: நனவு நிலையிலே கலை முதலாகவுள்ள ஐந்து தத்துவங்களும் செயலின்றி நீங்கத் தனியான

கேவலத்தில் ஆன்மா தான்மாத்திரமாக நின்று பின்பு சாக்கிரநிலையை அடைந்து நீங்கிய சாக்கிராதீதத்தில் நேயப் பொருளாகிய சிவத்தை அடைய அவ்வான்மா தற்பர சிவமாம்; சிவமாந்தன்மைப் பெருவாழ் வடையும் என்க.

கலாதி ஆம் நால் ஒன்று; நாலும் ஒன்றும் என விரிக்க: உம்மைத்தொகை. கலாதி என்றது கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்னும் ஐந்தையும்.

"சாக்கிரம் முதலிய ஐந்தும் கீழ்நோக்கிச் சென்று ஒடுங்கும் முறையும் மேல்நோக்கித் தோன்றும் முறையும் பற்றி இருவகைப்படும். அவற்றுள் ஒடுங்கும் முறையது கன்மார்ச்சிப்புக்கு ஏதுவாகலால் கீழ்ச்செலுத்திப் பிறவிக்கு வித்தாம்; தோன்றும் முறையது கன்மநுகர்ச்சிக்கு ஏதுவாக லால் பரம்பரையில் பிறவியறுத்தற்குக் காரணமாய் மேற்படும். இனி இதயம்முதல் துவாத சாந்தம் ஈறாகிய தானங்களில் புறக்கரணம் உட்கரணங்களைப் பற்றியும் பற்றாதும் பிரத்தியாகாரம் முதல் ஐவகைப்பட்டு நிகழும் யோகாவத்தையும் இதுபோல ஒடுங்கியும் தோன்றியும் அவ்வாறே பயன் தருவ தன்றிப் பிறிதன்று" என்க.

நனவு – சாக்கிரம்; ஐந்தவத்தைகளும் சகலத்தில் கீழாலவத்தை, மத்தியாலவத்தை, மேலாலவத்தை என முத்திறப்படும். அவற்றுள், கீழாலவத்தை கீழ் நோக்கிச் சென்று ஒடுங்கும் முறையும், மேல் நோக்கிச் சென்று தோன்றும் முறையும் என

இருதிறப்படும். கீழாலவத்யில் கீழ் நோக்கி ஒடுங்குதல் 'சகலத்திற் கேவலம்' எனவும் அதில் மேல் நோக்கித் தோன்றுதலும் மேலாலவத்தையில் கீழ் நோக்கித் தோன்றுதலும் 'சகலத்திற் சகலம்' எனவும், மேலாலவத்தையில் மேல்நோக்கி ஒடுங் குதல் 'சகலத்திற் சுத்தம்' எனவும் அறிக.

மேலாலவத்தையில் கீழ்நோக்கித் தோன்றுதல் பிரபஞ்சத் தோற்றத்திற்குக் காரணமாதலால், கீழால வத்தையில் மேல்நோக்கித் தோன்றுதலோ டொக்கும். அவ்வாறாயின், கீழாலவத்தையில் மேல்நோக்குதல் பிறவியறுதற்குக் காரணம் என்றும், மேலால வத்தையில் கீழ்நோக்குதல் பிறவிக்குக் காரணம் என்றும் அறிக. வினைப்பயனை அனுபவித்தலால் பல பிறவிகளைப்பெற்று இருவினை ஒப்பு முதலிய பக்குவ மெய்திப் பரம்பரையில் பிறவியறுமன்றி வினைப்பயனை அனுபவித்த மாத்திரத்தில் பிறவியறாது.

இனி, மேலாலவத்தையும் இருதயம், கண்டம், நாக்கின் அடி, புருவநடு, பிரமரந்திரம் என்னும் ஐந்து தானங்களில் முறையே சாக்கிர முதலாக ஐந்தவத்தைப் பட்டு மேற்சென்று ஒடுங்குதலும், கீழ்நோக்கித் தோன்றுதலும் என இருவகைப்படும். மேல் நோக்கிச் செல்வதாகிய இவ்வைந்தவத்தையும் யோக சமாதிகளால் உண்டாம். இச்சமாதியால் பிரபஞ்ச நாட்டம் குறைந்து, அக்குறைதல் பிறவி அறுதற்குக் காரணமாகும் மேலாலவத்தை ஐந்தும் பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சவிகற்ப சமாதி, நிருவிகற்ப சமாதி என ஐந்து வகைப்படும்.

கலாதி தத்துவங்களும் சுத்த தத்துவங்களும் விட்டு நீங்காமல் சாக்கிரம் முதல் துரியம் வரை உடனுகை வெளிப்பட்டு நின்று துரியாதீதத்தில் அடங்கி நிற்கும். ஆதலால், விட்டு நீங்கும் தத்துவங்களோடு எண்ணுதவாறு அறிக. கலாதிகளும் சுத்ததத்துவமும் இல்லை யாயின் புருடதத்துவம் தோன்ருது. ஆதலின் அதீதத்தில் அவை அடங்கி நிற்பதாம் என்க.

துரியாதீதத்தில் காரண சரீரமாத்திரையே யன்றிக் கஞ்சுக சரீரம் இல்லாமையால் அவ்விடத்துக் கலாதிகள் இல்லை என்பது பெறப்படும். கஞ்சுக சரீரம் இல்லை என்றது கலாதிகள் வேறு நில்லாது புருடனேடு ஒற்றித்து நிற்கும் கருத்துப்பற்றியேயாம்.

கேவலம் என்றது முத்தியை: முத்தியைக் கேவலம் என்றது அறிவோடுகூடிக் கருவிகளின் நீங்குதல்; அறியாமையோடுகூடிக் கருவிகளின் நீங்குதலும் கேவலமே. கேவலம் ஒன்று மில்லாமையையும், சகலம் எல்லா முடைமையையும், சுத்தம் அழுக்கு நீக்கத்தையும் குறிக்கும். ஆதலால் அறிவு முதலியன பிண்டமாய்த் தொழிற்படுதலே அன்றிப் பகுத்துத் தொழிற்படுவதற்கான கருவிகள் இல்லாத நிலையைக் கேவலம் என்றும், கருவிகளுடன் கூடிய நிலையைச் சகலம் என்றும், கருவிகளும் மலமுமாகிய அழுக்கு நீங்கிய நிலையைச் சுத்தமென்றும் காரணக் குறியாய் வகுத்தவாறு அறிக (328)

தற்கண்ட தூயமுந் தன்னில் விலாசமும்
பிற்காணுந் தூடணந் தானும் பிறழ்வுற்றுத்
தற்பரன் கால பரமுங் கலந்தற்ற
நற்பரா தீதமு நாடக ராதியே. 2450

இ-ள்: ஆன்மா திருவருளால் வாசனுமலம் நீங்கிச் சுத்தியாதற் பொருட்டுச் சிவதரிசனம் பண்ணியது. அதன்மேலும் ஏகனுகி நிற்றலால் அம்மல வாசனை நீங்கிச் சிவானந்தத்தை அனுபவித்தல் கூடும். தூல அறிவாகிய உயிரும் சூக்கும அறிவாகிய சிவமும் ஓரிடத்தில் உள்ளனவாம். அவைகளுக்குள் தூல அறிவாகிய உயிர், சூக்கும அறிவாகிய சிவத் தைக் காணுதலும், சூக்கும அறிவாகிய சிவம் தூல அறிவாகிய உயிர்க்குக் காட்டுதலும் ஆகிய சம்பந் தத்தை உடையன என்று கொள்ளுதலும் உயிர்முதல் முதல்வனேடு அத்துவிதமாய்க் கலந்து நின்று அறியும் எனக் கொள்ளுதலும் ஆம். உயிர் சிவஞானத்தினுல் சிவனை அறிந்தால் சிவமயமாக நின்று தன்னையும் அறியும்.

தற்கண்ட தூயம் - ஆன்மா தன்னைக்கண்ட பரி சுத்தநிலை: பசுகரணம் ஒன்றுந்தோன்றாது சுட்டறிவும் நீங்கித் தன்னை உள்ளவாறு காண்டலாகிய ஆன்ம தரிசனமாம். தூயம் - நின்மலத்துவம்.

சிவபெருமான் ஆசாரியராக எழுந்தருளி உபதே சிப்ப, ஆன்மா அத்னைக்கேட்டுப் பின் சிந்தித்தல் வாயிலாகப் புலன்களின் வழியே சென்ற இழிவை நீக்கிச் சுத்திசெய்தலே ஆன்மசுத்தியாம்.

சிவதரிசனத்தில் நிகழ்வது ஆன்மசுத்தி; சிவ ரூபத்தில் நிகழ்வது ஆன்மதரிசனம். திருவருள் செய்யும் கிருத்தியத்தை ஆன்மா செய்யாது என்று திடமாய் அறிந்து நிற்றல் சிவதரிசனம். சூரிய கிரணத்தைப் பொருந்தின் கண் சூரியனுகாதவாறு போல, திருவருளைச் சேர்ந்த ஆன்மா அத்திருவருள்

செய்யும் பஞ்ச கிருத்தியத்தைத் தான் செய்யவேண்டு மெனல் கூடாது என்று உணர்ந்து தற்போத நிகழ்ச்சி யின்றித் திருவருளில் அழுந்தாது சேர்தல் ஆன்ம சுத்தி. இது ஞானத்துக் கிரியையாம்; சிந்தித்தல் ஞானமுமாம்.

ஞானாசாரியர் முகமாக ஆன்மாவானது திரு வருளைத் தரிசித்து, அத்திருவருள் உபகாரத்தால் தான் தத்துவங்களுக்கு மேலானேன் என்று நிற்றல் சிவ ரூபம்; இந்தச் சிவரூபத்தினுல் ஆன்மாவானது தனக்கு உயிராயுள்ளது திருவருள் என்று அறிந்து நிற்பது ஆன்மதரிசனம்.

தன்னில் விலாசம் – " தன்னுலே தனை அறிந்தால் தன்னையுந் தானே காணும் தானது வாகி நின்றே " என்றருளினர் ஸ்ரீ உமாபதிதேவநாயனுர். அதாவது உயிர் சிவஞானத்தினுல் சிவனை அறிந்தால் சிவமய மாக நின்று தன்னையும் அறியும் என்பது. ஸ்ரீ பட்டி னத்துப் பிள்ளையார்: " என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன், நின்னிலை அனைத்தையும் கண்டேன் என்னே, நின்னைக் காணுமாந்தர், தம்மையுங் காணுத் தன்மை யோரே " அஃதாவது எம்பெருமானே! நின்னுடைய நிலையைக்கண்டேன், அதனுல் நின்னுடைய வடிவமாய் நின்ற என்னையும் கண்டேன், அங்ஙனமே நின்னுடைய வடிவமாக நின்ற பிறரையும் கண்டேன். ஆதலால், நின்னை அறியாதவர்கள் தம்மையும் அறியாதவர்கள் ஆவார்கள் என்று திருவிடைமருதூர் மும்மணிக் கோவையில் கூறி அருளியமையும் காண்க.

விலாசம் – விரிவு. வியாபகம்.

பிற்காணும் தூடணம் — பின்னே காணப்படும் தத்துவ தாத்துவிகங்களின் நீக்கம்; மாயா கருவிகளை என்க.

மலநீக்கம் ஞானத்தை யின்றியமையாது: “ஞானந்தான் உதிப்பினல்லான் யானெனதிங் கொழியாது” என்றமை காண்க. காண்பானும் காட்சியும் காணப்படு பொருளுமாக இறைவனைத் தரிசிக்குங் கால் மாயாகருவிகள் நீங்கப்பெறுதோ எனின், பெறாது. மாயாகருவிகள் சிவகருவிகளாக மாறித் தரிசித்தலேயன்றி நீங்கினது இல்லை. சிவகருவி என்பது சிவத்தின்வழிச் செல்லும் கருவியாம். நீங்காமைக்கு ஏது என்னை? எனின், ஆணவமலம் நீங்கப்பெற்றும் அம்மலத்தின் வேர் அறுக்கப் படாமையே. வேர் என்பது பற்று எனப்படும். மலம் அறியாமையைச் செய்யும். பற்று செருக்கைச் செய்யும். அப்பற்றறுதி இறைவனைப்பற்றி ஒற்றித்து நிற்றலினாலுண்டாம். இப்பற்றையே திருவானைக்காப் புராணத்தில் ஸ்ரீ கச்சியப்ப முனிவர் “வன்மலவேர்” என்று அருளினர். மலத்திற்கு அன்னியமாப்பற்று என்பதொன்றுண்டு என்பதை ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள் “அநாதியே மலத்தைப்பற்றுதல் உயிரின் வினையென” சிவஞான போதச் சிற்றுரையில் அருளிச் செய்தனர். “பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்” எனவும், “பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு” எனவும் திருவள்ளுவ நாயனார் அருளியமையும் கருதுக.

தூடணம் தானும் பிறழ்வுற்று — தத்துவக் கூட்டங்களை விட்டு நீங்கித் தான் முன்னே உள்ள

கட்டு நிலையினின்றும் மாறி என்க. நிலைமாறுத லாலது பொய்ம்மையாகிய மாயாகாரியங்கள் யாவும் மெய்யென நினைந்து நின்ற அவதியினின்று நீங்குதல். அப்பிறழ்வினால் கிடைத்த பயன் தற்பரனும் கால பரமும் ஆகிய சிவத்திற் கலத்தல். தற்பரன் — தனக்குத் தானே பரனாயுள்ளான். ஆன்மாவாகிய தனக்குப் பரனாயுள்ளான் எனினுமாம். அப் பெருமானே காலபரம்; காலத்தைக் கடந்தவன்.

பிறழ்வுற்று அற்ற — நிலைமாறி அழிந்தன. நல் பராதீதமும் ஆதி நாடு அகர் — சிறந்த பரத்தில் அதீத மும் ஆகிய ஆதியை நாடுகின்ற அகத்தினையுடைய ராவர் என்க. (329)

## 21. பரலட்சணம்

அதீதத்து ளாகி யகன்றவன் நந்தி
அதீதத்து ளாகி யறிவிலோன் ஆன்மா
மதிபெற் றிருள்விட்ட மன்னுயிர் ஒன்றும்
பதியிற் பதியும் பரவுயிர் தானே. 2451

இ — ள்: நின்மல துரியாதீத நிலைக்கண் அறிந்து அநுபவிக்கப்படும் பொருளாயுள்ள நந்தி என்னும் நாமத்தையுடைய சிவபரம்பொருள் வியாபகமுடைய வன். ஆன்மா அறிவு முதலியன இன்றி மலத்தால் மறைக்கப்பட்டுத் தொழிற்பாடின்றிக் கிடக்கும் நிலை அதீதம்: ஆதலின் அறிவின்றிக் கேவலாதீதத்தில் ஆன்மா அழுந்தி நிற்பன் என்க.

மதி பெற்று இருள்விட்ட மன்னுயிர் — அறிவு பெற்று இருளினின்று நீங்கிய நிலைபெற்ற ஆன்மா,

மதி பெறுதலாவது: கேவலாதீதத்தில் அறியாமையோடு கூடிக் கருவிகளின்றிக் கிடக்கும் ஆன்மா அந்நிலையினின்று சிறிது எழுச்சி உண்டாதல் துரியம். எழுச்சி உண்டாகியும் துன்பம் தோன்றாதிருத்தல் சுழுத்தி. துன்பந்தோன்றுதல் சொப்பனம். துன்பத்திற்கு வருந்துதல் சாக்கிரம். இவ்வாறு கேவலத்தில் ஐந்தவத்தையும் காண்க.

இச்சா ஞானக் கிரியாசத்திகள் இருத்தலால் கருவிகள் இல்லாத நிலையில் துன்பம் தோன்றுதலும் துன்பத்துக்கு வருந்துதலும் கூடும். கருவிகளோடு கூடின நிலையில் உண்டாகின்ற வருத்தத்திற்கும், கருவிகளோடு கூடாதநிலையில் உண்டாகும் வருத்தத்திற்கும் உள்ள வேறுபாடுகள்; காரணந்தெரிந்து வருந்துதலும், காரணந்தெரியாது வருந்துதலுமாகும்.

இதனை ஓர் உதாரணத்தில் வைத்துக் காணலாம், சிசுப் பருவத்தில் பசியினால் வருந்தும் வருத்தமும், முதிர்ந்த பருவத்தில் பசியினால் வருந்தும் வருத்தமும் போலாம். சிசு துன்பத்திற்கு ஆற்றாது வருந்துமே அன்றி அத்துன்பம் பசியினால் வந்ததென்றறியாது: பருவம் வந்தபின் துன்பமும் துன்பத்திற்குக் காரணமும் அறியப்படும். இவ்வாறே கருவிகளோடு கூடாத நிலையினையும், கூடின நிலையினையும் கண்டுகொள்க.

ஆன்மா ஆணவமலத்தோடு கூடிநிற்கும் நிலையே கேவலமாம்; அது தன்னுண்மை.

இனி, கேவலாவத்தையைப் பொருந்தி நின்ற ஆன்மா உடம்பினைப்பெற்றும், கலாதி தத்துவங்களோடு கூடியும், தருமம் முதலிய புத்தி குணங்களைப் பொருந்தியும், மனம் முதலிய கருவிகளைக் கூடியும்,

இச்சையுற்றும், வாக்குக்களால் நிகழும் அறிவுற்றும், செயல்களைப் பொருந்தியும், சத்தாதி விடயங்களில் விருப்பம் செய்தும், போகத்தை அனுபவித்தும், பிறப்பு இறப்புக்களில் புகுந்து திரிந்தும், ஏகதேசி யாகியும் சகலாவத்தையில் இப்பத்துக் காரியமும் உடையனுய்ச் சீவித்து நிற்கும்.

கலாதியைப் போககாண்டம் என்றும், புத்தி யாதியைப் போக்கிய காண்டம் என்றும் கூறுவர்.

ஆன்மா கருவிகளுடன் கூடிய நிலையே சகலமாம்.

இனி, சகலாவத்தையில் நின்ற ஆன்மா அந்த நிலையைவிட்டு இருவினையொப்பு வந்து சிவசத்தி பதியப் பெறுதலால் குருவருளைப் பெற்று, ஞான யோகத்தைப் பொருந்தி, மும்மலங்களையும் நீக்கி, விடய அனுபவத்திற்கு ஏதுவாகிய விருப்பு வெறுப்பு என்னும் பழைய வாதனையும் நீங்கி, சிவஞானத் தைப் பெருக்கிச் சிவபெருமானுடைய திருவருளை அடைந்து நிற்கும்.

இருவினையொப்பால் சத்தாதி விடயத்தைப் பற்றிய செயல் நீக்கமும், சத்தி பதிதலால் கருவி களின் கூட்ட நீக்கமும், குருவருள் பெறுதலாந் தானஞ்செய்தல் காரணமாக உடம்பு நீக்கமும், ஞானயோகம் பெறுதலால் பிறப்பு இறப்பு நீக்கமும், மலம் அறுதலால் ஏகதேசத்தன்மை நீக்கமும், விருப்பு வெறுப்பு நீக்கத்தால் விடயானுபவ நீக்கமும், சிவஞானப் பெருக்கால் விடயஞான நீக்கமும் உண்டாம். விடயஞானம் என்றமையால் விடய

இச்சை செயல்களும், கருவி என்றமையால் போக காண்டமாகிய கலாதிகளும் நீங்கும் என்க.

சத்தி நிபாதத்துக்கு மூலம் மலபரிபாகம்; இருவினையொப்புக்கு மூலம் சிவபுண்ணியமாம்.

இருள் – அறியாமை. இருண்மலம் – ஆணவ மலம். பரஞானத்தைப் பெற்ற பொழுதே சிவம் பிரகாசிக்கும்.

இருள் விட்ட மன்னுயிர் என்றது ஆணவமல சத்தி வறுத்த வித்துப்போல் நீங்க, நிலைபெற்ற ஆன்மா என்க. மெய்ஞ்ஞானத்தால் மலம் சிறிது சிறிதாக நீங்கப்பெற்று, சிவம் பூரணமாய்ப் பிரகாசித்த விடத்து மலம் பற்றறக்கழியும். இங்கே கூறியது மலம் பற்றறக் கழிந்த ஆன்மாவையே யாம்.

ஒன்றும் பதியில் என்றது பதிப்பொருள் ஒன்றே, இரண்டில்லை; வேதம் ஏகம் என்று கூறியது, அதற்குப் பொருள் ஒன்று என்பதேயாம்; வேறு பொருள்படாது. "ஒன்றென்ற தொன்றே காண் ஒன்றே பதி"; "வேதம் ஒன்றென்றதற்குப் பொருள் ஒன்றென்பதேயாம். வேறு பொருள்படாது. அதற்குத் தாற்பரியம் பதிப் பொருள் ஒன்றே; இரண்டில்லை என்பதாம்" (சிவஞான போதச் சிற்றுரை). அதிகாரஞ்செய்து நிற்பது பதி, அதிகாரத்தின் ஒழிந்து தன்னியல்பில் நிற்பது சிவமாம்.

பரவுயிர் தானே பதியும் – முத்திக் காலத்திலே எண்குணங்களால் நிறைந்த சீவன், சிவமாந்தன்மைப்

பெருவாழ்வுற்று இவ்வியல்பிற்று எனப் பிரித்தறிய வாராமையின் பேரின்ப சுகத்தில் அழுந்தும் எ – று.

ஆனந்த சொரூபமாய் நிற்பன் என்க.

மற்றும், ஆனந்த சொரூபமாய் நிற்கச்செய்தல் நின்மல துரியாதீதம்; இது சிவபோகம் எனப்படும்; " உயிர்தானும் சிவாநுபவம் ஒன்றினுக்கு முரித்தே " என்றருளினர் ஸ்ரீ அருணந்திதேவநாயனார். (330)

**ஆதியும் அந்தமும் இல்லா வரும்பதி**
**சோதிப் பரஞ்சுடர் தோன்றத்தோன் ருமையின்**
**நீதிய தாய்நிற்கும் நீடிய வப்பர**
**போதம் உணர்ந்தவர் புண்ணியத் தோரே. 2452**

இ – ள் : ஆதியும் அந்தமும் இல்லா அரும்பதி என்றது சிவபெருமானை, அப்பெருமான் சோதிப் பரஞ் சுடர். நல்லார்க்கு அப்பரஞ்சுடர் தோன்ற, நல்லார் அல்லார்க்குத் தோன்றாமையின் அப்பொருள் உள் பொருளேயாம், இல்பொருளன்றாம். அது நீதி வடி வானது, நிலைபெற்றது, நீதி – அறம். நீதியது: அது பகுதிப்பொருள் விகுதி. நீதியாய் நிற்கும் என்றமை யால் ஞான சொரூபமாய் நிற்கும் என்றபடி. அப்பரம் பொருள் ஞானசொரூபமானது. எனவே அதனைக் காணும்பேறு சிவஞான முடையாருக்கே யாகும். ஆகலின், ' அப்பரபோதம் உணர்ந்தவர் ' என்றார். இதனை. " பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர் " எனவும், " திருஞான மிவையெல்லாங் கடந்த சிவஞானம் ஆதலால் சீவன் முத்தர் சிவமே கண்டிருப்பர் " எனவும் கூறிய வாற்றானும் அறிக.

பரபோதம் – சிவஞானம். உணர்ந்தவர் என்றார். அறிதல்வேறு, உணர்தல்வேறு. அறிதல் அறிவின் தொழில்; உணர்தல் – அனுபவம். புண்ணியத்தோர்: " என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே " என்ற திருவாக்குக் காண்க. (331)

துரியங் கடந்து துரியா தீதத்தே
அரிய வியோகங்கொண் டம்பலத் தாடும்
பெரிய பிரானைப் பிரணவக் கூபத்தே
துரியவல் லார்க்கு துரிசில்லை தானே. 2453

இ – ள் : பாச நீக்கமாகிய நின்மல துரியநிலையைக் கடந்து, சிவப்பேறாகிய நின்மல துரியாதீதத்திலே போக்குதற்கரிய பாச நீக்கத்துடன் ஆன்மா பரனிறைவில் அடங்கிப் பரநடனைந்தஞ் செய்யும் தம்பிரானாரை ஓங்கார வட்டத்திலே துருவிக் காண வல்லதாம். அவ்வாறு துருவிக் காணும்பேறு பெற்றோருக்கு எவ்வகைப்பட்ட குற்றமுமில்லையாம் (எ – று).

துரியம் – நின்மல துரியம்: அது பாசநீக்கம். துரியாதீதம் - நின்மல துரியாதீதம்; அது சிவப்பேறும். சிவப்பேறு என்பதே முத்தி எனப்படும். முத்தி என்பது விடுதல். விடுதற்குச் செயப்படுபொருள் பாசம்: ஆயினும், சிவத்தைப் பற்றி நின்றே விடல் வேண்டும். சிவப்பேறே தலைமையான முத்தி. அம் முத்தியும் பரமுத்தி சீவன் முத்தி என இருதிறப்படும். பரமுத்தியாவது: பரனாகவே பேதமறநின்று பாசத்தை விடுதல். சீவன் முத்தியாவது: சீவனாகி நின்றும் சிவானுபவ மேலீட்டால் பாசத்தை விடுதல். அஃதாவது சீவத்தன்மையைச் செய்வதாகிய பாசத்தை இழந்து நிற்றல்.

" தேகவியோக காலத்தில் (ஆன்மாவானது) சிவானந்தத்தோடு ஒரே இரசத்தை அடைக" என்று இரௌரவ ஆகமம் கூறுகின்றது என்பர். அங்ஙன மாகவும் " முடிவிலாத சிவபோக முதிர்ந்து முறுகி விளைந்ததால் " என்று சுந்தரமூர்த்தி நாயனுரை நோக்கிக் கூறப்படலால், அச்சிவபோக நிலையை அடைந்தவர் சுந்தரமூர்த்தி நாயனுராவார்.

" உணர்வு நேர்பெற வருஞ் சிவபோகத்தை ஒழி வின்றி யுருவின்கண், அணையு மைம்பொறி யளவினு மெளிவர வருளினை எனப்போற்றி "; " ஐம்புலன் வாயிலாக எய்தும் காமம் வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றங்களும் அலைவுபட்டு ஓடுமாறு, நிலைப்பட்ட மெய்யுணர்வானது தலைப்பட்டவிடத்து வரும் பரமானந்த சிவபோகத்தை (இப்போது) இடை யீடின்றி (உமது) சபா நடராஜ திருவுருவின்கண்ணே செல்லும் ஐம்புல அளவிற்கும் எளிதாக வாய்க்குமாறு அருள்செய்தீர் " என்று திருஞான சம்பந்தமூர்த்தி நாயனுர் அருளிச் செய்ததாகப் பெரியபுராணம் கூறும்.

சிவயோகத்திலே ஆன்மா அருளால் நிற்குங்கால் அதற்கு மேலாகிய ஞேயம் தோன்றும். அந்த ஞேயத் தைப் பொருந்தித் தான் தோன்ருமல் இரண்டறக் கலந்து நிற்பதுவே சிவபோகமாம். இதுவே ஞானத்து ஞானம் எனப்படும் சமாதிப் பரமுத்திநிலை என்பர். இது ஆன்மலாபம் எனவும் படும்.

அம்பலத்தாடும் பெரியபிரான் — ஸ்ரீ நடராசப் பெருமான். அம்பலம் - பொன்னம்பலம். திருச்சிற்றம் பலம், தகராகாசம். " சிற்பர வியோம மாகும் திருச் சிற்றம்பலத்து ணின்று. பொற்புடன் நடஞ்செய்

கின்ற பூங்கழல் போற்றி போற்றி " என்றருளிய மையும் காண்க. இந்த நடனம் பஞ்சகிருத்திய தாண்டவமாம். பரமானந்த தாண்டவமெனினுமாம்.

ஓங்கார வட்டமாகிய பிரணவ கூபத்தினுள்ளே ஆடுதல் காண்க. பிரணவம்; அகார உகார மகார விந்து நாதங்கள்: இஃது ஐங்கலைப் பிரணவமாம். அகார உகார மகாரம் முக்கூற்றுப் பிரணவம். (332)

" பரையிடமாய் நின்றுமிகு பஞ்சாக் கரத்தால்
உரையுணர்வுக் கெட்டா வொருவன்-வரைமகடான்
காணும் படியே கருணையுருக் கொண்டாடல்
பேணுமவர்க் குண்டோ பிறப்பு. "

[ உண்மைவிளக்கம் ]

செம்மைமுன் னிற்பச் சுவேதந் திரிவபோல்
அம்மெய்ப் பரத்தோ டணுவனுள் ளாயிடப்
பொய்ம்மைச் சகமுண்ட போத வெறும்பாழிற்
செம்மைச் சிவமேரு சேர்கொடி யாகுமே. 2454

இ - ள் : செம்மை என்றது கந்தகத்தை: சுவேதம் என்றது பாதரசத்தை: இது சித்தர் பரிபாஷையாம். கந்தகம் மஞ்சள் நிறம் என்பதை நாம் அறிவோம். சுவேதம் – வெண்மை. பாதரசம் வெண்மை நிறம். கந்தகத்தின் முன்னே பாதரசம் மாறுதலடையும்; வேறுபடும். அந்த மெய்ம்மையான பரம்பொருளுடன் ஆன்மாவானது சிவமாந்தன்மை யடைந்து இரண்டறக் கலத்தலால் பொய்ம்மையாகிய பிரபஞ்ச உணர்ச்சி வெறும்பாழாம். பாழ் என்றது போதப் பாழ், சீவப் பாழ், சிவப்பாழ் என்பன. சகம் உண்ட போதப்பாழ் –

பிரபஞ்சத்தால் உண்ணப்பட்ட (விழுங்கப்பட்ட) போதப்பாழ் என்க. போதப்பாழாவது தத்துவ ரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி என்பன: இவற்றை யறிந்து நீங்குதலே போதப்பாழாம். அசுத்தம் மிச்சிரம் சுத்தம் என்னும் மூவகைப் பிரபஞ்சத்தினின்றும் நீங்குமிடத்து ஆன்மா வியாபகத்தைத் தலைப்பட்டு முனைந்தடங்கலும், அருளிற்றலைப்பட்டு ஐந்தொழில் செயக்கருதித் துவளலும், அவ்வருளில் வியாப்பிய மாய் அடங்கலும் என்பன மூவகைப் பாழ் என்பர்.

இம்மூவகைப் பாழின்மேலே விளங்குவதாகிய அத்துவித சம்பந்தமாய முழுப்பாழாகவுள்ளது ஆனந் தாதீதம். செம்மைச் சிவம் – "முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய், அப்பாழும் பாழென் றறி" என்ற விடத்துள்ள வெறும்பாழாம். அச்சிவத்தைச் சார்ந்த அணுவன் மேரு சேர் கொடியாகும் – மேரு மலையைச் சார்ந்த கருங்காக்கையும் பொன்னிறமாம்; அதுபோல், சிவத்தைச் சார்ந்த ஆன்மா எண்குணங் களும் தம்மாட்டுப் பதியப் பெற்றுச் சிவமாந் தன்மைப் பெருவாழ் வெய்தும் என்க; செம்மைச் சிவமாம் என்றவாறு.

"பனிமாலிமயப், பொருப்பகஞ் சேர்ந்த பொல் லாக் கருங் காக்கையும் பொன்னிறமாய், இருக்கு மென்றிவ்வா றுரைக்குமன் றேயிவ் விருநிலமே" (யாப்பருங்கலக் காரிகை – பாயிரம் 3). (333)

**வைச்ச கலாதி வருதத்து வங்கெட**
**வெச்ச இருமாயை வேருக வேரறுத்**
**துச்ச பரசிவ மாமுண்மை யொன்றவே**
**அச்சம் அறுத்தென்னை யாண்டனன் நந்தியே. 2455**

இ – ள் : வைச்ச கலாதி வருதத்துவம் கெட – அநாதி கேவலத்தில் ஆன்மாக்களெல்லாம் ஆணவ மலத்தால் மறைப்புண்டு கிடக்கும். மலத்தின் சத்தி கள் பல. ஆதலால் மறைப்பும் பல வேறுவகைப் படும். அங்ஙனம் மறைப்புண்டு கிடக்கும் ஆன்மாக் களுக்கு மலநோயைத் தீர்க்கச் சிவபெருமான் திருவுளங் கொண்டருளுவர். அவ்வாறு மலநோயைத் தீர்க்கத் திருவுளங்கொண்டருளுங் காலத்துக் கன்ம மலம் மாயா மலங்களைக் கூட்டாமலே விசேட ஞானத்தால் ஆணவமலத்தை நீக்கியருளுவர். விசேட ஞானமாவது பதிஞானம்; அது பாசஞானம் பசு ஞானங்களின் மேம்பட்டதாகலின் விஞ்ஞானம் எனப்படும். இப் பதிஞானத்தை இறைவன் அறிவினுள் அறிவாய் நின்று உணர்த்துவர். அவ்வாறு உணர்த்துவதற்குக் கலை முதலிய தத்துவங்களால் ஆக்கப்படும் சரீரமும் புவனமும் இன்றியமையாது வேண்டப்படும். ஆகலின், சுத்த மாயா காரியங் களாகிய 'கலாதி தத்துவங்களால் ஆக்கப்பட்ட' சரீரத்தைக்கொடுத்து முத்தி அடைவிப்பர். இவர்கள் விஞ்ஞானகலர் எனப்படுவர். இவ்வான்மாக்கள் ஆணவமலபந்தம் ஒன்றே உடையவர்; ஒருமல முடையார். கலாதி தத்துவங்களைப் பெற்றும் பதி ஞானத்தால் அத்தத்துவங்களில் கட்டுப்படாது அசுத்தமாயைக்கு மேல் வைகுவர். எடுத்த பிறவியை யன்றி இவருக்கு வேறு பிறவி கிடையாது.

இனி, கன்மமலத்தைக் கூட்டி ஆணவமலத்தை நீக்குதற் குரிய ஆன்மாக்களுக்கு அசுத்த மாயா காரியமாகிய கலாதி தத்துவங்களால் ஆக்கப்பட்ட சரீரத்தைக் கொடுத்து, அவ்வசுத்த மாயையின்

மத்தியில் வைகும்படி செய்து. பிரளயத்தில் இறைவன் தடத்தத் திருமேனிகொண்டு முன்னின்று அருள்செய்வர். இவருக்குப் பிரளயத்தின்பின் பிறவி இல்லாமையால் பிரளயாகலரெனப் பெயராயிற்று. இவர், ஆணவம் கன்மம் என்னும் இருமல முடையார்.

இனி, கன்மமலம் மாயாமலங்களைக் கூட்டி ஆணவ மலத்தை நீக்குதற்குரிய மறைப்பினையுடைய ஆன்மாக்களுக்கு அசுத்த மாயாகாரியமாகிய கலாதி தத்துவங்களால் ஆக்கப்பட்ட சரீரத்தைக் கொடுத்துப் பிரகிருதி மாயையில் வைகும்படி செய்து பக்குவம் வந்த காலத்து இறைவன் குருமூர்த்தியாய்த் தோன்றிநின்று அருள் செய்வர். இவர், ஆணவம் கன்மம் இரண்டுடனே மாயாமலமுமுடையர். ஆக லின், மயக்கத்தினால் பிரளயம்வரை பல பிறவிகளை எடுத்து. பிரளயத்தில் கலாதிகளுடன் ஒடுங்கிக் கிடந்து புனருற்பவம் ஆகுங்கால் மீண்டுந்தோன்றி இவ்வாறே பிறப் பிறப்பினுட்பட்டு உழல்வர். ஆகலின், சகலர் எனப்படுவர். இவர் ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலமுடையார்.

இங்கே 'வைச்ச கலாதி' என்றமையால் கலாதி களுடன் ஒடுங்கிக் கிடந்தமை சித்திக்கும் 'கலாதிவரு தத்துவம்' என்றமையால் புனருற்பவம் என்பது சித்தித்தது.

முதலுற்பவம் வருமாறு உணர்த்தாது புனருற் பவம் வருமாறு உணர்த்தினர். "பிரபஞ்சம் அநாதி ஆகலின், அம்முதற்கோடி நம்மனோரான் அறிய வாராமையானும், ஒடுங்கியின் மீள உளதாமாறே

ஈண்டு அவாய் நிலையான் உணர்த்த நின்றதாகலானும் அதுவே கூறினு ரென்பது" ... " விச்சதின்றியே விளைவு செய்குவாய்" எனவும், " விண்ணும் மண்ணக முழுதும் யாவையும் வைச்சு வாங்குவாய்" எனவும் ஓதிய திருவாக்கானும் இவ்விருவேறு வகையும் கண்டு கொள்க" என்று ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் தமது பாடியத்தில் அருளிச்செய்தமையும் கருதுக.

'கலாதி வரு தத்துவம்' காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்பன; இவை வித்தியாதத்துவங்கள் ஏழாம். கேவலத்தில் அறிவு இச்சை செயல்கள் விளங்கப்பெறாது நின்ற ஆன்மா, மாயையில் கலக்குண்ட பாகத்தைப் பொருந்திய பொழுது அவ்வறிவிச்சை செயல்கள் பொதுவகை யால் விளங்கப்பெற்ற காரண சரீரம் உண்டாம்; அது ஆனந்தமய கோசமாம்.

அதன்பின் கலை முதலிய ஐந்து தத்துவங்களாகிய கஞ்சுக சரீரத்தைப் பொருந்தி அறிவு இச்சை செயல் கள் சிறப்புவகையால் விளங்கப்பெற்றுக் கஞ்சுக சரீரத்தைப் பொருந்தும்; அது விஞ்ஞானமய கோசமாம்.

அதன்பின் குண சரீரத்தைப் பொருந்தி அந்தக் கரணத்தின் தன்மை விளங்கப்பெறும்; அது மனோமய கோசமாம்

அதன்பின் சூக்கும சரீரத்தைப் பொருந்தி பிராண வாயுவின் சம்பந்தம் பெற்று விளங்கும்; அது பிராணமய கோசமாம்.

அதன்பின் தூல சரீரத்தைப் பொருந்தும்; அஃது அன்னமய கோசமாம் என்க.

கெட - ஒடுங்க; எனவே, தோற்றிய முறையிலே ஒடுக்கத்தைச் செய்ய; இத்தத்துவங்கள் கெட.

எச்ச இருமாயை வேறாக வேராறுத்து – எஞ்சி நின்ற சுத்தமாயை, பிரகிருதி மாயை என்னும் இரண்டு மாயைகளையும் வேறாகச் செய்து பின்பு முளைக்காதபடி வேரினைக் களைந்து; எனவே அடியோடு விட்டு நீங்கி என்றவாறு. இதனை விட்டு நீங்குதல் திருவருள் துணையாகவே செய்தல் கூடும். அவ்வாறு அடியோடு தத்துவக் கூட்டங்களை விட்டு நீங்கவே மிக மேலாகிய சிவமாந்தன்மைப் பெரு வாழ்வு உண்டாகும். ஆகலின் ' உச்ச பரசிவம் ஆம்'' என்று அருளினார். அந்த உண்மையினை நன்குணர்ந்த ஆன்மா பொய்ம்மையாகிய மாயா காரியங்களை விட்டு நீங்கி மெய்ம்மையாகிய சிவப் பொருளுடன் ஒன்றும் ஆகலின் ' உண்மை ஒன்ற ' என்றார். பரசிவமாகிய மெய்ப்பொருளுடன் ஒன்றுதலினால் நந்தி என்னும் நாமத்தையுடைய இறைவன் பிறப்பு இறப்புக்கள் உண்டாம் என்று அஞ்சுகின்ற தன்மையைப்போக்கி ஆன்மாவாகிய என்னை ஆட்கொண்டருளினான். நான் மீளா அடிமை, அவன் ஆட்கொண்டருளினான். நான் முத்தி நிலையிலும் அப்பெருமான் செய்த பேருபகாரத்தை நினைந்து அடிமையாய் நின்று வழிபடுவேனாக என்பது எஞ்சி நின்றது.

' உயிர்தானும் சிவானுபவம் ஒன்றினுக்கே உரித்து ' ஆகலின் ' உச்ச பரசிவமா முண்மை

யொன்ற ஆண்டனன், அச்சமறுத்து ஆண்டனன்'; "தன்னை அறிவித்துத் தான் தானுச் செய்தான்" (334) நந்தி என்றவாறு.

என்னை யறிய இசைவித்த என்னந்தி
என்னை யறிந்தறி யாத விடத்துய்த்துப்
பின்னை யொளியிற் சொரூபம் புறப்பட்டுத்
தன்னை யளித்தனன் தற்பர மாகவே. 2456

இ-ள்: என்னை அறிய இசைவித்த என் நந்தி - ஆணவமலப் பிணிப்பால் கேவலநிலையிலிருந்த ஆன்மாவாகிய என்னை ஆணவமலப் பற்றறுதற் பொருட்டுக் கருவிகரணங்களைக் கொடுத்துச் சகல நிலையிற் செலுத்திச் சுத்த நிலையைத்தந்த என் உயிர்த் தலைவன் என்னை அறிய இசைவித்தான்.

'ஆன்மாத் தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே தமது முதல் சீபாதத்தை அணையும்' என்ற மையால், 'சிவரூபத்தின் நிகழும் ஆன்ம தரிசனத்தின் பின்னுகை, சிவதரிசனத்தின் நிகழும் ஆன்ம சுத்தியும் ஒருதலையான் வேண்டப்படும் என்றுணர்ந்துகொள்க' என்றருளினர் ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள்.

ஆன்ம தரிசனமாவது: ஆன்மச்செய்தி எவ்விடத்தும் தோன்றுமல் தத்துவ தாத்துவிகங்களை என்னுடையது என்றும், பசு ஞானத்தினை யான் என்றும் நின்ற அசத்தியபோதம் நீங்கிப் பழைய சிற்றறிவாகிய சுட்டுப் போதம் கழன்று நிற்பதாம்.

சிவரூபமாவது: சட சித்துக்களாகிய தாவர சங்கமங்களுளெல்லாம் தான் வேறற நின்று, மேம்பட்ட காருண்ணிய சத்தியே தனக்குத் திருமேனி

யாகி ஆணவமலம் சகசமாயிருக்கப்பட்ட ஆன் மாக்கள் பாகபேதங்களைத் திருவுளத்து அடைத்துத் தனது இச்சா ஞானக்கிரியையின் செய்தியாகிய மாயா தத்துவங்களினுல் சிருட்டித்தும் திதித்தும் சங்கரித் தும் மலபாகம் வர இந்தத் தத்துவங்கள் வேரும் படிக்குச் சத்திநிபாதத்தை விளைவித்துச் சத்திநிபாதத் தின் வழியிலே புறம்பே கட்புலனுக்குத் தோன்ற மானிடச் சட்டை சாத்தி எழுந்தருளி வந்து தான் வேறற நிற்கின்ற முறைமையைத் தருகின்றவன், ஆன்மாக்களுக்கெல்லாம் அறிவிற்கறிவாயிருக்கின்ற சிவனே என்று பிரதிஞ்ஞை, ஏது, திருட்டாந்தங் களினுலே மயக்க விகற்பமறத் தன் அறிவிலே விளங்கக் கண்டு நிற்பதாம்.

இதனுல் சிவரூபத்தின் ஆன்மதரிசனம் காண்க.

இனி, சிவதரிசனமாவது: ஆன்மா என்பது எவ் விடத்தும் தோன்ருமல் என்னது என்றும், யான் என்றும் நின்ற அசத்தியபோதம் நீங்க ஞானுசாரிய னுடைய அனுக்கிரக ஞானம் பிரகாசித்து நின்ற அவதரம் சிவனுடைய பாதமாம். தன்னை உணர்த்தும் பகுதியாகத் தாக்குவதான விஷய போகங்களை அவன் அவள் அதுவாய் நோக்குமிடமெல்லாம் அவன் அனுக்கிரகத்தையே கண்டு அனுபவிப்பது அவனது திருமுகமாம். அந்த அனுக்கிரகத்திலே தற்செயல் தோன்ருமல் பரவசப்படுவதே சிவனது திருமுடியாம் என்று அறிந்து, இந்த உண்மையைச் சந்தேக விகற்பமற உள்ளபடி விசாரித்தறிந்து, இதுவுமல்லா மல் சத்தியமாயுள்ள பொருள் வேறேயும் ஒன்றில்லை என்று தெளிந்து, என்னது யான் என்னும் விகற்ப

மாகிய பிருதிவிமுதல் நாதம் ஈருகச் சொல்லப்பட்ட
ச்கல தத்துவங்களிலும் பொருந்தாமல், இக்கருவிகள்
நீங்கினுல் தனக்குள்ள சகசநிலையாகிய கேவலா
வத்தையிலும் பொருந்தாமல்; இந்தக் கேவல சகலம்
இரண்டும் நீங்கினவிடத்து விளங்குவதான போத
பூரணமாகிய அகம்பிரம ஞானத்திலும் பொருந்தாமல்
ஞாஞசாரியன் அனுக்கிரக ஞானவிசேடத்திலே
தற்பூரணம் எல்லாம் அடங்கித் தனது செய்தி
யெல்லாம் அவனது அனுக்கிரக ஞானச்செய்தியாய்;
அறிதற்கரிதாகிய மேலான பூரண இன்பம் தோன்ரு
மல் ஏகதேச வியாபாரமாகிய தனுகரணுதி இன்பமே
தோன்ற அந்த இன்பங்களையே மெய் என்று அனுப
வித்திருந்த முறைமைபோல, தனுகரணுதி இன்பம் எவ்
விடத்திலும் தோன்ருமல் பூரண இன்பத் தொடர்ச்சி
யாகிய ஞாஞசாரியன் அனுக்கிரக ஞானத்தை எவ்
விடத்திலும் கண்டு அனுபவிப்பதாம் என்க.

ஆன்மசுத்தியாவது : தனக் கெனச் செய்தி
யில்லாத ஆன்மா தன்னுடை சுட்டறிவு எவ்விடத்
திலும் தோன்ருமல் கெட்டுத் தன்னிடத்திலே விளங்
கப்பட்ட அனுக்கிரக ஞானத்திலே தற்பூரணம்.
எல்லாம் அடங்கித் தனது செய்தியெல்லாம் அனுக்
கிரகத்தினுடைய செய்தியாய்த் தன்னை அந்த ஞானம்
அடக்கின முறையையும் தான் அந்த ஞானத்திலே
அடங்கின முறைமையும் எவ்விடத்திலும் தோன்ரு
மல் பெத்தத்திலே தேகமே தானுயும் தானே தேக
மாயும் நின்ற முறைபோலச் சிவமே தானுய் நிற்க
வந்த அவதரமாம்.

இது சிவதரிசனத்தின் நிகழும் ஆன்மசுத்தி என்க.

என்னை அறியுமாறு என்னை அவ்வுடம்புடன் கூட்டினன் நந்தி. திருவருள் ஞானத்தால் என்னை யான் அறிந்தேன், என்னை அறிந்தவிடத்து உலகத்துப் பொருள்களை ஏதும் அறிந்திலேன். நந்தி என்னை அறிந்து யான் அறியாதவிடத்து என்னை உய்த்தனன். உய்த்தனன் – தானே செலுத்தினன். திருவருள் வாயி லாக ஆன்மரூபம் தோன்றியது. சத்துச் சித்து ஆனந்தமாகிய வடிவம் தோன்றியது. அந்த நிலையிலே தன்னை எனக்கு அளித்தருளினன். 'தற்பரமாகத் தன்னை அளித்தனன்'; தற்பரம் ஆக – சிவமாந் தன்மைப் பெருவாழ்வெய்த. தற்பரம் – தனக்குப்பரம் எனவிரியும்; தன் என்றது உயிரை. பரம் – மேல். உயிர் போலன்றி அதற்கு மேலாய் என்றபடி.

அறியாத இடம் என்றார். நின்மல துரியாதீத நிலையில் என்று அறிதற்கு. அதுசூனியம் போலத் தோன்றிச் சுட்டிறந்து அறியும் தன் அறிவின்கண் நீங்காது நிலை பெறுவதாய்ச் சோதிக்குட் சோதியாய் நிற்கும் தன்னை அளித்தனன்.

காரணேசுவரர்களைக் கடந்ததாயும், காரணத்திற் கெல்லாம் பரமகாரணமாயும், உன்மனந்தத்தில் வசிப் பதாயும், நாதமத்தியில் சோதியாய் விளங்குவதாயும் உள்ளது பரஞ்சுடராகிய பரசிவம். அது 'நாதாந்த பூரண மெய்ப்பரஞ்சோதி பொலிந்திலங்கும் சிவம்' என்க.

எனவே, இது அது என்று அறியப்பட்ட எல்லாப் பொருளையும் இது பொய்யாயிருந்தது என்று அறியச் சடக்கென இப்போது உள்ளதாவது

உண்மையாகிய சிவம், அதனை விசாரித்துப்பார்; என்றது சிவசொரூபனுமாய்ச் சுத்தனுமாய் நின்று காணும் அவதரத்து அந்த அந்த உண்மையொழிந்து அசத்துத் தோன்றுது. அந்தச் சிவனுடனே கூடித் திருமேனியாய் அந்தச் சொரூபத்தைப் பெற்று; எனவே அந்தச் சிவனுடைய ரூபத்தைப் பெறுவதே சிவரூபம் என்பதாயிற்று. அசத்து மேலீட்டால் இது அசத்து என்று நீங்கின் சிவரூபம் என்பதாயிற்று. (335)

பரந்துஞ் சுருங்கியும் பார்புனல் வாயு
நிரந்த வளியொடு ஞாயிறு திங்கள்
அரந்த அரனெறி யாயது வாகி
தரந்த விசும்பொன்று தாங்கிநின் றுனே. 2457

இ—ள்: பார் பரந்தும் புனல் சுருங்கியும் என்பதை பார் சுருங்கியும் புனல் பரந்தும் என மாறுக. பார் - பூமி. புனல் - நீர். கடல் பரந்து சூழ்ந்து விளங்குவது. நிலம் சுருங்கி நீரால் சூழப்பட்டு விளங்குவது வாயுவாகிய நிரந்த வளி: வளி — காற்று. வாயு எங்கும் நிறைந்து விளங்குவது. அரந்த = அரத்த. அரன் — சிவந்த வண்ணமுடைய அரன் என்க. நிலம், நீர் கூறிஞர். வளியைக் கூறிஞர். இடையிலுள்ள தீயைக் கூறிலர். அதனை அரந்த என்னும் சொல்லால் குறித்தனர் போலும். வளியொடு அரனெறியாய் என்றமையால் தீயையும் கொள்க. தரந்த விசும்பு ஆய் — வளியைத் தோற்றுவிக்கும் ஆகாயம் என்க. எனவே ஐம்பெரும் பூதங்களுமாயின.

இறைவன் பார், புனல், கனல், வளி, வெளி என்னும் ஐம்பெரும் பூதங்களையும் ஞாயிறு திங்கள் களையும். ஆன்மாவையும் தமக்குத் திருமேனியாகக் கொண்டு அட்டமூர்த்த சொரூபனாக நின்று விளங்கு கின்றான் என்க. ஒன்று என்றது ஆன்மாவை.

தரு அந்த விசும்பு என்றார், 'பூதங்கள் ஒன்றி னொன்று தோன்றும்' என்பது வேதவாக்கியம்; (தைத்திரீயம் – 2 - 1.) 'இருநிலனது புனலிடை மடி தரவெரி புகவெரி யதுமிகு, பெருவளி யினிலவி தரவளி கெடவிய னிடைமுழு வதுகெட், இருவர்க ளுடல்பொறையொடுதிரி யெழிலுரு வுடையவன்" (திருஞான–தேவா– திருமறைக்காடு-திருவிராகம்–7). எனச் சங்கார முறைபற்றி வேதவாக்கியப் பொரு ளோடு வலியுறுத் தோதிய திருப்பாட்டோடும் முரணுமாலெனின் முரணாது. முரணுவன போலத் தோன்றின் முரணாத வண்ணம் ஒன்று முக்கியப் பொருளும் ஒன்று தாற்பரியப் பொருளுமாக வைத்துப் பொருளொருமை காணவேண்டும் என்ப. தரு அந்த விசும்பு: தருதல் – விளங்குதல் எனினு மாம்.

முக்கியப் பொருளாவது – அவ்வத் தன்மாத் திரைகளின் அவ்வப்பூதங்கள் தோன்றும் என்பது. தன் மாத்திரைகள்: சத்த பரிச ரூப ரச கந்தங்கள், பூதங்கள்; பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் என்பன. சத்த தன்மாத்திரையில் ஆகாயமும், பரிச தன்மாத்திரையில் வாயுவும், ரூப தன்மாத்திரையில்

தேயுவும், ரச தன்மாத்திரையில் அப்புவும். கந்த தன்மாத்திரையில் பிருதிவியும் தோன்றுமென்பதே.

தாற்பரியப் பொருளாவது: சூக்கும பூதமாகிய சத்த முதலிய தன் மாத்திரை ஐந்திற்கும் சதாசிவன் மகேசன் உருத்திரன் மால் அயன் என்னும் ஐவரும் அதிதெய்வங்களாதலின். சதாசிவக் கடவுளுக்கு உரிய பிரமம் என்னும் பெயர் ஆகுபெயராய் அவனால் அதிட்டிக்கப்படும் சத்த தன்மாத்திரையினையும் உணர்த்தும் ஆகலின், "பிரமத்தினின்றும் ஆகாயந் தோன்றும்" என்றதற்குத் தாற்பரியம் பிரமமாகிய சதாசிவக் கடவுளான் அதிட்டிக்கப்படும் சத்த தன் மாத்திரையினின்றும் ஆகாயம் தோன்றும் என்பதே யாம்.

இறைவன் ஒன்றாயும் வேறாயும் உடனிருந்தும் உபகரிக்கும் முறையில் அட்டமூர்த்த சொரூபனாயும் விளங்குகின்றான். அவனை அறியும் நெறி அரனெறி. அரன்நெறியாவது சிவாகமநெறி. அதன்கண் கூறப் படும் ஞானபாதத்தில் உறைத்து நின்று சிவஞானமே கண்ணாகக்கொண்டு மெய்ம்மையாகிய சிவப்பொரு ளுடன் இரண்டறக்கலந்து சிவபோகத்தை நுகர வேண்டும் என்பதே கருத்தாகக்கொள்க. அரன்நெறி— சிவஞானம். (336)

**சத்தின் நிலையினில் தானான சத்தியும்**
**தற்பரை யாய்நிற்குந் தானும் பரற்குடல்**
**உய்த்தகு மிச்சையில் ஞானாதி பேதமாய்**
**வித்த நடத்து நடிக்குமா நேயத்தே.** **2458**

இ-ள்: முதல்வன் பாசஞானத்தாலும், பசு ஞானத்தாலும் அறியப்படான்; ஆகலின் சிவம் எனப்படுவோன். சிவஞானம் ஒன்றாலாயே அறியப் படுதலால் சத்தெனப்படுவான். எனவே, சிவசத்து என்பது பெறப்பட்டது. இந்தச் சத்து எனப்படும் நிலையில் தானாக விளங்கும் சத்தியும் தன்னுடைய சத்தியாகிய பரையாவாள். தன் என்றது பரனை. பரனுக்குச் சத்தி பரையாவாள் என்றபடி. சத்தன், சத்தி; சத்தியையுடையவன் சத்தன். தற்பரையாய் நிற்கும் தான் பரற்கு உடல் ஆம் - பராசத்தியாக நிற்கும் அருளாகிய தானே பரனுக்குத் திரு மேனியாம்.

முதல்வன் உயிர்களிடத்து வைத்த அருளினால் தான் நினைந்த வடிவங் கொள்வான். முதல்வன் நின் மலன் ஆதலாலே தானே சத்தியை மூர்த்திகரித்துத் திருமேனிகொண்டருளுவன் என்க.

அரன்தன் உரு அருள், தரும் கரசரணாதி சாங்கம் அருள், உணர்வு அருள், குணங்களும் அருள், செயல் களும் அருள், உபாங்கம் எல்லாம் அருளே, ஆயினும் அவன் அசிந்திதன் என்பதறிக.

உய்த்தகும் இச்சையில் - தநு கரண புவன போகங்களைப் படைத்து ஆன்மாவுக்குச் செலுத்தும் சங்கற்பத்தால். ஞானாதிபேதமாய் - ஞானசத்தி முதலிய பேதங்களுடையதாய் என்க, பராசத்தியாவது தடையிலா ஞானம் எனப்படும் பொதுமையால் ஒன்றாய், இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்தி என்னும் வியாபார பேதத்தால் மூன்றாய், அவையே மற்றும் அவ்வக்காரிய பேதத்தால் பலதிறப்படும்.

அம்மூன்றனுள் இச்சாசத்தியாவது உயிர்களுக்கு மலத்தை நீக்கிச் சிவானுபவத்தைத் தருதற்பொருட்டு முதல்வனிடத்து உளதாகிய கருணையாம். ஞானசத்தியால் சிவப்பேறாகிய அதற்குச் செய்யக்கடவதாகிய உபாயங்களை யெல்லாம் முதல்வன் விரும்பி அறிவன். அருளின் வேறல்லாத கிரியாசத்தியால் அறிந்த அவற்றை அறிந்தவாறே முதல்வன் சங்கற்பித்துச் செய்வன்.

மாநேயத்தே நித்தம் நடத்தும் நடிக்கும் — பெருமை பொருந்திய நேயப் பொருளாகிய பரனிடத்திருந்து நாடோறும் ஐந்தொழில் நடத்தியருள்வாள். இது பராசத்திக்கு ஓர் விளையாட்டேயாம். இவ்விளையாடலும் இறைவன் திருவுளத்துக்கு இயையவேயாம் என்க.

முதல்வன் வடிவமெல்லாம் சத்தியிற் காணப்படுவனவென்றும், சத்தியிற் காணப்படும் வடிவமெல்லாம் தானாகத் தோன்றி நிற்பன என்றும், சத்தியினிடமாக அன்றி இறைவன் தானாகத் தோன்றான் என்றும், இறைவனுக்கு வடிவம் சிற்சத்தியே என்றும் ஒற்றுமைபற்றி இங்கே பேசப்பட்டமை காண்க. (337)

**மேலொடு கீழ்பக்க மெய்வாய்கண் ணாசிகள்**
**பாலிய விந்து பரையுட் பரையாகக்**
**கோலிய நான்கவை ஞானங் கொணர்விந்து**
**சீலமி லாவணுச் செய்திய தாமே.** 2459

இ — ள் : திருவருட்சத்தி ஆன்மாக்களைக் காத்தற்பொருட்டுப் பஞ்சகிருத்தியம் செய்வதாம். பாலிய —

காத்தற்பொருட்டு ; பாலித்தல் – காத்தல் ; ஈடேற்றுத லாம். பாதுகாத்தல் காரணமாகவே திருவருள் மேல் கீழ் பக்கம் மெய் வாய் கண் நாசி ( செவி ) என்னும் இவற்றோடு கலந்து நிற்கும். சீலம் – தன்மை. அணு – உயிர்.

பிருதிவி ஈறாக அடைவே தரப்பட்ட ஆகாய வெளிக்கும் வெளியாகிய பிருகிருதி வெளி, அதற்குக் காரணமாகிய கலையான வெளி, அந்தக்கலைக்கு மேலா கிய ஒளியான அசுத்த மாயை ஒளி, அதற்கு மேலாகிய சுத்த வித்தை ஒளி, அந்தச் சுத்த வித்தை ஒளிக்கு மேலாகிய விந்து ஒளி, அந்த விந்துவாகிய ஒளியில் இருந்து எல்லாவற்றையும் உண்டாக்கப்பட்டவள்.

பதியின்சொரூபம் அகண்டாகார, சச்சிதானந்த பரிபூரண சோதியாய், பஞ்சகிருத்தியத்துக்கு அதீதப் பட்டு நின்மல வடிவாய் விளங்குவது.

பதியின்தடத்தம் சிருட்டி, திதி, சங்காரம், திரோ பவம், அனுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியங்களைப் பண்ணுவதாம்.

பதியாகிய சிவத்தை அக்கினிக்கு உஷ்ணம் போலப் பிரிவற்றிருக்கும் சத்தியானது நித்தமாய், ஒன்றாய், இச்சா ஞானக் கிரியா சொரூபமாய் இருக்கும். இது காரியபேதத்தால் பரை முதலாக அநேக பேதப்படும். சத்தியினது பேதத்தினாலே சிவனும் பல பெயர்களைப் பெறுவர்.

முதல்வன் தனது அபின்ன சத்தியாகிய பரா சத்தியை அதிட்டித்து, அநாதியே ஆணவமலை

சம்பந்த முற்று அறிவற்று மூடமாய்க் கிடக்கும் ஆன்மாக்களை ஈடேற்றத் திருவுளங்கொண்டு, பரா சத்தியின் ஆயிரத்தில் ஒரு கூற்றினின்றும் ஆதி சத்தியைத் தோற்றுவிப்பார். ஆதிசத்தியின் ஆயிரத்தில் ஒரு கூறு இச்சா சத்தியாகும். இச்சாசத்தியின் ஆயிரத்தில் ஒரு கூறு ஞானசத்தியாகும். ஞான சத்தியின் ஆயிரத்தில் ஒரு கூறு கிரியாசத்தியாகும். அவை வருமாறு :

"அன்ன சிவமா யிரமா யதிலொன்(று)
உன்னிய பரையதி லாயிரத் தொருகூ(று)
ஆதியா யதிலோ ராயிரங் கூற்றொரு
பேத மிச்சை யதிலா யிரம்பிரி(வு)
இங்குள ஞானம தீரைஞ் ஞூற்றொரு
பங்கு தொழிலிவை பஞ்சசத் திகளே."

என்பது சதாசிவரூபம். ஆதீனவெளியீடு காண்க.

பராசத்தி : உயிர்களுக்கு அனுக்கிரகமாத்திரங் குறித்துப் பொதுவகையான் அறிந்தும் அறிவித்தும் நிற்பதாகிய ஞானமொன்றே சிவசத்தியின் சொரூபம். அதுவே பராசத்தி எனப்படும்.

ஆதிசத்தி: இதுவே திரோதானசத்தி. இந்தத் திரோதம் அவதரசத்தியாகி ஓர் அவதரத்திலே தோன்றுகையால் ஆதிசத்தி எனப் பெயர்பெற்றது. இதற்கு அருட்சத்தி என்றும் பெயர். இதுதான் மற்ற நான்கு கிருத்தியங்கட்கும் காரணமானது; ஆன்மாக்களுக்கு மலத்தைச் செலுத்திப் பக்குவப்படுத்துவது.

இச்சாசத்தி : சிவன் ஆன்மாக்களை இரட்சிக்கத் திருவுளங்கொண்ட பொழுது அந்த நினைவு எழுந்த அவதரத்துக்கு இச்சாசத்தி என்றுபெயர்.

ஞானசத்தி: அவ்வாறு ஆன்மாக்களை இரட்சிக்க இச்சை கொண்ட சிவன் அவ்வவ்வான்மாக்களுக் குரிய வினைப்பயன்களை அறிந்த அவதரத்துக்கு ஞானசத்தி என்று பெயர்.

கிரியாசத்தி: அவ்வாறு அறிந்த வினைப்பயன்களை ஆன்மாக்களுக்கு ஊட்டும் நிமித்தம் அவர்களைப் பிர பஞ்ச காரியப்படுத்தும் அவதரத்துக்குக் கிரியாசத்தி என்று பெயர்.

பராசத்தி ஒன்றே வியாபாரபேதத்தால் இவ்வாறு நாமபேதத்தை அடைதலேயன்றி வஸ்து பேதமில்லை. அது அக்கினியினுடைய உஷ்ணசத்தி ஒன்றாய் இருந் தும் உலோகம் விறகு உப்பு அன்னம் முதலிய விஷய பேதத்தினாலே உருக்குதல் கொளுத்துதல் வெடித்தல் சமைத்தல் என்று வெவ்வேறு பெயரடைவது போலாம். ஆயிரத்தில் ஒருகூறு என்றது வரையறை செய்தது அன்று. அவை செயற்படும். தாரதம்மியத் தால் என்று கொள்க.

இச்சத்திகளை அதிட்டித்த சிவனும் பராசத்தியை அதிட்டித்தபோது பரசிவமென்றும், ஆதி சத்தி யாகிய திரோதான சத்தியை அதிட்டித்தபோது திரோபவன் என்றும், இச்சாசத்தியை அதிட்டித்த போது இச்சிதா என்றும், ஞானசத்தியை அதிட்டித்த போது நாதா என்றும், கிரியா சத்தியை அதிட்டித்த போது கர்த்தா என்றும் பெயர் பெறுவர்.

நவந்தரு பேதங்களில் சிவத்திற்குச் சத்தியும், நாதத்திற்கு விந்துவும், இவ்விரண்டுமொழிந்த சதா

சிவன் மகேசுரன் உருத்திரன் விட்டுணு பிரமா என்னும் ஐவர்க்கும் முறையே மனோன்மனி மகேசை உமை இலக்குமி சரசுவதி என்னும் சத்தி பேதம் ஐவகைப்படும். காரிய பேதத்தினாலே சத்தி சிவங்களும் பேதமாயின. சிவம் சத்தி நாதம் விந்து ஆகிய நான்கும் அருவம். சதாசிவம் ஒன்றும் அருவுருவம். மகேசுரன் உருத்திரன் என்னும் இருவரும், இவர்கள் அதிகாரத்தால் நடக்கும் பிரம விஷ்ணுக்கள் இருவரும் உருவம்.

பரநாதம் பரவிந்து அபரநாதம் அபரவிந்து என நாத விந்துக்கள் பரம் அபரம் என்று சொல்லப்படும். பரவிந்துவில் சத்தி எழுந்தருளியிருக்கும் பரநாத கலையில் அனுகத சிவர் எழுந்தருளியிருப்பர். சத்திக்கு பரவாகீசுவரி என்றும், அனுகத சிவருக்கு பரவாகீசுவரர் என்றும் கூறப்படும். விரிந்த நூல்களில் காண்க.

குடிலைக்கு மேல் பரவெளி; பரவெளி எனவே மனவெளி, அண்டவெளி, பரவெளி, அருள்வெளி என வெளி நால்வகைப்படும். மனவெளி – மனம் விரிந்த இடம். அண்டவெளி – ஒவ்வோர் அண்டத்தைச் சூழ்ந்திருக்கும் வெளி. பரவெளி – எல்லாவற்றையும் தன்னுள் அடக்கியிருக்கும் வெளி, அருள்வெளி – முதல்வன் சந்நிதானம் என அறிக.

குடிலையின் ஏகதேசத்தைக் கலக்க அதிலிருந்து நாததத்துவமும். அதிலிருந்து விந்துதத்துவமும் தோன்றும்.

நாதம் என்பது இரண்டு எதிர்மறையான மின்சாரசத்திகள் ( பாயுஞ் சத்தியும், தாங்கும் சத்தியும் )

ஒன்றோடொன்று சேரும்போது தொனியும் பிரகாசமும் தோன்றும். தொனி - ஒலி, பிரகாசம் – ஒளி. இதற்கு இடியையும் மின்னலையும் எடுத்துக் காட்டலாம். சிவனுடைய கதிர் குடிலையில் வந்து பொருந்தியவுடன் உண்டாகிய தொனியேயாம். நாதத்திலிருந்து விந்து தோன்றுமென்றது தொனியானது ஆகாயத்தில் பரவுங் காலத்தில் உண்டாகிய வட்டவடிவையே யாகும். விந்து – புள்ளி, வட்டம். இதனை நீர்நிலையில் கல்லை எறிந்தபோது எளிதாகக் காணலாம்.

நாத தத்துவத்திற்குச் சிவம் அதிபதி ஆகலின் இதற்கும் சிவம் என்று பெயருண்டு. விந்து தத்துவத்திற்குச் சத்தி என்றும் பெயர்.

'பரையுட் பரையாகக் கோலிய நான்கு' – பிருதிவி முதல் நாதம் வரை தோற்றம், ஒடுக்கம். தொகை, வகை, தொழில், நிறம், குணம், தானம், அதிதேவதை என்னும் இந்த நவசம்பிரதாயமும் அறிவது பாசதரிசனம். இவை பாசம் என்று கண்டு கடந்த இடம் பாசாதீதம். இப்பாசத்தை இது இது எனக் கண்டறிந்து அப்பாசத்தைக் கடந்தது போதம். அந்தப்போதம் ஒன்றினும் தாக்காமல் நிற்கிற அவதரத்தில் ஆனந்தம் உண்டாம்; அது போதானந்தம்.

அந்தப் போதானந்தத்துக்குப் போதமாய் நின்று உணர்த்துவது அருள். அந்த அருள் நெறியில் தன் ஒளி அடங்கியிருப்பது அருளானந்தம். அந்த அனுபவத்தில் நின்றால் அருளொளி மிகுந்த ஒளியாம்;

அதுவே பரைதரிசனம். அந்தப்பரை யொளியில் தம் பரமற்று அமர்தல் பரானந்தம்.

அந்தப் பரானந்த ஒளிக்குள் ஒளியாக இருப்பது சிவம். பரை என்றும் சிவம் என்றும் தோன்றி இரண்டறக் கலந்து நின்ற இடம் சிவானந்தம்.

சர்வபூத நிரந்தரமாய், சுட்டற்ற பேரொளியாய், வாக்கு மனாதீதமாய் நின்ற தன்மை ஆனந்தாதீதம். நவரத்தின ஒளி விளக்கொளி மின்னொளி சோம சூரியாக்கினி ஒளி என்று சொல்லப்பட்ட ஒளிகளுக்கெல்லாம் உள்ளொளியாயும் அவைகளுக்கு அப்பாலாயும் உள்ளது. போதானந்தம், அருளானந்தம், பரானந்தம், சிவானந்தம் என்று சொல்லப்பட்ட ஆனந்தமே குணமாயும், இந்த ஆனந்தத்தைத் தரப்பட்ட சிவமே குணியாயும் இந்தக் குண குணி பாவங்களையுங் கடந்து அப்பாலாயும், ஆகாசாதீதம், பிரமாணாதீதம், துரியாதீதம், வாசாதீதம், மனாதீதம், பாவாதீதம், சூனியாதீதம், நிர்மலாதீதம், ஆனந்தாதீதம் என்று ஷட் சொல்லப்படும் அதீதங்களைக் கடந்து அப்பாலாயும் உள்ள பொருள் ஆதலின் ' பரையுட் பரை ' என்றது காண்க.

அவை ஞானங் கொணர் விந்து ' என்றது " மூறைமையின் விந்துஞானம், மேவின தில்லையாகில் விளங்கிய ஞானமின்றாம், ஒவிட விந்து ஞானம் உதிப்பதோர் ஞானமுண்டேல், சேவுயர் கொடியி னான்றன் சேவடி சேரலாமே " என்ற சிவஞான சித்தித் திருவிருத்தத்தால் ' விந்து ஞான ' மாவது உலகப்பொருளையறியும் ஞானம் எனவும், இதனைத் தன்னின் வேறாகக் கண்டு நீங்கி அவற்றிற்கு

மேலாகிய பேரறிவு ஒருவனுக்கு விளங்குமாயின் அப்பொழுதே இடபக் கொடியை உயர்த்திய சிவ பெருமான் திருவடியாகிய பரமுத்தியை அவன் தலைப் படுவன் எனவுங் கூறியவாற்றான் அறிந்து தெளிக. (338)

**வேறு மதன்தன்மை போலிமிக் காயத்தில்**
**ஆறும் உபாதி யனைத்தாகுந் தத்துவம்**
**பேறும் பரவொளி தூண்டும் பிரகாசமாய்**
**ஊறு யுயிர்த்துண் டுறங்கிடு மாயையே** 2460

இ-ள்: அதன் தன்மை காயத்தில் வேறும் போலும் – உயிரின் இயல்பு தத்துவ தாத்துவிகங்களாகிய உடம்புடன் கூடியிருக்கும் காலத்தில் வேறாக உள்ளதாம். கேவல நிலையில் ஆணவமலத்துள்ளே அழுந்தி அறிவற்று மூடமாய்க் கிடந்த காலத்தும், சுத்த நிலையில் கருவிகளுடன் கூடாமல் விட்டு நீங்கி நின்மலமாயிருக்கும் காலத்தும் உயிரின் தன்மை வேறுபட்டு உள்ளதேயாம். சகல நிலையிலும் உயிர் வேறுபட்ட நிலையிலுள்ளதேயாம்.

இக்காயத்தில் உபாதி ஆறும்—உடம்பிலே உள்ள ஆதாரநிலைகளும் ஆறு உள்ளன. அவை மூலாதாரம் சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்பனவாம். ஆதாரங்களும் துன்பமுடையனவே என அறிந்து நிராதாரத்தே செல்லுதல் உயிருக்கு நலம் பயப்பதாம்

அனைத்தாகும் தத்துவம் உபாதி – எல்லாத் தத்துவங்களும் துன்பத்தைத் தருவனவே. ஆகலின் தத்துவங்களைக் கடந்து தத்துவாதீதமாகிய நிலையின்கண்

துன்பமின்றி இன்பமாய் வாழலாம் என்பதை நன்ருக அறிவின்கண் ஆராய்ந்து உணர்ந்து.

பரவொளி பேரும் – நிராதார யோகம் என்னும் ஆன்ம சொருபத்தை உணர்ந்து ஒருபற்றுமின்றிச் சமாதி பரனுய் நிற்க மீதானமாகிய சிவசொருபத்திலே கூடுதலே அடையத்தக்கதாம். தடத்த மூர்த்தங்களைக் குறிக்கும் தியான சமாதி யோக முதிர்ச்சியினுலே திருவருள் ஞான விளக்கமுண்டாய் அந்தத் திருவருளில் அடங்கிச் செய்யும் சோகம் பாவனையில் தலைப்பட்டுப் பரை அதீதமாகிய சிவப்பேற்றை அடைத லொன்றுமே ஆன்மலாபமாம், மலரகிதராகிய சிவ பெருமானுக்குத் திருமேனி திருவருளேயாம்.

மாயை தூண்டும் பிரகாசமாய் ஊரு உயிர்த்து உண்டு உறங்கிடும் – சுத்த மாயை அசுத்த மாயை பிரகிருதி மாயை என்பன கேவலத்தில் அறிவற்றுக் கிடந்த ஆன்மாவுக்குச் சகலநிலையில் கருவி கரணங்களுடன் கூட்டுவித்து அறிவை விளக்குவித்து மயக்கமும் செய்யும். மயக்கம் – விபரீதவுணர்வு. மாயைக்கு விபரீத உணர்வைச் செய்தல் தன்னியல்பன்று. ஏகதேச அறிவைச் செய்தலே மாயைக்குத் தன்னியல்பாம் என்பர்.

மாயா காரியங்களெல்லாம் சிவத்தினைச் சார்தற் பொருட்டேயாம். மலங்களை நீக்குமுகத்தால் தனு கரணுதிகள் சிவத்தினைச் சார்தற்பொருட்டாம் என்க. தத்துவங்களெல்லாம் உயிர்களோடு பொருந்துவன என்றறிந்து நீங்கித் தத்துவாதீதனுகிய பரமசிவனை அடைதல்வேண்டும். அப்போது மாயா காரியங்களெல்லாம் பயனின்றிக் கழிவனவாம் எ – று. (339)

தற்பர மன்னுந் தனிமுதற் பேரொளி
சிற்பரந் தானே செகமுண்ணும் போதமும்
தொற்பதந் தீர்பாழிற் சுந்தரச் சோதிபுக்
கப்புற மற்றதிங் கொப்பில்லை தானே. 2461

இ-ள்: தற்பரம் மன்னும் தனிமுதல், பேரொளி, தானே சிற்பரம் - தனக்குத்தானே மேம்பட்டு விளங்கி நிலைபெற்றுள்ள ஒப்பற்ற முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் பேரொளிப் பிழம்பாக வுள்ளவர்; தானே மேம்பட்ட ஞான சொரூப மாகவும் உள்ளார்.

தற்பரம் - தனக்குத்தானே பரம். தனிமுதல் - ஒப்பற்ற முழுமுதற் கடவுள். சிற்பரம் - மேலான ஞானம்.

செகம் உண்ணும் போதமும் தானே - உலக உண்மையினை அறிந்து உயிர்கள் அவற்றைவிட்டு நீங்குதற்குரிய அறிவும் தானேயாக உள்ளவர். செகம் உண்ணும்போதம் என்றது உலகத்தைத் அறியும் அறிவு.

தொத் பதம் தீர் பாழில் - தொம் என்னும் த்வம் நீ எனும் பொருள் பயப்பதாம், நீ என்பது ஆன்மாவைச் சுட்டியது; முன்னிலைச் சுட்டு, இதனை, 'வேதாந்த தொம்பதம் மேவும் பசு என்ப' என்பதனுல் அறிக. முத்தி பெறுங்காலம் வரையும் ஆன்மாக்கள் சென்ற கருமத்துறை வழியே ஆன்மாவை விட்டு, ஆன்மாவோடும் விரவியிருந்தும் வெளிவராது நின்றருளிய தன் தன்மைபோல, தன் செயலின் வழியே எக்காலத்தும் மீளாது ஆன்மா வியாப்பிய

மாய் அடங்கி நிற்கும் அந்நிலைமை விளங்கும்படி. தன் யோகமாகிய சிவப்பேற்றையும் தன் ஞானத்தினாலே தன்னை உணரும் முறையின் வைத்து ஆன்மாவை உணரும் ஆன்மலாபத்தையும் தந்து தனது அருட்செயலும் ஆன்மாவினது ஞாதுருஞானஞேயப் பகுப்புணர்வும் நீங்கும்படி அசுத்தம் மிச்சிரம் சுத்தம் என்னும் மூவகைப் பிரபஞ்சத்தினின்றும் நீங்குமிடத்து ஆன்மா வியாபகத்தைத் தலைப்பட்டு முனைந்தடங்கலும் அருளிற்றலைப்பட்டு ஐந்தொழில் செயக் கருதித் துவளலும் அவ்வருளில் வியாப்பியமாய் அடங்கலும் என்னும் மூவகைப் பாழினின்றும் நீங்கி அப்பாழின்மேலே அத்துவித சம்பந்தமாய் உள்ள முழுப்பாழினிடத்து என்க.

இங்கே மூவகைப்பாழ் என்றது போதப்பாழ், சீவப்பாழ், சிவப்பாழ் என்பவற்றை. போதப் பாழாவது தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவ சுத்தி முதலிய மூன்றையும் அறிந்து பாழ்படுத்தி நீங்கல். சீவப்பாழாவது ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, முதலிய மூன்றையும் அறிந்து நீங்குதல். சிவப்பாழாவது சிவரூபம் சிவதரிசனம் முதலிய இரண்டையும் அறிந்து நீங்குதல். இவைகள் நீங்கிய முழுப்பாழ் என்க.

சிவரூபத்தின் நிகழ்வது ஆன்மதரிசனம், சிவதரிசனத்தின் நிகழ்வது ஆன்மசுத்தி. திருவருள் செய்யும் கிருத்தியத்தை ஆன்மா செய்யாது என்று திடமாய் அறிந்து நிற்றல் சிவதரிசனம். திருவருளைச்சேர்ந்த ஆன்மா அத்திருவருள் செய்யும் பஞ்சகிருத்தியத்தைத்

தான் செய்யவேண்டும் எனல் கூடாது என்றுணர்ந்து தற்போத நிகழ்ச்சியின்றித் திருவருளில் அழுந்தாது சேர்தல் ஆன்மசுத்தியாம். இது ஞானத்துக் கிரியை. இது அண்டத்தில் வைத்தறிதலால் பரைதரிசனமு மாம்.

நின்மல துரியாவத்தைக்குக் காரணமான விந்துவும் அர்த்தநாதமும் குடிலையிலும், சித்தம் பிரகிருதியிலும், ஆதிசத்தி பராசத்தியிலும் ஒடுங்க, நின்மல துரியாதீத அவத்தைக்குக் காரணமாகிய அநாதநாதம் என்னும் பராசத்தியும், சிவானந்த அனுபவியாகிய உள்ளமும் அடங்க நின்மலதுரியாதீத அவத்தைக்குத் தானமாகிய பிரமரந்திரத்திலே அகண்டாகார சச்சிதானந்த பரிபூரண சிவானந்த அனுபோகத்தை இரண்டறப் பெற்றிருப்பது நின்மல துரியாதீதம். இதுவே, உன்மனைக்கு மேற்பட்டிருக்கிற மோட்சம் என்க.

இதனையே 'சுந்தரச் சோதி புக்கு அப்புறம் மற்று அது இங்கு ஒப்பில்லை தானே' என்றருளினர்.

இதனை, " மன்னுமுட்ப் பாழும், ஒருவிமேற் பெரும் பாழெனும் உவப்பிலானந்தப், பொருளோடேகமாய்ப் பொருந்திடும் முத்தரா யிருந்தார்" (திருவானைக்காப் புராணம் – ஞானவு): " மாறுத சிவஞானப் பேறளிக்கும் வலியனைத்தும் வாவித் தாக்கிப், பாறுத வினைவலியு முப்பாழுக் கப்பாலாம் பாழினின்று, வேறுக வொருவுமவர் தாமன்றே யுலகமெலாம் விரியத் தோற்றும், ஆறாறுங் கடந்ததிருத் தணிகைவரை யாற்குரிய அடிமை யாவார்." (திருத்தணிகைப் பதிற்றுப் பத்தந்தாதி – 70). (340)

பண்டை மறைகள் பரவான் உடலென்னும்
துண்ட மதியோன் துரியாத் தந்தன்னைக்
கண்டு பரனுமக் காரணோ பாதிக்கே
மிண்டி னவன்சுத்த னுகான் வினவிலே. 2462

இ - ள்; பழமையாகவுள்ள நான்மறைகள் பரமாகாயத்தைச் சிவனுடைய திருமேனியென்று சொல்லுவனவாம். பிறைச்சந்திரனை அணிந்த சிவபெருமான் நின்மல துரியாதீதத்தின்கண் விளங்குபவன். அந்தத் துரியாதீதத்திலே திருவருளால் தன்னைக் கண்டு, தலைவனையும் கண்டு சிவானந்தம் நுகர்க. எனவே அருள் வழியே சென்று பரையதீதத்திலே அழுந்தி அவிழ நின்றால் சுகம் விளையும். சுகப் பேரின்பத்திலே ஆனந்த மேலீடு தோன்றும்; அப்போது ஆனந்தாதீதமாகக் கர்த்தாவே கூட்டியருளுவர்.

காரணோபாதி - சுத்தமாயை. மிண்டினவன் - கலந்தவன்.

சுத்த சிவனாகிய பரமசிவனிடத்துப் பிரிப்பின்றி நிற்கும் சத்தி பராசத்தி. சிற்சத்தியோடு பிரிப்பின்றி நிற்கும் சிவபெருமான் ஆன்மாக்களின் மல நோயைத் தீர்த்தற் பொருட்டுச் சுத்தமாயையில் தொழில் செய்யத் திருவுளங்கொண்ட அவதரம் சிவம். துன்பத்தை நீக்க உன்னிய அவதரம் ஆகலின், இதனைப் பரநாதம் என்பர். அவ்வுன்னுதலின் பின் எவ்வாறு தொழில் செய்யவேண்டும் என்று எண்ணிய அவதரம் சத்தி, சத்தி என்பது அடங்கி நிற்கும் ஆற்றலைக்குறிப்பது. அஃது இவ்விடத்தில் இவ்வாறு செய்யலாம் எனத் தோன்றாது நிற்கும் நிலையாம். இந்த அவதரத்தில் இந்தச் சத்தியைப் பரவிந்து என்பர்.

நாதம் என்பது ஒலியையும், விந்து என்பது குறியையும் உணர்த்தும். அதன்பின் எண்ணியவாறே செய்தற்கு முதற்காரணமாய்த் தன்னுள் அடங்கி யிருந்த சுத்த மாயையோடு கூடிய அவதரம் நாதம். அச் சுத்த மாயையோடு கூட்டிச் செய்ய வேண்டுவன வற்றைச் செய்ய எண்ணிய அவதரம் விந்து. முன்னர்க் கூறிய நாதம் விந்து சுத்த மாயையிற் கூடாத அவதரத்தில் உண்டானமையால் பரநாதம் பரவிந்து எனவும், பின்னர்க்கூறிய நாதம் விந்து சுத்த மாயையோடு கூடிய அவதரத்தில் உண்டானமையால் அபரநாதம் அபரவிந்து எனவும் கூறப்படும். அபர நாதம் அபரவிந்துவையும் சிவம் சத்தியெனக் கூறு தலும் உண்டு.

இலய சிவம் எனக்கூறிய சிவம் சத்தி இந்த அபர நாத அபர விந்துகளேயாம். அதன்பின் இன்னின்ன வாறு செய்யவேண்டும் என்று எண்ணிய அவதரம் சதாசிவம். சத்தியோடு கூடிய சிவம் சதாசிவம்; எண்ணும் முதன்மை சிவத்தையும் எண்ணுதற்கு உரிய ஆற்றல் சத்தியையும் குறிக்கும். எண்ணிய வாறு செய்யுங்கால் அவரவர் கன்மபலத்தை அனுப விக்கச்செய்யும் முறையில் அனுபவிக்க வேண்டாத கன்மபலன்களையும் அனுபவிக்க வேண்டிய கன்ம பலன்களில் உள்ள குண தோஷங்களையும் மறைத் தலாகிய அவதரம் மகேசுவரம்; மகதை சுவரியத்தை யுடையது மகேசுவரம். அனுபவிக்க வேண்டிய ஐசுவரியங்களைக் கொடுத்தும், அனுபவிக்க வேண் டாத ஐசுவரியங்களை மறைத்தும் வைத்தலின் மகேசுவரம் எனப்பட்டது. அவ்வாறு அனுபவிக்கும் காலத்து இளைப்பொழித்தற் பொருட்டும், வேறு உல

கத்தில் இன்பதுன்பம் அனுபவித்தற் பொருட்டும், இவ்வுலகத்தில் வேறு சரீரவாயிலாக இன்பதுன்பம் அனுபவித்தற்பொருட்டும் சங்கரித்தலாகிய அவதரம் உருத்திரன். அனுபவிப்பதற்காக நிலைக்கச்செய்யும் அவதரம் மால். அனுபவித்தற்குரிய உடல் கருவி உலகம் பொருள் முதலியவற்றைத் தோற்றுவிக்கும் அவதரம் பிரமன். இவையே ஒன்பது பேதங்களாம்: நவந்தரு பேதம் என்க.

பரம்பொருள் ஒன்றே ஆயினும் எவற்றையும் கடந்து நிற்கும் வெளியாகிய வடிவால் சிவம் எனவும், எவற்றுடனும் கலந்து எவற்றையும் தன்பால் இழுக்கும் வலிமையாகிய குணத்தால் சத்தி எனவும் பிரித்துக் கூறியதாம் என்க.

சுத்தசிவனும் மற்றத் தெய்வங்களும் தத்துவங்களைக் கூடியது உயிர்களின் பொருட்டேயாதலானும், அத்தத்துவங்களையும் அவற்றில் நிற்கும் சிவபேதங்களையும் கடந்து செல்லுதற்குரிய நிலையில் அவற்றில் கட்டுப்பட்டிருப்பது உயிரேயாதலானும் தத்துவங்களெல்லாம் உயிர்களோடு பொருந்துவனவாம். சுத்த சிவனே சுத்த மாயாதத்துவங்களைப் பொருந்தித் தொழில் செய்வன் என்றறிக. (341)

**வெளிகால் கனலப்பு மேவுமண் ணின்ற**
**தளியா கியதற் பரங்கா ணவன்றான்**
**வெளிகால் கனலப்பு மேவுமண் ணின்ற**
**வெளியாய சத்தி யவனவடி வாமே.** 2463

இ-ள்: ஆகாயம் வாயு தேயு அப்பு முதலியவற்றோடு பொருந்தும் பிருதிவி என்னும் ஐந்து

பூதங்களும் பிற தத்துவங்களும் அசுத்தப் பிரபஞ்சம் எனப்படும். அசுத்தம் மிசிரம் சுத்தம் என்னும் மூவகைப் பிரபஞ்சங்களுள் அசுத்தப் பிரபஞ்சங்கள் எல்லாம் முக்குண மயமுடையன ; முதல்வன் முக்குணங்களைக் கடந்தவன் ; இவற்றுள் அவன் ஒன்றாக அறியப்படான். வெளி – ஆகாயம். கால் – காற்று, வாயு. கனல் – நெருப்பு. அப்பு – நீர். மண் – நிலம். இறைவன் நிர்க்குணன், மாயா குணங்களுடையனல்லன். மிசிரப் பிரபஞ்சம் முக்குணங்களைக் கடந்து நிர்க்குணமாய் உள்ளது ; ஆயினும் மலகன்மங்களோடு விரவியுள்ளது. ஆகலான் மலகாரியங்களாலும் கன்மகாரியங்களா லுமே அறியப்படும். அசுத்தப் பிரபஞ்சம் சத்துவ இராசத தாமதகுண விருத்திகளாலே அறியப்படும். சுத்தப்பிரபஞ்சம் மலகன்மங்களையும் கடந்து நின்மல மாயுள்ளது. அது காரியப்பட்டு அநித்தமாம் இயல் புடையது.

வெளிமுதல் மண்வரை தோற்ற முறைபற்றிக் கூறினர், அதன்மேல் ஒடுக்கமுறைபற்றி வெளிக்கு மேலுள்ள தத்துவங்களும் இங்கே கொள்ளப்படும். நிலம் முதல் நாதம் வரையிலுள்ள தத்துவங்கள் யாவும் அசத்தாம். இப்பிரபஞ்சங்களில் ஒன்றாயும் வேறாயும் உடனிருந்தும் இறைவன் இன்ன தன்மையன் எனச் சுட்டியறியப்படான்.

நின்றது அளியாகிய தற்பரம்காண் – அவ்வாறு கலப்புற்றது அருளாகிய காரணம் ; அவன் தனக்குத் தானே பரனுயுள்ளான். ஆன்மா இம்மூவகைப் பி

பஞ்சத்துட்பட்டுச் சகுணனுயும் சமலனுயும் பொது இயல்புபற்றி அறியப்படும். தற்பரமாயுள்ள அம்முதல் அவ்வாறும் அறியப்படான்.

அவன்றான் – நிர்க்குணனுயும் நின்மலனுயும் தற் பரமாயும் நின்ற அம்முதல்வன்,

வெளி கால் கனல் அப்பு மேவும் மண் நின்ற – வெளிமுதல் மண்ணீருகவுள்ள தத்துவங்களும், வெளி யின் மேலுள்ள தத்துவங்களும் ஆகிய எல்லாம் பிர கிருதிமாயை அசுத்தமாயை சுத்தமாயைகளாகிய நிலை பெற்றிருக்கின்ற பரமாகாய சத்தியினுல் செயற்படு வனவாம். (342)

மேருவி னேடே விரிகதிர் மண்டலம்
ஆர நினையும் அருந்தவ யோகிக்குச்
சீரார் தவஞ்செய்யிற் சிவனருள் தானுகும்
பேரவும் வேண்டாம் பிறிதில்லை தானே. 2464

இ – ள்: மேரு – பொன்மலை ; இங்கே புருவ மத்தி. விரிகதிர் மண்டலம் – சூரியமண்டலம் ; இதயம். 'மேருவினேடே, விரிகதிர் மண்டலம் ஆர நினையும் அருந்தவயோகிக்கு' என்பது விரிந்த கிரணங்களையுடைய சூரியமண்டலமாகிய இதயத் திலே வைத்து மிகவும் போற்றும் அரிய தவத்தை யுடைய ஞானயோகிக்கு என்றதாம். ஆதித்த மண்டலம் இருதய கமலத்தில் அறுகோணமாய் எட்டு இதழ்களையுடைய மலர்போன்றது. அது வாழைப் பூப்போல் கீழ்நோக்கியிருக்கும். அதனை மேல்நோக்கி அலர்த்துதல்வேண்டும்.

அந்த இதயத்தில் இறைவனைப் பூசிக்கும் முறை எவ்வாறெனின், உந்தியில் பிருதிவி தத்துவம் கிழங் காகவும், ஏனைய அப்பு முதலிய இருபத்துமூன்று தத்துவங்களும் அவ்வுந்தியினின்று தோன்றி எண் விரல் அளவாயுள்ள தண்டாகிய நாளவடிவாகவும்; பொருந்திய அசுத்த மாயையின் காரியமாகிய வித்தியா தத்துவங்கள் ஏழும், சுத்த தத்துவத்தில் சுத்த வித்தை ஒன்றும் ஆக எட்டுத் தத்துவங்களும் எட்டு இதழ் வடிவாகவும்; சிதைவில்லாத அவ்விதழ் எட்டும் பிரணவம் முதலிய எட்டு அக்கரங்களை உடைய தாகவும்; ஈசுவரம், சதாசிவம் என்னும் இரண்டு தத்துவமும் அறுபத்து நான்கு பேதப்படும் ஆதலால் அறுபத்து நான்கு கேசரமாகிய பூந்தாது வடிவ மாகவும்; சத்தி தத்துவம் அக்கேசரங்களுக்கு உள்ளாகிய கொட்டை என்னும் பொகுட்டு வடிவ மாகவும்: அச்சத்திதத்துவமே அப்பொகுட்டிற் காணப்படும் ஐம்பத்தொரு அக்கரமாகிய பீசவடிவ மாகவும் உடைய நாட்டப்படும் இதயகமலம் விளங்கப்பெற்ற ஆசனமாம். அவ்வாசனத்தின்மேல் சத்தியே வடிவாகவும், அவ்வடிவத்தில் வீடு தருகின்ற வனாகிய சிவபெருமான் வடிவத்தை உடைய வனாகவும் நின்றருளுவன். இந்த முறையை அறிந்து போற்றும் அவர் ' அருந்தவயோகி ' என்றார்.

ஆசனம், மூர்த்தி, மூர்த்திமானைக் கொண்டு பூசிக்க, இதுவே அந்தரியாகபூசை என்னும் அகப் பூசையாம். மூர்த்தி – வடிவம்; மூர்த்திமான் – வடிவத்தை உடையான்.

இதனை,

" நாட்டுமித யந்தானும் நாபியினில் அடியாய்
ஞாலமுதல் தத்துவத்தால் எண்விரல் நாளத்தாய்
மூட்டுமோ கினிசுத்த வித்தைமல ரெட்டாய்
முழுவிதழெட் டக்கரங்கள் முறைமையினி
னுடைத்தாய்

காட்டுகம லாசனமேல் ஈசர்சதா சிவமும்
கலாமூர்த்த மாமிவற்றின் கண்ணுகும் சத்தி
வீட்டையருள் சிவன்மூர்த்தி மாஞகிச் சத்தி
மேலாகி நிற்பனிந்த விளைவறிந்து போற்றே"

எனச் சிவஞானசித்தியாரும்;

" மண்முதல் நாளமலர் வித்தை கலாரூபம்
எண்ணிய ஈசர் சதாசிவமும் — நண்ணிற்
கலையுருவாம் நாதமாம் சத்தியதன் கண்ணும்
நிலையதிலாம் அச்சிவன்தான் நேர்."

எனச் சிவஞானபேதம் உதாரண வெண்பாவும் கூறு தல் காண்க. அவ்வவ் வாகமபேதம் பற்றிப் பலர் பல வாறுகொள்வர். " அண்டமோர் அணுவாம் பெருமை கொண்டு கரணங்களெல்லாம் கடந்து நின்ற அவ் விறைவனே, அணுவோர் அண்டமாம் சிறுமை கொண்டு ஆன்மாக்கள் உய்தற்பொருட்டு உடம்பி னுள்ளும் அவ்வாறு நிற்கின்றான்; அதனை அறிந்து செய்யாதவழிப் பூசையாற் பயனில்லை" என ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் பொழிப்புரையில் அருளினர்.

இறைவன் " திருமேனி அஞ்செழுத்தால் அமைந்த பரிசும் உணர்ந்து, அம் முறையே அங்க நியாச கரநியாசங்களும் அவ்வைந்து எழுத்தாற்

செய்து கொண்டு, இதயம் உந்தி புருவநடு என்னும் மூன்றும் பூசைத்தானம் ஓமத்தானம் தியானத்தான மாகக் கற்பித்துக்கொண்டு, அங்ஙனம் வழிபட்டு நின்று கொண்டு அவ்வஞ்செழுத்தை விதிப்படியே மாறி நெஞ்சமுந்தி உச்சரித்தல் செய்க". என்பது.

விதிப்படி உச்சரிக்க வில்லையாயின் பயன்படா தென்க, விதியாவது. ஐந்தெழுத்தின் பொருள் சிவம் அருள் ஆன்மா திரோதை மலம் என ஐவகைப்படும்; இவற்றுள் மலம் திரோதையை நீக்கி ஆன்மா அருளால் சிவனுடன் கலக்கு முறையை உணர்த்துவ தாய ஐந்தெழுத்து முறையாம். அஃதாவது யகரம் நடுநிற்க, சிகரவகரங்கள் முறையே முன்னும் பின்னு மாய் நிற்றல். அது சிவோகம்பாவனையை உணர்த்து வதாம்.

இறைவனுக்கு ஐந்தெழுத்துத் தூலவடிவம், ஆன்மா சூக்கும வடிவம், சத்தி அதிசூக்கும வடிவமாம்

இந்த அந்தரியாக பூசையினையே, திருநாவுக்கரசு சுவாமிகள் ;

"காயமே கோயி லாகக் கடிமன மடிமை யாக
வாய்மையே தூய்மை யாக மனமணி யிலிங்க மாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீ ரமைய
வாட்டிப்
பூசனை யீச னார்க்குப் போற்றவிக் காட்டி னோமே."

எனவும்,

"உடம்பெனு மனைய கத்து வுள்ளமே தகளியாக
மடம்படு முணர்நெய் யட்டி யுயிரெனுந் திரிம யக்கி
இடம்படு ஞானத் தீயா லெரிகொள விருந்து
நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே."

எனவும் தேவாரத்தில் அருளிச்செய்தமை காண்க.

நியாசம் வருமாறு: யம் ஈசான வக்த்ரம், வம் தற்புருட வக்த்ரம், சிம் அகோர வக்த்ரம், மம் வாம தேவ வக்த்ரம், நம் சத்தியோஜாத வக்த்ரம்; இவை முண்டபங்கி நியாசம்.

யம் சிரசு, வம் வதனம், சிம் இருதயம், மம் நாபி, நம் பாதம் இவை தண்டபங்கி நியாசம்.

யம் இருதயம், வம் சிரசு, சிம் சிகை, மம் கவசம், நம் நேத்திரம், ஔவும் அஸ்திரம்; இந்தப்படி அங்க நியாசம் கரநியாசம்பண்ணி ஆனந்த நிருத்த தாண்டவத்தை இருதய கமலத்திலே அநேககோடி பாலாதித்தப் பிரகாசரூபமாகத் தியானிக்க, அவ்வாறு தியானஞ் செய்து அந்தப் பேரொளிக்குள்ளே தற்போதங்கெட அழுந்தியிருப்பதுவே அருந்தவ யோகிக்குத் தவமாம் என்க.

இதய கமலத்து இதழ்களில் எட்டெழுத்துக் களையும் உபதேசமுறையில் வைத்துத் தியானிக்க, இவ்விதழ்களில் மறைஞானதேசிகர் ஒருவிதமாகவும், சிவாக்கிரயோகிகள் ஒருவிதமாகவும், ஞானப்பிரகாசர் ஒருவிதமாகவும் வைத்துத் தியானிக்க என்பர்.

ஸ்ரீ சிவாக்கிரயோகிகள் அருளிய அங்கநியாச கர நியாசங்கள் வருமாறு :

ஓம் ஹோம் யம் ஈசான மூர்த்நே நம :
ஓம் ஹேம் வம் தத்புருஷ வக்த்ராய நம :
ஓம் ஹும் சிம் அகோர ஹ்ருதயாய நம :
ஓம் ஹிம் மம் வாமதேவ குஹ்யாய நம :
ஓம் ஹம் நம் சத்யோஜாத மூர்த்தயே நம :

இவை அங்கநியாசம்.

ஓம் ஹாம் ஹம் இருதயாய நம :
ஓம் ஹீம் நம் சிரசே ஸ்வாஹா
ஓம ஹூம் மம் சிகாயை வஷட்
ஓம் ஹைம் சிம் கவசாய ஹும்
ஓம் ஹௌம் வம் நேத்ரத்திரயாய வௌஷட்
ஓம் ஹ : யம் அஸ்த்ராய பட்

இவை கரநியாசம் என அறிக.

"இதய பங்கயத்தில் அவ்வஞ் செழுத்தால் அமைந்த திருமேனியில் அம்முதல்வனைக் கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்னும் அட்ட புட்பம்கொண்டு அம்மனுவால் அர்ச்சனை செய்து"

"அத்திருமந்திரத்தானே குண்டலித் தானமான உந்தியில் ஞான அனலை எழுப்பி அதன்கண் விந்துத் தானத்து அமிழ்தமாகிய நெய்யைச் சுழுமுனை நாடி இடைநாடியாகிய சுருக்குச் சுருவங்களால் ஓமித்து"

"விந்துத்தானமாகிய புருவநடுவில் சிகர, யகர வகரங்கள் மூன்றும் முறையே தற்பதப் பொருளும் துவம்பதப் பொருளும் அசிபதப் பொருளுமாம் முறைமை நோக்கி அதனாற் சிவோகம்பாவனை செய்வானாயின் அப்பொழுதே அப்பாவனைக்கண் அம் முதல்வன் விளங்கித் தோன்றுவன். அப்பாவகன் அவனுக்குச் சேட சேடிய பாவகத்தால் அடிமை யாவன்" என்க. (சிவஞானபோதம் – உண்மை – சாதன).

"இருதய நாப்பண் அஞ்செழுத் துருவின்
இறைவனை யுயிர்க்கொலை செயாமை
அருள்பொறி யடக்கல் பொறைதவம் வாய்மை
அன்பறி வென்னுமெண் மலர்கொண்(டு)
ஒருமையொ டருச்சித் திடுகவென் றடியார்க்
கொள்ளிய தீக்கைசெய் துணர்த்தத்
திருவமர் துறைசை யுறையருட் குருவாந்
திருநமச் சிவாயர்தாள் போற்றி"

எனவும்,

"மலமெனுந் தடத்திற் கருமசே தகத்தின்
மாயையாங் கிழங்கிலங் குரித்த
மன்னுமூ வெட்டாந் தத்துவ நாள
மலரிதழ் வித்தையேழ் வித்தை
நலமிகு மீசன் சதாசிவ மிரண்டும்
நண்ணுகே சரங்களாஞ் சத்தி
நற்பொகுட் டாகு நாதமே விந்து
நயந்தகண் ணுமென விரவி

இலகுமென் னுடலப் பதுமபீ டிகைநீ
யிருந்தரு ளாசன மெனுமல்
எனதுபுக் கிலதா யெண்ணினேன் தெளிய
இயலருட் பார்வைதந் தனையே
அலகிலா வுயிர்கள் மலதடைக் கிலையாய்
அருணடைக் குண்மையாய் நின்ற
ஆவடு துறைசை அம்பலவாணு
அடியவர்க் கருளுமா நிதியே "

— உலகுடையநாயனார்.

எனவும் வரும் திருவாக்குகள்பற்றி உணர்க.

'சீரார் தவஞ் செய்யின்' என்றது 'ஈண்டு இவ் வான்மாக்கட்கு முற்செய் தவத்தான் ஞானம் நிகழும் என்றது' மேற்கோள்.

'மேற்கூறிப் போந்த இயல்புடைய ஆன்மாக் களுக்குப் படிமுறையானன்றி இவ்வொரு பிறவியிற் செய்த தவத்தான் அமையாது முற்பிறவிகளிலே செய்துவந்த தவமாகிய சரியை கிரியா யோக விசேடத்தால் குரவன் உணர்த்தியவாறு சிவஞானம் கண்ணுகக் கொண்டு அறிவதாகிய சாதன அறிவா னது ஐயந்திரிபின்றி விளங்கும்' என்பது ஸ்ரீ சுப்பிர மணிய தேசிகர் உரை.

"மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டி யல்லது மோக்ஷத்தைக் கொடா வாகலான்"

என்றது ஏது.

'முற்பிறவிகளில் சரியை கிரியா யோகங்களாகிய தவங்களைச் செய்து முற்றுப்பெற்றவிடத்து அத்தவங்கள் தாம் வீடுபேறு எய்துதற்குச் சன்மார்க்கமாகிய மேற்கூறிய ஞானத்தைப் பயப்பித்தன்றி முத்தியைக் கொடுப்பன அல்ல. ஆகலான், ஆன்மாக்களுக்கு முற்செய்தவத்தான் ஞானம் நிகழும் எனமேற்கொண்டது என்க,' ........ உரை.

சிவன் அருள் தானாக நிற்கும் – சிவபெருமானுடைய திருவருள் வெளிப்பட்டுத் தானாகவே நிற்கும்; திருவருள் வெளிப்பட்டுத் தானான சிவமாந் தன்மைப் பெருவாழ்வைத் தரும். ஆகலின், அத்திருவருள் துணையாகவே சிவவாழ்வு சித்திக்கும், அவ்வாழ்வினை விட்டு நீங்காமல்நிற்க என்பார் 'பேரவும் வேண்டாம்' என்றார். 'பிறிது இல்லை தானே' – இறைவன் திருவருளின் மேலானது வேறொன்றும் இல்லை: அதற்கு அதுவே மேலானதாம் என்றவாறு.

## ௨௨. முத்துரியம்

நனவாதி மூன்றினிற் சீவ துரியந்
தனதாதி மூன்றினிற் பரதுரி யந்தான்
நனவாதி மூன்றி னிற்சிவ துரியமா
மினதாகுந் தொந்தத் தசிபதத் தீடே. 2465

இதன்பொருள்; துரியம் மூன்று உள்ளன. அவை சீவதுரியம், பரதுரியம், சிவதுரியம் என்பனவாம். சீவதுரியம் நனவு கனவு உறக்கம் ஆம். துரியம் செயலற்றநிலை ஆகும். எல்லாவற்றிற்கும்

நிமித்த காரணமாக விளங்கும் சிவபெருமானிடத்தும் மேலே கூறிய நனவு கனவு உறக்கம் முதலிய மூன்று நிலைகளும் உள்ளன. அவை தம்மைச்சார்ந்த ஆன்மாக்களின் பொருட்டாகவே உள; அவை சிவதுரியம் என்று சொல்லப்படும். இரண்டாவதாகக் கூறப்பட்ட பரதுரியமும் இந்த மூன்று வகைப்பட்ட நிலையினை யுடையது. தனதாதி என்றது பராவத்தையில் நனவாதியை என்க. சிவதுரியம் ஆம் இ(ன்)னது தொம் தத் அசி பதத்து ஈடே ஆகும். ஈடு என்றது வியாபகத்தை. நீ அது ஆகின்றாய் = தொம் தத் அசி என்பது. த்வம் = தொம் – நீ; தத் - அது; அசி – ஆகின்றாய் என்க. நனவு – சாக்கிரம், கனவு - சொப்பனம். உறக்கம் – சுழுத்தி, சிகார யகார வகாரங்கள் முறையே தற்பதப் பொருளும் துவம் பதப்பொருளும் அசிபதப்பொருளுமாம் என அறிக என்றவாறு. (344)

> தாஞ நனவில் துரியந்தன் தொம்பதம்
> தாஞந் துரிய நனவாதீ தான்மூன்றில்
> ஆஞப் பரபத மற்ற தருநஞ
> வாஞன மேன்மூன்றுந் துரியம் அணுகுமே. 2466

இ – ள் : தான் ஆம் நனவில் – சீவ அவத்தை யாகிய நனவின்கண், துரியம் தன் – பேருறக்கம் ஆகிய துரியத்து, தொம்பதம் – நீ என்னும் தொம்பதமாக நிற்குமாம், தான் ஆம் துரியம் – சீவ அவத்தை யாகிய துரியத்திலே பேசப்படுகின்ற, நனவு ஆதி தான் மூன்றில் – நனவு கனவு சுழுத்தி என்னும் மூன்றில், ஆறு பரபதம் அற்றது – நீங்காத பராவத்தையின் முடிந்த இடமாகும், அரு நறு – அந்தப் பராவத்தையின் முடிந்த இடமே அந்நிலைக்கு உரிய நனவு

என்று சொல்லப்படும், வான் ஆன மேல் முத்துரியம் அணுகும் -சிறந்ததாகிய சிவாவத்தையில் சுழுத்தி துரியம் துரியாதீதம் முதலிய மூன்றும் வந்து பொருந்தும் என்றவாறு.

தான் ஆம் நனவு – சீவ அவத்தையாகிய நனவு. துரியம்–துரியநிலை; அது பேருறக்கம். தொம் = த்வம்– நீ. தான் ஆம் துரியம்–சீவ அவத்தையிலுள்ள துரியம். பரபதம் அற்றது – பராவத்தையின் முடிந்த இடம். மேல் மூன்றும் – சிவாவத்தையின்கண் சுழுத்தி முதலிய மூன்றும். (345)

அணுவின் துரியத்து நான்கும தாகிப்
பணியும் பரதுரி யம்பயி னுன்குந்
தணிவிற் பரமாகிச் சார்முத் துரியக்
கணுவிலிந் நான்குங் கலந்தவீ ரைந்தே 2467

இ – ள்: அணுவின் துரியத்து – அணு எனப்படும் சீவதுரியத்திலே, அது ஆகி பணியும் பரதுரியம்- திருவருளேயாகிப் பணிசெய்யும் பரதுரியத்திலே, பயில் நான்கும் – உண்டாகின்ற நான்கும், தணிவு இல் பரம் ஆகி சார் முத்துரியக் கணுவில் – நீங்காத மேம்பாடு உடையதாய்ப் பொருந்தும் சிவதுரியமாகிய பரம அவத்தையில் நிகழ்கின்ற துரியம் துரியாதீதம் என்னும் சேர்க்கையில், இ நான்கும் கலந்த ஈர் ஐந்து – இமே சொல்லப்பட்ட சீவதுரியம் நான்கும் பர துரியம் நான்குமாகிய இந்த எட்டுடன் கலப்புற்ற பத்தாகும் என்றவாறு.

இ (ஈர்) நான்கும் கலந்த ஈர் ஐந்து என்க. அணுவின் துரியம் நான்கு. கணு – சேர்க்கை; இருபகுதி

களும் கலந்த இடம் கனு : "கனுமுற்றி நின்ற கரும் புள்ளே காட்டி" (விநாயகரகவல்). நான்கு என்றது சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் என்பன வற்றை. பரம் ஆகிச் சார்தலாவது பராவத்தையில் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்பது; மேல் துரியம் துரியாதீதம் என்னும் இரண்டுமாம். எனவே சீவதுரியம் நான்கு, பரதுரியம் நான்கு, பராவத்தை யில் துரியம் துரியாதீதம் என்னும் இரண்டு; ஆகப் பத்து என்க (346)

ஈரைந் தவத்தை யிசைமுத் துரியத்துள்
நேரந்த மாக நெறிவழி யேசென்று
பாரந்த மான பராபரத் தயிக்கியத்
தோரந்த மாமிரு பாதியைச் சேர்த்திடே. 2468

இ - ள் : ஈர் ஐந்து அவத்தை இசை முத்துரியத் துள் - பத்து அவத்தைகளைப் பொருந்திய சீவதுரியம், பரதுரியம், சிவதுரியம் என்று சொல்லப்படும் மூன்று துரியங்களுள், நேர் அந்தம் ஆக - திருவடிப் பேற்றினை அடையும்பொருட்டு, நெறிவழியேசென்று - சித்தாந்த சைவ நெறியின்கண் உபதேசமுறையாக அநுபவத்திற் சென்றால், பார் அந்தம் ஆன பராபரத்து ஐக்கியத்து-இகத்தற்கரிய பெரிய முடிவான மேலான வற்றினும் மேலாகவுள்ள பரசிவத்தினேடு இரண் டறக் கலத்தலின்கண், இரு பாதியைச் சேர்த்திடு ஓர் அந்தம் ஆம் - இரண்டு கூறு எனச் சொல்லப் படும் சிவபெருமானுடைய திருவடியைக் கூட்டு விக்கும் என்றவாறு.

ஈர் ஐந்து அவத்தை - பத்தவத்தை. அவை முன் மந்திரத்தில் சொல்லிய சீவதுரியம் நான்கு. பரதுரியம்

நான்கு, சிவதுரியம் துரியாதீதம் என்பன. நேர் அந்தம் என்றது சிவப்பேற்றை; அது திருவடிப்பேறு எனவும் வழங்கும். நெறி – சித்தாந்த சைவநெறி. ஓர் அந்தம் – ஒப்பற்ற முடிவு. பார் அந்தம் என்றது நிலமுதலாகச் சொல்லப்பட்ட முப்பத்தாறு தத்துவங் களின் முடிவு; அது சத்துவாதீதம், தத்துவாதீதமான பராபரம். பராத் பரம் = பராபரம் – மேலானவற்றி னும் மேலாகவுள்ளது. (347)

தொட்டே யிருமின் துரிய நிலத்தினை
எட்டா தெனினின் றெட்டும் இறைவனைப்
பட்டாங் கறிந்திடிற் பன்னு வுதடுகள்
தட்டா தொழிவதோர் தத்துவந் தானே. 2469

இ – ள்: துரிய நிலத்தினை தொட்டே இருமின் – துரிய பூமியை நீங்காமல் உணர்வில் உணர்ந்திருங்கள், எட்டாது எனின் – அந்நிலையினில் நில்லாதவருக்கு எட்டாத தன்மையுடையதாயினும், ( உணர்வார்க்கு அவர் உணர்வின்கண் ) நின்று எட்டும் இறைவனை – நிலைபெற்று விளங்கும் அப்பரம்பொருளை, பட்டாங்கு அறிந்திடில் – உண்மையாகவே உணர்ந்திடின், பல் நா உதடுகள் தட்டாது ஒழிவது – பல்லும் நாவும் இதழ் களும் பிறவும் கூடிப் பிறக்கும் சுத்த மாயா காரிய மாகிய சொற்களுக்கு அகப்படாமல் நீங்கி நிற்பதாம் என்றவாறு.

இனி, “ பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாய்ச் சட மாய் முதல்வனுக்குப் பரிக்கிரக சத்தியாய் முதல் வனின் வியாப்பியமாய் மெய்ப்பொருளாய் அருவா யுள்ளது மாயை ; அது சுத்த மாயை அசுத்த மாயை

என்று இருவகைப்படும். சுத்த மாயை, மாமாயை, குடிலை, குண்டலி, விந்து என்பன ஒரு பொருட் கிளவி. அசுத்தமாயை அதோமாயை மாயை மோகினி என்பன ஒரு பொருட்கிளவி. இவற்றுள், சுத்தப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் சுத்தமாயை; அசுத்தப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் அசுத்தமாயை. சுத்தப் பிரபஞ்சம் சிவதத்துவம் முதலாயின. 'அசுத்தப் பிரபஞ்சம் கலை முதலாயின.'' சுத்தம் என்பது துன்பத்தோடு விரவுதலின்றி இன்ப மாத்திரையே பயத்தற்கு ஏதுவாயது. ஏனையது அசுத்தம் என்க.

"பெயர் சாதி முதலிய சவிகற்பவுணர்வு எழுத்தாகிய சொல்லானன்றிப் பெறப்படாது. ஆகலின், அவ்வெழுத்தோசைக்குக் காரணம் சுத்தமாயை. காரணம் இன்றிக் காரியந்தோன்றாது. எழுத்தோசை அநித்தம்."

" சத்த தன்மாத்திரையின் காரியமாகிய ஆகாயமே சத்தத்திற்கெல்லாம் காரணம் ஆயினும், எழுத்து ஓசைக்கு வேறு காரணம் உண்டு. ஆகாயம் எழுத்தோசையைப் புலப்படுத்துவதாகிய இசையோசைக்கே காரணமாவதன்றி, அதனாற் புலப்படுவதாகிய எழுத்தோசைக்குக் காரணம் ஆகாதென்க. ஒளியும் உருவமும் போலப் புலப்படுப்பதும் புலப்படுவதுமாகிய இசையோசைக்கும் எழுத்தோசைக்கும் தம்முள் வேற்றுமை அனுபவத்தின் வெளிப்படத் தோன்றுதலானும். கடலோசை முதலாயின எழுத்தோசையின் வேறுதல் எல்லார்க்கும் ஒப்பமுடிந்ததாகலானும். அவ்விரண்டன் காரணமும் தம்முள் வேறு என்பது துணியப்படும்' என்க. இன்னும்,

அங்காப்பு முதலிய அகமுயற்சியாற் பிறப்பது எழுத்தோசை எனவும், அதனைப் புலப்படுப்பதாய் எடுத்தல் படுத்தல் முதலிய புறமுயற்சியாற் பிறப்பது இசையோசை எனவும் இவ்வேறுபாடு தெரிந்துணர்ந்து கொள்க."

"எழுத்தோசையாகிய வாக்கு ஒன்றுதானே உபாதியின்மையின் சுத்த மாயாகாரியங்களில் சூக்குமமாயும், இசையோசை முதலிய உபாதிவயத்தான் அசுத்த மாயாகாரியங்களில் தூலமாயும், பிரகிருதி மாயா காரியங்களில் அதிதூலமாயும் நிற்றலின், அவ்வுபாதி வயத்தானே நம்மனோர்க்குப் புலப்படும் என்றுணர்க." விரிப்பிற்பெருகும். (348)

அறிவா யசத்தென்னு மாறா றகன்று
செறிவாய மாயை சிதைத்தரு ளாலே
பிறியாத பேரரு ளாயிடும் பெற்றி
நெறியான அன்பர் நிலையறிந் தாரே. 2470

இ – ள்: அறிவு ஆய் – சித்தாக மிஞ்சி; அசத்து என்னும் – அசத்து என்று சொல்லப்படும். ஆறாறு அகன்று - முப்பத்தாறு தத்துவங்களையும் விட்டுநீங்கி; செறிவு ஆய மாயை சிதைத்து – நெருங்கியுள்ள பிரகிருதி மாயை அசுத்தமாயை சுத்தமாயை என்பவைகளைக் கீழ்ப்படுத்தி, அருளாலே – திருவருட் சத்தியாகிய பராசத்தியின் துணையைக்கொண்டு, பிறியாத பேரருள் ஆயிடும் பெற்றி – பிறிவில்லாத பரை என்றும் சிவம் என்றும் இன்றிப் பொருந்திடும் தன்மை. நெறி ஆன அன்பர் – முறை குருவருளும் திருவருளும் கூட்ட அந்த வழியே சென்று

அனுபவத்தில் தலைப்பட்டுநின்ற முத்தர்கள், நிலை அறிந்தார் — அப்பரம்பொருளின் நிலை இன்னதென உணர்ந்து சிவபோகத்தில் திளைத்திருந்தார் என்ற வாறு.

நிலம் முதல் நாதம் வரையில் உள்ள தத்துவங்கள் யாவும் அசத்தாம். மாயை சிதைத்தலாவது மாயா காரியங்களை இன்னின்ன எனக்கண்டு நீங்குதலாம். (349)

* மனவு நனவு கனவது புந்தி
நினைவி லகந்தை சுழுனையுள் நிற்றல்
அதனை அறிசித்தந் துரியமிம் மூன்றின்
நினைவறல் மற்றது நேயத் தளவே.

இ - ள் : மனவு நனவு கனவு அதுபுந்தி நினைவில் அகந்தை — ஆன்மாக்களுக்கு உளவாகும் நனவு கனவு ஆகிய இரண்டு அவத்தைகளினும் அகக்கருவிகளாகிய மனம் சித்தம் புத்தி அகங்காரங்களில் சித்தம் ஒன்று மின்றி மற்றை மூன்று கருவிகளும் நன்குகத் தொழிற்பட்டு நிற்கும், சுழுனையுள் நிற்றல் அதனை அறிசித்தம் — சுழுத்தி அவத்தையில் அந்த நிலையினை மட்டும் அறியக்கூடிய சித்தம் மட்டும் உளதாம், இம்மூன்றின் நினைவு அறல் துரியம் — சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்னும் மூன்று அவத்தைகளின் நினைவும் நீங்குதல் துரிய நிலையாம். அஃது அருள்நிலை என்பர். மற்றது — சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் எனும் நான்கு நிலைகளும் கடந்த துரியாதீதம்,

* இது கழகப்பதிப்பில் கண்டது.

நேயத்து அளவே - நேயப்பொருளாகிய சிவத்துடன் இரண்டறக் கலந்து நிற்றலேயாம் என்றவாறு.

தைசத அகங்காரத்தினின்று மனம் தோன்றும் அந்த மனமானது எதிர்ப்பட்டதொரு பொருளைச் சித்த ரூபமாய் நின்று அப்பொருளின் உண்மையை அறியாமல் பிண்டமாக அறிந்து சிந்திக்கும். மனம் சிந்தித்த பின்பு இதுவோ அதுவோ என்று அப் பொருளின்கண் ஐயுற்று நிற்கும். சந்தேகித்து நிற்ற லால் மனம் என்றும், சிந்தித்து நிற்றலால் சித்த மென்றும் மனம் இருவகைப்பட்டு நிற்கும்.

ஆன்மா, குருவருளால் மறுதிகளை அடக்கி, அகத்தே திரும்பி ஒரு குறியின் கண்ணே அறிவை நிறுத்தி, இறைவனை அறிந்து, அவ்வாறு அறிகின்ற முறையில் நிலைபெற்ற அவ்வியல்பினை அறிந்து, அங்ஙனம் அறியுங்கால் அறியும் பசு கரணங்களெல் லாம் சிவகரணங்களாகப் பேணி, இவ்வாறு கருவிக ளோடு தொழிற்பட்டு நிற்பதாகிய சகல சாக்கிரத்தில் தானே கருவி ஒன்றனோடுங்கூடாத நின்மல துரியாதீத நிலை கைகூடும்படி முயலவேண்டும். முயன்றால் சிவாநுபவத்தைத் தமதாகக் கொண்டு அநுபவிக் கலாம்.

மேற்கூறியவாறு சாக்கிரத்தில் நின்றுகொண்டே பசுகரணங்கள் எல்லாம் சிவகரணமாகக் கரணங் கடந்த துரியாதீதத்தைப் பயில்கின்றவர்கள் இவ்வுல கின்கண்ணே கருவிகளினின்றும் நீங்கி நிட்டை பொருந்தினவரோடு ஒப்பச் சிறந்தவரே ஆவர்.

"மருவுபசு கரணங்கள் சிவகரண மாகத், துன்னிய சாக்கிரமதனில் துரியாதீதந் தோன்றமுயல்"

எனவும். "மாயையமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை. ஆயவா ருயிரின் மேவு மருளெனி லொளியாய் நிற்கும்" எனவும் இவ்வாறு ஓதுதல் பற்றியுணர்க. ஆண்டுப் பசுகரணம் போலப் பாசஞான மும் சிவஞானமேயாம் என்பது பெறப்படுதலின் "ஆற்றலைக் கடற்கே பாய்ந்த நீரந்நீர்மை, மாற்றியவ் வாற்றான் மறித்தாற்போல்" (திருக்களிற் – 11). ஆற்று நீரானது ஆற்றின்வழியே சென்று அலையை யுடைய கடலில் ஒன்றாய்க் கலந்து தன் தன்மை கெட்டிருக்கும். அது மறுபடியும் அந்த ஆற்றிலே நெடுந்தூரம்சென்று எதிர்த்தாலும், உப்புநீராகவே இருக்கும். அதாவது கடல் நீரைக் கலந்ததனால் உண்டாகிய உப்புமயமாகவே இருக்கும் என்றபடி.

நனவின் நனவாதி நாலாந் துரியந்
தனதுயிர் தொம்பத மாமாறு போல
வினையறு சீவன் நனவாதி யாகத்
தனைய பரதுரி யந்தற் பதமே. 2471

இ – ள் : நனவின் நனவு ஆதி துரியம் நாலாம் – சாக்கிரத்தில் சாக்கிரம் சாக்கிரத்தில் சொப்பனம் சாக்கிரத்தில் சுழுத்தி சாக்கிரத்தில் துரியம் என்னும் அவத்தைகளில் துரிய அவத்தை நான்காவதாம், (சாக்கிரத்தில் துரியாதீதம் என்பது ஐந்தாவது அவத்தையாம்). தனது உயிர் – ஆன்மா கலப்புநிலையில், (த்வம்) தொம்பதம் ஆமாறுபோல – தொம்பதம் (நீ) என்று நிற்குமாறு போலவே, வினை அறு சீவன் நனவு ஆதியாக – வினையினின்று நீங்கிய ஆன்மா, நின்மல நிலையிலே நனவு முதலாக, தனைய – தானாகிய, பரதுரியம் தற்பதம் – பரதுரிய நிலையை அடைந்து

அதனையும் கடந்துநின்ற துரியாதீத நிலையிலே இரண்டற நிற்கும் என்றவாறு.

தனைய – தானாகிய, பரதுரியம் தற்பதம் – பராவத்தையில் துரியமே தற்பதமாம்.

இதனால், சுத்தம் என்னும் அபர விந்துவையும், வெளியாய அபரநாதத்தையும், பாழாய பரவிந்துவையும், வெறும் பாழாய பரநாதத்தையும் கடந்து, உயிர் என்பது ஒரு முதலும் அற்று ஞேயம் தானே ஆகுகையால் தற்பதம் என்றார். (350)

தொம்பதந் தற்பதஞ் சொன்முத் துரியம்போல்
நம்பிய மூன்றுந் துரியத்து நற்றும
அம்புவி யுன்ன அதிசூக்க மப்பாலைச்
செம்பொருள் ஆண்டருள் சீர்நந்தி தானே. 2472

இ – ள் : தொம் பதம் தற்பதம் சொல் முத்துரியம் போல் – முற்படச்சொல்லிய சீவதுரியமும் பரதுரியமும் சிவதுரியமும் ஆகிய மூன்று துரியநிலைக்கண்ணும் தொம்பதமும் தற்பதமும் சொல்லப்படும் (ஆயினும்) அதுபோல, நம்பிய மூன்றும் துரியத்து – நம்புதற்கு இடமான மூன்றும் துரியமாகிய சிவதுரியத்தின்கண், நன்று ஆகும் அம்புவி உன்ன அதிசூக்கம் – நன்மையைத் தேடுதற்கு ஏதுவாகிய நிலவுலகத்தையும் அதன்கண் உளவாம் போக நுகர்ச்சிகளையும் எண்ணுவதற்கு இடமில்லாத அதிசூக்குமமும், அப்பாலை செம்பொருள் – அதற்கப்பால் செம்பொருளாகவுமிருந்து, ஆண்டருள் சீர்நந்தி தான் அன்றே – ஆன்மாக்களை மீண்டும் பிறவியின் வாராமல் ஆட்கொண்டருளும் சிறப்பினையுடைய

நந்தியென்னும் நாமத்தையுடைய பரம்பொருள் சிவபெருமானேயாவர் என்றவாறு.

மூன்றுந்துரியம் – சிவதுரியம். செம்பொருள் – மெய்ப்பொருள்.

எனவே, சுத்தமாயாகாரணம் கடந்து நின்மலமாகி நிராமயமானபரவிந்து என்னும் பராசத்தியினது முடிவில்லாத வியாத்தியாகிச் சித்தம் செல்லாத சூனியம் எங்கும் குறைவற நிரம்பி, அவ்வளவிலும் நில்லாது பரந்து ஞானபாதங்களில் முதற்பேசப்பட்ட பராசத்தி ஞானத்து மேலாகி, பூரணமான பரநாதத்தையும் தனக்குள்ளேயாக மேல் தனது எல்லையளவு செறிந்து ஓடும் நீர்மையாய்ச் சுத்தப் பேரறிவேயாகி, வேறுசந்தேகமில்லாது தீர்ந்து, பாதாள சத்திதொடங்கிப் பரந்த வியாபகமும் பலவாய சத்திகளும் அன்றி, சட சித்தாகிய எல்லாப் பொருள்களின் ஞானங்களும் தனதே ஆகிய ஆயினும், சேர்ந்த உயிர்களுக்குச் சுத்த முத்தியும் கொடுத்து உயிர்களுக்கு உயிராய் நிற்கும் பாமாய் நிர்மலமாய் நித்தமாய் ஒன்றுய்ச் செப்பற்கரிய தாய் தற்சிவம் நிற்கும் என அறிக. (351)

## உ௩. முக்முத்தி

சீவன்றன் முத்தி யதீதம் பரமுத்தி
ஓயுப சாந்தஞ் சிவமுத்தி யானந்த
மூவயின் முச்சொருப முத்திமுப் பாலதாய்
ஓவுறு தாரத்தில் உள்ளுநா தாந்தமே. 2473

இ – ள்: சீவன் தன் முத்தி அதீதம் – சீவன் முத்தியாவது துரியாதீத நிலையாகும், ஓய் உபசாந்தம்

பர முத்தி – ஆன்மா தன்செயல் ஒன்றின்றி அருளின் வழியே நிற்கும் நிலையே பரமுத்தியாம். சிவமுத்தி ஆனந்தம் – சிவமுத்தி என்பது சிவானந்தமாம்; அது பரை என்றும் சிவம் என்றும் இன்றி இரண்டறக் கலந்து நின்ற இடமே சிவானந்தம் என்றறிக. மூவயின் முச்சொரூப முத்தி முப்பாலது ஆய் - மேலே கூறிய முறையால் மூன்று இடங்களினும் சீவன் முத்தி பரமுத்தி சிவமுத்தி என மூவகைப்பட்டு விளங்குவதாய், ஒவு உறு தாரத்தில் – செயலொன்றின்றி ஒழிவினைத் தருகின்ற பிரணவமாகிய தாரகத்தில், உள்ளும் நாதாந்தம் ஏ – எண்ணும் நாதாந்தமேயாம் எ – று.

ஒவுறு தாரம் - பிரணவம்.

பிரித்தறியவராது ஆனந்த சொரூபமாய் நிற்றலே சிவபோகம் என்பது. நிர்விகாரியாக்கல் நின்மல சாக்கிரம், தன்வண்ணமாகச் செய்தல் நின்மல சொப்பனம், தன்னோடு ஒப்பச் செய்தல் நின்மல சுழுத்தி, அடங்கி நிற்கச் செய்தல் நின்மல துரியம், ஆனந்த சொரூபமாய் நிற்கச் செய்தல் நின்மல துரியாதீதம் எனவும் அறிக.

இனி, இங்கே கூறிய முத்திகள் சீவன்முத்தி பரமுத்தி சிவமுத்தி என்பன. சிவப்பேறு என்பதே முத்தி எனப்படும். முத்தி என்பது விடுதல். விடுதற்குச் செயப்படுபொருள் பாசம். ஆயினும் சிவத்தைப்பற்றி நின்றே விடவேண்டும். ஆதலின், சிவப்பேறே தலைமையாய முத்தி எனப்படும். அம் முத்தியும் பரமுத்தி சீவன்முத்தி என இருதிறத்துள் அடங்கும். பரமுத்தியாவது, பரனுகவே பேதமற நின்று பாசத்தை விடுதல். சீவன்முத்தியாவது,

சீவனுகி நின்றும் சிவாநுபவ மேலீட்டால் பாசத்தை விடுதல். அதாவது சீவத்தன்மையைச் செய்வதாகிய பாசத்தை இழந்து நிற்றல். இவ்விருவகை முத்தியுள் பரமுத்தியை விதேக முத்தி எனவும் கூறுவர். அப்பரமுத்திதான் முதற்கண் நிகழ்வது என்பர். உடம்பு நீங்கிய பின்னர்ப் பரமுத்தி உண்டென்று கூறவும். நீங்கிய உடம்பு ஆன்மாவுக்குத் தெரியாத வாறுபோல, உடம்பி லிருக்கும்போதே அவ்வுடம்பைப் பற்றிய எண்ணம் சிறிதும் இன்றிச் சாதனத்தில் உறைத்து நிற்கப் பெற்றால் உடம்பு தோன்றாது. அப்பொழுதே சிவம் தோன்றும்; இந்நிலையே பரமுத்தி, ஆயினும், பிராரத்த கன்மத்தால் மீண்டும் உடம்பு தோன்றவரும். தோன்றுங்கால் முன்னர் நிகழ்ந்த சிவானுபூதியைச் சிந்திக்கில் உடம்பு மறையும். இவ்வாறு உடம்பு தோன்றுதலும், மறைதலுமாகிய நிலை பிராரத்தம் உள்ள அளவும் நிகழும். ஆதலின், எக்காலத்தும் உடம்பு தோன்றாத பிராரத்த தேக ஒழிவே பரமுத்தி எனப்பட்டது. அப்பரமுத்தியாகிய சிவாநுபவ நிலையே சாதனத்தில் உறைத்து நிற்றலால் முதற்கண் விளங்குவது என்க. (352)

ஆவ தறியார் உயிர்பிறப் பாலுறும்
ஆவ தறியும் உயிரருட் பாலுறும்
ஆவதொன் றில்லை யகம்புறத் தென்றகண்
ரேவு சிவனுடன் ஒன்றுதன் முத்தியே. 2474

இ – ள்: உயிர் பிறப்பால் ஆவது அறியார் – ஆன்மாவானது தான் பிறந்ததனால் உண்டாகும் பயனை உற்று நோக்கிப் பலர் அறியமாட்டார், பிறப்பால் உறும் ஆவது அறியும் உயிர் – பிறந்த பிறப்

பிறலே அடையும் பயனை உற்று நோக்கி ஆராய்ந் தறியும் ஆன்மா, அருட்பால் உறும் — திருவருளைச் சார்ந்து நிற்கும், அகம் புறத்து ஆவது ஒன்று இல்லை என்று அகன்று — அவ்வாறு திருவருளைச் சார்ந்து நிற்கும் உயிர் உடம்பினும் உலகத்தினும் தனக்கு ஆவதொன்றில்லை என்னும் உண்மையினை ஆராய்ச்சியினாலும் அருளுபதேசத்தானும் அநுபவத்தானும் நன்கு உணர்ந்து அகம்புறம் என்னும் நிலையை விட்டு நீங்கி, ஓவு சிவனுடன் ஒன்றுதல் முத்தியே — எல்லா வற்றையுங் கடந்து அப்பால் விளங்கும் சிவபெருமானுடன் ஒன்றுதலாகிய திருவடிப் பேற்றினை எய்துதலே முத்தியாம் என்றவாறு.

ஓவுசிவன் - உலகங்கடந்த சிவன். ஓவுதல் - நீங்குதல்.

உலகத்து மக்கள் யாக்கையைப் பெற்றோர் அந்த யாக்கையைப் பெற்றதனாலாகிய பயனைப்பெற முந்த வேண்டும். வாழ்வாங்கு வாழவேண்டும். வாழ வேண்டும், வகையறிந்து வாழவேண்டும் என்றபடி.

*" மானுடப் பிறவிதானும் வகுத்தது மனம்வாக் காய*
*ஆனிடத் தைந்து மாடும் அரன்பணிக் காக வன்றோ"*

*— சித்தி. (353)*

சிவமாகி மும்மல முக்குணஞ் செற்று
தவமான மும்முத்தி தத்துவத் தயிக்கியத்
துவமா கியநெறி சோகமென் போர்க்குச்
சிவமாம் அமலன் சிறந்தனன் தானே. 2475

இ – ள் : சிவம் ஆகி – சிவமாந்தன்மைப் பெரு வாழ்வுற்று, மும்மலம் முக்குணம் செற்று – தன்னைப் பற்றிச் செம்பிற் களிம்புபோல அநாதியே யுள்ள ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று மலங்களையும் சத்துவம் இராசதம் தாமதம் என்னும் மூன்று மாயா குணங்களையும் பற்றறக் கழித்து, தவம் ஆன மும் முத்தி–தவத்தாற் பெறக் கடவனவாயுள்ள சீவன் முத்தி பரமுத்தி சிவமுத்தி ஆகிய முத்திப்பேற்றினை, தத்துவத்து அயிக்கியத்துவம் ஆகிய நெறி – தத் (அது)த்வம் (நீ) அயிக்கியத்துவம் (அசி) ஆகின்றாய் என்னும் நெறியிலே, சோகம் என்போர்க்கு–சோகம் பாவனை பண்ணும் புண்ணியமுடையோருக்கு, சிவம் ஆம் அமலன் தானே சிறந்தனன் – சிவப்பொருளாகிய மலரகிதர் தானே சிறந்துவிளங்குவர் என்றவாறு.

" சுட்டுணர்விற்கு விடயமாகிய பிரபஞ்சத்தை இது சத்தன்று இது அசத்தன்று என ஒவ்வொன்றாகச் சுட்டி அசத்தாகக்கண்டு விட்டுநீங்கி அங்ஙனம் அறிந்து நீங்கிய தன் அறிவின்கண்ணே சுட்டுணர்விற்கு விடயமாகாத முதல்வனை ஆராய்ந்து, அச்சிவ ஞானத்தானே ஆசாரியன் 'சிவோயம்' எனத் தன்னுள்ளே பாவித்துச் 'சிவத்துவமசி' என்று அறிவுறுக்கும் சித்தாந்த மகாவாக்கியப் பொருளை நாடோறும் பயின்று, 'சிவோகம்' எனப் பாவிப்பானாயின், அந்தப் பாவகத்தின் விளங்கும் முதல்வனால் அநாதியே கூடிய பொது இயல்பையும், அதற்கு ஏதுவாகிய மல மாயா கன்மங்களையும் தான் விட்டு நீங்குமாறு ஒள்ளிய கருடதியானத்தில் விளங்கும் கருடனால் அப்பாவகன் விடத்தைத் தீர்த்துக் கொள்ளுமாறுபோலாம் என்க " (சிவஞானபாடியம்).

சோயமாத்மா – 'அது இந்த ஆன்மா,' சிவோய மஸ்தி – 'சிவன் இதுவாய் இருக்கின்றான்' என்று தன்னுள்ளே பாவித்து; தத்துவமசி– 'அது நீ ஆகின்றனை', சிவத்துவமசி – 'நீ சிவன் ஆகின்றனை' என்று அறிவுறுக்கும் வேதாந்த சித்தாந்த மகா வாக்கியப் பொருளை நாடோறும் பயின்று, வேதாந்தம் 'சோஹமஸ்மி' என்று கூற, சித்தாந்தம் அதனைச் 'சிவோகமஸ்மி' என்று கூறுமாற்றால், 'சோஹமஸ்மி' – அவன் நானுகின்றேன், 'சிவோஹமஸ்மி' - சிவன் நான் ஆகின்றேன் என்றேனும் பாவிப்பாளுயின், அந்தப் பாவனையில் விளங்கும் சிவனுல் அநாதியே கூடிய பொது இயல்பையும் அதற்கு ஏதுவாகிய மாயா கன்மங்களையும் தான் விட்டு நீங்கும் இயல்பு 'கருடோகமஸ்மி' – நான் கருடன் ஆகின்றேன் என்னும் கருடமந்திர தியானத்தில் விளங்கும் கருடனுல் அந்தக் கருடபாவனை விஷத்தைப் பிரத்தியக்ஷத்தில் தீர்த்து விடுதல் போலாம் என விரித்துரைத்துக் கொள்க.

யாதானும் ஒன்றைப்பற்றி நிற்பதன்றித் தனித்து நிற்கமாட்டாத ஆன்மா பாசத்தை நீக்கிய விடத்துச் சிவோகம் பாவனை செய்யவில்லையாயின் மீண்டும் பாசத்தைப் பற்றும்என அறிக. இச்சிவோகம் பாவனை இன்றியமையாச் சிறப்பினையுடையது. இதனுல், சிவம் உயிரோடு கலந்து நிற்றல் என்றும் உளதாயினும் உயிரினிடத்துக் கசிந்து நிற்றல் நிகழவில்லையாயின் விளங்கப்படான். கருடன் நான் எனப் பாவிக்கும் அத்துவித பாவனைக்கு மந்திரத்தினது ஆற்றலும், அவ்வாற்றல் வழிநின்று பாவிக்கும்

மாந்திரீகனது ஆற்றலும் ஒருதலையான் வேண்டப்பட்டு நிலைபெறுமாறுபோல, சிவம் நான் எனப் பாவித்து நிற்கும் அத்துவித பாவனைக்கு இறைவன் கலப்பும் உயிரின் கசிவும் ஒருதலையான் வேண்டப்படும் என்பது பெறப்படும்

ஆகவே, வேதாந்தமும் சித்தாந்தமும் உண்மையாய் நோக்குவார்க்கு அது என்னும் பதிப்பொருள் ஒன்றும், நான் என்னும் பசுப்பொருள் ஒன்றும் ஆக இருபொருள் உண்டு என்பதும், ஆனேன் என்றமையால் ஆகவொட்டாது தடைசெய்து நின்ற ஏனைப் பாசப்பொருள்கள் பிரிக்கப்படுவது போல் அவ்விருபொருளும் பிரிக்க முடியாதென்பதும், ஆதலால் பிரிக்கக்கூடிய பாசத்தைப் பிரித்துப் பிரிக்க முடியாத பதிப்பொருளைச் சார்ந்த பொருளின் தன்மையை அடைதற்குரிய ஆன்மா தானுகப் பாவிக்கில் பதியேயாகும் என்பதும் நன்கு விளங்கும். இதனுலன்றே, "பண்டை மறைகளும் அது நானுனேன் என்று பாவிக்கச் சொல்லுவது இப்பாவகத்தைக் காணே" என்றருளிச் செய்தனர்.

கன்ம மலம் என்பது ஆன்மாவினுற் செய்யப்படும் நல்வினை தீவினைகள். இது அநாதி கேவலத்தினின்று சகலத்திற்கு வந்ததுமுதல் தொடர்ச்சியாய் நிகழும். சகலத்தில் முதற்கண் நிகழ்வதற்கும் ஓர் தொடர்ச்சி வேண்டப்படும். அதுவே மூலகன்மம் எனப்படும். அம்மூலகன்மமும் பலவேறு வகைப்பட நிகழ்ந்தாலன்றி அது சம்பந்தமாகப் பின்னிகழும் கன்மம் பலவேறு வகைப்பட நிகழுமாறில்லை. அங்ஙனம் மூலகன்மம் பலவேறுவகைப்பட நிகழ்

தற்கும் ஒரு காரணம் வேண்டப்படும். அஃது ஆணவ மல மறைப்பின் பேதமேயாம். ஆகவே, கன்மத்தைக் கூட்டுவிப்பது ஆணவமலம் என்பது அறிக. இந்த ஆணவமலம் இயல்பாகவே கூடியிருத்தலால் அநாதி எனப்பட்டு அதனுல் கூட்டப்படும் கன்மமும், அக்கன்மத்தாற் கூட்டப்படும் மாயையும் அநாதி யாமாறு கண்டுகொள்க.

மெய்ஞ்ஞானத்தால் மலம் சிறிது சிறிதாக நீங்கப் பெற்று சிவம் பூரணமாய்ப் பிரகாசித்தவிடத்து மலம் பற்றறக்கழியும். (354)

*சித்தியும் முத்தியுந் திண்சிவ மாகிய*
*சுத்தியும் முத்தீ தொலேக்குஞ் சுகானந்த*
*சத்தியும் மேலேச் சமாதியு மாயிடும்*
*பெததம் அறுத்த பெரும்பெரு மானே.* 2476

இ – ள் : சித்தியும் முத்தியும் திண்சிவம் ஆகிய சுத்தியும் – சித்திகளும் முத்திகளும் வலிய சிவமாந் தன்மைப் பெருவாழ்வைத் தரும் நின்மலதுரியாதீத நிலேயும், முத்தீ தொலேக்கும் – தாபத்திரயங்களேத் தொலேப்பனவாகும். சுகானந்த சத்தியும் மேலேச் சமாதியும் ஆயிடும் – தாபத்திரயங்கள் தொலேயவே பேரின்பவடிவாகிய சத்தியும் அதன்மேல் செய லொன்றின்றி நிற்பதாகிய ஞானசமாதியும் கைகூடும், (பின்பு) பெத்தம் அறுத்த பெரும் பெருமான் அன்றே – ஆன்மாக்களுக்குள்ள பெத்த நிலேயை அறவே தொலேத்தருளும் சிவபெருமானுடன் இரண்டறக் கலந்து பேரின்பவாழ்வினில் திளேத்திருக் கலாம் என்றவாறு.

தாபத்திரயமாவன : 'தன்னைப் பற்றி வருவன, பிற உயிர்களைப் பற்றி வருவன, தெய்வத்தைப் பற்றி வருவன என்க. (355)

## 24. முச்சொரூபம்

ஏறிய வாறே மலம்ஐந் திடைஅடைத்
தாறிய ஞானச் சிவோக மடைந்திட்டு
வேறு மெனமுச் சொரூபத்து வீடுற்றங்
கீறதிற் பண்டைப் பரனுண்மை செய்யுமே. 2477

இ—ள் : ஏறிய வாறே மலம் ஐந்திடை அடைத்து — முன்பு கேவலத்திலே ஆணவமலத்தில் அழுந்திக்கிடந்த உயிருக்கு அக்கன்மத்துக்கீடாக இறைவன் சகல நிலையில் ஆணவமலத்தின் சத்தி தேய்தற்குக் கன்மம் மாயை மாயேயம் திரோதம் என்னும் நான்கு மலங்களுடனும் கூட்டி நுகர் வித்துத் தனு கரண புவன போகங்களைத் தந்து பின்பு காருணிய மிகுதியால் அவ்வாணவமல வலிகெடச் செய்து, ஆறிய ஞானம் (அடைந்திட்டு). (எல்லையில்லாத காலங்கள் இறப்புப் பிறப்புக்களில் அகப்பட்டு ஓய்வின்றிச் சுழன்ற அவ்வான்மாவுக்கு இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் முதலிய வற்றை நோக்கிக் குருவாக எழுந்தருளிவந்து உப தேசம்செய்து அவ்வழியிலே) சிவஞானம் தலைப்பட அவ்வான்மா, சிவோகம் அடைந்திட்டு வேறும் என — சிவோகம்பாவனை பண்ணி மலவலியைப் பற்றறக் கழித்துத் துடைப்பேம் என்று முயன்று திருவரு ளானே, முச்சொரூபத்து வீடுற்று — சீவதுரியம் பர துரியம் சிவதுரியம் என்னும் நிலையினை அடைந்து,

அங்கு ஈறு அது இல் – அவ்விடத்து இறுதியில்லாத என்றது. அழியாத என்க. அது பகுதிப்பொருள் விகுதி. அங்கு ஈறு அதில் – அங்கே ஈறாகச் சொல்லப் பட்ட சிவதுரியத்தில், பண்டை பரன் உண்மை செய்யும் – பழமையாகவுள்ள பரசிவத்திலே இரண்டறக்கலந்து சிவபோகத்தை நுகரும் என்றவாறு.

ஏறியவாறே மலம் ஐந்திடை அடைத்து :

அநாதி கேவலத்தில் ஆன்மாக்கள் எல்லாம் ஆணவமலத்தால் மறைப்புண்டு கிடக்கும். மலத்தின் சத்தி பலவாதலால் மறைப்பும் பலவேறு வகைப்படும் அங்ஙனம் மறைப்புண்டு கிடக்கும் ஆன்மாக்களுக்கு மலநோயைத் தீர்க்கச் சிவபெருமான் திருவுளங்கொண்டருளுவர், கொண்டருளுங்கால் கன்மமல மாயா மலங்களைக் கூட்டாமலே விஞ்ஞானத்தால் ஆணவ மலத்தை நீக்குவர். விஞ்ஞானம் என்பது விசேடஞானம். அதாவது பாசஞானம் பசுஞானங்களினின்றும் மேம்பட்ட பதிஞானமாம். இப்பதிஞானத்தை இறைவன் எவ்வாறு நின்று உணர்த்துவன் என்னில், அறிவினுள் அறிவாய் நின்று உணர்த்துவன் என்க.

அவ்வாறு உணர்த்துவதற்குக் கலை முதலிய தத்துவங்களால் ஆக்கப்படும் சரீரமும் புவனமும் இன்றியமையாது வேண்டப்படும். படவே, சுத்த மாயா காரியங்களாகிய கலாதி தத்துவங்களால் ஆக்கப்பட்ட சரீரத்தைக் கொடுத்து, அசுத்த மாயைக்குமேல் வைகும்படி செய்வன். இவ்வாறு கலாதி தத்துவங்களைப் பெற்று விஞ்ஞானத்தால் அத்தத்துவங்களிற் கட்டுப்படாதிருத்தலின் விஞ்

ஞானகலர் எனப் பெயராயிற்று. இத்தகைய ஆன்மாக்களுக்கு ஆணவமலபந்தம் இருத்தலால் இவர் ஒரு மலம் உடையர் எனப்படுவர். இந்த விஞ்ஞானகலருக்கு எடுத்த பிறவியையன்றி வேறு பிறவி கிடையாது.

இனி, பிரளயாகலர் : கன்ம மலத்தைக் கூட்டி ஆணவமலத்தை நீக்குதற்குரிய ஆன்மாக்களுக்கு அசுத்த மாயாகாரியமாகிய கலாதி தத்துவங்களால் ஆக்கப்பட்ட சரீரத்தைக் கொடுத்து அவ்வசுத்த மாயையின் மத்தியில் வைகும்படி செய்து, பிரளயத்தில் இறைவன் தடத்தத்திருமேனி கொண்டு முன்னின்று அருள்செய்வன். இவருக்குப் பிரளயத்தின் பின் பிறவியில்லாமையால் பிரளயாகலர் எனப் பெயராயிற்று.

விஞ்ஞானகலரில் பிரளயத்தில் முத்தியடைபவருக்கும் இவருக்கும் வேற்றுமை என்னை ? என்னில், விஞ்ஞானகலருக்குக் கன்மமலம் இல்லாமையால் பிரளயம்வரை ஒரு பிறவியேயன்றி மறு பிறவியில்லை. பிரளயாகலருக்குக் கன்மமலம் உண்மையால் ஒரு பிரளயத்துள் சில பிறவிகள் உள. இவையே வேற்றுமையாம். இவர், ஆணவம் கன்மம் என்னும் இருமலமுடையார்.

சகலர் : கன்மமலம் மாயாமலங்களைக் கூட்டி ஆணவமலத்தை நீக்குதற்குரிய மறைப்பினையுடைய ஆன்மாக்களுக்கு அசுத்த மாயாகாரியமாகிய கலாதி தத்துவங்களால் ஆக்கப்பட்ட சரீரத்தைக் கொடுத்து பிரகிருதி மாயையில் வைகும்படி செய்து பக்குவம் வந்த காலத்து இறைவன் குருமூர்த்தியாய்த் தோன்றி

நின்று அருள்செய்வன். இவர், ஆணவம் கன்மம் இரண்டுடனே மாயாமலம் உடையர் ஆதலின், மயக்கத்தினுல் பிரளயம் வரை பல பிறவிகளை எடுத்து, பிரளயத்தில் கலாதிகளுடன் ஒடுங்கிக் கிடந்து புனருற்பவம் ஆகுங்கால் மீண்டும் தோன்றி இவ்வாறே பிறப்பிறப்பிற்பட்டு உழல்வர் ஆகலின் சகலர் எனப்பட்டார். தேவர் முதல் எறும்பு ஈருகவுள்ள உயிர்கள் அனைத்தும் சகலர் எனப்படும். சகலரினும் பிரளயாகலத் தன்மை, விஞ்ஞாுகலத் தன்மை சித்தித்தல் கூடும். அதாவது, பிரகிருதி மாயா புவனப் பற்று ஞானத்தால் நீங்கப்பெற்றவர் சகலரில் பிரளயா கலராவர். இவருக்கு இறைவன் தடத்தத் திருமேனியைத் தரிசித்தல் கூடும். பிரகிருதி மாயா புவனம் அசுத்தமாயா புவனமாகிய இருபுவனங்களின் பற்றும் ஞானத்தால் நீங்கப்பெற்றவர் சகலரில் விஞ்ஞானகலர் ஆவார். இவருக்கு இறைவன் அறிவுக்குள் அறிவாய் நின்று உணர்த்துவன் சகலரில் விஞ்ஞாு கலத்துவம் வந்தால் மேற் பிறவியில்லை. பிரளயாகலத்துவம் வந்தால் சிலபிறவியுண்டு. மேற் கூறிய விஞ்ஞாுகலர். பிரளயாகலர் அநாதியாயுள்ளவர். சகலரில் விஞ்ஞாுகலர் பிரளயாகலர் ஆகிய இருவரும் ஆதியாயுள்ளவர்.

சத்திநிபாதம் என்பது சத்தி பதிதல் எனப் பொருள்படும். அதாவது, திருவருட் சத்தியின் விளக்கம் ஆன்ம அறிவின்கண் உண்டாதல். மலபரிபாகம் என்பது மலசத்தி தேய்தல்.

இருவினையொப்பாவது மிகுந்த புண்ணியத்தின் பயனும், மிகுந்த பாவத்தின் பயனும் ஒருகாலத்து

அனுபவிக்க வருங்கால் அவ்விரண்டும் ஒன்ளுே டொன்று முரணுதலின், திருவருட்சத்தி அவ்விரண் டனையும் அனுபவிக்கவொட்டாது தள்ளிவிடுமாதலின் அதுவே இருவினையொப்பு என்பர் ஒருசாரார். அங் ஙனமாயினும். எஞ்சிய வினையின் பயன் அனுபவித் துத்தீரவேண்டுதலின் அது இருவினையொப்பாகாது. எல்லா நல்வினைப்பயனும், தீவினைப் பயனும் அனு பவித்தொழிதலே இருவினையொப்பு என்பர் மற்றொரு சாரார். அங்ஙனமாயினும், அது மலசத்தியைக் கெடுக்காது; ஆணவமலமுடைய விஞ்ஞான கலராக் குதலே ஆதலின் அதுவும் இருவினையொப் பாகாது.

இனி, இருவினையொப்புத்தான் யாதெனின், ஆன்ம அறிவின்கண் நல்வினை தீவினைகளும், அவற்றின் பயனுகிய இன்பத் துன்பங்களும் விருப்பு வெறுப்பு இன்றி ஒப்பத் தோன்றுதலேயாம். இதனால், நான் என்னும் சீவபோதமாகிய மலச்சேட்டை தேயும். ஆகலின் இறுதியிற் கூறிய இதுவே இரு வினை யொப்பு என்க. (356)

மூன்றுள மாளிகை மூவர் இருப்பிடம்
மூன்றினின் முப்பத் தாறு முதிப்புள
மூன்றினி னுள்ளே முளைத்தெழுஞ் சோதியைக்
காண்டலுங் காயக் கணக்கற்ற வாறே. 2478

இ – ள் : மூவர் இருப்பிடம் மாளிகை மூன்று உள – மூவகைப்பட்ட உயிர்களுக்கான இருப்பிட மாகிய மாளிகைகள் மூன்று உள்ளன; மூவர் என்றது மூவகைப்பட்ட ஆன்மாக்களை; அவை விஞ்ஞான கலர் பிரளயாகலர் சகலர் என்பவை. இருப்பிடம்

என்றது உடம்பை. அதனை மாளிகையாக உருவகம் செய்தார். விஞ்ஞானகலருக்குக் கலை முதலிய தத்து வங்களால் ஆக்கப்படும் சரீரமும் புவனமும் இன்றியமையாது வேண்டப்படும். ஆகலின், சுத்த மாயாகாரியங்களாகிய கலாதிதத்துவங்களால் ஆக்கப் பட்டது அந்தச் சரீரம்; அது மாளிகையாம். இருப் பிடம் – புவனம்: இவருக்கு இருப்பிடம் அசுத்த மாயைக்குமேலுள்ள இடமாம் என்றவாறு.

இந்த விஞ்ஞானகலர் பக்குவர் அபக்குவர் என இருதிறப்படுவர். பக்குவர் அப்பொழுதே சிவசாயுச்சி யத்தைப் பெறுவர். அபக்குவர் உத்தமர் மத்திமர் அதமர் என முத்திறப்படுவர். உத்தமர் அணுசதாசிவர் முதலியோராய்ச் சதாசிவ தத்துவத்திலும், மத்திமர் அட்டவித்தியேசுரர் முதலியோராய் ஈசுவர தத்துவத்தி லும், அதமர் மூன்றரைக்கோடி தேவர்களாய்ச் சுத்த வித்தியாதத்துவத்திலும் வசிப்பர். அவ்வாறு வசித் திருந்து அதிகாரமுடையராய்ப் பிரளயத்திலும் மத்தியிலும் முத்தியடைவர்.

அணுசதாசிவராவார் ; பிரணவர், சுதர், சுதீப்தர், காரணர், சுசிவர், ஈசர், சூக்குமர், காலர், அம்பு, தசேசர் எனப் பதின்மர்.

அட்டவித்தியேசுரராவார் : அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகவுருத்திரர், திரி மூர்த்தி, சீகண்டர், சிகண்டி என்னும் எண்மர்கள்.

அதமர் என்றது சப்தகோடி மகாமந்திரர்களை. இவர்கள் மூன்றரை மூன்றரைக் கோடிகளாகப் பிரிக்கப்பட்டு முதல் மூன்றரைக்கோடி பேர்கள்.

சிவன் குருமூர்த்தத்தை அதிட்டியாமல் நிராதாரமாய் நின்று சுத்தவித்தியாதத்துவத்திலும் அதன் கீழுமுள்ள விஞ்ஞானகலருக்கும் பிரளயாகலருக்கும் அனுக்கிரகிக்குமிடத்து அதற்குக் காரணமாயிருந்து அதிகாரத்திலுள்ள வைராக்கியத்தினலே சிருட்டிக்குப் பின்பு மோட்சத்தில் சேர்க்கப்படுவார்கள். மற்ற மூன்றரைக்கோடி பேர்களும் குருக்களாவார்கள். அஃதாவது சிவன் குருமூர்த்தத்தை அதிட்டித்துச் சகலரை இரட்சிக்குமிடத்து அதற்குக் காரணமாயிருந்து மகாப்பிரளய காலத்திலே சிவனாலே மோட்சத்தையடைவார்கள்.

சப்தகோடி மகாமந்திரர் என்றது ஏழுவித கோடிகளை ஈற்றிலுடைய மந்திரங்களுக்கு அதிபர்களையாம். இவர் எண்ணிக்கையால் ஏழுகோடியுமாவார்கள். மந்திரங்களின் ஈற்றிலமையும் ஏழுவித கோடிகளாவன: நம: ஒருகோடி, சுவாகா ஒருகோடி, சுவதா ஒரு கோடி, வௌஷட் ஒரு கோடி, வஷட் ஒரு கோடி, பட் ஒரு கோடி, ஹும் ஒரு கோடியாகும். இவற்றுள் நம: என்பது இருடிகட்கும், சுவாகா என்பது தேவர்கட்கும், சுவதா என்பது மாதுரு பிதுருகட்கும். வௌஷட் என்பது பூதம் முதலியவர்கட்கும், வஷட் என்பது மானுடர்க்கும், பட் என்பது உக்கிர விக்கிரகங்கட்கும். ஹும் என்பது ஆக்ஞைத் தலைவர்கட்குமாம் என்க.

மூன்றினின் முப்பத்தாறும் உதிப்பு உள என்றது ஆன்மதத்துவம் வித்தியாதத்துவம் சிவதத்துவம் ஆகிய மூவகையாயுள்ள தத்துவங்களிலே முறையே இருபத்துநான்கு ஏழு ஐந்து ஆகிய தத்துவங்கள்

அடங்கியுள்ளன. அவை பிருதிவிமுதல் நாததத்துவம் ஈறாக ஒடுக்க நிலையில் உள்ள தத்துவங்கள்; தோற்ற முறையிலே நாத தத்துவம் முதலாகப் பிருதிவி தத்துவம் ஈறாகக்கொள்க. மற்றும், தூல சூக்கும காரண உடம்புகள் என்று கூறினும் ஆம்.

எல்லாச் சரீரங்களும் தோற்றுதற்குக் காரணமா யிருத்தலால் மாயை காரண சரீரமாம். அதன்பின் அசுத்த மாயையினின்று கலை முதலிய தத்துவங்கள் தோன்றும். அவை ஆன்மாவுக்குச் சட்டைபோன்ற தாகலின் கஞ்சுக சரீரமாம். அதன்பின் சாத்துவிகம் இராசதம் தாமதம் என்னும் முக்குணங்களாகிய குண சரீரத்தைப் பொருந்தும்: அக்குணங்களுள் அடங்கி நிற்கும். மனம் முதலியன சூக்கும சரீரம்: அதனைப் புரியட்டக சரீரம் எனினுமாம். புரியட்டகமாவது= பூதமைந்து 1, தன்மாத்திரை ஐந்து 1, கன்மேந் திரியம் ஐந்து 1, ஞானேந்திரியம் ஐந்து 1, அந்தக் கரணம் 1, முக்குணம் 1, பிரகிருதி 1, கலாதி பஞ்சகம் 1, ஆக எட்டுமாம். எலும்பு நரம்பு முதலிய வற்றுடன் கூடியது தூலசரீரமாம். இவ்வாறு காரணசரீரம், கஞ்சுகசரீரம், குணசரீரம் என்னும் மூன்றையும் பரசரீரம் என்பர்.

இனி, கேவலத்தில் அறிவு தொழிற்பாடின்றிக் கிடந்த ஆன்மாவிற்குக் குருடனுக்குக் கோல் கொடுப்பதுபோல் இறைவன் சூக்கும தேகத்தைக் கருணையினாற் கொடுப்பன். அச்சூக்கும தேகத்தை இறைவன் தருதல் வினை காரணமாக அன்று; அறியா மையுட்பட்டு வருந்தும் காரணத்தால் தரப்பட்ட தாம். அச்சூக்கும தேகம் முத்தி யடையும்வரை எத்

துணைப் பிறவிகளை எடுப்பினும் ஒன்றாகவே இருந்து முத்தியடையின் நீங்கும். அச்சூக்குமதேகம் எல்லா உயிர்க்கும் ஒரு தன்மையாகவே இருக்கும். இருப்பினும், முன் பொருந்தி நின்ற அறியாமை பலவேறு வகைப்படும். ஆதலின், அவ்வறியாமைக் கேற்ப அச்சூக்கும தேகத்தினின்று தூலவுடம்பும் அவ்வுடம்பால் வினையும் மாறி மாறி வரும். ஆதலால் வினை உடல் என்னும் இரண்டிற்கும் மூலமாகியது சூக்கும தேகம். வித்து முந்தியோ மரம் முந்தியோ என ஒன்றுக்கொன்று காரண காரியமாக உள்ளது. ஆயினும், இறைவன் முதலாவதாக மரத்தைத்தான் உற்பத்தி செய்திருத்தல் வேண்டும். இக்கருத்துப் பற்றியே "விச்ச தின்றியே விளைவு செய்குவாய்" என்னும் திருவாக்கும் எழுந்தது.

தூலவுடம்பு நீங்கியவிடத்து அதனோடு உடன் போகாது நிலைபெற்றுள்ளது சூக்குமவுடம்பு. சூக்கும உடம்பினின்றும் வினைப்பயனை அனுபவித்தற்குரிய வெவ்வேறுடம்புகள் உளவாம். நரகத்துன்பம் இருப்பு விலங்கும், துறக்க இன்பம் பொன் விலங்கும் போல்வன. ஆதலின், இவ்விரண்டற்கும் உரிய உடம்பு யாதனுசரீரமாம். யாதனுசரீரம் சூக்கும உடம்பின் காரியம். அது துன்பத்தை அனுபவித்தற் குரியது. பூதவுடம்பு, பூதசாரவுடம்பு, யாதனுவுடம்பு என உடம்பு மூன்று. இவை முறையே பூமி சுவர்க்கம் நரகம் ஆகிய உலகங்களுக்கு உரியன.

தூலவுடம்பிற்கு முதற்காரணம் சூக்குமவுடம்பு. அச்சூக்கும உடம்பிற்கு முதற்காரணம் மூலப்பிரகிருதியாம். அம்மூலப் பிரகிருதிக்கு முதற்காரணம்

அசுத்த மாயை. சுத்த மாயையாகிய குண்டலினிசத்தி சுத்தமாய் இவ்விருமாயைக்கும் வியாபகமாய் நிற்கும் என அறிக.

மூன்றினுள்ளே முளைத்தெழும் சோதியைக் காண்டலும் என்றது தூல சூக்கும காரணசரீரங்கள் ஆகிய மூன்றினுள்ளும் உயிர்க்குயிராய் நின்று விளங்கும் சிவபெருமான் அருளால் அருட்கண்ணைப் பெற்றுடையார்க்கு அறிவிற் கறிவாய் ஆனந்த சொரூபமாய்ப் பேரொளிப் பிழம்பாய் விளங்குவன். பிரித்தறிய வராது ஆனந்த சொரூபமாய் நிற்பதே சிவபோகம். அதுவே நின்மல துரியாதீதம். அந்த நிலையை அடைந்த ஆன்மா பிறப்பிறப்புக்களினின்று நீங்கும். அதனையே இங்கே 'காயக் கணக்கற்ற வாறே' என்றார். காயக்கணக்கு–காயமாகிய காரியம்; கணக்கு – காரியம்.

மாளிகை – தூலம், சூக்குமம், காரணம்; மூவர் - மூவகையான ஆன்மாக்கள். காயக்கணக்கு - பிறப்பு. (357)

**உலகம் புடைபெயர்ந் தூழியும் போன**
**நிலவு சுடரொளி முன்றுமொன் றாய**
**பலவும் பரிசொடு பான்மையுள் ஈசன்**
**அளவும் பெருமையு மாரறி வாரே.** 2479

இ–ள் : உலகம் புடைபெயர்ந்து ஊழியும்போன– மகாசங்காரம் என்று சொல்லப்படும் பேரூழிக் காலத்திலே உலகம் முழுவதும் ஒடுங்குவதாம்.. ஊழிக் காலங்களும் பல சென்றன.

ஊழி என்றது நித்தப்பிரளயம், பிராகிருதப் பிரளயம், மத்திமப்பிரளயம், மகாப்பிரளயம், பிரதம மகாப்பிரளயம் என ஐவகைப்பட்டு நிவிர்த்தாதி ஐங் கலைகளின் சங்காரத்தைக் குறிக்கும். இவற்றுள், நித்தப்பிரளயம் பிரமாண்டப் பிரளயம் எனவும், பிரா கிருதப்பிரளயம் அவாந்தரப்பிரளயம் எனவும் பெயர் பெறும். புடைபெயர்தல் என்றது தோன்றியவாறே ஒடுங்குதலையாம்.

"சங்காரம் ஐவகைப்படும். அவற்றுள் முதலாவது நிவிர்த்தி கலையிலடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம்; இரண்டாவது, பிரதிட்டாகலையிலடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம்; மூன்றாவது வித்தியா கலையிலடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம்; நான்காவது, சாந்தி கலையிலடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம்; இறுதியது சாந்தியதீத கலையிலடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம்". "சுத்தமாயா புவனுந்தம் சங்கரிக்கும் சங்கார காரணனாகிய பரமசிவனை, சங்காரனையுள்ள முதலையே என விதந்தோதியதூஉம் என்க." (சிவஞானபாடியம்) : நிவிர்த்திகலை முதலிய கலைகளின் இயல்பைச் (சிவ ஞானபோதம் திராவிட மாபாடியம் இரண்டாம் சூத்திரம் மூன்றும் அதிகரணத்திற்) காண்க.

நிலவு சுடரொளி மூன்றும் ஒன்றாய — விளங்கு கின்ற சீவன் பரம் சிவம் என்று சொல்லப்படும் மூன்றும் அருள் வெளிக்கண்ணே ஒன்றாயின. அருள் வெளி — முதல்வன் சந்நிதானம்.

பலவும் பரிசொடு பான்மையுள் — பலவற்றையும் முறைப்படி ஆராய்ந்து தெளிந்து உணரும்

தன்மையில், ஈசன் அளவும் பெருமையும் ஆர் அறிவார் - சிவபெருமான் ஒன்றாயும் வேறாயும் உடனிருந்தும் உபகரிப்பினும் அப்பெருமானுடைய அளவினையும் பெருமையினையும் யாவரே உணர்ந்து தெரியவல்லார் என்றவாறு.

பெருவாய் முதலெண்ணும் பேதமே பேதித்
தருவா யுருவாய் அருவுரு வாகிக்
குருவாய் வருஞ்சத்தி கோனுயிர்ப் பன்மை
உருவா யுடனிருந் தொன்றாயன் றாமே. 2480

இ - ள் : பெருவாய் முதல் எண்ணும் பேதமே பேதித்து - பெரிய வடிவாயுள்ள மலைமுதல் மண்ணீறாகவும் யானைமுதல் எறும்பு ஈறாகவும் எண்ணப்படுகின்ற பெரியனவாயுள்ள பொருள்களையும் நுண்ணிய வாயுள்ள பொருள்களையும் கண்கூடாகக் காணும்படி செய்து, அருவாய் உருவாய் அருவுருவாகி - அருவடிவாயும் உருவடிவாயும் அருவுரு வடிவாயுமிருந்து, குருவாய்வரும் சத்திகோன் - குருவடிவாகவும் வெளிப்பட்டு நின்றருளைச் செய்யும் பராசத்திக்குத் தலைவராகிய சிவபெருமான், உயிர்ப்பன்மை உருவாய் உடனிருந்து ஒன்றாய் அன்றாம் - அளவில்லாத உயிர்களின் அறிவினுள்ளாக நின்று செலுத்துதலால் உடனிருந்தும் உயிரின் வேறல்லாமையால் ஒன்றாயும் உயிர் அறிவின் உள்ளீடாக நிற்றலால் வேறாயும் உளன் என்றவாறு.

மலை மண் என்பன அஃறிணைகட்கும், யானை எறும்பு என்பன உயர்திணைப் பொருள்களுக்கும் பெருமை சிறுமைகட்கு உதாரணமாக எடுத்துக்

காட்டப்பெற்றன. பெருவாய் – (அளவிலுல்) பெருமை வாய்ந்த. பெரு = பெருமை – பருமை. முதல் எண்ணும் – முதலாக எண்ணப்படும்; ஆக என்னும் சொற்பெய்துகொள்க. பேதமே பேதித்து – வேறுபாடுகள் தோன்றும்படியாகப் பேதப்படுத்தி மன்க.

உடலின் உயிர்போல முதல்வன் உயிர்களோடு கலந்துள்ள தன்மையால் உயிர்களேயாயும், கண்ணில் அருக்கன்போலப் பொருட்டன்மையால் வேறாயும், கண்ணொளியின் ஆன்மபோதம்போல உயிர்க்குயிரா தற்றன்மையான் உடனாயும் இருத்தல் உணரப்படும்.

உயிரோடு ஒன்றாய் நிற்றல், வேறாய் நிற்றல், உடனாய் நிற்றல் ஆகிய முத்திறமுடையன் இறைவன். ஒன்றாய் என்றதனால் உயிர் தனித்து நில்லாது என்பதும், அன்றாம் என்றதனால் தனித்து நில்லாவிடினும் இறைவனை உயிர் அறிதல்கூடும் என்பதும், உடனிருந்து என்றதனால் உயிர் அறியுங்காறும் உடனிருந்து அறியும் என்பதும் அறிக.

> ' ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணாண் குண மூன்றாய்
> மாறாமறை நான்காய்வரு பூதம்மவை யைந்தாய்
> ஆறார்சுவை யேழோசையொ டெட்டுத்திசை தானாய்
> வேறாயுட னானிடம் வீழிம்மிழ லையே ''

> '' உரைசேரு மெண்பத்து நான்குநூ
> றாயிரமாம் யோனிபேத
> நிரைசேரப் படைத்தவற்றி னுயிர்க்குயிரா
> யங்கங்கே நின்றான் கோயில் ''
>
> — திருஞான – திருவீழி – தேவா.

குருவாய் வரும் சத்திகோன்: நித்த முத்த சுத்த சித்து எனப்படும் தலைவனாகிய அந்தப் பெருமான் குருவடிவங்கொண்டு எழுந்தருளி வந்து, தன்னையும் தலைவனையும் அறியும் வண்ணம் உணர்த்தி, ஐம் பொறியினின்று நீங்குதற்கு, அதனோடு கூடும்படி செய்த மலவலியைக் கெடுத்துத் திருவடிக்கீழ் வாழ் விப்பன். இதனை, "அருபரத் தொருவன் அவனியில் வந்து – குருபரன் ஆகிய பெருமையும்" என்னும் திருவாக்கானுணர்க. "உயிர்க்குச் சற்குருவாய் வருவது அரனே", "இனி, இவ் வான்மாக்களுக்குத் தமது முதல்தானே குருவுமாய் உணர்த்தும் என்றது" (சிவஞான போதம் – 8 சூத் - 2 அதிகரண). "அறிவுக்கறிவாகி அவ்வுறிக் கெட்டா, நெறியிற் செறிந்தநிலை நீங்கிப் – பிறியாக், கருணை திருவுரு வாய்க் காசினிக்கே தோன்றிக், குருபரனென் றோர் திருப்பேர் கொண்டு" (கந்தர் கலிவெண்பா). (359)

மணியொளி சோபை யிலக்கணம் வாய்த்து
மணியென லாய்நின்ற வாறது போலத்
தணிமுச் சொரூபாதி சத்தியாதி சாரப்
பணிவித்த பேர்நந்தி பாதம்பற் றுயே. 2481

இ – ள் ; மணி ஒளி சோபை இலக்கணம் வாய்த்து – படிகக்கல்லினது ஒளியும் நிறமும் போன்ற இலக்கணம் வாய்க்கப்பெற்று, மணி எனல் ஆய் நின்றவாறது போல – மாணிக்கக் கல் என்னும்படி நிற்கும் தன்மையைப்போல என்றது படிகம் வெண் ணிறம் உடையது. ஒளியையுடையது. எனினும், அப்படிகக் கல் ஏனைய நிறங்களைச் சார்ந்தபோது அந் நிறத்தையும் அவ்வொளியையும் பெற்று விளங்கும்.

அதுபோல, ஆன்மா சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும் இயல்புடையது. ஆயினும் அது மலத்தைச் சார்ந்த போது மலமாயும், சிவத்தைச் சார்ந்தபோது சிவமாயும் நிற்கும். எவ்வாறெனில், கேவலத்தில் ஆன்மா ஆணவ மலத்துள் அழுந்தி அறிவுவிளக்கமின்றி அறியாமையே சொரூபமாகக் கிடந்தது, பின் இறைவன் இரக்கங் கொண்டு ஆணவமலத்தில் அழுந்திக்கிடந்த உயிரைச் சகலநிலையிலே எடுத்துக் கருவிகரணங்களைக் கொடுத்து உபகரிக்க, அவ்வான்மா ஐம்புலன்களைச் சார்ந்து சுட்டறிவினை உடையதாய்ச் சிற்றறிவினை யுடையதாய் நிற்கும். பின்பு இறைவன் திருவருளால் சுத்த நிலையையடைந்து இறைவனைச் சார்ந்து சிவப்பேறடையும். தணிமுச்சொருபாதி சாரசத்தியாதி சார — பொருந்திய சீவன் முத்தி பரமுத்தி சிவமுத்தி களைச் சார்தற்பொருட்டுச் சீவதுரியம் பரதுரியம் சிவதுரியம் முதலிய நிலைகளிலே திருவருட்சத்தி முதலிய சத்திகள் வந்து பொருந்த, பணிவித்த பேர் நந்தி பாதம் பற்றாய் ஏ – அடங்கிநிற்கும் நிலையினைக் கொடுத்துச் சிவபோகத்தை நுகரச்செய்யும் பெருமை யினையுடைய சிவபெருமானுடைய திருவடிகளைப் பிரியாது பற்றிநின்று வாழ்வாயாக என்றவாறு.

சிவபெருமான் சிவந்த திருமேனி நிறத்தை யுடையவராகலின் மாணிக்கமணி எனக் கூறலா யிற்று. மணி – மாணிக்கம் என்க. மணி என அடையின்றிக் கூறின் நீலமணியையே குறிக்கு மாயினும் இங்கே மாணிக்கம் எனக்கொள்க. ஆன்மா படிகம், சிவன் மாணிக்கம். படிகம் செம்மணியினுள் அடங்கிச் செந்நிறம் பெற்று விளங்கும். ஆன்மா, சிவத்தைச் சார்ந்து சிவமாந்தன்மைப் பெருவாழ்வைப்

பெற்று வாழ்வதாம். இறைவன் ஆணையால் சிவசத்தி கள் வந்து பொருந்த அப்பெரு நிலையாகிய சிவத்தைச் சார்ந்து சிவபோகம் நுகரும் என்றபடி. நந்தி பாதம் பற்ருய்; பற்ருய் – பற்றுவாயாக. (360)

கல்லொளி மாநிறஞ் சோபைக் கதிர்தட்ட
நல்ல மணியொன்றி ஞடியொண் முப்பதஞ்
சொல்லறு முப்பாழிற் சொல்லறு பேருரைத்
தல்லறு முத்திராந் தத்தனு பூதியே. 2482

இ – ள்: கல் ஒளி மாநிறம் சோபை கதிர் தட்ட– காவிக்கல்லினது ஒளியும் சிறந்த நிறமாகிய விளங்கும் கதிரும் பொருந்த, நல்ல மணி ஒன்றின் – அந்த ஒளியையும் நிறத்தையும் தூய வேண்ணிறமுடைய படிகமணி பொருந்தப்பெற்று விளங்குதல்போல், நாடி – ஆராய்ந்து, ஒண்முப்பதம் சொல் – ஒள்ளிய உண்மையினை உணர்த்தும் தத் துவம் அசி ( தத்துவமசி ) எனும் மகா வாக்கியப் பொருளை உணர்ந்து, அறு முப்பாழில் – அற்ற போதப்பாழ் சீவப்பாழ் சிவப்பாழ் என்னும் முப்பாழின் உண்மையினையும் கண்டு, சொல் அறு பேர் உரைத்து – சொல்லுதற்கு ஒண்ணுத அசபா மந்திரத்தைக்கணித்து, அல்(லல்) அறும் – பிறப்பிறப்புக்களாகிய அல்லலினின்று நீங்கும், முத்திராந்தத்து அனுபூதி – முத்திரைகளின் முடிவாகிய சின்முத்திரையால் பெற்ற சுவானு பூதியினுல் என்றவாறு.

முத்திராந்தத்து அனுபூதியால் அல்லல் அறும். சொல் அறு பேர் – அசபா மந்திரம்; அஃது ஓரெழுத் தொருமொழி.

தன்னைச் சார்ந்த பல்வேறு வகைப்பட்ட நிறங்களையே தன்னிடத்துக் காட்டும் பொது இயல்புடைய படிகக்கல் போல ஆன்மாவானது தன்னைச் சார்ந்த ஐம்புலன்களின் இயல்பே தன்னிடத்து விளங்குவதாகிய தனது சார்ந்ததன் வண்ணமாம் இயல்பை முதற் கண்ணே சிந்தித்து அறிந்துகொண்டு, அந்த நிறங்கள் படிகத்துக்கு வேறு என்று அறியுமாறு போல, பல்வேறு வகைப்படும் இயல்பினையுடைய பொது இயல்பைச் செய்யும் ஐம்பொறிகளையும் தனக்கு வேறு எனத் தெளிந்து, அப்பொறிகளாலாய அப்பொது இயல்பு பொய் என்று நீங்குமாறு தனது சிறப்பியல்பை உணர்ந்தானுயின், அவன் பரம் பொருளாகிய சிவத்துக்கு அடிமையாய், அப்பரம் பொருள் இயல்பு தன்னிடத்து விளங்க நிற்பன்; நிற்கவே முன் விளங்கிய பொது இயல்பு தனக்கு வேறாக நீங்கும் என்க.

ஒண் முப்பதம் சொல்: அஃதாவது தத் துவம் அசி என்பது. தத் என்னும் பதம் அது என்னும் பொருளைத் தந்து சிவனைக் குறித்ததாம். துவம் என்பது நீ என்பதாயிற்று. நீ என்றது ஆன்மாவை. தத் பதம் துவம் பதம் இரண்டனையும் ஆராய்தல் வேண்டும். ஆராயும்பொழுது ஆன்மஞானத்தால் அன்றித் திருவருள் ஞானத்தால் ஆராய்தல்வேண்டும். தத் பதத்திற்குரிய சிவத்தைத் திருவருளால் ஆராய்தலாம். அசி – ஆகின்றாய் என்பது. எனவே, நீ சிவமாந்தன்மைப் பெருவாழ்வை அடைகின்றாய் என்பதாம்.

உடந்தசெங் தாமரை யுள்ளுறு சோதி
நடந்தசெங் தாமரை நாதந் தகைந்தால்
அடைந்த பயோதரி யட்டி யடைத்தல்
விடந்தரு வாசலை மேல்திற வீரே. 2483

இ – ள் ; உடந்த செந்தாமரை உள்ளுறு சோதி – எதிர்ந்த ஆயிரவிதழ்த் தாமரையினுள்ளே விளங்கும் சோதியை நோக்கி, நடந்த செந்தாமரை நாதம் – செல்லும் மூலத்தாமரையினின்றெழும் ஒலியானது, தகைந்தால் – அருளால் கைகூடுமாயின், அடைந்த பயோதரி அட்டி – அங்கே பொருந்தும் அமுதேசுவரி வெளிப்பட்டு. அடைத்தல் விட – ( அன்பில்லா தாருக்கு) அடைத்திருக்கும் அச்செயல் நீங்குமாறு. தருவாசலை மேல் திறவீர் – அமுதைப்பொழியும் வாயிலை மேலே ( அன்பின்பெருக்கால் ) திறக்கும்படி செய்வீர் என்றவாறு.

உடன்ற – மாறுபட்ட, எதிர்ந்த; உடன்ற என்றது உடந்த என நின்றது. தத்துவங்களைக் கடந்து அறிவு மாத்திரையாய் நின்று இச்சாஞான சொருபியான அவிநாபாவசத்தியின் சகத்திராம்சமான நாதஉண்மையினைக் குருவருளால் அறிந்து, பின்னர் பிரமரந்திரத்திலுள்ள அமிர்தப்பிரவாகத்தால் நிரம்பச் செய்து, பின்னர் திருவருளினை இரண்டற இருந்து அனுபவிக்கத்தக்க நிலையினை அதற்கு உபாயமான ஒரு மொழியினைப்பெற்று மோனநிலையில் நின்று அனுப வித்தல் வேண்டும். ஒரு மொழியாகிய அசபையின் இயலறிந்து, குண்டலிசத்தியை வணங்கி, அவள் அருளினால் சந்திரமண்டலத்தின் அமிர்தைப் பருகி, அமிர்தவுருவாகி, வெற்றி பொருந்தும் சிவயோக

நிலையை அடைந்து அதன் வழியே ஞானநிலையை அடைய வேண்டும். அகண்டாகார அன்னையின் அருளைப்பெற்றால் சுத்தாத்துவிதம் பெற்றுய்யலாம் என்க. (362)

## 25. முக்கரணம்

இடனொரு மூன்றி லியைந்த வொருவன்
கடனுறு மவ்வுரு வேறெனக் காணும்
திடமது போலச் சிவபர சீவர்
உடனுறை பேதமும் ஒன்றென லாமே. 2484

இ-ள்: இடன் ஒரு மூன்றில் இயைந்த ஒருவன்—தான் தங்குதற்கு இடமாகவுள்ள தூலவுடம்பு, சூக்குமவுடம்பு, காரணவுடம்பு என்னும் மூன்றினும் பொருந்திய ஆன்மாவானது, கடன் உறும் அ உரு வேறு எனக் காணும் திடம் அதுபோல – தனக்கு உரியதாகக் கொடுக்கப்பட்ட அந்த உடம்புகளெல்லாம் தனக்கு வேறானவை என்று குருவருளால் அறிந்து நீங்கும் அந்த உறுதியைப் போல, சிவ பர சீவர் உடன் உறை பேதமும் ஒன்று எனல் ஆம் – சிவம் பரம் சீவர் என்னும் மூன்றும் ஒன்றாக விளங்கும் வேறுபாடுகளும் ஒன்று என்றே சொல்லத் தக்கனவாம் என்றவாறு.

தூல உடம்பிற்கு முதற்காரணம் சூக்கும உடம்பு. அச்சூக்கும உடம்பிற்கு முதற்காரணம் மூலப்பிரகிருதி, அம்மூலப் பிரகிருதிக்குக் காரணம் அசுத்த மாயை. அசுத்த மாயையே பிரபஞ்சத்திற்கு மேலாகிய முதற்காரணம். பிரகிருதி மாயை அசுத்த மாயையாகிய இரு மாயைகளால் உண்டாகும் தூல சூக்குமங்களாகிய இருவகைப் பிரபஞ்சமும் ஆன்மா

சிவத்தினை அடைவதற்கு ஏதுவாகிய பக்குவகாலம் பொருந்துதற் பொருட்டுப் பெத்த காலத்து இறைவ ளுல் உளவாவன. மாயாகாரியங்களெல்லாம் சிவத் தைச் சார்தற்பொருட்டேயாம். மலங்களை நீக்கு முகத்தால் தனுகரணுதிகளும் சிவத்தினைச் சார்தற் பொருட்டென்க.

ஐம்புலன்களால் மயங்கித் தன்னையுணராத ஆன்மாவானது அறிவாய், வியாபகமாகிய தன் இயல்பைச் சடமாய் ஏகதேசமாகிய ஐம்பொறி களுக்கு வேறாக உணரும் வியாபக உணர்வுக்கு, அவ்வைம்பொறிகளால் ஆகக்கடவது ஒன்றில்லை என்று ஞானுசாரியர் அறிவுறுத்த, மற்றோர் காரணம் வேண்டாது தனக்கு ஆதாரமாகிய சிவபெருமான் திருவடியையே தலைப்படும் என்பது கருத்து. (363)

ஒளியை யொளிசெய்து வோமென் றெழுப்பி
வளியை வளிசெய்து வாய்த்திட வாங்கி
வெளியை வெளிசெய்து மேலெழ வைத்துத்
தெளியத் தெளியுஞ் சிவபதந் தானே. 2485

இ - ள்: ஒளியை ஒளிசெய்து ஓம் என்று எழுப்பி - திருவருளால் மூலாக்கினியை அசபா மந்திர உச்சாரணத்தால் ஒளிரச் செய்து பிரணவத்தால் மேலெழச் செய்து, வளியை வளிசெய்து வாய்த்திட வாங்கி - பிராணனை இரேசக பூரகம் செய்யாமல் கும்பகம் செய்து சுழுமுனையிலே நிறுத்திப் பொருந்து மாறு உள்ளே நிரப்பி, வெளியை வெளிசெய்து - வெளியாகிய அபரநாதத்தைப் பராசத்தி வெளியிலே புடரச்செய்து, மேல் எழவைத்து - மேலேயுள்ள பர

விந்துவையும் பரநாதத்தையும் கடந்து சென்று அங்கே வைத்து, தெளிய – இவைகளிலே தோய்ந்த குணங்கள் ஒன்றுமில்லையாய் உயிர் என்பது ஒரு முதலும் அற்று ஞேயம் தானே யாகுகையைத் தெளிய, சிவபதம் தானே தெளியும் – சிவபதமாகிய அந்த ஞேயப்பொருள் தானே விளங்கித் தோன்றுவதாம் என்றவாறு.

ஒளியை என்றது ஆன்மாவை என்வுமாம். ஒளி செய்து – தூயதாக்கி. எனவே. சுத்தாவத்தையில் உண்டாகிய பஞ்சபேதமான அவத்தையையும் கடந்த பேரொளியே கதியாகச் செய்து என்க. வெளியை வெளிசெய்து – கலைகளும் இந்த சதாசிவமூர்த்திகளும் தனு கரணம் முதலியவையாகக் காரணமான சுத்த மாயையின் அதோமுகமான விந்துவான பராசத்தியையும் அந்தச் சுத்தமாயையின் ஊர்த்துவமுகமாய் ஓசை வடிவாகிய அபரநாதத்தையும் புறகிட்டு மேற்சென்று சுத்தமாயா காரணங் கடந்து நின்மலமாகி துவாத சாந்தப்பெருவெளியிலே தியானம்செய்ய என்க. (364)

முக்கர ணங்களின் மூர்ச்சைதீர்த் தாவதக்
கைக்கா ரணமென்னத் தந்தனன் காணந்தி
மிக்க மனோன்மனி வேறே தனித்தேக
ஒக்கும துன்மனி யோதுட் சமாதியே. 2586

இ – ள் ; முக்கரணங்களின் மூர்ச்சை தீர்த்து ஆவது – மனம் வாக்குக் காயங்களாகிய திரிகரணங்களின் சோர்வையகற்றி அதன்முகமாக ஆக வேண்டியதாகிய, அக் கைக் காரணம் என்ன நந்தி தந்தனன் காண் – அந்தக் கையில் வைத்தறியும்

பொருள்போலச் சிவபெருமான் கொடுத்தருளினுர், மிக்க மனோன்மனி – மேம்பட்ட புருவ நடுவாகிய ஆக்ஞையில் விளங்கும் மனோன்மனிசத்தி, வேறே தனித்து ஏக – அவ்விடத்தை விட்டு மேலே தனித்துச் செல்ல, ஒக்கும் அது உன் மனி – பொருந்தும் அது உன்மனிகலையான் ; உன்மனிகலை ஒன்றுந் தோன்ருத பேரொளியாதலால் ஒரே அருளாய் அநாகதசிவத்தை அநுபவிக்கும் இடமாய் மகாசூக்குமமாய் உள்ளது. சமனை வரையிலுள்ளவை பாசக்கூட்டம் ; உன்மனை அந்தத்தில் பிராஸாத மந்திர வாச்சியராகிய பரமசிவன் விளங்குகிருர். ஒது உள்சமாதியே – அதுவே வேத சிவாகமங்களில் ஓதப்படும் அகச்சமாதியாம் ; இது நிர்விகற்ப சமாதியாம் என்றவாறு.

இனி, பன்னிரண்டு கலைகளையுடைய பிராஸாதத்தில் முதல் ஹகாரம் ; அதன்மேல் அகாரம்-1, உகாரம்–2, மகாரம்–3, விந்து–4, அர்த்தசந்திரன்–5, நிரோதினி-6, நாதம்–7, நாதாந்தம்–8, இடப்புறத்தில் விந்துவோடு கூடிய கலப்பை வடிவான சத்தி–9, அப்பால் வியாபினி – 10, அப்பால் சமனை–11, கடையில் உன்மனை – 12 ; இந்த முறையே பன்னிரண்டு கலைகளாம்.

பதினுறு கலைகளையுடைய பிராஸாதத்தில் முன் கூறப்பட்ட அகாரம் முதல் வியாபினி வரையில் உள்ள கலைகள்–10, வியாபினிக்கு அப்பால் வியோம ருபை–1, அனந்தை–2, அநாதை–3, அநாசிருதை–4 இந்த நான்கும் நடுவில் உள்ளன. அப்பால் முன் போலவே கடையில் சமனை–1, அப்பால் உன்மனை–2 : இப்படிப்பதினுறு கலைகளும் காண்க.

பிராஸாத மந்திரகலைகளின் தானங்களும், ஆறு அத்துவாக்களின் வியாப்தியும், காரணேசுவரரும் வருமாறு : சிவபீஜம் குஹ்யப் பிரதேசம் முதல் நாபி வரை வியாபித்துள்ளது, அப்பால் பிருதிவி முதல் பிரகிருதிவரையில் ஔகாரம் வியாபித்துள்ளது. அது தனது காரணேசுவரராகிய பிரமா வசிக்கும் இருதய கமலத்தில் உள்ளது. பிருதிவிக்கு அப்பால் கலா தத்துவம் வரையில் வியாபித்து விஷ்ணுவைக் காரணேசுவரராகவுடைய உகாரம் கண்டத்திலிருக்கிறது. அப்பால் மாயை வரையில் வியாபித்து உருத்திரனைக் காரணேசுவரராகவுடைய மகாரம் தாலு ஸ்தானத்தில் இருக்கிறது. அப்பால் சுத்தவித்தை ஈசுரம் என்னும் இரண்டு தத்துவங்களையும் வியாபித்து இருக்கின்ற அனந்தேசுவரரைக் காரணேசுவரராகவுடைய விந்துவானது புருவமத்திய ஸ்தானத்தில் இருக்கிறது. அப்பால் சாதாக்கியம் சத்தி என்னும் இரண்டு தத்துவங்களையும் வியாபித்திருக்கின்ற சதாசிவனைக் காரணேசுவரராகவுடைய அர்த்தசந்திர – நிரோதினி – நாத – நாதாந்த கலைகள் என்னும் நான்கும் பிரமரந்திர ஸ்தானத்திலிருக்கின்றன. அப்பால் சத்தி, வியாபினி, சமனை, உன்மனை ஆகிய கலைகள் நான்கிற்கும் பிரமரந்திரம் முதல் துவாதசாந்தம் வரையில் ஸ்தான வியாப்தி. அநாகத சிவன் காரணேசுவரர். அதற்கப்பால் பரமசிவம் தத்துவங்களைக் கடந்திருக்கும்.

இனி, மேதை என்னும் ஔகாரம் அக்கினி சுவாலை நிறம், ஊகாரம் சூரிய சந்திர நிறம், மகாரம் மின்னல் நிறம், விந்து தீபநிறம் எனக் கலைகளின் நிறம் சொல்லப்படும். அர்த்த சந்திரன் நிரோதினி இரண்டும் அர்த்த சந்திர நிறம், நாதம் மணிநிறம், நாதாந்தம்

மின்னல் நிறம்ஆம். அதற்குமேல் சத்தி சதசூரியப் பிரகாசமும், வியாபனி சகத்திர சூரியப்பிரகாசமும், சமனை கோடி சூரியப்பிரகாசமும், உன்மனை அளவில்லாத சூரியகாந்தியும் உள்ளது எனப் பேதம் அறிய வேண்டும். உன்மனைக்கு அப்பால் உள்ள பரசிவன் தெளிந்த கண்ணுடி நிறமும், சரற்காலத்துத் தண்ணீர் நிறமும் உடையவர் என்று அறிக. (365)

## ௨௬. முச்சூனிய தொந்தத்தசி

தற்பதந் தொம்பதந் தானும் அசிபதந்
தொற்பத மூன்றுந் துரியத்துத் தோற்றவே
நிற்ப துயிர்பர னிகழ்சிவ மும்மூன்றின்
சொற்பத மாகுந் தொந்தத் தசியே. 2487

இ - ள் : தத் பதம்—அது என்னும் தற்பதமும், தொம் பதம் – (த்வம்) நீ என்னும் தொம் பதமும், தான் ஆம் அசிபதம் • தன்மயமாவது உணர்த்தும் அசி பதமும் : ( அசி – ஆனுய் என்பது ) தொல் பதம் மூன்றும் – ( ஆகிய ) அநாதியான பதங்கள் மூன்றும், துரியத்து தோற்றவே – நின்மல துரிய நிலையின்கண் தோற்ற, உயிர் பரன் நிகழ் சிவமும் நிற்பது – அத் தோற்றத்தின்கண் ஆன்மாவும் பரமும் சிவமும் நிற்ப தாம், ( அவ்வாறு நிற்பது ) மூன்றின் சொற் பதம் ஆகும் – சீவன் பரம் சிவம் என்னும் மூன்று பொருளையும் விளக்கும், ( மகா வாக்கியமாகிய ) தொம் தத் அசி – தத்துவமசி என்பதாம் என்றவாறு.

ஞானசாரியன் ஆன்மாவின் பக்குவம் நோக்கி, அது நீ ஆனுய் என்று உபதேசம் செய்யக்கேட்ட அப்

பக்குவான்மா அம்மந்திரப் பொருளாகிய சிவமும் தியானிப்போனாகிய ஆன்மாவும் இரண்டறக் கலந்து அக்கலப்பினால் சிவமாந்தன்மைப் பெருவாழ்வுறும் என்க. சீவ துரியம் பரதுரியம் சிவதுரியம் என்னும் அவத்தையைக் கடந்தது சிவதுரியாதீதம் என்பது. சீவதுரியம் முதல் சிவதுரியம் ஈறான பத்து அவத்தைகள் வருமாறு : சீவதுரியம், சீவதுரியாதீதம், பரநனவு, பரகனவு, பரசுழுத்தி, பரதுரியம், சிவநனவு, சிவகனவு, சிவசுழுத்தி, சிவதுரியம் என்பன. பரதுரிய சாக்கிரம் : பரந்த உலகத்தை எஞ்சுதலின்றி இருந்த நிலையிலேயே ஒருசேர நுகர்தல். பரதுரிய சொப்பனம்: நுண்ணுணர்வால் நுகர்தல். பரதுரிய சுழுத்தி கருவி கரணங்களின் உருவை மட்டும் உணர்தலாம். அதுவும் கெட்டநிலை பரதுரியதுரியம்; இதுவே சிவதுரியம் என்க. பரதுரிய சாக்கிரமும் பரதுரிய சொப்பனமும் உண்மையான அமைதியாம். சகல கேவல சுத்தங்களின் சுழுத்திக்கு இது வேறானது என்றுணர்க. (366)

தொந்தத் தசிமூன்றில் தொல்கா மியமாதி
தொந்தத் தசிமூன்றில் தொல்தா மதமாதி
வந்த மலங்குண மாளச் சிவந்தோன்றின்
இந்துவின் முன்னிருள் ஏகுதல் ஒக்குமே. 2484

இ - ள் : தொம் தத் அசி மூன்றில் - தொம் பதமும் தத் பதமும் அசி பதமும் ஆகிய மூன்றினிடத்து, தொல் காமியம் ஆதி - தொன்மையாக வுள்ள காமியமும் மாயையும் ஆணவமும் என்னும் மும்மலங்களும், தொம் தத் அசி மூன்றில் தொல் தாமதம் ஆதி - தொம் தத் அசி என்னும் மூன்று

பதங்களிலே தாமதம் இராசதம் சத்துவம் என்னும் மாயாகுணங்களும் உள்ளன, வந்த மலம் குணம் மாள – முன்னைய வினைகளை உண்டு கழிக்கவும் மலவன்மையைக் கெடுக்கவும் இறைவனால் மாயா காரியமாக உதவப்பட்ட இவ்வுடம்பைக்கொண்டு வந்த மலங்களையும் குணங்களையும் தொலையும்படி செய்ய,

"புண்ணிய பாவங்களைப் பயக்கும் விருப்பு வெறுப்புக்களாய்ப் பொருந்துகின்ற இக்கன்ம மலமும், மண்முதல் மாயாதத்துவம் ஈறாய்க் காணப் படுகின்ற இம்மாயா மலமும், சுட்டியறிவாகிய விபரீத உணர்வைப் பயக்கும் இவ்வாணவ மலமும் என்னும் மும்மலங்களும் மெய்ஞ்ஞானிக்கு ஆகா வாகலின் அவற்றை விடுத்தொழி"ய வேண்டும். விடுத்தொழித்தலாவது "அஞ்ஞானம் ஏகதேசக் காட்சியாவது எனவும், இவ் ஏகதேசக் காட்சி விருப்பு வெறுப்புக்களது தோற்றத்தா னாயது எனவும், அத்தோற்றமும் பிராரத்தவினை நுகர்ச்சிக் கண் சென்ற தற்போதத்தான் ஆயது எனவும் அறிந்து, தற்போதம் முனைபாதவாறு பரிகரித்துச் சிவஞானத்துள் அடங்கி ஞானநிலையில் உறைத்து நிற்ற" லாம். ஆகலின் மாள என்றார். அஞ்ஞானத் தைக் காட்டுதல் மாயை கன்மங்கட்கு ஆணவமலச் சார்வானாகிய செயற்கை. ஆணவமலத்திற்கு அஃது இயற்கையாம்.

மூலமலம் ஆணவம், வந்தமலம் கன்மம் மாயை கள், உயிரினிடமாக அநாதியே தங்கிய மலம் ஆணவ மாகலின் அதற்கு அழிவில்லை. அதன் வலி கெடுதலே

யாம். 'மலங் குணம் மாள' என்றது மலத்தினது வலிகெட என்க. காமியம் கான்மியம் எனவும் பெயர் பெறும்; கன்மா் அதன் மூலத்தை நோக்க லான்; கன்மம் செய்யப்பட்டுள்ள வினை.

இனி, தொல் தாமதம் ஆதி வந்த குணம் மாள: அசுத்தமாயையினின்றும் காலம் முதலிய தத்துவங் கள் தோன்றிய பின்னர், அத்தத்துவங்களுள் ஒன்ருகிய கலா தத்துவத்தினின்றும் குணங்கள் அடங்கியிருக்கின்ற மூலப்பிரகிருதி முதல்வன் ஆணையால் தோன்றும். அம்மூலப் பிரகிருதியினின்றும் சாத்துவிகம் இராசதம் தாமதம் என்னும் மூவகையான குணதத்துவம் தோன்றும். அக்குணதத்துவத்தில் போகத்துக்குச் சாதகமாகிய புத்தி முதலிய தத்துவங்கள் தோன்றி அத் தத்துவங்ளெல்லாம் குண வடிவமாகவே முதல்வன் ஆணையால் உயிரைப் பந்திக்கும். அதனுல் போகம் அனுபவிக்கும் இட மெல்லாம் உயிரும் அக்குணருபமாக நிற்கும்.

தாமத குணமானது ஒன்றிலும் திருப்பதியில்லாமையையும், உற்சாகம் இன்மையையும், ஈனப் பிருவிருத்தியையும், கோட்சொல்லுகையையும், அசுத்த உணவை உண்பதையும் அதிக நித்திரையையும், கர்வத்தையும், சோம்பலையும், பிறருடைய மதிப்பைக் குறைக்க எண்ணுதலையும், அறிவு இல்லாமையையும், மோகத்தையும் உண்டுபண்ணும்.

இராசத குணமானது. லௌகிகப் பிரவிருத்தியையும், கோபம் முதலிய குரூரத்தன்மையையும், யான் எனது என்னும் அபிமானத்தையும், வஞ்சனையையும்,

இரக்கமில்லாமையையும் போகத்தின்கண் இச்சையையும், டம்ப நடையையும், துக்கத்தையும் உண்டு பண்ணும்.

சாத்துவிக குணமானது பொறுமையையும், மன உறுதியையும், மனத்தின் சூட்சுமத்தையும், துன்பத்திலும் சந்தோஷமாயிருக்கும் தன்மையையும், மனம் வாக்குக் காயம் மூன்றும் கபடமின்றி ஒத்திருக்கும் தன்மையையும், நல்ல உத்தியோகத்தையும், பெற்றது கொண்டே மகிழும் தன்மையையும், மோட்ச இச்சையையும், இந்திரிய அந்தக்கரணங்களின் அடக்கத்தையும், சகல சீவர்களிடத்தும் இரக்கத்தையும், மிருதுவான உணவை உண்ணுதலையும் உண்டுபண்ணும்.

சிவம் தோன்றின் – பரஞானத்தைப் பெற்றபொழுதே சிவம் பிரகாசிக்கும், அவ்வாறு சிவம் தோன்றப்பெற்றால், இந்துவின் முன் இருள் ஏகுதல் ஒக்கும் – முழு நிலவொளியின் முன்னே இருளானது கெட்டொழிதலைப் போன்று தேகம் நீங்கியபின்னர் எப்பொழுதும் சிவம் பெறுவர் என்றவாறு.

நிலவொளியில்லாதவிடத்து இருள் இருப்பது போலப் பெத்தரிடத்தில் மலமிருக்கும் என்க (367)

தொந்தத் தசியையவ் வாசியில் தோற்றியே
அந்த முறையீ ரைந்தாக மதித்திட்டு
அந்த மிலாத அவத்தையவ் வாக்கியத்
துந்து முறையிற் சிவமுன்வைத் தோதிடே 2489

இ – ள் : தொம் தத் அசியை – தொந்தத்தசி என்னும் பதப்பொருளை. வாசியில் தோற்றி – பிராண

வாயுவின் கண் தோற்றுவித்து, அந்த முறை ஈர் ஐந்தாக மதித்திட்டு – சிவதுரியம், சிவதுரியாதீதம் பர துரியம் நான்கு, சிவநனவு, சிவகனவு, சிவதுரியம்; துரியாதீதம் என்னும் அந்தமுறையில் பத்தாக எண்ணி, அந்தம் இலாத அவத்தைத் அவ்வாக்கியத்து – முடிவில்லாத அவ்வவத்தையை அவ்வாக்கியத்தில் வைத்து, உந்தும் முறையில், – செலுத்தும் முறையில், சிவம் முன் வைத்து ஓதிடு – சிவத்தை முன்னாக வைத்துச் செபிப்பாயாக என்றவாறு.

சிவமுன்வைத்து என்றது சிவ பர சீவ என்னும் முறையில் வைத்தென்றபடி ; உபதேச முறையாலறிக.

> “ சீவ துரிய முதலாகச் சீரான
> ஆவ சிவதுரி யாந்த மவத்தைபத்
> தோவும் பரா நந்தி யுண்மைக்குள் வைகியே
> மேவிய நாலேழ் விடுத்துநின் றானே. ” (2284)

என்னும் திருமந்திரத்தில் அவத்தை பத்தும் அதன் மேல் உள்ள பதினோராவது அவத்தையும் காண்க. அது சிவதுரியாதீதம்.

சீவ துரியமுதல் சிவதுரியம் ஈறான பத்தவத்தைகளாவன : சீவதுரியம், சீவதுரியாதீதம், பரநனவு, பர கனவு, பரசுழுத்தி, பரதுரியம், பரதுரியாதீதம், சிவ நனவு, சிவகனவு, சிவசுழுத்தி என்பன.

பரசாக்கிரம் உலகினை நுகர்தல், அந்நுகர்ச்சியின் உறுதி பரசொப்பனம். அதனை ஞானமயமாக அறிதல் பரசுழுத்தி, உபசாந்தம் முதிர்தல் சுழுத்தியைத்துறந்த

பர துரியமாம். அதனைத் தரித்தவன் சிவ துரியனும் என்பது கருத்தாகக்கொள்க. பர துரியாதீத அவத்தை பற்றறவே நீங்கச் சிவத்தைப் பற்றுதலாம். பர துரியம் பிரமரந்திரத்தை இடமாகவுடையது என்பர். அவ்வனுபவமும் காயத்தினளவே. குருவருளால் சீபஞ்சாக்கர உபதேசமும் வரமும் பெற்றுச் சிவன் கூடியபிறகே சிவமாந்தன்மை சித்திக்கும் என்றபடி.

பூரக ரேசகம் செய்யும் காலத்திலே ஹம்ஸ: ஸோஹம் என்று நேராகவும் தலை கீழாகவும் பிரகாசிக்கின்றன. அசபா மந்திரத்தினுல் 'தத்துவமசி' என்னும் மகா வாக்கியத்தில் சொல்லப்பட்டிருக்கிற சீவப் பிரம ஐக்கியம் அடிக்கடி சிந்திக்கப்படுகின்றது. அந்த ஸோஹம் என்னும் அசபா காயத்திரியை ஈசுர நாமம் போலச் செபிப்பதால் நன்மையுண்டாம். குரு உபதேசத்தினுல் இந்த மந்திர செபமானது சுழுமுனையிலே விபரீதமாகவே உண்டாகின்றது. அது ஸோஹம் ஸோஹம் என்று ஆகிறது. சகாரம் கேசரி என்று சொல்லப்படும். அது த்வம் பதம் என நிச்சயிக்கப்படும். அகாரம் பரமேசுவரன் ஆகிறது. அது தத் பதம் என்று நிச்சயிக்கப்படும். சகாரத்தைத் தியானிக்கும் ஆன்மாவும் நிச்சயமாய் அகாரமே ஆகின்ருன். (368)

வைத்துச் சிவத்தை மதிசொரு பானந்தத்
துய்த்துப் பிரணவ மாம்உப தேசத்தை
மெய்த்த இதயத்து விட்டிடு மெய்யுணர்ந்
தத்தற் கடிமை யடைந்துநின் ருனே. 2490

இ – ள்: சிவத்தை வைத்து மதி – சிவம் முன்னுகக் கொண்டு கணிக்க, (மதி) சொருபானந்

தத்து உய்த்து – ஆன்ம அறிவானது சிவஞானமாக அச் சிவசொரூபத்தின்கண் செல்லும், அவ்வாறு செலுத்திப் பின்பு, பிரணவம் ஆம் உபதேசத்தை – பிரணவமாகிய உபதேசப் பொருளை, மெய்த்த இதயத்து விட்டிடு – மெய்யுணர்வால் தூயதான இதயகமலத்திலே விட்டிருப்பாராக, (அதன்பின்) மெய் உணர்ந்து – மெய்ம்மையாகிய சிவபரம்பொருளை அறிவுக்கறிவாக வுணர்ந்து, அத்தற்கு அடிமை அடைந்து நின்றான் – அவ்வறிவே பூரணமாய் விளங்கிக் கட்டின்றி அம்முதல்வன் திருவடியைத் தலைப்பட்டு அந்த ஞேயத்தில் அழுந்தி அடங்கி நின்று பிரித்தறியவாராது ஆனந்த சொரூபியாய் நிற்பன் அவ் வான்மா என்றவாறு.

இது நின்மல துரியாதீதநிலை. (369)

தொம்பத மாயையுள் தோன்றிடுந் தற்பதம்
அம்பரை தன்னில் உதிக்கும் அசிபதம்
நம்புறு சாந்தியில் நண்ணுமவ் வாக்கியம்
உம்பர் உரைதொந்தத் தசிவாசி யாமே. 2491

இ – ள் : தொம் பதம் மாயையுள் தோன்றிடும் – தொம்பதப்பொருளாகிய நீ என்னும் உயிர் மாயையிற் கட்டுண்டு கிடக்கும். தற்பதம் – தற்பதப்பொருளாகிய அது என்னு சிவம், அம்பரை தன்னில் உதிக்கும் – அழகிய பராசத்தியினிடமாகத் தோன்றுவதாம். அசிபதம் – அசிபதப்பொருளாகிய ஆனாய் என்பது, நம்புறு சாந்தியில் நண்ணும்–விரும்பத்தகும் சாந்தியாக ஒடுக்கத்திலே பொருந்துவதாம், அ வாக்கியம் – அத் தத்துவ மசி என்னும் வாக்கியமானது,

உம்பர் உரை – மேலான மந்திரமாகும். தொம் தத்அசி வாசி ஆம் - தொம் தத்அசி என்பது இயல்பாகவே வாசியினிடமாகப் பயில்வதாம் என்றவாறு.

மகா வாக்கியம் என்பது பெரும்பெயர்க் கிளவி. அஃது இங்கே தத்துவமசி எனப் பேசப்படுகிறது. தத்துவமசி - அது நீ ஆகின்றாய் என்னும் பொருளை உடையது. தத்துவமசி வாக்கியம் ஓரளவு சீபஞ்சாக் கரப்பொருளையே உணர்த்துவதாம், சிவயநமவென் பது அம்மையப்பர் அருள் அணைப்பிலே ஆன்மா முனைப்பற்று நிற்கும் நிலையை உணர்த்தும். சி - சிவம், வ - அருள், ய - ஆன்மா, " பெரும்பெயரே பெயராக வந்த ஒரு வாய்மை தன்னை நினையினு முள்ள முருகுவதே " என்றது காண்க.

திருவருளிற்றோய்ந்து ஆன்மபோத மழிந்து சிவ போத மிக்குச் சிவத்தோடுகூடிச் சிவமாந்தன்மைப் பெருவாழ்வு எய்துதலே மகாவாக்கிய நிலையாம் என்பது கருத்து. (570)

ஆகிய வச்சோயந் தேவதத் தன்னிடத்
தாகிய வைவிட்டாற் காயம் உபாதானம்
ஏகிய தொந்தத் தசியென்ப மெய்யறி
வாகிய சீவன் பரசிவ ணுமே 2492

இ - ள் : ஆகிய அசோயம் தேவதத்தன் - பொருந்திய அவனே இத்தேவதத்தன் என்னும், இடத்து ஆகியவை விட்டால் - காலம் இடம் முதலாயின நீங்கினல், காயம் உபாதானம் ஏகிய - உடம்பும் காரணமாயையும் நீங்கிய நிலையில். தொம் தத் அசி என்ப – அம்மூன்று பதங்களும் உணர்த்தும்

மெய்ப்பொருள் என்று கூறுவர், மெய்யறிவாகிய சீவன் பரசிவன் ஆம் – (பாசப் பிணிப்புக்கு ஏதுவாகிய அபக்குவம் நீங்கித் திருவருட் பார்வையினால் தம்மை அறிதற்குரிய பக்குவமுடைய மலம் நீங்கிய ) மூத்தன் ஏகதேச அறிவை நீங்கிப் பூரண அறிவைப்பெற்று அந்த ஞேயத்தைப் பொருந்தித் தான் தோன்றாமல் இரண்டறக் கலந்து நிற்பன் ; இதுவே சிவபோகமாம்.

சிவபெருமான் திருவருளால் அம்மலசத்தி பற்றறக் களைந்து அடக்கப்பட்டபோது, அந்த அறிவானது சுத்தாவத்தையில் வியாபகமாய் விளங்கிக் கப்பின்றிச் சிவானந்தத்தைத் தலைப்பட்டு அந்தஞேய இன்ப சிவத்தில் அழுந்தும் ; இதனையே மெய்யறிவாகிய சீவன் என்றார். மெய்யறிவு–உண்மைஞானம் ; சிவஞானம். சோயம் - இவன் அவனே. உபாதானம்– மாயை, காரண மாயை என்க.

சிவஞானத்தால் முனைப்பின்றி அருள்வழியில் நின்று சிவமே தானெனச் சிவோகம்பாவனை செய்யின் சிவபெருமான் அவ்வான்மாவில் பிரிப்பின்றி அத்துவிதமாகத்தோன்றி நிற்பன் என்க. (371)

தாமத காமிய மாகித் தகுகுண
மாமல மூன்றும் அகார வுகாரத்தோ(டு)
ஆமறு மவ்வுமவ் வாயுடன் மூன்றில்
தாமாந் துரியமுந் தொந்தத் தசியதே. 2493

இ – ள் ; தாமதம் ஆகி தகு குணம் ஆம் மூன்றும் – தாமதம் இராசதம் சாத்துவிகம் என்னும் மூன்று குணங்களும், காமியம் ஆகி தகு மலம்

மூன்றும் – கன்மம் மாயை ஆணவம் என்று சொல்லப்படும். மூன்று மலங்களும். அகார உகாரத் தோடு மவ்வும் – அகரம் அகங்காரத்தினையும் உகரம் புத்தியினையும் மகரம் மனத்தினையும் செலுத்துர், உடல் மூன்றில் தாம் ஆம் துரியம் – தூலம் சூக்குமம் காரணம் என்னும் உடம்புகளில் உண்டாகும் துரியநிலை. ஒவ்வாய் உடல் – அந்த வாயில்களையுடைய உடல், மலகன்மங்களால் கட்டுண்டநிலை பெத்தம், அவற்றின் நீங்கியநிலை முத்திநிலையாம். துரியநிலை ஒடுக்கம். அவற்றைக் கடந்த நிலை துரியாதீதமாம்.

தாமதம் முதலிய குணங்களும் காமியம் முதலிய மலங்களும் தூல வுடம்பும் புரியட்டக வுடம்பும் காரண வுடம்பும் ஆகிய யாவும் தொம் (த்வம்) என்னும் பதப்பொருளாய் நிற்கும் ஆன்மா; ஆன்மா இவற்றைத் தாமாகவே எண்ணி நிற்கும் நிலை. தத் என்றது துரிய நிலை, அது பரதுரியமாம். பரதுரியம் மெய்ப் பொருட்காட்சி. பரதுரிய துரியமே சிவதுரியம் எனப்படும். ஆகலின், தத் என்னும் பதப்பொருளாய் நிற்கும் சிவம் அசி என்னும் பதம் ஆனுய், ஆகின்ருய் என்பது ஆன்மா சிவத்தோடு கலத்தற்கு வாயிலாக உள்ளது பரதுரியம் என அறிக என்றவாறு. (372)

## 27. முப்பாழ்

காரிய மேழ்கண் டறுமாயப் பாழ்விடக்
காரண மேழ்கண் டறுமபோதப் பாழ்விடக்
காரிய காரண வாதனை கண்டறுஞ்
சீருப சாந்தமுப் பாழ்விடத் தீருமே. 2494

இ – ள் : காரியம் ஏழ் கண்டு அறும் மாயப்பாழ் விட – மாயாகாரியமாகிய உடல், பொறி, மனம், சித்தம், புத்தி, அகங்காரம், பிராணவாயு ஆகிய ஏழினையும் கண்டு நீங்க; அதனைத் தத்துவ ஞானத்தால் அறிந்து நீங்க என்றபடி. காரணம் ஏழ்கண்டு அறும் போதப் பாழ்விட – காரண உபாதியாகிய எல்லாம் அழித்தல், எல்லாம் படைத்தல், எல்லாம் அறிதல், எல்லாவற்றிற்கும் காரணமாதல், எங்கும் வியாபித்திருத்தல், எல்லாம் தாறுதல், எல்லாம் காத்தல் என்னும் போதப்பாழினை அருளால் கண்டு நீங்க, காரிய காரண வாதனைகண்டு அறும் சீர் உபசாந்தம் – காரிய காரணங்களாகவுள்ள வாசனைகளைக்கண்டு அதனைவிட்டு நீங்குவதாகிய உபசாந்மும் ஆகிய எல்லாம், முப்பாழ்விடத் தீரும் – மூன்று வகைப்பட்ட பாழினையும் கடந்து நிற்க நீங்குவதாம் என்றவாறு.

முப்பாழ் என்றது மாயப்பாழ் சீவப்பாழ் சிவப்பாழ் என்பன. மாயப்பாழ், போதப்பாழ், எனவும் கூறப்படும். போதப்பாழ் தத்துவரூபம் முதலிய மூன்றையும் அறிந்து பாழ்படுத்தி நீங்கல். சீவப்பாழாவது ஆன்ம ரூபம் முதலிய மூன்றையும் அறிந்து நீங்குதல். சிவப்பாழாவது சிவரூபம் முதலிய இரண்டையும் அறிந்து நீங்குதல். இம் முப்பாழும் நீங்க முழுப்பாழ் சித்திக்கும்; முழுப்பாழ் – முத்தி.

காரியோபாதி ஏழும் வருமாறு: திருமந்திரத்தில்,

" உடலிந் தியமன மொண்புத்தி சித்தம்
அடலொன் றகந்தை யறியாமை மன்னிக்
கெடுமவ் வுயிர்மயன் மேலுங் கிளைத்தால்
அடைவது தானேழ் நரகத்து ளாமே."

என்பது (2194) கண்டுகொள்க.

ஈண்டுக்கூறும் எழுபாதிகட்கு முள்ள தத்துவங்கள் தேகத்தில் நின்ற தன்மாத்திரை யைந்து, பூதம் ஐந்து, இந்திரியங்களுள் ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, அந்தக்கரணம் நான்கும் பிராணவாயு ஒன்றுமாக இருபத்தைந்து தத்துவங்களாம். இவற்றின் மேலாய்நிற்கும் புருடதத்துவம், இப்புருடன் சகலனுகலின் அவித்தையும் கன்மமும் கூடிநின்றபோது பிரளயாகலன் என்றும், அவித்தை மாத்திரம் கூடி நின்றபோது விஞ்ஞானகலன் என்றும் பெயர் பெறுவன். அதனுல் வித்தியா தத்துவம் சிவதத்துவங்களையும் மாயையுள் அடக்கிப் பிறிதோராற்றல் " கர்த்தா மேவுபாதியே மென்பார் " நிராமய தேவர். அது.

" இந்திய மெல்லாந் தேக மெழுமன மிதனிற் புந்தி
புந்தியிற் பிராணன் மேலாம் போற்றிய பிராணன் தன்னில்
வந்தசங் காத மாயை மேலதாம் வகுத்த வேழும்
முந்திய வான்மோ பாதி யேழதா மொழியுங் காலே"

என்வரும். இன்னும், நிராமயதேவர் நூலின்கண்,

" தத்துவந் தீர்ந்த பாழுந் தனையறிந் தற்ற பாழும்
உத்தம வுபசாந் தத் ...... முன்னிய மூன்று பாழும்
தொத்திடு மாலை யோடுந் தொல்பரா சத்தி
யோடுஞ்
சித்து ...... சிவசத்தி ...... பாற்றிருந்தது திரிதல்
காண்டி .... "

" காரிய காரண வுபாதி கைவிட
ஓரியல் பாமுப சாந்த முற்றதே
எரிய லுயிர்பர மிரண்டி னைக்யமும்
ஓரியல் பாகிவே றின்றி யென்றதாம். "
(ஞானாவரணவிளக்கம், பக்-137.)

என வருமாற்றான் உணர்க.

" காரிய காரணங் காணு முப்பாழ்விடச்
சீரிய தான சிவமென லாமே. "

எனவும், நிராமயதேவர் நூலில்.

" ஒழியாவுப சாந்தம தாயுளதுங்
கழியாவிடு காரண காரியமே
மொழியாவகை யாலுல கற்றவிடத்
தழியாவுணர் வேசிவ மாவதுவே, "

எனவும் வரும்.

இனி, முப்பத்தாறுசத்துவங்களில் ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும், புருடதத்துவம் ஒன்றும் நீங்கப் பெறுதல் நின்மலசாக்கிரம். வித்தியா தத்துவங்களில் புருடன் நீங்கநின்ற ஏனைய ஆறும்

கழலல் நின்மல சாக்கிரத்தில் சொப்பனம். தனித்த சிவதத்துவம் ஐந்தும் கழலல் நின்மலசாக்கிரத்தில் சுழுத்தியாம்,

இங்ஙனம் காரியமான தத்துவங்கள் கழிதல் நின்மல நனவாதி அவத்தை. எனவே காரணமின்மையும் உடன் கருதப்படும், காரணமுங் கழிதலே நின்மல நிலைகள் என்க. 'காரியம் ஒழியவே காரணமின்மை யின்' என்பது ஞானாவரண விளக்கம். (373)

மாயப்பாழ் சீவன் வியோமப்பாழ் மன்பரன்
சேயமுப் பாழெனச் சிவசத்தி யிற்சீவன்
ஆய வியாப்த மெனுமுப்பா ழாம்அந்தத்
தூய சொரூபத்திற் சொல்முடி வாகுமே. 2495

இ—ள்: மாயப்பாழ் சீவன் வியோமப்பாழ் — மாயைப்பாழ் சீவப்பாழ் வியோமப்பாழ் என்னும் — நிலைபெற்ற மூன்றும், மன் பரன் சேய முப்பாழ் என — நிலைபெற்ற சிவத்தினது சேய்மைக்கண் உள்ள முப்பாழ் என்று சொல்லும்படி, சிவசத்தியில் சீவன் ஆய வியாப்தம் எனும் முப்பாழாய் — சிவசத்தியாகிய அருளிலே சீவன் அடங்கிநிற்றல் என்று சொல்லப்படும் மூன்றுபாழாம், அந்த தூய சொருபத்தில் சொல் முடிவு ஆகும் — அந்த மூன்று பாழும் தூய சிவசொருபத்தினிடத்துச் சேய்மையில் உள்ளதாம்; தூய சொருபம் சொல் இறந்த முடிவின்கண் உள்ளது என்றவாறு. (374)

எதிரற நாளும் எருதுவந் தேறும்
பதியெனும் நந்தி பதமது கூடக்
கதியெனப் பாழைக் கடந்தந்தக் கற்பனை
உதறிய பாழில் ஒடுங்குகின் றேனே. 2496

இ – ள் : எதிர் அறநாளும் எருது உவந்து ஏறும் பதி எனும் நந்தி – இணையில்லாமல் எப்பொழுதும் இடபவாகனத்திலே மகிழ்ந்து ஏறிச் செலுத்தும் பதிப் பொருள் என்னும் நந்தியினது, பதம் அது கூட – திருவடிகளிலே கூடும்பொருட்டு, கதி என – பற்றுக் கோடு என்று கருதப்படும், பாழைக் கடந்து மாயைப் பாழ் சீவப்பாழ் சிவப்பாழ் என்னும் முப்பாழ் களையும் கடந்து, அந்தக் கற்பனை உதறிய – அந்தக் கற்பனையை விட்டு நீங்கிய, பாழில் – முழுப்பாழாகிய முத்தியில், ஒடுங்குகின்றேன் – சிவ வியாபகத்தில் வியாப்பியமாக அடங்கியிருந்து சிவபோகத்தைத் துய்க்கின்றேன் என்றவாறு.

மாயைப்பாழ் – தத்துவ ரூபம் தத்துவ தரிசனம் தத்துவசுத்தி; சீவப்பாழ் – ஆன்மரூபம் ஆன்ம தரிசனம் ஆன்மசுத்தி; சிவப்பாழ் – சிவரூபம் சிவ தரிசனம். பாழைக் கடத்தலாவது அவற்றை அறிந்து நீங்குதல். இது முன்னும் கூறப்பட்டமை காண்க.

வியாபகம் – எங்குமிருப்பது, அதிகதேசவிருத்தி. வியாப்பியம் – நூனதேசவிருத்தி, எதிர் அற – இணை யில்லாமல். உதறிய – விலக்கியுள்ள. பாழில் – உருவம் அற்ற இடத்தில். (375)

துரியம் அடங்கிய சொல்லறும் பாழை
அரிய பரம்பரம் என்பர்கள் ஆதர்
அரிய பரம்புரம் என்றே துதிக்கும்
அருநிலம் என்பதை யாரறி வாரே. 2497

இ – ள் : துரியம் அடங்கிய சொல் அறும் பாழை – சுத்த துரியமாகிய நின்மலதுரியமும்

அடங்கிய சொல்லுதற்கு (முடிவில்லாத வியாத்தியாகிச் சித்தம் செல்லாத சூனியமாய் உள்ள) ஒன்றை, அரிய பரம் பரம் என்பர்கள் ஆதர் – அறிவில்லாதவர்கள் அறிதற்கு அருமையாயுள்ள மேலானவற்றிற்கெல்லாம் மேலானது என்று (அறிவுடையோர்) கூறுவர், (அப்பாழானது) அரிய பரம்பரம் என்றே துதிக்கும் – கிட்டுதற்கரிய மிக மேலானது என்று துதிக்கப்படும், அருநிலம் என்பதை அறிவார் யார் – துரியாதீதநிலை அஃது என்பதை அறிகின்றவர் யாவருளர்? மிக மிகச் சிலரே எனக் குறித்தபடி என்றவாறு.

அருநிலம் என்றது அருமையான சிவலோகத்தை. நின்மலாவத்தையில் சிவனும் அவன் அருளுமே அறியப்படுவன; அன்றி, வேறு அறியப்படுவன இல்லையாம். நின்மல துரியநிலையில் இருப்பார் சிவத்தையன்றிச் சிந்தை செய்யார். செயலறுதல் – சிந்தையும் ஒருங்கித் திருவடியிற் பதிதல்.

நம்பியாரூரர் தம் செயலற்று அன்பின் செயலுட்பட்டுத் தாழ்ந்தெழுந்து பஞ்சாக்கர சொரூபராய், பஞ்சகிருத்திய அதிகாரியாய், பந்தம் என்னும் துன்பத்தைத் தலையெடாவண்ணம் மிதித்து முத்தி என்னும் பேரின்பத்தை எடுத்தளிக்கும் தாதாவாய், ஆனந்தத் தாண்டவம் செய்யும் சந்திரசேகரரைக் காணும்போது அந்த ஈசன் பரமானந்த எல்லையின்கண் நின்று தம்மையே காணும் காட்சிவசப்பட்ட முத்தர்களது பொறி புலன் கரணாதிகளெல்லாம் அக்காட்சியின் வசமாகவே நின்று திளைத்துச் சிவானந்தத்தில் மூழ்கும் வண்ணம் செய்தருளும்.

பெருங்கூத்தினின்றும் பெருகி வராநின்ற பேரின்ப வெள்ளத்துள் மூழ்கினார். மூழ்கவும் அவ்வின்ப வசப்பட்ட கண்களாலாகிய காட்சி யுணர்வு ஒன்றே சத்த பரிச ரூப ரச கந்தமெனப் பெயர் பெற்ற ஐவகை யுணர்வையும் கொள்ளைகொண்டது. அஃதேபோல், மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் கரணங்கள் நான்கும் அக்காட்சி யுணர்வின் வழியே சென்று திருவுருவைச் சிந்திக்கச் சித்தம் ஒன்றே ஆயிற்று. அஃதேபோல், அவ் அந்தக்கரணங்களைத் தொழிற் படுத்தும் சாத்துவிகம் இராசதம் தாமதமென்னும் முக்குணங்களும் திருவுருவைச் சிந்தித்த சித்தத்தின் வழியாய்நின்ற சாத்துவிக குணமாகவே ஆயிற்று. ஆகவே, புலன்களாலும் கரணங்களாலும் குணங்க ளாலும் மாறுபடுத லில்லாத சிவானந்தக் களிப்பினால் திருவுள்ளம் மலர்ந்திருக்கப் பெற்றார். இதனைச் சேக் கிழார் சுவாமிகள், "ஐந்துபே ரறிவும் கண்களே கொள்ள அளப்பரும் கரணங்கள் நான்கும், சிந்தையே யாகக் குணமொரு மூன்றும் திருந்துசாத் துவிகமே யாக, இந்துவாழ் சடையான் ஆடுமானந்த எல்லையில் தனிப்பெருங் கூத்தின், வந்த பேரின்ப வெள்ளத்துட் டிளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்" என்று தடுத்தாட்கொண்ட புராணத்துக் கூறியருளியவாற் றான் அறிக. (376)

ஆருறு நீங்க நமவாதி யகன்றிட்டு
வேரு கியபரை யாவென்று மெய்ப்பரன்
ஈருன வாசியிற் கூட்டு மதுவன்றே
தேருச் சிவாய நமவெனத் தேறிலே. 2498

இ—ள்: ஆருறும் நீங்க — ஆன்மதத்துவம் இருபத்துநான்கு, வித்தியாதத்துவம் ஏழு, சிவ

தத்துவம் ஐந்து ஆகிய முப்பத்தாறு தத்துவங்களும் ஆன்மாவை விட்டு நீங்கும்படியாக, நம ஆதி அகன்றிட்டு – ஆதியாகவுள்ள திரோதமாகிய நகாரமும், மலமாகிய மகாரமும் நீங்கி, வேறு ஆகிய பரை – திரோத சத்தியே திருவருட்சத்தியாக மாறிநின்று, யா – யகாரமாகிய ஆன்மாவை, என்றும் – எக்காலத்தும், மெய்ப்பரன் ஈறு ஆன வாசியிற் கூட்டும் – உண்மையான வடிவுள்ள சிவத்துக்கு ஈறாக அமைந்துள்ள வகாரமாகிய சிவசத்தி சிகாரமாகிய சிவத்துடன் இரண்டறக் கூட்டுவிக்கும். தேறு – மலபந்திகளால் தெளியமுடியாத. சிவாயநம என தேறில் – சிவாயநம என்னும் திருவைந் தெழுத்தாகிய மந்திரத்தை ஞானாசாரியன் அனுக்கிரகத்தால் பெற்றுத் தெளிந்து அநுபூதி கைவரப்பெற்றால், அது அன்றே – (கூட்டும்) அம்மந்திரமன்றே மந்திரவாச்சியப் பொருளாகிய சிவத்துடன் ஆன்மாவை இரண்டறக் கலப்பிக்கும் என்றவாறு.

ஸ்ரீபஞ்சாக்கரத்தின் முறைமையாவது; சிவன் அருள் ஆவி திரோதம் மலம் என்னும் ஐந்துமாம். பக்குவப்பட்ட ஆன்மா நகாரம் முதலாக உச்சரிக்கில் அருள் பொருந்தாது. ஆகலின், ஞானாசாரியர் அனுக்கிரகம் பண்ணின முறைமையிலே நின்று சிகாரம் முதலாக உச்சரிக்கில் அருள் பொருந்தும் என்க. அவ்வாறு சிகாரம் முதலாகவுள்ள பஞ்சாக்கரத்தை விதிப்படி இடைவிடாமல் அறிவாற் கணிக்கில் ஆன்மாவுக்கு ஆணவமலமானது நீங்க அருளானது பேரின்பமாகிய சிவத்திலே பொருந்துவிக்கும் என்றபடி.

ஆதியாகிய நகாரமும் மலமாகிய மகாரமும் ஆகிய இரண்டும் அடியாக உச்சரித்தால் உறுதியாக மும்மல மும் நீங்கி ஆன்மா அருளைப் பொருந்திப் பேரின்ப வாழ்வை அடையமாட்டா. ஆகலின், நகாரம் முதலாக உச்சரிக்கும் முறைமையை மாறிச் சிவம் முன்னாக அத் திருவெழுத்து ஐந்தையும் விதிப்படி உச்சரிக்க ஆன்ம போதத்தால் மதித்தற்கரிதாகிய பேரின்ப வாழ்வில் எய்தி வாழலாம். ஆகவே, சிவம் முன்னாகவே கணிக்க என்பது கருத்தாகக் கொள்க.

தத்துவாதீதமாகிய மௌனஞானமா யிருக்கின்ற பரமுத்தி அப்பஞ்சாக்கரத்தால் சித்திக்கும். (377)

உள்ளம் உருவென்றும் உருவம் உளமென்றும்
உள்ள பரிசறிந் தோரு மவர்கட்குப்
பள்ளமும் இல்லைத் திடரில்லைப் பாழில்லை
உள்ளமும் இல்லை யுருவில்லை தானே. 2499

இ – ள் : உள்ளம் உரு என்றும் உருவம் உளம் என்றும் உள்ள பரிசு அறிந்து – உயிரை உடல் என்றும் உடலை உயிர் என்றும் கலப்புற்று நிற்கும் நிலையில் அறியாமையாற் கூறும் கூற்றை நன்கு விசாரித்து அத்தன்மையை உள்ளவாறு அறிந்து, ஓரும் அவர்களுக்கு – ஆராய்ந்து தெளியும் சிவஞானி களுக்கு, பள்ளமும் இல்லை திடரும் இல்லை – பள்ளம் என்று ஒன்றில்லை, மேடு என்றும் ஒன்றில்லை. பாழ் இல்லை உள்ளமும் இல்லை – முப்பாழுமில்லை ஆன்மா வென ஒன்றில்லை, உரு இல்லை தான் ஏ – பிறப்பும் இல்லையாம் என்றவாறு.

உடம்பின் வேறாக ஆன்மாவாகிய தான் ஒருவன் உளன் என்பதை அறியாமல் தன் உடலையே தான் என்று மயங்கியிருந்தான்; உயிராகிய தன்னை எடுத்த உடம்பின் வேறாக உணர்த்த உணரும் சித்தாக உணர்ந்தான்; தன்னின் வேறான பரசிவத்தையும் கண்டான்; துரியநிலையும் ஈசனோடு ஒன்றியிராவிடின் அவன் மீளவும் வினைக்கீடாக வந்து பூமியிற் பிறப்பன்.

இதனை,

"தன்னை யறியா துடலைமுன் றானென்றான்
தன்னைமுன் கண்டான் றுரியந் தனைக்கண்டான்
உன்னுந் துரியமு மீசனோ டொன்றாக்கால்
பின்னையும் வந்து பிறந்திடுந் தானே."

(2264) என்னும் மந்திரத்தில் காண்க.

உயிரை உடம்பென்றும் உடம்பை உயிரென்றும் அறியாமையால் மயங்குவதை,

"மேவிய புன்மயிர்த் தொகையோ அம்மயிர்
பாவிய தோலின் பரப்போ தோலிடைப்
புகவிட்டுப் பொதிந்த புண்ணோ புண்ணிடை
ஊறும் உதிரப் புனலோ கூறுசெய்(து)
இடையிடை நிற்கும் எலும்போ எலும்பிடை
முடைகெழு மூளை விழுதோ வழுவழுத்
துள்ளிடை யொழுகும் வழும்போ மெள்ளநின்
றூரும் புழுவின் ஒழுங்கோ நீரிடை
வைத்த மலத்தின் குவையோ வைத்துக்
கட்டிய நரம்பின் கயிறோ உடம்பிற்குள்

பிரியா தொறுகசும் பிணியோ தெரியா
தின்ன தியானென் றறியேன் என்னை
எதினும் தேடினன் யாதினுங் காணேன்

எனவும்,

... .... .... ... .... ...
புண்ணியம் புரக்கும் பொன்னி சூழ்ந்த
திருவிடை மருத பொருவிடைப் பாக
மங்கை பங்க நங்கைநா யகநின்
தெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தலின்
மாயப் படலங் கீறித் தூய
ஞான நாட்டம் பெற்றபின் யானும்
நின்பெருந் தன்மையும் கண்டேன் காண்டலும்
என்னையுங் கண்டேன் பிறரையும் கண்டேன்
நின்நிலை யனைத்தையும் கண்டேன் என்னை
நின்னைக் காணு மாந்தர்
தன்னையுங் காணுத் தனைமை யோரே"

எனவும் வரும் திருவிடைமருதூர் மும்மணிக் கோவை நோக்கியுமறிக.

## உ௯. காரிய காரணவுபாதி

செற்றிடுஞ் சீவ வுபாதித் திறனேழும்
பற்றும் பரோபாதி ஏழும் பகருரை
உற்றிடுங் காரிய காரணத் தோடற
அற்றிட வச்சிவ மாகும் அணுவனே. 2500

இதன்பொருள்: செற்றிடும் சீவ உபாதித்திறன் ஏழும் – துன்பத்தைத்தருவதற்கு இடமாகிய மாயா

காரிய உடல், பொறி, மனம், சித்தம், புத்தி, அகங் காரம். பிராணவாயு என்னும் ஏழும், பற்றும் பர உபாதி ஏழும் – பொருந்தும் காரணவுபாதியாகிய எல்லாம் அழித்தல், எல்லாம் படைத்தல், எல்லாம் அறிதல், எல்லாவற்றிற்கும் காரணமாதல், எங்கும் வியாபித்திருத்தல், எல்லாம் தாஞதல், எல்லாம் காத் தல் என்னும் ஏழனையும், பகர் உரை – அவைகளைச் சுட்டிச் சொல்லும் பெயர்களும், உற்றிடும் காரிய காரணத்தோடு அற அற்றிட – பொருந்தும் காரிய காரணங்களோடு (அணுவன்) முழுவதும் விட்டுநீங்க, அணுவன் அ சிவம் ஆகும் – சீவன் அந்தச் சிவமாந் தன்மைப் பெருவாழ்வினையுடையதாம் என்றவாறு.

சீவ உபாதி -காரிய உபாதிகள். பரோபாதி–காரண உபாதிகள். அணுவன் – சீவன்.

அற–முழுவதும்; என்றது மாயப்பாழ் சீவப்பாழ் சிவப்பாழ் என்றவைகளை. மாயப்பாழைத் தத்துவ ஞானத்தாலறிந்து நீங்குதல்; சீவப்பாழை அருளாற் கண்டு நீங்குதல் ஆகும். இதன் விவரம் (2494)ம் மந்திரத்தில் விளக்கப்பட்டமை காண்க. காரிய உபாதிக்குள்ள தத்துவங்களாவன; தேகத்தில் நின்ற தன்மாத்திரை ஐந்து, பூதம் ஐந்து, இந்திரியங்களுள் ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, அந்தக்கரணம் நான்கு, பிராணவாயு ஒன்று ஆக இருபத்தைந்தாம். (379)

**ஆறாறு காரியோ பாதி யகன்றிட்டு**
**வேறாய் நனவு மிகுந்த கனாநனா**
**ஆறா றகன்ற சுழுத்தி யதில்எய்தாப்**
**பேறா நிலத்துயிர் தொம்பதம் பேசிலே** 2501

இ – ள் : ஆறு ஆறு காரிய உபாதி அகன்றிட்டு – முப்பத்தாறு தத்துவங்களையும் அருளாற்கண்டு நீங்கி, வேறு ஆய்-அத்தத்துவதாத்துவிகங்கட்கு வேறாக, நனவு மிகுந்த கனா நனா ஆறாறு அகன்று – நனவாகிய சாக்கிர அவத்தையில் கண்டவற்றை மிகுதியான சொப்பனாவத்தையில் மறந்து அறிவு வேறுபட்டாற் போல விட்டு நீங்கி, சுழுத்தி அதில் எய்தா பேறு ஆம் நிலத்து–சுழுத்தியவத்தையாகின்ற அடையமுடியாத சிவப்பேறாகிய முத்தியின்கண், தொம் பதம் உயிர் – த்வம் பதப்பொருளாகிய ஆன்மா, (பேரின்பத்தை நுகரும் ) பேசில் – ஆராய்ந்து சொல்லுமிடத்து ( இதுவே திருவடிப்பேறும் ) என்றவாறு.

கனாநனா – கனவில் நனவு, பேறு ஆம் நிலம் - முத்தி.

கரணங்களில் நின்று ஆன்மா நீங்குமாறு எவ் வாறு எனின் : பளிங்கு, தன்னை அடுத்த பலநிறங் களின் இயல்பையே தன்னிடத்துக் காட்டி நிற்கும் ; இஃது அப்பளிங்கிற்குப் பொது இயல்பு. இதுபோல ஆன்மாவும் தன்னால் சாரப்பட்ட கருவிகளின் இயல்பே தன்னிடத்து விளங்க அதுவாய் நிற்கும் ; இஃது ஆன்மாவிற்குப் பொது இயல்பு. இப்பொது இயல்பினை முன்னர்ச் சிந்தித்து அறிந்துகொண்டு, பின்னர்ப் பல நிறங்களின் வேறாகப் படிகத்திற்குச் சிறப்பான ஒளி உளதாயினாற்போல, இப்பொது இயல்பைத் தன் இயல்பு அன்றென்றும், தன்னியல் பாகிய சிறப்பியல்பு இப்பொது இயல்பின் வேறாய் உண்டு என்றும், அருளால் அறிந்து பொது இயல் பாகிய அக்கருவிஞானம் நீங்கும்படி தன்இயல்பாகிய

உண்மையை உணர்ந்தால் அத்தன்னியல்பில் விளங்கித் தோன்றும் சிவத்தைப் பொருந்துவன், இதனால், ஆன்மாவின் பொது இயல்பு சிறப்பு இயல்பை உணர்தல் கருவிகளினின்று நீங்குதற்கு உபாயமாம் என்க. (380)

அகாரம் உயிரே யுகாரம் பரமே
மகாரம சிவமாய் வருமுப் பதத்துச்
சிகாரம் சிவமே வகாரம் பரமே
யகாரம் உயிரென் றறையலு மாமே. 2502

இ – ள்: அகாரமானது ஆன்மாவும், உகாரமானது அருளும், மகாரமானது சிவமுமாய் வருகின்ற மூன்று பதங்களில் சிகாரம் சிவத்தை உணர்த்துவதாம். வகாரம் சிவசத்தியை யுணர்த்துவதாம், யகாரம் ஆன்மாவை உணர்த்துவதாம் என்று சொல்லுதலும் கூடும் என்றவாறு.

இம்மந்திரம் முதல் இரண்டு அடிகளால் பிரணவத்தின் அர்த்தமும். இறுதி இரண்டு அடிகளால் காரண பஞ்சாக்கரத்தின் அர்த்தமும் உணர்த்திற்று.

அகாரம் உகாரம் மகாரம் ஆகிய மூன்றும் ஒருங்கு சேர்ந்ததே மூலமந்திரமாகிய பிரணவமாம். பிரணவம் அகார உகார மகாரங்களாக விரிந்து மூன்றெழுத்தாயும். இம்மூன்றும் கூடி ஓம் என்று உச்சரிக்கப்படும் பொழுது நாதமாயும். ஓம் என்று எழுதும்போது விந்துவாயுமிருப்பதால் முதல் மூன்றெழுத்தும் இந்த விந்து நாதங்களாகிய வரிவடிவும் ஒலிவடிவும் கூடி ஐந்தெழுத்தாயிற்று.

முதல் நட்சத்திராகாரமும், இரண்டாவது தண்டா காரமும், மூன்றாவது வட்டவடிவும், நான்காவது அர்த்தசந்திர வடிவும் ஐந்தாவது பிந்துவோடு கூடின வடிவும் ஆகிய ஐந்து இலக்கணங்களை யுடையது, ஆதலால், பிரணவமும் ஐங்கலைகள் உடையதாயிற்று. பிரணவமே பஞ்சாட்சரம்; பிரணவத்திற்கும் பஞ்சாட்சரத்துக்கும் சிறிதும் பேதமில்லை. பஞ்சாட்சர மானது பிரணவத்தைப் போன்று பிரதக் மந்திரமும், பரமபாவனகரமான மோட்சமந்திரமும் ஆம். பிரணவம் வேறுதுணை வேண்டாது உச்சரிக்கப் படுவதுபோல் பஞ்சாட்சரமும் வேறொன்றின் ஆசிரய மில்லாமல் செபிக்கப்படும்; ஆகவே. இவ்விரண்டும் தம்மில் வேறுபடாத ஒரே மந்திரமாம்.

இனி, மேலே கூறிய பிரணவ இலக்கணங்கள் ஐந்தனுள் முதல் இரண்டு உறுப்புக்களாகிய தாரகா கார தண்டாகாரங்கள் ஏனையமூன்று உறுப்புக்களி னின்றும் நீங்கி நிற்கும்வழி முற்றியக்கம் பெருமை யால் ஊமையெழுத்து எனவும், வேதாந்த சிரசாய் நிற் கும் மௌனக்குறி எனவும், சொல்லப்படும். அன்றி யும், மூலக் கணபதி நிலயம் எனவும் அட்சரங்களின் வித்து எனவும், பிள்ளையார்சுழி எனவும் புகழப்படும். இந்தக் குறி (சுழி) "உ" இதுவேயாம். இதிலுள்ள வட்ட வடிவு சிவசத்தி பீடமென்றும் ஆவுடை என் றும், பிந்துவென்றும், மூலதாரமென்றும் சுருதிகள் சொல்லும் நீள்வடிவு மூலஸ்தம்பம் என்றும், சிவ லிங்கம் என்றும், நாதமென்றும், பிரமநாடி என்றும் விளங்கிக் கொண்டிருக்கும். பிரணவம் என்னும் தனிமந்திரம் சமஷ்டிப்பிரணவம் எனவும், வியஷ்டிப் பிரணவம் எனவும் இருதிறப்படும். சமஷ்டிப் பிரண

வமானது தொகுத்துக் கூறுவது: அது 'ஓம்' என்ப தாகும். வியஷ்டிப் பிரணவமானது பகுத்துக் கூறு வது. அது அ, உ, ம என்பதாகும். இதன் விரிவுகளை யெல்லாம் பிரணவ வித்தியா டரிமளம் என்னும் நூலினும், ஸ்ரீ பஞ்சாக்ஷர அஷ்டாக்ஷர மந்திரார்த்த சங்கிரக விளக்கத்தினும் காண்க.

இனி, பஞ்சாக்ஷரங்கள் தூல சூக்கும காரணம் என்ற மூன்றே. மற்ற மகாகாரணம், மஹாமனு என் பன ஏகான்ம வாதிகள் மூடிடுபற்றி நுழைந்தன வாகும் என்பர் பெரியோர். தூலபஞ்சாக்கரம் நமசிவாய என்பது. சூக்கும பஞ்சாக்கரம் சிவாயநம என்பது. சிகாரம் சிவத்தையும், வகாரம் அருட் சத்தியையும் யகாரம் ஆன்மாவையும் உணர்த்துவதாம் என்க. ஆன்மா, எக்காலத்தும் திருவருளைத் துணை யாகக் கொண்டே பிறவிக்கடலை நீந்திப் பேரின் பத்தை அனுபவிக்கவேண்டும் என்ற குறிப்பே 'சிவய' எனக்காட்டப்பட்டுள்ளமை தெளிக. (381)

உயிர்க்குயி ராகி யொழிவற் றழிவற்
றயிர்ப்பறு காரணோ பாதி விதிரேகத்
துயிர்ப்புறும் ஈசன் உபமிதத் தாலன்றி
வியர்ப்புறும் ஆணவம் வீடல்செய் யாவே. 2503

இ-ள்; சிவபெருமான், உயிருக்கு உயிராகி விளங்குதலோடன்றி, நீக்கமற நின்று, என்றும் அழி வில்லாதவனாய், ஐயமற்ற (மாறுபாடற்ற) காரணோ பாதியின் எதிர்மறையாகிய காரியோபாதியினிடத்தும் உடனாய் நின்று உபகரிப்பன். அப்பெருமானுடைய கருணையினாலல்லாமல் உயிர்களுக்கு நடுக்கத்தைச் செய்யும் ஆணவமலம் விட்டு நீங்காது என்றவாறு.

ஒழிவுறல்—நீக்கமின்றி நிற்றல். அழிவுறல்—என்றும் அழியாத நித்தியராயிருத்தல். அயிர்ப்பு—ஐயம், மாறுபாடு. விதிரேகம் – (வியதிரேகம்) எதிர்மறை; இவ்விடத்துக் காரியோபாதியைக் குறிக்கின்றது. உபமித்தால்—கருணையினால். வியர்ப்பு – விதிர் விதிர்ப்பு, நடுக்கம். வீடல்—விட்டு நீங்குதல். காரணத்தில் எவ்வித மாறுபாடுமின்று, காரியத்தின் கண்ணே மாயை மாறுபடுவதாம். காரியம் காரணத்தில் ஒடுங்குவதாம் என்க.

அநாதி முத்த சித்துருவாகிய முதல்வன் ஒன்றினுந் தோய்வின்றித் தானே சுயம்பிரகாசமாய் நிற்கும் தன்னுண்மையில் சிவம் எனவும். உலகெலாமாகி வேறாய் உடனுமாய் இவ்வாறு உயிர்களோடு ஒன்றாயும், வேறாயும், உடனாயும் நிற்கும் தன்மையில் சத்தி எனவும், பிரிக்கமுடியாத தாதான்மியத்தால் சிவம் சத்தி என இருதிறப்பட்டுப் பின், உயிர்களின் பொருட்டு ஐந்தொழில் செய்யும் தன்மையில் பதி எனவும் பெயர் பெற்று நிற்பன் என்பது சிவாகம நூற்றுணிபு. இத்துணிபு உணர்த்தவேண்டி இம்மந்திரத்தில் இவ்வாறு பகுத்தோதியருளினார். (382)

**காரியம் ஏழிற் கலக்கும் கடும்பசு**
**காரணம் ஏழிற் கலக்கும் பரசிவன்**
**காரிய காரணங் கற்பனை சொற்பதப்**
**பாரறும் பாழில் பராபரத் தானே.** **2504**

இ – ள் : கடும்பசு காரியம் ஏழில் கலக்கும் – ஆணவமலத்தால் பிணிப்புண்டு வருந்தும் ஆன்மா காரியோபாதி ஏழின் கண்ணும் வந்து பொருந்தும்,

காரியோபாதியாவன: மாயாகாரியமாகிய உடல், பொறி, மனம், சித்தம், புத்தி, அகங்காரம், பிராண வாயு என்பன. பரசிவன் காரணம் ஏழில் கலக்கும் — சிவபெருமானும், ஆன்மா ஆணவமலத்தால் துன்புறு வதை அறிந்து இயல்பாகவேயுள்ள கருணையினால் ஆணவமலத் துன்பத்தை அகற்றிப் பேரின்ப நிலையில் ஆன்மாவை இருத்துதற்பொருட்டாகக் காரணோபாதி ஏழின் கண்ணும் வந்து பொருந்துவர், காரண காரியம் கற்பனை-காரணகாரியங்களெல்லாம் இறைவன் ஆணை யால் வருவனவாம், சொற்பதப் பார் அறும்பாழில் — சொல்லப்படும் அஞ்ஞானம் நிறைந்த பூமியை யொழிந்த பாழில், பராபரத்தான் — சீவப்பாழ் பரப்பாழ் சிவப்பாழ் என்ற முப்பாழுங் கடந்த விடத்துத் திரிவித கரணங்களும் மௌனமாய், தம்பாகாரமாகி, அவனே தானாகி, இரண்டற்று, அநந்நியமாய்ப் பழுதில்லாத முத்திநிலையை ஆன்மா அடைவான் என்றவாறு.

இதனை, “உலகுடல் கரணங் கால முறுபல நியதி செய்தி, பலவினை கொண்டு கன்மம் பண்ணுவ துண்பதானால், நிலவிடா திவைதான் சென்று நினைந்துயிர் நிறுத்திக் கொள்ளா, தலகிலா வறி வனாணை அணைத்திடும் அருளினாலே” என்னும் சிவஞானசித்தித் திருவிருத்த முதலியவற்றான் உணர்க. சுதந்திர அறிவனாகிய முதல்வனே தனது ஆணையாகிய திருவருளால் அவற்றை அவ்வவ் வுயிர்க்குப் பொருந்தச் செய்விப்பன்; அஃது அவன் பெருங் கருணைத்திறமாம். (383)

## 29. உபசாந்தம்

முத்திக்கு வித்து முதல்வன்தன் ஞானமே
பத்திக்கு வித்துப் பணிந்துற்றுப் பற்றலே
சித்திக்கு வித்துச் சிவபரந் தானுதல்
சத்திக்கு வித்துத் தனதுப சாந்தமே. 2505

இ – ள் : முதல்வன் தன் ஞானமே முத்திக்கு வித்து - சிவஞானமே திருவடிப் பேருகிய முத்தியினை அடைதற்குரிய வாயிலாம், பணிந்து உற்று பற்றலே பத்திக்கு வித்து – சிவனடியார் திருவடிகளையும் சிவபெருமான் திருவடிகளையும் பத்தியினுள் மறவாது வணங்கித் துதித்து இடையறாது பற்றியிருத்தலே பத்திக்கு வாயிலாம், சிவபரம் தான் ஆதல் சித்திக்கு வித்து – சிவனைவிட்டு நீங்காத திருவருளை மறவாதிருத்தலும் அவ்வருளின் வழி நிற்றலும் ஆகிய இவை மனம் தன்வசம் ஆதலாகிய சித்திக்கு வாயிலாம், தனது உபசாந்தமே சத்திக்கு வித்து – ஆன்மாவின் மனோவிருத்தி அமைவுற்றிருந்தலே திருவருட் பதிவிற்கு வாயிலாம் என்றவாறு.

வித்து – ஏது, காரணம். பற்றல் – தியானித்தல். சித்திக்கு – மனம் தன்வசமாதலாகிய சித்திக்கு, சத்திக்கு – திருவருட் பதிவிற்கு, உபசாந்தம் – மனோவிருத்தி அமைவுற்றிருத்தல்.

சிவஞானம் ஒன்றே முத்திப்பேற்றை அடைதற்குரிய வாயிலாகும். சிவஞானமொன்றே பதார்த்தங்களைப் பார்க்கவாராத சிறப்புடைய ஞானமாம். "பர ஞானத்தராற் பரத்தைத் தரிசித்தோர், பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்", ... "திருஞானம்

இவையெல்லாம் கடந்த சிவஞானம்" ; " தெரிவரிய மெய்ஞ்ஞானம் சேர்ந்தவாறே சிவம் பிரகாசிக்கும்" என்னும் திருவாக்குக்களைச் சிந்திக்க.

அத்துவிதமாய் நிற்கும் முதல்வனின் நிலையை மறவாது பற்றிநிற்கும் சீவன் முத்தரானவர், தமது ஞானக்கண்ணை மறைப்பித்துத் தீய நெறியின்கண் கொண்டு சென்று அத்தீய நெறியால் மலங்களினால் உண்டாகும் பிறவிக்குழியில் விழும்படி செய்து துன்பத்தை உண்டுபண்ணுபவராகிய சிவபத்தரல்லாதார் கொள்கையில் பண்டைக்காலந்தொட்டுப் பழகி வந்த சேர்க்கை அறும்படி, ஞானக்கண்ணைமறைத்த அம் மறவியை மாற்றி ஞானக்கண்ணை உதவிப் பிறவிக் குழியில் நின்றும் எடுத்து நன்னெறியின்கண் செலுத்தி வாழ்விக்கும் சிவபத்தரது கொள்கையிலே பேரன்பு உடையராதல் வேண்டும்; அவ்வன்பு சார்பாக விளங்கும் சிவஞானக் கண்ணால் அவ் வத்துவித நிலையை உறுதியாகப் பற்றி உண்மை உணர்ந்த மெய்த்தவ ராயினரை, எல்லாத் துன்பங்கட்கும் மூல மாயும், சிவ பத்தரல்லாதார் சேர்க்கையை உண்டு பண்ணக்கூடிய தாயும் உள்ள பிராரத்த வினைகள் தாக்கமாட்டாவாம்.

மறவியை மாற்றி, ஞானக்கண்ணையுதவிப் பிறவிக் குழியில் நின்றும் எடுத்து நன்னெறிக்கட் செலுத்தி, வாழ்விக்கும் சிறப்புடையார் சிவபத்த ராவார். ஆகலின், வீட்டுணர்வாகிய சிவானுபவ உணர்வை நிலைபெறச் செய்யும் சிவபத்தர்களோடு இணங்கினாலன்றிப் பிராரத்த வினைகாரணமாகப் பண்டைக்காலந் தொட்டுப் பழகி வந்த சிவபத்தர்

அல்லாத சிறப்பில்லாருடைய இணக்கம் அருமையால் அச்சிவபத்தருடைய இணக்கம் அவசியம் வேண்டப் படும். சிவபத்தரிடத்து அன்புடையராய் மனம் வாக்குக் காயங்களை அச்சிவ பத்தரிடத்திற் செலுத்து வோர்க்கு உலக அனுபவ உணர்வு மாறிச் சிவானுபூதி உணர்வு மேம்பட்டு நிகழும்; நிகழவே பூதகாரிய மாகிய உடம்பைப் பற்றி வரும் பிராரத்த வினைகளின் அனுபவம் அச்சிவானுபவ உணர்வுடையாருக்கு அனுபவ மாதலில்லை. இல்லையாகவே, அப்பிராரத்த வினைகள் சிவானுபவ உணர்வுடையாரைப் பற்ற மாட்டா; பற்றாது ஒழியவே அப்பிராரத்த வினைகள் காரணமாக உண்டாகும் சிவபத்தரல்லாத சிறப்பில் லார் தம் திறத்துச் சேர்வு அறக் கெடும் என்க.

மெய்த்தவம் பொய்த்தவம் எனத் தவம் இரு வகைப்படும். மெய்த்தவம் சரியை கிரியை யோகங்கள். பொய்த்தவம் யாகம் விரதம் முதலியன. இனி, மெய்த் தவம் எனப்படும் சரியையாதிகளும் மலத்துடன் கூடி நின்று செய்யப்படுவனவேயன்றி, மலம் அறவே நீக்கிச் செய்யப்படுவன அல்ல. ஆயினும், யாகாதியை நோக்க மெய்த்தவம் எனப்பட்டன. பரன் உணர்வால் உணரும் சிவஞானம் மலம் அறவே நீங்கிய செயலாத லாலும், மேற்செய்யவேண்டியது இல்லாத முடிந்த நிலை ஆதலாலும் அச்சிவஞானம் ஒன்றே மெய்த்தவ மாம். அதனையுடையாரே மெய்த்தவர் என்க,

சிவனடியாரைச் சிவனெனவே தேறி வழிபடல் வேண்டும் என வற்புறுத்துவது 'பத்திக்கு வித்துப் பணிந்துற்றுப் பற்றல் என்பது. சிந்தனைக்கு அதீத முகிய பரம்பொருள், உலகத்திலுள்ளார் தன்னை

அறிதற்பொருட்டுத் திருநீறு கண்டிகை முதலிய திருவேடமாகிய தனது வடிவத்தைத் தன் அன்பர்க்குக் கொடுத்து எவ்விடத்தும் உயிர்க்குயிராய் நின்று அவ்வன்பர் அறிவினை விளக்கி, அருளினால் அவரோடு கலத்தலால் அத்திருவேடமுடைய மெய்யன்பர் சிவமே யாவர். திருவேடம், சிவோகம்பாவனை, இருதயத்தே அரனைக் கூடுதல், குறியொடு தாம் அழியும் நெறி இவற்றால் சிவமேயாவராகலின் அவரைப் பணிந்துற்றுப் பற்றல் பத்திக்குவித்து ' என்றருளினார்.

சிவப்பேறு என்பதே முத்தி எனப்படும். முத்தி என்பது விடுதல். விடுதல் பாசமேயாயினும் சிவத்தைப் பற்றி நின்றே விடவேண்டுதலின் சிவப்பேறே தலைமையான முத்தியாம். அம்முத்தியும் பரமுத்தி, சீவன்முத்தி என இருதிறப்படும். பரமுத்தியாவது, பரனாகவே பேதமற நின்று பாசத்தை விடுதல், சீவன்முத்தியாவது. சீவனாகி நின்றும் சிவானுபவ மேலீட்டால் பாசத்தை விடுதல். அதாவது, சீவத்தன்மையைச் செய்வதாகிய பாசத்தை இழந்து நிற்றல். இவ்விருவகை முத்தியினுள் பரமுத்தியை விதேகமுத்தி என்னும் கூறுவர். அப்பரமுத்தியாகிய சிவானுபவ நிலையே முதற்கண் விளங்குவதாம்.

இனி, இறைவன் அருள்வழி நிற்றலையே இங்கே 'பணிந்துற்றுப் பற்றல்' என்றார். பணிந்துற்றுப் பற்றல் அடிமையின் தொழில். அடிமைக்குத் தனக்கெனச் செயல்கிடையாது. ஆகவே, பணிந்துற்றுப் பற்றல் என்றதனால் அருள்வழி நிற்றல் என்பது பெறப்பட்டது. அன்பு பத்தி காதல் என்னும் சொற்கள் இச்சையின் மிகுதிப்பாட்டைக் குறிக்கும்.

குறிக்கவோ, முதல்வனோடு இரண்டறக் கலக்கும் பரமுத்தியினும் பத்தி உண்டு என்க, பரமுத்தியின்கண் இச்சை நிகழாதவிடத்துச் சிவபோகம் அனுபவமாதல் இல்லை. இச்சையோ பத்தியின்றி நிகழாது. ஆதலால், பரமுத்தியில் பத்தி உண்டு என்பது நன்கு விளங்கும். இது பரமுத்தி சீவன்முத்தி இரண்டற்கும் பத்தி வேண்டப்படும். "ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே' என்னுடை அன்பே " என்னும் திருவாசகப்பகுதி வலியுறுத்தும். எவ்வாறெனில், பரமுத்தியாவது பாசத்தை அறவே விட்டுப் பரமாய் நிற்றல். பரம்பொருளோ தத்துவங்கடந்த இன்பப் பொருளாகும். அதனை 'ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே என்றும், அப்பொருள் தத்துவங் கடந்து நிற்கினும் உயிரைக் கடந்து நிற்பதில்லை ; ஆயினும், தன்னோடு பிரிப்பின்றி நிற்கும் அப்பரம் பொருளை அன்பினலன்றி உயிர் அறிவதில்லை ஆதலால் அறியும் அனுபவத்தில் அன்பும் பிரிப்பின்றி உண்டு என்பது அறிவித்தற்கு என்னுடை அன்பே என்றும் அருளிச்செய்தார்.

பாச நீக்கத்தால் அருள் விளக்கம் உண்டாம். ஆனந்த விளக்கம் உண்டாகாது. அருள் விளக்கமாவது முதல்வனையின்றித் தான் தனித்து நிற்பதில்லை எனவும், முதல்வன் செயலையின்றித் தனக்குச் செயலில்லை எனவும் காண்டல். அவ்வாறு காணுங்கால் அறிவும் செயலும் தொழிற்படும். இச்சை தொழிற்படுவதில்லை. ஆனந்த விளக்கமாவது. முதல்வன் உடனாய்நின்று அறிவித்தலேயன்றித் தனக்காக அறிந்தும், வரும் பேருபகாரத்தை நினைந்து அன்பு மிகுதியால் அவனோடு கலந்து அழுந்துதலாம். (384)

காரியம் ஏழும் கரந்திடு மாயையுள்
காரணம் ஏழும் கரக்கும் கடுவெளி
காரிய காரண வாதனைப் பற்றறப்
பாரண வும்முப சாந்தப் பரிசிதே 2506

இ - ள் : காரியம் ஏழும் - காரிய உபாதிகள் ஏழும். மாயையுள் கரந்திடும் - அசுத்த மாயையில் ஒடுங்கும், காரணம் ஏழும் - காரண உபாதிகள் ஏழும். கடுவெளி கரக்கும் - சுத்தமாயையினில் ஒடுங்கும். காரிய காரண வாதனைப்பற்று அற - காரிய காரணோபாதிகளின் பற்று அடியோடு நீங்க, பார் அணவும் உபசாந்தம் - பெருமைபொருந்தும் உப சாந்தம் எனும் ஒழிவினையுடைய பதம் சித்திக்கும், பரிசு இது - இந்த ஒழிவாகிய ஒடுக்கமே இதன் பரிசாகும் என்றவாறு.

காரிய உபாதி ஏழாவன : உடல், பொறி, மனம், சித்தம். புத்தி, அகங்காரம், பிராணன் என்பன. காரண உபாதிகள் ஏழு : படைத்தல், காத்தல். அழித்தல் முற்றுணர்வு, எல்லாவற்றிற்கும் காரண மாதல் தன்மை, உயிர்க்குயிராதல் தன்மை, அனைத் தையும் செலுத்தும் ஆணைத்தன்மை என்பன.

இனி, ஆன்மாக்களுக்கு ஆணவமல மறைப்பால் விளையும் உபாதிகள் ஏழு : அவையாவன ; இறைமை யின்மை, அற்பஅறிவுடைமை, அளவுபட்டதன்மை, மாயையோடுகூடியதன்மை, சிறிது ஆற்றலுடைமை, சுதந்திரமின்மை, காணுமை என்பன. இவற்றை வட நூலார் முறையே அநீசத்துவம், கிஞ்சிஞ்ஞத் துவம், பரிச்சின்னத்துவம். மாயா சகிதத்துவம், அற்ப

சக்தித்துவம், பராதீனத்துவம், அபரோக்ஷத்துவம் என்று கூறுவர்.

சிவனுடைய காரண உபாதிகள் ஏழாவன: இறைமை, முற்றறிவுடைமை, எங்குந்தாறுதல், இயல்பாகவே மாயையின்மை, வரம்பிலாற்றல், தன் வயத்தனுதல் ஒன்றியுணர்தல் என்பன. இவற்றை வடநூலார் முறையே ஈசத்துவம், சர்வஞ்ஞத்துவம், வியாபகத்துவம், மாயாரகிதத்துவம் சர்வ சக்தித் துவம், சுதந்திரத்துவம், பரோக்ஷத்துவம் என்பர்.

காரணம் ஒன்ருய்த் தோன்றி அழிதலின்றி நிலை பெற்றிருக்கும். காரியம் பலவாய்த் தோன்றி அழிதலையுடையதாயிருக்கும். பலவாயும் சடமாயும் இருப்பதே தோன்றியழியும்; அதுவே காரியம் எனப் படும். பலவாயும் சித்தாயும் இருப்பது தோன்றியழிய மாட்டாது. ஆதலின், அது காரிய காரணங்கட்குட் பட்டதன்று என்க.

காரிய காரணம் என்பது காரியத்தினது காரணம் என்னும் பொருளில் வந்த ஆறும் வேற்றுமைத் தொகைச் சொல். இரு மொழியும் வடமொழி யாதலின், வடநூல் முடிபுப்படி காரியகாரணம் என நின்றது.

மல கன்மங்களோடு விரவாது முதற்காரணமாய் நிற்பது சுத்தமாயை. அஃது ஏனை அசுத்தமாயை, பிர கிருதிமாயை இரண்டனையும் வியாபித்து மேலாய் நின்று சுத்தப்பிரபஞ்சத்திற்குக் காரணமாம். அச்சுத்த மாயையின் கீழாய் அடங்கி மல கன்மங்களோடுவிரவி

முதற்காரணமாய் நிற்கின்ற அசுத்தமாயை, சுத்தா சுத்தப் பிரபஞ்சத்திற்குக் காரணமாம். அவ்வசுத்த மாயையினது தூல பரிணாமமாய்த்தோன்றி நிற்கின்ற பிரகிருதிமாயை, அசுத்தப் பிரபஞ்சத்திற்குக் காரண மாம் அக்காரணம் மூன்றனுள், சுத்தமாயை யினின்றும் ஒடுக்கமுறைபற்றி வைகரி முதல் வைத்து எண்ணப்படும் சுத்தப் பிரபஞ்சமாகிய நாலு வாக்கும் தோன்றும். அசுத்தமாயையினின்றும் ஒடுக்க முறைபற்றி அராகம் முதல்வைத்து எண்ணப் படும் சுத்தாசுத்தப் பிரபஞ்சமாகிய ஐந்து தத்துவங் களும் தோன்றும். பிரகிருதி மாயையினின்றும் தோற்றும் முறைபற்றிக் குணதத்துவம் முதல் வைத்து எண்ணப்படும் அசுத்தப் பிரபஞ்சமாகிய இருபத்துநான்கு தத்துவங்களும் தோன்றும். இவ் வாறு சடரூபமான சுத்தமாயை, அசுத்த மாயை, பிரகிருதிமாயை என்ற மூன்றும் தத்தம் காரியங்களைச் சிவசத்தியின் சங்கற்ப ரூபமாகிய சந்நிதியினின்றும் தோற்றுவிக்கும்.

அசுத்த மாயைக்கு அனந்தரும், பிரகிருதி மாயைக்கு சீகண்டரும் கருத்தாவாயினும், அவர்கள் செய்யும் தொழிலும். சிவசந்நிதியையின்றி அமையா மையின் சிவசந்நிதியிலே நிகழும் என்க. ஒடுக்க முறை–கடைசியிலிருந்து எண்ணுதல். தோற்றுமுறை –ஆரம்பத்திலிருந்து எண்ணுதல்.

சற்காரியவாதத்தில் காரணகாரியங்கள் இரண்டும் சூக்குமம், தூலம் என்னும் வேறுபாடு உடையன வன்றி. நித்தம் அநித்தம் என்னும் வேறுபாடுடையன

அல்ல. சுத்தமாயா காரியமாகிய விருத்தியினும் இறைவன் எல்லாமாய் அல்லவாய் உடனுமாவன் என்க.

முற்கூறப்பட்ட சந்நிதி என்றது நேரான எதிர் முகமாதலைக் குறித்ததன்று. இறைவனோடு பிரிப்பின்றி நிற்கும் திருவருளைக் குறித்ததாம். ஆகவே, சந்நிதி மாத்திரை என்றது திருவருளால் என்றபடியாம். திருவருளுக்கு சங்கற்பம் உண்டு. அச்சங்கற்பம் தன் பொருட்டன்று; உயிர்களின் பொருட்டாம். உயிர்களின் சங்கற்பம் இந்திரியத்தின் பொருட்டன்று; தன் பொருட்டேயாம். ஆதலால், உயிர் உணர்த்தற்பயன் உயிருக்கு ஆமாறுபோல இறைவன் உணர்தற்பயன் இறைவனுக்கு ஆகாமை அறிக. எனவே, சந்நிதி என்பதற்குத் திருவருட் சங்கற்பம் என்பதே பொருளாம். இதனை, சிவஞானசித்தியார், சூத், 1-19-வது செய்யுளில் "சிவனவன்றன் சந்நிதி தன்னினின்றே" என்பதற்கு, சிவசத்தி சங்கற்பரூப சந்நிதியினின்றும்" எனவும்; சிவஞானபோதம், சூத்-5, அதிகர-2, வெண்-1 சிற்றுரையில் "சிவசத்தி அவ்வக்காரியங்களின் உன்முகமாதலாகிய சங்கற்பமே ஈண்டுச் சந்நிதி எனப்படும்" எனவும் ஸ்ரீமாதவச் சிவஞான யோகிகள் அருளிச் செய்தவாற்றானறிக.

உபசாந்தம்-செயலறுதல்; சிந்தையும் ஒருங்கித் திருவடியிற் பதித்தல். நின்மலாவத்தையில் சிவனும் அவன் அருளுமே அறியப்படுவன; அன்றி வேறு அறியப்படுவன இல்லையாம். நின்மல துரியநிலையில் இருப்பார் சிவத்தையன்றிச் சிந்தை செய்யார்.

இதனை,

"எதிரற நாளும் எருதுவந் தேறும்
பதியெனும் நந்தி பதமது கூடக்
கதியெனப் பாழைக் கடந்தந்தக் கற்பனை
உதறிய பாழில் ஒடுங்குகின் றேனே"

என்னும் திருமந்திரத்தானும் உணர்க. (385)

அன்ன துரியமே யாத்தும சுத்தியும்
முன்னிய சாக்கிரா தீதத் துறுபுரி
மன்னு பரங்காட்சி யாவ துடனுற்றுத்
தன்னின் வியாத்தி தனின்உப சாந்தமே. 2507

இ-ள்: அன்ன துரியமே ஆத்தும சுத்தியும்- ஒடுக்கம் என்னும் செயலறுதலாகிய துரியமே ஆன்ம சுத்தியாகும், முன்னிய சாக்கிராதீதத்து உறு புரி- பொருந்திய சாக்கிராதீதத்து உறுவது பரமானந்த மாகும் ,மன்னுபரங்காட்சியாவது-நிலைபெற்ற ஆன்ம தரிசனமாவது. உடன் உற்று - சிவபரம்பொருளின் திருவடியுணர்விலே கூடி நின்று. தன்னின் வியாத்தித னின் உபசாந்தம் – அவ்வுணர்விலே அடங்கி ஒடுங்கி நிற்றலே உபசாந்தமாகும் என்றவாறு.

ஆத்தும சுத்தி – அந்தக்கரணத்தின் தூய்மை, புரி – பரமானந்தம். பரங்காட்சி – ஆன்ம தரிசனம், உடன் உற்று – சிவத்துடன் கூடி.

பிரித்தறியவாராது ஆனந்தசொரூபமாய் நிற்றலே சிவபோகம் என்பது. நிர்விகாரியாக்கல் நின்மல சாக்கிரம். தன்வண்ணமாகச் செய்தல் நின்மல சொப்பனம், தன்னோடு ஒப்பச் செய்தல் நின்மல சுழுத்தி,

அடங்கிநிற்கச் செய்தல் நின்மலதுரியம். ஆனந்த சொரூபமாய் நிற்கச் செய்தல் நின்மல துரியாதீதம் என அறிக.

இனி, பாசஞான பசுஞானங்களினுல் முதல்வன் அறியப்படான். ஆதலால், அவன் திருவடி ஞானத்தாலே அவனை அறியவேண்டும் என்பதும், பிரபஞ்சத்தைக் கானல்நீர்போல நிலையில்லாதது எனக்கண்டு கழித்தால் அத்திருவடிஞானம் விளங்கித் தோன்றும் என்பதும், அத்திருவடிஞானத்தினுல் முதல்வனைக் கண்டவிடத்தும் பழக்கவாசனையால் மீண்டும் பிரபஞ்சத்தைப் பற்ருதிருத்தற்பொருட்டு முத்தி பஞ்சாக்கரத்தை அறிவாற் கணிக்க வேண்டும் என்பதும் அறிக. பசுத்துவமாகிய சீவபோதம் நீங்கிய விடத்தும் அவன் அருளாலன்றித் தன்னை அறிய முடியாது. ஆதலால், ஆன்ம அறிவிற்குப் பதிஞானமின்றித் தனித்து முதல்வனைக் காணும் தன்மை இல்லை. அத்திருவடி ஞானத்தைப் பெறுதற்கு என்ன செய்யவேண்டும் என்னில், நிலையில்லாத பிரபஞ்சத்தை நிலையில்லாதது எனக்காணின் திருவடி ஞானம் விளங்கித் தோன்றும். பிரபஞ்சம் முற்றும் நீங்கிய விடத்துச் சூனியம்போலத் தோன்றினும் அத்தோற்றம் சூனியமன்று : ஞான சொரூபமேயாம். பிரபஞ்சம் நீங்குதற்குச் சிவோகம்பாவனை பண்ண வேண்டும்.

ஆன்மாவைச் சுத்தி செய்வதற்குப் பிரபஞ்சத்தை நீக்கி ஞானக்கண்ணைப் பெறுதலே போதும் என்னில், ஞானக்கண்ணைப் பெற்றவிடத்தும் பழக்க வாசனையால் விட்ட பிரபஞ்சத்தைப் பற்ருதிருத்தற்

பொருட்டு முத்திபஞ்சாக்கரத்தை அறிவாற் கணிக்க வேண்டும். அப்பஞ்சாக்கரத்தால் இதயத்தில் முதல்வனை அருச்சித்தலால் பழக்கவாசனை நீங்கும். (386)

ஆறு றமைந்தாண வத்தையுள் நீக்குதற்
பேறுன தன்னை யறிதற்பின் றீர்சுத்தி
கூறுத சாக்கிரா தீதங் குருபரன்
பேறும் வியாத்தம் பிறமுப சாந்தமே. 2508

இ—ள்: ஆறு அமைந்து—ஆன்மதத்துவம் 24, வித்தியாதத்துவம் 7, சிவதத்துவம் 5 ஆக முப்பத்தாறு தத்துவங்களும் பொருந்தி, ஆணவத்தை உள் நீக்குதல் — ஆணவமலத்தின் வலியைத் தொலைத்தற் பொருட்டேயாம், பேறு ஆன தன்னை அறிதல் — சிவானந்தப் பெரும் பேறாகிய சிவத்தை அறிந்து நிற்றல், பின் தீர் சுத்தி — சிவதரிசனத்தின் நிகழும் ஆன்ம சுத்தியாம். கூறுத சாக்கிராதீதம் குருபரன் பேறு ஆம் — சாக்கிராதீத மாவது சிவகுருவைப் பெறுவதாம், வியாத்தம் பிறம் உபசாந்தம் — திருவடிக்கண் அடங்கும் நிறைவாவது விளங்குகின்ற உபசாந்தமாகும் என்றவாறு.

பிருதிவி தத்துவம் முதல் சிவதத்துவம் இறுதியாகப் பொருந்திய முப்பத்தாறு தத்துவங்களும் ஆன்மாவாகிய தன்னோடும் கூடியவிடத்துப் பொருந்திய தொழிற்பாட்டை யெல்லாம் அவ்வத் தத்துவங்களினிடத்தும் வேறுவேறாக இஃது இஃது இதனை இதனைச் செய்கின்றது எனத்தன்னின் வேறாய்வைத்து ஆன்ம சிற்சத்தியுணர்தல் தத்துவரூபமாகும். வலி

யமைந்த அத்தத்துவங்க ளெல்லாம் பிரேரிப்பானை யின்றித் தொழிற்படுதல் இன்மையால் சடப்பொருள் என்று ஆன்ம சிற்சத்தி யுணர்தல் தத்துவ தரிசன மாகும். இத்தத்துவங்கள் ஒருபொருள்போல் தோன்றி நின்று இடையே தன்னின் நீங்கித் தம் முதற்காரண மாகிய மாயையிலே அடைவே ஒடுங்கும் உண்மை யைத் தன் வியாபகத்தைத் தலைப்பட்ட ஆன்ம சிற்சத்தி யுணர்தல் தத்துவ சுத்தியாகும், பாசபதார்த் தத்தினிடத்து ஈண்டுக் கூறிய உருவம் தரிசனம் சுத்தியென்னும் மூன்று காரியமும் பொருந்து வனவாம்.

இவ்வாறு தத்துவ சுத்தியாதலும் உடனுய் நின்று உணர்த்தும் அருளாகிய உறவையும், தம்சத்தி வலியி னுலே பொல்லாங்கு என்பவை எல்லாம் செய்த தம் மலப்பகையையும் அறியமாட்டாது கேவல சகலங் களிற் பொருந்தியிருந்த ஆன்மா. தானே தத்துவங் களின் நீங்கிய மாத்திரத்தில் தன்னைப் பிரமப் பொருள் என்று உணர்ந்து நிற்றல் மலமுடைய ஆன்மாவுக்கு உருவமாகும். இச்சுத்தாவத்தையை அடையும் வரையும் ஆன்மாவின் வேருகிய பாசத்தொகுதியோடு அது அதுவாய் அழுந்தியிருந்த ஆன்மாவுக்கு உயிராய் இருந்து உணர்த்தி வந்தது அருள் என்று உணர்த்தி அவ் அகம்பிரமத்தை நீக்க அவ்வருளைப்போல் நானும் சிவசமமே என்று முனைத்தல் ஆன்மதரிசனம் ஆகும். அந்த அருளின் குணங்களைத் தன் குணமாகக் கொண்டு ஐந்தொழிலையும் செய்ய எண்ணிப் பின்னரும் அவ்வருள்தானே பெருங்கருணையினுலே என் செயலை நின் செயலாக் கொள்ளுமாறு நன்று

என்று இழித்துணர்த்திய வழிபட்டும் அம்முனைப்பை விட்டுத் துவண்டு அடங்கி அவ்வருளிலேயே அழுந்தி விடுதல் ஆன்மசுத்தியாம்.

மேம்பட்ட அருளினாலே ஆன்மா தன்னையே பிரமமாகக் கருதுகின்றுழி அந்நிலைமாறும்படி உணர நிற்பதும், அவ்வுயர்வாகிய அருளினாலே அவ்வருள் செய்யும் ஐந்தொழிலையும் யானே செய்வேன் என்று எண்ணியவிட்டும் அவ்வருளால் உண்மையுணர்ந்து அவ்வெண்ணம் துவண்டு அடங்குமிடத்து உணர நிற்பதும், பிரகாசிக்கின்ற அவ்வருளின் மயமேயாகித் தன்போதம் முழுவதும் சிவபோதமாய் அடங்கி நிற்கும் அந்நிலையில் உணர நிற்பதும் என்று முன்னர்க்கூறிய ஆன்மதரிசனம் ஆன்மசுத்தி ஆன்ம லாபம் என்றவைற்றோடும் உடனிகழ்வாய் விளங்கிய மூவகை யுணர்வும் முறையே "சிவரூபமும் சிவ தரிசனமும் சிவயோகமு" மாகும்.

சிவதரிசனத்தின் நிகழ்வது ஆன்ம சுத்தி; சிவ ரூபத்தின் நிகழ்வது ஆன்மதரிசனமாம். திருவருள் செய்யும் கிருத்தியத்தை ஆன்மா செய்யாதென்று திட மாய் அறிந்து நிற்றல் சிவதரிசனம். சூரியகிரணத்தைப் பொருந்தின கண் சூரியனாகாதவாறு போல, திரு வருளைச் சேர்ந்த ஆன்மா அத்திருவருள் செய்யும் பஞ்சகிருத்தியத்தைத் தான் செய்யவேண்டும் எனல் கூடாது என்று உணர்ந்து, தற்போத நிகழ்ச்சியின்றித் திருவருளில் அழுந்தாது சேர்தலே ஆன்மசுத்தியாம் என்று அறிக.

இறைவன் விஞ்ஞானகலராகிய உயிர்களுக்கு அறிவுக்குள் அறிவாய் நின்றும், பிரளயாகலராகிய

உயிர்களுக்கு உருவத் திருமேனிகொண்டும். சகல ராகிய உயிர்களுக்கு அவ்வுயிர்கள் தங்கியிருக்கும் வடிவு போன்ற குருவடிவங்கொண்டும் ஞானத்தை உணர்த்துவன் .ஆதலால், எவ்விடத்தும் குருவின்றி ஞானம் நிகழுமாறில்லை என்க.

ஆன்மாவானது கருவிகளைக் கழித்த பின்னர்க் கழிக்கப்படாமல் என்றும் உடனாய் நிற்பது சிவத்துடன் கலந்து நிற்கும் காலத்தும், சிவம் வியாபகமாயும், தான் அச்சிவத்துள் வியாப்பியமாய் அடங்கியும் நின்று சிவனருளால் சிவானந்தத்தை அனுபவிக்கும். ஆதலின் ஆன்மா என்றும் அடிமையேயாம். ஆன்மா, அறிவாயும் வியாபகமாயுமுள்ள தனது சிறப்பியல்பை, சற்குருவால் அறிவில்லாததும் ஏகதேசமாயுமுள்ள இந்திரியங்களின் வேறு என உணரவே, வேறு காரணம் வேண்டாது. வேறென உணர்ந்த அக்காரத்திலேயே தனக்கு ஆதாரமாகிய முதல்வனது திருவடியை அணையும். கருவிகளாகிய தடையில் நின்று நீங்கிச் சிவபெருமான் திருவடியை அடைந்த உயிர் அத்திருவடி நிறைவேயாய் அச்சிவபெருமான் கண் அடங்கிப் பின்பு கருவினை வந்து பொருந்தாது என்றபடி. (387)

**வாய்ந்த உபசாந்த வாதனை யுள்ளப்போய்**
**ஏய்ந்த சிவமாத லின்சிவா னந்தத்துத்**
**தோய்ந்தறல் மோனச் சுகானுபவத் தோடே**
**ஆய்ந்ததில் தீர்க்கை யானதீ ரைந்துமே. 2509**

இ – ள்: வாய்ந்த உபசாந்த வாதனை உள்ளப் போய் – பொருந்திய உபசாந்த வாசனையை நினைத்த

லால் ஆணைவழிச்சென்று, ஏய்ந்த சிவம் ஆகலின் – (உலகபோகத்தில் நின்ற உயிருக்கு அவ்வுலக போகத்தைவிட்டு) இறைவனை உணரும் பொழுது அப்பரபோகம் தோன்றும் ஆதலின், சிவானந்தத்துத் தோய்ந்து - அப்பரபோக நுகர்ச்சியில் அழுந்தி, அறல் – தோய்ந்தோம் என்னும் நினைவும் விட்டு நீக்குதல், மோன சுக அனுபவத்தோடே – மௌன நிலையாகிய சுகானுபவத்துடனே நின்று, ஆய்ந்து அதில் நேர்க்கை ஆனது ஈர் ஐந்துமே - சிவஞானமே பொருளாகக் கொண்டு தன் அறிவின்கண் ஆராய்ந்த விடத்து நீக்குதற்குரியது அப்பத்துமாம் என்றவாறு.

ஈரைந்தாவது: ஆணவம் ஒழிதல், தன்னையுணர் தல், அதனையும் ஒழிதல். சாக்கிராதீதம், வியாப்தம், உபசாந்தம், சிவமாதல், சிவானந்தத்திற் கலந்து தானற்று நிற்றல், மோன சுகானுபவம், அதனையும் விட்டொழிதல் என்பன.

வாதனை உள்ளப் போய் - வாதனை அமையச் சென்று; அமையச்செல்லல் - ஆணைவழி நிற்றல், அடங்கி நிற்றல். அறல் – தான் என்பது இல்லாமற் போவது.

ஆன்மாவானது முத்தி நிலையில் முதல்வனைச் சார்ந்தவிடத்து அம்முதல்வன் தன்மையே தன் தன்மையாயும், முதல்வன் பலவேறு வகைப்படாது ஒரு தன்மையாய வாறுபோல ஒரு தன்மையாயும். அவ னோடு ஒற்றுமைப்பட்டு நின்று அவன் திருவடிகளை உணரும் ஆகலின் 'வாதனை உள்ளப்போய்' என்றார். உணரவே அவ்வாறு உணரும் ஆன்மாவுக்கு

முதல்வன் பரபோகமாய் மேலும் மேலும் வளர்ந்து தோன்றுவன். அவ்வாறு முதல்வனை உணருங்கால் உணர்கின்ற அந்த ஆன்மாவினுடைய அறிவில் அம்முதல்வன் ஒன்றுபட்டு அவ்வறிவை விட்டு நீங்கான். இவ்வாறு பரபோகமாய்த் தோன்றுதல் வேறாய் நிற்கும் தன்மைபற்றி எனவும், அறிவில் ஒன்றுபட்டு நிற்றல் ஒன்றாய் நிற்கும் தன்மைபற்றி எனவும் அறிக. ஆதலால், உடனாய் நிற்கும் தன்மை பற்றிக் கருதுவார் கருதியவாறு விளங்கித் தோன்றும் பொருள் முதல்வனும் என்க.

பெத்தத்தில் கருதப்படும் உலகப் பொருள் களையும், முத்தியிற் கருதப்படும் சிவப்பொருளையும் அச்சிவம் உடன்நின்று அறியும், பெத்தத்தில் விடயபோகமாகவும், முத்தியில் சிவபோகமாகவும் விளங்குகின்றான், பெத்தத்தில் போகமாய்விளங்குதல் போகத்தினிடத்தும் அவன் நின்று கூட்டுவித்தாலன்றி ஆன்மாக்கள் அனுபவிக்க முடியாது என அறிக.

இறைவன் பரபோகமாய் நிற்றல் புதிதன்று என் றும் உள்ளதே. மேலும் மேலும் வளர்ந்து தோன்று தல் உயிருக்கு அனுபவமாகும் முறையாம். இறைவன் பரபோகமாய் என்றும் நிற்பினும் உலகபோகத்தில் நின்ற உயிருக்கு அவ்வுலகபோகத்தை விட்டு இறை வனை உணரும்பொழுது அப்பரபோகம் தோன் றினமையால் 'வாதனை உள்ளப்போய் ஏய்ந்த சிவம் ஆதலின் சிவானந்தத்துத் தோய்தல்' எளிதாயிற்று. ஆன்மா, முதல்வன் திருவடி அடைதற் பொருட் டாகத் தனக்கெனச் சுதந்திரமின்றி அவன் அருள்வழி நின்று திருவடியை அடைந்து சிவானந்தத்தை

அனுபவித்தல் வேண்டும், பரை என்றும் சிவம் என்றும் இன்றி இரண்டறக் கலந்து நின்ற இடம் சிவானந்தம். நின்மல துரியாதீதத்தின்கண் சிவபெருமான் விளங்குபவர். அந்தத் துரியாதீதத்திலே திருவருளால் தன்னைக் கண்டு, தலைவனையும் கண்டு சிவானந்தம் நுகர்க. ஆனந்த சொருபமாய் நிற்கச் செய்தல் நின்மல துரியாதீதமாம். (588)

பரையின் பரவப ரத்துடன் ஏகமாய்த்
திரையினின் றாகிய தெண்புனல் போலவுற்
றுரையுணர்ந் தாரமு தொக்க வுணர்ந்துளோன்
கரைகண் டானுரை யற்ற கணக்கிலே. 2510

இ - ள்: பரையின் பரவ - திருவருளின் பரவுதலினால் (பெருக்கால்), பரத்துடன் ஏகம் ஆய் - அத்திருவருளுடன் பிரிப்பின்றி இரண்டற்ற ஒன்றாய், திரையின் நின்று ஆகிய தெண்புனல் போல் உற்று - கடலிலே கூடிய தெளிந்த ஆற்று நீரைப் போலக் கடல் நீரின் தன்மையே (உப்புநீரே) யாய், உரை உணர்ந்து - ஆசாரியன் உபதேசித்த உபதேச மொழியை நன்கு சிந்தித்துத் தெளிந்து, ஆர் அமுது ஒக்க உணர்ந்துளோன் - (இறைவன் பரமுத்தியில் உயிரோடு கலந்த இடத்து கருப்பஞ்சாறு, தேன், பால், கனி, இரதம், கற்கண்டு, சருக்கரை முதலிய சுவைப்பொருளெல்லாம் ஒன்றாகக் கலந்தவிடத்து இத்தன்மைத்து எனப்பிரித்தறிய வாராமை போல) அரியதேவாமிருதமும் அதன் சுவையும் போலப் பிரித்தறிய முடியாத ஆனந்த சொருபமாக நிற்றலை அறிந்த சுத்த ஆன்மா, உரை அற்ற கணக்கில்கரைகண்டான் - சொல்லவொண்ணாத காரியப்பாட்டிலே முத்தியங் கரையைக் கண்டவனாவான் என்றவாறு.

உரை உணர்தலாவது ஆசாரியன் உபதேசித்த உபதேசமொழி. அது திருவைந்தெழுத்து. ஐந்தெழுத்தின் பொருள் சிகாரம் முதலாக முறையே சிவம், அருள் ஆன்மா, திரோதை, மலம் என ஐவகைப்படும். இவற்றுள் மலம் திரோதையை நீக்கி, ஆன்மா அருளால் சிவனுடன் கலக்கும் முறையை உணர்த்துவதாய் ஐந்தெழுத்து முறையாம்; அஃதாவது யகரம் நடு நிற்க, சிகரவகரங்கள் முறையே முன்னும் பின்னும் நிற்றல். அது சிவோகம் பாவனையை உணர்த்துவதாம். (389)

## 30. புறங்கூறுமை

பிறையுட் கிடந்த முயலை எறிவான்
அறைமணி வாட்கொண் டவர்தமைப் போலக்
கறைமணி கண்டனைக் காண்குற மாட்டார்
நிறையறி வோமென்பர் நெஞ்சிலர் தாமே. 2511

இ - ள் : பிறையுள் கிடந்த முயலை – பிறைச் சந்திரனிடத்துள்ள முயற்கறையை, எறிவான் - கொல்லும் பொருட்டு, அறைமணிவாள் கொண்டவர் தமை போல – ஒலிக்கின்ற மணிகட்டப்பெற்ற வாளாயுதத்தைக் கையிலேந்திச் சென்றவர்போல, கறை மணி கண்டனை – நஞ்சக்கறையை அமைத்ததலால் ( நிறுத்தியமையால் ) நீலகண்டத்தை யுடைய சிவபெருமானை, காண்குற மாட்டார் – ( திருவருளே துணையாகச் சென்று அவ்வருளின் மயமேயாகித் தற்போதம் முழுவதும் சிவபோதமாய் அடங்கி நிற்கும் அந்நிலையை ) உணரும் பேறு பெறுதோர், நிறை அறிவோம் என்பர் – உபசாந்தநிலையை உணர்ந்தோம்

என்று பறைசாற்றித் திரிவார், தாம் நெஞ்சு இலர் – அவர் தாம் ( தம்வசத்து ) மனம் அடங்கப்பெறாத புல்லியராவர் என்றவாறு.

யான் எனது என்னும் செருக்கு அறுதல் எச்செயலும் சிவச்செயல் எனக்காணும் சிவஞானிகளுக்கன்றிக்கூடாது. காண்பானும் காட்சியும் காணப்படு பொருளுமாக இறைவனைத் தரிசிக்குங்கால் மாயா கருவிகள் சிவகருவிகளாக மாறித் தரிசிப்பதேயன்றி அவை நீங்கமாட்டா. நீங்காமைக்குக் காரணம் ஆணவமலம் நீங்கப்பெற்றும் அம்மலத்தின் வேர் அறுக்கப்படாமையேயாம். வேர் என்பது பற்று எனப்படும், மலம் அறியாமையைச் செய்யும்; பற்று செருக்கைச் செய்யும். அப்பற்றுதல் இறைவனைப் பற்றி ஏகனாகி நிற்றலாலுண்டாம். நான்செய்தேன் என்னும் பற்று மடங்கினாலன்றி, வினையில் கட்டுப் படுதற்கு ஏதுவாய் இந்திரியங்களின் வழிப்பட்டுச் செல்லும் அடிமைத்தன்மை நீங்காமையின், அது நீங்குதற்காக எச்செயலும் சிவச்செயல் எனக் காணுதல் ஒருதலையான் வேண்டப்படும். அவ்வாறு காணுவார்க்கு இந்திரியங்களின் குறும்பு சிறிதுகாலம் நிகழினும், பின்னர் மடங்கி ஒழியும் என்க. (390)

கருந்தாட் கருடன் விசும்பூ டிறப்பக்
கருந்தாட் கயத்திற் கரும்பாம்பு நீங்கப்
பெருந்தன்மை பேசுதி நீயொழி நெஞ்சே
அருந்தா அலைகடல் ஆறுசென் றாலே. 2512

இ – ள் : கரு தாள் கருடன் – வலிய கால்களையுடைய கருடன், விசும்பூடு இறப்ப – ஆகாயத்தின்

ழியாகப் பறந்து செல்வதால், கரு தாள் கயத்தில் கரும்பாம்பு நீங்க – மிகவும் ஆழமான புற்றினிடத்துப் பெரிய பாம்பானது தன் செயல்களெல்லாம் நீங்கி ஒடுங்கிக் கிடப்பதாம், (அதுபோல) நெஞ்சே நீ பெருந் தன்மை பேசுதி – மனமே நீ பெருமை பேசிக் கொண்டு உழல்கின்றாய், (அவ்வாறு உழலாமல்) (நீ) ஒழி – அப்பெருமை பேசுதலை நீ விட்டொழிப்பா யாக, அருந்தா – அமையாத, அலை கடல் ஆறு சென்றால் – அலைகளை யுடைய கடலினிடத்து ஆற்று நீர் சென்று பாய்ந்தால், (மீண்டுவாராமல் அதன் கண் அடங்கி நின்றலொப்ப அடங்கியிருப்பாயாக) என்றவாறு.

மனமே! வீண்பெருமை பேசிக்கொண்டிருத்த லால் சிறிதும் பயனின்று, நீ அடங்கி நிற்றற்குரிய உபாயத்தை அருளால் அறிந்து அடங்கியிரு. "மன மிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே" என்றார் தாயுமான சுவாமிகளும். அடங்கி நிற்கும் முறையை அறியாமல் உணர்ந்தாரைப் போன்று பேசித்திரிவதை நீ விட்டுவிடு என்க. (391)

**கருதலர் மாளக் கருவாயில் நின்ற**
**பொருதலைச் செய்வது புல்லறி வாண்மை**
**மருவலர் செய்கின்ற மாதவம் ஒத்தால்**
**தருவலர் கேட்ட தருவும்ப ராமே.** 2513

இ – ள்: கருதலர் மாள–பகைவர் மாண்டொ ழிய, கருவாயில்–போர்க்களத்தில், நின்ற பொருதலை செய்வது–நேரிட்ட (நிலைபெற்ற) போரினைச்செய்வது, புல்லறிவாண்மை–அறிவின்மையே யாகும், மருவலர்

செய்கின்ற மா தவம் ஒத்தால் – அடங்கினவராகச் செய்கின்ற சிவதவம் கைகூடுமாயின். தருவலர்–தருதலில் வல்லவராகிய வள்ளல்கள், கேட்ட தரு உம்பர் ஆம்–கேட்டவற்றைத் தருகின்ற தேவரும் ஆதல் கூடும் என்றவாறு.

மருவலர்--மருவுதலில் வல்லவர்; எனவே. அடங்குதலில் வல்லவர்; பொறியடக்கம் புலனடக்கம் மனவடக்கம் முதலியவற்றில் சிறந்தோர். இவைகள் அடங்க வேண்டுமாயின் சிவதவம் கைகூடுதல் வேண்டும். கைகூடுதல் அரிதாகலின் 'ஒத்தால்' என்றார். பாசஞானம் பசுஞானங்களால் பரசிவனை அறியமுடியாது. இறைவன் திருவடி ஞானமாகிய பதிஞானம் ஒன்றுனே அப்பதிப் பொருளை அறிய வேண்டும் ஆகலின். 'மாதவம் ஒத்தால்' என்றார். ஆன்மா கருவிகளின் வேறுன சித்து எனவும், தனித்து நிற்கும் முதல் அன்று எனவும் உணர்ந்து அவ்வாறு அடங்கி ஒழுகுதலாம். தருவலர்–தருதலில் வல்லவர். வள்ளல்கள். அவர்களும் கேட்டவற்றைத் தருகின்ற தெய்வத்தன்மை உடையவராவர். இனி மாதவம் ஒத்தால் தருவலர் ஆவர். கேட்டவற்றைத் தரும் கற்பகம் முதலியன தேவலோகத்தில் உள எனலுமாம். கருதலர் என்பது பகைவரை. புறப்பகையன்று, அகப்பகையாகிய புலன், பொறி, மனம் முதலியன. இப்பகை தொலையச் சோதிட்டோமம் முதலிய தவங்கள் பயன்படா. அவை தத்தம் பயனைத்தந்து அழிவனவாம். மா தவமாவது – சரியை கிரியை முதலிய சிவ புண்ணியங்கள்.

(392)

பிணங்கவும் வேண்டாம் பெருநில முற்றும்
இணங்கியெம் மீசனே யீசனென் றுன்னிற்
கணம்பதி னெட்டுங் கழலடி காண
வணங்கெழு நாடியங் கன்புற லாமே. 2514

இ—ள்: பிணங்கவும் வேண்டாம் — எண்ணம் செயல் முதலியவற்றில் மாறுபடுதல் வேண்டாம், பெருநிலம் முற்றும் இணங்கி — பெரிய உலக முழுவதும் (அவன் ஆணையில்) ஒருப்பட்டு நின்று, எம் ஈசனே ஈசன் என்று உன்னில்—எம்முடைய சிவபெருமானே எப்பொருட்கும் தலைவன் என்று மனத்துட் கொண்டால், கணம் பதினெட்டும்—பதினெண் கணத்தவரும், கழல் அடி காண வணங்க எழு நாடி—வீரக் கழலையணிந்த திருவடிகளைத் தரிசித்தற் பொருட்டுத் திரண்டெழுந்து வருதலை உணர்ந்து, அங்கு அன்பு உறலாம் — அப்பெருமானிடத்து அன்பைச் செலுத்துதல் வேண்டும் என்றவாறு.

பிணங்குதல் — மாறுபடல். பெருநிலம் — இருநூற்று இருபத்து நான்கு புவனங்கள். நிவர்த்திகலை முதல் சாந்தியதீத கலைவரையிலுள்ள புவனங்களாம். எம் ஈசன் — எமது சிவபெருமான். ஈசன் — எப்பொருட்கும் தலைவன்; சர்வைசுவரிய சம்பன்னன். உன்னில் — ஐயந்திரிபின்றி மனத்துள் உறுதியாகக் கொண்டு தியானித்தால்.

சிவபெருமானை வழிபடுதலால் உண்டாகும் அருட்செல்வமே செல்வமாம். "செல்வர் வாழ்தில்லைச் சிற்றம்பலமேய, செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே" (திருஞான): "ஐயனே அரனேயென்

றரற்றினால், உய்யலாமுலகத்தவர் பேணுவர், செய்ய பாதமிரண்டும் நினையவே, வையமாளவும் வைப்பர் மாற்பேறரே" (திருநாவுக்); "வணக்குறீ ரரனை யென்றும் வாணவர் வனங்கவைப்பன்" (சித்தியார்). (393)

என்னிலும் என்னுயி ராய இறைவனைப்
பொன்னிலு மாமணி யாய புனிதனை
மின்னிய வெவ்வுயிராய விகிர்தனை
உன்னிலும் உன்னும் உறும்வகை யாலே. 2515

இ-ள் : என்னிலும் என் உயிர் ஆய இறைவனை - என்னைக்காட்டிலும் ஆன்மாவாகிய (உயிராகிய) எனக்கு உயிராக நின்று செலுத்துபவனாகிய இறைவனும், பொன்னிலும் மா மணி ஆய புனிதனை - பொன்னைவிடச் சிறந்து விளங்கும் மாணிக்க மணி போலும் தூயோனும், மின்னிய எவ்வுயிர் ஆய விகிர்தனை - விளங்குகின்ற எல்லா உயிருடனும் கலந்து நின்றும் வேறாகவுள்ளவனும், உறும் வகையால் - உம்மாற் கூடிய வகையினாலெல்லாம், உன்னிலும் - கருதினாலும், உன்னும் - உம்மை அப்பெருமான் திருவுளத்திற் கொண்டருளுவான் என்றவாறு.

"என்னிலும் என்னுயிராய இறைவனை" என்னிலும் இனி என்னிலாரும் எனக்கினியாரில்லை, என்னிலும் இனி யானொருவன்னுளன், என்னுளே உயிர்ப் பாய்ப்புறம் போந்து புக், கென்னு ளேநிற்கும் இன்னம்பர் ஈசனே" எனவும், "பொன்னைப் மணியானாய்போக மானாய்" எனவும் வரும் திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய தேவாரத்தை நினைப்பிக்கும். இறைவன்

உயிருக்குயிராய் நின்று உபகரிப்பான் ஆயினும் வேறுபாடுடையன். முதல்வனும் உயிரும் சித்துப்பொருள். சிவன் அருளாகிய சித்து. உயிர் அவ்வருளைச் சேரும் சித்து. சிவன் பிறப்பினைக் கெடுத்துப் போகம் மோட்சம் தரும் சித்து. உயிர் பிறப்பு முதலிய அவைகளில் அழுந்தும் சித்து. சிவன் தானே அறியும் சித்து. உயிர் அறிவிக்க அறியும் சித்து. இவ்வாறு இரண்டற்கும் வேற்றுமை பெரிதாம் என்க. விகிர்தன்—வேறுபட்டவன்: உலகியலில் வேறுபட்டவன் என்பதாம். (394)

நின்றும் இருந்தும் கிடந்தும் நிமலனை
ஒன்றும் பொருள்கள் உரைப்பவ ராகிலும்
வென்றைம் புலனும் விரைந்து பிணக்கறுத்
தொன்று யுணரும் ஒருவனு மாமே. 2516

இ – ள்: (உயிருக்குயிராக இருந்து செலுத்தும் சிவபெருமானை) நின்றும் இருந்தும் கிடந்தும் – நின்றும் இருந்தும் கிடந்தும் ஆகிய செயல்களைச் செய்யும் பொழுதும், நிமலனை – மலரகிதராகிய அப்புண்ணிய மூர்த்தியை, ஒன்றாய் உணரும்-ஏகனாகி நின்றே உணர்வீராக, ஒன்றும் பொருள்கள் உரைப்பவர் ஆகிலும் பொருந்தியுள்ள தத்துவ நிலைகளைத் தம் ஆன்ம அறிவினால் சீர்தூக்கி அறியும் அறிவினராகிலும், ஐம்புலனும் விரைந்து வென்று – ஐம்புலச் சேட்டைகளையும் சிவபெருமான் திருவருளாலே விரைவிலே பற்றறுத்து, பிணக்கு அறுத்து – மாறுபாட்டினை ஒழித்து ஒன்றாய் உணரும் – முற்கூறிய வாறு ஏகனாகிநின்றேயுணர்ந்து இறைபணியில்

நிற்கக்கடவீராக, (அதனால் அவ்விறைவன்) ஒருவனும் ஆம் – உடனாகி நின்றுகொள்வன் என்றவாறு.

பதிஞானத்தாற் காணப்படுவன் இறைவன். அப் பெருமான் பெத்தநிலையில் உடனாய் நிற்பினும் வேறு காணப்படுமாறின்றி ஆன்மாவேயாய் ஒற்றுமைப்பட்டு ஆன்மாவின் வழி நிற்பன். முத்திக்காலத்திலே அம் முதல்வனோடு ஆன்மா உடன் நின்று அறியினும், ஆன்மாவாகிய தான் வேறுகாணப்படாதவாறு அவ் விறைவனோடு ஒற்றுமைப்பட்டு நிற்கவும் வேண்டும்; அவன் அருள்வழியில் வழுவாது நிற்கவும் பெறவேண் டும். ஒற்றுமைப்பட்டு ஏகனாய் நிற்றலால் யான் எனது என்னும் செருக்கறும். அருள்வழி நிற்றலாகிய அரன்பணியில் நிற்றலால் இந்திரியங்களின் வசமாய் நிற்கும் பரதந்திரம் ஒழியும் என்க. ஒன்றாய் உணரும்– ஒரு முகப்பட்ட மனதாய்ச் சிந்தியுங்கள் என்பாரும் உளர்.

"ஒரு நெறிய மனம்வைத்துணர் ஞான சம்பந்தன்" என்ற அருளிச் செயலும் காண்க. (395)

நுண்ணறி வாயுல காயுல கேழுக்கும்
எண்ணறி வாய்நின்ற எந்தை பிரான்தன்னைப்
பண்ணறி வாளனைப் பாவித்த மாந்தரை
விண்ணறி வாளர் விரும்புகின் றாரே. 2517

இ – ள் : நுண் அறிவாய் – நுட்பமாகிய உணர் வினுக்கு நுண்ணுணர்வாயும், உலகு ஏழுக்கும் – ஏழு லகங்களையும், எண் அறிவு ஆய் நின்ற – கருதத்தக்க அறிவு வடிவமாய் நிலைபெற்றுள்ள, எந்தை பிரான்

தன்னை – எமது பரம பிதாவும் பரமோபகாரியாயும் விளங்குகின்ற அப்பெருமானும், பண் அறிவாளனை – அன்பு அறிவு உருவனுமாகிய சிவபெருமானை, பாவித்த மாந்தரை – கருவிகளோடு கூடிச்செய்யும் பாவனைக்கு அதீதமாய்த் திருவருளால் பாவிக்கும் மெய்யடியாரை, விண் அறிவாளர் – பரமாகாயத்தை யுணர்ந்த ஞானிகள், விரும்புகின்றார் – தொழுது உய்யும் கருத்துடையராய் விரும்பித்தொழுதலைச் செய்கின்றார் என்றவாறு,

சிவஞானிகளும், வீட்டுணர்வாகிய சிவானுபவ உணர்வை நிலைபெறச் செய்யும் சிவபத்தர்களோடு அவசியம் இணக்கம் செய்தல் வேண்டும் என்க. (396)

விண்ணவ ராலும் அறிவறி யான்றன்னைக்
கண்ணற வுள்ளே கருதிடிற் காலையில்
எண்ணுற வாகமுப் போது மியற்றிநீ
பண்ணிடில் தன்மை பராபர னுமே. 2518

இ – ள் : விண்ணவராலும் அறிவு அறியான் தன்னை – 'விண்ணகத்தேவரும் நண்ணவுமாட்டா விழுப்பொருளாகிய சிவபெருமானை, கண் அற – புற இடங்களிலன்றி, உள்ளே கருதிடில் – மனத்திலே தியானம் செய்தால், காலையில் எண்ணுறவாக – காலமுண்டாகவே (முத்திபஞ்சாக்கரத்தைத்) தியானிக்கும் முறையில், நீ முப்போதும் இயற்றி பண்ணிடில் – நீ மூன்று காலத்தும் இதயத்தில் தியானம் செய்து அகப்பூசையை இயற்றிப் புறத்தும் அன்புடனே வழிபாடு செய்தால், பராபரன் தன்மை ஆகும்.

சிவமாந் தன்மைப் பெருவாழ்வு உண்டாகும் என்றவாறு.

பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களுள் யான் இதனை அறிந்தேன் அறிகின்றிலேன் என்னும் உணர்விற்குப் பொருள் ஆன்மாவும் பாசமும் ஆகலின், ஆன்மாவின் அறிவிற்கு ஆன்மாவும் பாசமும் வேறாகக் காணப்படும். முதல்வன் பசு பாசங்களைக் கடந்து நிற்பவன். ஆதலால், ஆன்ம அறிவிற்கு வேறு காணப் படான். வேறு காணப்படாத அம் முதல்வனைத் தன் இதய தாமரையில் முத்திபஞ்சாக்கரத்தைத் தியானிக்கும் முறையில் வைத்துக் காணுமாயின், அவ்வாறு காணும் அறிவில் வெளிப்பட்டுத் தோன்றி அறிவுக்கறிவாய் விளங்கி நிற்பன். இதய தாமரையில் வெளிப்பட்டுத் தோன்றுதல் விறகினிடத்துக் கோலை நட்டுக் கயிற்றினாற் சுற்றிக் கடையவே அவ்விறகில் நின்று அக்கினி தோன்றும். அக்கினியைச் சேர்ந்த இரும்பு அக்கினியாமாறு போல, முதல்வனைச் சார்ந்த ஆன்மாவும் சிவமாய் அம்முதல்வனுக்கு அடிமையாம். விறகினிடத்து அக்கினி தோன்றுதல்,

> *"விறகிற் றீயினன் பாலிற் படு நெய்போல்*
> *மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்*
> *உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினால்*
> *முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே"*
>
> (தாவுக். தே.)

இத்தேவாரத்தில் விறகிற்றீயினன் என்றதும், பாலிற் படுநெய்போல் என்றதும் முறையே பாசத்தி

னிடத்தும் பசுவினிடத்தும் நிற்கும் முதல்வன் தடத்த நிலையை உணர்த்துதற்காம். மாமணிச்சோதியான் என்றது முதல்வன் சொருப நிலையை உணர்த்துதற் காம். விறகுபோல் இதயம். கோல்போல் பஞ்சாக் கரம், கடைதல்போல் தியானம், பால் போல் ஆன்மா.

இறைவனுக்கு ஐந்தெழுத்துத் தூலவடிவம். ஆன்மா சூக்கும வடிவம். சத்தி அதிசூக்கும வடிவ மாம். அவ்வைந்தெழுத்தும் தூலவடிவமாதல் பதி பசு பாசம் என்னும் முப்பொருளையும் குறிக்கும். குறிக்கவே, பசு பாசங்களோடு கலந்திருக்கும் அந் நிலை இறைவனுக்குத்தூலம். அப்பசு பாசங்களுள் ஆன்மாவிற் கலந்து நிற்கும் அந்நிலை சூக்குமம். சிற்சத்தியிற் கலந்து நிற்கும் இறைவன் நிலை அதி சூக்குமம்.

" அண்டமோ ரணுவாம் பெருமைகொண்டு கரணங்களெல்லாம் கடந்து நின்ற அவ்விறைவனே அணுவோர் அண்டமாய் சிறுமைகொண்டு ஆன்மாக் கள் உய்தற் பொருட்டு உடம்பினுள்ளும் அவ்வாறு நிற்கின்றான். அதனை அறிந்து செய்யாதவழிப் பூசை யாற் பயனில்லை என்றார். இந்த விளைவறிந்து போற்றே என்றார். தன்னின முடித்தலால் ஓமித்தல் தியானித்தல்களினும் இவ்வாறே உணர்ந்து செய்யப் படும் எனக்கொள்க " ( சிவஞான சித்தியார், சூத் 9, அதிகரணம் 3 ) என்றருளிச் செய்தனர் ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள்.

அந்தர்யாக பூசனையைத் திருநாவுக்கரசு சுவாமிகள்

" காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறையநீரமைய வாட்டிப்
பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே "

எனவும்,

" உடம்பெனு மனையகத்து உள்ளமே தகழியாக
மடம்படு முணர்நெய் யட்டி உயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே. "

எனவும் தேவாரத்திருமுறையில் அருளிச்செய்தவாறு அறிக.

இனி, புறப்பூசையும் சிவோகம்பாவனைக்கு அங்கமாதலறிக. புறப்பூசை அகப்பூசை இரண்டினுள்ளும் அகப்பூசையே விசேடமாம். அவ்வாறு அகப்பூசை செய்யின் சிவன் ஆன்மாவினிடத்து விளங்கித் தோன்றி வாசனையைப் பற்றறத்துடைத்து இரும்பைத்தன் வண்ணமாக்கும் தீப்போலச் சீவனைத் தன் வண்ணமாக்கித் தனது எண்குணங்களாகிய பேரானந்தப் பெருஞ்செல்வம் முழுவதும் இவனுடையதாகச் செய்தருளுவன் என்க. (597)

ஒன்று யுலகுடன் ஏழும் பரந்தவன்
பின்று னருள்செய்த பேரரு ளாளவன்
கன்று மனத்தார்தங் கல்வியுள் நல்லவன்
பொன்றுத போது புனைபுக ழானே. 2519

இ - ள் : ஒன்றாய் உலகு ஏழுடன் பரந்தவன் — தான் ஒருவனாய் ஒப்பில்லாதவனாய் ஏழுலகங்களினும்

எள்ளினுள் 'எண்ணெய் போல இடையீடின்றி நிறைந்து நிற்பவனும் பின்தான் அருள்செய்த பேரருளாளவன் – (அவனை அடைந்த) பிறகு திருவடியாகிய சிவானந்த அனுபூதியைக் கொடுத்தருளும் பேரருளை யுடையவனும், கன்றா மனத்தார் தம் – மாறுபாடில்லாத மனத்தையுடையவர், கல்வியுள் நல்லவன் – கற்ற கல்வியைக் காட்டிலும் இனிமை யுடையவனும் ஆகிய சிவபெருமான், பொன்றாத போது – கெடாத மலரை (இதய தாமரை), புனைபுகழான் – சூடிக்கொள்ளும் புகழையுடையவன் ஆவான் என்றவாறு.

பொன்றாத இதய தாமரையின்கண் அலங்கரித்து நிற்கும் புகழையுடையவன் என்க. (398)

போற்றியென் றேனெந்தை பொன்னான சேவடி
ஏற்றியே சென்று மெறிமணி தானகக்
காற்றின் விளக்கது காய மயக்குறும்
ஆற்றலுங் கேட்டதும் அன்றுகண் டேனே. –2520

இ – ள் ; எந்தை பொன் ஆன சே அடிபோற்றி என்றேன் – எமது பரமபிதாவாகிய சிவபெருமானது பொன்போன்ற சிவந்த திருவடிகள் பாதுகாக்கக் கடவது என்று அலறி அரற்றினேன், ஏற்றி – சிரசில் சூடி, சென்றும் – பிரமரந்திரம் வரை மேலேறிச் சென்றும், எறிமணி – அடிக்கப்படும் மணியோசை, அகக்காற்றின் விளக்கது காயம் – பிராணவாயுவினால் விளங்குவதாகிய சரீரம், (நாதானு சந்தானத்தில்) மயக்குறும் ஆற்றலும் – (முழுவதும்) கலந்து நிற்கும் அருளாற்றலையும், கேட்டதும் – மணி

யோசையைக் கேட்டதும், அன்று கண்டேன் - அப்பொழுதே கண்டேன் என்றவாறு,

ஏற்றியே சென்றும் - பிராணவாயுவை உள்ளே கும்பித்து, அபானன் முதலியனாகக் கழியாது, நிச்சுவாசமாக வெளிப்படாது பிரமரந்திரம்வரை மேலேற்றிச்சென்றும் எனக் கொள்ளுதலும் ஒன்று. நாதானுசந்தானம் வளர்ச்சியடையும் போது நுண்ணொலியாகக் கேட்கப்படும். (399)

**நேடிக்கொண் டென்னுள்ளே நேர்தரு நந்தியை**
**ஊடுபுக் காரு முணர்ந்தறி வாரில்லை**
**கூடுபுக் கேறலுற் றேனவன் கோலங்கண்**
**மூடிக்கண் டேனுல கேழுங்கண் டேனே.** 2521

இ - ள்: என்னுள்ளே நேர்தரு நந்தியை - என் இதயதாமரையிலே எதிர்ப்பட்டு விளங்கும் சிவபெருமானை, நேடி கொண்டேன் - (என்உள்ளத்தினுள்ளே வீள்ளாதிருத்தலின்) திருவருளே (சிவஞானமே) துணையாகச் சென்று ஆராய்ந்தறிந்தேன், ஊடு புக்கு ஆரும் உணர்ந்து அறிவார் இல்லை - உள்ளத்தினுள்ளே புகுந்து எத்தகைய தேவரும் உணர்ச்சி மிக்கு ஆராய்ந்தறிவார் இல்லை, கூடு புக்கு ஏறலுற்றேன் - பிரமரந்திரம் வரையிற் சென்று சிவயோகமார்க்கத்தால் ஏறினேன், அவன் கோலங்கள் அந்த நல்லவனுடைய (சிவனுடைய) கோலங்கள் முழுவதையும், மூடிக்கண்டேன் - எனக்குள் அடக்கித் தரிசித்தேன், உலகு ஏழும் கண்டேன் - ஏழுலகங்களையும் கண்டேன் என்றவாறு.

ஒரு அசைவின்றியே நின்ற பரமஞானத்தை அது கண்ணாகக்கண்டு, அந்த ஞானமேயாய்த் தானும் அசைவின்றி நின்று, அந்த ஞானத்தில் நிலையாகத் தன்னுடைய ஆன்மபோதம் ஒழிந்து, அந்த ஞான மாயே நின்ற விடத்தில் சிவம்பிரகாசித்து ஆன்மாவை யும் ஒரு நீர்மையாக்கிக்கொள்ளும். இவ்வாறன்றிச் சுட்டி அறியத்தக்க ஆன்மபோதத்தாலே ஆராய்ந்து அறித்தக்க இடம் அதுவன்று. உரையிறந்து சிவ னுடனே இரண்டற்றிருக்கிற சிவயோகிகளிடத்துப் பரமேசுவரன்பிரகாசித்து நிற்பன் என்பது கருத்தாகக் கொள்க.

"தேடிக் கண்டு கொண்டேன் திருமாலொடு நான்முகனும், தேடித் தேடொணாத் தேவனை யென்னுளே தேடிக் கண்டுகொண்டேன்" (திரு நாவுக். தே.) (400)

**ஆன புகழும் அமைந்ததோர் ஞானமும்**
**தேனு மிருக்குஞ் சிறுவரை யொன்றுகண்**
**டூனமொன் றின்றி யுணர்வுசெய் வார்கட்கு**
**வானகஞ் செய்யு மறவனு மாமே.** 2522

இ - ள்: ஆன புகழும் - பொருந்திய சிவபெரு மானுடைய பொருள்சேர் புகழும், அமைந்தது ஓர் ஞானமும் - என்றும் மாறாதுள்ள ஒப்பற்ற சிவஞான மும், தேனும் இருக்கும் சிறுவரை ஒன்று கண்டு - அமுதமுமிருக்குமிடமாகிய மேரு என்னும் புருவ மத்தியிலேயுள்ள பரம்பொருளை தியானித்து, ஊனம் ஒன்று இன்றி உணர்வு செய்வார்கட்கு - குற்ற மில்லாமல் தியானிப்பானும் தியானிக்கப்படுபொருளும்

ஒன்றாகவுள்ள (வேறாகாத) சமாதியைத் தலைக்கூடும் சிவயோகிகளுக்கு, (அவ்விறைவன்) வானகம் செய் யும் மறவனும் ஆம் – சிவசாயுச்சியத்தைச் செய்யும் சிவனும் ஆவர் என்றவாறு.

புருவமத்தியையடைய அங்கே சதாசிவம் வெளிப்படும் என்க. புருவமத்தியில் ஒருசோதியுண்டு. அதனுள் இறைவன் திருவடியைத் தரிசிக்கலாம். அங்ஙனம் ஆஞ்ஞையில் திருவருட்சத்தியின் வடி வாகிய திருவடியைத் தரிசித்தல் அருமையாதலின் 'ஊனம் ஒன்றின்றி உணர்வு செய்வார்கட்கு' என்றருளினர். இனி, ஆஞ்ஞையில் இறைவன், சதாசிவன் மனோன்மனியாக எழுந்தருளியிருத்தலின் வானகம் செய்யும் மறவனும் ஆம் என்றார், எனவே, சிவமாந்தன்மைப் பெருவாழ்வடைவர் என்றபடி யாம், வானகம் என்றது பராகாயமாகிய ஆஞ்ஞையை. இறைவன் பரமயோகியாக நெற்றியிற் கண் படைந் திருக்கின்றான். ஆகலின், புருவ மத்தியிற்றியானம் செய்க. திருவடி தரிசனம் செய்கின்ற சிவயோகி திருவடியின் நிழலிலும், மேருவின் உச்சியிலும் விளங்குவன், தேன் – அமுதம். மேருவின் உச்சி – பிரமரந்திரம். (401)

**மாமதி யாமதி யாய்நின்ற மாதவர்**
**தூய்மதி யாகுஞ் சுடர்பர மானந்தத்**
**தாமதி யாகச் சகமுணச் சாந்திபுக்**
**காமல மற்றார் அமைவுபெற் றாரே.** 2523

இ – ள் : மாமதியாம் – (கபாலத்திலுள்ள) பெரிய சந்திரனிடத்துள்ளதாம், மதியாய் நின்ற மாதவர் –

அறிவுவடிவாய் நிலைத்துள்ள பெருந்தவத்தையுடைய வர், தூய் மதி ஆகும் சுடர் – தூய அறிவு வடிவாக விளங்கும் சோதி சொரூபமுகிய பரம்பொருள் (சிவ பெருமான்), பரமானந்தம் – (திருவடியில்கலந்து நின்று) ஆனந்தபரவச முடையராய், தாம் மதியாக – அவ்வறிவே தம் அறிவு சொரூபமாகப் (பிரித்தறிய வாராது), சகம் உண – உலகம் தம்மிடத்துள்ளதாக, சாந்திபுக்கு – உபசாந்த நிலையை அடைந்து, ஆம் மலம் அற்றூர் – பசு போதத்தைச் செய்யும் ஆணவ மலம் பற்றறக்கழிந்தவராய், அமைவு பெற்றூர் – சிவபோக அநுபவமுடையராவார் என்றவாறு.

மாமதி என்றது ஆயிரம் இதழ்க்கமலமுடைய சந்திர மண்டலத்தை. சுடர் என்றது சத்தி என்னும் நிலையைக் குறிக்கும், ஆயினும், எல்லாவற்றையும் அடக்கி விளங்கும் பேரொளி வடிவாகிய இறை வனது தன் இயல்பாகிய சிவம் என்னும் நிலையைக் குறித்ததாம் என்க. (402)

பதமுத்தி மூன்றும் பழுதென்று கைவிட்
டிதமுற்ற பாச விருளைத் துரந்து
மதமற் றெனதியான் மாற்றிவிட் டாங்கே
திதமுற் றவர்கள் சிவசித்தர் தாமே. 2524

இ – ள் : பதமுத்தி மூன்றும் பழுது என்றுகை விட்டு – பிரமபதம் விஷ்ணுபதம் உருத்திரபதம் என்னும் சத்தியலோக வாழ்வு வைகுந்த வாழ்வு கயிலாய வாழ்வு ஆகிய மூன்றும் குற்ற முடையதாம் (பின்னும் பிறவிக்கு வித்தாம்) என்று அவற்றைப்

பெறுதலைத் துறந்து, இதம் உற்ற பாச இருளை துரந்து-இஃது என்னும் சுட்டறிவுக்கு விஷயமாகப் பொருந்திய பாசஞான பசுஞானங்களை விட்டு நீங்கி. மதம் அற்று எனது யான் மாற்றி – செருக்குகளை விட்டும் புறப்பற்று அகப்பற்றுக்களை அடியோடு கெடுத்தும், ஆங்கேஇதம் உற்றவர்கள் – அப்பொழுதே (திருவருளில்) நிலைத்து நின்றவர்கள், சிவ சித்தர் – சிவத்தைக்கண்ட வராவார் என்றவாறு.

சத்தியலோக வாழ்க்கை, வைகுந்த வாழ்க்கை முதலியன புண்ணிய பலத்தாற் கிட்டுவன. ஆயினும் அப்புண்ணியத்தின் பயன் அனுபவித்துத் தொலைந்த வாறே மீண்டும் ஆன்மாக்கள் பிறப்பிறப்புக்களில் பட்டுழல்வனவாம். பாச இருள் என்பதை உம்மைத் தொகையாகக் கொண்டு பாசத்தையும் இருளையும் எனக்கொள்க. ஆணவமலம் உயிரோடு கலந்து நின்று அறிவு இச்சை செயல்களைத் தடுத்து நிற்பது ஆதலின் அது பிரதிபந்தமாம். கன்மமலம் உயிர் செல்லுமிடங்களிலெல்லாம் தொடர்ந்து சென்று சுக துக்கங்களைக்கூட்டுவது ஆதலின், அஃது அநுபந்தம் எனப்படும். மாயாமலம் உயிரோடு கூடித் தனுகரண முதலியவாய் நிற்கும் ஆதலின், அது சம்பந்தம் எனப் படும். கன்மமலமும் மாயாமலமும் ஆணவமலமும் ஆகிய மூன்றும் உயிரினது உண்மை வடிவினை மறைத்து மயக்கத்துக்கு ஏதுவாகக் கூடி நிற்பன, சுகதுக்கமாகிய காரியத்திற்குக்கன்மமலம் முதற் காரணமும், மாயாமலம் துணைக்காரணமும், ஆணவ மலம் நிமித்த காரணமுமாம். கன்மமலம் சுகதுக்கங் களைத் தோற்றுவித்தலின் அது முதற்காரணம். உயிரினிடத்துச் சுகதுக்கங்கள் தோன்றுதற்குத் துணை

யாய் அவ் உயிரினோடு மாயாகாரியமாகிய தனுகரணு திகள் கூடி நிற்றலின் மாயைதுணைக்காரணம். சுகதுக்கங்கள் உயிரினிடத்துத் தோன்றுதற்கு அச்சுக துக்கங்களை முனைத்து நிற்கச்செய்து அவற்றை உயிர் அனுபவிக்குமாறு செய்வது ஆணவம் ஆதலின் அது நிமித்த காரணம் என அறிந்துகொள்க. பந்தப் படுத்தும் முறைமையின் வேற்றுமைக் கேற்ப மும் மலங்களும் வேற்றுமைப்படும் என்பது முன்னர்க் கூறப்பட்டது. மலம் அறியாமையைச் செய்யும் பற்று செருக்கைச் செய்யும் ஆகலின் ' பாச இருளைத்துரந்து, மதமற்று, எனது யான் மாற்றி விட்டு ' என்றருளியமை காண்க. திதம் = ஸ்திதம்– நிலை. (403)

சித்தர் சிவத்தைக் கண்டவர் சீருடன்
சுத்தாசுத் தத்துடன் தோய்ந்துந்தோ யாதவர்
முத்தரம் முத்திக்கு மூலத்தர் மூலத்து
சத்தர் சதாசிவத் தன்மையர் தாமே 2525

இ - ள் : சித்தர் சிவத்தைக் கண்டவர் – சித்தர் என்று சொல்லப்படுவர் சிவத்தைத் தரிசித்தோரா வார். சீருடன் சுத்த அசுத்தத்துடன் தோய்ந்தும் தோயாதவர்–அவர் சுத்த மாயை அசுத்தமாயாகாரியங் களுடனே பொருந்தியிருந்தும் ஒன்றினும் தோயா திருப்பார், ( அவர் பரஞானத்தாற் பரத்தைத் தரிசித் தோர் ஆகலின் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் என்க ) முத்தர் அம்முத்திக்கு மூலத்தர் – முத்தர் என்று சொல்லப்படுவோர் அம்முத்தியை யடையும் ஏதுவினையுடையவர், மூலத்து சத்தர் சதாசிவத் தன்மையர் – அந்த ஏதுவினை உடையோர் சதாசிவமாகிய தன்மையையுடையவராவர் எ – று.

சித்தர் – சித்தித்தவர். சிவயோகம் வாயிலாகச் சிவஞானத்தைப் பெற்றுச் சிவத்தைத் தரிசித்தோர் உலகத்திலே திரிந்தும் உலகத்தோய்வின்றிச் சிவத் தோய் விலேயே நிலைத்து நிற்பார்; அவரே முத்தர். சிவப் பேறெய்திய முத்தர்கள் பிராரத்துவ கன்மத்துக் கீடான சரீர முள்ளளவும் சிவபோகானுபவமாய் நிற்றலும், சிவபோகத்தை அநந்நியமாய் அனுபவித்து நிற்றலும், இறைவனோடு கலந்து நிற்றலும், ஆனந்த பரவசராய் நிற்றலும் உரியராவார். சீவன் முத்தர் சிவமே கண்டிருப்பர் ' என்றமையும் காண்க.

பரமுத்தியாவது, பரனொடு பேதமற நின்று பாசத்தை விடுதல். சீவன் முத்தியாவது, சீவனாகி நின்றும் சிவானுபவ மேலீட்டால் பாசத்தை விடுதல். அஃதாவது சீவத்தன்மையைச் செய்வ தாகிய பாசத்தை இழந்து நிற்றல். (404)

## 31. அஷ்டதள கமல முக்குண அவத்தை

உதிக்கின்ற இந்திரன் அங்கி யமனுந்
துதிக்கும் நிருதி வருணன்நல் வாயு
மதிக்கும் குபேரன் வடதிசை யீசன்
நிதித்தெண் டிசையு நிறைந்துநின் றாரே. 2526

இ – ள் : இதயத்தாமரை எட்டிதழ்களை உடையது. அத்தாமரையின் திக்குத் தளங்களில் முறையே கிழக்கு முதலாக இந்திரன் அக்கினி இயமன் நிருதி வருணன் வாயு குபேரன் ஈசானன் ஆகிய திக்குப்பாலகர் எண்மரும் நியமனம் செய்யப்பட்டு எட்டுத்திசைகளிலும் காவல்செய்து நிறைந்திருந்தனர் என்றவாறு.

உதிக்கின்ற இந்திரன் – கீழ்த்திசைக் காவலனாய்த் தோன்றும் இந்திரன். அங்கி – அக்கினிதேவன், மதிக்கும் குபேரன் வடதிசை – நிதிக்கோன் என யாவராலும் மதிக்கப்படும் குபேரன் வடதிசைக்குக் காவல். ஈசன் – ஈசானன். நிதித்து – நியதி செய்யப் பட்டு. எண்டிசை – எட்டுத்திக்கு. நிறைந்து நின்றார்- பூரணமாய்க் காவல் செய்வாராயினர். (405)

ஒருங்கிய பூவுமோ ரெட்டித ழாகும்
மருங்கிய மாயா புரியத னுள்ளே
சுருங்கிய தண்டின் சுழுனையி னூடே
ஒருங்கிய சோதியை ஓர்ந்தெழும் உய்ந்தே 2527

இ-ள் : ஒருங்கிய பூவும் ஓர் எட்டு இதழ் ஆகும் - இதயகமலமாக (ச்சேர்ந்துள்ள) பொருந்தியுள்ள மலரும் ஒப்பற்ற எட்டிதழ்களோடு கூடியதாகும், மருங்கிய – பெருமை பொருந்தும், மாயா புரி அதனுள்ளே – மாயாபுரி எனும் உடம்பினிடத்து, சுருங்கிய தண்டின் சுழுமுனை ஊடு - முதுகந்தண்டாகிய வீணாதண்டின் நுண்ணியதாகிய சுழுமுனை நாடியினூடே, ஒருங்கிய சோதியை – அடங்கியுள்ள பேரொளியை, ஓர்ந்து உய்ந்து எழும் – ஆராய்ந்து உய்யும்பொருட்டு நினைந்தெழுவீராக என்றவாறு.

ஒருங்கிய பூவும் என்றது இதயதாமரையை. அத் தாமரை எட்டிதழ்களையுடையது. ஒருங்குதல் - கீழ் நோக்கிக் குவிந்திருத்தல். அதனை ஆசாரியன் அனுக் கிரகித்தபடி மேல்நோக்கியதாக்கி விரியச் செய்தல் வேண்டும். தாமரைமலர் உளதாயின் கிழங்கு, தண்டு

(நாளம்), கேசரமாகிய பூந்தாது. கொட்டை (பொகுட்டு) பீசங்கள் முதலிய அங்கங்கள் இருத்தல் வேண்டும். உந்தியில் பிருதிவி தத்துவம் கிழங் காகவும், ஏனைய அப்பு முதலிய இருபத்து மூன்று தத்துவங்களும் அவ்வுந்தியினின்று தோன்றி எண் விரல் அளவாயுள்ள தண்டாகிய நாளவடிவாகவும், பொருந்திய அசுத்த மாயையின் காரியமாகிய வித்தியா தத்துவங்கள் ஏழும் சுத்தவித்தை ஒன்றும் ஆக எட்டுத் தத்துவங்களும் எட்டிதழ்வடிவாகவும், சிதைவில்லாத அவ்விதழ் எட்டும் பிரணவம் முதலிய எட்டக்கரங்களை யுடையதாகவும், ஈசுவரம் சதாசிவம் என்னும் இரண்டு தத்துவமும் அறுபத்து நான்கு பேதப்படுதலால் அறுபத்துநான்கு கேசரமாகிய பூந்தாது வடிவமாகவும், சத்திதத்துவம் அக்கேசரங் களுக் குள்ளாகிய கொட்டை என்னும் பொகுட்டு வடிவமாகவும், அச்சத்தி தத்துவமே அப்பொகுட் டிற் காணப்படும் ஐம்பத்தொரு அக்கரமாகிய பீசவடிவாகவும் உடைய நாட்டப்படும் இதயகமலம் விளக்கப்பெற்ற ஆசனமாம். அவ்வாசனத்தின்மேல் சத்தியே வடிவாகவும், அவ்வடிவத்தில் வீடு தருகின் றவனாகிய சிவபெருமான் வடிவத்தையுடைய வனாகவும் இருப்பன். இம்முறையை அறிந்துபூசித்தல் வேண்டும்.

மாயாபுரி – மாயாகாரியவுடம்பு. தண்டு – முதுகந் தண்டு. சுழுனை – நடு நாடி. அதுமுதுகெலும்பை யொட்டி மூலாதாரந்தொடங்கிப் பிரமரந்திரம் வரையி லுள்ளது. ஒருங்கிய சோதி – அடங்கியிருக்கும் பேரொளி. ஓர்தல் – ஆராய்தல்.

"இனிப்பத்தி அந்தரங்கமென்றும் பாஹ்யபத்தி என்றும் இரண்டு விதப்படுமென்று ஆகமங்கள் கூறும். இந்த இரண்டில் அந்தரங்கபத்தி பண்ணும் கிரமமானது மூலாதாரத்திலே கூர்மத்துக்கு நடுவே ஆதாரசத்தி. கூர்மத்தின் மேலே அனந்தனுக்குப் பதுமாசனம். அதன்மேலே அனந்தன். நாபிமட்டாக அனந்தனுடைய சிரத்திலே பிருதிவி தத்துவம் தாம ரைக்கிழங்கு. அப்புதத்துவம் முதலாகக் காரிய மாயா தத்துவமளவும் முப்பதுதத்துவம் எட்டங்குலநாளம். பஞ்சாசத்பாவம் தாமரைத்தண்டின் நூல்கள். நாளத் தின் முள்ளுகள் நூற்றுத்தொண்ணூற்றொரு புவனங் கள். தண்டுக்கும் இதழுக்கும் நடு இசைதலை அதோ மாயை. அதன்மேல் சுத்த வித்தியாதத்துவம், எட்டு இதழ் இந்திராதி திக்பாலருடைய பீஜமான யகாராதி ஹகாராந்தம் எட்டும், வாயு அக்கினி இந்திரன் வருணன் யமன் குபேரன் நிருதி ஈசானன் என்னும் திக்தளங்களில் கிரமத்திலுடையதாய் அனந்தாதி மகேச்சுரர் வசிப்பதான ஈசுவரதத்துவம் கேசரங்கள்.

சதாசிவர் வசிக்கும் சாதாக்கிய தத்துவம் கர்ணிகை. சூரிய மண்டலம் சோம மண்டலம் அக்கினி மண்டலங்கள் தளாக்கிரத்திலும் கேசராக் கிரத்திலும் கர்ணிகாக்கிரத்திலும் கிரமத்திலுடைய தாய் அவைகளுக்கு அதிபதிகள் அடைவே பிரமா விஷ்ணு ருத்திரர்கள். இவ்வாறுள்ள இதய கமலத்தின் மேல் களங்கமில்லாத படிகப் பிரகாச ஸ்வரூபமாகிய லிங்கமாகப் பாவித்து அதில் கன்ம சாதாக்கியரைத் தியானித்து, அவர் இதயத்தில் நிருவிகற்ப ஞானானந்த ஸ்வரூபியான சிவத்தைப் பாவியாநின்று, சடாதாரத் துக்குமேல் குருத்தானமாகிய ஆயிரம் இதழாய் நின்ற

பதுமத்திலிருக்கிற சோமமண்டலத்து அமுதத்தினலே ஏகாக்கிர சித்தமான மனத்துடனே சாஸ்திரோக்தப் பிரகாரம் தப்பாமல் அபிஷேகம் பண்ணி, நைவேத்திய முதலான உபசாரங்களைச் செய்து, பதிவிரதையான ஸ்திரீயினுடைய மனம் புருஷனைவிட்டுப் பிரியாமல் நின்றதுபோல அந்தச் சிவத்தினுடன் பிரியாம லிருக்கை என்று சிவாகமங்கள் சொல்லும்.'. (சிவநெறிப் பிரகாரம் - செய். 214. ஸ்ரீ நந்திசிவாக்கிர யோகிகள் உரை).

புறத்தே ஞானபூசை செய்யும் முறைப்படி அகத்தே இதயம் உந்தி புருவநடு என்னும் மூன்று தானங்களையும் முறையே பூசைத்தானம் ஓமத் தானம் தியானத் தானங்களாக வகுத்துக்கொண்டு பூசித்து ஓமித்துத் தியானிப்பனுயின் சிவனுக்கு அடிமையாவன். (406)

மொட்டலர் தாமரை மூன்றுள மூன்றினும்
விட்டலர் கின்றனன் சோதி விரிசுடர்
எட்டல ருள்ளே இரண்டலர் உள்ளுறிற்
பட்டலர் கின்றதோர் பண்டங் கனுவே. 2528

இ - ள்: மொட்டு அலர் தாமரை—(கீழ்நோக்கிய மொட்டாகவுள்ளதை ஆசாரியனுடைய அனுக்கிரகத் தால் மேல்நோக்கியதாகச் செய்து அலர்த்தப்படும் தாமரை மலரானது (இதயதாமரை). மூன்று உள— இதயகமல அஷ்டதளம் இதயகமல கர்ணிகை அவ் விதய கமல கர்ணிகை மத்தியம் என்னும் மூன்று புகுப்பாக உள்ளன, மூன்றினும் விட்டு அலர்கின் றனன்— இம்மூன்றினும் (சீவன்) விட்டுவிட்டுப்

பிரகாசிக்கிறான், சோதி விரிசுடர் - விராட்டு என்னும் இறைவன் உலகமே உருவாயினான்; (ஆகலின் அவ் விறைவனை) எட்டு அலர் உள்ளே-அஷ்டதள பத்மத் தினுள்ளே, இரண்டு அலர் - கர்ணிகை கர்ணிகைமத் தியம் ஆகிய பீடத்தில் வைத்து, உள்ளுறில்-தியானித் துப் பூசித்தால், பட்டு அலர்கின்றது - தோன்றி விளங்குவதாம், (அவ்வாறு செய்யும் உம்மைப் புண்ணியம் வாய்க்கப் பெறுவோருக்கு) ஓர் பண்டம்-ஒப்பற்ற அந்தப்பரம் பொருள், கனவே-கனவினிடத் துக் கண்டபொருள் அனுபவத்து வாராது ஒழிதல் போலப் பயனின்றாம் என்றவாறு.

அண்டமோர் அணுவெனும்படி பெரிதாய்க் கரணங்களெல்லாங் கடந்து நின்ற அவ்விறைவனே, அணுவோரண்டமாம்படி சிறிதாய் ஆன்மாக்கள் உய் தற் பொருட்டு உடம்பினுள்ளும் அதி சூக்குமமாய் இருக்கின்றான், அதனை அறிந்து பூசிக்க என மிகவும் வற்புறுத்திக் கூறியருளல் நோக்கியறிக.

இதனானே, "அண்டபிண்டமவை சமமாதலால்" புறத்துக்காணப்படும் முப்பத்தாறு தத்துவமும் அகத் தினில் சூக்குமமாய் உண்டென்பது காட்டி முதல்வ னுக்கு இந்நிலையே அந்நிலை எனத் தெளிவித்த வாறு. (407)

ஆறே யருவி யகங்குளம் ஒன்றுண்டு
நூறே சிவகதி நுண்ணிது வண்ணமும்
கூறே குவிமுலைக் கொம்பனை யாளொடும்
வேறே யிருக்கும் விழுப்பொருள் தானே. 2529

இ—ள்: ஆறே அருவி—ஆறானது அருவி போன்றுளது (சிற்றாறு), அகம் குளம் ஒன்று உண்டு—உள்ளமாகிய குளமும் ஒன்று உள்ளதாம், நூறே சிவகதி—அளவற்ற சிவகதியும் உண்டு, வண்ணமும் நுண்ணிது. தன்மையும் மிகமிக நுட்பமானது (அதிசூக்குமமென்க), கூறே குவிமுலை கொம்பு அனையாளோடும்—தமது திருமேனிப்பாதியிலே முற்றாத இளநகில்களையுடைய பூங்கொம்பு போன்ற உமாதேவியாருடன் (கூடியிருந்தும்) வேறேஇருக்கும் விழுப்பொருளும்—(தானானதன்மையில்) வேறாக விளங்கும் பரம்பொருளும், தானே—தானேயாவன் என்றவாறு.

அருவி—அமுதப்பெருக்கு, அது சிற்றாறு. அகம்—மனம், உள்ளம், அமுதப்பெருக்கைத் தேக்கிவைத்து உடம்பெங்கும் பரவச்செய்தல். தானே என்றது சீவனை. சீவன் சிவமாந்தன்மைப் பெருவாழ்வடையும் என்க. தானே என்பதற்கு இரண்டற்ற தன்மையில் என்க. (408)

திகையெட்டுந் தேரெட்டும் தேவதை யெட்டும்
வகையெட்டு மாய்நின்ற வாதிப் பிரானை
வகையெட்டு நான்குமற் றாங்கே நிறைந்து
முகையெட்டு முண்ணின் றுதிக்கின்ற வாறே. 2530

இ—ள்: திகை எட்டும்—எட்டுத்திக்குகளும், தேர் எட்டும்—அத்திசைகளிலுள்ள விமானம் (ஊர்திகள்) எட்டும், தேவதை எட்டும்-இந்திரனாதி-திக்குப்பாலகர் எண்மரும், வகை எட்டும்—எண் வகை வடிவமும், ஆய் நின்ற ஆதிப்பிரானை — ஆகிய எல்லாமாய் நிலை பெற்ற ஆதி சத்தியொடு கூடிய சிவபெருமானை, வகை

எட்டும் நான்கும் அற்று – வகுத்துக் கூறப்படும் ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியம்5. மனம் 1,புத்தி 1 ஆகப் பத்து இந்திரியங்களும் இரண்டு அந்தக் கரணங் களும் ஆகிய பன்னிரண்டும் எட்டுதல் ஒழிந்து(அசை வறவிருந்து), ஆங்கே நிறைந்து–அவ்வசைவற நின்ற விடத்துப் பூரணமாய், முகை எட்டும் – மொட்டு வடிவாய் விளங்கும் எட்டிதழ்த் தாமரையினுள், உள் நின்று உதிக்கின்றவாறு – உள்ளே நின்று விளங்கித் தோன்றியருளுவன் என்றவாறு.

தேர் என்றது அவரவர் ஊர்திகளை, வகை எட்டு- ஐம்பெரும் பூதங்கள் சூரியன் சந்திரன் ஆன்மா (இய மானன்) என்னும் அட்டமூர்த்தி சொரூபங்கள், ஆதிப் பிரான் – ஆதி சத்தியொடு கூடிய சிவபெருமான். எட்டும் நான்கும் – பன்னிரண்டும். அட்டமூர்த்தி ; "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமான னாயெறியுங் காற்றுமாகி, அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகாச மாயட்ட மூர்த்தியாகிப், பெருநலமுங் குற்றமும் பெண்ணுமாணும் பிறருருவுந் தம்முருவுந் தாமேயாகி, நெருநலையா யின்றாகி நாளையாகி நிமிர்புன் சடையடி கள் நின்ற வாறே" (திருநாவுக் திருத்தாண்ட). எப்பொருள்களினிடத்தும் இறைவன் கலந்து நிற் கின்றான் என்பதை அறிந்துகொள்ளுதற் பொருட்டுத் திருவுருத்திரத்தினுள் எவ்விடத்தும் வழிபடுக எனக் கூறியுள்ளமையும் காண்க. (409)

**ஏழுஞ் சகள மியல்புங் கடந்தெட்டில்**
**வாழும் பரமென் றதுகடந் தொன்பதில்**
**ஊழி பராபர மோங்கிய பத்தினிற்**
**றாழ்வது வான தனித்தன்மை தானே.** 2531

இ – ள் : ஏழும் சகளம் இயல்பும் கடந்து – எட்டு இதழ்த் தாமரையில் கிழக்கு இதழ் முதல் வடக்கு இதழ் ஈறாகவுள்ள ஏழும் சீவனது ஸ்தானமும், எட்டில் வாழும் பரம் என்றது கடந்து எட்டாவதாகிய வடகிழக்கு இதழ் பரனது ஸ்தானமும் ஆகலின் அவற்றைக்கடந்து, ஒன்பதில் – கீழ் என்னும் ஒன்பதாவது இதழ் சிவனது ஸ்தானமும், ஊழி பராபரம் ஓங்கிய பத்தினில் – மேல் என்னும் பத்தாவது இதழ் ஐக்கிய ஸ்தானமும் ஆம் என்பர் ஆகலின், தாழ்வு அது ஆன தனித் தன்மை தான் – அன்பு வடிவாகிய இரண்டற்ற நிலைமையாம் என்றவாறு. (410)

பல்லூழி பண்பன் பகலோன் இறையவன்
நல்லூழி யைந்தினுள் ளேநின்ற ஊழிகள்
செல்லூழி யண்டத்துச் சென்றவவ் வூழியுள்
அவ்வூழி யுச்சியு ளொன்றிற் பகவனே. 2532

இ – ள் : பல் ஊழி பண்பன் – பல ஊழிக்காலங்களை யுண்டுபண்ணும் தன்மை யுடையவனும், பகலோன் இறையவன் – பகலோனென்றும் இறையவனென்றும் சொல்லப்படுபவனும், நல் ஊழி ஐந்தினுள்ளே – நல்ல ஊழிகள் என்று சொல்லப்படும் நிவிர்த்திகலை முதலிய பஞ்சகலைகளுட்பட்ட ஐவகைச் சங்காரத்துள்ளே, நின்ற ஊழிகள் – நிலைபெற்ற ஊழிக் காலங்கள், அ ஊழியுள் – அந்த ஊழிக்காலங்களுள், செல் ஊழி அண்டத்து சென்ற – சென்ற விடத்து (கழிந்த காலத்து) அண்டங்களினிடமாகவே கழிந்தன, (செல் ஊழி என்றது செல்வுழி என்க). அவ்வூழி உச்சியுள் ஒன்றில் பகவனே –

அவ்வூழிகளின் முடிவில் ஒன்றியுள்ளவன் சிவபெரு மானே ஆவர் என்றவாறு.

நிவிர்த்திகலை, பிரதிட்டாகலை, வித்தியாகலை, சாந்திகலை, சாந்தியதீதகலை என்னும் ஐந்து கலைகளி னும் தத்துவங்களும் புவனங்களும் உள. அவற்றுள், நிவிர்த்திகலையில் அடங்கிய தத்துவ புவனங்களைச் சங்கரிக்கும் கடவுள் பிரமன், பிரதிட்டா கலையில் அடங்கிய தத்துவ புவனங்களைச் சங்கரிக்கும் கடவுள் விட்டுணு. வித்தியாகலையில் அடங்கிய தத்துவ புவனங்களைச் சங்கரிக்கும் கடவுள் உருத்திரன். சாந்திகலையில் அடங்கிய தத்துவ புவனங்களைச் சங்க ரிக்கும் கடவுள் அனந்த தேவர். சாந்தியதீதகலையில் அடங்கிய தத்துவ புவனங்களைச் சங்கரிக்குங் கடவுள் சதாசிவர். இந்த ஐவரும் சிவபெருமான் ஆணையினால் சங்காரத் தொழிலைத் தத்தம் எல்லையளவும் நடாத் துவர். இந்த ஐவகைச் சங்காரத்துள் முடிபாகிய மகா சங்காரத்தைச் செய்யும் சதாசிவரை அதிட்டித்து நிற்கும் கர்த்தாவாகிய பரமசிவனே அவ்வூழிகளின் முடிவில் தனித்து நிற்பவர் என்க.

சதாசிவர் அல்லாத ஏனை நால்வரும் சிவபெரு மானால் நேரே அதிட்டிக்கப்படுதலின்றிச் சிவபெரு மானால் அதிட்டிக்கப்படும் சதாசிவர் அனந்த தேவரையும், அவர் உருத்திரரையும், அவ்வுருத்திரர் விட்டுணுவையும், அவ்விட்டுணு பிரமனையும் அதிட்டித்து நடத்துவர். அதிட்டித்தலாவது நிலைக் களமாகக்கொண்டு செலுத்துதல்; வாயிலாகக் கொண்டு செலுத்துதலுமாம். (411)

புரியும் உலகினில் பூண்டவெட் டானை
திரியுங் களிற்ரெடு தேவர் குழாமும்
எரியும் மழையும் இயங்கும் வெளியும்
பரியுமா காசத்திற் பற்றது தானே. 2533

இ – ள் : புரியும் உலகினில் – (யாவரானும்) விரும்பப்படும் உலகத்திலே, பூண்ட எட்டானை – கொண்டருளும் அட்டமூர்த்தி சொரூபமாக விளங்கும் சிவபெருமானை, திரியும் களிற்றெடு தேவர் குழாமும் – தம் இச்சையிலே திரிவனவாகிய யானைகளோடு தேவர்கள் கூட்டமும், எரியும் மழையும் இயங்கும் வெளியும் – தீயும் மேகமும் சஞ்சரித்தற்கு இடமாக வுள்ள ஆகாயமும், பரியும் ஆகாசத்தில் பற்றது தான் – (ஆகிய எல்லாம் இயங்குதற்குரிய பரம காரணம்) அறிவுப் பெரு வெளியாகவுள்ள அச் சிவபெருமானையே பற்றுக் கோடாகக்கொண்டு நிகழ்வதாம் என்றவாறு.

புரிதல்-விரும்புதல். புரியும்-இறைவனால் தோற்று விக்கப்பட்ட எனினுமாம். எட்டான்–எட்டு வடிவங் களையுடையான். எட்டப்படாதவன் என்று தொனித்த லும்காண்க. களிறு – ஆண்யானை. தேவர்குழாம் – முப்பத்து முக்கோடியாகவுள்ள தேவர் கூட்டம். எரி – தீ. மழை – மேகம். பரியும் ஆகாசம் – பரமா காசம். 'ஒன்றும் நீயல்லையன்றி ஒன்றில்லை' என்ற வாக்குங் காண்க. சிவபெருமான் திருவடியை வழிபடு தலே நல்லறமாம். அவன் திருவடியை மறந்து செய்வன வெல்லாம் வீண்செயல்களாம் எனக் குறித்தபடி. (412)

ஊறு மருவி யுயர்வரை யுச்சிமேல்
ஆறின்றிப் பாயும் அருங்குளம் ஒன்றுண்டு
சேறின்றிப் பூத்த செழுங்கொடித் தாமரைப்
பூவின்றிச் சூடான் புரிசடை யோனே. 2584

இ - ள் : ஊறும் அருவி உயர் வரை உச்சிமேல்- பரந்து திரியும் அருவியாகிய இந்திரியங்களுக்கு எட்டாது மேல் உள்ள இடத்திலே, ஆறு இன்றி பாயும் அரு குளம் ஒன்று உண்டு -(தனக்கு வருவாய் ஆகிய) நதியின்றி (த்தனது கருணைவெள்ளமே எல்லா உயிர்ப் பயிர்களுக்கும்) சென்று பாயத்தக்க (திருவருட் சத்தியாகிய) அரிய குளம் ஒன்று உள்ளதாம், சேறு இன்றி பூக்கும் செழு கொடி தாமரை - (மாயையாகிய) சேற்றினது சம்பந்தமின்றிச் சதானந்தம் ஆகிய வளப்பமுடைய கொடியினையுடைய தாமரை மலராநிற்கும், (ஆகலின்) பூ இன்றி சூடான் புரி சடையோன்-அப்பூவினையன்றி வேறுமலரைக் கட்டமைந்த சடையினையுடைய சிவபெருமான் அணியமாட்டான் என்றவாறு.

அப்பூவினை அறிந்து சூடும் சிவஞானிகளே சிவமாந்தன்மைப் பெருவாழ்வடைவார் என்பது குறிப்பெச்சம்.

இங்கே வரையுச்சி என்றது புருவ நடுவை, தாமரை என்றது சுழுமுனை முடிவிலுள்ள ஆயிர இதழ்க் கமலத்தை என்க. சுழுமுனையின் உச்சி மதிமண்டலம் எனவும்படும். மதிவட்டம், சகத்திராரம், பிரமரந்திரம், ஆஞ்ஞாஸ்தானம் என மறுபெயர்கள் உண்டு. (413)

ஒன்றும் இரண்டும் ஒருங்கிய காலத்து
நின்றும் இருந்தும் நிலம்பல பேசினும்
வென்று மிருந்து விகிர்தனை நாடுவர்
சென்றும் இருந்தும் திருவுடை யோரே. 2535

இ - ள் : ஒன்றும் இரண்டும் - முக்கரணங்களும், ஒருங்கிய காலத்து - தம்வசப்பட்டு ஒடுங்கி நின்ற காலத்து. நின்றும் இருந்தும் நிலம்பலபேசினும்- நின்றும் இருந்தும் உலகத்திலே பலவற்றைப் பேசிக் கொண்டிருப்பினும், வென்றும் இருந்தும்-ஐம்புலன்களையும் சேட்டையறும்படி வென்றிருந்து, விகிர்தனை நாடுவர் - சிவபெருமானையே நாடிக்கொண்டிருப்பர். சென்றும் இருந்தும் திருவுடையோர்-அவர்களே (எத் தொழிலைச் செய்து) சென்றும் (ஏதவத்தைப்பட்டு) இருந்தும் சிவஞானிகளேயாவர் என்றவாறு.

சிவஞானமே திரு. மெய்த்திரு, மெய்ப்பொருள். "எத்தவத்தைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும் முத்தர் மனமிருக்கும் மோனத்தே" என்றதுங் காண்க.

## 32. நவாவத்தை - நவாபிமானி

இப்பகுதி உபநிடதத்திற் குறிக்கப்படும் நனவு, கனவு, உறக்கம், துரியம் என்னும் அவத்தைகள் நான்கனுள் கீழ் உள்ளவை ஒரோவொன்று மும் மூன்றாக ஒன்பது அவத்தைகள் ஆதலும், அவற்றின் அதிதெய்வங்களின் பெயரும், அவற்றால் வரும் பயன் முதலியனவும் உணர்த்துகின்றது.

நவம் - ஒன்பது ; அவத்தை - உயிரின் உணர்வு நிலைகள். அபிமானி - உணர்வு நிலைகள் தோறும்

உயிரையும் அதற்குச் சார்பாக உள்ள தத்துவங் களையும் உடனின்று செலுத்தும் அதிதெய்வம்; அஃதாவது உலகெலாமாகி, வேறாய், உடனுமாய், ஒளியாய் ஓங்கும் சிவசத்தியின் கூறு. அஃது, அது அதுதான் என, வேறு காணப்படாமல், உடனின்று செலுத்துவதாதல் பற்றி அபிமானி எனப்பட்டது.

தொற்பத விசுவன் றைசதன் பிராஞ்ஞன்
நற்பத விராட்டன்பொன் கெற்பனவ் யாகிர்தன்
பிற்பதஞ் சொல்இதையன் பிரசா பத்தியன்
பொற்புவி சாந்தன் பொருதபி மானியே. 2536

கருத்து : இப்பாட்டு ஒன்பது உணர்வுநிலைகளின் அதிதெய்வம் ஆவார் இவர் என உணர்த்துகின்றது.

பொழிப்புரை : விசுவன் முதலிய ஒன்பதின்மர் கண்டு எடுத்துக் கொண்ட உணர்வுநிலைகளுக்கு முறையே பொருத்தப்படும் அதிதெய்வம் ஆவர் என்றபடி.

விசேடக்குறிப்பு : ஒளிக்கதிர் தனித்துக்காணப் படுவதில்லை; யாதேனும் ஒரு பொருள்மேல் பட்டு, அதனைக் காட்டுமுகத்தால் தானும் காணப்படும். அது போல, உயிரின் இருப்பும் தனித்து அறியப்படுவ தில்லை; யாதேனும் ஒருபொருளை அஃது அறியும் போது. அறியப்படுபொருள் (ஞேயம்), அறிவு (ஞானம்). அறியும் உயிர் (ஞாதா) எனத் தன் இருப்பு உணரப்படுவது,

உயிர்க்குச் சார்பாய் உள்ள பொருள் மூன்று; அவை மலம், மாயை, திருவருள் என்பன.

இவற்றை முறையே இருள், மருள், அருள் எனக் கூறலாம். இதனால், உயிர்க்கு அடிப்படை உணர்வு நிலைகள் (காரண அவத்தைகள்) மூன்று என நூல்களுள் கூறப்படும். உயிர் இருளில் அழுந்தி நிற்கும் நிலை அறியாமை நிலை. இந்நிலையில் உயிர் மாயையின் காரியங்களோடு இயைவதின்றி மலத்தில் மட்டும் அழுந்துதலின், இது கேவல அவத்தை எனப்படும். கேவலம் – தனிமை. பாட்டில் 'தொல் பதம்' என்னும் தொடர், தோற்றமில் காலமாக இருந்து வரும், பண்டைய நிலையாகிய கேவல நிலையைக் குறிக்கின்றது.

இனி, இம்மலத்தின் வலியை மெலிவித்து, உயிரை அதன் பிடிப்பினின்று விடுத்தற் பொருட்டு, முதல்வன், மாயையைக் காரியப்படுத்தி, அதன் காரியங்களாகிய தனு, கரணம், புவனம், போகம் என்பவற்றோடு உயிரைச் சேர்த்துவன். இங்ஙனம் சேர்த்தப்பெற்று அறிவு விளங்கி உயிர் தொழிற்படும் நிலை சகல அவத்தை எனப்படும். இது மருளில் (மாயையில்) அழுந்தும் நிலை. மாயையின் காரியங்களுள் முதன்மையாக நிற்பது கலை என்னும் தத்துவம். அது மலத்தின் தடையைச் சிறிது நீக்கி உயிரைச் செயற்படுத்தி. அதன் அறிவாற்றலைப் புத்தியிற் செலுத்துவது. இக்காரணம் பற்றி மருளில் அழுந்தும் நிலை சகலம் எனப்பட்டது. சகலம் – கலையொடு கூடியது. இந்நிலை, பாட்டில் நற்பதம் எனப் பட்டது. இருளில் அழுந்திய கண்ணுக்கு அதனை நீக்கிப் பொருள்களைக் காட்டும் விளக்குப்போல, இந் நிலையில் மாயையின் காரியங்கள் உயிர்க்கு உதவி,

நன்மை தருதலின், 'நற்பதம்' எனப்பட்டது. மலப் பிணிக்கு மருந்துபோல அமைதலின், 'நற்பதம்' என்றார் எனினும் பொருந்தும்.

இனி, 'பிற்பதம்' என்றது இவ்விரண்டிற்கும் பின் விளையும் நெறி; அஃதாவது, திருவருள் ஒளி பெற்று, அதனைச் சார்ந்து ஒழுகும் நெறி. பதம் – நெறி; நிலை எனினும் பொருந்தும். இந்நெறி (அல்லது நிலை) பாசத்தின் நீங்கிச் செல்லும் நெறியாதலின். இது சுத்தநிலை, நின்மல அவத்தை, தூநெறி என்னும் தொடர்களாற் குறிக்கப்பெறும்.

இம்மூன்றையும், பிறப்புட்பட்டு நிற்கும் சகல நிலையிலிருந்தே நாம் முன்னும் பின்னும் சேர்த்து அறிகின்றோம். ஆதலால், இவை முறையே சகலத்திற் கேவலம், மாசகலம், சுத்தம் எனக் குறிக்கப்படும்.

இவை ஒரோவொன்றில் மும்மூன்று நிலைகள் பகுத்து உணரப்படுதலின், அவத்தைகள் ஒன்பது ஆதலும், அம்முறையே மும்மூன்று அபிமானிகள் கூறப்படுதலும் ஓர்ந்து உணர்க. பொருத்து அபிமானி என்பது தகர ஒற்றுக் குறைந்து நின்றது.

'பொற்புவி' மல மாயை வினைகள் நீங்கித் திருவருள் ஒளி வளர் நிலம். செம்பு களிம்பின் நீங்கிச் செம்பொன் ஆதல்போல, உயிர் பாசத்தின் நீங்கி அருளொளியில் முழுகி நிற்கும் நிலையாதல் பற்றி, இது பொற்புவி எனப்பட்டது. இவ்வொன்பதாம் நிலைக்கு அதிதெய்வம் 'சாந்தன்'; சாந்தியைத் தருவோன்; அஃதாவது, துன்பநீக்கம் தருவோன்.

பொற்புவிக்கு உரிய சாந்தன் என விரிக்க.

விசுவன்–உலகமுகப் படுத்துவோன் ; விசுவம் – உலகு. தைசதன் – அகவொளி தருவோன்; தேசசு – ஒளி. பிராஞ்ஞன்–அறிவைத்தருவோன்; பிரஞ்ஞை– அறிவு. இம்மூவரும் கேவலத்தில் நிகழும் நனவு கனவு உறக்கங்களுக்கு அபிமானிகள்.

விராட்டன்–உலக உருவினன். பொன்கெற்பன்– இரணியகருப்பன்; கருப்பம் எனப்படும் உள்ளத்தை நல்லதாகவும் ( ஹிதமாகவும் ) விரும்பத்தக்கதாகவும் (ரமணீயமாகவும்) ஆக்குவோன். அவ்வியாகிருதன்– பிரிக்கப்படாதவன்; முக்குண விளக்கமாகிய இன்பத் துன்ப மயக்கங்களில் உயிரை அழுந்தச் செய்வோன். இம்மூவரும் மாசகலத்தில் உள்ள நனவு, கனவு. உறக்கம் என்பவற்றின் அபிமானிகள்.

இதையன் – உள்ளக் குகையில் உள்ள பொன் வண்ணன்; பிரசாபதியன் – உயிர்களைக் காப்பவன். இவ்விருவரும் பொற்புவி சாந்தனும் சுத்தாவத்தைக் கண் நனவு, கனவு, துரியங்களின் அபிமானிகள். சுத்தாவத்தையில் உறக்கம் எனக் கூறும் மரபு இல்லை

இப்பெயர்கள் வேதங்களில் வருபவை; முதல் மூன்றும் மூண்டக உபநிடதத்தில் கூறப்பட்டவை. (415)

**நவமா மலத்தை நனவாதி பற்றிற்**
**பவமா மலங்குணம் பற்றறற்றுப் பற்றுத்**
**தவமான சத்திய ஞானப் பொதுவில்**
**துவமாந் துரியம் சொரூபம தாமே.** 2537

க–து : இப்பாட்டு உயிர் அவத்தைப் படுதலால் பெறும் பயன் உணர்த்துகின்றது.

பொ–ரை : நனவு முதலாகிய மூன்றவத்தைகள் மூவகையிற் படுதலால், உயிர், பிறவிக்குக் காரண மான மலப்பற்றையும், மாயைப்பற்றையும் அறுத்துக் கொள்ளும்; மலம் காரணமாக வரும் இருவினை போலப் பிணித்தலின்றி, அவற்றைச் சமமாக நோக்கி உவர்த்தலை உணர்வில் தோற்றுவிக்கவல்ல தவத்தால் விளையும் மெய்யுணர்வாகிய ஒளிவளர் திருச்சிற்றம் பலத்தில் நிலைபெறும் துரிய அருள் நிலையினை முன்னர்ப்பெற்று, பின் அதனின் மேம்பட்ட தன்னி யல்பு எனப்பெறும் துரியாதீத ஆனந்த நிலையினை உயிர் அடையும்.

வி–கு : சத்திய ஞானப் பொது – மெய்யுணர்வு நிலையாகிய திருச்சிற்றம்பலம்: அஃதாவது, துரிய அருள் நிலை (Dynamic identity with the inner presence) துவம் – அசையாநிலை, நிலைபேறு; இருமை என உரைத்து, உலக முகப்படுதலும், உள்முகப்படுதலும் ஆகிய இரண்டினையும் உடைய துரியம் என உரைப் பினும் அமையும்.

துரியம் ஆம், சொருபமது ஆம் என முன்னரும் கூட்டுக.

தவம் – சிவதன்மம், சிவயோகம். சிவஞானம் என்பவை, சிவதன்மம் சரியை கிரியை என இரு வகைப்படும்.

நனவாதி நவாவத்தை இன்ன எனக் கூறப்பட வில்லை, அவற்றைச் சீவநனவு, கனவு, உறக்கம்; பர

நனவு, கனவு உறக்கம்; சிவநனவு, கனவு, உறக்கம் எனக் குறித்தல் வழக்கமாக உள்ளது. பரம் என்னும் சொல் திருவருளைக் குறிக்கும் என்பதும் மரபாக உள்ளது. ஆயினும் இவற்றை முன்னர்க் கூறியபடி கேவல, சகல, சுத்தம், பற்றியவை எனக் கொள்வது பொருத்தம்.

குணவடிவத்தில் மாயை உயிருக்குப் பந்தமாதல் பற்றி அது குணம் என உபசரிக்கப்பட்டது

மலத்தின் அழுந்தும் நிலையில் உளவாகும் நனவு, கனவு, உறக்கம் என்பவை பொதுவாக யாவரும் அறிந்தவை. பேருறக்கம், உயிர்ப்படங்கல் என மேலும் இருநிலைகள் இருப்பினும், உண்மைகளைப் பருவட்டாக எளிதின் உணர்ந்துகொள்ளுதற் பொருட்டு, அவை மூன்றில் அடக்கிக் கூறப்பட்டன எனக் கொள்க.

இனி, விழிப்பு நிலையில் ஒரு பொருளை அறியலுறும் போது, நாம் முதற்கண் ஐம்பொறிகளுள் ஒன்றன் வாயிலாக அதனை உண்டு என்னும் அளவில், இஃது ஒன்று தோன்றுகின்றது என அறிகின்றோம். இவ்வறிவு வாயிற்காட்சி எனவும், நிருவிகற்பக்காட்சி எனவும் வழங்கும். இது ஒருபொருள் நம் மனத்தில் தட்டிப் பதிவிக்கும் முதற்பதிவு ஆகும்.

இப்பதிவைப் பற்றிய மனம், அப்பொருள் யாது ஆகலாம் என எண்ணி, இன்னது ஆகலாம் எனவும் இதுவோ அதுவோ எனவும் துணிவு பிறவாது நிற்கும்; பின், அதனை இன்னது எனப் புத்தி நிச்சயிக்கும், மனம் அப்பொழுது பெற்ற பதிவை முன் நினைவு

களோடு சேர்த்து எண்ணுதற்குத் துணையாகத் தன் கண் அடங்கியுள்ள பழைய கருத்துக்களை வெளிப் படுப்பது சித்தம் ; இவற்றிற்கு வேண்டிய எழுச் சியைத் தருவது ஆங்காரம். இங்ஙனம் மனம் முதலிய அகக்கருவிகளால் தரப்படும். "இஃது இன்னது" என்னும் வடிவில் நிகழும் நிச்சய உணர்வு மானதக் காட்சி எனவும் சவிகற்பக் காட்சி எனவும் வழங்கும்.

இச் சவிகற்ப உணர்வைத் தரும் புத்தி, எதிர்ப் பட்ட பொருளின் இயல்பிற்கு ஏற்றபடி சத்துவகுண மாகவோ, இராசத குணமாகவோ, தாமதகுண மாகவோ திரிந்து நிற்கும்.

இங்ஙனம், முக்குணங்களுள் ஒருகுணம் மேம் படத் திரிந்துநின்ற புத்தியை ஆன்ம உணர்வு, இஃது இன்பம், இது துன்பம், இது மயக்கம் என யாதேனும் ஒன்றாக அறிந்து, பின் அக்குணம் தன்மாட்டு மேம் பட்டுத் தோன்றுதலால், யான் இன்புறுகின்றேன், துன்புறுகின்றேன், மயங்குகின்றேன் எனும் மூன்ற னுள் ஒரு நுகர்ச்சியுடையதாகி நிற்கும். இவ்வுணர்வு தன்வேதனைக் காட்சி எனப்படும். இங்கு விளக்கப் பெற்ற வாயிற்காட்சி, மானதக்காட்சி, தன் வேதனைக் காட்சி என்னும் மூன்று உணர்வு நிலைகளே மாயையில் அழுந்தும் மாசகலத்தில் நிகழும் நனவு. கனவு, உறக் கம் எனக்கொள்க.

இனிச் சற்குருவின் திருவருளால், அறியாமை, அறிவு என்னும் இவ்விரண்டு வகை உணர்வுகளும் கழல நின்று, திருவருள் ஒளியை உண்டென்று

தெளிந்தும், அதன் செயலன்றித் தன் செயல் என்பது ஒன்றும் இல்லையெனத் தெளிந்தும், நீர்வழிப்படும் புணைபோல, திருவருளோடு ஒன்றி அதன்வழி நிற்றல் என்னும் ஒளிநெறியில், இங்ஙனம் நிகழும் மூன்று உணர்வு நிலைகள் அருளில் அழுந்தும் நிலைகளாகிய நனவு, கனவு, துரியம் என்க. இவை சிவரூபம், சிவ தரிசனம், சிவயோகம் எனவும் குறிக்கப்பெறும்.

சிவயோகம் எனக் குறிக்கப்பெற்ற துரியநிலையே, பாட்டில் 'சத்திய ஞானப்பொதுவில் துவமார் துரியம்' எனக் குறிக்கப்பெற்றது. இஃது ஆன்மசுத்தி எனவும் பெறும். இதற்கு மேம்பட்ட சிவபோகம். ஆன்ம லாபம் எனக் குறிக்கப்பெறும் பரமுத்தி நிலையே சொரூபம் எனப் பாட்டில் குறிக்கப்பெற்றது. இஃது 'அயரா அன்பின் அரன்கழல் செலுமே' எனச் சிவஞான போதத்தில் குறிக்கப்பெற்ற முடிநிலை. இது துரியாதீத இன்புறுநிலை (**Static identity with the inner presence**) எனக் குறிக்கப்பெறுவது.

சொரூபம் – சுவரூபம், தன்னியல்பு.

இனி, மாண்டூக்கிய உபநிடதத்தில் கூறப்படும் பொருள் சுருக்கித் தரப்படுகின்றது ;

ஓம் என்பதே அறியப்படும் இஃதெல்லாம் ; சென்றதும், நிகழ்வதும், வரப்போவதும், முக்காலத்திற்கும் அப்பாற்பட்டதும் ஓங்காரமே.

இஃதெல்லாம் பிரம்மம் (பெரும்பொருள்) ; இவ்வான்மா பெரும்பொருள் ; இவ்வான்மா நான்கு அடி (பாதங்)களை உடையது.

முதலடி பருப்பொருளை நுகரும் வைசுவாநரன் (விசுவத்தை நுகரும் நரன்); நனவு இடம்; புறஉணர்வு.

இரண்டாம் அடி தனிமையில் நுகரும் தைசதன்; கனவு இடம்; அக உணர்வு;

இவற்றுக்கு ஏழு உறுப்புக்களும், பத்தொன்பது முகங்களும் உள்ளன.

மூன்றும் அடி இன்பம் நுகரும் பிராஞ்ஞன்; உறக்கம் இடம்; முகம் ஒன்றே (சித்தம்); கனவும், எவ்விருப்பமும் இங்கு இல்லை. இவனே சருவேசுவரன்; சருவஞ்ஞன், உயிர்க்குயிராயிருந்து நடத்துவோன்; அனைத்திற்கும் பிறப்பிடம்; தோற்றமும் ஈறும் ஆகியோன்.

நான்காம் அடி எவற்றையும் கடந்த சாந்தன், சிவன், துரியன்; அவனே (பரம) ஆன்மா; அறியத் தகுந்தவன்.

"ஓங்காரமும் நான்கு அளபு (மாத்திரை) களை உடையது; அகாரமே நனவை இடங்கொள்ளும் வைசுவாநரன்; உகாரமே கனவை இடங்கொள்ளும் தைசதன்; மகாரமே உறக்கத்தை இடங்கொள்ளும் பிராஞ்ஞன்,

நான்காவது அளபு இல்லாதது; அஃது, இரண்டற்றதும், உலகு ஒடுங்கும் இடமும், மாற்றம் முனங்கழிய நின்றதும் ஆகிய சிவம்.

இங்ஙனம் ஓங்காரம் ஆன்மாவே; இங்ஙனம் அறிபவன் தன்னால் தன்னை அடைந்தவன் ஆவன்.

இதில் 7 ஆம் மந்திரத்தில் " சாந்தம் சிவம் அத்வைதம் சதுர்த்தம் மந்யந்தே " என்பதில் வரும் ' சாந்தம் ' என்பதே " பொற்புவி சாந்தன் ". (416)

சிவமான சிந்தையிற் சீவன் சிதைய
பவமான மும்மலம் பாறிப் பறிய
நவமான வந்தத்தின் நற்சிவ போதம்
தவமா மவையாகித் தானல்ல வாமே. 2538

க — து : இது மேலே ஒன்பதாம் நிலையாகக் குறித்த துரிய நிலையை விரித்து உணர்த்துகின்றது.

பொ • ரை : எல்லாம் சிவம் என்னும் கருத்தினால் யான் எனது என்னும் செருக்கற்று, சாதனையாக வரும் மலமாயை வல்வினை, ஒளிமுன் இருள்போல, ஓடி முற்றிலும் நீங்கும். மேற்கூறிய ஒன்பது உணர்வு நிலைகளுள் இறுதி நிலையாகிய சிவதுரியத்தில் திருவருள் ஒளி, செய்தனவே தவமாம்படி மேம்படுதலால், அந்நிலையில் அம்முத்தன் செயல் எல்லாம் அவனுடைய தன்றிச் சிவச்செயலாய் நிகழும். (417)

முன்சொன்ன வொன்பானின்
முந்நூறு தத்துவம்
தன்சொல்லில் எண்ணத்
தகாவொன்பான் வேறுள
பின்சொல்ல லாகுமிவ்
விரொன்பான் பேர்த்திட்டுத்
தன்செய்த ஆண்டவன்
முன்சிறந் தானே. 2539

க — து : இஃது உணர்வுநிலை வேறு வேறு ஆதற்குக் காரணம் உணர்த்துகின்றது.

பொ—ரை : முன்னர்க்கூறிய உணர்வு நிலைகளில் முற்பட்டுத் தோன்றும் தத்துவம் ஒன்பது உள்ளன: தன்விளக்கத்தினால் எண்ணிக் கணக்கிட முடியா தவை ஒன்பது வேறு உள்ளன. ஆசான் உணர்த்திய பின் அறியப்படுவனவாகிய இப்பதினெட்டுத் தத்து வங்களையும் பக்குவம் எய்தி உறுதிமொழியைக் கடைப் பிடிக்கும் உயிர்க்கு வேறாகக் காட்டித் தன் வண்ணமாகச்செய்த இறைவன், அவ்வுயிரென ஒன்று தோன்றாதபடி தான் ஒருவனே உளன் எனும்படி உயிரைத் தன் பின் ஆம்படி மறைத்துத் தான் முன் நின்றான்.

வி—கு : 'முன் உறு தத்துவம் ஒன்பான் உள: தன் சொல்லில் எண்ணத்தகாதன ஒன்பான் உள' என ஒன்பான் உள என்னும் தொடரை முன்னும் கூட்டி உரைக்க. வேறு உள என்றமையாலும், ஈரொன்பான் என்றமையாலும் இது விளங்கும்.

முன்னுறு தத்துவம் ஒன்பான் என்பவை ஐம் பொறிகளும் மனம் புத்தி ஆங்காரம் சித்தம் என் பனவுமாம். அறிவுபற்றி உணரப்படுதலின் தொழிற் பொறி வேறு எண்ணாராயினர். மேல் எடுத்துக்காட் டிய மாண்டூக்கியத்தில் பத்தொன்பது முகம் என்றது அறிவுப்பொறி ஐந்து, தொழிற்பொறி ஐந்து, பிராணன் முதலிய வாயுக்கள் ஐந்து, மனம் புத்தி ஆங்காரம் சித்தம் என்பவை நான்கு ஆகிய இவற்றை. அவற் றுள் வாயுக்கள் தாத்துவிகங்களாதல் காண்க.

வேறு ஒன்பான் என்றது மாயை. காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்னும் ஆறும், இலய போக அதிகாரம் என மூன்றாய் அடங்கும் சிவதத்துவங் களும் எனக்கொள்க. வித்தியா தத்துவம் என எண் ணப்படும் ஏழனுள் புருடன் வேறு தத்துவம் அன் மையின் அதனை விடுத்து ஏனை ஆறனையும் கொண் டார் என்க. இங்ஙனம் தத்துவங்கள் உள என்றமை யால் அவற்றின் தொழிற்பாட்டில் கூடுதல் குறைதல் பற்றி வேறு வேறு உணர்வு நிலைகள் உளவாயின என்பதும், இவற்றின் வேறாய்ச் சார்ந்ததன் வண்ண மாய் நிற்கும் ஆன்மா தத்துவங்களின் வேறு என்ப தும் உணர்த்தியது ஆயிற்று.

"சேர்வார் தாமே தானகச் செயுமவன்" என்னும் ஆளுடைய பிள்ளையார் திருமொழியும், "அடியேன் உன் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்புரியாய்... முன் நின்றே" என்னும் ஆளுடைய அடிகள் திருவா சகமும் கருதத்தக்கவை. முதற்பொருள் உயிரைத் தன்கண் அடங்கக்கொண்டு தான் சிறத்தல் பற்றியே சிறப்பென்னும் செம்பொருள்' என்றார் திருவள்ளுவர்.

**உகந்தன வொன்பது மைந்தும் உலகம்**
**பகர்ந்த பிரானென்னும் பண்பினை நாடி**
**அகந்தெம்பி ரானென்ப னல்லும் பகலும்**
**இகந்தன வல்வினை யோடறுத் தானே.** 2540

க-து: இது சுத்த நிலையைத் தலைப்படுதற்கு உரியதோர் உபாயம் உணர்த்துகின்றது.

பொ-ரை: ஆகமங்களுள் உயர்ந்தனவாகிய ஒன் பதனையும், மந்திரங்களுள் உயர்ந்த திருவைந்தெழுத்

தையும் உயர்ந்தோர் பொருட்டு உணர்த்தியவன் சிவ பிரான் என்னும் அவன்றன் பரமாத்தநிலையை ஆய்ந் துணர்ந்து, இரவும் பகலும் இடையறவின்றி அகத் தின்கண் உயிர்களைப் பிரியாத தலைவன் என்னும் உண்மையை உணர்ந்து நிற்பேன்; இதனால், உயிரின் வலியைக் கடந்தனவாகிய வலிய வினையோடு கூடிய பிறவி மலைவரை அறுத்தான் இறைவன்

வி – கு : உகத்தல்-உயர்தல்; இகத்தல்–கடத்தல். அகத்து என்பது எதுகைநோக்கி மெலிந்தது.

ஒன்பதும் ஐந்தும் – பதினன்கு எனக் கொண்டு, வித்தைகள் பதினன்கு எனினும் பொருந்தும் ; அவை யாவன வேதம் நான்கு. அங்கம் ஆறு, உபாங்கம் நான்கு.

பகர்ந்த பிரான் – வினைமுதலையன்றிச் செயப்படு பொருள்கொண்டு முடிந்த பெயரெச்சத் தொடரும் ஆகும் ; 'சாஸ்த்ரயோநித்வாத்' ( பி. சூ; 1. 1. 3. ) என்புழிப் போல, பரம்பொருளை (ஆய்ந்தறிதற்குச்) சாத்திரம் மூலமாதலின். ( பரம்பொருள் ) சாத்திரத் திற்கு மூலமாதலின் – என்னும் இருபொருளும் கொள்ளுமாறு போல, ஒன்பதும் ஐந்தும் பகர்ந்த வனும், அவற்றல் பகரப்பட்டவனும் சிவபிரான் என்க.

பிரான் – உயிர் அவத்தைப்படுந்தோறும் பிரியாது உடனிற்போன்.

'ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப் பேர்த்துள்ள வேண்டா பிறப்பு' என உடன்பாட்

டானும் 'ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே.
என எதிர்மறையானும் இறைவனைப் பற்றிய சிந்தனை
யைத் தமிழ் மறைகள் வலியுறுத்துதல் காண்க.

எந்தை ஈசனெம் பெருமான்
ஏறமர் கடவுளென் றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லால்
சென்றுகை கூடுவ தன்றால்
கந்த மாமல ருந்திக்
கடும்புனல் நிவாமல்கு கரைமேல்
அந்தண் பூம்பொழில் சூழ்ந்த
அரத்துறை அடிகடம் அருளே,

என்னும் ஆளுடையபிள்ளையார் திருவாக்கு இப்பாட்
டுடன் வைத்துச் சிந்தித்தற்கு உரியது.

'சிந்திப்பரியன. சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்
தேன் – முந்திப் பொழிவன' என்னும் திருவிருத்த
மும் எண்ணத்தகும்.

அறுத்தான் என்னும் வினைக்குச் செயப்படு
பொருள் அவாய்நிலையான் வருவிக்கப்பட்டது. (419)

நலம்பல காலங் தொகுத்தன நீளம்
குலம்பல வண்ணங் குறிப்பொடுங் கூடும்
பலம்பல பன்னிரு கால நினையும்
நிலம்பல வாறின னீர்மையன் றானே. 2541

கருத்து : இது முதல்வனை நினைத்தற்கு உரிய
காலம், இடம், பயன் என்பனவற்றை உணர்த்து
கின்றது.

பொ – ரை : சான்றோர்கள் அவ்வக்காலங்களில் தொகுத்துக்கூறும் உறுதிகள் பல ; அவர் தொகுத்தன வாகிய பழைய அழகிய தேவகுலமும் பல ; இறைவன் தன் வண்ணத்தை ஒற்றுமையாற் கூடுதலான் வரும் பயன்களும் பல; சொல்லப்படும் இருகாலமும் அவனை நினைத்தற்கு உடம்பில் அமைந்துள்ள இடங்களும் பல; தான் ஆறு இனிய நல்ல இயல்புகளை உடையன்,

வி – கு : தொகுத்தன என்பது நடுவு நிலைத்தீபக மாய் முன்னும் பின்னும் இயைந்து தன்பொருளால் விசேடித்தது.

வண்ணம் – போகியாய், யோகியாய், வேகியா யிருக்கும் நிலைகள், குறிப்பு - ஒற்றுமை. அவ்வவ் வண்ணத்தை ஒற்றித்து நின்று ஒருவன் தன்பால் மேம்பட்டு நிகழநிற்பன். அதற்கு உரிய பயனைப் பெறுவன் என்பது கருத்து.

நிலம் – இதயம், மூலம், புருவநடு, மூக்குநுனி முதலாக யோகநூலுட்கருத்தொன்றுதற்கு உரைக்கப் படும் இடங்கள்.

ஆறு இன் நல் நீர்மை – முற்றறிவு, வரம்பில் இன்பம், இயற்கை உணர்வு, தன்வயம், பேரருள், முடிவில் ஆற்றல் என்பவை. தான் – முதல்வன். முத் தர்க்கு, முதல்வன் தன் ஆறு குணங்களையும், மேம் படுவித்துப் பேரின்பம் எய்துவிப்பன் என்பது கருத்து.

குலம்பல என்றது தலங்கள் தோறும் முதல்வன் தன் வேறு வேறு இயல்பை விளக்கி நிற்கும் கோயில்கள்.

'குறிக ளும்அடை யாளமும் கோயிலும்
நெறிக ளும்மவர் நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்
பொறியி லீர்மனம் என்கொல் புகாததே'

என்னும் அப்பர் அருண்மொழி புடைபட வைத்துச் சிந்தித்தற்கு உரியது. (420)

ஆதி பராபரம் ஆகும் பராபரை
சோதி பரமுயிர் சொல்லுநற் றத்துவம்
ஓதுங் கலைமாயை யோரிரண் டோர்முத்தி
நீதியாம் பேதமொன் பானுட னாதியே. 2542

க — து : இது முதல்வன் பரை, ஆதி என நின்று பல்வகைப் பொருள்களோடும் கலந்து நிற்றலை உணர்த்துகின்றது.

பொ — ரை : எவற்றிற்கும் முற்பட்டதாகிய பரம் பொருள் தன்கண் நின்று தோன்றும் பராபரை, சோதி, பரம், உயிர், வகுத்துக் கூறப்படும் நல்ல தத்துவங்கள், ஓதப்படும் கலைகள், சுத்தம் அசுத்தம் எனப்படும் இரு மாயைகள், ஒப்பற்ற முத்தி என எண்ணப்படும் ஒன்பது வகையோடு ஆதி சத்தி எனவும் நிற்பன்.

வி — கு : ஆதியாகிய பராபரம் என்க. பராபரம் — மேலானவற்றுள்ளும் மேலான முதற்பொருள். பராபரை - உயிர்களுக்கு அருளவேண்டும் என முதல்வன் கண் முதற்கண் எழும் விருப்பம்; அஃது எவ்வகை ஆற்றலுக்கும் மேம்பட்டது ஆதலின், பராபரை எனப்படும். பரையினின்று தோன்றி மலத்தின் வழி

நின்று உயிர்களுக்கு உபகரிப்பது ஆதிசத்தி; அஃது ஏனை எட்டுவகையாகவும் நின்று தொழிற்படும் என்க. சோதி – இயற்கை அறிவாய் ஒளியாய் அகத்தும் புறத்தும் நின்று உபகரிக்கும் நிலை. தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி ( முண்டகம், 2, 2, 11 ) அவன்றன் ஒளியால் இவ்வுலகனைத்தும் விளங்குகிறது – என்னும் உபநிடத உரை கருதத்தக்கது.

பரம் – மேலான துரிய அருள் நிலை.

ஏனைய வெளிப்படை; ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கும் இயல்பில் உயிர் முதலியவற்றோடு கலந்து நின்று செயற்படுத்துவன் என்பது கருத்து.

ஓர் முத்தி – பரமுத்தி நிலை; அதீதமான இன்புறு நிலை. ஆதி – முன்னையது முதல்வன் என்னும் பொருள் பட நின்றது. (421)

தேருத சிந்தை தெளியத் தெளிவித்து
வேரு நரக சுவர்க்கமு மேதினி
ஆருப் பிறப்பு முயிர்க்கரு ளால்வைத்தான்
வேருத் தெளியார் வினையுயிர் பெற்றதே. 2543

கருத்து : இது முதல்வன் உயிர்களைக் கேவலத்தின் நீக்கிச் சகலத்திற் கொணர்ந்தது அவன் அருளால் எனவும், இதனை ஓர்ந்து உணர்ந்து வினைத் தொடர்ச்சியை அறுத்துக்கொள்வதே கல்வியின் பயன் எனவும் உணர்த்துகின்றது.

பொ – ரை : மூலமலத்திலழுந்தி, கருப்பையிற் கிடந்த குழவியைப்போல் அறிவிழந்து நின்ற உயிர்களை, முதல்வன் தனு கரணம் என்பவற்றைக்

கொடுத்து நிலம், நரகம், சுவர்க்கம் என்பவற்றில் தோன்றித் தொடர்ச்சியான பிறப்புக்களை வினைக் கீடாகப் பெற்று இன்பத்துன்பம் உறுமாறு, தன் அருளால் வைத்தான். இதனைத் தெளிந்து கொள்ளுதல் அரிதாயினும், அளவைகளானும் பொருந்துமாற் றானும் ஒருவர் தம் அறிவில் தெளிதல்வேண்டும்; இங்ஙனம் சிறப்பாகத் தெளியமாட்டாதார் உயிர்த்தலைப் பெற்றது மேலும் வினையைப் பெருக்கிக் கொள்ளவே ஆம்.

வி – கு : ஒருவன் தனக்கு உண்டாகும் உணர்வு நிலைகளில் வைத்துப் பிறவியின் நோக்கமும் பயனும் மறு பிறப்பும் வினைப்பயனும் சுவர்க்க நரகங்களின் இயல்பும் ஆய்ந்து தெளிந்து வினைப்பயன் தொடராத உயர்நிலையில் நிற்றல்வேண்டும் என்பது கருத்து.

உயிர் – உயிர்த்தல். தேறுத சிந்தை தெளியத் தெளிவித்து வேறுத் தெளியார் எனக் கொண்டு கூட்டுக. வேறு ஆம் நரக சுவர்க்கமும் மேதினிப் பிறப்பும் எனவே, முன்னையவற்றில் சென்று பிறத்தல் பெற்றும். வேருத் தெளிதல் – சிறப்பாக உணர்ந்து கடைப்பிடித்து ஒழுகுதல். (422)

ஒன்பா னவத்தையுள் ஒன்பா னபிமானி
நன்பாற் பயிலும் நவதத் துவமாதி
ஒன்பானில் நிற்பதோர் முத்துரி யத்துறச்
செம்பாற் சிவமாதல் சித்தாந்த சித்தியே. 2544

க – து : இஃது இவ்வதிகாரப் பொருளைத் தொகுத்துச் சுட்டி முடிக்கின்றது,

பொ — ரை : மேற்கூறிய ஒன்பது அவத்தை, அவற்றில் உடனிற்கும் அதிதெய்வம், அவ்விடங்களில் விளக்கமாகத் தொழிற்படும் தத்துவம் முதலாக விதித்த ஒன்பது அவத்தைகளில் மும்மூன்றன் இறுதியில் நின்ற மூன்று துரிய நிலைகளிலும் ஆணவம், மாயை என்பவற்றில் அழுந்தாமல் மாறுபடாத பேரின்ப ஒளியாகிய சிவத்தில் அழுந்திச் சிவமாகவே நிற்றல் சித்தாந்த ஞானத்தின் சிறந்த முடிநிலைப் பேருகும்.

கேவலம் சகலம் என்பவை நிகழாதபடி சுத்த நிலைக்கண் துரிய அருள்நிலை, துரியாதீத இன்புறு நிலைகளில்நின்று, பின் அதீத இன்புறு நிலையில் அசைவின்றி நிற்றலே முடிநிலைப்பேறு என்றபடி. (423)

## 33. சுத்தாசுத்தம்

உயிரும் அதனுடைய அகக்கருவியாகிய மனமும் தூய்மையுறுமாறும் அதனை உறுதவாறும் உணர்த்துதலின், இப்பகுதி சுத்தாசுத்தம் என்னும் பெயர்த்தாயிற்று. சுத்தம் — தூய்மை ; அஃதாவது, உயிர்க்கு மலமாயை கன்மங்களின் நீங்குதலும், மனத்திற்கு அழுக்காறு அவா வெகுளி மயக்கம் இன்மையும் ஆகும். அசுத்தம் — வாலாமை, தூய்மை எய்தாமை.

நாசி நுனியினி னுன்மூ விரலிடை
ஈச னிருப்பிட மியாரு மறிகிலர்
பேசி யிருக்கும் பெருமறை யம்மறை
கூசி யிருக்குங் குணமது வாமே. 2545

க – து: இது மேல் 2541 ஆம் மந்திரத்தில் "நினையும் நிலம்பல" என்றவற்றுள் ஒருநிலம் உணர்த்துகின்றது.

பொ – ரை: மூக்கு நுனியின்கீழ் பன்னிரண்டு விரலளவில் நம்மை ஆளும் முதல்வன் வெளிப்படும் இடம் உள்ளது என்பதை யாரும் பொருட்படுத்த வில்லை. இவ்வுண்மையைப் பெரிய மறை கூறி அமை யும்; அது குறிப்பாகவும் மறைவாகவும் உண்மை களைச் சொல்லுதலன்றி அதனை அடைதற்குரிய நெறி முறைகளை வகுத்துக்கூற நாணும்; அஃது அதன் இயல்பு.

வி - கு: ***"நாசிக் கதோமுகம் பன்னிரண் டங்குலம்***
***நீசித்தம் வைத்து நினையவும் வல்லையேல்***
***மாசித்தி மாயோகம் வந்து தலைப்பெய்தும்***
***தேகத்துக் கென்றும் சிதைவில்லை யாகுமே"***

***"சோதி யிரேகைச் சுடரொளி தோன்றிடிற்***
***கோதில் பரானந்தம் என்றே குறிக்கொண்மின்"***

என்னும் திருமந்திரங்களை ஒப்பு நோக்குதல் பயன் உடைத்தாம்.

ஒருவன் உயிர்க்கும்போது, அவ்வுயிர்ப்புப் புறம் போதருமாறும் மீள உள்புகுமாறும், மூக்கு நுனியில் கண்களின் பார்வையை நிறுத்தி நோக்கி, கருத்து ஒருங்கின், குறிப்பிட்ட எல்லையில் ஒளி காணப்படும் என்பது கருத்து: மனம் ஒருங்குதலின் வாயுவும் மெள்ள ஒருங்கும்.

இங்குக் குறிப்பிடும் நிலனை இதயம் எனக் கொள்வாரும் உளர். (424)

கருமங்க ளொன்று கருதுங் கருமத்
துரிமையுங் கன்மமு முன்னும் பிறவிக்
கருவினை யாவது கண்டகன் றன்பிற்
புரிவன கன்மக் கயத்துட் புகுமே 2546

க—து: இஃது ஒருவன் செய்யும் வினையாற் பற்றப் படாதிருத்தற்கு உரிய உபாயம் கூறுகின்றது.

பொ—ரை: ஒருவன் செய்யும் செயல்களுள், ஒருபயனைக் கருதிச்செய்யும் செயலில் உரிமையும், அதனால் விளையும் புண்ணிய பாவமும், மேலுமுண்டு எனக்கருதி உணரப்படும் பிற்பிறவிக்கு வாயிலாகிய, காணுதற்கியலாத விளைவினையுமாகும்; இங்ஙனம் ஆதலைத் தெளியவுணர்ந்து, அதன் பயனிற் பற்று வையாது, முதல்வனது ஆணை எனக் கருதி அன்பி னுல் விரும்பி எப்பொழுதும் செய்யப்படும் செயல்கள், வினையழிவின் பாற்படும்; அஃதாவது, வினையாக நின்று தடைசெய்யாமல் மெய்யுணர்விற்கு வாயில் ஆகும்.

வி—கு: ஒன்று—ஒரு பயன். ஒன்று கருதும் கருமம் — பயன் கருதி யான் எனது என்னும் செருக்கோடு விருப்பு வெறுப்புக்களாற் செய்யும் வினை. உரிமை — வினைப்பயனைப் பெறும் உரிமை. கருதும் கருமம்—ஆகாமியம் எனப்படும் வருவினை. கன்மமும்— என்னுமிடத்தில் சஞ்சிதம், ஆபூர்வம் எனப்படும் புண்ணிய பாவங்கள். அருவினை — அருவாய் இன்பத்

துன்ப நுகர்ச்சியை விளைவிக்கும் பிராரத்தம் (ஊழ்). உன்னும் பிறவி – வினையின் விளைவாகவும், அதன் காரணமாகவும் உள்ளது எனக் கருதி உணரப்படும் பிறவி.

பிறவிக் கருவினை எனக்கொண்டு பிறவிக்குக் கருவாய் (மூலமாய்) உள்ள வினை எனினும் பொருந்தும்.

அகன்று அன்பிற் புரிவன – வினைப்பயனில் பற்றின்றி முதல்வன் ஆணையெனக் கருதி அன்பின் வழிப்பட்டுச் செய்வன. புரிவன – விரும்பி எப் பொழுதும் செய்யும் செயல்கள்.

கருமக்கயம் – கருமக்ஷயம், வினை அழிவு அல்லது தேய்வு.

இப்பாட்டு வினைமாசு கழுவுமாறு கூறுதல் காண்க.

"மனிதனே! விதித்த கருமங்களைச் செய்து கொண்டே ஒருவன் இங்கு நூறாண்டு வாழ விரும்புக! இதுவே உனக்கு வழி; கன்மப்பற்று தொடராமைக்கு இதனினும் வேறு வழி இல்லை (குர்வந்நேவேஹ கர்மாணி ஜிஜீவிஷேச் சதம் ஸமா: । ஏவம் த்வயி நாந்ய தேதோ ஸ்தி நகர்ம லிப்யதே நரே ॥)" என்னும் ஈசாவாசியம் 2-ஆம் மந்திரமும்.

"இம்மைச் செய்தது மறுமைக்கு ஆமெனும் – அறவிலை வணிகன் ஆஅய் அல்லன் – பிறருஞ் சான்றோர் சென்ற நெறியென–ஆங்குப் பட்டன்றவன்

கைவண்மையே" என்னும் புறம் - 134 ஆம் பாட்டும் இம்மந்திரத்தோடு ஒப்பு நோக்கத்தக்கன. (425)

மாயை மறைக்க மறைந்த மறைப்பொருள்
மாயை மறைய வெளிப்படும அப்பொருள்
மாயை மறைய மறையவல் லார்கட்குக்
காயமும் இல்லை கருத்தில்லை தானே. 2547

க - து: இது மாயைப்பற்று அறுமாறு கூறுகிறது.

பொ - ரை: மலமும் மாயையும், இருளும் விளக்கும் போல்வன எனினும், மாயையின் காரியங்கள் உயிரைப் புறநோக்கு உடையதாய்ச் செய்து, புறப் பொருளையே காட்டி நிற்றலின், உயிர் தன்னையும் அறியாது, தலைவனையும் அறியாது; ஆதலால், மறைகளால் விளக்கப்படும் முதல்வனை மாயை மறைக்கின்றது என்பது விளங்கும். இனி மாயையின் காரியமாகிய பருவுடல், ஐம்பொறி, அகக்கருவி முதலியவற்றை இது இது எனச் சுட்டி அறிந்து, அவற்றினும் தான் வேறு என நனவு நிலையில் உள்நோக்கி ஓர்ந்து நிற்பார்க்கு, மாயையின் மறைப்புநீங்கித் தன் உண்மை யியல்பு விளங்கும். விளங்கும்பொழுது, நீரின்கண் அடங்கியுள்ள அதன் நிழல்போல உடன் உள்ளதாகிய இறைவன் திருவருள் ஒளி, வெளிப்படும்; வெளிப்பட்டு உயிரையும் தன் கண் அடங்கக்கொண்டு நடத்தும். அத்திருவருள் ஒளியில் தன்னைக் கொடுத்துப் பதார்த்தங்களைப் பாராமல் பரமே பார்த்திருத்தலே மாயை மறையும்

படி அம்முதற்பொருளில் மறைதல் ஆகும். இங்ஙனம் மறைய வல்லார்க்கு உடம்பும் கருத்தும் முதல்வனது உடைமையாதலின், அவர்க்கு என உடம்பும் இல்லை; கருத்தும் இல்லை. அவை முறையே திருவருள் வழிப் பட்டுச் சிவகரணமாகவும் சிவசங்கற்ப மாகவும் நிகழும்.

வி – கு :

*எம்பிரான் என்றதேகொண் டென்னுளே புகுந்து நின்றிங்*
*கெம்பிரான் ஆட்டவாடி என்னுளே உழிதர் வேனை*
*எம்பிரான் என்னைப் பின்னர்த் தன்னுளே கரக்கும் என்றால்*
*எம்பிரான் என்னின் அல்லால் என்செய்கே னேழை [ யேனே.*

எனவும்,

*புள்ளுவ ரைவர் கள்வர் புனத்திடைப் புகுந்து நின்று*
*துள்ளுவர் சூறை கொள்வர் தூநெறி விளைய வொட்டார்*
*முள்ளுடை யவர்க டம்மை முக்கணன் பாத நீழல்*
*உள்ளிடை மறைந்து நின்றங் குணர்வினால் எய்யலாமே.*

எனவும் வரும் அப்பர் அருள்மொழியும்,

*" பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்*
*சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது "*

என்னும் திருமந்திரமும் உடன்வைத்து நோக்கத் தக்கவை.

அப்பொருள் – அம்மறைப்பொருட்கண் என ஏழாவது விரிக்க. (426)

மோழை யடைந்து முழைதிறந் துள்புக்குக்
கோழை யடைகின்ற தண்ணற் குறிப்பினில்
ஆழ வடைத்தங் கனலிற் புறஞ்செய்து
தாழ வடைப்பது தன்வலி யாமே. 2548

க – து : இப்பாட்டு யோக நெறியால் ஒருவன் தன் உடலைத் தூய்தாக்கி வலிசெய்து கொள்ளுமாறு உணர்த்துகின்றது.

பொ – ரை : விந்துவின் சிதைவு நீங்கிக் காப்பாற்றப்பட, சுழிமுனை நாடியின் வழியைத்திறந்து, மீதூணை நிறுத்துவதை இறைவனைக் குறித்து நிற்றலால் நன்கு செய்து, தவக்கனலால் ஊனுடம்பு அழியாமை காத்து, உயிர்ப்புச் சுழிமுனையில் சென்று தங்குமாறு ஏனை இடை பிங்கலையிற் செல்வதை அடைப்பது ஒருவனுக்கு உறுதி ஆகும்.

வி – கு : மோழை – கீழாறு, இங்குப் பெண்ணின் பால் வீழ்ப்பதைக் குறித்து நின்றது. அமுத ஆறு என்பாரும் உளர்.

முழை – மலைக்குகை ; இங்கு மேரு எனப்படும் சுழிமுனையின் வழியை உணர்த்திற்று. இதனைப் புருவ நடு என்பாரும், முறை எனப் பாடம் ஓதுவாரும் உளர். கோழ்–கொழுமை : மீதூணைக் குறித்து நின்றது. புறஞ்செய்தல்–புறந்தரல், காத்தல். தாழ–தங்க.

“ ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர்
ஞான விளக்கினை ஏற்றி நன்புலத்
தேனை வழிதிறந் தேத்து வார்க்கிடர்
ஆன கெடுப்பன அஞ்செ ழுத்துமே ”

என்னும் ஆளுடைய பிள்ளையார் திருமொழி புடைபட வைத்து உணரத்தக்கது. (427)

காயக் குழப்பனைக் காயநன் னாடனைக்
காயத்தி னுள்ளே கமழ்கின்ற நந்தியைத்
தேயத்து ளேயென்றும் தேடித் திரிபவர்
காயத்து ணின்ற கருத்தறி யாரே. 2549

க - து : இது முதல்வனை ஒருவன் முதற்கண் தன் உணர்வின்கண் வைத்தே கண்டு தலைப்படல் வேண்டும் என்னும் உண்மையை வலியுறுத்து கின்றது.

பொ - ரை : உயிர்களை உடம்பிற் சேர்ப்பவனும், உடம்பைத் தனக்கு நல்ல இடமாகக் கொள்பவனும், உடம்பில் உள்ளத்தின்கண் விளங்கித் தோன்றும் பேரின்ப வடிவினனுமாகிய முதல்வனை வெளியுலகில் பல தலங்களில் தேடி யாத்திரை செய்பவர், அவன் உடலிடங்கொண்ட நுண்ணிய கருத்தை அறியாத வரே ஆவர்.

வி - கு : நந்தி - ஆநந்தி, பேரின்பவடிவினன். திருக்கோயில்கள் இப்பாட்டின் கருத்தை வலியுறுத்து, தற்பொருட்டு மக்கள் உடல்வடிவின் அமைந்து, கருவறை நெஞ்சத்தைக் குறிப்பதாய் வகுக்கப் பெற்றுள்ளன.

புறவழிபாடு அகவழிபாட்டிற்குப் படிநிலையாய் உள்ளது எனவும், முதல்வனது உண்மை நிலையைத் தலைப்படவேண்டின், அவனை ஒருவன் தன் உணர்

விற்கு முதல்வனுய் உள்நோக்கியே காண்டல் வேண்டும் எனவும் அறிக என்றபடி,

" தேடிக் கண்டுகொண்டேன் - திரு - மாலொடு நான்முகனும்
தேடித் தேடொணுத் தேவனை என்னுளே
தேடிக் கண்டு கொண்டேன் "

என்னும் அப்பர் தேவாரத்தால் தெளிக, (428)

ஆசூச மாசூச மென்பா ரறிவிலார்
ஆசூச மாமிட மாரு மறிகிலார்
ஆசூச மாமிட மாரு மறிந்தபின்
ஆசூச மானிட மாசூச மாமே. 2550

க - து : இது தூய்மையின்மை என்பது ஒருவன் உணர்வின் கண்ணது என உணர்த்துகின்றது,

பொ - ரை : தூய்மையின்மைக்கு விளைவிடம் அறியாதவர் பிறப்பு, இறப்பு முதலாக நிகழும் நிகழ்ச்சிகளால் சுத்தியின்மை (தீட்டு) உண்டாயிற்று என்பர். அதன் விளைவிடம் ஒருவனது உணர்வு என்று உணர்தல் வேண்டும்.

வி-கு : ஆசூசம் - அசுசி, தூய்மையின்மை. ஆன இடம் என்பது ஆனிடம் என அகரம் தொகுத்தல் ஆயிற்று.
(429)

ஆசூச மில்லை யருநிய மத்தருக்
காசூச மில்லை யரனையர்ச் சிப்பவர்க்
காசூச மில்லையா மங்கி வளர்ப்போருக்
காசூச மில்லை யருமறை ஞானிக்கே. 2551

க-து : இது மேலே மந்திரப்பொருளைத் தெளிவிக்கு முகத்தால் ஆசுசம் அணுகமாட்டாத இடங்களைக் கூறுகின்றது.

பொ - ரை : கடைப்பிடித்தற்கு அரிய நியமங்களை மேற்கொண்டு ஒழுகுவார்க்கும், சிவபிரானை அருச்சிப் போர்க்கும், அகம் புறம் என்னும் ஈரிடத்தும் சிவன் உருவாம் அங்கியை வளர்த்து வழிபடுவார்க்கும். உணர்தற்கு அரிய பொருளைக் கொண்டுள்ள மறைகளை ஓதி உணர்ந்து மெய்யுணர்வைத் தலைப்பட் டார்க்கும் அவர்தம் உணர்வு திருவருளில் முழுகித் தூய்தாகவே நிலவுதலின், அசுசி (வாலாமை) இல்லை

வழிபட்டு நின்று வணங்கு மவர்க்குச்
சுழிபட்டு நின்றதோர் தூய்மை தொடங்கும்
குழிபட்டு நின்றவர் கூடார் குறிகள்
கழிபட் டவர்க்கன்றிக் காணவொண் ணாதே. 2552

க - து : இது தூநெறியைத் தலைப்படுதற்கு உரிய உபாயங்களைக் கூறுகின்றது.

பொ – ரை : முதல்வன் ஆணையாகிய உயர்ஞான நூல்களின் வழி நின்று ஒழுகி முதல்வனது உருவம், உருவருவம். அருவம் என்னும் குறிகளை வணங்கு வார்க்கு, அவர்தம் மனம் ஒப்பற்ற தூநெறியைத் தலைப்படும். உலகப் பற்றாகிய குழியில் வீழ்ந்து நின்றார் அவ்வருட்குறிகளைக் கூடமாட்டார். அக்குறிகளின் இயல்பை உணர்ந்து உலகப்பற்றை விட்டார்க்கு அன்றி வேதாகமங்களின் குறியிறந்த மெய்ப்பொருளை உணர்வுற உணர்தல் கைகூடாது.

வி - கு : சுழிபட்டு நின்றது – பாவகம் என்னும் சுழியிற்பட்டுச் சுழலும் மனம். பாவகமாவன: அறம். அறிவு. வெறுப்பு, திரு, பாவம். அறியாமை, விருப்பு. திருவின்மை என்பவை காரண காரியமாக வட்டம் போற் சுழன்று ஒருவனது புத்தியில் நிகழ்வன; திரு வின்மை அறத்திற் செலுத்தும் எனக்கொள்க.

குறியாவன இவை என்பதை "அறுவகைச் சமயத் தோர்க்கும்" என்னும் சிவஞான சித்தித் திருவிருத்தத்தில், 'வேறாங்குறியது உடைத்தாய்' வேதாகமங்களின் குறியிறந்தங்கு அறிவினில் அருளால் மன்னி' எனவருதல் கொண்டு அறிந்து கொள்க. (431)

தூய்மணி தூயன றூய வொளிவிடுந்
தூய்மணி தூயன றூரறி வாரில்லை
தூய்மணி தூயன றூரறி வார்கட்குத்
தூய்மணி தூயன றூயவு மாமே. 2553

க – து : இஃது ஆன்ம சுத்திக்கு அடையாளமும் அதனை அடையுமாறும் உணர்த்துகின்றது.

பொ–ரை : தூய்மையான மணியும் தூயசுடரும் தூய ஒளியைத்தரும்; அவை தூய்மை எய்துதற்குக் காரணத்தை அறிய மக்கள் ஒருப்படுவதில்லை: அக் காரணத்தை அறிபவர்களுக்கு அது வாயிலாக அவை தூய்மையுறும்.

வி–கு ; இஃது ஒட்டு அல்லது பிறது மொழிதல் என்னும் அணி. தூர்–மூலம், காரணம். மணியும் அனலும் உயிரைக் குறிக்கும்; ஒளி உயிரின் நீங்காது உள் உறையும் சிவத்தைக் குறிக்கும். மணி

தூயதாவது தக்கபடி கடைச்சல் பிடிப்பதால்: அனல் தூய்மையாவது உபகரணத் தூய்மையாலும் சிவாங்கி எனப் பாவித்தலாலும். அதுபோல், உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றினால் முறுக வாங்கிக் கடைதலும், மெய் மொழி மனத்தூய்மையாலும். சிவோஹம்பாவனையாலும் ஆன்மாத் தூய்மையுற்றுச் சிவத்துவம் விளங்கிச் சுடரும் என்பது கருத்து.

மெய்யின் தூய்மை தூய உணவாலும் தீச்செயல் புரியாது நற்செயல் புரிதலானும், மொழியின் தூய்மை பொய், குறளை, வன்சொல், பயனில்சொல் என்பவற்றை மொழியாது உறுதி பயக்கும் அறவுரைகளை இனிமையாக மொழிதலும், இறைவன் பொருள்சேர் புகழ் புரிதலும் ஆகியவற்றானும் உண்டாம். மனத் தூய்மை மேலே கூறப்பட்டது. (432)

தூயது வாளா வைத்தது தூநெறி
தூயது வாளா நாதன் றிருநாமம்
தூயது வாளா வட்டமா சித்தியுந்
தூயது வாளாத் தூயடிச் சொல்லே. 2554

க—து: இது தூய்மையின் சிறப்பு உணர்த்துகின்றது.

பொ—ரை: தூநெறியாகிய மெய்யுணர்வு தூய்மையே ஒளியாகக்கொண்டு ஒழுகும்படி வைக்கப்பட்டது ஆகும்; அந்நெறியைக்காட்டும் நாதன் திருநாமமாகிய திருவைந்தெழுத்து தூயதாகிய வாளாகும்; தூய்மையை ஆண்டு அட்டமாசித்தியும் பெறலாகும்; தூய்மையாகிய போதொடு நீரைப் பயன் கருதாது திருவடிக்கண் தூவி அத்திருவடியைப் புகழ்ந்துசொல்.

வி – கு : தூயது-மனமொழிகளது தூய்மை.

ளா – ஒளியாய் நின்று விளக்க. இரண்டாம் அடியில் வாள்ஆம் எனப்பிரித்து வினைப்பகையை எறியும் வாள் ஆகும் என உரைக்க. மூன்றும் அடியில் ஆளா எனச் செய்யா என்னும் வாய்பாட்டு எச்சமாகக்கொண்டு, பெறல் ஆகும் என வினைமுற்று வருவித்து உரைக்க. நான்காம் அடியில், வாளா-பயன் கருதாது எனஉரைக்க. தூய் என்னும்வினைக்கு ஏற்ப தூயது என்னும் பண்பை நீரோடு கூடிய மலர் என உருவகிக்க. தூயது இன ஒருமை. அடிக்கண் தூய் என மாறுக. சொல் என்பது ஏவல் வினைமுற்று.

தூயது தூவலைப் புறத்தும் அகத்தும் கொள்க.

இருதய நாப்பண் அஞ்செழுத் துருவின்
இறைவனை உயிர்க்கொலை செயாமை
அருள்பொறி யடக்கல் பொறைதவம் வாய்மை
அன்பறி வென்னும் எண்மலர்கொண்
டொருமையொ டருச்சித் திடுகவென் றடியர்க்
கொள்ளிய தீக்கைசெய் துணர்த்தத்
திருவமர் துறைசை யுறையருட் குருவாந்
திருநமச் சிவாயர்தாள் போற்றி!

என்னும் மாபாடியகாரர் மொழியைக் கருதுக. (433)

பொருளது வாய்நின்ற புண்ணிய னெந்தை
அருளது போற்று மடியவ ரன்றிச்
சுருளது வாய்நின்ற துன்பச் சுழியின்
மருளது வாச்சிந்தை மயங்குகின் றாரே. 2555

க – து : இது முதல்வன் திருவருளைப் பற்றி ணார்க்கன்றிப் பிறர்க்கு உலகப் பற்றறுதி ஆகிய தூய்மை பிறவாது எனக் கூறுகிறது.

பொ – ரை : மெய்ப்பொருளாய், உலகம் வணங்குதற்கு உரிய தூயனும், பாதுகாப்போனுமாய் உள்ள சிவபிரானது திருவருளை விழைந்து வழிபடும் அடியவர் தெளிவுடையராய்த் துன்பம் நீங்கி இன்புறுவர்: அவரே சுத்தர், பிறர் எல்லாரும் ஆதி தைவிகம், ஆதி யான்மிகம், ஆதி பௌதிகம் என்னும் முப்புரிச் சுருளாய் உள்ள துன்பமாகிய சுழியிற் செலுத்தும் உலக மயக்கிற்சென்று அறிவு மயங்கும் அசுத்தரே ஆவர்.

வி – கு : சுருள்–புரிபோற் சேர்த்துச் சுருட்டப்பட்டது. மருள் – மயக்கம் தருவது. சிந்தை – அறிவு. (434)

**வினையா மசத்து விளைவ துணரார்**
**வினைஞானந் தன்னில் வீடலுந் தேரார்**
**வினைவிட வீடென்னும் வேதமு மோதார்**
**வினையாளர் மிக்க விளைவறி யாரே.** 2556

க – து : இது வினைமாசு கழுவி ஒழுகுதலின் இன்றியமையாமையை உணர்த்துகின்றது.

பொ – ரை : பிராரத்த வினையால், விருப்பு வெறுப்புக்களும் அவற்றால் உலகப்பொருட் காட்சியும், அவற்றால் வரும். விபரீதவுணர்வுமாகிய அசத்துக்கள் ஒருவன் உணர்வில் முறையே தோன்றி அவனைப் பிறவிச்சுழில் ஆழ்த்துகின்றன; அவ்வினை

வினைவு மெய்யுணர்வின்முன், ஒளிமுன் இருள்போலக் கழிதலின், அவ்வசத்துக்களும் தோன்றா ; தோன்றாமையால் உயிர் சத்தாகிய சிவத்தைச் சார்ந்து இன்புறும். இவற்றை மக்கள் உணர்வதும் இல்லை ; ஆய்ந்து அறிதலும் இலர். வினையைவிட வீடுபேறு உண்டாம் என வேதம் கூறும் ; அதனையும் ஓதி உணர்வதில்லை. இங்ஙனம் ஒருவாற்றானும் வினையின் விளைவை அறியாதார் வினையாளராய் வினைவயப் பட்டுத் துன்புறுவர்.

வி - கு : அசத்து - நன்றல்லவை. சத்து - நல்லது, நிலைத்து உள்ளது. இரண்டாம் அடிக்கு மிகையாக உரைத்தவை குறிப்பெச்சத்தாற் பெறப் பட்டவை.

> 'இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
> பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு'

எனச் செந்தமிழ்ப் பொதுமறை நல்வினை தீவினை இரண்டையும் வேண்டாதனவாக வைத்துக் கூறுகின்றது.

" ஒருவன் நல்வினையால் நல்லோன் ஆகவும், தீவினையால் தீயோனாகவும் ஆகின்றான் " எனப் பிருகதாரணியம் கூறுகிறது.

" யோகியானவன் எப்பொழுது தன்னுண்மையை உணருமாற்றால் பரம்பொருளின் உண்மையை, விளக்கைக்கொண்டு பிறபொருள்களைக் காணுதல்போல, காண்கின்றானோ அப்பொழுது. அவன் பிறவாதவனும். மாறுபடாதவனும், தத்துவங்களால் பற்றப்படாத தூயனுமாகிய தன்னொளி

யுடையவனை அறிந்து எல்லாப் பாவங்களினின்றும் விடுபடுகின்றான்" என்பது சுவேதாசுவதரம் இரண்டாம் அத்தியாயம் 15 ஆம் மந்திரம். (435)

## 34. முத்தி நிந்தை

இப்பகுதி வீடுபேற்றை இன்றெனப் பழித்தலால் வரும் குற்றம் உணர்த்துகின்றது ; அஃது உண்டு எனச் சொல்லிப் பொருட்படுத்தாது ஒழுகுதலும் பழித்தலேயாம்.

பரகதி யுண்டென வில்லையென் போர்கள்
நரகதி செல்வது ஞால மறியும்
இரகதி செய்திடு வார்கடை தோறும்
துரகதி யுண்ணத் தொடங்குவர் தாமே. 2557

க – து : இது வீடுபேற்றை இன்று என்பார்க்கு வரும் குற்றம் உணர்த்துகின்றது.

பொ – ரை : மேலான வீடுபேறு உண்டென முடிந்த நூல்களும் உயர்ந்தோரும் கூறநிற்கவும், அதனை இன்று எனப் பழித்துக் கூறுவோரும் ஒழுகுவோரும் நிரயத்திற் செல்வதை உயர்ந்தோர் அறிவர் ; இம்மையிலும் அவர் வறியராய்ப் பிறர் இல்லங்களின் கடை தோறும் சென்று இரந்துண்பர் ; உடல்வலி யுள்ளபோது பிறர்க்கு உழைத்து அது தளரும்போது கைவிடப்படும் குதிரையைப்போல் உழன்று உணவுக்கு வருந்தத் தொடக்கம் செய்பவரே ஆவர்.

வி – கு : நரககதி, இரக்கும்கதி, துரககதி என்பன திரிந்து வந்தன. கதி–வீடுபேறு, செலவு, நிலை, பரம் - மேலானது. (436)

கூடகில் லார்குரு வைத்த குறிகண்டு
நாடகில் லார்நயம் பேசித் திரிவர்கள்
பாடகில் லாரவன் செய்த பரிசறிந்
தாடவல் லாரவர் பேறிது வாமே. 2558

க - து : இஃது அருளாசான் காட்டும் நெறி நிற்றலின் அருமையும் பயனும் உணர்த்துகின்றது.

பொ - ரை : உலகில் அருட்குரவர் கூறியுள்ள உறுதிமொழிகளுக்கும், அவர்காட்டிய நடத்தக்குறி களுக்கும் அளவில. ஆயினும், மக்கள் வினைவயப் பட்டு ஆசான் அமைத்துவைத்துள்ள சிவலிங்கம், திருவைந் தெழுத்து, திருநீறு போன்ற குறிகளால் குறிக்கப்படும் உண்மையைத் தெளிந்து திருவருள் நெறியில் சேரமாட்டார்; அவற்றைப் பொருட்படுத்தி உளங் கொள்ளவும் செய்யார்; பிறர் செவிக்கு இனிய வாகத் தோன்றும் வெற்றுரைகளையே பெரிதும் பேசி வாணாள் வீணாள் கழிப்பர். முதல்வன் பொருள் சேர் புகழ்கூறும் அருட்செம் பாடல்களையும் பாட மாட்டார். முதல்வன் உலகில் திருக்கோயில். குரு சந்தானம், அருள்நூல்கள், உபதேசமரபு என்ப வற்றை வைத்துள்ள திருவருளின் தன்மையை அறிந்து, அவன் அருள்வழி நிற்பார்க்கு வீடுபேறு அணிமைக்கண் உள்ளதாகும்.

வி - கு : பாடகில்லார் என்னும் வினைக்குச் செயப்படு பொருள் அவாய் நிலைபற்றி வருவிக்கப் பட்டது. ஆடுதல் - அவன் ஆட்ட ஆடுதல்; அஃதாவது அவன் திருநோக்கு உணர்ந்து ஒழுகுதல். அவர்-பகுதிப் பொருள் விகுதி: குவ்வுருபு விகாரத்தால் தொக்கது.

இது – அணிமைக்கண் உள்ளது.

பேறது எனப் பாடம் இருந்திருத்தல் கூடும். பேறெதுவாகுமே எனப் பாடங் கொண்டாரும் உளர். (437)

புறப்பட்டுப் போகும் புகுதுமென் னெஞ்சில்
திறப்பட்ட சிந்தையைத் தெய்வமென் றெண்ணி
அறப்பட்ட மற்றப் பதியென் றழைக்கில்
இறப்பற்றி னேனிங் கிதென்னென் கின்றானே. 2559

க – து : இஃது இறைவனை எதிர்முகமாக்குதற்கு உபாயம் கூறுகின்றது

பொ - ரை : முதல்வன் என் மார்பினின்று உயிர்ப்பாய்ப் புறம்போந்து மீண்டு உள்புகும். ஹகாரமாய்ப் புறப்படுதலும் ஸகாரமாய் உள்வாங்குதலும் செய்கின்றான் எனக் கருதுமாற்றால் இருவகைப்படும் என் கருத்தைத் தெய்வம் வெளிப்படும் இடம் ( குறி ) என்று எண்ணி, பலதலைப்படும் உணர்வு கெடும்படி அக்கருத்தையே பற்றினேன். இந்நிலையில் அறத்தின்கண் வெளிப்படும் பசுபதி என்று அவனை எதிர்முகமாக்கின் நீசெய்யும் செயலாகிய இஃது என்னை ? என வெளிப்படுகின்றான் முதல்வன்.

வி – கு : நெஞ்சு – மார்பு; நெஞ்சை நெருங்கியுள்ள மூச்சுப்பை எனினும் பொருந்தும். அறப்பட்ட – அறத்திற்பட்ட, அத்துச் சாரியையின்றி நின்றது. மற்று – அசைநிலை. அப்பதி – பசுபதி. உயிர்களைக் காப்பவன்.

தெய்வம் என்றெண்ணி இறப்பற்றினேன் எனக் கூட்டுக. இற-கெட; வினைமுதல் வருவிக்கப்பட்டது.
மேற்கோள்கள் :—

"இங்ஙனம் கருவிகளைச் செலுத்தும் சூக்கும பஞ்சாக்கரம் அசபையாய் பரிணமித்துப் பிராணவாயுவை அடக்கியும் விட்டும் நின்று உணர்த்தும்" திராவிட மாபாடியம், சூத். 4 அதி, 1.

"ஹகாரேண பஹிர்யாதி ஸகா ரேண விசேத்புந:" பிராசாத பரமாக்கர நிர்ணயம் (சிவாக்கிர பத்ததி மேற்கோள்).

'ஹகாரத்தால் புறம்போகிறது, ஸகாரத்தால் மீள உள் புகுதுகின்றது'-என்பது பொருள். (438)

திடரிடை நில்லாத நீர்போல வாங்கே
உடலிடை நில்லா வுறுபொருள் காட்டிக்
கடலிடை நில்லாக் கலஞ்சேரு மாபோல்
அடலெரி வண்ணனு மங்குநின் றானே. 2560

க-து : இஃது உயிரும் முதல்வனும் அறிவான் அறிவிப்பான் எனவும், உபகாரம் பெறுவான் உபகரிப்பவன் எனவும் ஒன்றிநிற்கும் உள்பொருள்கள் ஆம் என உணர்த்துகின்றது.

பொ - ரை : மேட்டு நிலத்தில் நிலையுறாத நீர் போல, உடலின்கண் இத்துணைக்காலம் இருக்கும் என அறியவொண்ணாது உள்ள பொருள் உயிர். காணும் கண்ணுக்குக் காட்டும் உயிர்போல அவ்வுயிரின் அறிவிச்சை செயல்களை விளக்கி உபகரிப்பவன் முதல்வன். இங்ஙனம் உயிர்க்குக் காட்டும் உபகாரம்

செய்வோனேய் உள்ள" செம்மேனியனுகிய சிவ பிரானும் அவ்வுடலின்கண் உடன் உளன். அவன், கடலின்கண் நில்லாது கரைசேரும் மரக்கலம்போல உயிரைப் பிறவிக்கடலை நீந்தி முத்திக்கரை சேர்ப்பிப் போனுகவும் உளன்.

வி - கு : உடலிடை உறுபொருள் நில்லாத பொருள் என உரைக்க.

உறுபொருளைக் காட்டிக் கலம்போல அங்கு எரி வண்ணன் நின்ருன்—ன இயைக்க. உறுபொருளுக் குக்காட்டி என நான்கன் உருபு விரிப்பினும் அமையும்.

ஒரே மரத்தில் இரண்டு அழகிய பறவைகள் நட்போடு கூடி வாழ்கின்றன; அவற்றுள் ஒன்று அரச மரத்தின் இனிய கனியை உண்கிறது : மற்றையது உண்ணுமல் பார்த்துக் கொண்டிருக்கிறது என இருக்கு வேதத்தும், உபநிடதங்களிலும் வருதல் காண்க. (439),

தாமரை நூல்போற் றடுப்பார் பாதத்தொடும்
போம்வழி வேண்டிற் புறமே யுழிதர்வர்
காணவழி காட்டக் கண்காணுக் கலதிகள்
தீநெறி செல்வான் றிரிகின்ற வாறே. 2561

க - து ; இது முத்திநெறி காண மறுக்கும் மூர்க்கர் இயல்பு கூறுகின்றது.

பொ - ரை : முதற்பொருளைக் காண்டற்குரிய மெய்ந்நெறியைச் சான்றோர்கள் மெய்ந்நூல்கள்

சார்பாக நின்று காட்டவும், அதனை நோக்கிக்காண விரும்பாத தீவினையாளர் தீநெறியில் தாம் செல்வதற்கு முற்பட்டு மேற்கொள்ளும் முறை தழுவாச் செயல்களைச் கூறின், ஒருவன் திருவருளொடும் ஒன்றி ஒழுகும் ஒழுக்கநெறியை விரும்பின் அவனை, நூலை அகத்தே கொண்ட தாமரைக் கொடி நீர் நிலையில் நீந்துவோனைக் காலைப் பிணித்துச் செயற் படவொட்டாதது போல், தடுப்பர் : நன்னெறிக்குப் புறம்பான நெறிகளிற் சுழல வைப்பர்,

வி - கு : கலதிகள் தடுப்பர், உழிதரச்செய்வர்: அவர் திரிகின்றவாறு இது என முடிக்க.

உழிதர்வர் என்னும் தன்வினை—பிறவினைப்பொருள் பயக்க நின்றது. 'தாமரை நூல் போல்' என்னும் தொடர், படவரல்குலாள் என்றது போல நின்று, நூல்தாமரைபோல் எனவைத்து உரைக்க நின்றது. தாமரைத்தண்டு அகத்தே நூலைக் கொண்டிருத்தல் போல், கலதிகளும் தம் அகத்தே நூலைக்கொண் டிருந்து தடுப்பர் என்னும் நயம் தோன்றுதல் காண்க.

பரம் — திருவருள், பரம்பொருள் எனினும் அமையும். (440)

மூடுத லின்றி முடியு மனிதர்கள்
கூடுவர் நந்தி யவனைக் குறித்துடன்
காடு மலையுங் கழனி கடந்தோறும்
ஊடும் உருவினை யுன்னகி லீரே. 2562

க - து : இஃது அறியாமை அறிவு இரண்டும் நீங்கி இறைவனை அகத்தும் புறத்தும் வழிபடுமாறு கூறுகிறது...

பொ-ரை ; தம் உணர்வை மறைக்கும் அறியாமை யும் பலன் உணர்வும் இல்லையாகித் தெளிவு முற்றிய மக்கள் சிவபிரானைக் குறிக்கொண்டு உன்னி உடன் கூடுவர். அவன், காடு மலை வயல் பாலை எனப் பாகு படும் இடங்கள் தோறும் திருக்கோயில் கொண்டும், அவற்றின் உள்ளும் நிறைந்திருத்தலின், அவன்றன் திருவுருவை உன்னுதல் எளிதாகவும், நீங்கள் உன்ன மாட்டா திருத்தல் வருந்தத்தக்கது.

வி - கு : மூடுதல் - அறிவை மூடும் அறியாமை, புலனுணர்வு என்பவை. முடியும் - முற்றும். கடம்- பாலை நிலம், நெய்தலும் உடன்கொள்க. ஊடு – நடு, உள். (441)

ஆவது தெற்கும் வடக்கு மமரர்கள்
போவர் குடக்கும் குணக்குங் குறிவழி
நாவினின் மந்திர மொன்று நடுவங்கி
வேவது செய்து விளங்கிடு நீரே. 2563

க–து : இஃது எங்கிருப்பினும் மந்திரம் கணித்து ஒருமையில் நிற்போர் உயர்வர் என்று உணர்த்து கின்றது.

பொ ரை : தென்திசையும் வடதிசையும் வளர்ச் சிக்கு உரியனவே; மேற்றிசையிலும் கீழ்த்திசையிலும் தேவர்கள் செல்வர். ஆசான் கூறிய குறிவழி நாவில் மந்திரம் சொல்லி மனம் ஒன்றுமின். நீங்கள் நடு எனப்படும் சுழுமுனை நாடியில் குண்டலி அங்கியை எழுப்பி உயிர்ப்பை ஒடுக்கி விளக்கம் எய்துமின்.

வி-கு : ஒன்றுமின், விளங்கிடுமின் என்பவை மின் விகுதி கெட்டு நின்றன. ஆவது, வடக்கும் தெற்கும் என்பவற்றோடு தனித்தனி இயையும்: 'ஞானமும் புகழும் உண்டாம்' என்புழிப்போல. (442)

மயக்குற நோக்கினு மாதவஞ் செய்வார்
தமக்குறப் பேசின தாரணை கொள்ளார்
சினக்குறப் பேசின தீவினை யாளர்
தமக்குற வல்வினை தாங்கிநின் றுரே. 2564

க - து : இது வினைவலி கடத்தற்கு அரியது என உணர்த்துகின்றது.

பொ—ரை : சிறந்த தவம்புரிபவர் தம்மோடு கலந்து உறும்படி கடைக்கணித்தும், சிலர் தமக்குப் பொருந்தும்படி கூறிய மன ஒருமையில் நிற்கும் நிலையை உட்கொள்ளார்; கேட்போர் சினஞ்செய்ய மாறு பேசும் தீவினையாளரே அவர்; அவர் தமக்கு உறவு அல்லாத வினைப்பயனைச் சுமந்து துன்புறுவோரே ஆவர்.

வி—கு : சினக்கு — சினத்திற்கு; மயக்கு-கலத்தல், திணைமயக்கம் என்புழிப் போல. (443)

## 35. இலக்கணாத்திரயம்

இப்பகுதி சொற்கள் பொருளை உணர்த்தும்போது செம்பொருள், குறிப்புப்பொருள். இலக்கணைப்பொருளெனச் சொற்பொருள் மூவகைப்படுதலின், அவற்றுள் இலக்கணைப்பொருள் மூவகைப்படும் என உணர்த்தி உதாரணம் கூறுதலின், இலக்கணாத்திரயம்

என்னும் பெயருடையதாயிற்று. லக்ஷணா என்னும் ஆரியச்சொல் தமிழில் இலக்கணை எனப்படும். திரயம் – மூவகை.

இலக்கணையாவது ஒரு பொருளினது இலக்கணத்தை மற்றொரு பொருளுக்குத் தந்துரைப்பது. அது விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டும் விடாத இலக்கணை என மூவகைப்படும். "நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை ஏற" என்றதில் ஏறுதலாகிய இலக்கணம் அன்பிற்கு இன்மையின் விட்ட இலக்கணை. நாணன்முன் ஏறப் பின் திண்ணனார் அன்பின் வயப்பட்டு ஏறினார் என்பது கருத்து. கங்கைக்கண் இடைச்சேரி, புளி தின்றான் என்புழி கங்கையின் கரையில் இருத்தலும், இடைச்சேரி கங்கையின் கரையில் இருத்தலும், புளியினது பழத்தைத்தின்றலும் உண்மையின் இவை விடாத இலக்கணை. 'பாயிருள் பருகிப் – பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பரிதி' என்பதில், பருகுதலும் கானுதலும் பரிதிக்கு இல்லையேனும் இருளைப் போக்குதலும் பகலைத் தருதலும் உண்மையின் விட்டும் விடாத இலக்கணை. இலக்கணை, ஆகுபெயர், உருவங்களுள் அடங்கும்.

விட்ட விலக்கணை தான்போம் வியோமத்துத்
தொட்டு விடாத துபசாந்தத் தேதொகும்
விட்டு விடாதது மேவுஞ்சத் தாதியின்
சுட்டு மிலக்கணை தீதஞ் சொருபமே. 2565

க – து : இம்மூன்று இலக்கணைகளின் வகையும், தன் இயல்பு அதனைக் கடந்து நிற்றலும் கூறுகின்றது.

பொ – ள் : ஆன்மா (தான்) ஆகாயத்திற் செல்லுதல் என்றாற்போல வருவனவற்றில் விட்ட இலக்கணை

யாம்: ஆன்மா உபசாந்தம் (அமைதி)பெறும் என்றாற் போல்வனவற்றில் விடாத இலக்கணையாம்; ஓசை முதலியவற்றை அதுகேட்கும், பார்க்கும் என்றாற் போல்வனவற்றில் விட்டும் விடாத இலக்கணை பொருந்தும். இங்ஙனம் வருவன தடத்த வியல்பு எனப்படும் பொதுவியல்பே ஆகும். இனி, இலக்கணையாற் கூறாது, சத்யம் ஞானம் அநந்தம் பிரஹ்ம' 'இருதிருறனறிவுளது' என்றாற்போல்வன சொருப லக்கணம் எனப்படும் தன்னியல்பு கூறுவனவாம் எனப் பகுத்து உணர்ந்துகொள்க.

வி — கு : தொகும் என்பதனை முதலடி இறுதியினும் கூட்டுக. சத்தாதி–சத்தம் முதலியவற்றைக் கேட்டலும், காண்டலும், உறுதலும், மோத்தலும், சுவைத்தலும் கூறுமிடத்து. சுட்டும் – குறிக்கும்; அஃதாவது, இலக்ஷியத்தில் உள்ளதாய்க் குறிக்கும்.

ஆன்மா வியாபகம் ஆதலின் போக்குவரவு கூறுதல் கூடாதேனும் தத்துவ ன்னரூபறுதல் பற்றி அமையும் எனவும், துன்பநீக்கமும் இன்பப்பேறும் ஆன்மாவுக்கு உள்ளனவே எனவும், கேட்டல் முதலிய செயல் செவி முதலிய பொறிகளுக்கே உரியன எனினும், அவற்றை அதிட்டிக்கும் ஆன்மா அவற்றை அறிதல் உண்மையின், ஆன்மாவின்மேல் சார்த்திக் கூறுதல் பொருந்தும் எனவும் கண்டு கொள்க. இவையெல்லாம் மாயையின் காரியமாகிய சூக்கும உடம்பு மனம் பொறி என்னும் உபாதிகளை அதிட்டித்தல் பற்றி உளவாதலின் இவை செயற்கை எனவும், தத்துவங்களில் நீங்கி நின்று தத்துவங் கடந்த முதல்வனை. அவன் அருளாகி சேர தலைப்

பட்டுணர்ந்து இன்புறும் பரமுத்திநிலை அதற்கு இயற்கை எனவும் உய்த்துணர வைப்பது இம்மந்திரத்தின் பயன் எனக் கொள்க.

'தான் போம் வியமத்து' என்னும் பாடத்திற்கு ஆன்மா செல்லும் செலவின்கண் என உரைக்க. வியமம் – பெருமை. இங்குப் போதலைப் பெருமை என்றார் எனக்கொள்க. நின்முகங்காணும் மருந்தினேன் என் புழிக் காட்சியை மருந்தென்றார்' என்னும் சிவஞான சுவாமிகள் குறிப்பைக் காண்க. (444)

வில்லின் விசைநாணின் கோத்திலக் கெய்தபின்
கொல்லுங் களிறைந்துங் கோலொடு சாய்ந்தன
இல்லு ளிருந்தெறி கூரு மொருவற்குக்
கல்கல னென்னக் கதிரெதி ராமே. 2566

க – து : இஃது உண்மையியல்பைத் தலைப்படுதற்கு உபாயம் கூறுகின்றது.

பொ – ரை : வில்லின் விசையைத்தரும் நாணின் மேல் அம்பைப் பொருத்திக் குறிமீது எய்தபின், ஐந்து கொல்களிறுகள் அம்போடு சாய்ந்தன. சேமமான இடத்திலிருந்து இவ்வாறு எறிதலை மேற்கொள்ளும் ஒருவனுக்கு ஒளிபொருந்திய செம்மணிபோலத் திருவருட் கதிரவன் எதிர்ப்படுவன்.

வி – கு : வில் – ஓங்காரம், விசைநாண் – அதன் முனைகளை இணைக்கும் திருவைந்தெழுத்து. அப்பு – ஆன்மா. இலக்கு–முதற்பொருள். இல்–மன ஒருமை.

கோத்தற்குச் செயப்படுபொருள் அவாய் நிலையான் வருவிக்கப்பட்டது. கூர்தல் – மேன்மேலும்

நுணுகி நிற்றல். கல் – மாணிக்கக்கல். கலன்–ஈண்டு ஒளியை உணர்த்திற்று. கதிர் – கதிரவன் ஆகுபெயர்.

பின்வரும் முண்டகோபநிடத மந்திரங்கள் உடன் வைத்து உணரத்தக்கவை.

" நல்லோய், உபநிடதத்தில் உள்ள பெரு வில்லை எடுத்து அதில் உபாசனையால் கூர்மைபெற்ற அம்பைத் தொடுத்துப் பரம்பொருட் பாவனையால் அதை இழுத்து அந்த அக்கரப் பரம்பொருளில் ஊடுருவிச் செல் " 2, 2. 3.

" பிரணவமே வில் ; ஆன்மாவே அம்பு; பெரும்பொருளே அதன்குறி ! கவனக் குறைவின்றி எய்க! அம்பைப்போல் ஒன்றுபட்டநிலை ஏற்படும்" 2, 2, 4.

அம்பு இலக்கிற் பாய்ந்து அதனோடு ஒன்றுதல் போல ; நீ பரம்பொருளில் ஒன்றுவாய் என்பது கருத்து.

பாட்டில், அம்போடு யானைகள் சாயும் என்றது தற்பாவத்தோடு ஐம்பொறிகளின் அரட்டும் கெடும் என்றபடி. (445)

## 36. மகாவாக்கியம்

இப்பகுதி மகா வாக்கியப்பொருள் உணர்த்துகின்றது. எல்லா நூற்பொருளையும் அடக்கி நிற்கும் பெருஞ்சொல் என்பது தலைப்பின் பொருள். ஒரு வார்த்தை, பெரும் பெயர் என்னும் சொற்களும் இதைக்குறிக்கும்.

'பிரஞ்ஞானம்பிரம்ம' என்பது இருக்கு வேத மகாவாக்கியம்: வெளிப்படும் அறிவு பெரும் பொருள் என்னும் பொருளைத் தருவது.

'பிரம்மைவாஹம் அஸ்மி' என்பது யசுர்வேத மகா வாக்கியம்; பிரம்மமே யான் என்பது பொருள். 'தத்துவம் அஸி' என்பது சாமவேத மகாவாக்கியம்: அது நீ என்பது பொருள். இவை முறையே ஐதரேயம், பிருகதாரண்யகம், சாந்தோக்கியத்தில் வருவன.

'அயமாத்மா பிரஹ்ம' என்பது அதர்வவேத மகா வாக்கியம்; இவ்வான்மா பிரம்மம் என்பது பொருள். இது 'ஸோயம் அஸ்தி' எனவும் கூறப்படும்.

சித்தாந்த சைவர் இவற்றின் தாற்பரியங்களைப் பின்வருமாறு கொள்வர்:

சார்ந்ததன் வண்ணமாய் நின்று அறிவதும், தனித்து நின்று அறிவதும் என அறிவுடைப்பொருள் இரண்டு; ஒன்று சீவான்மா, மற்றொன்று பரமான்மா. முன்னையது உடம்புதோறும் வேறு வேறாய்ப் பல; பின்னையது ஒன்றே. இவை முறையே சுட்டி அறிவதும் சுட்டாது அறிந்தாங்கு அறிவதும், அறிவித்தால் அறிவதும் தானே அறிந்து அறிவிப்பதும் என நின்று, தூலசித்து எனவும் சூக்குமசித்தெனவும் ஓதப் பெறும். பரம்பொருள் சூக்கும சித்தாய், தூலசித்தை விளக்குவதாய் இருத்தல்பற்றி, பிரஞ்ஞானம் பிரம்ம' எனப்பட்டது. தானே ஒளிர்வதும் பிறவற்றை ஒளிர் விப்பதும் முதற்பொருள் என்பது தாற்பரியம்.

ஏனையமூன்றினும் முறையே நீ (த்வம்), நான் (அஹம்), இது (அயம்) என்பவை ஒவ்வோர் உடம்பி லும் உள்ள, வாழ்க்கைக்கு மூலமாகிய தன்னுணர்வாகிய Self consciousness ஆன்மாவைக் குறிக் கும். பிரஹ்ம, அது (தத்) என்பவை உலக முதற் பொருளாகிய இறைவனைக் குறிக்கும். ஆகிறேன் (அஸ்மி), ஆகிறாய் (அஸி), ஆகிறது (அஸ்தி) என்னும் வினைச்சொற்கள் ஒன்று மற்றொன்று ஆதற்கு உரிய சம்பந்தம் உணர்த்தும் சொற்கள். அச்சம்பந்தம் அத்வைதம் என்னும் சொல்லால் உபநிடதங்களிற் குறிக்கப்பெறுவது; பொருளிரண்டாயினும் அவை பிரிந்து நில்லாது ஒன்றியே நிற்றற்கு ஏதுவாகிய இருமையின் ஒருமை(அந்நியநாத்தி)யைக் குறிப்பது. காணும் கண்ணுக்குக் காட்டிக் காணும் ஆன்மாவைப்போல, முதல்வன் உயிர்க்குக் காட்டிக் காணும் உபகாரஞ் செய்வோனாய் உயிர்க்குயிராய் உடனாய் நிற்பன் என்பதே அவற்றின் தாற்பரியம்.

ஆசான் காட்டும் குறிவழி நின்று, சிவஞானக் கண்பெற்று, அக்கண்ணாற் சிவனைக்கண்ட காட்சி சலியாதிருத்தற்பொருட்டு, அவ்வாசான் இது அது (சோயமஸ்தி) எனத் தனக்குள் பாவித்து, அது நீ (தத்துவம் அஸீ) என உணர்த்தி, அது நான் (சோஹமஸ்மி) என அப்பியாசஞ்செய்யுச் சொல்வதுபற்றி, ஆன்மா மூவிடப் பெயர்களாற் குறிக்கப்பட்டது. இவை வேதாந்த மகா வாக்கியங்கள். இவற்றிற்குப் பதில் சிவோயம் அஸ்தி (சிவம் இது), சிவத்வம் அஸி (சிவம் நீ), சிவோஹம் அஸ்மி (சிவம் யான்) என நிற்பவை சித்தாந்த மகா வாக்கியங்கள்.

இவற்றின் பொருளனைத்தும் தன்கண் அடங்கக் கொண்டு மெய்யுணர்வு நெறியைத் தெளிய உணர்த்து வது, மகா வாக்கியங்களுள் வைத்து மகா வாக்கிய மாகிய திருவைந்தெழுத்து என்பர் பெரியோர்.

திருமந்திரம் எல்லாப் பொருளையும் கூறுவ தாகலின், மகா வாக்கியங்கள் பற்றியும் கூறுகின்றது. முன்னும் பல விடங்களில் கூறப்பட்டமை காண்க.

இப்பகுதியில் முன் ஒன்பது மந்திரங்களுக்குத் தத்துவமசி வாக்கியம் எனப் பெயர் கொடுப்பதும் உண்டு.

*சீவ துரியத்துத் தொம்பதஞ் சீவனார்*
*தாவு பரதுரி யத்தினிற் றற்பதம்*
*மேவு சிவதுரி யத்தசி மெய்ப்பதம்*
*ஓவி விடுந்தத் துவமசி யுண்மையே.* 2567

க - து : இது முப்பெருஞ்சொற்களுள் உணர்த்து வடிவின் அமைந்துள்ள தத்துவமசி என்பதன் பொருள் உணர்த்துகின்றது

பொ - ரை : கேவலத்தில் அழுந்தும் நிலையிலும் மாசகலத்தின்கண்ணும் கருவிகளை நீங்கிச் செயலற்று இருளில் அழுந்துவதும் பொருளில் அழுந்துவதுமாய் நிற்கும். சீவான்மா த்வம் (நீ) என்னும் சொற்குப் பொருளாம். கேவலம், சகலம் இரண்டையும் கடந்து அருளில் அழுந்திச் செயலறநிற்கும் பரதுரிய நிலைக் கண் உபகரித்து நிற்கும் முதற்பொருளைத் தத் (அது) என்னும் சொல் குறிக்கும். அயரா அன்பு செய்யும்

இன்புறு நிலையாகிய சிவதுரியத்து, அசி ( ஆகின்றாய் ) என்னும் பொருள்சேர் சொல், மலவாதனையை ஒழிவித்து நிறுத்தும். இது தத்துவமசி என்னும் பெருஞ்சொல்லின் இயல்பாகும்.

வி — கு : த்வம் என்பது தொம் என நின்றது. சொற்கும் பொருட்கும் உள்ள உடனிகழ்ச்சி பற்றி தொம்பதம் சீவனார் என உபசரிக்கப்பட்டது. ஆர் — இழிந்தற்கண் வந்தது. தத்துவங்களின் தொழிற்பாடு இல்வழி அறியாமையில் அழுந்துவதும், அவற்றின் தொழிற்பாடு உள்வழி மூலப்பகுதியின் காரியமாகிய முக்குணங்களில் அழுந்தி அவற்றின் மயமாய் நிற்பது மாயுள்ள உயிர் என்பது கருத்து. சீவதுரியத்து, பர துரியத்தில் என்னும் அடைகள் இனஞ்சுட்டாதவை; அஃதாவது இயைபின்மை நீக்கவந்தவை. இரண்டாம் அடியில், உபகரிக்கும் முதல்வன் என்பது அவாய் நிலைபற்றி ஏற்புழிக்கொண்டு வருவிக்கப்பட்டது. மேவும் - அன்பு செயும்; 'நம்பு மேவு நசையாகும்மே' என்னும் தொல்காப்பியச் சூத்திரங்கொண்டு உரைக்கப்பட்டது. சிவம் - தூய மாறுபடாத இன்பம். ஒவி - ஒவுவித்து. துரியம் — நனவு, கனவு, உறக்கம் என்பவற்றைக் கடந்த உணர்வு நிலை; செயலறுநிலை. அஸி ( ஆய் இருக்கின்றாய், ஆகின்றாய் ) என்னும் வினைச்சொல் இருபொருளும் ஒன்றுதலைக் குறிக்கின்றது; பிறப்பு நிலையில் உலகத்துப்பொருள்களை அது அதுதான் என நின்று அறிந்து வந்த உயிர் முத்தி நிலையில் சிவமே நான் என நிற்றற்குரியது என்பது கருத்து. இக்கருத்துப்பற்றி, கச்சியப்பமுனிவர்.

*சொன்ன தத்துவம் அசியெனும் சுருதியின் மொழியுந்*
*மன்னு தாரணப் பதியுநா னெனவரும் பசுவும்*
*என்ன வேபொருள் இருமைகண் டியைந்துவே றின்மை*
*தன்னை நாட்டிய தல்லது தனியென்ற தின்றே.*

( பேரூர்ப்புராணம், காலவர் வழிபடுபடலம் ).

என்றமை ஓர்ந்து உணர்க.

இனி, ஒருபொருட் கொள்கையினர் தத்துவமசிப் பொருள் உரைத்தல் வருமாறு :

தத்(அது) என்பது பரம்பொருளின் தடத்த நிலை யாகிய சகுணப் பிரம்மத்தைக் குறிக்கும் : அஃதாவது, (1) மாயை, (2) மாயையில் தோன்றும் பிரதிபிம்பம், (3) அதன் ஆதார அறிவாகிய முதற்பொருள் என்னும் மூன்றனது கலப்பு.

த்வம் (நீ) என்பது ஆன்மாவின் தடத்த நிலை யாகிய சீவனைக்குறிக்கும் : அஃதாவது, (1) அவித்தை, (2) அதில் தோன்றும் ஆபாசன், (3) அதன் அதிட்டான சேதனம் என்னும் மூன்றனது கலப்பு.

அஸி (ஆய் இருக்கிறாய்) என்பது இவ்விரண்டன் ஐக்கியத்தை (ஏகத்துவம் அல்லது முற்றொருமையை) உணர்த்துகிறது. இவை இம்மூன்று சொற்களின் இயற்பொருள் (வாச்சியார்த்தம்).

இங்கு தத், த்வம் என்பவற்றின் இயற்பொருளைக் கொள்ளுமிடத்து, அவற்றிற்கு முற்றொருமை ஏற்படவில்லை. அதனால், அஸி என்னும் சொற்பொருளுக்கு ஏற்குமாறு. அவ்விரண்டு பொருள்களின் முன்னி

ரண்டு கூறுகளை விட்டு (தியாகம்செய்து) மூன்றாவதாக உள்ள அதிட்டான சேதனத்தை (ஆதார அறிவை) மட்டும் பொருளாகக்கொண்டால், முற்றொருமை ஏற்படுகிறது. அஃதாவது தத், த்வம் என்னும் சொற்களின் விட்டும் விடாத இலக்கணைப் பொருள்களைக் கொள்ளும்போது அவற்றின் முற்றொருமை பெறப்படுகிறது. இவ்விலக்கணை பாகத்தியாகலக்கணை எனவும் குறிக்கப்பெறும்.

இங்ஙனம் அவர் கூறுவதைக் கணக்கியல் நூல் முறையில் வைத்துக்காண்டல் விளக்கம் தரும்.

தத் த்வம் அஸி என்பதன் இயற்பொருள் அது ≡ நீ, அஃதாவது.

மாயை + அவ்வுபாதியுள்ள ஆபாசன் + ஆதார அறிவு ≡ அவித்தை + அவித்தையாகிய உபாதியுள்ள ஆபாசன் + ஆதார அறிவு,

இது பொருந்தாமையின், பாகத் தியாகம் செய்து, அவற்றின் சொரூப வியல்பைக் கொள்ளும்போது.

ஆதார அறிவு ≡ ஆதார அறிவு எனச் சரியான முற்றொருமை கிடைக்கிறது எனக்கூறி மகிழ்வர்.

இங்ஙனமே, அஹம்பிரஹ்மாஸ்மி, ஸோயமாத்மா என்பவற்றின் பொருளும் கொள்ளப்படும். இவ்வாறு மகாவாக்கியத்தால் தோன்றும் பொருளைத் தெளிந்து 'சச்சிதானந்த சங்கரனைகவே அச்சம் நீங்குபு தன்னை அறிந்தவன்' கைவல்ய முத்தியைப் பெறுகிறான் என்பது அவர்தம் கொள்கையாகிய நம்பிக்கை.

மேற்கூறியவற்றில் மாயையும், அவித்தையும். உள்ளது எனவோ, இல்லது எனவோ, உளதும் இலதும் எனவோ கூறமுடியாத, சொல்லொணுப் பொருள்கள் (அநிர்வசனீயம்) என்பர்.

இங்ஙனம் கூறுதல், 2 × 0 = 0, 5 × 0 = 0; ஆதலால், 2 × 0 = 5 × 0; இதிலிருந்து, 0 ஆல் வகுக்க, 2 = 5 என்பது கிடைக்கிறது எனக் கொள்ளும் கணக்கறிவான் கூற்றேடு ஒத்துள்ளது. 0 ஆல் வருத்தல் வரையறுக்கப்படாதது; ஆதலால், இவ்வழியும், முடிவும் தவறு என்பர் நுண்ணறி வுடையோர்.

இனி, சித்தாந்தசைவர் மகாவாக்கியம் பற்றிக் கூறுவது; விடந்தீண்டப்பட்டவனது உய்திக்குக் கருடோஹம்பாவனை செய்யப்படுகிறது. பயனும் கிட்டுகிறது. பாவனைசெய்வோன் கருடன் அல்லன்; அவனுன்மா அம்மந்திரத்தைச் சார்ந்து அதுவாக நிற்கும். அதுபோல மலவாதனை நீங்குவதற்குச் செய்யவேண்டிய சிவோஹம் பாவனையைக் குறிப்பனவே மாவாக்கியங்கள்.

தத்(அது) என்றது முதற்பொருளை; த்வம் (நீ) என்றது உபதேசம் பெறும் ஆன்மாவை. 'ஆட்டுவித்தால் ஆகராருவர் ஆடாதாரே' என்றுற்போன்ற மறைமொழிகளால், முதற்பொருள் செலுத்துவது, ஆன்மா செல்லுவது என்பது விளங்கும். இந்தப் பிரேரக பிரேரப்பிய சம்பந்தத்தை உட்கொண்டு, யான் எனது என்னும் செருக்கின்றி முதல்வன் வயப்பட்டு நிற்றலாகிய திருவருட் பிற்றைநிலையை விதிப்பனவே அவை எனக் கொள்ளப்படும்.

கண்டஇவை அல்லேன்நான் என்றகன்று காணாத
கழிபரமும் நான் அல்லேன் எனக்கருதிக் கசிந்த
தொண்டினெடும் உளத்தவன்றான் நின்றகலப்பாலே
சோகம் எனப் பாவிக்கத் தோன்றுவன்வே றின்றி;
விண்டகலும் மலங்களெலாம் கருடதியா னத்தால்
விடமொழியும் அதுபோல விமலதையும் அடையும்
பண்டைமறைகளும் அதுநான் ஆனேன் என்று
பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே.

—சிவஞானசித்தி, சுபக்கம் 298.

என்னும் திருவிருத்தத்தின் செம்பொருளைக் கருத்திற்கொள்க. (446)

ஆரு றகன்ற வணுத்தொம் பதஞ்சுத்தம்
ஈருன தற்பர மெய்துப சாந்தத்துப்
பேரு கியசீவன் நீங்கிப்பிர சாதத்து
வீருன தொந்தத் தசிதத்வ மசியே. 2568

க—து: இது தத்வமஸி என்னும் உபதேசத்தின் செம்பொருள் உணர்த்துகின்றது.

பொ—ரை: ஆன்மதத்துவம், வித்தியாதத்துவம் சிவதத்துவம் என வகைப்படும் தத்துவங்களை அவற்றின் தொழிற்பாட்டைச் சுட்டி இது, இது எனக் கழித்து அவற்றின் நீங்கி நிற்கும் உயிரே சுத்த நிலையைத் தலைப்படும் நிலைக்கண் துவம் என்னும் சொற்பொருளாம்: அவற்றைத் தன்கண் ஒடுங்கக் கொள்ளும் தற்பதப் பொருளைத் தலைப்பட்டு எய்தும் ஒழிவில் ஒடுக்கமாகிய உபசாந்தத்தில் சிவப்பேறு ஆதற்பொருட்டு, ஆசான் திருவருளால் மலவாசனை

நீங்கி உயர்நிலை (சிவத்துவ விளக்கம்) ஆதற்கு ஏது வாக த்வம் தத் அஸி எனக் கூறக் கேட்பதே தத்வமசி ஆகும்.

வி – கு : பேறு ஆகிய என்னும் இடத்தில் ஆகிய–செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். பிரசாதம் – குருவருள். ஆன என்னும் பெயரெச்சம் ஏதுப் பெயர்கொண்டு முடிந்தது. அணு–உயிர். (447)

ஆகிய வச்சோயங் தேவதத் தன்னிடத்
தாகிய விட்டு விடாத விலக்கணைத்
தாகுப சாங்தமே தொங்தத் தசியென்ப
ஆகிய சீவன் பரன்சிவன் ஆமே. 2569

க – து : இது தொந்தத்தசி என்பதற்குப் பிறர் கூறும் பொருளும், தாம் கூறிய பொருளைக்கொண்டு பாவிப்போர்க்கு எய்தும் பயனும் கூறுகின்றது.

பொ – ரை : வழக்கில் உள்ள அந்த அவன் இத் தேவதத்தன் (ஸ: அயம் தேவத்த:) என்னும் தொட ரில், அவன் என்பதில் அடையாகவுள்ள இறந்தகாலம் இடம், செய்தி என்பவையும், இத்தேவதத்தன் என்ப தில் அடையாக உள்ள நிகழ்காலம், வேறு இடம், செய்தி என்பவையும் வேறுபடுதலின் அவை விடப் பட்டு, ஈரிடத்தும் மாறாது உள்ள தேவதத் தன் என்னும் மகன் மட்டும் ஒன்றேயாகி ஐக்கியமாதல் போல, நீ அது என்பதில் அறித்தை. அதில் தோன்றும் ஆபாசன், மாயை. அதில் தோன்றும் ஆபாசன் என்பவை விடப்பட்டு, அதிட்டான சைதன்யம் (ஆதார அறிவு) ஒன்றேயாய் ஐக்கியம் எய்தும் என்பர் ஒரு சாரார்; இங்ஙனம் தெளியுங்கால்

உபசாந்தநிலை எனவும் கூறுப. தொந்தத்தசி என்னும் உபதேசம் பெற்று அங்ஙனம் பாவிக்கும் சீவன் திருவருள் வயப்பட்டோனாய்ப் பேரின்பம் எய்துவோன் ஆவன் எனவே யாம் கொள்வேம்.

வி-கு: பரன் - பரத்தின் வயப்பட்டோன், சிவன் - சிவத்துவ விளக்கம் பெற்றோன். (448)

துவந்தத் தசியே தொந்தத் தசியும்
அவைமன்னு மந்நுவயத் தேக மான
தவமன்னு தத்துவ மசியே தாந்த்
சிவமாகும் அதுஞ்சித் தாந்த வேதமே. 2570

க-து: இது பெருஞ்சொல்லின் வடிவுவேறுபாடு உணர்த்துகின்றது.

பொ-ரை: நீ அதுவாயிருக்கிறாய் என்னும் பொருளுடையதே தொந்தத்தசி; அவ்விருபொருளும் நிலைபெற்ற இயைபு காரணமாக ஒருமையுடையவாயின. மிகவும் வழக்கில் உள்ள தத்துவமசி என்பது உபநிடதத்தில் உள்ள மங்கலப் பொருளாகும். ஏனைய சிவாயநம என்பதும் வேதத்தின் துணிவே ஆகும்.

வி-கு: துவம் தத் அசி என்றது பொருண்மை குறித்து நின்றது ஏனையது சொல் உணர்த்தி நின்றது. அந்நுவயம் - இயைபு; அஃதாவது, அத்துவித மெனப்படும் இருமையின் ஒருமை, பொருண்மையால் இரண்டேயாயினும் எப்பொழுதும் ஒன்றியே நிற்றல். சிவம் - மங்கலம்; சிவமாகும் என்பதற்கு சிவத்துவ விளக்கத்திற்கு வாயிலாகும் என உரைப்பினும்

அமையும். வேத சித்தாந்தமே என்பது சொல்நிலை மாறிவந்தது. அதுவும், மிக விளங்கி நிற்கும் திருவைந்தெழுத்தும் என்றபடி..

இதுவும் மேலைப்பாட்டும் இடைச் செருகல் ஆகலாம். (449)

துரியம் அடங்கிய சொல்லறும் பாழை
அரிய பரமென்பர் ஆகார் இதன்றென்னார்
உரிய பரம்பரம் ஆமொன் றுதிக்கும்
அருநிலம் என்பதை ஆரறி வாரே. 2571

க–து : இது துரியங்கடந்த நிலையை உணர்த்து கின்றது.

பொ – ரை : துரியம் கடந்த மோன நிலைக்கண் இன்னது எனக் குறிக்கப்படாமல் நின்ற நிலையை அறிவிற்கு அறியக்கூடாத பரம் என்று, அந்நிலையைத் தலைப்படாதார் கூறுவர்; அவர் அங்கு அனுபவப்படும் பொருளை ஆன்மாவின் வேறு எனக் கூறுவதில்லை; அஃது அவர்கருத்தில் சத்தும் அன்று, அசத்தும் அன்று எனப்படும் சூனியப்பொருள் ஆம். ஆன்மா நுகர்வதற்கு உரிய மேலான பேரின்ப ஒளியாகிய ஞாயிறு தோன்றும் சுத்தவெளியே அது என்பதைத் தலைப்பட்டுணர்ந்தார் அன்றி ஆர் அறிதல் கூடும்.

வி – கு : ஆகார் – சிவத்தை அணைந்து, சிவம் ஆகாதார். அருநிலம் – மல மாயை வினை என்பவற்றின் வாதனையும் இல்லாத துரியாதீத நிலை. அருமை இன்மையினையும்; நிலம் நிலையினையும் குறித்து நின்றன; அது துரியாதீத ஆனந்த நிலை.

உதிக்கும் அருநிலம் என்னும் தொடரின் அனுப வப் பொருளை,

" இன்றெனக் கருளி இருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை"

என்னும் மதுரவாசகத்தால் உணர்க. (450)

தொம்பதம் தற்பதம் சொல்லும் அசிபதம்
நம்பிய முத்துரி யத்துமேல் நாடவே
யும்பத முப்பத மாகும் உயிர்பரன்
செம்பொரு ளான சிவமென லாமே. 2572

க – து : இது பெருஞ்சொல் முதல்வன் குணம் ஆன்மாவின் மாட்டு மேம்பட்டு விளங்குதற்கு வேண்டிய பாவனையின் பொருட்டு மெய்ந் நூல்களில் எழுந்தது எனவும், அப்பாவனையின் பயன் துரியங் கடந்து சிவமாய் அமர்வது எனவும் உணர்த்துகிறது.

பொ – ரை : நீ, அது, ஆகிறாய் என்னும் செம் பொருள் உணர்த்தும் முப்பதங்களின் தொடர், மேற் கூறியபடி, விரும்பிய மூன்று துரியங்களிலும், அறியாமை, அறிவு, அருள் என்பவற்றின் மேலது ஆகிய சிவத்தை உணர்வற உணர்வதற்குப் பொருந் திய சொல் ஆகும்; அவை மூன்றும் முறையே சீவனை யும், திருவருளாய் நிற்கும் பரனையும், செம்பொருளான சிவமாய் ஒன்றி நிற்றலையும் உணர்த்துவன எனக் கூறுதல் தகும்.

வி–கு : நம்பிய–உயிரால் விரும்பப்படும். உழைப் பின் பின் ஓய்வும், ஓய்வின்பின் உழைப்பும் பிறப்பு

நிலையில் விரும்பப்படுவன. வீட்டுநெறியில் விரும்பப் பெறுவது தூநிலையாகிய அருள்நிலை. உழைப்பும் ஒய்வுமே சகலகேவலங்களாம் என உணர்க.

திருவைந்தெழுத்தும் பெருஞ்சொல் எனக் கொள்க. கொண்டு, 'துஞ்சலும் துஞ்சல் இலாத போழ்தினும்–நெஞ்சகம் நைந்து நினைமின் நாடொறும்' என்னும் ஆளுடையபிள்ளையார் செவியறிவுறூஉ நினைக்கத்தக்கது.

முத்துரியம் என்றது சீவதுரியம், பரதுரியம், சிவ துரியம் ஆம் எனவும், அவை முறையே உயிரின் செயல் அறல், அருட்செயலறல். சிவச்செயல் அறல் எனவும் கூறுப.

திருவைந்தெழுத்தில் சிகாரம் தத்பதப் பொருளை யும், வா' என்னும் உயிர்மெய் அசிபதப் பொருளை யும். 'ய' என்பது துவம்பதப் பொருளையும் பயக்கும் என்றல் சித்தாந்த மரபு. (451)

வைத்த துரிய மதிற்சொரு பானந்தத்
துய்த்த பிரணவ மாமுப தேசத்தை
மெய்த்த விதயத்து விட்டிடு மெய்யுணர்
வைத்த படியே யடைந்துநின் றானே 2573

க - து : இது பிரணவமும் மாவாக்கியப் பயனைத் தரும் என்று உணர்த்துகின்றது.

பொ – ரை : ஏனைய உணர்வு நிலைகளின் உயர்ந்த தாக வைத்த நின்மல துரியத்தில் உள்ளாரை முதற் பொருளின் தன்னியல்பாகிய இன்ப அனுபவத்தில் உய்க்கவல்லது பிரணவ உபதேசமும் ஆகும்; எவற்றை

யும் கடந்த மெய்ப்பொருளை உணரலுறும் பாசத்தின் நீங்கித் தன் இயல்பில் நின்ற உணர்வில், அவ்வுபதேசத்தைப் பயின்றபடியே ஒருவன் சிவனடி சேர்ந்து இன்புறு நிலைக்கண் நிலையுறுவன் என்பது ஒருதலை.

வி - கு: சொரூபம்—தன்னியல்பு; இது முன்னரும் குறிக்கப்பட்டது. உய்க்கும் எனற்பாலது விரைவுப் பொருள் தருதற்கு உய்த்த என நின்றது. மெய்த்த — தன்னியல்பில் தனித்து நின்ற. இதயம் — ஈண்டு ஆன்ம உணர்வு விட்டிடும் மெய்யுணர் இதயம். மெய்த்த இதயம் எனக் கூட்டிப் பொருள்கொள்க.

பிரணவம் — ஓம் மொழிமறை. எல்லா உயிராற்றலையும் முதற்பொருளிடத்து வணங்கச் செய்வது பிரணவம் ( ப்ராணாந் ஸர்வாந் பரமாத்மநி ப்ரணாமயதி இதி ப்ரணவ: ) என்பர் மேலோர்.

"உய்யஎன் உள்ளத்துள் ஓங்கார
மாய்நின்ற - மெய்யா"

என்னும் சிவபுராணம் நினைவு கூர்க. (452)

நனவாதி ஐந்தையும் நாதாதி யில்வைத்துப்
பினமாம் மலத்தைப் பின்வைத்துப் பின்சுத்தத்
தனதாஞ் சிவகதி சத்தாதி சாந்தி
மனவா சகங்கெட்ட மன்னனை நாடே 2574

க — து: இது கேவல சகலங்களைக் கடக்குமாறு குறிப்பிக்கின்றது.

பொ — ரை: மாசகலத்தில் உயிரை விட்டு நீங்கி நிற்கும் மலத்தை [illegible] செய்து, ஆண்டு,

நிகழும் நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப் படங்கல் என்னும் ஐந்து அவத்தைகளையும் நிகழ்விப்பவை பிரணவகலைகளாகிய அகரம், உகரம், மகரம், விந்து, நாதம் என்பவை என அக்கலைகளை உணர்ந்து அவற்றை முறையே ஒன்றின் ஒன்று அடங்கச்செய்து, ஒலியைக்கடந்த பின், மனத்தைப் பற்றி, பின்மனத்தையும் கடந்து நிற்பின், சுத்தம் சிவகதி இங்ஙனம் பயில்வானுக்கு உரியதாம்; சத்தம் முதலிய புலன்களைக் காணும் பொருள் அறிவு நீங்கி அமைதி நிலை கைகூடும்; அவ்வமைதி நிலையில் மாற்றம் மனங்கழிய நின்ற நிலைபேறுடைய முதல்வனை அவனருளே கண்ணாகக்கொண்டு நாடு.

வி - கு ; நாதாதி என்றது எதிர் நிரல் நிறை. பின்னமாம் மலத்தைப் பின்வைத்து நனவாதி ஐந்தை யும் நாதாதியில்வைத்துப்பின் சுத்தச்சிவகதி தனதாம்; சத்தாதி சாந்தியும் ஆம்: அச்சாந்தியில் மன்னனை நாடு என முடிக்க. வைத்து - பின்னையது. செய என்னும் வாய்பாட்டின் திரிபு. (453)

பூரணி யாதது புறம்பொன் றிலாமையின்
பேரணி யாதது பேச்சொன் றிலாமையின்
ஓரணை யாதது ஒன்று மிலாமையின்
காரணம் இன்றியே காட்டுந் தகைமைத்தே. 2575

க-து : இது சிவபரம்பொருளைத் திருவருட் கண்ணால் நோக்க வேண்டுதற்கு உரிய காரணம் உணர்த்துகின்றது.

பொ - ரை : முதற்பொருளாகிய சிவம் எல்லாம் தன்னுள் அடங்கக் கொண்டு தனக்கு வேறாக ஒரு

பொருள் இன்றுமாறு உள்ளதாதலின், அது விரிந்து நிறையாதது; அது சொல்லிறந்து நின்று குணங்குறி யற நிற்பதாகலின், பெயர் இல்லது; அஃது ஒரு செயலும் இல்லாததாகலின், உயிர்களின் ஓர்விற்கு அப்பாற்பட்டது. ஆயினும், உலகப் பொருட்காட்சிக்கு வேண்டப்படும் காட்டு முதலிய காரணம் இல்லாமலே, தன் அருளால் தன்னை விளக்கியருளும் பேரருளை உடையது.

வி - கு: இவ்வுலகனைத்தையும் தன் ஆளும் ஆற்றலால் ஆண்டு காக்கும் உருத்திரன் ஒருவனே; அவன், பிறவற்றை நோக்க இரண்டாமவனாக நிற்பான் அல்லன்: மக்களே! அவன் நுமக்குப்பின் மறைந்து நிற்கின்றான் (ஏகோஹிருத்ரோ நத்விதீயாய தஸ்துர்ய இமாங் லோகாங் ஈசத ஈசநீபி: | ப்ரத்யங் ஜநா: திஷ்டதி)—சுவேதாசுவதரம், 3, 2.

"தன்னருளால் - பாவிப்பது பரம்; இல்பாழ்"—சிவஞானபோதம் 6, 2, 3.

**சென்றிவன்தான் ஒன்றில் சிவபூ ரணஞ்சிதையும்;**
**அன்றவன்தான் ஒன்றுமெனின் அந்நியமாம்-இன்றிரண்டு**
**அற்றநிலை ஏதென்னின் ஆதித்தன் அந்தன்விழிக் [டும்**
**குற்றமற நின்றதுபோற் கொள்.**

**—உண்மை விளக்கம்-48.**

**ஏதுக்க ளாலும் எடுத்த மொழியாலுமிக்குச்**
**சோதிக்க வேண்டா; சுடர்விட்டுளன் எங்கள்சோதி**
**மாதுக்கம் நீங்கல் உறுவீர்மனம்பற்றி வாழ்மின்!**
**—சம்பந்தர், திருப்பாசுரம்-5.**

இம்மேற்கோள்களை உளங்கொள்க. (454)

நீயது வாஞய் எனநின்ற பேரூரை
ஆயது நானேனென் என்னச் சமைந்தறச்
சேய சிவமாக்கும் சீர்நந்தி பேரருள்
ஆயது வாயனந் தானந்தி யாகுமே. 2576

க – து : இது பெருந்தொடர்களின் வகையும் பயனும் உணர்த்துகின்றது.

பொ – ரை : அருளாசான் செவி அறிவுறுத்தும் போது அது நீ (தத்துவமசி) என முன்னிலையிடம் பற்றி அமைந்த பெருந்தொடர், சிந்தையில் நாடப் படும். அது நான் (சோகம்) என மாணுக்கனுல் பாவிக்கப்படும்போது தன்மையிடம் பற்றி அமைத லால், மாணுக்கனது பாசம் அற அவன் சிவத்துவ விளக்கம்பெறுவன். அதுவரை மன மொழிகளைக் கடந்து அப்பாற்பட்ட சிவமாக ஆன்மாவை ஆக்கு வது சிறப்புள்ள பேரின்ப வடிவினஞகிய முதல்வன் பேரருளே ஆகும். இந்த ஞானநெறியில். ஆன்மா முதற்கண் அத்திருவருளாய், பின் சிவத்துவம் விளங்கப்பெற்று, முடிவில் முடிவில்லாத பேரின்ப மயன் ஆவன்.

வி – கு : இது தத்வமசி என்பது முன்னிலைக் கண் உபதேச உருவில் அமைந்தது எனவும், சோஹம் (அஸ்மி) என்பது தன்மைக்கண் பயில்வதற்கு உரிய வடிவில் அமைந்து உள்ளது எனவும் குறிப்பித்தல் காண்க. மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் மொழியாததனையும் முட்டின்றி முடித்தல் என்னும் உத்தியால், சோயம் (அஸ்தி) எனப்படர்க்கை இடம் பற்றி எழுந்த பெருஞ்சொல் ; ஆசிரியன் ; மாணுக்கனை

நோக்கி 'இது அவன்' என அருள் நினைவு புரிதற்குச் சமைந்தது எனக் கொள்க.

செய்யுளாதலின், அது நீ என்பது நீ அது என நின்றது, ஆய் அது – ஞானக் கண்ணினிற் சிந்தைக் கண் நாடப்படும் பரம்பொருள். அற – 'கருடோகம்' என்னும் மறையைப் பயின்றவனுக்கு அரவின் நஞ்சு நீங்குவதுபோல, மலமாயை வினைத் தளை அற. அருளாய், அதுவாய், ஆனந்தியாகும் என்றது ஆன்மா அம்முறையில் பேரின்ப நிலையைத் தலைப்படும் என்றபடி.

சிவம் ஆக்கும் என்பது பேரருளுக்கு அடை.

"அவனிவன் ஆன தவனரு ளால்ல(து)
இவன் அவன் ஆகான்என் றுந்தீபற"

என்னும் உந்தியுரையைக் கருதுக. பேருரை – மகா வாக்கியம். (455)

உயிர்பர மாக உயர்பர சீவன்
அரிய சிவமாக அச்சிவம் வேதத்
திரியிலும் சீராம் பராபரன் என்ன
உரிய உரையற்ற ஓமய மாமே. 2577

க – து : இது சீவன் சிவமாதற்கண் உள்ள இடை நிலையும், சிவம் என நிற்கும் முத்த நிலைக்கண் அதற்குப் பிரணவமே வடிவாமாறும் உணர்த்து கின்றது.

பொ – ரை : உயிர் திருவருளின் வழிநின்று அத் திருவருளேயாக உயரும்போது பரசீவன் எனப்படும்;

அவ்வருள்மயமான ஆன்மா, திருவருளுக்கு முதலாக உள்ள சிவத்தைத் தலைப்பட்டு அதில் அழுந்தி நிற்கும் நிலையில் சீவன் என்னும் பெயர் நீங்கிச் சிவம் எனப் படும்; அங்ஙனம் சிவம் என நின்ற ஆன்மா உரை யற்ற நிலைக்கண் உய்க்கும் பிரணவ வடிவம் ஆகும். அப்பிரணவம் மூன்று வேதத்திலும் சிறப்புள்ள பரா பரன் எனப் பேசப்பட நிற்கும் மாண்பு உடையது

ஓங்காரமே பிரம்மம் ஆதலின், அதன் தியானம் ஆன்மாவைப் பிரம்மநிலை எய்துவிக்கின்றது என்பது கருத்து.

வி – கு : பரம் – திருவருள். திரிவேதத்திலும் என்பது வேதத்திரியிலும் எனச் சொன்னிலை மாறி வந்தது.

ஆன்மா அருளாய் நிற்கும் நிலை துரியம் எனவும், சிவமாய் நிற்கும் நிலை துரியாதீதம் எனவும் குறிக்கப் படும். இது மேலும் உரைத்தாம்.

ஒருபொருட் கொள்கையினர் விசாதீய, சசாதீய, சுவகத பேதம் இன்றிச் சிங்மாத்திரமாக உள்ளதே முதற்பொருள் என்பர். சித்தாந்தசைவர்கள் அம் மூன்று பேதங்களையும் உள எனவேகொண்டு, உப நிடதங்களுக்கும் மற்றும் அனுபவ உரைகளுக்கும் பொருளொருமைகண்டு முடிபு உரைப்பர். முதற் பொருள் ஞானமயமான எண்குணங்களையுடைய குணிப்பொருள் : இங்ஙனம், தன்கண் குணகுணி என இருமை கூறுதலே சுவகதபேதம் ; இறைவன் அறிவிக்கும் நுண் அறிவு வடிவினன், ஆன்மா அறிவித்தால் அன்றித் தானே அறியமாட்டாத பரு

அறிவு உடையது. இது சசாதீய பேதம், தன் இனமாக வேறுபொருள் உண்டு எனக்கொள்ளுதல், அறிவற்ற பொருள்களாகிய மல மாயை வினைகள் உள்ளன எனல் விசாதீய பேதம்: தன்னினமல்லாத பிறபொருள் உண்டு எனக்கொள்ளுதல். (456)

வாய்நாசி யேபுரு மத்தகம் உச்சியில்
ஆய்நாசி உச்சி முதலவை யாய்நிற்கும்
தாய்நாடி யாதிவாக் காதி கலாதி
சேய்நா டொளியாச் சிவகதி ஐந்துமே. 2578

க—து: இது கழுத்திற்குமேல் சுழுமுனை நாடியில் மனம் ஒருங்கிக் குறித்து நிற்கத்தகும் இடங்களும், அங்ஙனம் மனம் ஒருங்குவார்க்கு உளதாகும் பயனும் உணர்த்துகின்றது.

பொ—ரை: வாயின் நாசியாகிய அண்ணத்தின் அடியும், புருவ நடுவும், நெற்றியின் நடுவும், தலையின் உச்சியும் என்பவற்றில், ஆய்ந்து உணரப்படும் வாய் நாசியும், தலையுச்சியும் முதன்மையுடையவையாய் நிலை பெறும். தாய் நாடியாகிய சுழுமுனையின் தொடக்க மாகிய மூலம் முதலாக எழும் நால்வகை வாக்குகளின் மூலமும், கலை முதலியனவும் சேய்மைக்கண் நாடிக் காணப்படும் ஒளி வடிவில் விளங்குவனவாக, ஐந்தும் சிவத்தைச் சேர்வதற்கு உரிய நெறியாகும்.

வி—கு: நாசி—வாயிலின் மேற்சட்டம்: வாய் நாசி—வாய்க்கு நாசிபோன்ற நா அடி அல்லது அண் ணத்தின் அடி மத்தகம்—தலை: தலை இங்குப் புருவ நடு விற்குமேல் அறிவுத்துளைக்குக் கீழ் உள்ள நடு இடத்

ன்தக் குறிக்கின்றது. உச்சி - அறிவுத் துளையுள்ள இடம் வாக்கு - சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் நால்வகை வாக்குகள்.

வாக்கு ஆதி - இவற்றின் ஆதியாகவுள்ள நாதம், விந்து, மகாரம், உகாரம்; அகாரம்; இவற்றின் பற்றுக்கோடாகிய புருடன், சித்தம், மனம், புத்தி, அகங்காரம்; அதிதெய்வமாகிய சதாசிவன், ஈசன், உருத்திரன், மால், அயன் என மூவகைப்பட உணர நின்ற ஐந்து பொருள்கள்.

கலாதி - கலை, காலம், நியதி, வித்தை, அராகம் என்னும் ஐந்து.

பிராசாத யோகத்தால் ஐந்தாகக் குறிக்கப்படும் பிரணவ கலைகளை சுழுமுனை நாடியின் பல இடங்களில் உற்றுக்கண்டு மேற்செல்லுதல் சிவகதியாம் என்றபடி. அகரம் கோஷ கலையாகிய ஹகாரத்தோடு விரவி இதயம்வரை நிற்றயும்; அத்ற்குமேல் உகாரகலை அவற்றேடியைந்து கழுத்துவரை நிறையும்; அதற்குமேல் மகாரகலை நாவடிவரை நிலவும்; புருவநடுவில் எழுத்தோசை இறந்த விந்துகலை நிலவும்; அதற்குமேல் நாதகலை நிலவும்; உச்சியின்மேல் நிராதார கலைகள் நிலவும் என்பர். முடிந்த நூல்களுட் காண்க. (457)

அறிவறி யாமை யிரண்டு மகற்றிச்
செறிவறி வாயெங்கு நின்ற சிவனைப்
பிறிவறி யாது பிரானென்று பேணும்
குறியறி யாதவர் கொள்ளறி யாரே. 2579

க-து : இது சுத்த நிலையைத் தலைப்பட்டுச் சிவ பிரானை உடனிற்போன் எனக்கொண்டு அறிவால் வழிபட்டார்க்கன்றி வீடுபேறு கிட்டாது என உணர்த்துகின்றது.

பொ-ரை : தத்துவங்களோடு இயைந்து நின்று உலகப் பொருள்களைக்கண்டு நுகர்ந்துவரும் சகல மும், அவற்றைக் கூடாது சோர்ந்து இருளில் அழுந்தி நிற்கும் கேவலமும் என்னும் இருநிலைகளையும் நீக்கித் திருவருள் நிலத்தில் ஒருவன் புகுதல்வேண்டும்; புகுந்து, எங்கும் செறியும் ஞானவடிவச் சிவனை உணர்ந்து ஒன்றி அவன் ஆண்டவன், தான் அடிமை என்பதை மறவாது வழிபட்டு நிற்கும் உயர்ந்த குறிக் கோளை அறியாதவர் மெய்ந்நூல்களின் கொள்கையை அறியாதவரே ஆவர்.

வி-கு : குறி-குறிக்கோள் - கொள்-கொள்கை முதனிலைத் தொழிற்பெயர். (458)

அறிவார் அறிவன அப்பும் அனலும்
அறிவார் அறிவன அப்பும் கலப்பும்
அறிவா னிருந்தங் கறிவிக்கி னல்லால்
அறிவா னறிந்த அறிவறி யோமே. 2580

க-து : இஃது அறிவினால் அறிந்த யாவும் அசத் தாம் எனவும், அறியும் அறிவிற்கு வேறாக அறிவிக்கும் அறிவு உளது எனவும் உணர்த்து கின்றது.

பொ-ரை : அறிவுடையார் அறியும் பொருள்கள் நீரும் நெருப்பும் போன்ற அறிவில் பொருள்களும்

அவற்றின் கலப்பால் உண்டாகும் காரியப்பொருள்களும் ஆகும். இங்ஙனம் அறியும் அறிவாகிய ஆன்மவுணர்வின்கண் உயிர்க்கு உயிராய்க் கலந்து உடனின்று அறிவிக்கும் முதற்பொருளின் உபகாரம் இன்றி ஒருவன் அறிவதும் இல்லை; அவ்வாறு அறியும் போதும், அறியும் அறிவாகிய தானும், அறிவிக்கும் அறிவாகிய சிவமும் அறியப்படுவதில்லை.

எனவே, சுட்டறிவால் அறிந்தவை யாவும் அறிவில் பொருளாய் அழிவனவே என்பதும் திருவருட்கண் பெற்றபின்னரே தன்னுண்மையும் தலைவனது உண்மையும் உணரப்படும் என்பதும் கூறியதாயிற்று. (459)

அதீதத்துள் ளாகி அகன்றவன் நந்தி
அதீதத்துள் ளாகி அறிவிலோன் ஆன்மா
மதிபெற் றிருள்விட்ட மன்னுயிர் ஒன்றும்
பதியிற் பதியும் பரவுயிர் தானே. 2581

க-து: இஃது ஒருவன் தலைவனையும் தன்னையும் உண்மையியல்புபற்றி உணருமாறு கூறுகின்றது.

பொ-ரை: சிவன் நின்மல துரியாதீத நிலையில் தலைப்படுதற்கு உரியனாய் மேலோங்கி நின்றவன்; அந்நிலையில், சிவனோடு ஒன்றித் தான் எனத் தன்னை அறிதல் இன்றிச் சிவமாய் நின்று பேரின்பம் நுகர்வோன் ஆன்மா, மெய்யுணர்வைப் பெற்றுப் பாசத்தைவிட்டு ஒன்று எனக் கூறப்பெறும் இறைவன் திருவடியில் ஒன்றிநிற்கும் நிலைபெற்ற உயிர் பரவுயிர் எனக் கூறப்படும். (460)

அடிதொழ முன்னின் றமரர்க ளத்தன்
முடிதொழ ஈசனும் முன்னின் றருளிப்
படிதொழ நீபண்டு பாவித்த தெல்லாம்
கடிதொழக் காணென்னுங் கண்ணுத லானே 2582

க-து: இது முதல்வன் தன் அடியார்க்கு எல்லா விருப்பங்களையும் நிறைவிப்பன் என உணர்த்துகின்றது.

பொ – ரை: தேவர்கள் தலைவணங்கிய இறைவன் திருவடியைத் தொழுதற் பொருட்டு அவன் திருமுன்பு நின்று, முடி அவன் அடியில் தோயும்படி இறைஞ்ச, அவன் அங்ஙனம் இறைஞ்சியோனைத் தன் பின் ஆக்கி, தானே அவன் எனத் தலைமை நல்கி, உலகத்தார் அவனைத் தொழும்படி, நீ முன் நினைத்த எல்லா விருப்பங்களும் விரைந்து உன்னைத் தொழுவதைக்காண் என அருள்வன்; அவன் கண்ணுதலான், நீ கண்ணியதை (கருதியதை)க் கருதி முடிப்பவன் என உணர்க.

வி - கு: முழுத்தழல் மேனித் தவளப்
பொடியன் கனகக் குன்றத்
தெழிற்பெருஞ் சோதியை எங்கள்
பிரானை இகழ்திர் கண்டீர்
தொழப்படுந் தேவர் தொழப்படு
வானைத் தொழுத பின்னைத்
தொழப்படுந் தேவர்தம் மாற்றொழு
விக்குந்தன் தொண் டரையே,

என்னும் திருவிருத்தமும்,

"எவன் அதை வணக்கம் எனச் சொல்லி உபாசிக்கின்றானோ, அவனை எல்லா விருப்பங்களும் வந்து வணங்குகின்றன" என்னும் உபநிடத உரையும் சிந்திக்கத் தக்கவை. (461)

நின்மல மேனி நிமலன் பிறப்பிலி
என்னுளம் வந்திவன் என்னடி யானென்று
பொன்வளர் மேனி புகழ்கின்ற வானவன்
நின்மல மாகென்று நீக்கவல் லானே. 2583

க - து: இது முதல்வனால் பெறத்தக்கது உயர்வற உயர்நலம் என்றுணர்த்துகின்றது.

பொ - ரை: சிவபிரான் தூய அருள் உருவினன், பாசத்தடையில்லாதவன், பிறப்பில்லாதவன், வேதங்களால் பொன் நிறம் உள்ளவன் என்று புகழப்படும் மேலோன்; அவன் என் உளம்புகுந்து, இவன் என் அடியான் என உலகிற்கு வெளிப்படுத்தி, என்னைத் தன்னைப்போலத் தூயன் ஆகுக எனக் கருதி, என் பண்டை மலப்பற்றை அற ஒழித்தருளினன்; இங்ஙனஞ் செய்யவல்லான் அவன் ஒருவனே: ஏனையருக்கு அது கூடாது.

வி - கு: சோயமஸ்தி (அவன் இவன்) எனப் படர்க்கையிடத்தில் ஆன்மாவை வைத்துணர்த்தும் பேருரையின் பிரயோகம் உணர்த்தியதும் ஆயிற்று. (462)

துறந்துபுக் கொள்ளொளிச் சோதியைக் கண்டு
பிறந்ததென் உள்ளம் பணிந்து கிடந்தே
மறந்தறி யாவென்னை வானவர் கோனும்
இறந்து பிறவாமல் ஈங்குவைத் தானே. 2584

க — து : இது முதல்வன் ஆசிரியர்க்கு அருளிய முறையை உணர்த்து முகத்தான், உயர்வறவுயிர் நலம் இன்னது என உணர்த்துகின்றது.

பொழிப்புரை : அகப்புறப்பற்றுக்களை விட்டு இறைவன் திருவருளைத் தலைப்பட்டு இயற்கைப் பேரறிவாகிய முதற்பொருளைக்கண்டு, விரைந்து சென்று தோய்ந்து, அவன் அடிக்கீழ்ப் பணிந்து அயரா அன்பு செய்திருந்தேன். முதல்வனும் என்னை இறந்து பிறவாத நன்னிலையில்வைத்துக் காத்து, அவன் நெறியை மக்களுக்கு உணர்த்தும்படி இவ்வுலகில் வாழவைத்தான். (463)

மெய்வாய்கண் மூக்குச் செவியென்னும் மெய்த்
தவ்வாய அந்தக் காரணம் அகிலமும் [தோற்றத்
எவ்வாய் உயிரும் இறையாட்ட ஆடலால்
கைவா யிலாநிறை எங்குமெய் கண்டதே. 2585

க — து : இது முத்தர் முதல்வனது உலக உருவைக் காணுமாறு கூறுகின்றது.

பொ — ரை : உடம்பின் புறத்தே காணப்படும் ஐம்பொறிகளும் அகக்கருவிகளும், பிற எல்லாமும், எவ்விடத்து உயிர்களும் முதல்வின் உடனின்றி தொழிற்படுத்தத் தொழிற்படுகின்றன. ஆதலால், இங்

நிலைக்கண் முதல்வன் உலகவுருவினனாய்க் கை, வாய் முதலிய உறுப்புக்களைத் தோற்றுவியாது நிற்கும் பெருநிலை காணப்படுகின்றது.

வி - கு : திருப்பாசுரம் மூன்றாம் பாட்டின் நான்காம் அடியில்வரும் 'ஆயினும் பெரியார்' என்னும் தொடருக்குச் சேக்கிழார் அடிகள்

*ஆயி னும்பெரி யாரவர் என்பது*
*மேய விவ்வியல் பேயன்றி விண்முதற்*
*பாய பூதங்கள் பல்லுயிர் அண்டங்கள்*
*ஏயும் யாவும் இவர்வடி வென்றதாம்.*

என உரைத்தருளும் மாண்பு உன்னத்தக்கது. (464)

## 37. விசுவக்கிராசம்

அஃதாவது உலகத்தைத் திருவருள் தன்னுள் அடங்கக்கொள்ளுமாறு கூறுதல். விசுவம்-உலகம்; உடல், கருவி, இடம், நுகர்ச்சிப்பொருள் என்னும் அறிவில் பொருள்களும், உயிரும் அடங்கும். கிராசம்-விழுங்கப்படுவது.

உலகம் முதல்வனிடத்தில் ஒடுங்கி மீள உளதாகும் என்பது மெய்ந்நூல்களின் துணிபு. "விரிந்தனை குவிந்தனை விழுங்குயிர் உமிழ்ந்தனை" என்னும் ஆளுடையபிள்ளையார் திருமொழியும், "உயிரவை ஒடுங்கிப் பின்னும் உதிப்பதென் அரன்பால் என்னில்-செயிர் உறு மலத்தின் ஆகும்; சிதைந்ததே தென்னில் சித்தத்(து)-அயர்வொழி காரியங்கள் அழியும் காரணம் கிடக்கும்-பயில்தரு காரியம்பின் பண்டுபோல் பண்

னும் ஈசன் '' என்னும் சிவஞான சித்தித் திருவிருத்த மும் கருதற்பாலன. மலந்தீர்ந்து ஒடுங்கிய உயிர் மீளப் பிறவாது எனக் கொள்க.

இனி, பாசத்தின் நீங்கியஉயிர் சிவோகம் பாவனை யால் தானே உலகை உண்டு உமிழ்வதாக எண்ணிச் செருக்கி நிற்கும் நிலையும் ஞானயோக நெறிக்கண்-இடையீடாய் உண்டு என்பது, ''யாமாம் உலகம் அனைத்தினும் சாட்சி-நாமே என்னும் ஞானமும் கடந்திட்டு - அண்டபிண்டம் யாவும் தோன்றுது-உண்டெனும் உணர்வூடு உறக்கமும் விட்டு-விசுவக் கிராசம் வீறுப சாந்தம்-அசிபதம் குறிக்கும் ஆசையும் தீர்த்து'' என்னும் திருச்செந்தூர்த் திருவகவல் அடிகளால், உணரப்படும்.

திருமந்திரம் இங்குப் பெத்த முத்த ஆன்மாக்களை முதல்வன் விழுங்குமாறே கூறுகின்றது.

முதல்வன் முத்தான்மாக்களைத் தன்கண் அடங் கக் கொள்ளுமாறு, ''யானாகிய என்னை விழுங்கி வெறும்-தானாய் நிலைநின்றது தற்பரமே'' என்னும் கந்தர் அனுபூதியால் விளங்கும்.

அழிகின்ற சாயா புருடனைப் போலக்
கழிகின்ற நீரிற் குமிழியைக் காணில்
எழுகின்ற தீயிற்கர்ப் பூரத்தை யொக்கப்
பொழிகின்ற இவ்வுடற் போமப் பரத்தே. 2586

கு - து. இப்பாட்டு வீடுபேறடைந்த பெருமக் களின் உடம்பு நீங்குமாறு உணர்த்துகின்றது.

பொ-ரை : சிறிதுகாலம் தோன்று நின்று நீங்கும் நீரிற் குமிழியைப்போன்ற உடம்பின் இயல்பை மனம் ஒன்றி அறியின், அழிகின்ற சாயா புருடனைப் போலவும், ஓங்கி எரிகின்ற கருப்பூரக் கட்டியைப் போலவும் ஆன்மாவின் அறிவு விழைவு செயல்களைப் புறத்தே செலுத்தும் கருவியாகிய இவ்வுடல் தன்னைத் தலைப்பட்டாருடைய அறிவு விழைவு செயல்கள் தன்கண் அடங்கக்கொண்டு இன்புறுத்தும் அத்திருவருளின்கண் சென்று ஒடுங்கும்.

வி - கு : நீரிற் குமிழி போன்ற உடம்பை நீரிற்குமிழி என்றார், பாவை போல்வாளைப் பாவை என்றாற்போல. குமிழி என்றாராயினும் அதுபற்றி உண்டு என்று உணரப்படும் நுண்ணுடலும் கொள்க.

"பிறப்பறுக்கல்-உற்றார்க்கு உடம்பும் மிகை" என்பது திருக்குறள்-ஆகலின், சித்தர்கள் உடம்போடு நீடுதலாக இருப்பக் கருதினும் ஞானசித்தி எய்தினோர் உடம்பை விரும்பார் என்பது தெளிவு.

சாயாபுருடன் ஒரு நெறிப்பட்ட மனநினைவில் தோன்றி உளதாய்நின்று, அந்நினைவு நீங்கும்போது தானும் நீங்கும்; அதுபோல, முத்தர்க்கு நுண்உடல், பருவுடல் இரண்டும், முதல்வன் சங்கற்பம் உள்வழி நின்று, உலகிற்கு மெய்ந்நெறி விளக்குதற்குக் கருவியாய்ப் பயன்பட்டு, அச் சங்கற்பம் மாறும் போது நுண்ணிய அருநிலை எய்தி மறையும் எனக் கொள்க. திருவாதவூரடிகள், திருநாளைப்போவார் என்போர் திருச்சிற்றம்பலத்தே மறைந்தனர் என்பதும், அப்பர் அடிகள் 'புண்ணியா உன் அடிக்கே போதுகின்றேன்'

எனப் புகன்று திருப்பூம்புகலூர்ச் சிவலிங்கத்தே மறைந்தார் என்பதும் கருதற்பாலன; இவற்றை அருவ சித்தி எனக் கூறுவாரும் உளர்.

இனி, எழுகின்ற தீயிற் கர்ப்பூரத்தை ஒக்க என்றது ஆளுடையபிள்ளையார் அருட் சோதியிற் கலந்தமைக்கு உவமை. இதனை அருவுருவசித்தி எனக் கூறுவாரும் உளர்.

ஏற்புழிக்கோடலால் இவ்விரண்டு உவமையும் முத்தர் உடம்பு நீங்குமாற்றிற்கே கொள்ளப்பட்டன; உடம்பின் எச்சம் சிறிதும் இராது என்றபடி.

பரம்–திருவருள்; பரத்தேபோம் என்றாராயினும். விதையின் விளைவை அதற்குச் சார்பாகிய நிலத்தின் மேலேற்றி நிலம் விளைந்தது என்றாற்போல, பரத்தாற்றெழிற்படும் மாயையிற்போம் எனக் கொள்க.

அணையால் தடுக்கப்பட்டு நின்ற பெருவெள்ளம் அவ்வணை முறிந்தபோது. ஆற்றின்வழி விரைந்து ஓடிக் கடலில் கலந்து. பின் மீளாது; அதுபோல, மலத்தின் நீங்கிய ஆன்மா அயரா அன்பின் அரன் கழல் சென்று மீளாது. பண்டைய பயிற்சிவயத்தால் அன்றித் திருவருள் வயத்தால் ஒருகால் மீளினும் அதன் உடலும் கருவியும் சிவமயமாய் விளங்கி, உலகத்தார்க்குச் சிவஞானத்தைப் பொழிதல் பற்றிப் "பொழிகின்ற அவ்வுடல்" என்றார் எனக் கொள்ளுதலும் பொருந்தும். (465)

உடலும் உயிரும் ஒழிவற ஒன்றிற்
படரும் சிவசத்தி தாமே பரமாம்
உடலைவிட் டிந்த உயிரெங்கு மாகிக்
கடையும் தலையும் கரக்கும் சிவத்தே. 2587

க-து : இஃது உயிரின் பிறப்புநிலை வீடு எய்துவதற்கு வாயில் ஆமாறும், முடிநிலைக்கண் உயிர் உடம்பை விட்டுச் சிவத்தில் தாடலைபோல் பிரிப்பின்றிக் கலந்து அடங்குமாறும் உணர்த்துகின்றது.

பொ - ரை : அழியும் இயல்பினதாகிய உடம்பும் அழியா இயல்பினதாகிய உயிரும் நெடுங்காலமாக ஒழிவின்றிப் பொருந்தி வருதலினால், சிவசத்தி எனப் படும் இன்ப அருள் ஒளிகள் உயிரின்கண் மேம்பட்டு வரும். உயிர் மலஇருள் முழுதும் நீங்கப்பெற்று உலகப்பற்று முழுதும் கெடும்போது, அவ்வுயிர்க்கு உடம்பு சுமையாகத் தோன்றும் ; அப்போது அவ்வுயிர் அவ்வுடலைப்பற்றி ஏகதேசப் படுதல் இன்றி, எங்கும் ஆம் அண்ணல் அருள்ஒளியில் ஒன்றி, பேரின்பமயமான சிவத்தில் தாடலைபோல் அடங்கி இன்பம் நுகரும்.

வி - கு : சிவசத்தி என்றதைச் சத்திசிவம் என மாறுக. முதற்பொருள் ஞாயிறும் அதன் குணமும் வடிவுமான வெப்ப ஒளி ஆற்றலும் போலத் தானும் தன் சத்தியும் என இருதிறப்பட்டு இயைந்து நிற்கும் ஒருபொருள் என்பது தலையாய மெய்யுணர்வினர் துணிபு. சத்தி என்பது அருளாற்றல் ; அது ஞானம், நினைவு, செயல் முதலாகப் பலவாகக் கூறப்படும். சிவம் என்பது எவ்விதமாறுதலும் இல்லாத பேரின்பம். இங்ஙனம் முதற்பொருள் மெய் உணர்ந்தார்க்குக் காணப்படுதலின் அது போந்த ஆனந்தமெய் எனப்படும். அது தன்னைத் தலைப்படுவார்க்கு முன்னர் அருளொளியாகவும், பின்னர் அத்துறை காட்டப் படும் பேரின்ப முதலாகவும் உணரப்படும்.

ஒன்றின் சத்தி சிவம் தாமே படரும் எனவும், பர மாம் உடல் எனவும் கூட்டி உரைக்க. பரம் — பாரம், சுமை, கடையும் தலையும் என்பதன்பின் என என்னும் சொல் வருவிக்க. ஒழிவற ஒன்றின் — என்றதற்கு மேல் உரைத்தவாறு அன்றி, ஊனும் உயிரும் ஒருவழிப்பட்டு ஓவாது மனம் குவிந்து தவம் இயற்றின் என உரைப்பினும் அமையும், ஊனும் உயிரும் ஒன்றுதலாவது ஐம்பொறியும் அடங்கி நிற்றல்.

கடையும் தலையும் என்றதில் கடை என்றது தலைக்கு இனமாகிய அடியைக்குறித்து நின்றது. வீடுபேற்றின் கண், சிவமும் உயிரும் தம் இருமை தோன்றாது ஒன்றி நிற்பதற்குத் தாள், தலை என்னும் இருசொற்கள் புணர்நிலைக்கண் தாடலை என ஒன்றி நிற்றலை எடுத்துக் காட்டுவது தொல்மரபு, காறலை (கால்தலை) எனவும் காட்டப்படும். கரக்கும் — அடங்கும். (466)

**செவிமெய்வாய் கண்மூக்குச் சேரிந் திரியம்**
**அவியின் றியமன மாதிகள் ஐந்தும்**
**குவிவொன் றிலாமல் விரிந்து குவிந்து**
**தவிர்வொன் றிலாத சராசரந் தானே. 2588**

க — து : இஃது உயிர்கள் உடம்போடு ஒன்றி நிற்கும் பிறப்பு நிலையினும் தம் உணர்வு விரிந்தும் குவிந்தும் வருதலில் தவிராமையைக் காட்டி, அது பற்றி முற்றழிவும் மீள் ஒருங்கே தோன்றுதலும் உலகிற்கு உள்ளன என்பதைக் கருதியுணர வைக்கின்றது.

பொ – ரை ; உலகம் தோன்றி நடைபெறும் காலத்தும். சரம் அசரம் என இருவகைப்படும் உயிர்கள், தாம் அழிக்கப்படாமலே, தம் உணர்வு விரிந்தும் குவிந்தும் வருதலின் தவிர்வு சிறிதும் இல்லாதவையாய் உள்ளன ; உடலின் புறத்தே காணப்படும் பொறிகளாகிய மெய் வாய் கண் மூக்குச் செவியும், அழிதல் இல்லாத மனம் முதலியனவும், உள் அகக்கருவி எனப்படும் கலாதிகள் ஐந்தும் நனவு, கனவு, உறக்கம் முதலிய நிலைகளில் தாம் கெடா திருக்கவும், தம் தொழிற்பாடுகளில் விரிவும் குவிவும் இருத்தல்பற்றி அவ்விரிவு குவிவுகள் உளவாகின்றன.

வி – கு : சர அசரம் இந்திரியமும், மனுதிகளும் ஐந்தும் குவிவு ஒன்றிலாமல் விரிந்து குவிந்து தவிர்வு ஒன்றிலாத ஆம் – எனக் கூட்டி முடிக்க. மனுதி களும், ஐந்தும் நுண் உடலும் பர உடலும் ஆதலின், அவை அவிதலில்லாதவை எனப்பட்டன. ஐந்தும் என்றதில் உள்ள உம்மையை இந்திரியம். மனுதிகள் என்பவற்றோடும் கூட்டுக, மனுதிகள் மனம் புத்தி ஆங்காரங்களும், சித்தமும் ஆகும். ஐந்து என்றவை கலை, காலம், நியதி, வித்தை, அராகம், என்பவை ; இத்தொகுதி கஞ்சுகசரீரம் எனவும் விஞ்ஞானமய கோசம் எனவும் குறிக்கப்படும்,

குவிவு ஒன்றிலாத என்றது இவை தம் உருநிலை அழிந்து அருநிலையாய் ஒடுங்குதல் இல்லாத என்றபடி. பின்னர், விரிந்து குவிந்து என்றது இவை தம்முள் ஒன்றும் பலவும் தொழிற்பட்டு உயிரின் உணர்வு விரி தற்கு வாயிலாய் நின்றும். தொழிற்படாது அவ்வவ் வுடலிற் கிடத்தலின், உயிரின் உணர்வு குவிவதற்கு இடந்தந்தும் என்றபடி.

சராசரம் முதலும் இந்திரியம் முதலியவை சினையு மாதல்பற்றி, செய்து என்னும் வாய்பாடுகள் சினை வினையாய், தவிர்வொன்றிலாத என்னும் முதல் வினை யோடு முடிந்தன.

இனி இவ்வாறன்றி, இந்திரியமும், மனுதிகளும், ஐந்தும் விரிந்து குவிந்து தவிர்வொன்றிலாத சர அசரம் ஆய் நிற்கும் என முடிப்பினும் அமையும். இம் முடிபிற்குச் சரம் அசரம் என்னும் சொற்கள் உயிர்ப்பு உடையவையாயும், உயிர்ப்பின்றிக் கிடப் பனவாயும் நிலவும் இயல்பைக் குறிப்பனவாம். தவிர்ப்பு – தம் தம் இயல்பில் பிறழ்தல். தான், ஏ – அசை நிலை. (467)

பரனெங்கு மாரப் பரந்துற்று நிற்குந்
திரனெங்கு மாகிச் செறிவெங்கும் எய்தும்
உரனெங்கு மாயுல குண்டுமிழ் செய்யும்
வரமிங்ஙன் கண்டியான் வாழ்ந்துற்ற வாறே. 2589

க – து : இஃது இறைவன் எங்குமாய் நின்று தன் அறிவு விழைவு செயல்களால் உலகை நடத்தி வருதலை ஆசிரியர் கண்டுணர்ந்தமையை வியந்து கூறுகின்றது.

பொ – ரை : முதல்வன் எப்பொருட்கண்ணும் பொருந்தும்படி பரவிநிற்கும் உறுதியினையும், எங்கு மாகி நிறைந்து எப்பொருளையும் உணர்ந்து நிற்கும் திண்ணிய மெய்யுணர்வினையும், எங்குமாய் நின்று உலகை ஒடுக்கி மீளப் படைக்கும் மேலான விழை வினையும், யான் இவ்வுடம்போடு கூடிநின்றே கண்டு உணர்ந்து நீடுதலாக வாழ்வேன் ஆயினன்.

வி - கு : திரன் - உறுதியான செயல்; உரன் - திண்ணிய வாலறிவு; வரம் - மேலான விழைவு ( Divine will ). இறைவன் அருளாற்றல் செயல், அறிவு, விழைவு என மூவகைப்பட நிற்றல் விளக்கப்பட்டது.

பரன் பரந்துற்று நிற்கும் திரனும், அவன் எங்கும் எய்தும் உரனும், அவன் உண்டு உமிழ் செய்யும் வரமும் கண்டு வாழ்ந்துற்றவாறு வியக்கத் தக்கது என முடிக்க.

நிற்கும் திரன் - நிற்றற்கு ஏதுவாகிய திரன்; பிறவும் அது. (468)

அளந்து துரியத் தறிவினை வாங்கி
உளங்கொள் பரஞ்சகம் உண்ட தொழித்துக்
கிளர்ந்த பரஞ்சிவம் சேரக் கிடைத்தால்
விளங்கிய வெட்ட வெளியனும் ஆமே. 2590

க - து : இது வீடு பேற்றின்கண் உயிர்க்குச் சார்பாய் நிற்பது குணம் குறிகடந்த திருவருள் வெளியே ஆம் என்பது உணர்த்துகின்றது.

பொ. - ரை : சற்குரு காட்டிய நெறிக்கண் அறிவினை நிறுத்தி, தத்துவங்களின் இயல்பையும் அவற்றின் வேறாகிய தன்னியல்பையும் அளந்து பின் அவ்வறிவினைத் துரிய அருள் நிலைக்கண் உய்த்துக் கருவித் தொகுதிகளைத் தன் கண் அடங்கக்கொண்ட பரமாய் நின்ற ஆன்மா அதுவரை கொண்டிருந்த உலக நுகர்ச்சியைவிட்டு, அருளொளியாய்த் திகழ்ந்த

பரமாய். சிவத்தைத் தலைக்கூடப்பெறின், அஃது அருள் வெளியே இடமாகக்கொள்ளும் பேரா இயற்கையை எய்தும்.

வி - கு : பரமாய் நின்ற உயிரைப் பரம் என்றார் ; பரம் - திருவருள், இரண்டாவது பரத்தின் பின் ஆய் என்னும் ஒரு சொல் வருவிக்க. ஈரிடத்தும் பரன் எனப் பாடம் இருத்தல் கூடும். (469)

இரும்பிடை நீரென என்னையுள் வாங்கிப்
பரம்பர மான பரமது விட்டே
உரம்பெற முப்பாழ் ஒளியை விழுங்கி
இருந்தனன் நந்தி இதயத்து ளானே. 2591

க - து : இது ஞானகுருவாய் எழுந்தருளிய முதல்வன் தம்மை பரமுத்திக்கண் உய்த்த படிமுறையினை உணர்த்துகின்றது.

பொ - ரை : பேரின்ப வடிவினனாகிய முதல்வன் என் உணர்வை, எரிசேர் இரும்பால் தீண்டப்பெற்ற நீர் தன் சுருங்கிய கடின நிலையின் நீங்கி வியாபக நிலை எய்திக் காற்றுமண்டலத்தின் அடங்குமாறு போல, தன் திருவடி உணர்வில் நுணுகி அடங்கச் செய்து, முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம் பொருளாகிய திருவருள் நிலத்து ஏறவிட்டு, அடியேன் திண்ணிய மெய்யுணர்வு பெறும்படி இடையீடாய்க் கிளர்ந்த முப்பாழ் ஒளிகளைக் கட்பித்துத் தான் இருந்தபடி இருந்தான் ; அந்நிலை சலியாமைப் பொருட்டுச் சுழலும் சக்கரத்திற்கு அச்சுப்போல, என் உள்ளத்து உளன்.

வி-கு : நந்தி வாங்கி, விட்டு, விழுங்குவித்து இருந்தான்; (இப்போது) இதயத்து உளான் – எனக் கூட்டுக.

பின்வரும் பாட்டும் அதன் உரையும் உடன் வைத்து உணரத்தக்கவை :–

*என்வழி இன்று காறும்*
*இருந்தருள் தன்னைப் போலத்*
*தன்வழி எற்றை ஞான்றும்*
*தங்கும்அந் நிலைமை தோன்றத்*
*தன்னையும் எனையும் தந்து*
*தனதென தறமுப் பாழ்மேல்*
*பின்னிய முழுப்பா ழான*
*பெருகுபே ரின்பம் போற்றி.*

(அடியேன் வீடுபெறும் இந்நாள் வரையும் அடியேன் சென்ற வினைவழியில் என்னைச் செல்ல விட்டு, தான் என்னோடு கலந்திருந்தும் தோன்றாது மறைந்திருந்த தன் தன்மையைப்போல, தன் அருளின் வழி எக்காலத்தும் அடியேன் அடங்கி நிற்கும் அவ்வியல்பு விளங்கும்படி தன்னைத் தலைப் பட்டுணர்ந்தின்புறும் சிவபோகத்தையும், தன்னைத் தன் அருளால் உணரும் முறைமையின்வைத்து அடி யேனது இயல்பை உணரும் ஆன்ம லாபத்தையும் அடியேனுக்குத் தந்து, தனது அருட்செயலும் எனது ஞாதுரு ஞான ஞேயப்பகுப் புணர்வும் நீங்க, உலகச்சார்பை விடும்போது என் வியாபகத்தைத் தலைப்பட்டு நானே எனச் செருக்கி அடங்கலும்

அருளைத் தலைப்பட்டு ஐந்தொழிலும் என்னுடை யவை எனக் கருதித் துவளலும், அவ்வருளில் அடங்கி இறைபணி நிற்றலும் என்னும் மூவகை வெறுமை நிலையின் மேலே அத்துவிதமாய் பிற அனைத்தும் கடந்த நிலையான பேரின்பச் சிவம்போற்றி என்றபடி.) (470)

**கரியுண் விளவின் கனிபோல் உயிரும்**
**உரிய பரமுமுன் ஓதுஞ் சிவமும்**
**அரிய துரியமேல் அகிலமும் எல்லாம்**
**திரிய விழுங்கும் சிவபெரு மானே.** 2592

க–து : இது துரியாதீதம் என்னும் இன்புறு நிலைக்கண் காண்பான், காட்சி, காணப்படுபொருள், காட்டு என்னும் நான்மையும் காணப்படுபொருளாய் அடங்கி நிற்குமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை : கிடைத்தற்கு அரிய துரியாதீத நிலைக் கண், நுகரும் உயிரும், அதனை அறிவித்து நுகர்விக் கும் திருவருளும், எவற்றிற்கு முற்பட்டதென்று நூல்களால் ஓதப்படும் நுகரப்படுபொருளாகிய சிவ முதலும், கேவல சகலங்களில் கண்டு வந்த எல்லாமும் உயிரின் அறிவும் வேறுவேறு இல்லை எனும்படி அடங்கி நிற்குமாறு சிவபெருமான் அடக்கி நிற்பன். இது யானை உண்ட விளங்கனிபோலும்.

வி–கு : கரி உண் விளவின் கனிபோல் – யானை என்னும் நோயால் பற்றப்பட்ட விளங்கனி. கனிபோற் காணப்படினும் உள்ளீடில்லாதவாறுபோல. துரிய மேல்–துரியத்திற்கு மேலதாகிய அதீத நிலை. பரம்– காட்டாகிய அருளொளி. (471)

**அந்தமும் ஆதியும் ஆகும் பராபரன்**
**தந்தம் பரம்பரன் தன்னிற் பரமுடன்**
**நந்தமை உண்டுமெய்ஞ் ஞானநே யாந்தத்தே**
**நந்தி யிருந்தனன் நாமறி யோமே.** 2593

க-து : இதுவும் அது.

பொ-ரை ; எப்பொருட்கும் முடிவும் முதலுமாய் நிற்கும் பரையோடு உடனாகிய மேலோனும், வேறு வேறு உயிர்களது வழிவழித்துணையும் ஆகிய முதல்வன் கற்றுணர்ந்து அடங்குமாறு அடங்கும் நம்மை மெய்யுணர்வின் விடயமாகிய காணப்படுபொருளாகிய முடிநிலைப் பொருளில் காட்டாய் நிற்கும் பரத்தோடு அடங்கக்கொண்டு திருநந்தியாகவும் இருந்தருளினன்; கடல் அலைத்து ஆடுதற்குக் கைவந்து நின்றும் அளக்க வாராதாற்போல, முதல்வன் துரியாதீத நிலைக்கண் பேரின்பப் பிழம்பாய் நுகரப்படினும், அவன் இன்ன தன்மையன் என அளவுபடுத்தி அறியப்படான்.

வி-கு : பராபரன் - பரையோடுகூடிய பரன்; தம் தம் என்றது பல்வகை ஞான சந்தானங்களை; பரம்பரன் - பரம்பரையின் முதல்வன். உலகிலுள்ள ஞான பரம்பரைகளுக்கெல்லாம் முதலாயினேன் என்றபடி. நேயம்-ஞேயம், அறியப்படுவது மெய்ஞ்ஞான நேயம்-மெய்யுணர்வால் உணரப்படும் முதற்பொருள். பரம்-திருவருள் காட்டு. நம்தமை என்றது-காண்பானும் காட்சியுமாய் நின்ற நம்மை, உண்டு-காண்பான், காட்சி, காட்டுகளை ஞேயமாகிய தான் தன்னுள் அடங்கக்கொண்டு தான் ஒன்றுமேயாய்ச் சிறந்து அறுவகைச் சமயத்தோர்க்கும் என்னும் சிவஞான

சித்தி திருவிருத்தத்தின் விசேடக்குறிப்பில் மாதவச் சிவஞான யோகிகள் "அம்மையோடப்பன் ஆகி எனவே ஞானமும் ஞேயமும் ஞாதுருவுமாகக் காணப்படும் ஒன்பதாம் சூத்திரப் பொருளும், செறிவொழியாது நின்ற எனவே ஏகனாகி நிற்றல் கூறும் பத்தாஞ் சூத்திரப் பொருளும் ... குறிப்பான் அறியக் கிடந்தன" – என்றமை கருதற் பாலன.

இன்னும் அவர் சிவஞானபோதச் சிறப்புப் பாயிரச் செய்யுள் உரையில், "பெரும்பெயர்க் கடவுள் என ஞேயம் ஒன்றே பெரும்பெயர்க்குப் பொருளாகக் கூறினார், ஏனையவற்றைத் தன்னுள் அடக்கி நிற்றலின், தலைமைபற்றி என்றுணர்க" என்றருளிச் செய்தமையும் புடைபடவைத்து நோக்கத்தக்கது. (472)

## 38. வாய்மை

அஃதாவது மெய்ம்மை மெய்ப்பொருளைத்தலைப் படவேண்டுவார் தம்அறிவு மனமொழி மெய்களால் மெய்ம்மையினையே பற்றி ஒழுகுதல் வேண்டும் என இவ்வதிகாரம் கூறுகின்றது. இனி, "தூஉய்மை என்ப தவாவின்மை மற்றது வாஅய்மை வேண்ட வரும்" என்னும் திருக்குறளிற்போல, வாய்மை என்னும் சொல் மெய்ம்மையினையுடைய முதற் பொருளைக் குறித்து நின்றது எனினும் பொருந்தும், இவ்வதிகாரம் மெய்ப் பொருளைத் தலைப்படுமாறு உணர்த்தலின்.

அற்ற துரைக்கில் அருளுப தேசங்கள்
குற்ற மறுத்தபொன் போலுங் கனலிடை
அற்றற வைத்திறை மாற்றற ஆற்றிடில்
செற்றம் அறுத்த செழுஞ்சுடர் ஆகுமே 2594

க – து : இப்பாட்டு அருள் உபதேசம் இன்ன என்பதும் அவற்றின் பயனும் உணர்த்துகின்றது.

பொ – ரை : மெய்யுணர்ந்தோர் சார்பு பற்றாது அறுதியானது ஒன்றனை உரைக்கின், அங்ஙனம் உரைக்கப்படுவனவே அருள்உபதேசங்களாம்; அவை நெருப்பில் இட்டபொன் குற்றம் அற்றுச் சுடருமாறு போல, ஒருவனது மனமாசு கழித்துத் தன்னொளி பெற வைப்பன ஆகும். உலகப்பற்று முற்றும் நீங்கும்படி அவ்வுபதேச வாயிலாக இறைவனை உள்ளத்தில் வைத்து ஒரு நெறிய மனம் வைத்து உணரின் அவ் உள்ளம் தன்னைச் செறுவனவாகிய வினையின் நீங்கி ஒளிவளர் விளக்காய்ச் சுடரும்.

வி – கு : அற்றது-மெய்ந்நூல்களின் முடிவாயது; "வேதம் நான்கினும் மெய்பொருளாவது – நாதன் நாமம் நமச்சிவாயவே" எனவும், 'ஓதி அஞ்செழுத்தும் உணர் வார்கட்குப் – பேதமின்றி அவரவர் உள்ளத்தே – மாதும் தாமும் மகிழ்ர்வமாற் பேறரே" (473) எனவும் உரைத்தாற் போன்றது.

எல்லாம் அறியும் அறிவு தனைவிட்டு
எல்லாம் அறிந்தும் இலாபமங் கில்லை
எல்லாம் அறிந்த அறிவினை நானென்னில்
எல்லாம் அறிந்த இறையென லாமே. 2595

க — து : இஃது எப்பொருளையும் அறிந்து செலுத்தும் திருவருளைக்கண்டு அதனோடு ஒன்றாக எனச் செப்புகின்றது.

பொ — ரை : ஒருவன் எப்பொருளையும் அறிந்து நடாத்திவரும் திருவருள் ஒளியினைத் தனக்குச் சார்பாகப் பெற முயலுதல் வேண்டும்; அம்முயற்சியைக் கைவிட்டு உலகியற் பொருள்கள் எல்லாவற்றையும் அளவை அறிவான் அறிந்தாலும் அதனால், விழுப் பயன் (ஆன்மலாபம்) இல்லை. ஆசான் அறிவுறுத்தும் நெறியில் நின்று அத்திருவருளை ஒருவன் தலைப்பட்டு அதனோடு ஒன்றி நிற்பின், அவனை முதல்வன் எனவே கொள்ளலாம்.

வி — கு : 'கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன் — நற்றாள் தொழாஅர் எனின்' என்பதைப் போல முன்னிரண்டடிகளைக் கொள்க.

தீயைச் சேர்ந்த இரும்பு தீவண்ணமாய் நின்று அது செய்யும் செயலைப் புரியுமாறுபோல, திருவருளைத் தலைப்பட்டு அதன் வயப்பட்டாரும் சிவனோடு ஒப்பர் என்பது பின்னிரண்டடிகளின் பொருள். (474)

தலைநின்ற தாழ்வரை மீது தவஞ்செய்து
முலைநின்ற மாதறி மூர்த்தியை யானும்
புலைநின்ற பொல்லாப் பிறவி கடந்து
கலைநின்ற கள்வனைக் கண்டுகொண் டேனே. 2596

க — து : இது முதல்வனைத் தலைப்படத் தவம் புரிதல்வேண்டும் என்று உணர்த்துகின்றது.

பொ – ரை : தவம் புரிவதற்குத் தலையான இடமாகிய இமயத் தாழ்வரையில் என்றும் இளையாளாகிய பார்வதியம்மை தவம்புரிந்து சிவபிரானைக் கண்டாள்; யானும் அங்ஙனம் தவம் வாயிலாகவே கலைகளின் விழுப்பொருளாய் நிலையுறும், உயிர்தொறும் மறைந்துள்ள அக்கள்வனைக் கண்டுகொண்டு புன்புலால் யாக்கையொடு பொருந்தும் பிறவியைக் கடந்தேன்.

வி – கு : பிறவிகடந்து கண்டுகொண்டேன் என்றுள்ளதைக் கண்டுகொண்டு பிறவி கடந்தேன் – என மாற்றிப் பொருள்கொள்க. (475)

**தானே உலகில் தலைவன் எனத்தகும்**
**தானே உலகுக்கோர் தத்துவ மாய்நிற்கும்**
**வானே மழைபொழி மாமறை கூர்ந்திடும்**
**ஊனே உருகிய உள்ளமொன் றாமே.** 2597

க – து : இது மேலே எல்லாம் அறிந்த இறை எனல் ஆமே என்றதனை விரித்துரைக்கின்றது.

பொ – ரை : திருவருளைத் தலைப்பட்டு ஒன்றிய ஒருவன் உலகிற்கு ஒப்பற்ற தலைவனாகவும், உண்மையறிவு கொளுத்துவோனாகவும், பருவகாலங்களில் மழையைப் பொழிவிக்கும் சிறந்த மறையை வெளிப்படுத்துவோனாகவும் இருப்பன். அவன் அருள்வழி நிற்போர் ஊனை உருக்கும் மெய்யன்பராய்த் தம் உணர்வு ஒப்பற்ற முதற்பொருளைத் தலைப்படும் பேறு எய்துவர்.

வி – கு : கூர்தல் – உள்ளது சிறத்தல்; கூர்ந்திடும் – முதல்வன் மெய்யுணர்வில் உள்ளதைத் தான் வாயிலாக நின்று வெளிப்படுக்கும்.

ஊனே உருகிய உள்ளம் – என்றது தத்துவ உணர்வினரை அடுத்து அன்புசெய்யும் உள்ளத்தினரை. ஒன்று – ஏகம் என ஓதப்படும் பரம்பொருள் ; ஒன்றுதல் – சிவமாந்தன்மைப் பெருவாழ்வு பெறுதல்.

முதல்வனுக்கு உரிய தன்மையும் செயலும் அவனைத் தலைப்பட்டார்க்கும் உளவாகும் என்றபடி,

(476)

**அருள்பெற்ற காரணம் என்கொல் அமரில்**
**இருளற்ற சிந்தை இறைவனை நாடி**
**மருளுற்ற சிந்தையை மாற்றி அருமைப்**
**பொருளுற்ற சேவடி போற்றுவர் தாமே. 2598**

க – து : இது திருவருளைத் தலைப்படுமாறு கூறுகின்றது.

பொ – ரை : யாம் திருவருள் வெளிப்படப் பெறுவற்கு வாயில் என்னை ? தெரிய விரும்பின் (கூறுவன் கேள்): இருளாகிய மாசின் விளைவுகளாகிய அழுக்காறு அவா வெகுளி நீங்கிய அறிவில் இறைவனை நாடுக; திருவருள் உன் அறிவுக்குக் காணப்படாதது ஆதலால், உன் அறிவு மயங்கி நிற்கும்; அப்பொழுது, திருவருள்தானே வெளிப்படும் எனத் தெளிந்திருப்பின், வேறு எவ்வகையாலும் தலைப்படுவதற்கு அரிய பொருளாக வெளிப்படும் செம்மையான திருவடியைக் கண்டு, பின் அதன் வழிப்பட்டு நிற்க.

வி – கு : காரணம் – வாயில்; என என்னும் ஒரு சொல் வருவித்து, 'காரணம் என் என அமரில்'

என்க் கூட்டுக. கொல் – அசைநிலை. அமரில் – விரும்பின். சிந்தை – அறிவு. தாம் ஏ – அசைநிலை. போற்றுவர் என மேலோர் ஒழுக்கத்தின்மேல் வைத்து விடை கூறிற்று. சேவடி என்றது திருவருளை. (477)

**மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்தன்னைப்**
**பொய்கலந் தார்முன் புகுதா ஒருவனை**
**உய்கலந் தூழித் தலைவனு மாய்நிற்கும்**
**மெய்கலந் தின்பம் விளைந்திடும் மெய்யர்க்கே.** 2599

க – து : உலகத்தார் சார்புகெட மெய்யுணர்ந்தார் சார்பைப் பெற்ற ஒருவனுக்கே திருவருள் கைகூடும் என உணர்த்துகின்றது இப்பாட்டு.

பொ – ரை : பொய்ப்பொருளை விரும்புவார்பால் சாராது, மெய்ப்பொருளைக் கண்டு கலந்தாரொடு மெய்யன்புடன் கலந்து பழகும் ஒருவனை உய்யுமாறு முதல்வன் கலந்து நின்று தான் ஊழி முதல்வனும் நிற்குமாற்றை எளிதின் உணர்த்துவன். அவன் மனம் செயல் ஆனம் என்னும் மூன்றும் மெய்யாக அமையப் பெற்றவர்க்கே அவர்தம் ஊனையும் உயிரையும் இடமாகக்கொண்டு அன்பு விளைத்துப் பேரின்பத்தை விளைந்திடச் செய்வன்

வி - கு : "மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும், இனந்தூய்மை தூவா வரும்" என்னும் பொதுமறையின் கருத்து ஈண்டு உளங்கொளற் பாலது. மொழியுஞ் செய்வினையில் அடங்கும். தூவா – பற்றுக்கோடாக.

மெய் – உடம்பும், அதனல் மெய்ப்பிக்கப்படும் உயிரும். ஈரிடத்தும் எழுவாய் வருவித்து உரைக்க. (478)

மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்மிகப்
பொய்கலந் தார்உட் புகுதாப் புனிதனைக்
கைகலந் தாவி எழும்பொழு தண்ணலைக்
கைகலந் தார்க்கே கருத்துறல் ஆமே. 2600

க – து : இஃது இறைவனை உலக முகப்படும் போதும் கலந்து நிற்பார்க்கே தம்விருப்பு நிறைவுறும் என்பது உணர்த்துகின்றது.

பொ – ரை : முதல்வன் மெய்யைக் கடைப் பிடித்தார்க்கே தன் உண்மை விளங்கக் கலந்து தோன்றுவன்; பொய்ம்மையினை எவ்வகையினும் பற்றுவார்க்கு உள்ளத்துக் கலந்துதோன்றாத தூய்மையினை உடையன். அப்பெருமையிற் சிறந்தாரொடு ஏகனாகி நின்று, தம் உணர்வு தொழிற்படும் போதெல்லாம் அவன் அருளானன்றி ஒன்றை அறிந்து இயற்றிடாத முத்தர்க்கே தம் கருத்து முற்றும்.

வி – கு : அவ்வண்ணலை எனச் சுட்டு வருவிக்க. கைகலத்தல் – முன்னையது ஏகனாகி நிற்றலையும், பின்னையது இறைபணி நிற்றலையும் குறித்து நின்றன. கருத்து உறலாவது – மலமாயை வினை என்பவற்றின் வாதனை நீங்கிப் பேரின்பப்பேறு எய்துதல். (479)

எய்திய காலத் திருபொழு துஞ்சிவன்
மெய்செயின் மேலை விதியது வாய்நிற்கும்
பொய்யும் புலனும் புகலொன்று நீத்திடில்
ஐயனும் அவ்வழி ஆகிநின் றானே. 2601

க – து : இஃது இறைவன் மெய்யர்க்கு மெய்யாய் நிற்குமாறு வகுத்து உணர்த்துகின்றது.

பொ – ரை : தொழுது நிற்றற்கு அமைந்த காலத்தில் காலை மாலை (அல்லது துஞ்சலும் துஞ்சல் இலாத போழ்தும்) எனும் இரு பொழுது சிவனது திருவுருவை உளங்கொண்டு அன்புசெயின் முற்பிறப்பிற் செய்த வினைப்பயன் சிவன் செயலாய் விளையும்; பொய்ப் பொருள்களை விரும்புதலும் புலன்வழிச் செல்லுதலும் ஆகிய ஒன்றைவிட்டால், நுண்ணியோன் ஆகிய சிவனும் அத்துறவின் வழி வெளிப்பட்டு நின்று அருள்வன்.

வி – கு : அது – அச்செயல்; பொய்புகலும் புலன் புகலும் ஆய ஒன்று நீந்திடில் என்க. ஆகிநிற்றல்– வெளிப்படல். (480)

ஏய்துவ தெய்தா தொழிவ திதுஅருள்
உய்ய அருள்செய்தான் உத்தமன் சீர்நந்தி
பொய்செய் புலனெறி ஒன்பதும் தாட்கொளின்
மெய்யென் புரவியை மேற்கொள்ள லாமே. 2602

க – து : இஃது ஒருவன் தனது உடம்பினை நன்றிக்கண் உய்த்தற்கு உபாயம் கூறுகின்றது.

பொ – ரை : ஒருவன் தான் விரும்பியதைப் பெறுவதும் பெறுதொழிவதும் அவன் அறிவு விழைவு செயல்களைப் பொறுத்தவை அல்ல; அவை திருவருளால் நிகழ்வன, இவ்வுண்மையைத் தலைமைக் குரவனாகிய சிறப்புடைத் திருநந்தி, யான் உய்தற்பொருட்டு

அருளினால் உணர்த்தினன். இங்ஙனமாதலின். பொய்ப் பொருள்களில் நம்மைச் செலுத்தும் வாயில்களான ஐம்பொறியும் அகக்கருவி நான்கும் முதல்வன் தாளைப் பற்றி நிகழின் உடம்பாகிய குதிரையை ஒருவன் நடத்துதல் கூடும்.

வி – கு : புலன்நெறி–சுவைமுதல் ஐந்தன் வழிச் செல்லும் ஐம்பொறிகளும் அகக்கரணம் நான்கும், தாள் கொள்ளுதல் – இறைவன் திருவடியைப் பற்றி ஒழுகுதல். 'கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான் – தாளை வணங்காத் தலை' என்னும்பொது மறையினையும், திரு அங்கமாலையினையும் உளங்கொள்க. (481)

கைகலந் தானைக் கருத்தினுள் நந்தியை
மெய்கலந் தான்றன்னை வேத முதல்வனைப்
பொய்கலந் தார்முன் புகுதாப் புனிதனைப்
பொய்யொழிந் தார்க்கே புகலிடம் ஆமே. 2603

க–து : உலகப் பற்றற்றார்க்கே முதல்வன் வினை தீர்ப்பன் என்பது உணர்த்துகின்றது இது.

பொ.ரை : முதல்வன் உயிர்களின் செயல்களுக்கு உடனாய் உளன்: அவற்றின் கருத்துள் இருந்து அக்கருத்தை அறிவன்; உலகப்பற்று உடையார்க்கு வெளிப்படான். அவனைப் புகலிடமாகப் பெறுவது உலகப்பற்றை நீத்தவர்க்கே உளதாகும்.

வி – கு : பொய் – உலகப்பற்று. புகலிடம் – புகலிடமாகப் பெறுதல், ஆம் – கூடுதல், (482)

மெய்த்தாள் அகம்படி மேவிய நந்தியைக்
கைத்தாள் கொண்டாரும் திறந்தறி வாரில்லை
பொய்த்தாள் இடும்பையைப் பொய்யற நீவிட்டங்
கத்தாள் திறக்கில் அரும்பேற தாமே. 2604

க – து : இஃது உள்ளத்தாற் பொய்யாது ஒழுகு வார்க்கே திருவருட்பேறு உண்டாகும் என்று உணர்த்துகிறது.

பொ – ரை : இறைவன் தன் மெய்யாகிய திருவடியை உள்ளம் ஒன்றித் தொழுவதையே விரும்புகின்றான். அவனைப் புறத்தே கோயிலினுள் இருப்பதாக எண்ணிக் கையில் தாழக்கோல் கொண்டு கதவைத் திறந்து அறிவது மெய்யுணர்வோர் செயல் அன்று. பொய்யான முயற்சியால் வரும் துன்பங் களைப் பொய்ப்பற்று நீங்கும்படி விட்டு, உன் உணர்வில் உள்ள மறைப்பை ஒன்றி எண்ணுதலாகிய முயற்சியால் நீக்கின், பெறுதற்கு அரிய சிவப்பேறு உளதாகும்

வி • கு : தாள் – திருவடி. முயற்சி, திறவுகோல். அகம்படி – அகத்தொண்டு. மேவுதல் – விரும்புதல். இது ஞானிகளுக்குக் கூறும் மெய்யுரை. (483)

உய்யும் வகையால் உணர்வினால் ஏத்துமின்
மெய்யன் அரனெறி மேலுண்டு திண்ணெனப்
பொய்யொன்று மின்றிப் புறம்பொலி வார்நடு
ஐயனும் அங்கே அமர்ந்துநின் றானே 2605

க – து : இஃது எல்லாரும் முதல்வனைத் தலைப் படுவதற்கு உரிய பொதுநெறியை உணர்த்துகின்றது.

பொ — ரை : நித்தனாகிய சிவபிரானை அடையும் நெறி ஐயம் திரிபுகளுக்கு இடன் இன்றி மேலாக உள்ளது; (அது திருவைந்தெழுத்தால் குறிக்கப்படுவது என்பதை உளங்கொள்க); ஆதலால், பல்வேறு பருவத்தினராகிய நீங்கள் நும் பருவத்திற்கு ஏற்ற வகையால் (சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவற்றுள் ஒரு வகை பற்றி) முதல்வனை உணர்ந்து வழிபடுக. அகத்தே பொய்த்தல் இன்றிப் புறத்தே சிவ வேடப் பொலிவு உடைய மெய்யன்பர்க்கு நுண்ணியோனாகிய சிவபிரான் அவர்தம் உயிரை உடம்பாகவும், உடலைக் கோயிலாகவும் கொண்டு விரும்பி நின்று அவரை வழிபடுவார்க்கு அருள்புரியா நிற்கின்றான்.

வி — கு : 'நன்னெறியாவது நமச்சிவாயவே' என்றமையின், அதுவே அரனெறி எனப்பட்டது. சி- சிவம். வா - சிவத்தை விட்டு நீங்காது அதன் இயல்பாயும், அதனைக்காட்டும் குணமாகவும் உள்ள அருள் அறிவொளி. ய — உயிர். ம — உயிரைப்பற்றி அறியாமையை விளக்கும் மூலமலம், ந—மலத்தின் வழிநின்று அதன் வலியை மெலிவித்து வரும் திரோதை; மாயை, வினை என்னும் செயற்கை மலங்கள் இதன்கண் அடங்கும். நம — ஊனநடம், அசத்து, இருள், இறப்பைத் தருவது; சிவா — ஞானநடம், சத்து, ஒளி, இறவாத இன்பம். ய — அசத்தினின்று சத்திற்கு, இருளினின்று ஒளிக்கு, இறப்பினின்று இறவாத இன்புறு நிலைக்குச் செல்வது; இது 'சிவாயநம' என்பதில் இரண்டிற்கு நடுவே உள்ளது.

சிவனது உருவத் திருமேனியை உணர்ந்து புறத் தொழிலால் அணைவது சரியை. அவன்றன் அரு

வுருவத் திருமேனியை உணர்ந்து அகப்புறத் தொழி லால் அணைவது கிரியை. அவன்றன் ஒளிவடிவ அருவத் திருமேனியை உணர்ந்து அகத்தொழிலால் அணைவது யோகம். சிவனது உண்மை நிலையை மெய்யுணர்வால் தலைப்பட்டுச் சார்ந்து ஒழுகி ஒன்று வது ஞானம். இந்நெறிகளில் உள்ளபடி நிற்பாரும், இவற்றைத் திருவருள் வழி நின்று உணர்த்துவாரும் சிவன் திருமேனியாகக் கருதத்தக்கவர். (484)

வம்பு பழுத்த மலர்ப்பழம் ஒன்றுண்டு
தம்பால் பறவை புகுந்துணத் தானொட்டா(து)
அம்புகொண் டெய்திட் டகலத் துரத்திடின்
செம்பொற் சிவகதி சென்றெய்த லாமே. 2606

க - து : இது வினை (புல)ப்பகையை வென்றால் முதல்வனைத் தலைப்பட்டுப் பேரின்பம் எய்தலாம் எனக் கூறுகின்றது.

பொ - ரை : மணங்கமழும் மலரோடு கூடிய கனிந்த பழம் ஒன்று என்றும் உளது. அஃது அரு ளொளியோடு கூடிய பேரின்பச் சிவம். அவ்விரண்டி னிடத்தும் உயிர்கள் அணுகாதபடி தடுத்து நிற்பது வினைப்பகை ( புலப்பகை ) ஆகிய பறவை. அதனைத் திருவைந்தெழுத்தாகிய அம்பை உணர்வில் தொடுத் துச் செலுத்தினால் அப்பகை அகலச்செல்லும். பின் உயிர் தன் மாசு நீங்கிச் சிவகதியைப் பெற்றின்புறும்.

*வி - கு : "வித்தக நீறணிவார் வினைபகைக்கு அத்திர மாவன ஐந்தெழுத்துமே"*

என்னும் ஆளுடையபிள்ளையார் அருமறையை உளங் கொண்டு காண்க. புலப்பகையைப் பறவை எனினும் பொருந்தும். (485)

மயக்கிய ஐம்புலப் பாசம் அறுத்துத்
துயக்கறுத் தானைத் தொடர்மின் தொடர்ந்தால்
தியக்கஞ் செய்யாதே சிவனெம் பெருமான்
உயப்போ எனமனம் ஒன்றுவித் தானே. 2607

க — து : இஃது ஐம்புலப் பிணிப்பு நீங்குதற்கு வாயிலாகிய அறம் உரைத்தவன் சிவபிரான் எனவும், அவனருள்வழி நிற்பின் மனம் ஒன்றும் எனவும் உணர்த்துகின்றது.

பொ — ரை : நில்லாத பொருள்களை நிலையின எனக் காட்டி மயக்கும் ஐம்பொறிவழிச் செல்லும் அவாவாகிய பிணிப்பை அறுக்கவல்ல அறங்களை ஆலின் கீழிருந்து உரைத்து மனக்கலக்கத்தை நீக்கியவன் சிவபிரான்; அவன்கூறிய பொய்தீர் ஒழுக்க நெறியின் வழுவாது நிற்றலே அவனைத் தொடர்தல் ஆகும். இங்ஙனம் அவனைத் தொடர்ந்து வழிபடு வார்க்குச் சோர்வு வாராதபடி அப்பெருமான் மனத்தை ஒன்றுவித்து உய்யுநெறி காட்டுவன்.

வி — கு : துயக்கு — கலக்கம். தியக்கு—சோர்வு. உயப்போஎன என்றமையின் உய்யுநெறி காட்டுதல் பெற்றும். 'பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறிநின்றார் நீடுவாழ் வார்' — என்னும் அருமைத் திருக்குறளோடு இத்திருமந்திரத்தை ஒப்பிடுக. அவித்தல் — தனக்கு இன்றுதலைப் புலப்

படுத்திப் பிறக்கும் அவற்றை இல்லையாக்குதல்; இல்லையாதல் – தீமை புரியாது மடைமாறுதல். (486)

மனமது தானே நினையவல் லாருக்(கு)
இனமெனக் கூறும் இருங்காய மேவல்
தனிவினில் நாதன்பால் தக்கன செய்யில்
புனிதன் செயலாகும் போதப் புவிக்கே. 2608

க – து : மனம் தன்னியல்பால் முதல்வனை நினைக்கும்படி பழகினார்க்குத் திருவருளால் வீட்டுநிலம் எளிதில் கிட்டும் என்கின்றது இப்பாட்டு.

பொ – ரை : ஒருவர்க்கு மனம் தன் இயல்பால் முதல்வனை நினையக்கூடுமாயின், அவர்க்கு உளதாகும் பெருமையினையுடைய உடல் அவர்க்குப் பகை எனக் கூறப்படாமல் உறவெனவே கூறப்படும். அவர் அவ்வுடல் உள்ளபோது சிறப்பாக நாதனுக்கு உரியவற்றைப் பொருந்துமாறு செய்யின், அவை ஏனையர் மேலுலகம் புகுதற்பொருட்டுத் தூயோனாகிய முதல்வன் செயலாகக் கொள்ளப்படும்.

வி – கு : மேவல் – மேவுதற்கண். தனிவினில் – சிறப்பாக. தக்கன – நூல்களுள் விதித்தன சில ஒழித்து விதியாதன சில மேற்கொண்டு காலத்திற்கு ஏற்பச் செய்தல். புவிக்கே போத என மாறுக. போத – புகுத.

இது மேலை அதிகாரத்திற்குத் தோற்றுவாய் ஆயிற்று. (487)

## 39. ஞானிசெயல்

அஃதாவது மெய்யுணர்ந்தார்க்கு உடம்பு உள்ள அளவும் அதுகொண்ட வினை உள்ளதாகலின், அது வரும்போது அஃது உடல் ஊழாய்க் கழியும்படியும் மேல்வினை ஏறாதபடியும் அவர்தம் விழைவு அறிவு செயல்கள் புறத்தே சிவன் திருவுருக்களில் சென்று வியாபரிக்குமாறு கூறுதல். இஃது அணைந்தோர் தன்மை எனவும் படும்.

முன்னை வினைவரின் முன்உண்டே நீங்குவர்
பின்னை வினைக்கணார் பேர்ந்தறப் பார்ப்பர்கள்
தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்
நன்மையில் ஐம்புலன் நாடலி ளுலே. 2609

க – து: இஃது உண்மையுணர்ந்தோர் உலக முகப்படும்போது ஊழினின்றும் அதனால் வரக்கூடிய ஏறு வினையினின்றும் விடுபடுமாறு கூறுகின்றது.

பொ – ரை: தான் எனப்படும் முதல்வனைத் தலைப்பட்டுணரும் மெய்யுணர்வினர் பயிற்சி வயத்தால் இன்பந்தராத ஐம்புலனை நாட நேரும்போது, ஊழ் வினை உருத்துவரின் அவ்வுருமை முற்பட்ட சிவ போகமாக உண்டு அதன் தீமையினின்று நீங்குவர்; மேல்வினை வரும்படி நினையாமல் அவ்வூழ் உட்லூழாய்க் கழிந்து கெடும்படி பரமே பார்த்திருப்பர்.

வி – கு: கணார் – கண்ணார், நினையாதவராய்; முற்றெச்சம். முன் – முற்பட்ட பொருளாம் சிவன். முன் உண்டு – முன் ஆக உண்டு – சிவபோகமாக உண்டு. பார்ப்பர்கள் – பதார்த்தங்கள் பாராது பரமே

பார்த்திருப்பர். இதனால், உலக நுகர்ச்சி சிவபோக மாக முற்றும், துன்பம் தருவன சிவபோகமாக முடிந்ததை அப்பர் வரலாற்றினும், சிற்றின்பம் பேரின்பமாக நிகழ்ந்ததை நம்பி ஆரூரர் வரலாற்றினும் கண்டு அறிக. (488)

தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே. 2610

க - து : இஃது அவர் வினையின் நீங்குதற்கு முதன்மையான காரணத்தைக் கூறுகின்றது.

பொ - ரை : மெய்யுணர்ந்தோர் தம் அறிவு செயல் ஆற்றல்களை, முதல்வன் அறிவு செயல் ஆற்றல்களின் கீழ் ஒன்றி அடங்கச்செய்து அவன் அருளால் அன்றி ஒன்றை அறிதலும் செய்தலும் இன்றி நிற்றலின், முன்னை வினை விளைவோடு உடன் நிகழ்வதாகிய மேல் வினையை வாராமல் தடுத்தலும், செய்வார் செயல்களின் வன்மையைக் கெடுத்தலும் செய்வார் ஆயினர்.

வி - கு : சென்னி - உயிர்களின் அறிவு செயல் ஆற்றல்கள் ; திருவருள் - முதல்வனது அறிவு செயல் ஆற்றல்கள். சென்னியில் வைத்தல் - தம் ஆற்றல்களை முதல்வன் ஆற்றல்களில் தாடலை போல் ஒன்றி அடங்கச் செய்தல். முடிச்சி - பிற செயாது அனுபவித்தல் இன்று என்னும் நியதி. பிசைதல் - அவை பின் விளைதற்கு ஏற்ற வலி பெறாது ஒழியச்செய்தல்.

இறைவனைச் சார்தலின், அவனைப்போல் வினைப் பயன் தொடரப்படார் என்றபடி. "தன்னை யடைந் தார் வினைதீர்ப்பதன்றோ தலையா யவர்தம் கடனாவது தான்" என்னும் திருநாவுக்கரசர் முறையீடு இக் கருத்தே பற்றி எழுந்தது. (489)

**மனவாக்குக் காயத்தால் வல்வினை மூளும்**
**மனவாக்கு நேர்நிற்கில் வல்வினை மன்னா**
**மனவாக்கு கெட்டவர் வாதனை தன்னால்**
**தனைமாற்றி யாற்றத் தகுஞானி தானே.** 2611

க – து : இது மெய்யுணர்ந்தார் மாயையால் தாக்கப்படாதிருத்தல் கூறுகின்றது.

பொ – ரை : பிறப்பு நிலையில் உயிர்களுக்கு மன, மொழி செயல் என்னும் மூன்றன் அசைவு அசை வின்மையால் நல்வினை தீவினைகள் தோன்றி வளர் கின்றன. யான் எனது என்னும் செருக்கு நீங்கி, அவை, விருப்புவெறுப்பு வயப்படாமல், சமநிலையில் நின்றால், வினைகள் உளவாகா, இவைபொதுவிதி. தம் மெய்யுணர்வால் மனமொழி மெய்களின் குற்றம் நீங்கப்பெற்றவர், முன்னைய பயிற்சி பற்றி ஒரோவழி செயற்பட நேர்ந்தால், அவர் தற்போதம் இன்றிச் சிவன்வழி நின்று செயல்களைப் புரிதலின் தம் மெய்யுணர்வு நிலையினின்று தாழ்வதில்லை.

வி–கு : இவை மூன்று பாட்டானும் மெய்யுணர்ந் தோர் மல நடைப் படாமல் திருவருள் நடை யுறுதலின், அவர்க்குக் கரணமும் செயலுமாய் உள்ள மாயேயமும் வினையும் ஒளியாய் நிகழும் என்பது உணர்த்தப்பட்டது.

" மாயைமா யேய மாயா
வரும்இரு வினையின வாய்மை
ஆயஆர் உயிரின் மேவும்
மருளெனின் இருளாய் நிற்கும்
மாயைமா யேய மாயா
வரும்இரு வினையின் வாய்மை
ஆயஆ ருயிரின் மேவும்
அருளெனின் ஒளியாய் நிற்கும்."

என்னும் சிவப்பிரகாசத் திருவிருத்தத்திற்குத் திராவிட மாபாடியத்துக் கூறிய மெய்யுரை காண்க.

மாயேயம் என்னும் சொல் மாமாயை என இரண்டிடத்துச் சிவப்பிரகாசத்தில் மாற்றிக்கொள்ளப் பட்டுள்ளது. மா மாயை என்பது ஆகம மரபுபற்றிச் சுத்தமாயையையே குறிக்கும் என்பதும் அது பொருந் தாமையும் நுண்உணர்வாற் கண்டுகொள்க. (490)

## 40. அவாவறுத்தல்

அஃதாவது மெய்யுணர்ந்தோர், முன் நின்ற வினையும் பின் வரக்கடவ வினையும் அறுத்தாராயினும் உடம்பும் அது முகந்த நுகர்வினையும் உடையரா கலின், அவை வாயிலாகப் பண்டைய பயிற்சி பற்றி உலக நுகர்வின்கண் நினைவு வரக்கூடும்; அங்ஙனம் வரின் அந்நினைவைத் துவரக்கெடுக்க எனக் கூறுதல்.

வாசியும் ஊசியும் பேசி வகையினால்
பேசி யிருந்து பிதற்றிப் பயனில்லை
ஆசையும் அன்பும் அறுமின் அறுத்தபின்
ஈசன் இருந்த இடம்எளி தாமே. 2612

க-து: இது சாதனம் எல்லாம் அவாவறுத் தலையே முடிநிலைச் சாதனமாக உடையன என் உணர்த்துகின்றது.

பொ-ரை: உயிர்ப்பும் சுழுமுனையும்பற்றி முறையாகப் பேசிப் பயின்றும், இறைவன் பொருள் சேர் புகழினை இடையறாது பேசியும், திருப்பெயர்களை முறை தழுவாமல் சொல்லியும் ஒருவர்க்கு முடிந்த பயன்கிட்டாது: இவை படிநிலைகளே ஆகும். உடம்பின் மேலும் உலகப்பொருள்மேலும் செல்லும் அவாவினையும், உயர்ந்தோராயினும் தொடர்புகொண்டு அவர் பக்கல் செய்யும் அன்பும் தம்பால் நிகழாமல் காக்கத் தக்கவை. இங்ஙனம் அவாவை முற்றக் கெடுத்தார்க்கு ஈசன் அதுவரை இருந்துவந்த இடம் எளிதில் விளங்கும்; அவாவற்ற உள்ளமே இன்புருவாம் சிவன் இருந்தஇடம் என்றபடி.

வி-கு: "அற்றவர்க்கு அற்ற சிவன்" என்னும் பிள்ளையார் திருமொழி நினைத்தற்கு உரியது. ஊசி-சுழுமுனை. உம்மைகள் தொக்கன். (491)

மாடத் துளானலன் மண்டபத் துளானலன்
கூடத் துளானலன் கோயி லுளானலன்
வேடத் துளானலன் வேட்கைவிட் டார்நெஞ்சில்
மூடத் துளேநின்று முத்திதந் தானே. 2613

க-து: இது முதல்வன் அவாவறுத்தார் நெஞ்சில் சிறப்பாகத் தங்கியிருந்து உலகினர்க்கு வீடு அளிக்கின்றான் என்பது கூறுகின்றது.

பொ-ரை: முதல்வன் வீடுகளில் இயற்றப்படும் மாடத்திலும், மண்டபத்திலும், கூடத்திலும் கோயிலி

லும், திருவேடத்திலும் மிக அணுக்கமாக இருப்பான் ஆலன்; மற்று, அவாவறுத்தார் நெஞ்சில் மறைந்திருந்து அவரை வழிபட்டோர்க்கு வீடு அருளுவன். (492)

வி – கு : மூட்டத்து – மறைவாக.

ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை அறுமின்கள்
ஆசை படப்பட ஆய்வரும் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்த மாமே. 2614

க – து . இஃது அவாவே துன்பங்களுக்கு வித்து எனக் கூறுகின்றது.

பொ – ரை : ஒருவன் எவ்வளவு ஆசையுடையனோ அவ்வளவு துன்பங்கள் உறுவன்: அவன் ஆசையை எவ்வளவு விடுகின்றானோ அவ்வளவு இன்புறுவன்; ஆதலால் ஈசனோடு வேண்டுவது எனினும் ஆசையின்றி அவனை வழிபடுவதே அறிவுடைமை ஆகும்.

வி - கு : ' கூடும் அன்பினிற் கும்பிடு தலேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார் '

" வேண்டும் பொருளொன் றுண்டென்னின்
அதுவும் உன்றன் விருப்பன்றே "

என வரும் திருமுறைகள் எண்ணத் தக்கவை. (493)

அடுவன பூதங்கள் ஐந்தும் உடனே
படுவழி செய்கின்ற பற்றற வீசி
விடுவது வேட்கையை மெய்ந்நின்ற ஞானம்
தொடுவது தம்மைத் தொடர்தலும் ஆமே. 2615

க - து : இது வீடுபெற விரும்புவார் செய்ய வேண்டுவன இன்ன எனக் கூறுகின்றது.

பொ-ரை : வீடுபெற விரும்பும் ஒருவன் ஐம்பூதங்களின் குணமாகிய சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐம்புல நுகர்ச்சியை ஒருங்கே கெடுத்தல் வேண்டும். கேடு பயக்கும் நெறியில் உய்க்கும் உலகப் பொருட்பற்று நீங்கும்படி அறிவாகிய வாளால் எறிந்து அவற்றின்மேல் செல்லும் வேட்கையை விடுதல் வேண்டும். எப்பொழுதும் கடைப்பிடிக்க வேண்டுவது மெய்யாக நிலைபெறும் அறிவினை. தன்னையும் தலைவனையுந் தலைப்பட முயலுதலும் பொருந்துவதே

வி-கு : அடுவன – கெடுக்கத்தக்கன. விடுவது– விடத்தக்கது. தொடுவது – தொடத்தக்கது, ஆம் என்றதனை அடுவன முதலிய மூன்றனோடும் கூட்டுக. தம்மை – தான் எனப்படும் சீவான்மா பரமான்மாக்களை. தொடர்தல் – யான் யார் என உள்நோக்கிக் காண்டலும், முதல்வனை அளவையானும் அநுபூதியானும் ஆய்ந்து காண்டலும்.

இத்திருமந்திரத்தை 'அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும் – வேண்டிய எல்லாம் ஒருங்கு' என்னும் குறட்பாவோடு ஒப்பிடுக. (494)

உவாக்கடல் ஒக்கின்ற ஊழியும் போன
துவாக்கட லுட்பட்டுத் துஞ்சினர் வானோர்
அவாக்கட லுட்பட் டழுந்தினர் மண்ணோர்
தவாக்கடல் ஈசன் தரித்துநின் றானே. 261

க—து : உலகமும் உலகத்தில் உள்ளாரும் அழிதலும், ஈசன் ஒருவனே அழிவின்றி நிலைபெறுதலும் கூறுகின்றது இப்பாட்டு.

பொ - ரை : தலையுவாவில் தணிந்தும் கடையுவாவில் பொங்கியும் வரும் கடல் போல, அழிப்புக் காலத்தில் ஒடுங்கியும் படைப்புக் காலத்தில் தோன்றியும் வரும் கால இடையீடாகிய ஊழிகள் பல சென்றன விருப்பு வெறுப்பு, இன்பத்துன்பம், பெருமை சிறுமை முதலிய இருமை மிகுதியுட்பட்டு விண்ணுலகத்தினரும் இறந்தனர். ஆரா இயற்கையினையுடைய அவா மிகுதியுட்பட்டு மக்களும் பிறவிக் கடலுள் அழுந்தினர். பொய்யாத அருளொளிக் கடலாகிய சிவபிரான் ஒருவனே எவ்வித மாறுதலும் இன்றி ஈறின்றி உளன்.

வி - கு : தலை உவா—அமாவாசி. கடை உவா—பூரணை. துவா - இரண்டு, அஃது இருமைப்படவரும் தொந்தங்களைக் குறித்து நின்றது; தொந்தம் என்பது துவம் துவம் என்பதன் திரிபு. தவா - பொய்க்காத. புரைபடாத. ஈசன் – ஆள்வோன், தரித்து நிற்றல்—மாறுதலும் அழிதலும் இன்றி என்றும் ஒரு படித்தாதல், போன - போயின (வினைமுற்று). (495)

நின்ற வினையும் பிணியும் நெடுஞ்செயல்
துன்தொழி லற்றுச் சுத்தம தாகலும்
பின்றைங் கருமமும் பேர்த்தருள் நேர்பெற்றுத்
துன்ற அழுத்தலும் ஞானிகள் தூய்மையே. 2617

க - து : இஃது அறிவர்கள் வீட்டு நெறிக்கண் மேற்கொள்வனவற்றைத் தொகுத்துக் கூறுகின்றது

பொழிப்புரை : இடையறவின்றித் தொடர்ந்து நின்ற வினைத்தொடர்பும், மலமாயைப் பிணிகளும் கெடுதாகக் காரியப்படுதற்கண் பொருந்திய தஞ்செயல் அற்று அம்மூன்றன் வாதனைகளின் நீங்கித் தூய்மையுறுதலும், இதனால், பின்னின்று செய்யப்பெறும் ஐந்தொழிலிற் படுதலின் நீங்கித் திருவருள் நேர்படப் பெறுதலும், தம்மை அவ்வருளால் காட்டப்பெறும் சிவத்தில், காண்பான், காட்சி என்பவை காணப்படு பொருளில் அடங்கி நெருங்கும்படி அழுந்தச் செய்தலும் அறிவர்கள் செய்யும் தூய்மைச் செயல்களாம்.

வி – கு : தூய்மை – உயிர் மாசுகழிந்து நிற்கும் வீட்டுநிலை; இங்கு அவ்வீட்டிற்கு வாயிலாக அறிவர்கள் செய்யும் செயல்களின்மேல் அச்சொல் நின்றது.

பின்று ஐங்கருமம் – பிறப்பு நிலையில் முதல்வன் உயிர்களின் பின்னின்று செய்துவரும் ஐந்தொழில். வீட்டு நிலைக்கண் முதல்வன் தன் செயல்களை முன்னின்று செய்வன்.

'ஐந்தொழிலும் காரணர்க ளாந்தொழிலும் போகநுகர் வெந்தொழிலும் மேவார் மிக'

எனத் திருவருட்பயன் அணைந்தோர் தன்மையைக் கூறுதலின் சிவபோகத்தின் தாழ்ந்ததாகிய, முதல்வன் போல் ஐந்தொழில் செய்யவிரும்பும் விருப்பத்தைக் களைந்து என உரைப்பினும் அமையும்.

உடல்கொண்ட ஊழ்வினை ஒரோவழி வாதனை பற்றித் தாக்குங்கால் முன்னர்ப் புண்ணிய பாவங்

களைப் பயக்கும் விருப்பு வெறுப்பும், அதுபற்றி மாயையின் காரியங்களைப் பார்த்தலாகிய சுட்டுணர்வும், அதனால் மலத்தின் செயலாகிய திரிபுணர்ச்சியும் என இவ்வாறு மும்மலமும் மூளுதலின், அவை அங்ஙனம் மூளாதபடி காத்தலை, 'நெடுஞ்செயல் துன் தொழில் அற்று' என்றார். (496)

உண்மை உணர்ந்துற ஒண்சித்தி முத்தியாம்
பெண்மயல் கெட்டறப் பேறட்ட சித்தியாம்
திண்மையின் ஞானி சிவகாயம் கைவிட்டால்
வண்மை அருள்தான் அடைந்தன்பில் ஆறுமே. 2618

க - து : இது சாதகரின் உள்ள நிலைக்கேற்றபடி பேறுகள் வேறுபடும் என்று உணர்த்துகின்றது.

பொ - ரை : பொருள்களின் உண்மையியல்பை உணர்ந்து அதற்குத்தக நடத்தலினால் வரும் நற்பேறு அறியாமையினின்று விடுபடுதலாம். விருப்பை விளைப்பனவற்றில் மயக்கம்நீங்க வரும் பயன் எண்பெருஞ் சித்தி ஆம்; அறிவன் உறுதியாகச் சிவனுக்கு உடம்பாக நின்று அதிகாரம் புரிதலைக் கைவிட்டால், எல்லாம் கொடுக்கவல்ல திருவருளைத் தலைப்பட்டு அயரா அன்பின் அரன்கழல் சென்றின்புறும்.

வி - கு : பெண் என்றது பெட்பு விளைப்பனவற்றை. சிவகாயம்-சிவனது அதிகார சத்தியைப் பெற்று அவனுக்கு உடம்புபோல் நிற்றல். ஆறும்-ஆறுதல் பெறும். (497

அவனிவன் ஈசனென் றன்பற நாடிச்
சிவனிவன் ஈசன்என் றுண்மையை ஓரார்
பவனிவன் பல்வகை யாமிப் பிறவி
புவனிவன் போவது பொய்கண்ட போதே. 2619

க – து : இது சிவனுந்தன்மையை விளக்குகின்றது.

பொ – ரை : அளவைகளைக் கடந்த முதல்வன் நம்மால் அறியப்படும் உயிராகிய இவனுடைய ஆள்வோன் என்று தொடர்பு பற்றாது ஆராய்ந்துகண்டு, சிவன் நான் (சிவாய) என்னும் பாவனையால் சிவனாகிய இவன் அங்ஙனம் பாவிக்கமாட்டாத சீவர்க்கு ஈசன் ஆவன் என்று உபநிடதங்களின் உண்மைக் கருத்தை உலகினர் ஓர்த்து உணரார் இச்சீவன் பல்வகையான பிறவிகளில் தோன்றுபவன் (பவன்). புவனங்களில் ஏகதேசப்பட்டுத் தங்கும் இவன் போவது பொய்யைப் பொய்யாகக் கண்டு அகன்றபோதே ஆகும். எனவே, சிவன் பிறவான் எனவும், ஏகதேசப்படாது என்றும் வியாபகன் எனவும், என்றும் ஒருபடித்தாந் தன்மையன் எனவும் கூறியபடி.

வி – கு : அவன் – முதல்வன். இவன் – சீவான்மா, அவன் இவன்றன். ஈசன் எனவும் சிவனாகிய இவன் பிறர்க்கு ஈசனுவன் எனவும் உரைக்க. பவன் – பவிப்பவன், தோன்றுபவன். இவன் போவது - சீவன் சிவன் எனப் பெறுவது. புவன் – புவனம், உலகு. அன்பு தன் காரணமாகிய தொடர்பின்மேல் நின்றது. (498

கொதிக்கின்ற வாறும் குளிர்கின்ற வாறும்
பதிக்கின்ற வாறிந்தப் பாரக முற்றும்
விதிக்கின்ற ஐவரை வேண்டா துலகம்
நொதிக்கின்ற காயத்து நூலொன்று மாமே. 2620

க - து : இது மேலோர்க்குப் பகையாவன ஐம் பொறிகளும் அவற்றை உலகிற் செலுத்தும் அவாவும் என்று உணர்த்துகின்றது.

பொ - ரை : மேலோர் ஐம்பொறிகளையும் அவற்றைக் கட்டி அசைக்கும் நூல்போன்ற அவா ஒன்றனையும் விரும்புவதில்லை. ஐம்பொறிகள் இவ்வுலகம் முழுவதும் வெறுப்பிற்கும் விருப்பிற்கும் உரிய பொருள்களாமாறு உருக்கொள்ளும்படி அவற்றைப் படைத்துக் காட்டுவனவாக உள்ளன. மலம் சோரும் இவ்வுடலில் அவற்றை ஆட்டும் நூல்போன்றது வினைக்கீடாக ஒருவன் அறிவில் எழும் அவா.

வி - கு : இப்பாரகம் முற்றும் கொதிக்கின்ற வாறும் குளிர்கின்றவாறும் பதிக்கின்றவாறு விதிக் கின்ற ஐவரை உலகம் வேண்டாது; நொதிக்கின்ற காயத்து நூல்போன்ற ஒன்றனையும் (அது) வேண் டாது ஆம் எனக்கூட்டி முடிக்க.

கொதித்தல் - துன்பந்தருவதாய வெறுப்பிற்கு உரியதாதல். குளிர்தல் - இன்பந் தருவதாய் விருப் பிற்கு இடன் ஆதல். இக்கற்பனையைத் தன் அவாவி னால் ஒருவன் உலகத்தில் பதிக்கும்படி விதிப்பன ஐம் பொறிகள்; அவை அங்ஙனம் விதித்தற்குக் காரண மாய் நூல்போன்று நின்று அவற்றைப் புலப்பெறச்

செய்வது அவா. அவா என்பது அதிகாரத்தாற் பெறப்பட்டது. காயத்து ஐவர்ர என மேலும் கூட்டிக் காண்க.

நொதித்தல்-ஊறுதல், மலஞ்சோர நிற்றல். (499)

**உய்ந்தனம் என்பீர் உறுபொருள் காண்கிலீர்**
**கந்த மலரிற் கலக்கின்ற நந்தியைச்**
**சிந்தையில் வைத்துத் தெளிவுறச் சேர்த்திட்டால்**
**முந்தைப் பிறவிக்கு மூலவித் தாமே 2621**

க – து: கடல் நீரின் சுவை உப்பு உரு ஆனாற் போன்ற குறைவிலா நிறைவின் உருவாகிய குருவை அறிவில் வைத்தலே வீட்டுலகம் எய்துவதற்கு வாயிலாம் என்று உணர்த்துகின்றது இப்பாட்டு.

பொ – ரை : பிறவியைக்கடந்தோம் என்று கூறி மகிழ்வீர்கள்; ஆயின், உடம்பில் உயிர்க்குத் துணையாய்ப் பொருந்தியுள்ள முதற்பொருளைக் காணும் ஆற்றல் இல்லாதீராய் உள்ளீர். மலரின்கண் மணம் போல் நும் உயிரிற் கலந்து உணர்த்தி உடனுறையும் முதல்வனாகிய சற்குரவனை, தெளிவு உண்டாதற் பொருட்டு நினைவில்வைத்து அணைத்துவந்தால் அங்ஙனம் செய்தல் எவற்றினும் முற்பட்ட தோற்றமாகிய வீட்டுலகிற் சென்று புகுதற்குக் காரணமாகிய வித்தை ஊன்றுதலாம்.

வி – க் : மூலவித்து – மூலமாகிய வித்து; வரன் என்னும் வைப்பிற்கு ஓர்வித்து என்றபடி, கந்த மலரில்–மலர்க்கந்தத்தில் எனமாற்றி உரைக்க. கந்தம் – மணம்.

'உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர்
எழுதரு நாற்றம் போல் - பற்றல் ஆவதோர்
நிலையிலாப் பரம் பொருள்'

என்னும் மணிவார்த்தையும்,

'பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது'

என்னும் திருமந்திரமும் காண். (500)

## 41. பத்தியுடைமை

அஃதாவது முதல்வனிடத்தும் அவன் அடியார் இடத்தும் அன்பும் பணிவும் உடையன் ஆதல்.

முத்திசெய் ஞானமும் கேள்வியு மாய் நிற்கும்
அத்தனை மாயா அமரர் பிரான்றன்னைச்
சுத்தனைத் தூய்நெறி யாய்நின்ற சோதியை
பத்தன் பரசும் பசுபதி தான்என்றே. 2622

க - து: இப்பாட்டு பத்தியுடையான் செயல் கூறுகின்றது.

பொ - ரை: பரமுத்திக்கு நேர்வாயிலாகிய திருவடி உணர்வினையும், அதனை உணர்த்தும் ஒரு வார்த்தையினையும் கொடுத்தருளும் தந்தையை, அழியாத தேவர்கள் தலைவனை, மாசு அற்றவனை, வீட்டு நெறியை உயிர்க்கு உடனாய் நின்று வெளிப்படுத்தி வரும் அருள் ஒளியை உயிர்களுக்கு இறைவன் என்று ஏத்துவோன் அன்பன் ஆவன்.

வி - கு: கேள்வி - திருவைந்தெழுத்து, சிவன் நீ என்றாற்போல உணர்த்தப்படும் மறைமொழி.

பத்தன் பரசும் எனப் பத்தன் இயல்பாகக் கூறினும். பரசுவோன் பத்தன் என அவனுக்கு இலக்கணம் கூறுவது கருத்தாகக் கொள்க. (501)

அடியார் அடியார் அடியார் அடிமைக்கு
அடியனாய் நல்கிட் டடிமையும் பூண்டேன்
அடியார் அருளால் அவனடி கூட
அடியான் இவனென் றடிமைகொண் டானே. 2623

க – து: இஃது அடியார்க்கு அடிமையே ஈசன் அடிமையைப் பயக்கும் என்று உணர்த்துகின்றது.

பொ – ரை: இறைவன் அடியார் வழிமுறையில் நான்காம் அவருக்கு என்னை அடிமையாகக் கொடுத்து முதல்வனுக்கு அடிமையும் மேற்கொண்டேன். அடியார்களது திருவருளால் சிவன் திருவடித் தொண்டு கிட்டியது; அதனால், இறைவன் என்னை மெய்யடியான் என ஏற்றுக்கொண்டான்.

வி – கு: முதல்வனுக்கு நேர் அடியர் ஞானிகள், அவருக்கு அடியார் யோகிகள், அவருக்கு அடியர் கிரியையினர். அவர்க்கு அடிமை சரியையினர். இங்ஙனமன்றி, முறையே ஆசிரியர், சாதகர், மகன்மையினர், தொண்டினர் எனினும் பொருந்தும், ஞானம் முதலியவற்றை அறிவு, செறிவு, நோன்பு, சீலம் எனத் திருவாசக வழக்குப் பற்றிக் குறித்தலும் உண்டு. (502)

நீரிற் குளிரும் நெருப்பினிற் சுட்டிடும்
ஆரிக் கடனந்தி யாமா றறிபவர்
பாரிற் பயனரைப் பார்க்கிலும் நேரியர்
ஊரில் உமாபதி ஆகிநின் றானே. 2624

க - து : இஃது இறைவன் எங்கும் உளனாதல் கூறுகின்றது.

பொ - ரை : முதல்வன் நீரில் தண்மையாகவும் நெருப்பில் வெம்மையாகவும் உளன்; இங்ஙனம் அவ்வப் பொருள் தோறும் பொருந்தும் முறைமையினை உடையவன் நந்தி ஆம்; அவனை இங்ஙனம் பொது வியல்பு பற்றியன்றிச் சிறப்பியல்பு பற்றி அறிபவர் ஆர்? இனி, உலகில் தற்பயன் குறித்து முயல்வாரைப் பார்க்கினும் நேர்மை உடையார் இடத்தில் அவன் சத்தியோடு கூடிய சிவனாய் நின்று அருள்வன்.

வி - கு : ஊர் - இடம். பாரிற்பயனார்-பெற்றவா பெற்ற பயனது நுகர்ந்திடும் பித்தர்; இவரிடத்து முதல்வன் தன் பொதுவியல்பும் காட்டுவான் அல்லன் என்றபடி.

நேரியர் - அறங்கொண்டோர்: அவர்கண் முதல்வன் பொதுமையில் விளங்குவன் என்றபடி. அவன் சிறப்பாக விளங்குவது பத்தியுடையார்மாட்டு என்பது கருத்து. (503)

ஒத்தல கேழும் அறியா ஒருவனென்
றத்தன் இருந்திடம் ஆரறி வார்சொல்லப்
பத்தர்தம் பத்தியின பாற்படி னல்லது
முத்தினை யார்சொல்ல முந்துகின் றாரே. 2625

க - து : இது முதல்வன் பத்திவலையிற் படுதல் கூறுகின்றது.

பொ - ரை : எழுலகும் ஒன்று கூடியும் அறிய மாட்டாத ஒருவன் எனப்பட்ட அத்தன் இருந்த இடத்தை அறிந்துசொல்ல யார் உளர்? ஒருவரும் இலர். அன்பர்கள் அன்பில் தானே தோன்றி தன் இயல்பபை அறிவிப்பின் அல்லது பிறர் தன்முனைப் பால் அறிந்து கூறப்படாத இயல்பினன் அவன்.

வி - கு : என்ற அத்தன். என்றத்தன் என அகரம் தொகுத்தல் ஆயிற்று. இயல்பு - உருவம், குணம், செயல், பெயர் முதலியவை. (504)

**ஆன்கன்று தேடி அழைக்கு மதுபோல்**
**நான்கன்றாய் நாடி அழைத்தேனென் நாதனை**
**வான்கன்றுக் கப்பாலாய் நின்ற மறைப்பொருள்**
**ஊன்கன்றால் நாடிவந் துள்புகுந் தானே, 2626**

க - து இஃது இறைவன் அன்பர் தவத்திற்கு எளிவருவன் என்று உணர்த்துகின்றது.

பொ - ரை : தாயைப் பிரிந்து நிற்கமாட்டாத ஆன் கன்று போல, என் தலைவனை எங்கும் அன் போடு தேடி அழைத்தேன். மேல் உலகத்தவர் செய்யும் தவத்திற்கு அப்பாலாய் நின்ற மறையாக உணர்த்தப்படும் பொருளாகிய முதல்வன், யான் ஊன் வாடி இளைத்தலால், என்னைத் தானே நாடி சற்குரவனாய் எழுந்தருளிவந்து என் உளம் புகுந்து அருள்வான் ஆயினன்.

வி - கு : கன்று, பின்னை இரண்டும் முதனிலைத் தொழிற்பெயர். கன்றுதல் - உற்று நோய் நோன்று உரு இளைத்தல், தவம். (505)

பெத்தத்துத் தன்பணி இல்லை பிறத்தலான்
முத்தத்துந் தன்பணி இல்லை முறைமையால்
அத்தற் கிரண்டும் அருளால் அளித்தலால்
பத்திப் பட்டோர்க்குப் பணியொன்றும் இல்லையே

க - து : இஃது அன்பர்கள் பிறப்பு வீடு என்னும் இருநிலைகளினும் தன்பணி நீப்பர் என்பது உணர்த்துகின்றது.

பொ - ரை : இறையன்புடையார்க்குப் பிறப்பு நிலையில் அன்பே உருவாக இறைவன் தோன்றிச் செலுத்துதலால், தம்செயல் என்பது இல்லை; வீட்டு நிலையினும் அம்முறையால் அவர்க்குத் தம்செயல் இல்லையாம். இருநிலையினும் அவர் தம் செயல்களை அருளோடு கூடிநின்று முதல்வனுக்கு அளித்துவிடுகின்றனர்.

வி - கு : அன்பு பிறப்பு வீடு இரண்டினும் இறைவன் அருளை எய்துவித்து வினைமாசு நீக்குகின்றது என்றது கருத்து.

பிறவியால் அன்பும். அதுபற்றி அருளும் (506) பிறத்தலால்.

பறவையிற் கற்பமும் பாம்புமெய் யாகக்
குறவஞ் சிலம்பக் குளிர்வரை ஏறி
நறவார் மலர்கொண்டு நந்தியை யல்லால்
இறைவனென் றென்மனம் ஏத்தகி லாவே 2628

க - து : எவ்விடத்து ஏகினும் சிவபிரானை அன்பு உள்ளத்தால் வழிபடுவதே செய்யற்பாலது என்கின்றது இது.

பொ-ரை : கடலிற் சென்ற பறவை தனக்கு அங்குச் சார்பாயுள்ள பாய்மரக் கூம்பினையே சார்வது போல, கற்பமும் பாம்பும் என் உடம்பில் உள்ளன வாக, குறவரினம் ஒலிக்கும்படி மலையின் மீது ஏறினும் தேன்பொருந்திய மலர்கொண்டு சிவனையே என்மனம் முதல்வன் என்று ஏத்தும்.

வி - கு : பறவையின் - இன் உவம உருபு. குளிர் வரை ஏறி என்றது தனித்துத் தவம் இயற்றுவதற்கு மலை ஏறிக் குகையின் இருத்தலையும். ஆதாரவெற்பு. மேரு எனப்படும் சுழுமுனையின் முடிக்கண் ஏறி மீதானம் அடைதலையும் குறிக்கும். கற்பம்-சாவாது மூவாது இருத்தற்குக் கொள்ளப்படும் மருந்து. பாம்பு - குண்டலி ஆற்றல். குறவம் - குறவர் இனம். மணி, கடல், சங்கு முதலியவற்றின் ஓசை. நறவார் மலர் - தேன் பொருந்திய மலர், அன்பொடு கூடிய தெளிவுணர்வு.

இன்றியமையாமை உணர்த்துதற்த எதிர் மறை முகத்தாற் கூறப்பட்டது. (507)

உறுதுணை நந்தியை உம்பர் பிரானை
பெறுதுணை செய்து பிறப்பறுத் துய்மின்
செறுதுணை செய்து சிவனடி சிந்தித்து
உறுதுணை யாயங்கி யாகிநின் றானே. 2629

க - து : இஃது ஆசான் அருளால் பிறப்பறுத்து உய்க என்கின்றது.

பொ - ரை : பிறப்பு வீடு இரண்டினும் துணையாக உற்றவனும், தேவர்கள் தலைவனுமாகிய திருநந்தியைத்

துணையாகப் பெற்றுப் பிறப்பிற்குக் காரணமாகிய மல மாயை வினைகளை அறுத்துக்கொள்க. அவன் குருவாய் வருவதற்கு முன் மறைப்பாற்றலாய் நின்று தன் திருவடியை நினைக்கச்செய்து, அருளாற்றலாயும் அதனையுடைய முதலாயும் நின்றன்.

வி — கு : நந்தி — சற்குரு என்னும் பொருட்டாய் நின்றது. செறுதுணை — மலசத்தியை நீங்கும்படி சினந்துநிற்கும் மறைப்பாற்றல் ( சினமாருவு திரோதாயி ); சிந்தித்து — சிந்திப்பித்து. உறுதுணை — அருளாற்றல். அங்கி — அங்கத்தை உடையது, முதல், சிவன்; தன் என்னும் பொருள்பட்டு, சுட்டளவாய் நின்றது. (508)

வானவர் தம்மை வலிசெய் திருக்கின்ற
தானவர் முப்புரஞ் செற்ற தலைவனைக்
கானவன் என்றும் கருவரை யான்என்றும்
ஊனத னுள்நினைந் தொன்று பட்டாரே. 2630

க — து : இது முதல்வனைப் புராண வரலாறு பற்றி உள் நினைந்து ஒன்றுமாறு கூறுகின்றது.

பொ — ரை : தேவர்கட்குத் துன்பஞ்செய்த அசுரர்கள் முப்புரங்களைப் புன்னகை செய்து எரித்த தலைவனாகிய சிவபிரானை, அருச்சுனனுக்கு அருள் புரிந்த வேட உருவினன் என்றும், கரிய மலைக்கண் எழுந்தருளியிருந்து அருள்புரிவோன் என்றும் உடம்பு கோயிலாக உள்ளங் கருவறையாக ஒன்றியிருந்து நினைந்து, அதனால் அவன் திருவடிப்பேறு பெற்றாரும் உளர். குருவடிவில் அன்பு செய்தல் கூறியபடி. (509)

நிலைபெறு கேடென்று முன்னே படைத்த
தலைவனை நாடித் தயங்கும்என் உள்ளம்
மலையுளும் வானகத் துள்ளும் புறத்தும்
உலையுளும் உள்ளத்தும் மூழ்கிநின் றேனே. 2631

க – து : இஃது உலகமுதல்வனை உள்ளே நாடுக என்று உணர்த்துகின்றது.

பொ – ரை : உலகப் பொருள்களுக்குத் தோற்றமும், நிலைபெறுதலும், கேடும் என்றவற்றை முன்னரே அமைத்துவைத்த முதல்வனை மலையின் கண்ணும், வானின்கண்ணும், வேறிடத்தும் நாடி என்னுள்ளம் கலக்கம் அடைந்தது. கொல்லன் உலை போன்ற உயிர்ப்பின் கண்ணும் உள்ளத்து உணர்வின் கண்ணும் அவன் இருப்பை உணர்ந்து, அவன்றன் அருளொளியில் மூழ்கி நிலைபெற்றேன்.

வி – கு : நிலைபெறு – முதனிலைத் தொழிற் பெயர். இனம்பற்றித் தோற்றம் வருவிக்கப்பட்டது. மூன்றும் அடியை நாடி என்பதன்முன் பெய்து உரைக்க.

உயிர்ப்பைக் கூறியது. அது நிற்க மனம் நிற்கும்: அதனால் உணர்வு விளங்கும் ஆகலின்.

'ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர்
ஞான விளக்கினை ஏற்றி நன்புலத்து
ஏனை வழிதிறந் தேத்து வார்க்கிடர்
ஆன கெடுப்பன அஞ்செ ழுத்துமே'

என்னும் தமிழ் மறை காண்க. (510)

## 42. முத்தியுடைமை

அஃதாவது வீடுபேறு எய்துவார் மேற்கொள்ள வேண்டிய சாதனங்களைக் கூறுதல்.

முத்தியில் அத்தன் முழுத்த அருள்பெற்றுத்
தத்துவ சுத்தி தலைப்பட்டுத் தன்பணி
மெய்த்தவம் செய்கை வினைவிட்ட மெய்யுண்மைப்
பத்தியி லுற்றோர் பரானந்த போதரே. 2632

க – து ; இறவாத இன்ப உணர்வினராவார் இவர் என்று இப்பாட்டு உணர்த்துகின்றது.

பொ – ரை : மேலான இன்ப உணர்வினர் ஆவார் ; வீட்டுநெறியில் முதல்வனது திருவருளைக் கடைப்பிடித்து, தத்துவசுத்தி என்னும் நிலையினைத் தலைப்பட்டு, இறைபணியாகிய உண்மைத் தவத்தைச் செய்கையினால் வினைவாதனை நீங்க மெய்ப்பொருளைப் பற்றி நின்று மெய்யன்பில் நிற்போர்.

வி – கு : தத்துவசுத்தி – நிலமுதல் கலைவரை உள்ள தத்துவங்களைச் சடம் என்று உணர்ந்து அவற்றைச் சாராது நீங்கி நிற்றல்.

தன்பணி – இறைபணி ; இறைவனோடு ஒன்றி அவனருளாலன்றி ஒன்றை அறிந்தியற்றாது நிற்றலே மெய்த்தவம். இதனால் வினைகெடும்.

இறைவன் பிறப்பு வீடு இரண்டினும் தம்மோடு ஒன்றி உடனின்று நடத்தும் செயலினை மறவாமையால் அன்புமீதூரும் ; இவ் அன்பே உண்மைப் பத்தி, அப்பத்தியால் விளைவது பரானந்தம் எனப்படும் இறவாத இன்பு.

பரம் – மேலான. ஆனந்தம் – நிறைந்த இன்பம். போதம் – உணர்வு. (511)

வளங்கனி தேடிய வன்றாட் பறவை
உளங்கனி தேடி உழிதரும் போது
களங்கனி அங்கியிற் கைவிளக் கேற்றி
நலங்கொண்ட நால்வரும் நாடுகின் றாரே. 2633

க – து : இது வீடுபேற்றுக்குத் தடையாவன இவை எனக் கூறுகின்றது,

பொ – ரை : தனக்கு அமைதியைக் கொடுக்க வல்ல வளப்பமான முத்திப்பழத்தை அவாவிய வலிய தாளையுடைய உயிராகிய பறவை, மனம் குழைந்து முயன்று சுழலும்போது, மனம் புத்தி, ஆங்காரம் சித்தம் என்னும் நான்கு அகக்கருவிகளும், கள்ளம் மிகுந்த உடம்பில் சிறு விளக்காகிய ஐம்பொறிகளை உயிர்ப்பித்து உலகை நோக்கி நாடச் செய்கின்றன.

வி – கு : தாள் – முயற்சியும் அதற்குத் துணையாக உள்ள அறிவும். உளங்கனி – உள்ளம் கனிந்து. களம் கனி – கள்ளம் மிகுந்த. அங்கி – அங்கங்களையுடைய உடம்பு. கைவிளக்கு – சிறு விளக்கு. நலம் கொள் – புலன்களின் இயல்பை உட்கொண்டு ஆராய்கின்ற ; அஃதாவது, வாயிற் காட்சியான் வந்த பொதுவுணர்வினைக் கொண்டு சவிகற்பமாக உணர்கின்ற என்றபடி.

அகக்கருவிகள் நான்கும் ஆன்மாவே என ஒற்றித்து நிற்றலின், நாடுகின்றாரே என உயிரின்

தொழிலை அவற்றின்மேல் ஏற்றிக் கூறினர். "கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே, என்றது (512) ஒப்பிடத் தக்கது.

## 43. சோதனை

அஃதாவது ஆருயிர்கள் வீடு பெறுவதற்குப் படி நிலை வழிபோல் அமைந்த எழுத்து சொல் மறை தத்துவம் புவனம் கலை என்னும் ஆறு அத்துவாக் களில் ஈட்டப்பெற்றுள்ள வினைகளை ஆய்ந்து கண்டு அழித்தல். இஃது அத்துவசோதனை எனவும், அறுவழி ஆய்வு எனவும் குறிக்கப்படும். அத்துவா — வழி; அவை சொல் மூன்று பொருள் மூன்று ஆக ஆறு.

> பெம்மான் பெருநந்தி பேச்சற்ற பேரின்பத்
> தம்மான் அடிதந் தருட்கடல் ஆடினேம்
> எம்மாய மும்வீடுத் தெம்மைக் காந்திட்டுச்
> சும்மா திருந்திடம் சோதனை ஆகுமே. 2634

க — து: இப்பாட்டு சோதனையாவது இஃது எனக் கூறுகின்றது.

பொ — ரை: யாவர்க்கும் மேலான முதல்வன். உரை பெருமையினையுடைய பேரின்பம் உடையான், உரை உணர்வுகளைக் கடந்து நுகரப்படுவதாகிய பேரின் பத்தை உயிர்களுக்கு அருளும் தலைவன். இப்பெரி யோன் தன் முற்றறிவும் பேராற்றலும் ஆகிய தன் திருவடிகளை எமக்குத் துணையாகக் கொடுத்தமை யால் அருளொளியாகிய பெருங்கடலில் முழுகி இன் புற்றேம். வஞ்சனை செய்யும் மாயை வினை என்ப

வற்றை முற்றிலும் விட்டு யான் எனது என்னும் செருக்கு உண்டாகாதபடி என்னைத் தன்னுள் அடங்கக் கொள்ளுதலால், யான் செயலற்று இருந்து அவன் வழிப்பட்டு இருக்கும் நிலையே சோதனைப் பயனாகும்.

வி – கு: இறைவன் செருக்கற்றுத் தன்னைச் சார்ந்த உயிரைத் தன்னுள் கரந்து பாதுகாப்பளிக்கும் உயர் அநுபவத்தை,

'எம்பிரான் என்ற தேகொண்
டென்னுளே புகுந்து நின்றிங்
கெம்பிரான் ஆட்ட ஆடி
என்னுள்ளே உழிதர் வேனை
எம்பிரான் என்னைப் பின்னைத்
தன்னுளே கரக்கும் என்றால்
எம்பிரான் என்னின் அல்லால்
என்செய்கேன் ஏழை யேனே'

என்னும் அப்பர் அருண்மொழியால் உணர்ந்து கடைப்பிடிக்க.

சோதனை என்பது வெறும் பாவனை அன்று என்றபடி. (513)

அறிவுடை யானரு மாமறை யுள்ளே
செறிவுடை யான்மிகு தேவர்க்குந் தேவன்
பொறியுடை யான்புலன் ஐந்துங் கடந்த
குறியுடை யானொடுங் கூடுவன் நானே 2635

க – து: இஃது இறைவன் இயல்பும் அவனொடுங் கூடி நிற்றலின் பெருமையும் உணர்த்துகின்றது.

பொ – ரை ; முதல்வன் தூய இயற்கை மெய் புணர்வுடையவன், தான் அருளிய அரும் பொருளும் சிறப்பும் உள்ள மறையின் சொல்லும் பொருளுமாய் நிறைதல் உடையவன், உயர்ந்த தேவர்க்கும் தேவனாகிய பெருந்தேவன், ஐம்புலனை நுகராத பொறிகளை உடையவன், ஐப் புலன்களுக்கு அப்பாற்பட்ட உருவம், உருவருவம், அருவம் என்னும் தடத்தக் குறிகளை உடையவன். அவனை யான் இவ்வாறு அறிந்து ஒழுகிக் கூடி இன்புறுவேன். (514)

அறிவறி வென்றங் கரற்றும் உலகம்
அறிவறி யாமையை யாரும் அறியார்
அறிவறி யாமை கடந்தறி வானால்
அறிவறி யாமை அழகிய வாறே. 2636

க – து : இஃது உண்மை யறிவாவது இஃது என்று உணர்த்துகின்றது.

பொ – ரை : 'அறிவுடையார் எல்லாம் உடையார்' என்றாற்போல, உலகத்தவர் வேண்டற்பாலது அறிவே எனச்சொல்லி ஓசையை எழுப்புவர். உண்மை யறிவைத் தாம் அறியாமையை யாரும் ஓர்ந்து உணரார். தத்துவங்களால் உயிர்க்கு விளங்கும் பாச அறிவும், அவற்றை நீங்கும்போது உளதாகும் இருளும் ஆகிய இரண்டற்கும் வேறாகிய திருவருள் ஞானம் ஒருவர்க்கு உளது ஆயின், முன்னைய அறிவு அறியாமைகளின் இயல்பு இனிது விளங்கும்.

வி – கு : கடந்த அறிவு என்பது கடந்தறிவு என அகரம் தொகுத்தல் ஆயிற்று.

நான்காம் அடிக்கு, முன்னைய அறிவு அறியாமை யாய்க் கழிவது அழகிது என உரைப்பினும் அமையும். (515)

குறியாக் குறியினிற் கூடாத கூட்டத்(து)
அறியா அறிவினி லவிழ்ந்தேக சித்தமாய்
நெறியாம் பராநந்தி நீடருள் ஒன்றும்
செறியாச் செறிவே சிவமென லாமே. 2637

க - து: சிவமாதல் என்பதன் பொருண்மை உணர்த்துவது இது.

பொ - ரை: முனைந்து நோக்காத நோக்கினால் புடைபெயர்தலின் வேறாய தலைப்பாட்டில், கரணங் கழன்று உளதாம் உணர்வில் யான் எனது எனப்படும் முப்புடைநீங்கி ஒரே அறிவாய் நெறி எனப்படும் சிவனது அருளொளி இன்பத்தில் தற்செயலின்றி விழுங்கப்பட்ட நிலையே சீவன் என்னும் பெயர் சுருங்கிச் சிவம் எனப்பெறும் நிலை ஆகும்.

வி - கு: முன் இரண்டடிகளிற் கூறியவை ஆசான் அறிவித்த குறியை மாசகலத்திற் பற்றிவிடாது இரைதேர் கொக்கு ஒத்துச் சித்தம் ஒன்றி நிற்றலிற் படுபவை. அதனால் உயிர் சகலத்தின் நீங்கிச் சுத்தத் திற் சார்பாய திருவருளொளியைத் தலைப்படும்; அவ் வருள்வழி நின்று அதன் முதலாகிய சிவத்தில் அழுந்தி நிற்றலே செறியாச்செறிவு.

அத்துவசோதனை செய்யப்பட்டார்க்கே இங்குக் கூறிய ஞானநெறியில் நிற்றல் கூடும். (516)

**காலினில் ஊறும் கரும்பினிற் கட்டியும்**
**பாலினுள் நெய்யும் பழத்துள் இரதமும்**
**பூவினுள் நாற்றமும் போன்றுளன் எம்மிறை**
**காவலன் எங்கும் கலந்து நின்றானே.** 2638

க – து : இது மேற்கூறியவாறு முதல்வன் வேறாகச் சுட்டி அறிய வாராமைக்குக் காரணம் கூறுகிறது.

பொ – ரை : அசையும் காற்றில் உடலுக்கு இன்பந்தரும் பரிசமும், கரும்பின் கட்டியில் தனித்துப் புலப்படும் இன்சுவையும், பாலில் நெய்யும், பழத்தில் அதன் சுவையும், மலரில் மணமும் பிரித்தறிய வாராமல் ஒன்றி உள்ளன. அதுபோல, இறைவனும் உயிர்களில் ஒன்றி உளன். அம்மட்டில் நில்லாது. அவ்வுயிர்களின் அடங்கும் உலகப் பொருள்களினும் அவ்வாறே கலந்து நின்று முறைசெய்து காப்பாற்றும் காவலன் ஆகவும் உளன். இறைவன் உலகு உயிர்களின் வேறு ஆயினும், இங்ஙனம் அவற்றோடு ஒன்றி உடனாதலால், அவ்வியைபுபற்றி அவன் வேறு பிரித்தறியும் சுட்டறிவைக் கடந்து, ஒற்றித்து நின்றறியும் மெய்யுணர்வுக்கு விடையமாகின்றான்.

வி - கு : இறுதியில் எழுதியவை குறிப்பெச்சம். கால் – காற்று. உயிர் உலகுகளோடு இறைவனுக்கு உள்ள சம்பந்தம் ஒன்றாய், வேறாய், உடனாதல் என விவரிக்கப்படும். இது வடமொழியில் அத்துவிதம் (இரண்டாகப் பிரிந்து நில்லாமை) என்னும் சொல்லால் குறிக்கப்படும்.

(517)

விருப்பொடு கூடி விகிர்தனை நாடிப்
பொருப்பகஞ் சேர்தரு பொற்கொடி போல
இருப்பர் மனத்திடை எங்கள் பிரானார்
நெருப்புரு வாகி நிகழ்ந்துநின் றாரே. 2637

க — து : மேற்கூறிய அறிவு நெறியைத் தலைப்பட இயலாதார். இறைவனை மனங்கொள்ளுமாறு கூறு கின்றது இது.

பொ — ரை : எங்கள் இறைவன் அம்மையோடு கூடிய அப்பனாய், பவளமலையில் மரகதக் கொடி படர்ந்தாற் போன்ற திருவுருக்கொண்டு உளன். இஃது அவனை மனத்திடைக்கொண்டு எண்ணும் உரு ஆகும். இங்ஙனம் எண்ணும் போது அவன் நெருப்பின் உருவாகிய செம்மை நிறம் உடைய னாய்க் கருதப்படுவன் ( அம்மை பச்சை நிறம் உடையள் ). இவ்வுருவை விருப்பொடு உள்ளத்தின் எண்ணி, அவன் போகி, யோகி, வேகி என வேறு படும் கோலத்தினன் ஆதலையும் ஆய்க.

வி — கு : நாடி — நாடு (ஏவல் வினைமுற்று). பொற்கொடி — அழகிய கொடி விகிர்தன் — மாறுபடு வோன், நான்காம் அடிக்கு, இறைவன் சிவாங்கி வடிவிலும் சிவலிங்க வடிவிலும் உலகத்தார்க்குத் தன்னை விளக்கி நிற்கின்றான் என்னும் பொருளும் உடன்கொள்க.
(518)

**நந்தி பெருமான் நடுவுள் வியோமத்து**
**வந்தென் அகம்படி கோயில்கொண் டான்கொள்ள**
**எந்தைவந் தானென் றெழுந்தே னெழுதலும்**
**சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே. 2640**

க — து : இதுவும் அது.

பொ — ரை : சிவபிரான் என் நெஞ்சத் தாமரையில் உள்ள அறிவுவெளியில் வெளிப்பட்டு என் அகத்தைக் கோயிலாகக் கொண்டான், கொண்ட போது, அவன் புறத்தே வந்ததாகக் கண்டு அவனை வரவேற்க எழுந்தேன்; எழுந்தபோது. அச்சிவன் என் சிந்தையில் இருப்பதைத் தெளிந்தேன்.

வி — கு : அச்சிவன் எனச் சுட்டு வருவிக்க. அகமும் புறமும் ஒன்று என்றபடி. (519)

**தன்மைவல் லோனைத் தவத்துள் நலத்தினை**
**நன்மைவல் லோனை நடுவுறை நந்தியைப்**
**புன்மைபொய் யாதே புனிதனை நாடுமின்**
**பன்மையில் உம்மைப் பரிசுசெய் வானே. 2641**

க — து : இதுவும் அது.

பொ—ரை : தன் தன்மை சிறிதும் மாறுபடாமல் எப்பொருளையும் கலந்து நடாத்த வல்லவனை, உண்மைத் தவத்தின் பயனாக உள்ளவனை, நல்லோர்தம் நன்மையை அறியவல்லானை, நெஞ்சத்து உடன் உறைகின்ற மெய்ப்பொருளை, இயல்பாகவே மாசு நீங்கியுள்ளோனைப் புன்னெறியில் செல்லுதலும் பொய்த்தலும் இன்றி நும் உள்ளத்துள் நாடி அறிக.

நாடும் நும்மை ஏனை உயிர்களினின்றும் பிரித்து வைத்துச் சிவமாம் பரிசு செய்தருளுவன். (520)

தொடர்ந்துநின் றானென்னைச் சோதிக்கும் போது
தொடர்ந்துநின் றானல்ல நாதனும் அங்கே
படர்ந்துநின் றாதிப் பராபரன் எந்தை
கடந்துநின் றவ்வழி காட்டுகின் றானே. 2642

க - து இறைவன் உலகைக் கடந்து நின்றே அதற்கு உதவுகின்றான் என்பது இதனால் உணர்த்தப் படுகின்றது.

பொ-ரை : தான் உணர்த்தியவாறு உணர்தற்கு உரிய காலம் வருகிறதா எனச் சோதிக்கும் போது முதல்வன் என் அறிவுக்கறிவாய்ப் பின்னின்று என்னைத் தொடர்ந்தான். அப்பருவம் வரும்போது ஞானநெறியைப் படர்க்கையில் நின்று உணர்த்த நல்ல ஆசானாகி எழுந்தருளி அத்துவசோதனை முதலியவை செய்யும் போதும் என்னைத்தொடர்ந்து நின்றான். என் அறிவை வளர்க்கும் தந்தையாய், ஆதியாய், பரையோடு கூடிய பரனாய் எங்கும் நிறைந்துநின்ற முதல்வன் பிறப்பு வீடு என்னும் இருநிலையினும் உயிர்க்குஉரிய வழியைக் காட்டும் போது உயிரின் அறிவைக் கடந்தே நின்றனன்.

வி - கு : சோதிக்கும் பொழுது என்பது இரு பொருள் தந்து முன்னும் இயைந்தது. படர்ந்து நின்ற ஆதி, பராபரன், எந்தை என்பதில் அகரம்தொகுத்தல் ஆயிற்று. அங்கே - ஆசானாய் அறிவுறுத்தவரும் பருவம் உற்றபோது, நல்லநாதன் - சற்குரு. செய்யு

ளுக்கு ஏற்பச் சொற்கள் முறைப்பட இருப்பினும், பொழிப்புரையிற் கூறியவாறு கொள்ளுதல் ஆசிரியர் கருத்தென்க. (521)

அவ்வழி காட்டும் அமரர்க் கரும்பொருள்
இவ்வழி தந்தைதாய் கேளியான் ஒக்கும்
செவ்வழி சேர்சிவ லோகத் திருந்திடும்
இவ்வழி நந்தி இயல்பது தானே 2643

க - து : இஃது இறைவன் உயிர்களுக்குப் பிறப்பு வீடு இரண்டினும் உபகரித்தலைக் கூறுகின்றது.

பொ - ரை : வீட்டுநெறியை மெய்ந்நூல்களானும் குருசந்தானங்களானும் காட்டியருளும் தேவர்க்கும் காணவொண்ணாத சிவபிரான் உயிர்களுக்குப் பிறப்பு நிலையினும் தந்தை, தாய், உறவு, தாம் என்னும் இவரை ஒத்து இனியனாய் உள்ளான். செம்மையான நெறியிற் செல்வோர் எய்தும் இன்பந்தருகின்ற மேல் உலகத்தும் அவன் இருப்பன். திருநந்தியின் இயல்பு இவ்வாறு உள்ளது. (522)

எறிவது ஞானத் துறைவாள் உருவி
அறிவத னோடேயவ் வாறண்டகை யானைச்
செறிவது தேவர்க்குந் தேவர் பிரானைப்
பறிவது பல்கணப் பற்றுவி டாரே. 2644

க—து : இது சோதனை பெற்றுத் திருவடிப் பேறு எய்தினோர் செய்வனவற்றைக் கூறுகின்றது.

பொ — ரை : அணைந்தோர் மும்மலக்காட்டை எறிவதற்குக் கருவியாய் உள்ளது திருவைந்தெழுத்தாகிய உறையினின்றும் உருவப்படும் ஞானமெய்ந்

நெறியே ஆகும். ஞானத்தினரை ஆளும் தகைமையுள்ள அவனைத்தலைப்பட்டு உணர்வதோடு அப்பெருந் தேவர்பிரானைக்கூடி ஒன்றுதலும் செயற்பாலது. அவர் நீப்பது உலகப்பற்று விடாதாராகிய பல்குழுக்களை.

வி - கு : "ஞானமெய்ந் நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச் சொலாம்" என்பது திருமுறையாகலின் உறையாவது திருவைந் தெழுத்து எனவும் அதனால் குறிக்கப்பெறும் நிற்குமுறை வாள் எனவும் உரைக்கப்பட்டன. (523)

ஆதிப் பிரான்தந்த வாளங்கைக் கொண்டபின்
வேதித் தென்னை விலக்கவல் லாரில்லை
சோதிப்பன் அங்கே சுவடு படாவண்ணம்
ஆதிக்கட் டெய்வம் அவனிவ னாமே 2645

க - து : இது சற்குரு அருள்பெற்றோர் சிவமாந் தன்மை பெறுதல் ஒருதலை என்பது உணர்த்துகின்றது.

பொ - ரை : முன்னவன் குருவாய் வந்தருளிய உறுதியுரையாகிய வாளைக் கைக்கொண்டபின், அங்ஙனம் கொண்டானைப் பாசத்தை எறியாதபடி வேறுபடுத்துவார் ஒருவரும் இலர். மும்மலங்களின் வாதனையும் வாராதபடி அன்னோன் பாசங்களின் வேரைக் களைவன். களைந்தபின் அவன் சிவப்பேறு அடைதலின் முன்னவனாகிய அவனே இவன் ஆகும்.

வி - கு : ஞானவாள் பெற்றோன் செய்கையைத் தம்மேல்வைத்துக் கூறினார் ஆசிரியர். சோதித்தல்—தடைவரும் வாயிலை ஆய்ந்து அதனைக் கெடுத்தல். (524)

அந்தக் கருவை அருவை வினைசெய்தற்
பந்தம் பணியச்சம் பல்பிறப்பும் வாட்டிச்
சிந்தை திருத்தலுஞ் சேர்ந்தாரச் சோதனை
சந்திக்கத் தற்பர மாகுஞ் சதுரர்க்கே. 2646

க — து : இஃது அத்துவ சோதனையின் பயன் கூறுகின்றது.

பொ — ரை . அத்துவசோதனை பெற்றோர் அச் சோதனையால், அநாதியே உள்ள பிறப்பிற்கு மூல மாகிய இருள் மலத்தையும், அருவாயுள்ள மாயையினை யும், வினைசெய்தலாகிய கட்டினையும், அச்செயலால் தொடரும் அச்சம் பொருந்திய பல்பிறப்பையும் கெடுத்தனர்; தம் அறிவு முன்னவனைக் காண்டற்கு உரிய திருத்தம் உறுதலையும் பெற்றனர். உண்மைக் குரவனைக் கண்டு வழிபடும் சதுரப்பாடு உடையார்க்கு அக்குரவனைச் சந்தித்தபோதே தற்பரம் எனப்படும் முதற்பொருள் விளங்கும்.

வி — கு : தற்பரம் — அதற்கு மேலானது, உயிர்க்கு அல்லது மாயைக்கு மேலானது. தத் — அது, உயிர் அல்லது மாயை. (525)

உரையற்ற தொன்மை உரைத்தான் எனக்குக்
கறையற் றெழுந்த கலைவேட் டறுத்துத்
திரையொத்த என்னுடல் நீங்கா திருத்திப்
புரையற்ற என்னுட் புகுந்தற் பரனே 2647

க — து : இஃது இவ்வெட்டாந்தந்திரப் பொருளைத் தொகுத்துச் சுட்டி முடிக்கின்றது.

பொ—ரை: யார் உணர்விளையும் கடந்த தற்பரன் அளவில்லாத கலைகளின் பொருளைச் சுருக்கி உரைக்கு மாற்றால் அவற்றின்மேல் செல்லும் வேட்கையை நீக்கி, உரையைக்கடந்த முதற்பொருளின் இயல்பைத் தான் இருந்தபடி இருந்து உணரச் செய்தான். கடல் திரையைப் போன்று தோன்றி மறையும் என் உடம்பை விரைவில் நீங்காதபடி உலகில் இருக்கச் செய்தான். அங்ஙனம் இருந்திய போது, குற்ற மற்ற என் அறிவினுள் புகுந்து அதனைத் தன் வயப்படுத்திக் கொண்டான். (526)

எட்டாந்தந்திரம் முற்றிற்று

சிவம்.



# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

## எட்டாம் தந்திரம்

[ எண் : பக்க எண் ]

ஐய மாக்கடல் ஆழ்ந்த உயிர்க்கெலாம்
கையில் ஆமல கம்மெனக் காட்டுவான்
மையல் தீர்திரு மந்திரஞ் செப்பிய
செய்ய பொற்றிரு மூலனைச் சிந்திப்பாம்.

— பதிபசுபாசவிளக்கம்

உ
சிவமயம்

**சிவநேயச் செல்வரீர் !**

**திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்**

இருபத்துமூன்றாவது குரு மகாசந்நிதானம்

**ஸ்ரீ லஸ்ரீ சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்கள்**

திருவுளப்பாங்கின் வண்ணம்

நிகழும் திருவள்ளுவர் - ஆண்டு 2023, மெய்கண்டார் - ஆண்டு 769, பிரசோத்பத்தி - ஆண்டு தை - மாதம் 18 - ஆம் நாள் (1—2—1992) சனிக்கிழமை முதல் தை - மாதம் 27-ஆம் நாள் அசுவதி விண்மீன் பொருந்திய (10—2—1992) திங்கட்கிழமை வரை

**மகரத்தலைநாள் குருபூசை விழா**

சிறப்பாக நடைபெறும். விழா நாட்களில்

**மூவர் தமிழில் முப்பொருள் விளக்க விரிவுரைகள்**

**வேணுவனலிங்க விலாசத்திலும் (கொலுமண்டபம்)**

இன்னிசை முதலிய கலைநிகழ்ச்சிகள்

**அருள்மிகு கோமுக்தீசுவரர் திருக்கோயில் வளாகத்தில் அமைந்துள்ள அம்பலவாணர் கலையரங்கத்திலும் நிகழும்**

10—2—1992 திங்கட்கிழமை குருபூசையும் இரவு பட்டணப்பிரவேசமும் நிகழும்.
அன்பர்கள் அனைவரும் கலந்துகொண்டு திருவருளும் குருவருளும் பெற்று இன்புற விரும்புகின்றோம்.

இங்ஙனம்,

திருவாவடுதுறை, 15—1—92.

காறுபாறு-வைத்தியநாதத் தம்பிரான்.

His Holiness

Seer Valar Seer SIVAPRAKASA PANDARASANNIDHI Avl.,

Adheenakarthar, Thiruvavaduthurai Adheenam

*sends His blessings to and invites*

*the presence of*

*Sri* ____________________

*on the occasion of the*

ANNUAL GURUPOOJA OF ARUL THIRU NAMASIVAYA MURTHIGAL

*on Monday the 10th February 1992*

*and*

PROCESSION

*in the night at Thiruvavaduthurai.*

Karubhara,

Vaidhiyanatha Thambiran.

முதல் திருநாள் — 1—2—92 — சனிக்கிழமை

| | | |
|---|---|---|
| | காலை மணி 7-00 - 8-00 | கொடியேற்றம் |
| திருமுறை விண்ணப்பம் : | மாலை மணி 5-30 | " தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள் "<br>திரு. T. M. சுவலிங்கம் & திரு. T. M. சபாபதி சகோதரர்கள் திருவாவடுதுறை. |
| வரவேற்புரை : | ,, 6-00 | தவத்திரு மீனுட்சிசுந்தரத் தம்பிரான, திருவாவடுதுறை. |
| சிறப்புரை : | ,, 6-15 | திரு. வெ. பழனிகுமார், M. A , B. L.,<br>வருவாய்க் கோட்ட அலுவலர். கும்பகோணம். |
| சொற்பொழிவு : | ,, 6-45 | ஆதீனப் புலவர்<br>பேராசிரியர், திரு. ஆதி. முருகவேள், M. A.,<br>இயக்குநர், நமச்சிவாய சைவசித்தாந்த அஞ்சல்வழிக் கல்வி.<br>காசாமலை, திருச்சிராப்பள்ளி.<br>"கடவுள் இருக்கிறுரா ?" |
| மகிழ்வுரை : | ,, 7-45 | புலவர். திரு. பா. மகாலிங்கம்<br>நூலகர். சரசுவதிமகால் நூல்நிலையம். திருவாவடுதுறை |
| குருமரபு வாழ்த்து : | இரவு மணி 8-00 | |
| கலை நிகழ்ச்சி : | ,, 8-30 | நாகசுவர இன்னிசை<br>ஆதீன நாகசுவர இன்னிசைக் கலைஞர்கள். |

**இரண்டாம் திருநாள்** **2—2—92** **ஞாயிற்றுக்கிழமை**

திருமுறை விண்ணப்பம் : "தேவார இசைமணி"

மாலை மணி 5-30 திரு. சு. சம்பந்த தேசிகர்,
அருள்தரு மகாலிங்கசுவாமி திருக்கோயில், திருவிடைமருதூர்.

வரவேற்புரை : ,, 6·00 புலவர், தவத்திரு. சுயம்புநாதத் தம்பிரான்
திருவாவடுதுறை

சிறப்புரை : ,, 6-15 திரு. T. சண்முகராஜேசுவரன், இ. ஆ. ப.
மாவட்ட ஆட்சியர் - தஞ்சாவூர்.

சொற்பொழிவு : ,, 6·45 திரு. கு. வைத்தியநாதன்,
இயக்குநர், திருவாவடுதுறை ஆதீன சைவசித்தாந்த
நேர்முகப் பயிற்சி மையம், திருவிடைமருதூர்.
"உயிரும் இருக்கிறது !"

மகிழ்வுரை : ,, 7-45 திரு கோ. ஆறுமுகம்,
நூலகர், நமசிவாயமூர்த்திகள் நூலகம், மூவலூர்.

குருமரபு வாழ்த்து : இரவு மணி 8-00

கலை நிகழ்ச்சி : ,, 8-30 பொம்மலாட்டம் : "சிறுத்தொண்ட நாயனார் நாடகம்"
ஸ்ரீ முருகன் சங்கீத பொம்மலாட்ட சபா
கும்பகோணம்.

3—2—92

திங்கட்கிழமை

மூன்றும் திருநாள்

| | | |
|---|---|---|
| திருமுறை விண்ணப்பம் : | | " திருமுறை இன்னிசை மணி " |
| | மாலை மணி 5-30 | திரு. ந. சோமசுந்தர தேசிகர்,<br>அருள்தரு ஆத்மநாதசுவாமி திருக்கோயில், திருப்பெருந்துறை. |
| வரவேற்புரை : | .. 6-00 | தவத்திரு. மீனாட்சிசுந்தரத் தம்பிரான்,<br>திருவாவடுதுறை. |
| சிறப்புரை : | .. 6-15 | திரு. க. நந்தபாலன், M, A , B. L.,<br>காவல் கண்காணிப்பாளர், நாகப்பட்டினம். |
| சொற்பொழிவு : | .. 6-45 | திரு. கு. வைத்தியநாதன்,<br>இயக்குநர், திருவாவடுதுறை ஆதீன சைவசித்தாந்த<br>நேர்முகப் பயிற்சி மையம், திருவிடைமருதூர்.<br>" நான் - அன்றும் இன்றும் " |
| மகிழ்வுரை : | ,, 7-45 | திரு. கா. சி. சதாசிவம், M.A. M.Ed., D.T.E., (M.Phil); D.S.M.,<br>நூலகர், சரசுவதிமகால் நூல்நிலையம், திருவாவடுதுறை. |
| குருமரபு வாழ்த்து : | இரவு மணி 8-00 | |

---

| | | |
|---|---|---|
| கலை நிகழ்ச்சி : | 8-30 | விகடக்கச்சேரி :<br>விகடகவி M. பாலமுருகன் - தஞ்சை. |

